ஸ்த்திரபலமான ப்ரஹ்மத்தினுடைய விசாரத்தில் இச்சை, ( 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 - செய்யவேண்டும்). க.

ராமாநுஜபாஷ்யம்.

இந்த ஸூத்ரத்திற்கு, "𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌮𑌾𑌯𑌾𑌤𑍍, 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌃 𑌕𑍃𑌤𑍇𑌨, 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸 𑌗𑍁𑌰𑍁𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍" என்கிறது. விஷயவாக்யம். இதில், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களைச்செய்து ஸ்வர்க்காதி லோகங்களை யடைந்தவன் அங்கு சிலகாலம் அதி ஸ்வல்பமான ஸுகத்தை யநுபவித்துப் பின்பு அங்குநின்று பூலோகத்தில்விழுகிறான். என்னு மர்த்தத்தைச் செவ்வையாய் கர்மகாண்டங்களை விசாரித்துத்தெரிந்துகொண்டு, அந்த அல்பஸுகத்தில் வைராக்யமுடையவனாய், அநந்தமாயும் சாஸ்வதமாயுமுள்ள பலமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தையும், அதற்குபாயத்தையும் விசாரித்தறிகைக்காக ஆசார்யனிடம் செல்லவேணுமென்று சொல்லிற்று.—இவ்வாக்யத்திற் சொல்லியபடி வேதாந்த வாக்யங்களைக்கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்யலாமா, செய்யக்கூடாதா வென்று ஸம்சயம்.—வேதாந்தவாக்யம் ஸித்தமான பரப்ரஹ்மத்தை போதிப்பிக்கு மென்கிற நிஸ்சயமிருந்தால் செய்யலாம்; அந்தநிஸ்சய மில்லாததினால், செய்யக்கூடாதென்று பூர்வபக்ஷம். ஏனென்றால்,—ப்ரஹ்ம சப்தத்திற்கு அர்த்தமறியக்கூடுமாகில், இப்பதத்திற்கு இது அர்த்தமென்பது தெரிந்துகொள்ளலாம். சப்தத்திற்கு அர்த்தமறியும் விதமாவது—பெரியோர்களுடைய வ்யவஹாரத்தைக்கொண்டு இந்த சப்தத்திற்கு இது அர்த்தமென்று நிஸ்சயிப்பது லோகத்தில் அநுபவஸித்தமா யிருக்கிறது. அதெப்படியெனில்,— "அஸ்வம்" என்கிற பதத்திற்கு அர்த்த மறியாதவன் ஓரிடத்திற்குச்செல்ல, அங்குள்ள ஒருவன் மற்றொருவனைப்பார்த்து "அஸ்வத்தைக்கொண்டுவா, அஸ்வத்தைக்கொண்டுபோ, அஸ்வத்தைக்கட்டு" என்று பலவாறு அஸ்வபதத்தினால் வ்யவஹரிக்க, அதைக்கேட்டு மற்றொருவன் குதிரையைப்பற்றியே அந்தந்த க்ருத்யங்களைச் செய்ய, அவன் சொன்னதையும், இவன் செய்ததையும் பார்த்திருந்த இவன் "அஸ்வம் என்றால்" கொண்டுவருதல் கொண்டுபோதல் முதலிய க்ரியையோடு ஸம்பந்தித்த இவ்வாகாரமான வஸ்துவென்று அஸ்வபதத்திற்கு அர்த்தம் தெரிந்துகொள்ளுகிறான்; இவ்விதமொழிய சப்தத்துக்கு அர்த்தம்தெரிந்துகொள்ள வேறுஉபாயமில்லை. கீழ்ச்சொல்லிய இவ்வித வ்யவஹாரம் எடுத்தல், பிடித்தல், வைத்தல் முதலிய க்ரியைகளோடு ஸம்பந்தித்த கார்ய வஸ்துக்களைப்பற்றியே காண்கிறது; ஆகையால் அவ்விதமான வஸ்துக்களே சப்தத்தினாலறியத்தக்கது. ஸித்தரூபமான ப்ரஹ்மம் இவ்வித கார்யங்களுக்கு யோக்யமல்லாததாகையால், வேதாந்தவாக்யத்தினா லறியக்கூடுமென்கிற நிச்சயம் கிடையாது. ஆகையால் வேதாந்த விசாரம் செய்யக்கூடாது.——ஸித்தாந்தம். சப்தார்த்த மறிவதற்கு வ்ருத்த வ்யவஹாரமேயன்றி ஆப்தவாக்யமும் காரணமாகக்காண்கிறது. எங்ஙனேயெனில்,—பெரியோர்கள் பாலர்களை யெடுத்துக்கொண்டு "இதுபசு, இதுபக்ஷி, இதுமரம்" என்று தன் சுட்டுவிரலினால் அவ்வவ வஸ்துக்களைக் காட்டிச்சொல்ல, பாலர்களும், பசு என்கிற பதத்திற்கு இது அர்த்தம்; பக்ஷி என்கிற பதத்திற்கு இது அர்த்தமென்று தெரிந்துகொண்டு பிறருக்கு அவ்வஸ்துவை யறிவிக்கைக்காக அந்தந்த சப்தங்களை ப்ரயோகிக்க, அவர்களுமந்த சப்தத்தைக்கேட்டு அவ்வர்த்தத்தை யறியக்கண்டு "இந்தசப்தம் இவ்வர்த்தத்தை போதிப்பிக்கிறதென்று நிஸ்சயித்துக்கொள்ளுகை லோகாநுபவ ஸித்தமாகையால் வேதாந்தங்களிலும் பெரியோர்கள் மொழிதனைக்கேட்டு அர்த்தம் தெரிந்துகொள்ளக்கூடுமாகையால் வேதாந்த வாக்யங்களைக் கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்யலாம் என்று.

அ-௧, பா-௧, ஸூ-௨.

—* ஜந்மாத்யஸ்ய யத: *—

(ஸ-ஸா-வ்ய.) அஸ்ய - இந்தஜகத்திற்கு, ஜந்மாதி - உத்பத்திஸ்த்திதி லயங்கள், யத: - எதினிடத்தில் நின்றுமோ; (அது ப்ரஹ்மம்). ஜகத்ஜந்மாதிகாரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் என்று பொருள். ௨.

(ஸ - ஹா.) ப்ரஹ்மவிசாரம் செய்யவேண்டுமென்றால் ப்ரஹ்மத்திற்கு இதுலக்ஷணமென்று முதலறியவேண்டும்; ஆகையால் இந்த ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாகிய வஸ்துவே பரப்ரஹ்மமென்று இந்த ஸூத்ரத்தினால் லக்ஷணம் சொல்லுகிறார். ௨.

(ஸா - ஹா.) ப்ரஹ்மத்திற்கு ஜகஜ்ஜந்மாதி காரணத்வம் சொல்லுகிற "யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதிவாக்யம்இந்த ஸூத்ரத்திற்கு விஷயம்.—பூர்வஸூத்ரத்தில் ப்ரஹ்மவிசாரம் செய்யலாமென்றுசொல்லிற்று அந்த ப்ரஹ்மம் "யதோவாஇமாநி" இத்யாதி வாக்யத்திற்சொன்ன ஜகஜ்ஜந்மாதி காரணத்வம் என்கிற லக்ஷணத்தினால் அறியக் கூடுமென்று இந்த ஸூத்ரத்திற் சொல்லுகிறது.—இங்கு, (ஜகஜ்ஜந்மாதி) இவ்வாக்யத்திற் சொன்ன காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகுமா? ஆகாதா? வென்று ஸம்சயம்.—ஆகாதென்று பூர்வபக்ஷம்.—ஏனென்றால், "இது வெட்டுண்டது, இது பூர்ணமாயுள்ளது" என்றால், வெட்டுண்கை, பூர்ணமாயிருக்கையாகிற இரண்டு விசேஷணங்களும் ஓரிடத்தி லிருக்கமாட்டாவாகையால் இவ்விரண்டு விசேஷணங்களுக்கு மாச்ரயம் இரண்டு வ்யக்திகளாகவேணுமென்று இரண்டு வ்யக்திகள் தோற்றுவதுபோல், இங்கும் ஜகஜ்ஜந்மாதி காரணமென்றால்,ஜந்மகாரணத்வமும், ஸ்த்திதிகாரணத்வமும், லயகாரணத்வமுமாகிய இந்தமூன்று விசேஷணங்களும் தனித்தனியே மூன்று வ்யக்திகளிலிருக்குமல்லது ஒருவ்யக்தி யிலிருக்கமாட்டா வாகையால் மூன்றுவ்யக்திகளே தோன்றும். மூன்று விசேஷணங்களையுடைய அப்ரத்யக்ஷமான ப்ரஹ்மவ்யக்திதோற்றாதென்று.—ஸித்தாந்தம். தேவதத்தனென்பவன், கறுத்திருக்கிறான், யௌவநமுடையவன், குண்டலமணிந்தவன், என்றால் இம்மூன்று விசேஷணங்களையு முடைய ஒருபுருஷனே தோற்றுவது அநுபவஸித்தமா யிருக்கிறது. அதுபோல் இங்கும் மூன்று விசேஷணங்களையுடைய ஒரு ப்ரஹ்ம வ்யக்தி தோற்றலாம், விசேஷணம் வெவ்வேறானால் அவற்றுக்கு ஆச்ரயமும் வெவ்வேறாக வேண்டுமென்கிற நியமமில்லை யாகையால் ஜகஜ்ஜந்மாதி காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகலாமென்று. ௨.

அ-௧, பா-௧, ஸூ-௩. —* சாஸ்த்ரயோநித்வாத், *—

(ஸ - வ்ய.) சாஸ்த்ரயோநித்வாத் - வேதசாஸ்த்ரத்துக்கும் காரணமாகையாலே (ப்ரஹ்மம் ஸகல ஜகத்காரணமாகும்.) ௩.

(ஸ - ஹா.) ஜகத்து என்றால் அதற்குள் வேதமும் அடங்கி யிருக்கிறது. அது ஒருவரால் செய்யப்பட்டதன்று; நித்யம்; அதற்கு அழிவில்லை, ஆகையால் ப்ரஹ்மத்தை ஜகத்திற்கெல்லாம் காரணமென்று சொல்லக்கூடாது. அப்படியாகில் வேதம் அநித்யமாய்விடும் என்கிற பூர்வபக்ஷத்திற்கு,—சாஸ்த்ரயோநித்வாத்-வேதசாஸ்த்ரத்திற்குங்காரணமாகையாலே ப்ரஹ்மம ஸகல ஜகத்திற்கும் காரணமென்று சொல்லலாம். அதெப்படியெனில்,-எவனொருவன் முதலில் ஓரர்த்தத்தை யறிந்து அதைப்பிறரறியும்படி பிறகு தகுந்த சப்தங்களை ஆலோசித்துச் சேர்த்து எந்தக்ரந்தத்தை

செய்கிறானே; அவனால் செய்யப்பட்ட அந்த க்ரந்தமே யநித்ய மெனப்படும். இங்கு அப்படியன்றி, வேதார்த்தங்களையும், பூர்வகல்பத்திலிருந்த வேதத்தினாநு பூர்வியையும் ஒரேகாலத்தில் அறிந்து அந்தவேதத்தை ப்ரஹ்மாதிகளுக்கு உபதேசித்தபடியால் வேதமும் அநித்யமாகமாட்டா. அதற்கு ப்ரஹ்மமும் கர்த்தாவாகலாம். ஆகையால் ஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமாகக்கூடும்.—

ஒருவனொன்றை ஸ்ருஷ்டிக்கும்போது அவ்வஸ்துவை யவனறிந்தவனாகவேண்டும். அப்படியே ஸகலஜகத்தையும் ஸ்ருஷ்டிக்கிற ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞ சக்தியையுடைத்தாகவேண்டுமேயென்னில், ஸகலார்த்தங்களையு மறிவிப்பிக்கிற வேதசாஸ்த்ரத்திற்குக் கர்த்தாவாகையால் ப்ரஹ்மத்திற்கு அந்த சக்தியுண்டென்னத் தட்டில்லை என்றும் இந்தஸூத்ரத்திற்குத் தாத்பர்யமுண்டு.

ப்ரஹ்மம் ஜகத்காரணமென்றால் இதற்குப்ரமாணம் என்னவென்கிற சங்கைக்கு, இதற்கு வேதசாஸ்த்ரமே ப்ரமாணமென்று இந்த ஸூத்ரத்தினால் ஸமாதானம் சொல்லுகிறார் என்றும் ஒருதாத்பர்முண்டு. இவ்வர்த்தத்தில், ஶாஸ்த்ர யோநித்வாத்—சாஸ்த்ரத்தைப் ப்ரமாணமாக உடையவனாகையால் என்று அர்த்தம். ௩.

(ஶா-வ்யா.) ஶாஸ்த்ரயோநித்வாத்-(ப்ரஹ்மம்)சாஸ்த்ரத்தையே(வேதாந்த வாக்யங்களையே)காரணமாக (ப்ரமாணமாக)உடையதாகையால், ("யதோ வா இமாநி" இத்யாதிவாக்யம் ப்ரஹ்மத்தை போதிப்பிக்கும்). ஶாஸ்த்ரமொழிய ப்ரத்யக்ஷம் - அநுமாநம் முதலிய மற்ற ப்ரமாணாந்தரங்களுக்கு ப்ரஹ்மம் விஷயமல்லாமையால் வேதாந்தவாக்யம் ப்ரஹ்மத்திற்கு போதகமாகுமென்று தாத்பர்யம். ௩.

(ஶா-ஹா. இந்த ஸூத்ரத்திற்கும் "யதோவா இமாநி" என்கிறவாக்யமே விஷயம். இவ்வாக்யம் ப்ரஹ்மபோதகமாகுமா? ஆகாதா? வென்று ஸம்ஶயம்.—ஆகாது; ஏனென்றால்,-உத்பத்தி விநாசசாலியான கடாதிபதார்த்தங்கள் ஒருவனால்ஸ்ருஷ்டிக்கப்படுவதுபோல்.உத்பத்தி விநாஶஶாலியான இஜ்ஜகத்தும் ஒருவனால்ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கவே வேண்டும். இதை ஸ்ருஷ்டிக்க அல்பஜ்ஞராய் அல்பஶக்திகளாயுள்ள ஜீவர்களால் முடியாதாகையால் இதற்குக்கர்த்தாவானவன் ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாயுள்ளவனாகவேணும்; அவனே ப்ரஹ்மமெனப்படுவான் என்று அநுமாநத்தினால், ஸர்வஜ்ஞனாய்,ஸர்வஶக்தியாயுள்ள ஈஶ்வரனொருவன் ஜீவ விலக்ஷணனாய் ஸித்திக்கிறான் ஆகையால் அநுமாநபோதிதமான ப்ரஹ்மத்தை, ப்ரமாணாந்தர ப்ராப்தமான வஸ்துவையே போதிப்பிக்கவல்ல ஶக்தியுடைய ஶாஸ்த்ரம் போதிப்பிக்கமாட்டாது என்று பூர்வபக்ஷம்—ஸித்தாந்தம்—உத்பத்தி விநாஶஶாலியான இஜ்ஜகத்துக்குக் கர்த்தாவை அநுமாநத்தினால்கொள்ளினும், விஶ்வாமித்ராதிகளைப்போல் ஶக்திமான்களான ஜீவர்களால் ஒவ்வொருபாகம் ஒவ்வொருகாலத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று கொள்ளுகை யுக்தமாயிருக்க இவர்களைக்காட்டிலும் அதிரிக்தனாகிய ஒரு ஈஶ்வரன் இவ்வநுமாநத்தினால் ஸித்திப்பதரிது; ஆகையால் ப்ரமாணாந்தரா விஷயமான ப்ரஹ்மத்துக்கு இவ்வாக்யம் போதகமாகுமென்று. ௩.

கஅ - ௪. ஸூ - ௪. —* தத்து ஸமந்வயாத். *—

(ஶ-வ்யா.) ஸமந்வயாத் - அகண்டமான ப்ரஹ்மஸ்வரூபத்தில் வேதஶாஸ்த்ரத்திற்குத் தாத்பர்ய முண்டாகையாலே, தத் - அந்த ப்ரஹ்மம், (வேதப்ரமாணஸித்தமாகும்). ௪.

(ஶ - ஹா) வேதவாக்யங்களில் ஜ்யோதிஷ்டோமம் முதலியகர்மங்களை விதிக்கிற விதிவாக்யங்களே முக்யப்ரமாணங்களென்றும், அத்துடன்சேர்ந்த மந்த்ரங்கள் அந்தகர்மத்திற்கு வேண்டிய அர்த்தங்களை வ்யக்தமாகச் சொல்லுகையாலும், அர்த்தவாத வாக்யங்கள் அதை ஸ்தோத்ரம் செய்கையாலும் ப்ரமாணங்களென்றும், மற்றவாக்யங்கள் அப்ரமாணங்களென்றும் மீமாம்ஸகர்கள் கொள்ளுகிறார்கள். இப்படியிருக்க, வேதாந்த வாக்யங்களும் ப்ரமாணமாகவேண்டுமாகில், விதிவாக்யத்திற் சொன்ன யாகாதிகளைச்செய்கிற ஜீவனை ஸ்தோத்ரம்செய்கிறதென்றே கொள்ளவேண்டுமாகையால் அவைகள் ப்ரஹ்மத்தை போதிப்பிக்கமாட்டா. மேலும் இவ்வாக்யங்கள் விதிவாக்யங்களுடன் சேர்த்தியின்றி வெகுதூரத்திலிருக்கிறபடியால் அவைகளுடன் அந்வயிக்கவும் மாட்டா, ப்ரமாணங்களுமாகமாட்டா. மேலும் சாஸ்த்ரங்கள் ஒருபலத்தை யறிவிப்பிக்கைக்காக உண்டாயிருக்கிறது. பலமென்பது ஸுகமென்றும், துக்கநிவ்ருத்தியென்றும் இரண்டுவிதம். அதில் ஸுகம் யாகாதி கர்மங்களில் ப்ரவ்ருத்தியினாலும், துக்கம் பரதாரகமநாதிகளில் நின்றும் நிவ்ருத்தியினாலும் உண்டாகின்றன; ஆகையால் ஸாதநங்களாகிய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் சொல்லி அவ்வழியாலே ஸுகாதிபலங்களைச் சொல்லுகையாலே "யஜேத" "நபரதாராந் கச்சேத்" இத்யாதி வாக்யங்களே ப்ரமாணங்கள். வேதவாக்யங்கள் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளி லொன்றையும் சொல்லாமையால் அவைகள் ப்ரமாணங்களேயாக மாட்டா. மேலும், கடாதிகளான ஸித்த வஸ்துக்கள் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணாந்தரகோசரங்களாகையால் அவற்றிற்போல் ஸித்தமாகிய ப்ரஹ்மத்தினிடத்திலும் சாஸ்த்ரங்கள் ப்ரமாணங்களாகமாட்டா, இத்யாதி சங்கைகளுக்கு: இந்தப்ரஹ்மம் கர்மஹீநமென்று சொல்லுகையாலே பூர்வகாண்டத்தில் கர்த்தாவாகச் சொல்லப்பட்டவனன்று. உபக்ரமம் உபஸம்ஹாரம் முதலிய ஆறுவிதமான தாத்பர்ய லிங்கங்கள் இருக்கையாலே இவ்வாக்யங்கள் ப்ரஹ்மப்ரதிபாதகங்களாகத்தட்டில்லை. ப்ரமாணங்களாகவும் குறையில்லை. இவ்வாக்யங்களை விதிவாக்யங்களுடன் அந்வயித்து அவ்வர்த்தங்களுக்கு உபபாதகங்களென்னக்கூடாது. ஏனெனில், அவ்வாக்யத்திற்கு விதிசேஷமென்று பெயர். அந்த விதிசேஷமானது ப்ரத்யக்ஷாதிகளினால் ஸித்தமாகிய யூபஸ்தம்பம் புரோடாசம் முதலிய வஸ்துக்களுக்கு,விதிக்கப்பட்ட கர்மங்களுடன் ஸம்பந்தத்தைச் சொல்லும். இவ்வாக்யங்கள் அப்படி யன்றி ப்ரஹ்மஸ்வரூபத்தையே அறியவேண்டுமென்று சொல்லுகிறது ஆகையால் விதிசேஷமன்று, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஒன்றுமில்லாத ப்ரஹ்மஸ்வரூபத்தை அறிந்தமாத்ரத்திலேயே அஜ்ஞாநத்தில் நின்றும் விடுபட்டுப் பரமாநந்தத்தை யடைகிறானென்று சொல்லுகையாலே பலத்தை போதிப்பிக்கிற தென்னுமதிலும் தடையில்லை. இத்யாதி ஸமாதானங்களை மனதிற்கொண்டு இந்தஸூத்ரத்தைச் சொன்னார். து-என்று இவ்விதமான சங்கைவேண்டாமென்கிறது. ஸம் - என்று ப்ரஹ்மத்தின் அகண்டரூபத்தைக் காட்டுகிறது. அந்வயாத் - தாத்பர்யவிஷயமாகையாலே, அகண்டரூபமாகிய ப்ரஹ்மம் வேதாந்தவேத்யமாகலாம் என்று ஸூத்ரத்திற்கு அர்த்தம்.

(ஶா-வ்யா·) ஸமந்வயாத்-(ஆநந்தரூபமானப்ரஹ்மத்தில் ஶாஸ்த்ரங்கள்) ஸாக்ஷாத் அந்வயிக்கையாலே, தத்- சாஸ்த்ரப்ரமாணகத்வம். (ப்ரஹ்மத்துக்குக்கூடும்) என்கிறது - ப்ரஹ்மத்துக்கு ஶாஸ்த்ரப்ரமாண கத்வம் கூடாதென்கிற ஶங்கையை நிவர்த்திப்பிக்கிறது·—புருஷார்த்த போதகங்களாக வேதாந்தவாக்யங்கள் ஆநந்தரூபமான ப்ரஹ்ம ப்ரதிபாதகங்களாகையாலே இவ்வாக்யங்களினால் ப்ரஹ்மம் போதிக்கப்படும் என்று அர்த்தம்· ௪.

(ஶ்ரீ-பா) முன்வாக்யமே இதற்கும் விஷயம். இவ்வாக்யத்தினால் ப்ரஹ்மம் போதிதமாகுமா? ஆகமாட்டாதா? வென்று ஸம்ஶயம். "யஜேத - யாகம்செய்யக்கடவன்" "நகலஞ்ஜம் பக்ஷயேத்-களஞ்சபக்ஷணம் செய்யக்கடவனல்லன்" என்கிற வாக்யங்கள் புருஷனுடைய ஸத்கர்மப்ரவ்ருத்தி அஸத்கர்மநிவ்ருத்திகளைச் சொல்லி, அந்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்தித்வாரா ஸ்வர்க்கப்ராப்தாதிரூப புருஷார்த்தங்களை ப்ரதிபாதிக்கையாலே ப்ரமாணங்களாகின்றன; ப்ரஹ்மபோதகமான வாக்யம் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் சொல்லாமையால் தத்வாரா ப்ரஹ்மபோதகமுமன்று; ப்ரஹ்மம் புருஷார்த்தரூபமல்லாமையால் "இங்கு நிதியிருக்கிறது" என்கிற வாக்யத்தைப்போல் ஸாக்ஷாத்தாகவும் ப்ரஹ்மபோதகமன்று. ஆகையால் இவ்வாக்யத்தினால் ப்ரஹ்மம் போதிதமாகாதென்று பூர்வபக்ஷம்.—ஸித்தாந்தம் "ஆநந்தோ ப்ரஹ்ம" "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்" "ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்" இத்யாதி வாக்யங்கள், பரப்ரஹ்மம் நிரதிசயாநந்த ஸ்வரூபமென்று ப்ரதிபாதிக்கின்றன. ஆகையால் நிரதிசயாநந்தரூபமான ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிற ப்ரமாணங்கள் ஸாக்ஷாத் புருஷார்த்த போதகங்களாகையால் பரம்பரயா புருஷார்த்த போதகமான "யஜேத" இத்யாதிவாக்யங்களைக் காட்டிலும் ப்ரமாணதமமான இவ்வாக்யத்தினால் ப்ரஹ்மம் போதிக்கக்கூடுமென்று. ௪.

அ-௧. ஸூ-௫. —* ஈக்ஷதேர்நாஶப்தம். *—

(ஸூ-வ்யா.) ஈக்ஷதே:-(ஜகத்காரணத்திற்கு) ப்ரத்யக்ஷஜ்ஞாநமுண்டென்று சொல்லுகையினாலே, அஶப்தம் - (அசேதநமான) மூலப்ரக்ருதியானது, ந - ஜகத்காரணமாகமாட்டாது. ௫.

(ஸூ-ஹா.) இப்படி ஜகத்காரணமாகச் சொல்லப்பட்ட வஸ்து நீங்கள் சொல்லுகிற ப்ரஹ்மமன்று. அசேதநமுமாய் பரிணாமியுமாகிய இஜ்ஜகத்துக்கு அசேதநமும் பரிணாமியுமான மூலப்ரக்ருதியே காரணமாகவேண்டும். ஒருவிதமான பீஜத்தில் நின்றும் மற்றொருவிதமான பலம் காணுகையாலே கார்யஸஜாதீயமாகவே காரணம் கொள்ளவேண்டுமாகையால் சைதந்யரூபமாகிய ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறான மூலப்ரக்ருதியே காரணமாகவேண்டும். ஸத்வகுணமுடையவர்கள் ஜ்ஞாநாதிகர்களென்பது ப்ரஸித்தமாகையாலே ஸத்வகுணமுடைய இந்தமூலப்ரக்ருதியும் ஸர்வஜ்ஞமென்று சொல்லக்கூடும். ஜ்ஞாநஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு ஜ்ஞாநம்கூடாமையாலே ப்ரஹ்மம் காரணமாகில் அது ஸர்வஜ்ஞமென்பது கூடாது என்கிற சங்கைக்கு,—"ததைக்ஷத" ஸத் என்கிற சப்தத்தினால் சொல்லப்பட்ட அந்த காரணவஸ்து ஸகலத்தையும் ஸாக்ஷாத்கரித்ததென்று சொல்லுகையால், அது அசேதநமாகிய ப்ரக்ருதிக்குக் கூடாமையால் ஸத் என்கிற காரணவாசகபதத்தினால் ப்ரதாநம் சொல்லப்படமாட்டாது; ஆதலால் அதுகாரணமாகமாட்டாது. மேலும் ஸத்வகுணத்தை உடைத்தாகையாலே ஸர்வஜ்ஞமாவதுபோல் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் உடைத்தாகையாலே அல்பஜ்ஞமுமாகவேண்டும். ப்ரகாச ஸ்வரூபனான ஸூர்யன் ப்ரகாசிக்கிறானென்பதுபோல் ஜ்ஞாநஸ்வரூபமான ப்ரஹ்மமும் ஸர்வஜ்ஞமென்று சொல்லத்தட்டில்லை என்று இந்தஸூத்ரத்தினால் ஸமாதானம்சொல்லுகிறார்.

(ஶ்ரீ-பா.) ஈக்ஷதே:-ஈக்ஷிதாத்வர்த்தமான ஸங்கல்பத்தினாலே, (ஜகத்காரணமானது தான் இவ்விதமாக ஸ்ருஷ்டிக்கப்போகிறேனென்று ஸங்கல்பித்துக்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறதென்றுசொல்லியிருக்கிறபடியால்), அஶப்தம் - சப்தமாத்ரத்தையே ப்ரமாணமாக உடைத்தாகாத (அநுமாநத்

திறுலறியத்தக்கதான) (அசேதநமான) [Grantha] ந-ஜகத்காரணமாகமாட்டாது. ஸங்கல்பிக்கை சேதநதர்மமாகையால் அந்த ஸங்கல்பத்தையுடைய ஜகத்காரணம் அசேதநமான மூலப்ரக்ருதி யாகமாட்டாதென்று பொருள். ரு.

(ஶா-பா.) "[Grantha]" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.— இவ்வாக்யத்தில் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டது ஸாங்க்யர்கள் சொல்லும் மூலப்ரக்ருதியா, அல்லது நிரவதிகாநந்த ரூபமான பரப்ரஹ்மமா வென்று ஸம்சயம்.—ஸத்வ ரஜஸ் தமோமயமாய், பரிணமியாய், அசேதநமாய், விகாராஸ்பதமான இஜ்ஜகத்துக்கு, கடத்துக்கு ம்ருத்பிண்டம்போலே, ஏதத்ஸஜாதீயமாய், இக்குணங்களையுடைய அசேதநமேகாரணமாகவேணும். அதற்கு மூலப்ரக்ருதி யென்று பெயர். அதையே இவ்வாக்யம் ப்ரதிபாதிக்கிறது. "யேநாஶ்ருதம்" இத்யாதி வாக்யத்திலே அந்த மூலப்ரக்ருதியையறிந்தால் ஸகலம் அறிந்ததேயாம், என்றுப்ரதிஜ்ஞைபண்ணி, அதெப்படியெனில்,—ம்ருத்பிண்டத்தையறிந்தால் தத்கார்யமான கட சராவாதிகளும், ஸ்வர்ணபிண்டத்தை யறிந்தால் தத்கார்யமான கடகமகுடாதிகளும் அறிந்ததேயாமாப்போலே என்று த்ருஷ்டாந்தம் சொல்லுகையாலே, ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்த கடிதமான ஸாங்க்யர் சொல்லுகிற அநுமாநப்ரக்ரியை தோற்றுகையால் இவ்வாக்யத்திற்சொன்ன ஜகத்காரணம்மூலப்ரக்ருதியேயென்று பூர்வபக்ஷம்.—ஸித்தாந்தம்.—இதற்குமேல் வாக்யத்தில் "[Grantha] - அந்தஜகத்காரணம், 'நான் அநேகவிதமாக ஆகப்போகிறேன்' என்று முன்னம் ஸங்கல்பித்தது" என்று சொல்லுகையாலே, அந்தஸங்கல்பம் அசேதநமான மூலப்ரக்ருதிக்குக் கூடாமையாலே அதையுடைய நிரவதிகாநந்தரூபமான பரப்ரஹ்மமே இவ்வாக்யத்தில் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டது. * ஸாங்க்யர்சொல்லுகிற அநுமாநப்ரக்ரியையும் ஹேது சொல்லாமையால் இங்குத் தோற்றுகிறதில்லை. இதையறிந்தால் மற்றெல்லா மறிந்ததாகுமென்று சொன்னபின், இதெப்படி ஸம்பவிக்குமென்கிற ஶிஷ்யனுடைய ஸம்சயத்தைப் போக்குகைக்காக ஸ்வர்ணம் முதலிய த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டதென்று. ௬.

ஸூ - கூ. [Grantha].

(ஶ-வ்ய.) [Grantha].(ஜகத்காரணத்திற்குச் சொன்ன ப்ரத்யக்ஷம்) கௌணமென்றால், [Grantha] - (ஜகத்காரணத்தைச் சேதநவாசியான) ஆத்மபதத்தினற் சொல்லுகையாலே, ந - அசேதநமாகிய ப்ரக்ருதி காரணமாகமாட்டாது. கூ.

(ஶ-பா) "[Grantha]" என்று பஹுவாக்யங்களில் தேஜஸ்ஸு முதலிய அசேதநங்கள் ஸாக்ஷாத்கரிக்கிறதென்று சொல்லுகையாலே அவற்றுக்கு சேதநதர்மமான ஸாக்ஷாத்காரம் கூடாமையால் அந்த ஸாக்ஷாத்காரம் கௌணமென்றுகொள்வதுபோல் இங்கும் ஸத் என்பதற்குச்சொன்ன ஸாக்ஷாத்காரம் கௌணமாகக்கொண்டோமாகில், அது மூலப்ரக்ருதியென்று கொள்ளக்குறையில்லை என்

* அநுமாநிகர்கள் வாக்யமாகில் ப்ரதிஜ்ஞை, ஹேது, உதாரணம், உபநயம், நிகமநம், என்று ஐந்துவாக்யமுண்டாயிருக்கவேணடும். இங்கு இரண்டே இருக்கையால் இது அநுமான ப்ரக்ரியை யன்றென்று தாத்பர்யம்.

னில்,—ஜகத்காரணமாகிய ஸத்தை ஆத்மாஎன்று சேதநவாசியான ஆத்மசப்தத்தி ஞல் சொல்லுகையாலே அது அஸங்கதமாய்விடும்; ஆகையால் மூலப்ரக்ருதி காரண மென்று சொல்லக்கூடாது. ௬.

(ரா-வ்ரு.) கௌணஶ்சேத் - கௌணரூபமான (ஸ்ருஷ்ட்யுந்முகஸ்வரூப மான) ஸங்கல்பமே இங்குசொல்லிற்று (ஆகையால் அதையுடைய மூலப்ர க்ருதியே ஜகத்காரணம்) என்னில், ஆத்மஶப்தாத் - (இந்தஜகத்காரணத்தை சேதநவாசகமான) ஆத்மசப்தத்திஞல் சொல்லுகையாலே, ந - மூலப்ரக் ருதி யாகமாட்டாது.

(ரா - ஹா.) இதற்குமேல் வாக்யங்களில் "தத்தேஜஐக்ஷத - அந்ததேஜஸ்ஸு ஸங்கல்பித்தது" "தாஆபஐக்ஷந்த அந்தஜலம் ஸங்கல்பித்தது" என்று அசேதநமான ஜலதேஜஸ்ஸுக்களுக்கும் ஸங்கல்பம் சொல்லுகையாலே அது சேதந தர்மமான ஸங்கல்பமன்று; *ஸ்ருஷ்ட்யுந்முகத்வரூபமான அசேதநகதஸங்கல்பமென்று கொள் ளவேணும். அதுபோல் அத்தோடு ஸமாநமான இந்தஸங்கல்பமும் கௌணமென்றே கொள்ளவேணும். இந்த கௌணஸங்கல்பம் அசேதநத்திலும் ஸம்பவிக்குமாகையால் மூலப்ரக்ருதியே இங்கு ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டதென்று பூர்வபக்ஷம்,— "கௌணஶ்சேந்நாத்மஶப்தாத்" என்று ஜகத்காரணமான வஸ்துவை சேதநவாசகமான ஆத்ம சப்தத்திஞல் சொல்லுகையால் அசேதநமான ப்ரதாநம் இங்கு ப்ரதிபாதிக்கப்படமாட்டாது. 'தத்தேஜஐக்ஷத' இத்யாதி வாக்யங் களிலும்; அந்ததேஜஸ்ஸை சரீரமாகஉடைய பரமாத்மா ஸங்கல்பித்தான் என்று சொல்லுகையாலே சேதநதர்மமான முக்யஸங்கல்பத்தையே சொல்லிற்றுகையால் அதுவும் கௌணஸங்கல்பமாகமாட்டாது என்று விஸ்தாரம். ௬.

ஸூ - எ. தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேஶாத்.

(ம - வ்ரு.) தந்நிஷ்டஸ்ய - அந்த ப்ரஹ்மத்தில் ஜீவனுடைய ஐக்ய ஜ்ஞாந முடையவனுக்கு, மோக்ஷோபதேஶாத் - மோக்ஷ முண்டாகு மென்று சொல்லுகையாலே, (ப்ரதாநம் காரணமன்று.) எ.

(ம-ஹா.) ஆத்மா என்று தனக்கு அத்யந்தம் உபகாரியாகிய வஸ்துவையும் சொல்வதுண்டு. எங்ஙனேயென்னில்,—அரசன் தனக்குமிகவும் வேண்டியவனுயிரு க்கிற வேலைக்காரனைப்பார்த்து இவன் எனக்கு ஆத்மா; அதாவது-எனக்குப்ராணன் என்று சொல்லுகிறுன். அதுபோல் இங்கும் ஆத்மாவுக்கு போகமோக்ஷ ரூபமாகிய மஹோபகாரத்தைப்பண்ணுகிற மூலப்ரக்ருதியையே ஆத்மா வென்று சொல்லுகி றது என்னில்,—"தத்வமஸி" என்கிறமேல்வாக்யம், ஆத்மா என்று சொல்லப்பட்ட வஸ்துவே நீயென்று உபதேசித்து இப்படி நினைக்கிறவனுக்கு மோக்ஷ முண்டாகும் என்று சொல்லுகிறது. ஆத்மசப்தம் மூலப்ரக்ருதியைச் சொல்லுமாகில் அதை அநு ஸந்தித்தவனுக்கு மோக்ஷங்கூடாமையால் அது அஸங்கதமாகும். எ.

(ரா - வ்ரு.) தந்நிஷ்டஸ்ய - அந்தப்ரஹ்மத்தை உபாஸநம்செய்கிறவ னுக்கு, மோக்ஷோபதேஶாத் - (இந்த ப்ராரப்தசரீரம் கழிந்தவாறே) மோக்ஷப்ராப்தி சொல்லுகையாலே, (ஸச்சப்தவாச்யமான ஜகத்காரணம் ப்ரதாநமன்று.) எ

---

* ஜகத்ரூபமாகப் பரிணமிக்கைக்கு அடுத்த பூர்வக்ஷணத்திலுள்ள அவஸ்தையை யே இங்கு ஸங்கல்பமெனப்படும். என்று தாத்பர்யம்.

(ரா-ஹா.) "தத்வமஸி" என்று மேல்வாக்யத்தில், ஜீவாத்மாவை ஸச்சப்தவாச்யமான ஜகத்காரணவஸ்துவுக்கு சரீரமாக அநுஸந்திக்கிறவன் "தஸ்யதாவதேவ சிரம்" இத்யாதி வாக்யத்தினுல் இந்த சரீரங்கழிந்தவுடனே மோக்ஷத்தை யடைகிறு னென்று சொல்லிற்று. அசேதநமான ப்ரதாநம் ஜகத்காரணமாகில் தத்ஸ்மத்வாநுஸந்தாநம் ஸம்ஸாரஹேது வாகுமல்லது மோக்ஷஹேது வாகாது. ஆகையால் ப்ரதாநத்தைக்காட்டிலும் விலக்ஷணமான பரமசேதநனே ஜகத்காரணமென்று கொள்ள வேண்டும். எ.

ஸூ - அ. ஹேயத்வாவசநாச்ச.

(ஶ்ரு-ரா-வ்ய.) ஹேயத்வாவசநாச்ச-(மூலப்ரக்ருதிக்கு) ஹேயத்வம் சொல்லவில்லை யாகையாலேயும், (மூலப்ரக்ருதி ஜகத்காரணமன்று.) அ.

(ஶ்ரு-ஹா.) ஆத்மாவேநீயென்றுசொன்னபிறகு ச்ரத்தாளுவாகிய ச்வேதகேது இந்த உபதேசத்தைநம்பி அப்படியே செய்வனென்று அதைத்நிவிர்த்திக்காக ஆத்மசப்தவாச்யமான ப்ரக்ருதி ஸ்வரூபமே உன்ஸ்வரூபமென்று நினைக்கை ஹேயமென்று சொல்லவேண்டும்; அப்படி சொல்லாமையால் ஆத்மாவென்றது மூலப்ரக்ருதியன்று. அ.

(ரா - ஹா.) ஜகத்காரணம் மூலப்ரக்ருதியாகில் அது மோக்ஷவிரோதி யாகையால் நிஹீநமென்று சொல்லவேண்டும்; அப்படிச் சொல்லாமையாலும் ப்ரதானம் ஜகத்காரணமன்று. அ.

ஸூ - கூ. ப்ரதிஜ்ஞாவிரோதாச்ச.

(ஶ்ரு-ரா-வ்ய.) ப்ரதிஜ்ஞாவிரோதாச்ச-காரணஜ்ஞாநத்தினுல் மற்றவையெல்லாம் ஜ்ஞாதங்களாய்விடும் என்றுசெய்த ப்ரதிஜ்ஞைக்கும் விரோதம்வருகையாலே (ப்ரதாநம்ஜகத்காரணமன்று.) கூ.

(ஶ்ரு-ரா-ஹா.) "யேநாச்ருதம்" என்கிற வாக்யம் எதையறிந்தால் அறியாதவையெல்லாம் அறிந்ததாய்விடுமோ? அது ஜகத்காரணமென்று சொல்லிற்று. காரணம் ஜ்ஞாதமானுல் மற்றவையெல்லாம் தத்கார்யமாகையால் ஜ்ஞாதங்களாய்விடுமென்று தாத்பர்யம். ப்ரதாநம் ஜகத்காரணமாகில், அது ஜீவனைக்குறித்துக் காரணமாகாமையால், ப்ரதாநஜ்ஞாநத்தினுல் சேதநன்ஜ்ஞாதனுகமாட்டான் ஆகையால் முன்செய்த ப்ரதிஜ்ஞையோடு விரோதிக்கும்; ஆதலால் ப்ரதாநம்ஜகத்காரணமன்று. கூ.

ஸூ - க0. ஸ்வாப்யயாத்.

(ஶ்ரு-ரா-வ்ய.) ஸ்வாப்யயாத்-(ஜீவன் உறங்கும்போது) தனக்குக்காரணமாகிய ஜகத்காரணத்தில் லயிக்கிறுனென்று சொல்லுகையாலே ப்ரதாநம் ஜகத்காரணமன்று. க0.

(ஶ்ரு-ஹா.) இந்தஸூத்ரத்தில் "ஸ்வ" என்று ஆத்மாவைச்சொல்லுகிறது. உறங்கும்போது அந்த ஆத்மாவில் லயத்தையடைகிறுனென்று சொல்லியிருக்கிறது. ஆத்மா என்பது மூலப்ரக்ருதியானுல் அசேதநமாகிய அதில் சேதநனுக்கு லயம் கூடாமையால் அது மூலப்ரக்ருதியாகமாட்டாது. க0.

(ரா - ஹா.) "ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி" என்கிறவாக்யம் ஜீவன் ஸுஷுப்தி காலத்தில் ஸச்சப்தவாச்யமான ஜகத்காரணத்தில் லயிக்கிறுன் என்று சொல்லுகிறது. லயமானது.—ஸ்வகாரணத்தோடு ஏகீபவித்திருக்கை. ப்ர

தாநம் ஜகத்காரணமாகில் அது ஜீவனுக்குக் காரணமல்லாமையால் அதில் ஜீவனுக்கு லயம் சொல்வது சேராது ஆகையால் ப்ரதாநம் ஜகத்காரணமன்று. க0,

ஸூ - கக. ம திஸாமா நூாக.

(ஶ-ரா-வ்ய.) மதிஸாமா நூாக - இதரமான உப நிஷத்துகளுக்கு என்னகதியோ, (என்ன ந்யாயமோ?) அது இந்த உபநிஷத்துக்கும்ஸமாந மாகையாலே (ஒத்திருக்கையாலே) (ப்ரதாநம் ஜகத்காரணமன்று). கக.

(ஶ - ஹா.) மற்ற உபநிஷத்துக்களி லெல்லாம் சேதநனையே காரணமாகச் சொல்லியிருக்கிறது. அதுபோலவே இங்கும் அங்கீகரிக்க வேண்டுமாகையால் ப்ர தாநம் ஜகத் காரணமன்று. கக.

(ரா - ஹா.) "ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத்" "ஏகொஹவை நாராயண ஆஸீத்" இத்யாதியான ஐதரேயோப நிஷத்வாக்யங்களில் ஸர்வஜ்ஞ னை புருஷோத்தமனே ஜகத்காரணமென்று சொல்லுகையாலே, அந்த புருஷோ த்தமனே இங்கும் ஜகத்காரணமாகச் சொல்லவேண்டியிருக்கையாலே ப்ரதாநம் ஜகத்காரணமாகச் சொல்லப்படமாட்டாது. கக.

ஸூ - கஉ. ஶ்ருதத்வாச்ச.

(ஶ-ரா-வ்ய.) ஶ்ருதத்வாச்ச - (இந்த உபநிஷத்திலும் ஸச்சப்தவா ச்யத்துக்கு ஆத்மத்வம்) கேட்கப்படுகையாலும் (ப்ரதாநம் ஜகத்காரண மன்று). கஉ.

(ஶ-ஹா.) ஶ்வேதாச்வதரம் முதலிய உபநிஷத்துக்களில் ப்ரஹ்மமே காரண மென்று சொல்லுகையாலே அவ்வர்த்தமே இங்கும் ஸ்வீகரிக்கவேண்டும் ஆகையால் மூலப்ரக்ருதி ஜகத்காரணமன்று ;ப்ரஹ்மமே ஜகத்காரணம். கஉ.

(ரா - ஹா.) "ஆத்மநஏவேதம்ஸர்வம்" என்று இந்த உபநிஷத்திலும் ஸத்சப்தவாச்யமான ஜகத்காரணம் சேதநவாசியான ஆத்ம ஶப்தத்தாலே சொல் லப்படுகையாலே ப்ரதாநம் ஜகத்காரணமன்று. ஸர்வஜ்ஞனுமாய் புருஷோத்தம ஶப்தவாச்யமான பரப்ரஹ்மமேஜகத்காரணம் என்று. கஉ.

அதி. ௬. ஸூ. கங. ஆநந்தமயோऽப்யாஸாத்.

(ஶ-வ்ய.) ஆநந்தமய:-ஆநந்தமய வாக்யத்திலிருக்கிற ப்ரஹ்மபதம், (ப்ரதாநமாக) ப்ரஹ்மத்தைச்சொல்லுகிறது. அப்யாஸாத்-மேல் வாக்ய ங்களில் ப்ரஹ்ம பதத்திற்குஅப்யாஸம். காண்கையாலே. கங.

(ஶ - ஹா.) கீழ்ச்சொல்லிய பரப்ரஹ்மம் ஸகுணமென்றும் நிர்குணமென் றும் இரண்டுருவமுள்ளதா யிருக்கும். எந்த உருவத்தை உபாஸநம் செய்யச்சொல்லி யிருக்கிறதோ, அது ஸகுணம். எந்த உருவத்தை யறிந்தால் மோக்ஷ முண்டாகுமெ ன்று சொல்லியிருக்கிறதோ; அது நிர்குணம் என்று ஸித்தாந்தம்.—இனி மோக்ஷத் துக்கு ஸாக்ஷாத்காரணமாகிய ஜ்ஞாநத்தின் விஷயமானது ஸகுணமா, நிர்குணமா, என்று விசாரிக்கப்படுகிறது.

"ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா" என்கிற விடத்தில் ப்ரஹ்மம் ஒன்றுக்கு அங்கமாகச் சொல்லப்பட்டதா ; அல்லது, அதுவே ப்ரதாநமாகச் சொல்லப்ப ட்டதா என்கிற சங்கையில், புச்சம்என்று சொல்லுகையால், புச்சம், அதாவது

வால், ஒன்றுக்கு அங்கம் என்றே சொல்லப்பட்டது என்கிற பூர்வபக்ஷத்திற்கு,— இதுப்ரதாநமாகவேசொல்லப்பட்டது. ''அஸத் ப்ரஹ்மேதி'' ''அஸ்தி ப்ரஹ்மேதி'' என்கிற மேல்வாக்யங்களில் ப்ரஹ்ம பதத்திற்கே ஆவ்ருத்திகாண்கிறது. ஒன்றுக்கு அங்கமானுல், அதாவது - இதனுடைய ஜ்ஞாநம் ஸாக்ஷாத் மோக்ஷஸாதநமாகாவிட்டால் அதை ஆவ்ருத்திசெய்ய உபயோகமில்லை ஆகையால் இது அங்கமாகச்சொல்லப்படவில்லை என்று ஸமாதாநம் சொல்லுகிருர்.

(ஸூ - வ்ய.) அப்யாஸாத் - ஆநந்தமயநிஷ்டமான ஆநந்தத்தைஜீவாநந்தந்தொடங்கி நூறு நூறு மடங்காக குணித்திருக்கிறபடியால், ஆநந்தமய: - ஆநந்தமயஶப்தத்தினுல் சொல்லப்பட்டவன், (பரமாத்மா). கங.

(ஸூ - ஸா.) கீழ் அதிகரணத்தில் ஜகத்காரணம் அசேதநத்தைக் காட்டிலும் விலக்ஷணமென்று சொல்லிற்று. இந்த அதிகரணத்தில் ஜீவனைக் காட்டிலுங்கூட விலக்ஷணமென்கிறது.—அசேதநத்திற்கு ஸங்கல்பம் கூடாமையால் ஜகத்காரணமாகாவிடிலும் ஸங்கல்பமுடைய ஜீவன் ஜகத்காரணமாகலாமென்று ஶங்காஸங்கதி. ''தஸ்மாத்வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத் அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய:'' என்கிற வாக்யம் இந்தஸூத்ரத்திற்கு விஷயம்.— ''தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத:'' என்றுதொடங்கி ''அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய:''என்று ஜகத்காரணமாகச்சொல்லப்பட்ட ஆநந்தமயன், ஜீவாத்மாவா, பரமாத்மாவாஎன்று ஸம்சயம்.— ''தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா''என்று ஆநந்தமயனுக்குஶரீரஸம்பந்தம் சொல்லியிருக்கிறது.ஶரீரஸம்பந்தம்புண்யபாபகர்மாநுகுணம்.அதுஜீவனுக்கே யுள்ளதாகையால்ஜீவாத்மாவேஎன்றுபூர்வபக்ஷம்.—ஸித்தாந்தம்—''ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி''என்று ஆநந்தமயனுடைய ஆநந்தத்தைவிசாரிப்பதாகத் தொடங்கி மநுஷ்யாநந்தத்தை முதலில்சொல்லி, அதைக்காட்டிலும் நூறு மடங்கு மனுஷ்யகந்தர்வாநந்தம், அதைக்காட்டிலும் நூறுமடங்கு ''தேவகந்தர்வாநந்தமென்று இவ்வரிசையில் இந்த்ரன் ப்ருஹஸ்பதி சதுர்முகப்ரஹ்மா இவர்களுடைய ஆநந்தங்களைக் கணக்கிட்டுச்சொல்லி, அதற்குமேல் ப்ரஹ்மாநந்தத்தைச் சொல்லி, ''யதோவாசோ நிவர்த்தந்தே'' என்று அது வாங்மநஸ்ஸுக்களுக்கு விஷயமன்ருகையால் அபரிச்சிந்நமென்று சொல்லிற்று. இந்த அபரிச்சிந்நமான ஆநந்தம் அல்பஸுகமுடையஜீவனிடத்தில் ஸம்பவியாதாகையால் அவ்வாநந்தத்தையுடைய ஜகத்காரணனுன ஆநந்தமயன் ஜீவனைக்காட்டிலும் பிந்நனுன பரமாத்மாவென்று கொள்ளவேணும். கர்மாதீநமான சரீரஸம்பந்தம் பரமாத்மாவுக்கு இல்லாவிடினும், சித்துக் களெல்லாம் அவனுக்கு சரீரமாகையால் நிருபாதிகமான சரீர ஸம்பந்தம் அவனுக்குஉண்டு ஆகையால் அவனே ஜகத்காரணனென்று ஸித்தாந்தம். கங.

ஸூ. கச. விகாரஶப்தாந்நேதி சேந்ந ப்ராசுர்யாத்.

(ஶ-வ்ய.) விகாரஶப்த:-விகாரம் என்ருல் அசைதல் முதலிய விகாரத்தை யடைகிற அவயவம்.அவயவமாக, அதாவது-புச்சமாகச்சொல்லுகையால், ந-ப்ரதாநமாகச்சொல்லப்படவில்லை, இதி சேத்-என்ருல், ந-அப்படியன்று. ப்ராசுர்யாத்-புச்சப்ராயம் என்கிற அபிப்ராயத்தாலேசொல்லுகையாலே. கச.

(ஸ - ஹா.) * புச்சமென்கிற அவ்யவமாக ப்ரஹ்மத்தைச் சொன்னபடியால் ப்ரதாநமாகச் சொல்லப்படவில்லை என்னில், புச்சமென்பதில் தாத்பர்யமில்லை. புச்ச ப்ராயமென்று தாத்பர்யம். அதாவது:— கேட்கிறவர்களுக்கு ஸுலபமாகத் தெரிவிக்கைக்காக பக்ஷிபோலவும் அதின் அவயவங்கள்போலவும் கற்பித்துச் சொல்லிற்று

(ஸ்ரீ-வ்யா.) விகாரசப்தாத்-விகாரார்த்தகமான மயட் ப்ரத்யயம் கேட்கப்படுகையாலே, ந-ஆநந்தமயன் பரமாத்மாவாகமாட்டான்; இதிசேத்-என்றால், ந - அப்படியன்று; ப்ராசுர்யாத் - மயட்ப்ரத்யயம் ப்ராசுர்யார்த்தகமாகுகையாலே, பரமாத்மாவே ஆநந்தமயன். கங.

(ஸ்ரீ - ஹா.) "ஆநந்தமய:" என்று ஆநந்த பதோத்தரமிருக்கிற மயட் ப்ரத்யத்துக்கு விகாரம் அர்த்தம்.ஆக ஆநந்தமயபதத்துக்கு, ஆநந்த விகாரன், அதாவது ஆநந்தத்தினுடைய பரிணாமம் என்றர்த்தம். பரமாத்மா பரிணாமாதி விகாரசூன்யனாகையால் ஆநந்தமயபதம் பரமாத்மாவைச் சொல்லாது என்று பூர்வபக்ஷம். மயட் ப்ரத்யத்துக்கு விகாரம் அர்த்தமாகில் ஜீவனும்விகாரசூந்யனாகையால் அவனையும் சொல்லாது. ஆகையால், இந்தமயட் ப்ரத்யயத்திற்கு ப்ராசுர்யம் அர்த்தம்."ஆநந்தமய:" என்றால் ஆநந்தத்தினால் நிறைந்தவன் - அதிகமான ஆநந்தத்தை யுடையவன் என்று அர்த்தமாகையால் இந்தபதம் பரமாத்மாவைச் சொல்லத்தட்டில்லை என்று ஸித்தாந்தம். கங.

ஸூ. கரு. தத்தேதுவ்யபதேசாச்ச.

(ஸ - வ்யா.) தத்தேதுவ்யபதேசாத்- (ப்ரஹ்மத்தை) ஆநந்தமயத்துக்குக் காரணமாகச் சொல்லுகையாலே.(தான் அவயவமாக மாட்டாது).

(ஸ - ஹா.) "இதம் ஸர்வமஸ்ருஜத" இந்தப்ரஹ்மம் ஆநந்தமயம் முதலிய ஸமஸ்தஜகத்தையும் ஸ்ருஷ்டித்தது என்று சொல்லுகையாலே தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஆநந்தமயத்திற்கு ப்ரஹ்மம் அவயவமாகமாட்டாது. கச.

(ஸ்ரீ-வ்யா.) தத்தேதுவ்யபதேசாச்ச - (ஆநந்தமயனை) ஜீவனுடைய ஆநந்தத்துக்குக் காரணமாகச் சொல்லுகையாலும்.(ஆநந்தமயசப்தவாச்யன் ஜீவனன்று). கரு.

(ஸ்ரீ - ஹா.) "ஏஷஹ்யேவாநந்தயாதி" என்று ஆநந்தமயன் ஜீவனை ஆநந்திப்பிக்கிறான் என்று சொல்லுகையாலே இந்த ஆநந்தமயன் ஜீவாத்மாவைக் காட்டில் வேறொருவனாகவேண்டும். கரு.

ஸூ. கசு. மாந்த்ரவர்ணிகமேவசகீயதே.

(ஸ - வ்யா.) மாந்த்ரவர்ணிகம் ஏவ - மந்த்ர வர்ணத்தில் சொல்லப்பட்ட ப்ரஹ்மமே, கீயதே - இங்கும் சொல்லப்படுகிறது.

(ஸ - ஹா.) †"ப்ரஹ்மவிதாப்நோதி பரம்-ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிறவாக்யங்களில் ப்ரஹ்மத்தினுடைய எந்த ஸ்வரூபத்தை யறிதல் ஸாக்ஷாத்

* புச்சமெனறால் வாலுக்குப்பெயர், அது ஒருபக்ஷியின் அவயவம். அது முக்யமன்று. இந்தவால் எதினுடையதோ அதுவே முக்யமாகவேணும். ஆகையால், ப்ரஹ்மத்தை ஆநந்தமயத்திற்கு வாலாகச்சொன்னபடியால் ஆநந்தமயமே இவ்வாக்யத்திற்கு முக்யார்த்தம் என்று தாத்பர்யம்.

† இரண்டிடத்திலும் ப்ரஹ்மபதத்தினால் வ்யக்தியை நிர்தேசிக்கையால், இரண்டிடத்திலும் சொல்லப்பட்ட வஸ்து ஒன்றேயாகவேணுமென்று தாத்பர்யம்.

மோக்ஷஸாதநமென்று சொல்லிற்றே; இந்த ஸ்வரூபமே "ப்ரஹ்மவிதாப்நோதி" என்கிற வாக்யத்தில் ப்ரஹ்ம பதத்தினால் சொல்லப்பட்டது. ஆகையால் இது அங்கமன்று.

(ஸ்ரீ-வ்ய-ஹா.) ஸாநுவர்ணிதத்வேந - "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற மந்த்ரவர்ணத்திற் சொல்லப்பட்ட பரப்ரஹ்மமே "அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய:" என்கிற இடத்திலும் ஆநந்தமய சப்தத்தினால் சொல்லப்பட்டதாகையால் ஜீவனைக்காட்டிலும் வேறாய் பரப்ரஹ்ம சப்த வாச்யனான புருஷோத்தமனே ஆநந்தமய சப்தத்தினால் சொல்லப்படுகிறான். கசு.

ஸூ. கஎ. நேதரோऽநுபபத்தே:.

(ஸூ-வ்ய.) அநுபபத்தே: - ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்கள் இல்லாமையால், இதர: - ஆநந்தமய பதத்தினால் சொல்லப்பட்ட ஜீவன், ந - ப்ரஹ்மமாகமாட்டான். கஎ.

(ஸூ - ஹா.) ஆநந்தமயபதத்தினால் சொல்லப்பட்ட ஜீவனுக்கு ஜகத் ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரமில்லாமையால் அவனிங்கு சொல்லப்படவில்லை. கஎ.

(ஸ்ரீ - வ்ய.) அநுபபத்தே: - ஸத்யஸங்கல்பத்வாதி குணங்கள் முக்தனிடத்தில் ஸம்பவியாதாகையால், இதர: - பரமாத்மாவைக் காட்டிலும் வேறான முக்த புருஷனும், ந - ஆநந்தமயசப்த வாச்யனன்று. கஎ.

(ஸ்ரீ - ஹா.) இந்தஸூத்ரத்தில் முக்த புருஷனுங்கூட ஆநந்தமய சப்தத்துக்கர்த்த மன்றென்கிறது - ஏனெனில், ஆநந்தமயனுக்கு "விபச்சிதா" என்று ஸத்ய ஸங்கல்பத்வம் சொல்லியிருக்கிறது. இந்த § நிருபாதிகமான ¶ ஸத்யஸங்கல்பத்வம், முன் ஸம்ஸாரியாயிருந்து பின்பு மோக்ஷமடைந்த முக்தனுக்கும் ஸம்பவியாதாகையால் அவனும் ஆநந்தமயனாகமாட்டான். கஎ.

ஸூ. கஅ. பேதவ்யபதேசாச்ச.

(ஸூ - வ்ய.) பேதவ்யபதேசாத் - (ஆநந்தமயனைக் காட்டிலும் ப்ரஹ்மத்தை) வேறாகச்சொல்லுகையாலே, (ஆநந்தமய பதத்திற்கு ப்ரஹ்மம் அர்த்தமன்று.) கஅ.

(ஸூ - ஹா.) "ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாऽऽநந்தீ பவதி"--இந்தஆநந்தமயன் ரஸஸ்வரூபமாகிய பரப்ரஹ்மத்தையடைந்து ஆநந்தத்தை யடைகிறான் என்று ஆநந்தமயனாகிய ஜீவனைக்காட்டிலும் ப்ரஹ்மத்தை வேறிட்டுச்சொல்லுகையாலே இந்த ப்ரஹ்மம் ஆநந்தமயனென்று சொல்லப்பட்ட ஜீவனன்று. கஅ.

(ஸ்ரீ - வ்ய.) பேதவ்யபதேசாச்ச - ஜீவாத்மாவைக் காட்டிலும் ஆநந்தமயன் வேறானவன் என்று சொல்லுகையாலும் ஆநந்தமயன் ஜீவனாகமாட்டான். கஅ

---

§ நிருபாதிகமாவது - நடுவேவந்த தன்றிக்கே எப்போது முள்ளது.

¶ ஸத்ய ஸங்கல்பத்வமாவது - தான் நினைத்தகார்யத்தைக் குறைவின்றி அப்போதே நிறைவேற்ற வல்ல சக்தி.

(ரா - பா.) "தஸ்மாத்³வா ஏதஸ்மாத்³விஜ்ஞாநமயாத், அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்த³மய:" என்று விஜ்ஞாநமயன் என்று சொல்லப்படுகிற ஜீவாத்மாவைக் காட்டிலும் ஆநந்தமயன் அந்யன் என்று சொல்லுகையாலே ஆநந்தமயன் ஜீவாத்மா வாக மாட்டான். ௧௮,

ஸூ. ௧௯. காமாச்ச நாநுமாநாபேக்ஷா,

(ஶ-வ்ரு.) காமாத் - (ப்ரஹ்மத்தை கீழ்) ஆநந்தபதத்தினால் சொல்லுகையால், அநுமாநாபேக்ஷா - இங்கும் ஆநந்தமயபதத்தினால் அதையே சொல்லவேணுமென்கிற அநுமானாபேக்ஷை, ந - இல்லை. ௧௯.

(ஶ - பா.) காமமென்றால் ஆசைப்படத்தகுந்தது. அதாவது - ஆநந்தம். ப்ருகுவல்லியில் ஆநந்தத்தை ப்ரஹ்மமென்று சொல்லுகையாலே இங்கு சொல்லப்பட்ட ஆநந்தமய பதத்திலும் ப்ரஹ்மமே அர்த்தமென்று கொள்ளவேண்டும் என்கிற யுக்தியை, ஆநந்தமயனென்றால் ஆநந்தத்தின் விகாரமென்றர்த்த மாகையால் ப்ரஹ்மம் விகாரமற்றதாகையால் ஆநந்தமய பதத்திற்கு ப்ரஹ்மம் அர்த்தமாகமாட்டாதென்று நிரஸநம் செய்கிறார். ௧௯.

(ரா - வ்ரு.) காமாச்ச-ஸங்கல்பத்தினாலேயே, (ஆநந்தமயன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான் என்று சொல்லியிருக்கிறது.) அநுமாநாபேக்ஷா - மூலப்ரக்ருதியினுடைய அபேக்ஷையும் (ஸஹாயமும்) ந - சொல்லவில்லை.

(ரா - பா.) ஜீவன்ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும்போது மூலப்ரக்ருதியின் ஸஹாயம்வேண்டும். ஆநந்தமயன் அந்த ஸஹாயமில்லாமலே ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்றுசொல்லியிருக்கிறபடியால் ஆநந்தமயன் ஜீவாத்மாவன்று. ௧௯.

ஸூ. ௨௦. அஸ்மிந்நஸ்ய ச தத்³யோக³ம் ஶாஸ்தி.

(ஶ-வ்ரு.) அஸ்மிந் - புச்சப்ரஹ்மத்தில் (சேர்ந்த), அஸ்ய - இந்த ஆநந்த மயனுக்கு, தத்³யோக³ம் - அந்த புச்சப்ரஹ்மத்தோடு அபேதத்தை, ஶாஸ்தி - சாஸ்த்ரம் சொல்லுகிறது. (ஆகையால் ஆநந்தமயன் ப்ரஹ்மமன்று.) ௨௦.

(ஶ - பா.) "ப்ரஹ்மபுச்சம்" என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மத்தோடு தன்னுடைய ஆத்மாவுக்கு எவன் ஐக்யம் நினைக்கிறானோ, அவன் அந்த ப்ரஹ்ம ஸ்வரூபியாகிறானென்று சொல்லுகையாலே இந்த வாக்யம் ப்ரஹ்மத்தை ப்ரதாநமாகவே சொல்லிற்று. ஸகுண ப்ரஹ்மத்தை யறிந்தால் அவனுக்கு ஸாக்ஷாத் மோக்ஷம் கிடையாது. நிர்குண ப்ரஹ்மத்தை யறிந்தவனுக்கு ஸாக்ஷாத் மோக்ஷமுண்டென்று இந்த அதிகரணத்திற்குத் தாத்பர்யம். ௨௦.

(ரா - வ்ரு.) அஸ்மிந் - இந்த ஆநந்தமயனிடத்தில் (சேர்ந்தால்) அஸ்ய - இந்த ஜீவனுக்கு, தத்³யோக³ம் - ஆநந்த ப்ராப்தியை, ஶாஸ்தி - சாஸ்த்ரம் சொல்லுகிறது. ௨௦,

(ரா - பா.) ரஸம் ஹ்யேவாயம் லப்³த்⁴வாऽऽநந்தீ³ ப⁴வதி, என்று ஆநந்தஸ்வரூபனான ஆநந்தமயனை யடைந்து ஜீவாத்மாவும் ஆநந்தத்தையுடையவனாகிறான் என்று சொல்லுகிறது. எவனையடைந்தால் எவனுக்கு ஆநந்தமுண்டாகிறதோ, அவன் அவனைக்காட்டிலும் வேறாகவேண்டும்; ஆகையா

ல் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்ட ஆநந்தமயன் ஜீவனன்று. பரப்ரஹ்மமான புருஷோத்தமன். உ0.

ஸூ. உக. —*அந்தஸ்தத்தர்மோபதேசாத்.*—

(ஶ்ரீ-பா-வ்ய.) அந்த:-ஸூர்ய மண்டல மத்யவர்த்தியான புருஷன் தத்தர்மோபதேசாத்-(அந்தபுருஷனுக்குப்)பரமாத்மாஸாதாரணதர்மங்களைச் சொல்லுகையால். (பரமாத்மா). உக.

(ஶ்ரீ - ஸா.) இந் அதிகரணத்தில் ஆநந்தமயனுக்கு சரீர ஸம்பந்தம் சொல்லியிருக்கையால் அவன் ப்ரஹ்மமன்று; ஜீவன் என்று சொல்லிற்று அதுபோல், "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ருச்யதே" என்கிற வாக்யத்திலும் ஸூர்யமண்டல மத்யவர்த்தியான புருஷனுக்கும் சரீரஸம்பந்தம் சொல்லியிருக்கையால் இவனும் ஜீவனாகலாமென்கிற சங்கைக்கு. * அபஹத பாப்மத்வம் முதலிய குணங்கள் சொல்லியிருக்கையால் அக்குணங்களையுடையவன் ஜீவனாகமாட்டான், உபாஸநார்த்தமாக ஸகுணமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே சொல்லிற்றென்று ஸமாதாநம். உக.

(ஶ்ரீ - ஸா.) "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ருச்யதே" என்கிறவாக்யம் இந்தஅதிகரணத்திற்கு விஷயம். இதில் ஸூர்யமண்டல மத்யவர்த்தியாய் ஸ்வர்ணமய திவ்ய விக்ரஹ முடையவனாகச் சொல்லப் பட்டவன் ஜீவாத்மாவா,பரமாத்மாவா என்றுஸம்சயம் "ஹிரண்யச்மச்ரு ஹிரண்யகேச:" என்று,அந்தபுருஷனுக்கு சரீராவயவங்கள்சொல்லியிருக்கின்றன.சரீரமானது கர்மபலபோகார்த்தமாக ஜீவனுக்கேயுள்ளது ஆகையால், அந்தபுருஷன் ஜீவாத்மாவென்று பூர்வபக்ஷம்; "ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித:" என்று * அபஹத பாப்மத்வாதி கல்யாண குணங்களையுடையவனென்று சொல்லியிருக்கையால், இக்குணங்கள் ஜீவனிடத்தில் அஸம்பவங்களாகையாலே ஸூர்யமண்டல மத்யவர்த்தியான அந்தபுருஷன் ஜீவனில்வேறான பரமாத்மா, அவனுக்கு ஜ்ஞாநாதி குணங்கள்போல் அப்ராக்ருத திவ்ய விக்ரஹமும்உண்டு என்று ஸித்தாந்தம். உ.

ஸூ. உஉ. —*பேதவ்யபதேசாச்சாந்ய:*—

(ஶ்ரீ பா-வ்ய.) பேதவ்யபதேசாச்ச - ஜீவனைக்காட்டிலும் ஸூர்ய மண்டல மத்யவர்த்தியான புருஷனை வேறாகச்சொல்லி யிருக்கையாலும். அந்ய: - ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டவன் பரமாத்மா. உஉ,

(ஶ்ரீ - ஸா.) ஸூர்யமண்டலத்திற்கு அதிஷ்டாந தேவதையா யிருக்கலாமென்னும் சங்கைக்கு; "ஆதித்யாதந்தர:" என்று அதைக்காட்டிலும் வேறென்று சொல்லுகையால். அந்த தேவதையுமன்று. இந்து பரமாத்மா. உஉ.

---

* அபஹத பாப்மத்வம் முதலிய குணங்களாவன - பாபம், கிழத்தனம், மரணம், துன்பம், பசி, தாஹம், முதலிய துர்குணங்க ளற்றிருக்கையும், எல்லாவற்றையுமறியவல்ல ஜ்ஞாநம், நினைத்ததை நிறைவேற்றவல்ல சக்திமுதலிய ஸத் குணங்களையுடைத்தாகையும்.

( ரா - ஹா. ) "யஶ்சாஸாவாதித்யே ஹிரண்மய: புருஷ:" என்று.—அந்தபுருஷன் ஸூர்யனிடத்தில் எழுந்தருளியிருக்கிறவன்; ஸூர்யனைக்காட்டிலும் வேறானவன் என்று சொல்லியிருக்கையால். அவன் ஸூர்யரூபியான ஜீவனாகமாட்டான் பரமாத்மாவேயாகவேணும். உ௨.

அதி. அ. —*ஸூ. உ௩. ஆகாஶஸ்தல்லிங்காத்.*—

(ஸ-ரா-வ்யா.) தல்லிங்காத் - பரமாத்மலக்ஷணஞ் சொல்லுகையால், ஆகாஶ: - ஆகாச சப்தவாச்யன், (பரமாத்மா). உ௩.

( ஸ - ஹா. ) "ஸர்வாணி ஹ வா இமானி பூதான்யாகாஶாதேவ ஸமுத்பத்யந்தே" என்கிறவிடத்தில் ஆகாசபதத்திற்கு பூதாகாசம் அர்த்தம். வாயுமுதலிய பூதங்களுக்குக் காரணமாகையால் மேல் சொல்லப்போகிற ஜகத்காரணத்வம் இதற்கும் உண்டு என்கிற சங்கையை, ஸகலபூதங்களுக்கும் காரணமென்று சொல்லுகையால் ஸகலபூதங்களுக்குள்ளடங்கிய ஆகாசம் தனக்குத்தான் காரணமல்லாமையால் இந்த ஆகாசபதத்திற்கு இது அர்த்தமன்று. சிந்து - பரமாத்மா அர்த்தம் என்று ஸமாதானம்சொல்லுகிறார். உ௩.

(ரா - ஹா. ) "ஸர்வாணி ஹ வா இமானி பூதான்யாகாஶாதேவ ஸமுத்பத்யந்தே" என்கிற வாக்யம் விஷயம். இதில், ஆகாசம் ஜகத்காரணம் என்று சொல்லிற்று. இங்கு ஆகாச சப்தத்திற்கு அர்த்தம் பஞ்சபூதங்களில் எண்ணப்பட்ட ஆகாசமா, பரமாத்மாவா என்று ஸம்சயம்,—ஐந்தாவதா தத்வமான ஆகாசமே உலகத்தில் ஆகாசமென்று வழங்குகையாலே பஞ்சபூதங்களில்சேர்ந்த ஆகாசமே இங்கு ஜகத்காரணமென்று சொல்லிற்று. என்று பூர்வபக்ஷம்.— "ஸர்வாணி ஹ வா இமானி பூதானி" என்று * ப்ரஸித்தமாகச் சொல்லியிருக்கையாலே, அந்த ஜகத்காரணத்வ ப்ரஸித்தி, ஶ்ருத்யந்தரங்களில் "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" என்று பரமபுருஷனுக்கே உண்டாகையாலே அந்த பரம புருஷனே ஜகத் காரணமாகச் சொன்ன ஆகாசபதார்த்தம் என்று ஸித்தாந்தம் - ஆகாச: என்றால் நன்றாய் விளங்குகிறதென்றர்த்தம். உ௩.

அதி - ௯. ஸூ. உ௪. —*அத ஏவ ப்ராண:.*—

(ஸ-ரா-வ்யா.) அத ஏவ-இந்த ஹேதுவினாலேயே, ப்ராண:-ப்ராண சப்தவாச்யன், (பரமாத்மா). உ௪.

( ஸ - ஹா. ) † "ஸர்வாணி ஹ வா இமானி பூதானி ப்ராணமேவாபிஸம்விஶந்தி ப்ராணமப்யுஜ்ஜிஹதே" என்கிறவிடத்தில் ப்ராணபதத்திற்கு வாயுரூபமாகிய முக்ய ப்ராணன் அர்த்தம், உறங்கும்போது ப்ராணனிடத்தில் ஸகலேந்திரியங்களும் லயிக்கின்றனவென்றும்,எழுந்திருக்கும்போது ப்ராணனிடத்திலிருந்து ஸகலேந்த்ரியங்களும் உண்டாகின்றனவென்றும் வேதத்திற் சொல்லுகையாலும் ப்ரத்யக்ஷத்தில் அப்படியே காண்கையாலும் மேற்சொல்லுகிற ஜகத்காரணத்வமும், அதற்கே ஒத்திருக்கும் என்கிற சங்கையை, "ப்ராணஸ்ய ப்ராண:"இங்கு சொல்லப்பட்ட ப்ராணன் ப்ராணனுக்கும் ப்ராணனென்று சொல்லுகையாலும், இந்திரியங்கள் தவிர மற்ற பூதங்களுக்கு ப்ராணனிடத்தில் லயமும்அதிலிருந்து உத்பத்தியும் காணாமையாலே ஸகலஜகத்காரணத்வம் கூடாமையாலும் முக்ய ப்ராணனிங்கு சொல்லப்படவில்லை - பரமாத்மாவேசொல்லப்பட்டானென்று போக்குகிறார். உ௪.

---

* ப்ரஸித்தமாகச் சொல்லுகையாவது - இந்த ஸகல பதார்த்தங்களும் ஆகாசத்தில் நின்றுமே யுண்டாயிற்றன்றோ என்று சொல்லுகை.

†; இதற்கர்த்தம் - ஜகத்காரணமாகிய தேவதை யார் என்று ஒருவன் கேட்க, ப்ராணன் என்று குருசொன்னானென்று.

(ரா - ஹா.) "கதமாஸாதேவதேதி, ப்ராண இதிஹோவாச" என்கிற வாக்யம் விஷயம். இங்கு ப்ராணன் ஜகத்காரணனென்று சொல்லிற்று. ‡ அது வாயுரூபமான ப்ராணனு, பரமாத்மாவா என்று ஸம்சயம். சரீரத்தில் ப்ராணனுள்ளவரையில் மநுஷ்ய பசுபக்ஷ்யாதிகள் ஜீவிக்கின்றன. ப்ராணன் பிரிந்தால் நசிக்கின்றன; ஆகையால், ஜீவமயமான ஜகத்துக்குக் காரணம் வாயுரூபமான ப்ராணனே, அதுவே இங்கு சொல்லப்பட்டதென்று பூர்வபக்ஷம். ஜகத்துக்குள் ளடங்கிய மரம், கல்முதலிய அசேதநங்கள் ப்ராணவாயு ஸம்பந்தமற்றவையாயினும் அழிவின்றி காணப்படுகின்றன ஆகையால் சேதநா சேதநமயமான ஜகத்துக்குப் ப்ராணன் காரணமென்று சொல்லக்கூடாது. ஸித்தா. முன்போலவே இங்கும் "ஸர்வாணி ஹவா இமாநி பூதாநி" என்று ப்ரஸித்தமாகச் சொல்லுகையால், அந்த காரணத்வ ப்ரஸித்தி பரமபுருஷனுக்கே யுள்ளதாகையால் இங்கும் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்ட ப்ராணன் பரமாத்மா, என்று ஸித்தாந்தம். உ௪.

௬யி - ௧௦. ஸூ. உ௫.—*ஜ்யோதிஶ்சரணாபிதாநாத்.*—

(ஶ்ரீ-பா.) சரணாபிதாநாத்-(இங்குசொன்னஜ்யோதிஸ்ஸுக்கு ஸமஸ்த பூதங்களும்) பாதமென்றுசொல்லுகையாலே, ஜ்யோதி:-ஜ்யோதிஸ்சப்தத்தால் சொல்லப்பட்டவன் (பரமாத்மா). உ௫.

(ஶ்ரீ - ஹா.) "அத யதத:பரோதிவோ ஜ்யோதி:" என்கிறவாக்யத்தில் ஜ்யோதிஃ என்கிறபதத்திற்கு ஸூர்யாதிகளா, பரமாத்மாவா அர்த்தம் என்கிற ஸம்சயத்தில், இவ்வாக்யத்தில் பரமாத்ம லக்ஷணம் காணுமையாலும், இப்பேர் ஸூர்யாதிகளில் ப்ரஸித்தமாகையாலும் பரமாத்மா இப்பதத்திற்கு அர்த்தமன்று, ஸித்தஸூர்யன் என்கிற பூர்வபக்ஷத்தை, இவ்வாக்யத்தில் பரமாத்மலக்ஷண மில்லாவிடினும் பூர்வவாக்யத்தில்ஸர்வபூதங்களையும் பாதமாக உடைய எந்த பரமாத்மாவைச்சொல்லுகிறதோ, இவ்வாக்யத்தில், "யத்" என்றபதம் முன்வாக்யத்தில் சொல்லப்பட்ட அந்த பரமாத்மாவையே சொல்லுகிறது. ஆகையால் அந்த "யத்" என்கிற பதத்தோடு ஸமாநாதிகரணமாகிய ஜ்யோதிஃ பதமும் அந்த பரமாத்மாவையே சொல்கிறதென்று நிச்சயிக்கிறார். உ௫.

(ரா - ஹா.) "அத யதத:பரோதிவோ ஜ்யோதிர்தீப்யதே" என்கிற வாக்யம் விஷயம்.— இவ்வாக்யத்தில் நிரவதிகதேஜோ விசிஷ்டனுகச்சொல்லப்பட்டவன் ஸூர்யன் அக்நி முதலியதேஜஸ்ஸிலொன்ரு, அல்லதுபரமபுருஷனுவென்று ஸம்சயம்.— "இதம்வாவ தத்யதிதமஸ்மிந்நந்த: புருஷே ஜ்யோதி:" என்றஉதரத்திலிருக்கிற §ஜடராக்நியோடைக்யம்சொல்லியிருக்கிறபடியாலும், ¶இவ்

‡ ப்ராணன் என்ருல் பிழைப்பிக்கிறவன் என்றர்த்தம். பிழைப்பித்தல் ப்ராணவாயுவுக்கும் பரமாத்மாவுக்கு முண்டாகையால் இங்குயாரைச் சொல்லிற்றுகலாமென்று இதற்கு தாத்பர்யம்.

§ ஜடராக்நியோடு ஐக்யம் சொல்லுகையாவது - இங்குசொன்ன ஜ்யோதிஸ்ஸுஜடராக்நி என்னு இரண்டையும் ஒன்ருகச்சொல்லுகை.

¶ இரண்டுவஸ்துக்களை சொல்லும்பதம் ஒருவாக்யத்திலிருந்தால் அவ்வாக்யத்தில் பதத்திற்கு அவ்விரண்டில் எதை அர்த்தமாகக்கொள்ளவேணுமென்னில், அந்தப்ரகரணம் கீழும்மேலும் யாரை அநுஸரித்திருக்கிறதோ, அதில் யாருக்கு லக்ஷணம்காண்கிறதோ, அவ்வஸ்துவை அங்கு அர்த்தமாகக் கொள்ளவேணு மென்று கருத்து.

வாக்யத்தில் பரமபுருஷலக்ஷணம் சொல்லாமையாலும், இந்தஜ்யோதிஸ்ஸப்தத்திற்கு அக்நிமுதலிய தேஜஸ்ஸுக்களிலொன்று பொருளாகக் கொள்ளவேண்டும் என்று பூர்வபக்ஷம். முன்வாக்யத்தில் "பாதோஸ்ய விஶ்வா பூதாநி" என்று ஸமஸ்தபூதங்களையும் பரமபுருஷனுக்குப்பாதமாகச்சொல்லி, இந்த வாக்யத்தில் "அதய தஃ" என்று அந்த பரமபுருஷனையே ஜ்யோதிஸ் சப்தத்தினால் சொல்லுகிறது. ஸமஸ்தபூதங்களும் அக்நி முதலியவைகளுக்குப் பாதமாகாமையால் அவைகளைப் பாதமாகவுடைய பரமபுருஷனே இங்கு ஜ்யோதிஸ் சப்தத்திற்கு அர்த்தம். அவனை ஜடராக்நி சரீரகனாய் உபாஸநம் செய்யவேண்டுமென்கைக்காக ஜடராக்நியுடன் ஐகயம் சொல்லி யிருக்கிறதென்று ஸித்தாந்தம். ௨௫.

ஸூ - ௨௬. —*ச2ந்தோ3பி4தா4நாந்நேதி சேந்ந ததா2 சேதோர்பணநிக3தா3த்ததா2 ஹி த3ர்சநம்.* —

(ஸ-ரா-வ்ய.) ச2ந்தோ3பி4தா4நாத் - (பூர்வவாக்யத்தில் சந்த (ஸை)ஸ்ஸைச் சொன்னபடியால், ந - (அவ்வாக்யத்தில் சொல்லப்பட்டவன்) பரமபுருஷனன்று, இதிசேத் - என்றால், ந - அப்படியன்று. ததா2 - (பூர்வவாக்யத்தில்) அந்தகாயத்ரீரூபமாக, சேதோர்பணநிக3தா3த் - (பரமபுருஷனை) மனஸ்ஸினால் த்யாநிக்கவேண்டுமென்று நிஸ்சயிக்கிறபடியால் (அவன் பரமபுருஷனே.) ததா2ஹி - நாலுபாதங்களையுடையதாகவும், த3ர்சநம் - (காயத்ரீ) காணப்படுகிறது. ௨௬.

(ஸ - ஸா.) "கா3யத்ரீ வா இத3ம் ஸர்வம்" என்று பூர்வவாக்யத்தில் காயத்ரியே சொல்லப்பட்டதாகையால் இவ்வாக்யமும் காயத்ரியையே சொல்லுமல்லது பரமாத்மாவைச் சொல்லாது என்று சங்கிக்கவேண்டாம். அந்தவாக்யத்திலும்காயத்ரியென்று காயத்ரிக்குகாரணமாகிய பரமாத்மாவே சொல்லப்பட்டான். இவ்விதமாகவே கார்யவாசகபதத்தினால் காரணத்தை வேறிடங்களிலும் சொல்லுவதுண்டு ஆகையால் இங்குபரமாத்மாவே அர்த்தம். ௨௬.

(ஸா - ஸா.) பூர்வவாக்யத்தில் (கா3யத்ரீ வா இத3ம் ஸர்வம்) என்று காயத்ரியைச் சொல்லுகையால் அநந்தரம் சொல்லப்பட்ட "பாதோஸ்ய விஶ்வா பூதாநீ* என்கிறவாக்யத்திலும் அந்த காயத்ரியை விஷயமாகக்கொள்ள வேணுமேயொழிய அப்ரஸ்துதனான பரமபுருஷனை விஷயமாகக்கொள்ளக்கூடாது என்று பூர்வபக்ஷம்.—பரமபுருஷனை காயத்ரியைப்போல் நாலுபாதங்களையுடையவனாகத்யாநிக்கவேண்டுமென்கைக்காக காயத்ரீசப்தத்தினால் பரமபுருஷனைச் சொல்லிற்றென்று கொள்ளவேண்டும். இப்படி கொள்ளாவிடில் ஸமஸ்த பூதங்களையும் பாதமாகவுடைத்தாகை காயத்ரிக்குச்சேராமையால் அந்த ‡ஶ்ருதி அபார்த்தமாய்விடும். காயத்ரிக்கு மூன்றுபாதங்களேயுண்டு; நாலுபாதங்களில்லையென்று நினைக்கவேண்டாம். காயத்ரிக் "இந்த்3ர: ஶசீபதி:, ப3லேந பீடி3த:, து3ஶ்ச்யவநோ வ்ருஷா, ஸமித்ஸு ஸாஸஹி:" என்று நாலுபாதங்களும் உண்டு என்று ஸித்தாந்தம். ௨௬.

‡ அபார்த்தமாவது - ஸகலபூதங்களையும் பாதமாக உடைத்தாகாத காயத்ரியை, அவற்றைப் பாதகமாக உடையதாக, இல்லாத அர்த்தத்தைச் சொல்லுகை.

ஸூ - உஎ. —*ஹூதாதிவாதவ்யபதெ மொவபத்தெ ஶ்ரெவபு·*—

(ஸ-ரா-வ்ர-ஹா.) ஹூதாதிவாதவ்யபதெமொவபத்தெ-பூதம், ப்ருதிவி, சரீரம், ஹ்ருதயம், என்கிற இந்நாலையும் "ஶைஷாபதாஷதா" என்றுகாயத்ரிக்கு நாலுபாதங்களாகச் சொல்லியிருக்கையால் இது யுக்தியுக்தமாகவேண்டுமானாலும், ஶ்ரவபு-இவ்விதமாகவே (காயத்ரீ பதத்துக்கு அர்த்தம் ப்ரஹ்மமென்றே) அங்கீகரிக்கவேணும். உஎ.

ஸூ - உஅ. *—உபதெஶபெதாநெதி செதுநாஹயஸ்நபு விரோயாக்*—

(ஸ-ரா-வ்ர.) உபதெஶபெதாந-உக்திபேதத்தினாலே, ந - (இவ்வாக்யத்தில்) பரப்ரஹ்மம் தோன்றுகிறதில்லை. இதிசெத் - என்றால், ந - அப்படியென்று உஹயஸ்நிநுவி - இரண்டுவிதமான உக்தியிலும், அவிரோயாக் - விரோத மில்லாமையாலே, (பரப்ரஹ்மம் தோற்றுவதில் பாதகமில்லை). உஅ.

(ஸ-ரா-ஹா) கீழ்ச்சொன்ன யுக்திகளினால் பூர்வவாக்யத்தில் காயத்ரீசப்தத்திற்கு பரமபுருஷன் அர்த்தமாயினும், இவ்வாக்யத்தில் அந்தபரமபுருஷன் தோற்றமாட்டான். ஏனென்றால், அவ்வாக்யத்தில் "திவாதவாஸ்ய ஶ்ரீமதி" என்று ஆகாசத்தை ஜ்யோதிஸ்ஸுக்கு அதிகரணமாகச் சொல்லிற்று, இவ்வாக்யத்தில் "திவோபரொஜ்யாதிः"? என்று ஆகாசத்தை எல்லையாகச்சொல்லிற்று இப்படி அங்கு மிங்கும் வெவ்வேறு விதமாகச் சொல்லியிருக்கிறபடியால் பூர்வவாக்யத்திற் சொன்னதை இவ்வாக்யத்தில் ஜ்யோதி ஶப்தத்திற்கு அர்த்தமாகக் கொள்ளக்கூடாதென்று பூர்வபக்ஷம்.—மரத்தின்மேல் சந்திரன் என்றாலும், மரத்தைக்காட்டிலும் மேலே சந்திரனென்றாலும் ஒரேவிதமான அர்த்தம் தோற்றுமாப்போல், ஆகாசத்தில் என்ற பூர்வ வாக்யத்திலும், ஆகாசத்தைக்காட்டிலும் என்ற இந்தவாக்யத்திலும் ஒரர்த்தத்தையே கொள்ளுகை யுக்தமாகையால் இவ்வாக்யத்தில் ஜ்யோதி ஶப்தத்திற்கு பூர்வவாக்யத்தின் காயத்ரீ பதார்த்தத்தையே பொருளாகக் கொள்ளவேணும் என்று ஸித்தாந்தம். உஅ.

அதி - கக. ஸூ. —*ப்ராணஸ்யா நுகமாக்*—

(ஸ-ரா-வ்ர.) ப்ராணः - ப்ராணஶப்தவாச்யன், தயா-அப்படி, (ப்ரஹ்மகுணங்களிலே) அநுகமாக் - அநுவர்த்திக்கையால் (அக்குணங்களுக்கு அதிகரணமாகச் சொல்லுகையால்) (பரமபுருஷனாகிறான்) உகூ.

(ஸ - ஹா.) "ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம்மாயுரம்ருதமித்யுபாஸ்வ" என்றவிடத்தில் ப்ராணபதம் பரமாத்மாவைச் சொல்லுகிறதா, அல்லது முக்யப்ராணன் முதலியவற்றி லொன்றைச் சொல்லுகிறதா என்னும் ஸம்சயத்தில், இந்த்ரனுக்கும், ப்ராணவாயுவுக்கும், இவ்வாக்யத்தில், சிலலக்ஷம் தோற்றுகையால் அவற்றிலொன்றே சொல்லப்பட்டது என்ற பூர்வபக்ஷத்திற்கு, இவ்வாக்யத்தில் அடிமுதல் கடைவரையிலுள்ள வாக்யங்கள் பரமாத்மலக்ஷணங்களையே சொல்லுகின்றன அந்தலக்ஷணங்கள் மற்றவிடங்களில் ஸம்பவியாது. அவையாவன - பரமபுருஷார்த்

தத்வம், ஜ்ஞாநஸ்வரூபியாகை, மோக்ஷத்தையளிக்கை, புண்யபாப ரூபகர்மங்களைப்போக்குகை முதலியவை. ஆகையால் இவ்வாக்யத்திலுள்ள ப்ராணபதம் பரமாத்மாவையே சொல்லுகிறதென்று ஸமாதாநம் சொல்லுகிறார். உக.

(ஶா - ஹா.) "ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாமாயுரம்ருதமித்யுபாஸ்ஸ்வ" என்கிற வாக்யம் இந்த ஸூத்ரத்திற்கு விஷயம். இங்கு மோக்ஷார்த்தமாகச் சொல்லப்பட்ட ப்ராணோபாஸநத்தில் விஷயமானவன் ஜீவாத்மாவா, பரமாத்மாவாவென்று ஸம்சயம்,—இது இந்த்ரன் சொல்லுகிய வாக்யம். இந்த்ரனென்று ஒரு ஜீவனுக்குப் பேராயிருக்கிறது. அவன் "நான் ப்ராணனாகிறேன், என்னை மோக்ஷார்த்தமாக உபாஸநம்செய்" என்று சொல்லுகையால், இந்த ப்ராணசப்தத்துக்கு இந்த்ரனாகிய ஜீவனே அர்த்தமென்று பூர்வபக்ஷம்,—இப் ப்ரகரணத்தில் இந்த்ரனென்றும் ப்ராணனென்றும் சொல்லப்பட்டவனுக்கு மேல்வாக்யத்தில் நிருபாதிகாநந்தம், விகார மற்றிருக்கை, மோக்ஷமளிக்கை, முதலிய குணங்களைச் சொல்லுகையாலே, அவைகள் ஜீவனுக்குச் சேராவாகையால் இந்த்ரப்ராண சப்தத்தினாற் சொல்லப்பட்டவன் பரமாத்மா வென்று ஸித்தாந்தம். உக.

ஸூ - ௩௦. —*ந வக்துராத்மோபதேஶாதிதி சேதத்யாத்ம ஸம்பந்தபூமா ஹ்யஸ்மிந்*—

(ஶ-ஶா-வ்ய.) வக்து:-சொல்லுகிற இந்த்ரனுடைய, ஆத்மோபதேஶாத் - ஆத்மாவை உபாஸநம்செய்யச் சொல்லுகையால், ந - ப்ராணசப்தார்த்தம் பரப்ரஹ்ம மன்று, இதி சேத் - என்றால், அஸ்மிந் - இந்த ப்ரகரணத்தில், அத்யாத்மஸம்பந்தபூமா ஹி- பரமாத்மாவுக்கேயுள்ள குண ஸம்பந்தாதிக்யம் ( இருக்கையால் ) இந்த்ர ப்ராணசப்தங்களுக்குப் பரமாத்மாவே அர்த்தம். ௩௦.

(ஶ - ஹா.) "மாமேவ விஜாநீஹி" என்று சொல்லுகிற இந்த்ரன் தன்னையே உபாஸநம் செய்யென்றும், நானே ப்ராணனென்றும் சொல்லுகையாலே அவனே இங்கு அர்த்தமாகவேண்டும் என்னில், இப்ப்ரகரணத்தில், ஆயுஸ்ஸைக் கொடுக்கிறானென்றும் அபஹரிக்கிறானென்றும், ஸகல ஜகத்துக்கும் ஆதாரபூதனென்றும் இத்யாதியாக இந்த்ரனுக்கு அஸம்பாவிதமான பரமாத்மலக்ஷணங்கள் அநேகமாகச் சொல்லுகையால் இந்தபதம் இங்குபரமாத் மாவையே சொல்லவேண்டும். ௩௦.

(ஶா - ஹா.) "முதலில் த்ரிஶீர்ஷாணம் த்வாஷ்ட்ரமஹநம்" என்று நான் வ்ருத்ராஸுரனைக்கொன்றேன் என்று சொல்லுகையால் சொல்லுகிறவன் வ்ருத்ராஸுரவதம் செய்த இந்த்ரனாகிய ஜீவன் என்கிறது ஸித்தம். அவன். "மாமுபாஸ்ஸ்வ" என்னை உபாஸநம்செய் என்றும் "ப்ராணோஸ்மி" நான் ப்ராணனாகிறேன் என்றும் சொல்லுகையால் இங்கு உபாஸ்யனாகச் சொல்லப்பட்ட இந்த்ர ப்ராணசப்தவாச்யன் பரப்ரஹ்மமன்று என்று பூர்வபக்ஷம்.—முதல்வாக்யத்தில் இந்த்ரனென்று தோற்றினாலும், "ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி" என்று தொடங்கி இவனே ஸகல கர்மங்களையும் செய்விக்கிறானென்றும், "தத்யதா ரதஸ்யாரேஷு நேமிரர்பிதா" என்றுதொடங்கி, இவனே ஸகலஜகத்துக்கும் ஆதாரபூதனென்றும், "ஏஷ லோகாதிபதி:" இத்யாதிகளாலே ஸர்வலோகாதிபதித்வம்

முதலிய குணங்களையுடையவனென்றும் இத்யாதியாக இப்ப்ரகரணம் முழுதலும் பரமாத்மகுணங்களையே ப்ரதிபாதிக்கையால் இந்த்ரப்ராண சப்தங்களுக்குப் பரமபுருஷனே அர்த்தம் என்று ஸித்தாந்தம். ௩௦.

—*ஸூ-௩௧. ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா தூபதேஶோ வாமதேவவத்*—

(ஸூ-ப-வ்ய.) வாமதேவவத் - வாமதேவனைப்போல், உபதேஶ: - (இவ்விதமான) உபதேசமானது, ஶாஸ்த்ரத்ருஷ்ட்யா - சாஸ்த்ரத்தினர்த்தத்தை அறிகையினாலே (கூடும்.)

(ஸூ - ஹா) ஆனால் இந்த்ரன் "நான்ப்ராணன்" என்று சொல்லுகைக்கடியென்னென்னில், இந்த்ரன், தன்னுடைய ஆத்மஸ்வரூபமே பரமாத்மஸ்வரூபமென்று சாஸ்த்ரத்தினாலறிந்தவனாகையால், "நான்மனு, நான்ஸூர்யன்" என்று அத்வைத ஜ்ஞாநமுடைய வாமதேவர் சொல்லியது போல் இவனும் "நான்ப்ராணன்" என்று சொன்னான். ௩௧.

(ரா - ஹா.) இந்த்ர ப்ராண சப்தங்களுக்கு ப்ரமாத்மா அர்த்தமானால் இந்த்ரன் என்னை உபாஸநம்செய் என்று சொல்லக் கூடுமோவென்னில்,—பரமாத்மாவுக்கு ஜீவாத்மா சரீரமென்றும், சரீரத்தைச்சொல்லும் சப்தங்கள் அந்த சரீரத்தையுடைய ஆத்மாவையேசொல்லுமென்று அறிந்தவனாகையால், எனக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை உபாஸநம்செய் என்கிற அர்த்தத்தை என்னை உபாஸநம்செய் என்கிற சப்தத்தினாலும், எனக்கு அந்தர்யாமியானவனே ப்ராணனுக்கும் அந்தர்யாமி என்கிற அர்த்தத்தை நான் ப்ராணன் என்கிற சப்தத்தினாலும் சொல்லுவதில் ஒருபாதகமுமில்லை. இப்படியே ப்ரஹ்மவித்தானவாமதேவரும் "அஹம்மநுரபவம் ஸூர்யஶ்ச" நானேமநுவாகிறேன், ஸூர்யனுமாகிறேன் என்று சொல்லியிருக்கிறார். ஆகையால் இந்த்ர ப்ராண சப்தங்களுக்குப் பரமாத்மாவே அர்த்தம். ௩௧.

ஸூ - ௩௨ - *—ஜீவமுக்யப்ராணலிங்காந்நேதி சேந்நோபாஸாத்ரைவித்யாதாஶ்ரிதத்வாதிஹ தத்யோகாத்.*

(ஸூ . வ்ய.) ஜீவமுக்யப்ராணலிங்காத் - ஜீவலக்ஷணமும் முக்ய ப்ராணலக்ஷணமும் காண்கையால்; (பரமாத்ம லக்ஷணமும் சொல்லியிருந்ததாகில்), உபாஸாத்ரைவித்யாத் - மூன்றுவிதமான உபாஸநம்விதித்ததாகுமாகையால், ந - பரமாத்மலக்ஷணமுண்டென்றங்கீகரிக்கக் கூடாது, இதி சேத் - என்றால், ந - அப்படியன்று. ஆஶ்ரிதத்வாத் - (வேறிடங்களில்) ப்ராணாதிபதங்களுக்கு பரமாத்மாவையே அர்த்தமாகக்கொள்ளுகையால், இஹ - இங்கு, தத்யோகாத் - அப்படிக்கொள்ளுகை யுக்தமாகையாலே. (பரமாத்மோபாஸநமே விதிக்கப்பட்டது).

(ஸூ- ஹா.) இவ்வாக்யத்தில் ஜீவலக்ஷணமும் முக்யப்ராணலக்ஷணமும், சொல்லியிருக்கிறது. இத்துடன் பரமாத்மலக்ஷணமும்சொல்லியிருக்கிறதென்றங்கீகரித்தால்மூன்றுவிதமான உபாஸநம்விதித்ததாகும்என்று சங்கிக்கவேண்டாம். ஏனென்றால். வேறிடங்களிலும், பரமாத்மலக்ஷண மிருந்தால் அங்குள்ள ப்ராணசப்தத்திற்குப் பரமாத் மாவே அர்த்தமென்று நிஶ்சயிக்கப் பட்டிருக்கிறது. ப்ராணனுடைய லக்ஷணம் பரமாத்மாவினிடத்திலும் அந்வயிக்கத்தட்டில்லை. அதுபோல் இங்கும் ஹிததம

த்வம் முதலிய கீழ்ச்சொல்லிய பரமாத்ம லக்ஷணம் பகுவாகக் காண்கையாலே இங்குள்ள ப்ராண சப்தமும் பரமாத்மாவையே சொல்லிற்ருகக் கொள்ளவேணும். ௩௨.

(பா - ப்ர.) ஜீவமுக்யப்ராணலிங்காத் -(இவ்வாக்யத்தில்) ஜீவனை இந்த்ரனுடையவும், முக்யப்ராணனை வாயுவினுடையவும் லக்ஷணம்காண்கையாலே, ந - பரமாத்மகுண ஸம்பந்தம் அதிகமாகக்காண்கிற தென்கிறதில்லை; இதிசேத் - என்ருல், ந - அப்படியன்று; உபாஸாத்ரைவித்யாத் - மூன்றுவிதமான உபாஸநங்களைச்சொல்லுகைக்காக (அந்தந்தலக்ஷணங்களையுடைய இந்த்ராதிபோதக சப்தங்களினுல் பரமாத்மாவைச்சொல்லிற்று). ஆஶ்ரிதத்வாத் - (வேறிடங்களிலும்) மூன்றுவிதமான உபாஸநம் ஆஶ்ரயிக்கப்பட்டிருக்கையால் (சொல்லியிருக்கையால்), இஹ - இங்கும், தத்யோகாத் - அம்மூன்றுவிதமான உபாஸநமும் கூடுகையால் (அந்தந்த சப்தங்களினுல் பரமாத்மாவைச்சொல்லிற்று. ௩௨.

(பா-ஸா.) "த்ரிஶீர்ஷாணம் த்வாஷ்ட்ரமஹநம்" வ்ருத்ராஸுரனைக் கொன்றேன் என்று இந்த்ரலக்ஷணம் சொல்லுகையாலும், "யாவத்த்யஸ்மிந் ஶரீரே ப்ராணோ வஸதி தாவதாயு:" இச்சரீரத்தில் எதுவரையில் ப்ராணன் வஸிக்கிறதோ! அதுவரையில் ஆயுஸ்ஸு என்று முக்யப்ராணலக்ஷணம் சொல்லுகையாலும், இவைகளை அநாதரித்து பரமாத்மலக்ஷணங்களையேகொண்டு பரமாத்மாவே இதில் சொல்லப் பட்டானென்று கொள்ளுகை யுக்தமன்று என்று பூர்வபக்ஷம்.—இதில் சேதனனுகிய இந்த்ரனுக்கும், அசேதநமாகிய ப்ராணனுக்கும், பரப்ரஹ்மமாகிய பரமபுருஷனுக்கும் லக்ஷணம் எதுக்காகக் காண்கிற தென்னில்,—பரமபுருஷனை, தத்ஸ்வரூபகுண விஶிஷ்டனுகவும், ஜீவாந்தர்யாமியாகவும், ப்ராணுந்தர்யாமியாகவும் உபாஸநம்செய்யச்சொல்கைக்காக-இவ்விதமாகவேதைத்திரீயோபநிஷத்திலும், "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்று பரமாத்ம ஸ்வரூப குணங்களையும், "ஸச்ச" என்று ஜீவவாசகசப்தத்தினுல்ஜீவாந்தர்யாமித்வத்தையும், "த்யச்ச" என்று அசேதநவாசக சப்தத்தினுல் அசேதநாந்தர்யாமித்வத்தையும். உடைய பரமாத்மாவைச் சொல்லியிருக்கிறது. அதுபோல இங்கும் "மாமுபாஸ்வ" என்று ஜீவாந்தர்யா மித்வத்தையும், ஆநந்தோஜரோம்ருத:,, என்று ஆநந்தத்வாதிபரப்ரஹ்ம குணங்களையும் உடைய பரமபுருஷனே சொல்லப்பட்டானுகையால் இங்கு இந்த்ர ப்ராணசப்தங்களுக்குப் பரமபுருஷனே அர்த்தம் - என்று ஸித்தாந்தம், ௩௨.

முதல் அத்யாயத்தில் முதல்பாதம் ஸம்பூர்ணம்.

---

## இரண்டாம் பாதம்.

---

அதி - ௧௨, ஸூ - ௩௩. ஸர்வத்ர ப்ரஸித்தோபதேஶாத்.

(ஸம-பா-ப்ர.) ப்ரஸித்தோபதேஶாத் - ஜகதுத்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாக ப்ரஸித்தனுனவனையே (இங்கு அந்தர்யாமியாக * ஸமா

---

* ஸமானுதிகரண சப்பதமாவது விசேஷணத்தைச்சொல்லும் பதமும் விசேஷ்யத்தைச்சொல்லும் பதமும் ஒரே விபக்தியாயிருக்கை,

நாதிகரண சப்தத்தாலே) சொல்லுகையாலே, ஸர்வத்ர - “ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம” என்கிற வாக்யத்திலுள்ள ஸர்வசப்தத்திற்கு அர்த்தமான ஜகத்தில், (அஜ்ஜகத்துக்கு அந்தர்யாமியாக அப்பதத்தோடு ஸமாநாதிகரணமான ப்ரஹ்மசப்தத்தினுலே சொல்லப்பட்டவன் பரமாத்மா.) ௩௩.

(ஶ° - ஹா.) “ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம” என்கிறவாக்யத்தில் “மநோமய: ப்ராணஶரீர:” என்று மநோமயத்வாதிகுணங்களையுடையவனை உபாஸநம் செய்யவேண்டும்என்று சொல்லிற்று. அப்படிசொல்லப்பட்டவன் ஜீவனு,பரமாத்மாவா என்கிறஸம்சயத்தில்,மநோமயன்என்ருல் மநஸ்ஸோடுஸம்பந்தமுடையவன். அந்த ஸம்பந்தம் ஜீவனுக்கேயுள்ளது “அமநா:” என்றுசொல்லுகையாலே பரமாத்மாவுக்குக் கிடையாது. ஆகையால் ஜீவனே சொல்லப்பட்டான் என்கிறபூர்பக்ஷிகளுக்கு, ஸகலவேதாந்தங்களிலும் ஜகத்காரணமென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்ட பரப்ரஹ்மத்தை உபாஸிக்க வேண்டும் என்று இங்கு சொல்லிற்றுகையால் இங்குசொல்லப்பட்டவன் பரமாத்மாவே என்று உத்தரம் சொல்லுகிறுர். ௩௩

(ஸா - ஹா.) “ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம” என்கிறவாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—இங்கு ப்ரஹ்ம பதத்திற்கு அர்த்தம் ஜீவாத்மாவா, பரமாத்மாவாவென்று ஸம்சயம்.—ஸர்வமும் ப்ரஹ்மம் என்று சொல்லுகையால் + ப்ரஹ்மாமுதல் த்ருணபர்யந்தமான ஜகத்ரூபமாகப் பரிணமிக்கை கர்ம பரவசனுன ஜீவனுக்கே கூடுமாகையால் ஜீவனே ப்ரஹ்மசப்தத்திற் கர்த்தமென்று பூர்வபக்ஷம்.—ஸர்வமும் ப்ரஹ்மம் என்ருல், ஸர்வமும் ப்ரஹ்மாத்மகம் - ப்ரஹ்மத்தை ஆத்மாவாகஉடையது; என்றர்த்தம். இதற்கு ப்ரஹ்மம் எப்படி ஆத்மாவாகுமென்ருல், “தஜ்ஜலாநிதி”இந்த ஜகத்தினுடைய உத்பத்திலயஸ்திதிகளுக்குப் ப்ரஹ்மம் ஹேதுவாகையால் இதுப்ரஹ்மாத்மகமே என்று, ஜக துத்பத்தி ஸ்திதிலய ஹேதுவானவனே இதற்கு ஆத்மாவென்று சொல்லிற்று. ஜகதுத்பத்தி ஸ்திதிலய ஹேதுவானவன் யாரென்ருல்,—ஶ்ருதிவாக்யங்கள்“ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்”என்று அவன் ஸ்ரீமந் நாராயணனென்று சொல்லிற்று. ஆகையால் அவனே இங்கு ஸகலாந்தர்யாமியாக ப்ரஹ்மசப்தத்தினுல் சொல்லப்பட்டவன் என்று ஸித்தாந்தம். ௩௩.

ஸூ - ௩௪. விவக்ஷிதகுணோபபத்தேஶ்ச.

(ஸ-வ்,ரா-வ்-ஸா.)விவக்ஷிதகுணோபபத்தேஶ்ச-(“மநோமய: ப்ராணஶரீரோ பாரூப:” ராகத்வேஷாதி களற்ற மநஸ்ஸினுல் க்ரஹிக்கத்தக்கவன், ப்ராணனுக்கு ஆதாரமானவன், நிரவதிக தேஜஸ்ஸையுடையவன் என்று மேல்வாக்யங்களில் இந்த ப்ரஹ்மத்திற்கு) சொல்லப்பட்ட குணங்கள் பரமாத்மாவினிடத்திலேயே கூடுகையாலும் (ப்ரஹ்மசப்தத்திற்குப்பரமாத்மாவே அர்த்தம். ௩௪.

(ஶ° - ஹா.) இவனுக்கு ஸத்யஸங்கல்பத்வம் முதலியகுணங்கள் சொல்லியிருக்கிறது. ஸத்யஸங்கல்பத்வ மாவது ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களைத்தடையின்றிச்செய்கை. இவை பரமாத்மாவுக்கே சேர்ந்திருக்கும். ௩௪.

ஸூ - ௩௫. அநுபபத்தேஸ்து ந சாரீர:.

(ஶ-வ்ய-ரா-வ்ய-ஸா.) அநுபபத்தே:-(முன்வாக்யத்திற்சொல்லிய * ஸர்வகர்ம ஸமாராத்யத்வாதி குணங்கள்) கூடாமையாலே, சாரீர:- (முன்) சரீரஸம்பந்தமுடைய, (ஸம்ஸாரியாயிருந்த) முக்தனும், (ப்ரஹ்ம சப்தத்திற்கு அர்த்தமன்று) "து" என்கிறது முக்தனைச்சொல்லலாமோ என்கிற சங்கையைத் தவிர்க்கிறது. ௩௫.

(ஶ௦ - ஸா.) இக்குணங்கள் ஜீவனுக்குச் சேராதாகையால் இங்குசொல்லப்பட்டவன் ஜீவனன்று. ௩௫.

ஸூ - ௩௬. கர்மகர்த்ரு வ்யபதேசாச்ச.

(ஶ-ரா-வ்ய-ஸா.) கர்மகர்த்ரு வ்யபதேசாச்ச - ("ஏதமித: ப்ரேத்யாபிஸம்பவிதாஸ்மி" ஸம்ஸாரத்தில்நின்றும் விடுபட்டவனாய் இந்த ப்ரஹ்மத்தை அடைகிறேன் என்று) † ப்ரஹ்மத்தை ப்ராப்தி கர்மமாகவும் (ப்ராப்யமாகவும்), ஜீவனை ப்ராப்திகர்த்தாவாகவும் (ப்ராப்தாவாகவும்) சொல்லுகையாலும் (ப்ராப்தாவான ஜீவன் ப்ராப்யமான ப்ரஹ்மபதார்த்தமாக மாட்டான்.) ௩௬.

ஸூ - ௩௭. சப்தவிசேஷாத்.

(ஶ-வ்ய-ரா-வ்ய-ஸா.) சப்தவிசேஷாத்-("ஏஷ ம ஆத்மாந்தர்ஹ்ருதயே" என்னுடைய ஹ்ருதயத்திற்குள் இந்த ப்ரஹ்மபதார்த்தமான ஆத்மா இருக்கிறான் என்று) என்னுடைய என்று ஆறும் வேற்றுமையுள்ள பதத்தினால் உபாஸநம்செய்கிறஜீவனையும், இந்தஆத்மா என்று முதல்வேற்றுமையுள்ள பதத்தினால் § உபாஸ்யமான ப்ரஹ்மபதார்த்தத்தையும் சொல்லுகையால் (உபாஸகனான ஜீவன் உபாஸ்யனான ப்ரஹ்மபதார்த்தமாக மாட்டான்.) ௩௭.

(ஶ௦ - ஸா.) "அந்தராத்மந்" என்று உபாஸ்யனை ஏழாம்வேற்றுமையாலும் "புருஷோ ஹிரண்மய:" என்று ஜீவனை முதல் வேற்றுமையாலும் சொல்லுகையாலே இந்த உபாஸ்யன் ஜீவனன்று. ௩௭.

ஸூ - ௩௮. ஸ்ம்ருதேச்ச.

(ஶ-வ்ய-ரா-வ்ய-ஸா.) ஸ்ம்ருதேச்ச-("ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:" எல்லாருடைய ஹ்ருதயத்திலும் நான்வாஸம் செய்கிறேன் என்று)

* ஸர்வகர்மஸமாராத்யனாகையாவது - யஜ்ஞயாகம்முதலிய எல்லாக்கர்மங்களும் அவனுடைய ஆராதனரூபமாயிருக்கையாலே இக்கர்மங்களினாலாராதிக்கப்படுகை.

† ப்ராப்தா - எவன் அடைகிறானோ அவன் (ஜீவன்). ப்ராப்யன் - எவனை அடையப்படுகிறானோ அவன் (ப்ரஹ்மம்.)

§ உபாஸ்யன் - பக்தி எவனைக்குறித்துச் செய்யப்படுகிறதோ - அவன் (ப்ரஹ்மம்.)

ஜீவனை பக்திபண்ணுகிறவனாகவும், பரமாத்மாவை பக்தியில் தோற்றுகிறவனாகவும் ஸ்ம்ருதி சொல்லுகையாலும் (ஜீவன் ப்ரஹ்மபதார்த்தமான பரமாத்மாவாக மாட்டான். ௩-அ.

(ஸ - ஹா.) "ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶே(அ)ர்ஜுந திஷ்டதி" என்று பரமாத்மாவை ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலிருக்கப்பட்டவனாக கீதையில் சொல்லுகையாலே இங்குஹ்ருதயத்தி லிருக்கப்பட்டவனாகச்சொல்லப்பட்டவன் பரமாத்மா. ௩-அ.

ஸூ. ௩௯, அர்பகௌகஸ்த்வாத் தத்வ்யபதேஶாச்ச நேதி சேந்ந நிசாய்யத்வாதேவம் வ்யோமவச்ச.

(ஸ-ரா-வ்ரு.) அர்பகௌகஸ்-அல்பஸ்தாநத்தையுடையவனாகையாலும், தத்வ்யபதேஶாத்-ஸூக்ஷ்மரூபியென்று சொல்லுகையாலும், ந-(பரமாத்மா)ப்ரஹ்மபதார்த்தமன்று; இதி சேத்-என்றால், ந-அப்படியன்று, நிசாய்யத்வாத் - உபாஸ்யனாகையாலே (த்யானம்செய்கைக்காக), ஏவம்-இப்படிசொல்லிற்று. வ்யோமவத்-ஆகாசத்தைப்போலவே (பெரியஆகாசத்தைஸூக்ஷ்ம ஸ்தானத்தில் சிறிதாக அநுஸந்திக்கிறது போலவேஇங்கும் கண்டு கொள்வது.) ௩-க.

(ஸ - ஹா.) "அந்தர்ஹ்ருதயே" ஹ்ருதயத்திற்குள்ளிருக்கிறான் என்றுசொல்லியிருக்கிறது. இவன் பரமாத்மாவாகில் ஸர்வவ்யாபியான அவனுக்கு இந்த மிகச்சிறிதாகிய ஹ்ருதயம் ஸ்தானமாகக் கூடாது. "அணீயாந்" என்றுஸூக்ஷ்மரூபியென்றும் சொல்லியிருக்கிறது; அதுவும் கூடாது ஆகையால் இவன் அணுஸ்வரூபியாய் அல்ப ஸ்தானத்தில் இருக்கத்தக்கவனாகிய ஜீவனேயாகவேண்டும் என்னில், ஸகலதேசாதிபதியான ஸ்ரீராமனை அயோத்யாபதியென்று சொல்வதுபோல் ஸர்வவ்யாபியான பரமாத்மாவை ஹ்ருதயத்தில் த்யானம்செய்கைக்காக இப்படிச்சொல்லுகையும், அந்த ஸ்தானத்தளவாக அணுவென்று சொல்லுகையும் கூடும். ஆகாசம் ஸர்வ வ்யாபியாயினும் கலசாதிகளில் சிறியதாகக் காணப்படுவதுபோல் இங்கும் கண்டுகொள்வது. இங்கு ஆகாசத்தைத் த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே ஆகாசம்போல். 'ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் வாஸ்தவபேத மில்லையென்று தாத்பர்யம். ௩-க.

(ரா - ஹா.) "ஏஷ மே ஆத்மாந்தர்ஹ்ருதயே" என்று ஸூக்ஷ்மமாகிய ஹ்ருதயத்தி லிருக்கிறவனாகவும், "அணீயாந்" என்று ஸூக்ஷ்ம ஸ்வரூபியாகவும் ப்ரஹ்மத்தைச் சொல்லி யிருக்கிறது. இது ஸர்வ வ்யாபகனாக பரமாத்மாவுக்குக் கூடாது ஆகையால் அணுஸ்வரூபியானஜீவனே ப்ரஹ்மசப்தத்திற்குஅர்த்தம் என்று பூர்வபக்ஷம்.—ஸர்வவ்யாபியானபரமாத்மாவையே ஹ்ருதயத்தில்த்யானிக்கவேண்டுமென்கைக்காக ஸூக்ஷ்மமான ஹ்ருதயத்தை ஸ்தானமாகவும், அதில் அடங்கத் தக்க அளவாக அவனுடையஸ்வரூபத்தை ஸூக்ஷ்மமாகவும்சொல்லிற்று. மேல்அவனையே ஜ்யாயாந் ப்ருதிவ்யா:" என்று பெரியதினில் பெரியன் என்று சொல்லுகிறது. ஆகாசம் பெரிதாயினும் அதைச்சிறிதாகிய கலசாதிகளில் அவ்வளவாகப்பரிச்சேதித்துக்காணப்படுகிறதுபோல் இங்கும் கண்டுகொள்ளவேணும். இது உபாஸநார்த்தம் சொல்லிற்று. என்று ஸித்தாந்தம். ௩-க.

ஸூ - ௨௦. ஸம்போகப்ராப்திரிதி சேந்ந வைசேஷ்யாத்.

(ஶ-வ்யா-ரா-வ்யா-ஹா.) ஸம்போகப்ராப்தி:- (ஜீவனைப்போல்பரமாத்மாவையும்சரீரத்திற்குள் இருக்கிறானென்றுஒப்புக்கொண்டால்ஜீவனுக்குப்போல் பரமாத்மாவுக்கும்) ஸுகதுக்காநுபவம் ஸம்பவிக்கும்; இதி சேத்- என்றால், ந - அப்படியன்று; வைசேஷ்யாத்-(ஸுகதுக்காநுபவத்திற்குப்) புண்யபாப ரூபகாரண விசேஷமுண்டாகையாலே. (சரீரஸம்பந்தம்மாத்ரமே ஸுகதுக்காநுபவத்துக்குக் காரணமன்று; புண்யபாபமும்வேணும் அவைபரமாத்மாவுக்குக் கிடையாமையால் ஸுகதுக்காநுபவமில்லையென்று கருத்து). ௨௦.

(ஶ - ஹா.) ஜீவன் ஹ்ருதயத்தி லிருக்கிறபடியால் அவனுக்கு ஸுகதுக்காநுபவமுண்டு. பரமாத்மாவும் ஹ்ருதயத்திலிருந்தால் இவனுக்கும் ஸுகதுக்காநுபவம் வரவேண்டியிருக்கும். என்னில்,—ஜீவன் புண்யபாபங்களைப்பண்ணுகையாலும் ஸுகதுக்கங்களை யநுபவிக்கிறான். பரமாத்மா அவைகளைச் செய்யாமையாலும் அஜ்ஞாநசூந்ய னாகையாலும் அவனுக்கு ஸுகதுக்கங்கள் கிடையாது. இதுவே இருவர்க்கும் விசேஷம். ஜீவேஶ்வரர்களுக்கு இவ்விதமான பேதம் மாயை அவித்யை என்கிற உபாதியைப்பற்றினதென்று கண்டுகொள்வது, ௨௦.

அதி. ௧௩. ஸூ. ௨௧. அத்தா சராசரக்ரஹணாத்.

(ஶ-ரா - வ்யா.) சராசரக்ரஹணாத் (ப்ரஹ்மக்ஷத்ர சப்தத்தினாலே ப்ராஹ்மண க்ஷத்ரியரோடுகூடிய ஸமஸ்த) ஜங்கமஸ்தாவரங்களையும் க்ரஹிக்கையாலே (சொல்லுகையாலே), அத்தா-புஜிக்கிறவனாகச் சொல்லப்பட்டவன், (பரமாத்மா). ௨௧.

(ஶ - ஹா.) பரமாத்மாவுக்கு ஸுகதுக்காநுபவ மில்லையாகில் கடவல்லியில் ப்ரஹ்ம க்ஷத்ரங்களாகிற அந்நத்தை புஜிக்கிறானென்று சொல்லப்பட்டவன் பரமாத்மாவாகக்கூடாது. ஜீவனேயாகவேண்டும் அல்லது ஸகலங்களையும் பக்ஷிக்கிற அக்நியாகவேண்டும்என்னில்,—இங்குப்ரஹ்மக்ஷத்ரங்களென்று ஸகல சராசரங்களையும் சொல்லிற்று; அவற்றை புஜிக்கையாவது - கர்மாதீனமான போஜநமன்று; ஜகத் ஸம்ஹாரரூபம்; அது பரமாத்மாவுக்கே யுள்ளதாகையால் அங்குசொல்லப்பட்டவன் பரமாத்மா. ஜீவனும் அக்நியு மன்று என்று தாத்பர்யம். ௨௧.

(ரா - ஹா.) "யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் சோபே பவத ஓதந:" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—ம்ருத்யுவை உபஸேசநமாகக் கொண்டு ப்ரஹ்ம க்ஷத்ரங்களை எவன் புஜிக்கிறானோ என்று சொல்லப்பட்ட அவன் ஜீவனோ, பரமாத்மாவா என்று ஸம்சயம்.—புஜிக்கை § கர்மாதீநமாகையாலே இவன்கர்மத்தை யுடைய ஜீவனென்று பூர்வபக்ஷம்.—ம்ருத்யுவை உபஸேசநமாகச் சொல்லுகையாலும், ப்ரஹ்ம க்ஷத்ரபதங்களுக்கு ப்ராஹ்மண க்ஷத்ரியர்களை அர்த்தமாகக்கொள்ளில் அவர்களை மாத்ரம் புஜிக்கிறவனொருவன் ஸித்தனல்லாமையால் அப்பதங்களுக்கு ஸமஸ்த சராசரங்களை அர்த்தமாகக் கொள்ளுகையாலும், சராசரரூபமான இந்த அந்நத்தை புஜிக்கை கர்மாதீநமான போஜநமன்று; ஜகத் ஸம்ஹார ரூபமெ

§ கர்மாதீநமாவது - முன்ஜன்மத்தில் புண்யமாவது பாபமாவது செய்திருந்தால் அதின்பலமாக இப்போது நேரிடுமது.

ன்று கொள்ளவேணும். இந்த ஸம்ஹாரம் ஜீவனுக்குக் கூடாமையால் இங்கு சொல்லப்பட்டவன் பரமாத்மாவென்று ஸித்தாந்தம். உபஸேசநமாவது.—வேறொரு அந்நாதிகளுடைய போஜநத்திற்கு ஸாதகமாய்க்கொண்டு தானும் புஜிக்கப்படுகை. யமனை ஸாதநமாகக்கொண்டு சராசரங்களை ஸம்ஹரித்து அநந்தரம் யமனையும் ஸம்ஹரித்து விடுகிறான் என்று தாத்பர்யம். ௨௧.

ஸூ. ௨௨. ப்ரகரணாச்ச.

(ஶ.ப்ர.பா-ப்ர.ஸா.) ப்ரகரணாச்ச-("ஜ்ஞாநம் விப்ரஶ்சிந்நம் ஜாயதே ம்ரியதே வா" என்றும் "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:" என்றும் இது) பரமாத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலும், (இப்ப்ரகரணத்தில் சொல்லப்பட்டவன்ஜீவாத்மாவன்று.) ௨௨.

(ஶ - ஸா.) இது பரமாத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலும் பரமாத்ம லக்ஷணங்காண்கையாலும் இங்கு பரமாத்மாவே ப்ரதிபாதிக்கப் பட்டவனாக வேண்டும். ௨௨.

ஸூ. ௨௩. குஹாம்ப்ரவிஷ்டாவாத்மாநௌஹி தத்தர்ஶநாத்.

(ஶ.ஸா-ப்ர.) தத்தர்ஶநாத் "(இப்ப்ரகரணத்தில் ஜீவ பரமாத்மாக்களுக்கேஹ்ருதயமாகிற குஹையில்யிருப்புக்காண்கையாலே, ஆத்மாநௌ-ஜீவாத்மாவும் பரமாத்மாவுமே, குஹாம்ப்ரவிஷ்டௌ-ஹ்ருதயகுஹையைப் ப்ரவேசித்திருக்கிறவர்களாகச் சொல்லப்பட்டவர்கள் ஹி-ஆகையால், (பரமாத்மாவே இங்கு புஜிக்கிறவனாகச் சொல்லப்பட்டவன்). ௨௩.

(ஶ - ஸா.) இங்கிப்படியாயினும். "குஹாம்ப்ரவிஷ்டௌ" என்கிற விடத்தில் ஹ்ருதயமாகிறகுஹையை அடைந்தவர்களாகச் சொல்லப்பட்டவர்கள் புத்தியும் ஜீவனுமா, ஜீவனும் பரமாத்மாவுமா; முதல்பக்ஷத்தில் புத்தியைக்காட்டிலும் விலக்ஷணனான ஜீவன் ப்ரதிபாதிக்கப்பட்டவனாவான்; இரண்டாம் பக்ஷத்தில் ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணனான பரமாத்மா ப்ரதிபாதிக்கப்பட்டவனாகிறான்; ஆகையால் எந்தபக்ஷத்தைக்கொள்ளலாமென்னில்,—குஹை என்று சரீரத்தைச் சொன்னாலும் ஹ்ருதயத்தைச் சொன்னாலும் அவற்றிலிருக்கப்பட்டவர்கள் புத்தியும் ஜீவனுமேயாகையால் அவர்களையேசொல்லிற்றென்னும் பூர்வபக்ஷத்திற்கு,—ஸங்க்யை,அதாவது எண் சொல்லப்பட்ட விடங்களி லெல்லாம் ஸஜாதீயர்களையே சொல்லும். இந்தபசுவுக்கு இரண்டாவது தேடு என்றால் அதற்கு ஸஜாதீயமான வேறொரு பசுவையே தேடுகிறார்களல்லது மற்றொரு பக்ஷிமுதலிய வற்றைத் தேடுகிறதில்லை. அதுபோல இங்கு கர்மபலத்தை புஜிக்கிறவர்களென்று சொன்னால் அதில் ஒருவன் ஜீவனேயாக வேண்டும். மற்றொருவனும் அவனுக்கு ஸஜாதீயனாய் சேதநனாகிய பரமாத்மாவேயாகவேண்டுமல்லது விஜாதீயமான அசேதநமான புத்தியாகமாட்டாது.பரமாத்மா கர்மபலத்தை புஜியாவிடினும் ஜீவனுக்கு புஜிப்பிக்கிறனாகையால், சமையல்செய்விக்கிறவனையும் சமையல் செய்கிறானென்று சொல்வதுபோல்புஜிக்கிறானென்று சொல்லிற்று. இப்ரகரணத்தில் பரமாத்மாவுக்கும் கூட "குஹாஹிதம்" என்று ஹ்ருதயகுஹையில் ப்ரவேசம் சொல்லியிருக்கிறது ஆகையால்இங்கு பரமாத்மாவே சொல்லவேண்டும் விஷயம். ௨௩.

(ரா-ஹா.) "ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ" என்கிற மேல் வாக்யத்தில் ஹ்ருதய குஹையி லிருந்துகொண்டு கர்மபலத்தை அநுபவிக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறது; கர்மபலாநுபவம் பரமாத்மாவுக்குக்கூடாமையால், அங்கு ஜீவனையும் அந்தஃகரணத்தையும் சொல்லிற்றென்று கொள்ளவேண்டும். அந்தஃகரணத்திற்குக் கர்மபலாநுபவ மில்லாவிடினும், ஜீவனுடைய கர்மபலாநுபவத்திற்கு ஸாதநமாகையால் அதையும்* போக்தாவாக உபசரித்துச்சொல்லிற்று. அந்த கர்மபல போக்தாவான ஜீவனே இங்கும் ப்ரஹ்ம க்ஷத்ர போக்தாவாகச் சொல்லப்பட்டவன் என்று பூர்வபக்ஷம். இப் ப்ரகரணத்தில் "குஹாஹிதம் கஹ்வரேஷ்டம்" என்று பரமாத்மாவுக்கும், "குஹாம் ப்ரவிஶ்ய திஷ்டந்தீ" என்று ஜீவாத்மாவுக்குமே ஹ்ருதய குஹையில் ப்ரவேசம் சொல்லியிருக்கிறது. அந்த:கரணத்துக்காவது மற்றொன்றுக்காவது சொல்லவில்லை. ஆகையால் ஹ்ருதய குஹையைப் ப்ரவேசித்துக் கர்மபலத்தை புஜிக்கிறவர்களாக மேல்வாக்யத்திற்சொல்லப்பட்டவர்கள் ஜீவாத்ம பரமாத்மாக்களே; பரமாத்மாவுக்குக் கர்மபலாநுபவமில்லையாயினும் ஜீவனுடைய கர்மபலாநுபவத்திற்குப் † ப்ரயோஜகனாகையால் அவனையும் கர்மபல போக்தாவாகச்சொல்லிற்று; ஆகையால் இவ் வாக்யத்திலும் ப்ரஹ்மக்ஷத்ர போக்தாவாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவென்று கொள்ளுகையில் ஒருபாதகமுமில்லை. ௧௧.

ஸூ. ௧௨. விஶேஷணாச்ச.

(ஶ்ரு-ரா-வ்ய-ஹா.) விஶேஷணாச்ச (இப் ப்ரகரணத்தில் ஜீவாத்ம பரமாத்மாக்களையே உபாஸகனென்றும் உபாஸ்யனென்றும், § ப்ராப்தாவென்றும் ப்ராப்யனென்றும்) விசேஷிக்கையாலும், (மற்ற அந்தஃகரணாதிகளுக்கு இப் ப்ரகரணத்தில் ப்ரவேசமில்லை) 'ஆத்மாநம் ஜ்யாயிஷ:' என்று பரமாத்மாவை உபாஸ்யனாகவும் ஜீவனை உபாஸகனாகவும், "ஸோऽத்₄வந: பாரமாப்நோதி தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம்" என்று பரமாத்மாவை ப்ராப்யனாகவும், ஜீவனை ப்ராப்தாவாகவும் சொல்லிற்று. ஆகையால், இங்குசொல்லப்பட்ட போக்தா பரமாத்மா. ௧௨.

(ஶ்ரு - ஹா.) இப் ப்ரகரணத்தில் "ஆத்மாநம் ரதி₂நம் வித்₃தி₄" என்றதொடங்கிசரீரமாகிறதேரையுடைய ஜீவனை ப்ராப்தாவென்றும், "தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம்" என்று பரமாத்மாவை ப்ராப்யனென்றும் வேறிட்டுச்சொல்லுகையாலும் இது பரமாத்மப்ரகரணமாகையாலும் இங்கு பரமாத்மாவே சொல்லப்படுகிறான். ௧௨.

---

* போக்தா என்றால் போஜனம் செய்கிறவன். அசேதநமாகிய அந்தஃகரணம் போஜநம் செய்யாவிடினும் ஜீவன்புஜிப்பதற்கு ஸாதநமாகையால் அதையும் போக்தாவென்னலாம் போஜநம் செய்யாமல் அதற்கு ஸாதநமானதை போஜநம் செய்கிறதாகச் சொன்னால் உபசரித்துச் சொல்லுகை என்று பெயர்.

† ப்ரயோஜகனாகையாவது - அவனுக்குவேண்டிய § பலன்களை அவ்வவகாலங்களில் ஏற்படுத்திக் கொடுக்கை.

அதி - ௧௪. ஸூ - ௨௫. அந்தர உபபத்தே:.

(ஶ்ரீ-பா - வ்யா.) உபபத்தே:-(மேற்சொல்லிய குணங்கள் பரமபுருஷனிடத்திலேயே) அந்வயிக்கையாலே, அந்தர:-நேத்ரத்திற்குள் சொல்லப்பட்டவன், (பரமாத்மா). ௨௫.

(ஶ்ரீ-பா-ஸா.) "ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருஶ்யதே" இத்யாதி வாக்யம் இவ்வதிகரணத்திற்கு விஷயம்.—நேத்ரத்திற்குள் எந்தபுருஷன் காணப்படுகிறானோ இத்யாதியாகச் சொல்லப்பட்ட புருஷன், ப்ரதிபிம்பரூபனோ, ஜீவனோ, நேத்ரத்திற்கு அதிஷ்டாநதேவதையான ஸூர்யனோ, அல்லது பரமாத்மாவா என்று ஸம்சயம்.—நேத்ரத்தில் காணப்படுகிறானென்று ப்ரத்யக்ஷமாகச்சொல்லுகையாலே ப்ரதிபிம்பமாகலாம்; அதவா—கண்திறப்பதைப்பார்த்து மரணகாலத்தில்சரீரத்தில் ஜீவனிருக்கிறதாக நிஶ்சயிக்கிறார்கள் ஆகையால் ஜீவனுக்கு நேத்ரத்தில் விசேஷஸாந்நித்யம் உண்டு. ஆகையால் ஜீவனுமாகலாம்; அதவா—சக்ஷுரதிஷ்டாநதேவதையான ஸூர்யன் நேத்ரத்தில்ப்ரதிஷ்டிதனாயிருக்கிறானென்று "ரஶ்மிபிரேஷோஸ்மிந் ப்ரதிஷ்டித:" என்கிற ஶ்ருதி சொல்லுகையாலே அவனுமாகலாம் என்று பூர்வபக்ஷம். ஸகலாபீஷ்ட பரிபூர்ணன், பக்தாபீஷ்டபலப்ரதன், § நிரதிசய தீப்தியுக்தன் என்று மேல்சொல்லப்போகிறகுணங்கள் கீழ்ச்சொன்னவைகளில்கிடையாது; பரமாத்மாவினிடத்திலேயே யுண்டு ஆகையால் இவன் பரமாத்மா என்று ஸித்தாந்தம். ௨௫.

ஸூ. ௨௬. ஸ்தாநாதிவ்யபதேஶாச்ச.

(ஶ்ரீ-பா-வ்யா-ஸா.) ஸ்தாநாதிவ்யபதேஶாச்ச-"ய: சக்ஷுஷி திஷ்டந்" எவன்கண்ணில் இருக்கிறானோ, அவன் ஸர்வாந்தர்யாமியான பரமாத்மாவென்று பரமபுருஷனுக்கே) (நேத்ரத்திலே) ஸ்த்திமுதலிய குணங்களை சொல்லுகையாலும், (இவன் பரமாத்மா). யோகிகளுக்கு காண்கையாலே காணப்படுகிறானென்று ப்ரத்யக்ஷமாகச்சொல்லிற்று. ௨௬.

ஸூ. ஸுகவிஶிஷ்டாபிதாநாதேவ ச.

(ஶ்ரீ-பா-வ்யா.) ஸுகவிஶிஷ்டாபிதாநாதேவ ச-ப்ராணோ ப்ரஹ்ம ("கம் ப்ரஹ்ம கம் ப்ரஹ்ம" என்று) அபரிச்சிந்த ஸுகமுடையவனான பரமபுருஷனையே நேத்ரத்தில் உபாஸிக்க வேண்டுமென்கைக்காக ("ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருஶ்யதே" என்று) சொல்லுகையினாலேதானேயே, (இங்குசொல்லப்பட்டவன் பரமாத்மா) பரமாத்மாவென்று நிஶ்சயிக்கைக்கு இதுவொன்றே போருமென்று கருத்து. ௨௭.

(ஶ்ரீ-பா-ஸா.) 'ப்ராணோ ப்ரஹ்ம கம் ப்ரஹ்ம கம் ப்ரஹ்ம' என்று இவ்வாக்யத்தின் முதலில் அநந்த ஸுகமுடைய, ப்ரஹ்மத்தைச்சொல்ல ஆரம்பித்திருக்கையால், அந்த ப்ரஹ்மத்திற்கு நேத்ரத்தை ஸ்தாநமாகச் சொல்லிற்றுகையால் அக்ஷியிலிருக்கப்பட்ட புருஷனும் பரமாத்மாவே. ௨௭.

ஸூ. ௬அ. கதவஸவவஸஙு ஹ.

(ஶ-ரா-வ்யா.) கதீவஸவ்-அபரிச்சிந்ந ஸுகமுடையனான பரமபுருஷனைச்சொல்லுகையினாலேயே, ஸ - (வ)சப்தத்தினால் சொல்லப்பட்ட ஆகாசம், ஙு ஹ - பரப்ரஹ்மமே. ௬அ.

(ஶ-ஶ்ரீ-ஹா.) ஸம்ஸார தாபங்களைக்கண்டுபயந்து ஸம்ஸாரத்தைவிட்டு மோக்ஷத்தையடைய விரும்பின உபகோஸன் ப்ரஹ்மஸ்வரூபத்தைக்கேட்க, அவனுக்கு உத்தரம்சொன்ன “ யஜாவகம் கஜெவவம் யஜெவவம் கஜெவகஜ ” என்கிறவாக்யத்தில், எதுகம்மோ, அதுவே வம், எது வம்மோ, அதுவே கம் என்று ஒன்றுக்கொன்று ‡ வ்யாவர்த்தகமா, அளவற்றஸுகஸ்வரூபமான பரப்ரஹ்மத்தைச்சொல்லி “ வஙகஜாகாஶமெஞாவ ” என்று இதையே ஆகாசமென்றும் சொல்லுகிறார்கள் என்று சொல்லுகையாலே, அவ்வாக்யத்திலுள்ள “ வம் ” என்கிறபதத்திற்கு பூதாகாசம் அர்த்தமன்று, பரப்ரஹ்மமே அர்த்தம். ௬அ.

ஸூ. ௬௯. ஶுருதொவநிஷக்க கத்யபிதாநாவ.

(ஶ-ரா-வ்யா-ஹா.) ஶுருதொவநிஷக்கமதுஷியாநாஙவ-கேட்கப்பட்டப்ரஹ்மஸ்வரூபத்தையுடையவ(பரமாத்மஸ்வரூபத்தையறிந்த உபாஸகர்களாலே அடையத்தகுந்த (அர்ச்சிராதி) மார்க்கத்தை (கண்ணிலுள்ளபுருஷனையறிந்தவனுக்கும்) சொல்லுகையாலும், (கண்ணிலுள்ளபுருஷன் பரமாத்மா). ௬௯.

ஸூ. ௭௦. அநவஸிதெரஸம்ஸவாசுதெநதர்.

(ஶ-ரா-வ்யா-ஹா.) அநவஸிதெ - (ப்ரதிபிம்பமும் ஜீவனும், ஸூர்யனும் ஸர்வகாலத்திலும் நேத்ரத்தில்) இல்லாமையாலும், அஸம்ஸவ (கீழ்ச்சொல்லிய குணங்கள் அவைகளில்) ஒவ்வாமையாலும், இதர - பரமாத்மாவைக் காட்டிலும்வேறான ஜீவனும்ஸூர்யனும் ப்ரதிபிம்பமும், ந. கண்ணிலுள்ளவனாகச்சொல்லப்பட்ட புருஷனாகமாட்டார்கள். ௭௦.

அதி. ௧௫. ஸூ. ௭௧. அந்தர்யாம்யதிதைவாதிலோகாதிஷு தத்தர்மவ்யபதேசாத்.

(ரா-வ்யா.) அதிதைவாதிலோகாதிஷு - அதிதைவ அதிலோகாதிபதங்களையுடைய வாக்யங்களில் ப்ரதிபாதிக்கப்பட்ட, அந்தர்யாமீ - அந்தர்யாமியானவன், தத்தர்மவ்யபதேசாத் - பரமாத்மாவுக்கேயுள்ள தர்மங்களைச் சொல்லுகையாலே, (பரமாத்மா). ௭௧.

(ஶ - ஹா. “யப்ருதிவ்யாம் திஷ்டந்” என்று ஆரம்பித்து “ஏஷத ஆத்மாந்தர்யாம்யம்ருத:” என்று பூமிமுதலியவற்றுக்கு அந்தர்யாமிஎன்று சொல்லப்பட்டவன் தேவதையா, அல்லது அணிமாதி ஸித்தியையுடையயோகியா, பரமாத்மாவா, அல்லது வேறொருவனா என்கிற ஸம்சயத்தில், இந்த சப்தம் அபூர்வமாயிருக்கிறபடி

---

‡ வ்யாவர்த்தக மாகையாவது-அவ்வஸ்துவை மற்றவைகளைக் காட்டில் வேறுபடுத்துகை.

யால் இது அபூர்வமான வ்யக்தியையே சொல்லவேணும். யோகமஹிமையினால் ஜீவனுக்கும் ஒரு வஸ்துவுக்குள் ப்ரவேசம் கூடுமாகையால் அப்படிப்பட்ட யோகியாவது ஆகவேண்டும். தேவதையாவது ஆகலாம். பரமாத்மாவுக்கு சரீரமில்லாமையால் அதடியான நியமனாதிகள் கூடாமையால் பரமாத்மாவாகமாட்டான். என்கிற பூர்வபக்ஷத்தை--ப்ருதிவீ முதலியவற்றின் தேவதைகளுக்கும் ஜீவனுக்கும் தெரியாதவனாய் அவர்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறானென்று சொல்லுகையாலே இவன் ஜீவனுமன்று ; தேவதையுமன்று. அந்தர்யாமி என்கிற பதத்திற்கு உள்ளே நுழைந்து நியமிக்கிறானென்று அர்த்தமாகையால் இப்பதம் அபூர்வமல்லாததால் அபூர்வார்த்தத்தையும் சொல்லாது. பரமாத்மாவுக்கு வேறு சரீரமில்லாவிடினும் ப்ருதிவ்யாதிகளையே சரீரமாகக்கொண்டு நியமிக்கவும்கூடும். ஆத்மத்வம் அம்ருதத்வம் முதலிய குணங்களும் அவனுக்கே உபபந்நமாயிருக்கும் ஆகையால் இப்படி சொல்லப்பட்டவன் பரமாத்மா என்று நிரஸநம் செய்கிறார். ௱௧.

(ஶா-ஹா.) "யஃப்ரிவ்யாம்திஷ்டந்ப்ரிவ்யாஅந்தரः" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம். இங்கு அந்தர்யாமியாகச்சொல்லப்பட்டவன் ஜீவாத்மாவா பரமாத்மாவாவென்று ஸம்சயம்.—"த்ரஷ்டா ஶ்ரோதா"பார்க்கிறான் கேட்கிறான் என்று இந்த்ரியாதீநஜ்ஞாநம் சொல்லுகையாலும், "நாந்யோऽதோஸ்தி த்ரஷ்டா" என்று இவனைக்காட்டிலும் வேறொருத்ரஷ்டா இல்லையென்று சொல்லுகையாலும் * இவன் ஜீவாத்மா என்று பூர்வபக்ஷம். பூமிமுதலிய ஸகலதத்வங்களையும் செலுத்தவல்லவனாய், அவைகளால் காணப்படாதவனாய்,பரமபோக்யனாய்,மோக்ஷத்தை யளிக்குமவனாயிருக்கிறானென்று சொல்லுகையாலே, இக்குணங்கள் ஜீவாத்மாவுக்குச்சேராமையாலே இங்கு அந்தர்யாமியாகச்சொல்லப்பட்டவன்பரமாத்மா "பஶ்யத்யசக்ஷுः" என்று கண்ணில்லாமலே பார்க்கிறான், காதில்லாமலேகேட்கிறான் என்று சொல்லுகையாலே,இங்குச்சொன்னது இந்த்ரியங்களினாலுண்டான ஜ்ஞாநமன்று. ஸ்வாபாவிகமான ஜ்ஞாநம்; இது இவனுக்கேயுள்ளது. வேறொரு த்ரஷ்டா இல்லையென்று சொன்னதுக்கும்-ப்ருதிவ்யாதிகளுக்குக் காணப்படாதவனை தான் அவற்றுக்கு அந்தர்யாமியானாற்போல், அவனுக்கும் காணப்படாதவனாய் அவனுக்கும் வேறொரு அந்தர்யாமி இல்லையென்று அர்த்தமாதையாலே அதுவும் உபபந்நம் என்று ஸித்தாந்தம். ௱௧

ஸூ. ௨௰. ந ச ஸ்மார்தமதத்தர்மாபிலாபாச்சாரீரஶ்ச.

(ஶ்ரீ - ஶா - வ்யா.) அதத்தர்மாபிலாபாத் - மூலப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் சேராத நியந்த்ருத்வாதி குணங்களைச் சொல்லுகையாலே, ஸ்மார்தம்-கபிலஸ்ம்ருதியில் ஜகத்காரணமாகச்சொல்லப்பட்ட மூலப்ரக்ருதியும், ஶாரீரஶ்ச - சரீரஸம்பந்த யோக்யனான ஜீவனும், ந - அந்தர்யாமியாகமாட்டா. சங்கரபாஷ்யத்தில் "ந ச ஸ்மார்தமதத்தர்மாபிலாபாத்"என்று இதுவரையிலுமே ஸூத்ரம். ௱௨.

(ஶ்ரீ-ஹா.) இங்கு அந்தர்யாமி அத்ருஶ்யன், அதாவது - காணப்படாதவன் என்று சொல்லுகையால், ரூப சூந்யமாகையாலே கபிலர் சொல்லுகிற ப்ரக்ருதியும் காணப்படா தாகையால் அதுவே அந்தர்யாமி யாகலாமே யென்னில், "த்ரஷ்டா"

* பரமாத்மாவுக்கு கண் முதலியவை இல்லாமையால் பார்ப்பதும் கேட்பதும் அவனுக்கிசையாதென்று கருத்து.

என்று இந்த அந்தர்யாமி பார்க்கிறவனென்று சொல்லுகையாலே பார்க்கிற குணம் அசேதநமாகிய ப்ரக்ருதிக்குக் கிடையாதாகையால் அதாகமாட்டாது.

(ரா-ஹா.) எல்லாவற்றையும் தன் செங்கோலால் நடத்தவல்ல சக்தி முதலிய குணங்கள் மூலப்ரக்ருதிக்குச் சேராவாகையால் மூலப்ரக்ருதி அந்தர்யாமியாகா தாப்போலே, அக்குணங்கள் ஜீவனுக்கும் சேராவாகையால் ஜீவனும் அந்தர்யாமி யாகமாட்டான். ௰உ

ஸூ. ௰௩. உஹயெவி ஹிெஹெஉ ௭ெ௩ ந௨யியஉெத.

(ஶ - ரா - வ்ரு.) உஹயெகஉவி - காண்வர்களும் மாத்யந்திநர்களும், வாநஂ - இந்த அந்தர்யாமியை, ஹெஉஜெ௩ - ஜீவனைக்காட்டிலும் வேறாக, ஃயிய௭ெஹி - சொல்லுகிறார்களென்று. சங்கரபாஷ்யத்தில் "ஶாரீரஶ்சோஹயெவி ஹிெஹெஉ௭ெ௩ந௨யியஉெத" என்று ஸூத்ரம். ௰௩.

(ஶ-ஹா.) பார்க்கிற குணம் சேதநனாகிய ஜீவனுக்கு உண்டானகையாலே இந்த அந்தர்யாமி ஜீவனாகலாமே யென்னில்,—காண்வசாகையில் "யொவிஜ்ஞானெ திஷ்டந்" என்றும், மாத்யந்தின சாகையில் "ய ஆத்மநி திஷ்டந்" என்றும் ஜீவனைக்காட்டிலும் பரமாத்மாவை பின்னமாகச் சொல்லுகையாலே இவன் ஜீவனுமாகமாட்டான். "விஜ்ஞானே" என்றும் "ஆத்மநி" என்றும் ஜீவனிடத்தில் என்று அர்த்தம் "திஷ்டந்" என்று இருக்கிறான் என்றர்த்தம்.

(ரா-ஹா.) "யஆத்மநி திஷ்டந் யொவிஜ்ஞானெ திஷ்டந்" இத்யாதி வாக்யங்களினால் ஜீவனை அதிகரணமாகவும் நியாம்யனாகவும், பரமபுருஷனை *ஆதேயமாகவும் நியந்தாவாகவும் பிரித்துச்சொல்லுகையாலே அந்தர்யாமி ஜீவனன்று இங்கு பரமாத்மா. ௰௩

அதி. கசு. ஸூ. ௰௪. அத்ருஶ்யத்வாதிகுணகொ யமெ௯ாக்தெ:.

(ஶ - ரா - வ்ரு) யமெ௯ாக்தெ: - ஸர்வஜ்ஞத்வாதிகுணங்கள் சொல்லுகையாலே, அத்ருஶ்யத்வாதிகுணக: - அத்ருஶ்யத்வம் (கண்ணுக்ககப்படாமை) முதலியகுணங்களையுடையவன், (பரமாத்மா.) ௰௪.

(ஶ-ரா-ஹா.) "யத்தத்த்ரெஶ்யமக்ராஹ்யம்" இத்யாதி "அக்ஷராத்பரத: பர:" என்கிற வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—"அத்ரெஶ்யம்" இத்யாதியினால் ப்ரக்ருதியும், "அக்ஷராத்பரத: பர:" என்று ஜீவனும் சொல்லப்பட்டனவா, அல்லது-இரண்டுவாக்யங்களினாலும் பரமாத்மாவே ப்ரதிபாத்யனா என்று ஸம்சயம். "அத்ரெஶ்யம்" இந்த்ரியங்களுக்கு அகப்படாதென்று அசேதநங்களுக்குள்ள இந்த்ரியகோசரத்வத்தைத் தவிர்க்கையால் அதற்கு ஸஜாதீயமான ப்ரதாநமே சொல்லிற்றாகவேணும். "அக்ஷராத்பரத: பர:" பரமான அவ்யாக்ருதத்தைக்காட்டிலும் பரனானவன் என்கையாலே மூலப்ரக்ருதிக்குப் பரனாய் அதற்கு அதிஷ்டாதாவான ஜீவன் ப்ரதிபாதிதனாகவேண்டும் என்று பூர்வபக்ஷம்.

* இருப்பிடம் ஆதாரம், இருக்கிற வஸ்து ஆதேயமெனப்படும் - அவ்விரண்டும், கிளையும் அதில் உட்கார்ந்த பக்ஷியும்போல் ஒன்றாகமாட்டாது.

மேல்வாக்யத்தில், "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்றும், "தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாமரூபமந்நஞ்ச ஜாயதே" என்றும், காணப்படாததாகச் சொல்லப்பட்ட வஸ்துவும் "அக்ஷராத்பரதஃபரஃ" என்கிற வஸ்துவும் ஸர்வத்தையுமறியவல்லது ஸகல ஜகத்துக்கும் காரணமானது என்று சொல்லுகையால் அக்குணங்கள் ஜீவனுக்கும் ப்ரக்ருதிக்கும் சேராமையால் அவ்விரண்டு வாக்கியங்களிலும் அக்குணங்களையுடைய பரமாத்மாவே சொல்லப்பட்டான் என்று ஸித்தாந்தம். ௫௪

ஸூ. ௫௫. விஶேஷணபேதவ்யபதேஶாப்யாம் ச நேதரௌ.

(ஶ்ரு - ப்ர - வ்யா.) விஶேஷணபேதவ்யபதேஶாப்யாம் - ("கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி" எதையறிந்தால் இதெல்லாமறிந்ததாகுமோ என்று) விசேஷிக்கையாலும், ("அக்ஷராத்பரதஃ பரஃ" என்று ப்ரக்ருதியைக்காட்டிலும் பரனை ஜீவனைக் காட்டிலும் பரன் என்று ஜீவனைக்காட்டிலும்) பேதம்சொல்லுகையாலும், இதரௌ - ஜீவனும் ப்ரக்ருதியும், ந - இந்தவாக்யங்களுக்கு அர்த்தமாகமாட்டா. ௫௫

(ஶ்ரு-ப்ர-ஸா.) காரணமான ம்ருத்பிண்டத்தை யறிந்தால் அதில்நின்று முண்டான கலசசராவதிகள் அறிந்தனவாகிறாப்போலே அத்ருஶ்யமென்று சொல்லப்பட்ட வஸ்துவை யறிந்தால் ஸமஸ்தமும் அறிந்ததாகுமென்று சொல்லிற்று. இப்படி, கலசாதிகளுக்கு ம்ருத்பிண்டம்போல் ஸமஸ்த ஜகத்துக்கும் அத்ருஶ்யமாகச் சொல்லப்பட்ட வஸ்து காரணம் என்று விசேஷித்துச் சொல்லுகையால் அவ்வாக்யம் ஸகல ஜகத்காரணனான பரமபுருஷனையே சொல்லவேண்டுமே யொழிய ஸகல ஜகத்காரணமல்லாத மூலப்ரக்ருதியைச் சொல்லாது. அக்ஷரம் என்றால் மூலப்ரக்ருதி; "பரதஃ" என்று அதைக்காட்டிலும் பரனை ஜீவனைச்சொல்லுகிறது; 'பரஃ' என்று அவனைக்காட்டிலும் பரன் என்று சொல்லுகையாலே ஜீவனைக்காட்டிலும் பரனை பரமபுருஷனே அவ்வாக்யத்தில் சொல்லப்பட்டவனென்று அங்கீகரிக்க வேண்டும். ௫௫

ஸூ. ௫௬. ரூபோபந்யாஸாச்ச.

(ஶ்ரு - ப்ர - வ்யா - ஸா.) ரூபோபந்யாஸாச்ச - ("அக்நிர்மூர்த்தா" இத்யாதி வாக்யம் அத்ருஶ்யமாகச் சொல்லப்பட்டவனுக்கு ஸகலஜகத்தையும்) சரீரமாகச்சொல்லுகையாலும் இவன் பரமாத்மாவே யாகவேண்டும்.

அதி. ௭. ஸூ. ௫௭. வைஶ்வாநரஸ்ஸாதாரணஶப்தவிஶேஷாத்

(ஶ்ரு - ப்ர - வ்யா.) ஸாதாரணஶப்தவிஶேஷாத் - அக்நி, அக்நிக்கு அதிஷ்டானதேவதை, ஜடராக்நி, பரமாத்மா, இவைகளில் ஸாதாரணமான (இவைகளுக்கு வாசகமான) வைஶ்வாநரசப்தத்தைப் பரமாத்மாவுக்கேயுள்ள குணங்களாலே விசேஷிக்கையாலே, வைஶ்வாநரஃ - வைஶ்வாநரனென்று சொல்லப்பட்டவன், (பரமாத்மா.) ௫௭.

(ஶ்ரு-ஸா.) "யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே" என்கிற விடத்தில் வைச்வாநர பதத்திற்கு அர்த்தம் ஜட-

ராக்கியா, அக்நிதேவதையா, அக்நியா, அல்லது பரமாத்மாவா என்கிற ஸம்சயத்தில் புருஷனுடைய சரீரத்திற்குள் இருக்கிறதென்று சொன்னபடியால் இது ஜடராக்நியே யாகவேணும். அல்லது முதல் மூன்றிலும் அந்தந்த ப்ரகரணங்களில் வைச்வாநர பதப்ரயோகம் காண்கையாலே அம்மூன்றிலேதாவதொன்றாகவேண்டும். அல்பபரிமாணமுடையவனாகச் சொல்லியிருக்கிறபடியால் பரமாத்மாவாகமாட்டான் என்று சொன்ன பூர்வபக்ஷிகளை - இப்ப்ரகரணத்தில் இந்த வைச்வாநரனுக்கு த்யுலோகம் முதலியவைகளை சிரஸ்ஸு முதலிய அவயவங்களாகச் சொல்லியிருக்கிறது. ஜகத் ஸ்வரூபியாகிய பரமாத்மாவுக்கு அதிலேக தேசமாகிய ஒவ்வொன்று ஒவ்வொரு அவயவமாகலாம். மற்ற முதல் மூன்றுக்கும் ஸம்பவியாதாகையாலும், உபக்ரமத்தில் "கோ ந ஆத்மா கிம் ப்ரஹ்ம" என்று ஆத்மா எது, ப்ரஹ்மம் எது என்று கேட்டிருக்கிறபடியாலும் அதற்குத்தரமாகச் சொல்லப்பட்ட வைச்வாநரன் ஆத்மாவாகிய பரப்ரஹ்மமே யாகவேண்டும். இந்த லக்ஷணங்களில்லாத மற்றவையாகமாட்டாவென்று நிரஸிக்கிறார். ௫௭.

(ஶா-ஸூ.) "ஆத்மாநமேவேமம் வைஶ்வாநரம் ஸம்ப்ரத்யத்யேஷி" இத்யாதி "யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே" என்கிற வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம். இங்கு வைஶ்வாநர சப்தத்திற்கு அர்த்தம் பரமாத்மா வென்று நிஶ்சயிக்கலாமா கூடாதா என்று ஸம்சயம். வைஶ்வாநர னென்று அக்நிக்கும் அக்நிதேவதைக்கும், ஜடராக்நிக்கும், பரமபுருஷனுக்கும் பேராக வேதங்களில் வழங்குகிறது. இந்நாலுக்கும் இப் ப்ரகரணத்தில் லக்ஷணமும் காண்கிறது. ஆகையால் நிஶ்சயிக்கக்கூடாதென்று பூர்வபக்ஷம்—"கோ ந ஆத்மா கிம் ப்ரஹ்ம" ஜீவாத்மாக்களான நமக்கு ஆத்மா ஆர்? ப்ரஹ்மம் என்கிற தெது! என்று ஆரம்பித்து மேல்வாக்யங்களில் "ஆத்மாநம் வைஶ்வாநரம்" என்று, ப்ரஹ்ம சப்தம் சொல்லவேண்டும் ஸ்தாநத்தில் வைஶ்வாநர சப்தம் சொல்லுகையாலும், அந்த வைஶ்வாநரன் ஜீவாத்மாவுக்கும் அந்தராத்மாவென்று சொல்லுகையாலும் ப்ரஹ்ம சப்தத்தினால் சொல்லப்பட்ட ஸகலாந்தர்யாமியான பரமாத்மாவே வைஶ்வாநர சப்தத்திற்கு அர்த்தமென்று நிஶ்சயிக்கலாமென்று ஸித்தாந்தம். ௫௭

ஸூ. ௫௮. ஸ்மர்யமாணமநுமாநம் ஸ்யாதிதி.

(ப - ஶா - வ்ய.) இதி - இவ்விதமாக, (வைஶ்வாநரனுக்கு அவயவமாக) ஸ்மர்யமாணம் - தோற்றுகிற (ஆகாசாதிகளின் ரூபம்), அநுமாநம் - (வைஶ்வாநரன் பரமாத்மா என்னுமதில்) ஹேதுவாக, ஸ்யாத் - ஆகும். ௫௮.

(ப-ஶா-ஸூ.) "தஸ்ய ஹ வா" என்று தொடங்கி ஆகாசம் முதல் பூமி பர்யந்தமாயுள்ள ஸகல பதார்த்தங்களையும் இந்த வைஶ்வாநரனுக்கு சிரஸ்ஸு முதலிய அவயவங்களாகச் சொல்லியிருக்கையால், இவ்விதமான ரூபம் மற்றவைகளுக்குக் கூடாமையால் வைஶ்வாநரன் பரமாத்மா என்பது ஸித்தம். ௫௮.

ஸூ. ௫௯. ஶப்தாதிப்யோऽந்த: ப்ரதிஷ்டாநாந்நேதி சேந்ந ததாத்ருஷ்ட்யுபதேஶாதஸம்பவாத்புருஷவிதமபி சைநமதீயதே.

(ப - ஶா - வ்ய.) ஶப்தாதிப்ய: - (வைஶ்வாநரசப்தத்தோடு ஸமாநாதிகரணமான) அக்நிசப்தம் முதலியவைகளினாலும், அந்த: - சரீரத்திற்குள்; ப்ரதிஷ்டாநாச்ச - இருப்பதாகச் சொல்லுகையாலும், ந - வைஶ்

வாநரன் பரமாத்மாவன்று, உதிசெஙு-என்றால், கமா-அப்படி, ஜ்ஙஷ் ரூ வபெகஙாக - உபாஸநம் சொல்லுகையாலும் (ஜடராக்நி சரீரகளுகப் பரமாத்மாவை உபாஸிக்கவேணுமென்கைக்காக அப்படிச் சொல்லுகையாலும்), அஸஂஙவாக - ஜடராக்நிக்கு ஆகாசாதிகள் அவயவங்களாகக்கூடாமையாலும், ந - வைச்வாநரன் பரமாத்மாவன்றென்று சொல்லக்கூடாது. வ நடி - இந்த வைச்வாநரனை, வுருஷடிகவிவ - புருஷனென்றும், அயீயதெ வ - அத்யயநம் பண்ணுகிறார்கள் (சொல்லுகிறார்கள்) ௫௬.

(ஸ-ரா-ஸா.) "அகிலெவெவூாநர:" என்று வைச்வாநரன் அக்நியென்று சொல்லுகையாலும், "ஹ்ருஜ்யஂமாஹவனீய:" என்று ஹ்ருதயம் முதலிய இடங்களிலுள்ள இந்த அக்நிக்கு *த்ரேதாக்நி ஸ்வரூபம் சொல்லுகையாலும் சரீரத்திற்குள் இருக்கிறதென்று சொல்லுகையாலும், இந்த விசேஷணங்களையுடைய வைச்வாநரன் ஜடராக்நியே என்று நிச்சயிக்க வேண்டுகையாலே இவன் பரமாத்மா அன்றென்று பூர்வபக்ஷம்.—†பரமாத்மாவை ஜடராக்நிசரீரகனாக உபாஸிக்கவேண்டுமென்கைக்காக ஜடராக்நி லக்ஷணங்களைக்கொண்டு வைச்வாநரனாகிய பரமாத்மாவைச் சொல்லிற்று. வெறும் ஜடராக்நியையே சொல்லும் பக்ஷத்தில் அதற்கு மேல்வாக்யங்களிற் சொல்லியபடி ஆகாசம் முதலியவை அவயவங்களாகக்கூடாது. "அகி:வெவூாநரொவுருஷ:" என்று இந்த வைச்வாநரன் புருஷனென்று சொல்லிற்று, புருஷனென்று பரமாத்மாவுக்கே நாமமாகப் புருஷஸூக்தாதிகளில் ப்ரஸித்தமாயிருக்கிறது, ஆக இந்த ஹேதுக்களினால் வைச்வாநரன் பரமாத்மாவென்றே நிச்சயிக்கப்படும் என்று ஸித்தாந்தம். ௫௬.

ஸூ. ௨௭. அதஏவநதெவதாஹூதஞ்ச.

(ஸ-ரா-வ்-ஸா.) அதஏவ - இந்த கீழ்ச்சொன்ன ‡ஹேதுக்களினாலேயே, தெவதா - அக்நிதேவதையும், ஹூதஂச - பஞ்சபூதங்களிற்சேர்ந்த அக்நியும், ந - வைச்வாநரசப்தத்திற்கு அர்த்தமன்று. ௨௭.

ஸூ - ௨௮. ஸாக்ஷாதவ்யவிரோயஂஜெமிநி:

(ஸ-ரா-வ) ஸாக்ஷாஅவி - ஸாக்ஷாத்தாகவும், அவிரொய - பரமாத்மாவைச் சொல்லுகையில் விரோதமில்லாமையை, ஜெமிநி: - ஜைமிநி என்கிற ஆசார்யர் சொல்லுகிறார். ௨௮

---

* த்ரேதாக்நிகளாவன - கார்ஹபத்ய ஆஹவநீய தக்ஷிணாக்நிகளென்று பேருள்ள மூவகையான அக்நிகள்.

+ ஒரதிகாரியினிடத்தில் கார்யம் கொள்ளப்போகையில் அவனுடைய நிஜரூபமிருக்க அவ்வதிகாரத்திலிருக்கும்போதுள்ள ரூபங்களைச்சொல்லிப் புகழ்ந்து அதுக்குத்தக்க பலம் பெறுமாபோலே இங்கும் காண்பது.

‡ கீழ்ச்சொன்ன ஹேதுக்களாவன - புருஷனென்றும், ஆகாசாதிகளை அவயவங்களாக உடையவனென்றும் சொல்லுகை. ப்ரஹ்ம சப்தம் சொல்லவேண்டுமிடத்தில் வைச்வாநரபதம் சொல்லுகை.

(ஶ-ஹா.) கீழ் ஐம்பத்தொன்பதாவது ஸூத்ரத்தில், பரமாத்மாவை ஜடராக்நி ஸ்வரூபமாகவாவது, அல்லது ஜடராக்நிரூபஉபாதிவிசிஷ்டஸ்வரூபத்தைப்பரமாத்மாவாகவாவது உபாஸிக்கவேண்டுமென்கைக்காக வைச்வாநர சப்தவாச்யனுன பரமாத்மாவுக்கு ஜடராக்நிலக்ஷணம் சொல்லிற்றென்று சொன்னூர். இதில், ஜடராக்நிக்கு லக்ஷணமாவது "புருஷேऽந்த:ப்ரதிஷ்டிதம்" என்று சரீரத்திற்குள் இருக்கிறுனென்று சொன்னது. உள்ளே இருக்கையாவது மத்யஸ்தனுயிருக்கை; அதாவது - ஸாக்ஷியாயிருக்கை. அது ஸாக்ஷிஸ்வரூபியாகிய பரமாத்மாவுக்கே ஸம்பவிக்கும். இதுக்கு இப்படியர்த்தமென்று நிச்சயித்தபின்பு மற்ற பதங்களுக்கும் இதுக்கநுகுணமாக அர்த்தம்சொல்லவேண்டும் என்று ஜைமினி சொல்லுகிறுரென்றது. சுக.

(ரா-ஹா.) வ்யாஸபகவான், அக்நிபதத்திற்கு அக்நியை சரீரமாக உடைய பரமாத்மாவென்று சரீரத்வாரா பரமாத்மாவை அர்த்தமாகச்சொன்னூர். அப்படி சொல்லுகையன்றிக்கே * ஸாக்ஷாத்தாகவே பரமாத்மாவை அர்த்தமாகச்சொல்லலாம், அதெப்படியெனில், வைச்வாநர பதத்திற்கு ஸகல மநுஷ்யர்களையும் நியமிக்கிறவன் என்கிற அவயவார்த்தத்தைக்கொண்டு பரமாத்மா அர்த்தமென்று ஸ்வீகரிப்பது போல், அக்நி சப்தத்திற்கும் முன்புள்ள தேசத்தை, அதாவது - ஊர்த்வலோகத்தை அடைவிப்பிக்கிறவன் என்கிற அவயவார்த்தத்தைக்கொண்டு சொல்லாம் என்று ஜைமினிமதம். சுக.

ஸூ - சுஉ. அபிவ்யக்தேரித்யாச்மரத்ய:

(ஶ-ரா-வ்யா.) அபிவ்யக்தே:-(உபாஸகனுக்குமநஸில்) விஷயமாகைக்காக, (பரமபுருஷனை ஆகாசாதி ப்ரதேசத்தளவாக அளவிட்டுச் சொல்லிற்று), இதி - என்று, ஆச்மரத்ய:. ஆச்மரத்யரென்கிற ஆசார்யர் சொல்லுகிறுர்.

(ஶ-ஹா.) ஆனல் "ப்ராதேசமாத்ர" என்று அல்பபரிமாணமுள்ளவனுகச் சொல்லுவானென்னென்னில்,—உபாஸநம் செய்கிறவர்களுக்கு அவர்களுடைய ஹ்ருதயத்தில் அவ்விதமாகக்காண்கையால் அப்படிசொல்லிற்றென்று ஆச்மரத்தியர் சொன்னூர். சுஉ.

(ரா-ஹா.) "அபிவிமாநம்"அளவிறந்தவன்,என்று சொல்லப்பட்ட பரமபுருஷனை "யஸ்த்வேதமேவம் ப்ராதேசமாத்ரம்" என்று § பரிச்சின்னமாகச்சொல்லுகை எப்படி கூடுமென்னில்,—பரமாத்மா அபரிச்சிந்நனுயினும் அந்த ஸ்வரூபம் உபாஸகனுடைய புத்திக்கு விஷயமாகைக்காக இப்படி அளவிட்டுச் சொல்லிற்றென்று கருத்து.

ஸூ - சுங. அநுஸ்ம்ருதேர்பாதரி:

* பங்கஜம் என்றால் சேற்றில் உண்டானதென்றர்த்தம். ஆயினும் அந்த பதம் தவளை முதலியவைகளைச் சொல்லாது - இப்பங்கஜம் ஆயிரம்பொன் விலையுள்ளதென்றால் தாமரைக்கு அத்தனை விலை தகாததாகையால் அப்போது சேற்றிலுண்டான மாணிக்கத்தையே சொல்லும் அதுபோல் இங்கும் ஆகாசாதிகளை அவயவமாக உடைய அக்நி பரமாத்மாவாவான் என்று பொருள்.

§ அளவுள்ளதாக.

(ஶ-ரா-வ்ய.) அநுஸ்ம்ருதே꞉-உபாஸநம் செய்கைக்காக (ஆகாசாதிகளை அவயவங்களாகச் சொல்லிற்றென்று) பாதரி꞉-பாதரி என்கிற ஆசார்யர் சொன்னார். சுங

(ஶ-ஹா.) அல்பபரிமாணமாகிய ஹ்ருதயத்திலிருக்கிற மனதினால் த்யானிக்கப்படுகிறபடியால் அவனை அல்பபரிமாணமுடையவனாகச் சொல்லிற்றென்று பாதரி என்கிறரிஷிசொன்னார். சுங.

(ரா-ஹா.) ஆகாசாதி ப்ருதிவீபர்யந்தமான பதார்த்தங்களைப் பரமாத்மாவுக்கு அவயவமாகச் சொல்லுவானேனென்னில்,—மோக்ஷார்த்தமாக இப்படி உபாஸிக்கவேண்டுமென்கைக்காக அந்த பதார்த்தங்களை பரமாத்மாவுக்கு சிரஸ்ஸு முதல் பாதபர்யந்தமான தேஹாவயவங்களாகச் சொல்லிற்றென்று தாத்பர்யம். சுங.

ஸூ - சுச. ஸம்பத்தேரிதி ஜைமிநிஸ்ததா ஹி தர்ஶயதி.

(ஶ-ரா-வ்ய.) ஸம்பத்தே꞉-ப்ராணாஹுதிக்கு அக்நிஹோத்ரத்வஸித்யர்த்தம், (உபாஸகனுடைய ஹ்ருதயம் முதலிய அவயவங்களை கார்ஹபத்யம் முதலிய அக்நி ஸ்வரூபங்களாகக் கல்பித்திருக்கிறது), இதி - என்று; ஜைமிநி꞉ - ஜைமினி என்கிற ஆசார்யர் சொன்னார். ததா ஹி - அப்படியே, தர்ஶயதி (ஶ்ருதி) காண்பிக்கிறது. சுச.

(ஶ-ஹா.) இந்த உபாஸகன் தன்னுடைய சிரஸ்ஸு முதலியஅவயவங்களை, பரமாத்மாவுக்கு சிரஸ்ஸு முதலிய அவயவங்களாகச் சொல்லப்பட்ட த்யுலோகம் முதலியவைகளாக த்யானிக்கவேண்டுமென்று சொல்லுகையாலே, உபாஸகனுடைய சரீர பரிமாணத்தைப்பற்றி பரமாத்மாவை அல்பபரிமாணனென்று சொல்லிற்றென்று ஜைமினி சொன்னார். சுச.

(ரா-ஹா.) "உர ஏவ வேதிர்லோமாநி பர்ஹி꞉" என்று உபாஸகனுடைய மார்பு முதலிய அவயவங்களை * வேதி முதலிய அக்நிஹோத்ரோபகரணங்களாகச் சொல்லுகைக்குப் ப்ரயோஜநமென்னென்னில்,—வைச்வாநரவித்யைக்கு, உபாஸகன் தன்னுடைய சரீராவயவங்களை அக்நிஹோத்ரோபகரணங்களாக நினைத்து அதில் ப்ராணாஹுதியை ஹோமம் செய்கிறதாக நினைக்கை அங்கமாகையாலே அந்த அங்கத்தை விவரித்து "ய ஏதமேவம் வித்வாநக்நிஹோத்ரம் ஜுஹோதி" என்று இந்த ஶ்ருதியும், உபாஸகன் தான்செய்கிற ப்ராணாஹுதியை அக்நிஹோத்ரமாக நினைக்கவேண்டுமென்று சொல்லுகிறது. இங்கு அந்தந்த ஆசார்யர்கள் சொன்னார்களென்பது இவ்வர்த்தம் ப்ரமாணதமமென்கைக்காக. சுச.

ஸூ. சுரு. ஆமநந்தி சைநமஸ்மிந்.

(ஶ-ரா-வ்ய.) ஏநம் - இந்த வைஶ்வாநரனை, அஸ்மிந்-இந்த உபாஸகனுடைய சரீரத்தில், ஆமநந்தி - (ப்ராணாஹுதி வேளையில்) அநுஸந்திக்கச் சொல்லுகின்றன. சுரு.

(ஶ-ஹா.) ஜாபாலோபநிஷத்திலும் பரமாத்மாவைக் கீழ்ச்சொன்னபடி த்யானிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. ஆகையால் இங்கு வைச்வாநரனென்று சொல்லப்பட்டவன் பரமாத்மாவென்று ஸித்தாந்தம். சுரு.

(ஶா - ஹா.) "தஸ்ய ஹவா ஏதஸ்யாத்மநோ வைஶ்வாநரஸ்ய மூர்த்தைவ ஸுதேஜா:" இத்யாதி வாக்யங்கள், வைச்வாநரோபாஸகன் தன்னுடைய சிரஸ்ஸு முதல் பாதபர்யந்தமான அவயவங்களை வைச்வாநரனுக்கு அவயவங்களாகச் சொல்லப்பட்ட ஆகாசம் பூமிபர்யந்தங்களாக அநுஸந்தித்துக் கொண்டு ப்ராணாஹுதியாகிற அக்நிஹோத்ரத்தினால் வைச்வாநரனை ஆராதிக்கவேண்டுமென்று சொல்லுகிறது. ஆகையால் வைச்வாநரன் பரமாத்மாவென்று ஸித்தம்.

உ - வது பாதம் ஸம்பூர்ணம்.

---

## மூன்றுவது பாதம்.



சுயி-கஅ. ஸூ. சுசு. த்யுப்வாத்யாயதநம் ஸ்வஶப்தாத்.

(ஸு-ரா-வ்ரு.) ஸ்வஶப்தாத் - தனக்கு (பரமாத்மாவுக்கு) அஸாதாரணமாகிய சப்தத்தைக்கொண்டு சொல்லுகையால், த்யுப்வாத்யாயதநம் - ஸ்வர்க்கலோகம் பூலோகம் முதலியவைகளுக்கு ஆதாரமாகச் சொல்லப்பட்டவன் (பரமாத்மா).

சுசு.

(ஶ்ரு-ஹா.) "யஸ்மிந்த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந: ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை: தமேவைகம் ஜாநதாத்மாநமந்யா வாசோ விமுஞ்சதா அம்ருதஸ்யைஷ ஸேது:" என்கிற வாக்கியத்திற்கு, எந்த வஸ்துவில், பூமியும் அந்தரிக்ஷலோகமும் ப்ராணன்களுடனும் மற்றும் ஜீவன் முதலிய ஸகல வஸ்துக்களுடனும் கோக்கப்பட்டிருக்கிறதோ, அந்த ஆத்மாவாகிய வஸ்து ஒன்றையே அறியுங்கோள். மற்றைப்பேச்சை விடுங்கோள். இது மோக்ஷத்திற்கு ஸேது - அணை - அதாவது - மோக்ஷத்தை அடைவிப்பிக்கிறது என்றர்த்தம். பூமி முதலானவைகளுக்கு ஆதாரமாகிய வஸ்துவை யறியென்று தாத்பர்யம்.—இவ்வாக்யத்தில், அப்படி ஸகல வஸ்துக்களுக்கு மாதாரமாகச்சொல்லப்பட்டது. ப்ரஹ்மமா, அல்லது வேறொன்றா என்னில்,—இதை ஸேதுவென்று சொல்லிற்று, ஸேதுவாவது அணை. அது இக்கரையிலிருந்து அக்கரைக்குத் தாண்டிப்போக ஸாதநமாயிருக்கும். ப்ரஹ்மமென்பது, ஸம்ஸாரமாகிய இக்கரையில் நின்றும் ஸேதுவழியாய்ப்போய் அடையத்தக்க அக்கரையிலுள்ள வஸ்து. வழியிலுள்ள அணையும், அணைக்கப்புறம் அக்கரையிலுள்ள வஸ்துவும் ஒன்றாகமாட்டாது. ஆகையால் இங்கு சொல்லப்பட்டது ப்ரஹ்மமன்று. மற்றது ஏதுவாகக்கூடுமென்னில், பானைசட்டி முதலியவைகளுக்கு ஆதாரம் அவற்றுக்குக் காரணமாகிய மண் ஆகிறாற்போல், பூமிமுதலிய கார்யவஸ்துக்களுக்கு ஆதாரமாகச் சொல்லப்பட்டன - அவற்றுக்குக் காரணமாகிய ஸாங்க்யர்கள் சொல்லுகிற மூலப்ரக்ருதி யாகவேண்டும், அல்லது வாயுவை எல்லாவற்றுக்கும் ஆதாரமாகச் சொல்லியிருக்கையால் வாயுவாவது ஆகவேண்டும், அல்லது - பூமி முதலியவை ஜீவர்களால் தங்கள் தங்கள் புண்ணியபாபங்களுக்குத்தக்கபடி அநுபவிக்கத்தக்கவையாகையால், அநுபவிக்கிற ஜீவர்களாவது அவற்றுக்கு ஆதாரமாகவேண்டும். இம்மூன்றையும் காட்டில் வேறாகிய ப்ரஹ்மம் ஆகக்கூடாதென்கிற பூர்வபக்ஷத்தை—பூமி முதலியவற்றிக்கு ஆதாரமாகச் சொல்லப்பட்ட வஸ்துவை "ஆத்மா" என்று இவ்வாக்கியத்தில் சொல்லியிருக்கிறது. மூலப்ரக்ருதியும் வாயுவும் ஜடமாகையால் ஆத்மாவாகமாட்டாது. ஆகையால் ஸ்வயம்ப்ரகாசமாகிய ஆத்மாவான ப்ரஹ்மமே இங்

கு ஸகலத்துக்கும் ஆதாரமாகச் சொல்லப்பட்டது. 'ஸேதுஃ' என்று வேறிடங்களிலும் இந்தப்ரஹ்மத்தையே ஸகலத்துக்கும் ஆதாரமாகச்சொல்லியிருக்கையால் அத்தையே இங்கும் அர்த்தமாக ஒப்புக்கொள்ள வேண்டியது நியாயமாயிருக்கிறது. காணப்படுகிற ஸர்வமும் ப்ரஹ்மம் என்று சொன்னதின்பேரில், ஒருமரம் வேராயும் கிளையாயும் அடியாயும் நாநாரூபமாயிருப்பதுபோல், ப்ரஹ்மமும் தேவனென்றும் மநுஷ்யனென்றும் இப்படி நாநாரூபமாயிருக்குமென்று தோற்றுகையாலே இப்படி நாநாரூபமாகிய ப்ரஹ்மஸ்வரூபமே அறியத்தக்கதாக வேதாந்தங்களில் சொல்லிற்றென்கிற ப்ரமத்தைப் போக்குகைக்காக, ப்ரஹ்மஸ்வரூபத்தை தேவன் மநுஷ்யன் முதலாகிய நாநாரூபமுள்ளதாக அறிகை, ஸம்ஸாரத்திற்குக் காரணம், மோக்ஷத்திற்கு விரோதியாகையால் அந்த நாநாரூபத்தைவிட்டு அந்த ரூபங்களுக் காதாரமாகிய ஸச்சிதாநந்த ரூபமான அத்வைத ப்ரஹ்மஸ்வரூபத்தையே மோக்ஷத்தை அடைய நினைக்கிறவன் அறியக்கடவன் என்று இவ்வாக்யம் சொல்லுகிறது. தேவதத்தன் நிற்கும் ஆஸநத்தை யெடுத்துவாவென்றால் தேவதத்தனைவிட்டு அந்த ஆஸநத்தை மாத்திரம் எடுத்துவருவதுபோல் பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாகிய ப்ரஹ்மஸ்வரூபத்தை யறியென்றால் அவற்றைவிட்டு ப்ரஹ்மஸ்வரூபமே அறியத்தக்கதாகச் சொல்லிற்றென்று இவ்வாக்யத்தின் கருத்து. இங்கு ஸேதுவென்று சொன்னதும்-ஸேதுபதத்திற்கு தரிக்கை, அதாவது-ஆதாரம் அர்த்தம்; அதுவும் ப்ரஹ்மத்திற்கொக்கும் ஆகையால் இவ்வாக்யத்தில் சொல்லப்பட்டது ப்ரஹ்மமேயென்று நிரஸநம் செய்கிறார். சுசு.

(ராஹ.) இந்த அதிகரணத்திற்கு, "யஸ்மிந்த்யௌ꞉ ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந꞉ ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை꞉ தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சத அம்ருதஸ்யைஷ ஸேது꞉" என்கிறது விஷயவாக்யம்-இதில் பூம்யந்தரிக்ஷதயுலோகங்களுக்கு ஆதாரமாகச்சொல்லப்பட்டவன்ஜீவனு, பரமாத்மாவாவென்று ஸம்சயம்.—இங்கு இவனை மநஸ்ஸு ப்ராணன் முதலியவைகளுக்கு ஆதாரமாகச் சொல்லியிருக்கிறபடியால் "அப்ராணோ ஹ்யமநா꞉" என்று பரமாத்மாவுக்கு மநஸ்ஸும் ப்ராணனும் இல்லையென்றிருக்கிறபடியால் இவன் ஜீவனென்று பூர்வபக்ஷம்.—"அம்ருதஸ்யைஷ ஸேது꞉" என்று அணையானது இக்கரையிலிருந்து அக்கரையை அடைகைக்கு ஸாதநமாயிருப்பதுபோல் இவன் ஸம்ஸாரத்திலிருந்து மோக்ஷத்தை யடைகைக்கு ஸாதநமாயிருக்கிறானென்று சொல்லியிருக்கையாலும் 'ஆத்மா' என்று தான் நியந்தாவாய் எல்லாவற்றிலும் வ்யாபிக்கிறானென்று சொல்லுகையால் இக்குணங்கள் ஜீவனுக்கில்லாமையால் இப்படி சொல்லப்பட்டவன் பரமாத்மா. ஸகல ஜகத்துக்கும் ஆதாரமானவன் மநஸ்ஸு முதலியவைகளுக்கும் ஆதாரமாகக் குறையில்லை. இங்கு * கர்மாதீநமான ஆதாரம் சொல்லவில்லை; அகர்மவஶ்யனான ஈஶ்வரன் தன் ஸங்கல்பத்தினால் ஸகலத்தையும் தரிக்கிறானென்று சொல்லிற்று, என்று ஸித்தாந்தம். சுசு.

ஸூ. சுஎ. முக்தோபஸ்ருப்யவ்யபதேஶாச்ச.

(ப-ரா-வ.) முக்தோபஸ்ருப்யவ்யபதேஶாச்ச (இவனை) முக்தனுக்கு ப்ராப்யனாகச் சொல்லுகையாலும், (இவன்) பரமாத்மா. சுஎ.

---

*கர்மாதீநமாக ஆதாரமாகையாவது-முன்ஜந்மங்களில் பண்ணின புண்யபாபங்களின் பலமான ஸுகதுக்கங்களை யநுபவிக்கைக்கு ப்ராணன் முதலியவற்றை ஸாதகமாக் கொள்ளுகை.

(ஶ்ரு-ஹா.) அவித்யையாவது ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவாக நினைக்கை. அந்த அவித்யையினால், தன்தேகத்தைப் பழிப்பவனிடத்தில் கோபம், துதிப்பவனிடத்தில் ப்ரீதி, அதற்குக் கெடுதி நேரிடுமோவென்கிற பயம், முதலிய ராகத்வேஷாதி தோஷங்கள் உண்டாகின்றன. இவற்றினால் ஸம்ஸாரம் பெருகி அநர்த்தத்தை யடைகிறான். ஆகையால், இந்த ஸம்ஸாரத்திற்கு ஆதிகாரணமாகிய தேஹாத்மாபிமானமாகிற அவித்யையைப்போக்கி மோக்ஷத்தை யடைய நினைத்தவன், இவ்வாக்யத்திற் சொல்லிய பூமிமுதலியவற்றுக்குச்கு ஆதாரமாகிய ப்ரஹ்மஸ்வரூபத்தையறிந்தால் அதினால் தேஹாத்ம ப்ரமமும், அந்த ப்ரமத்தினாலுண்டாகிய ராகத்வேஷாதிகளும், புண்யபாபங்களும் ஸம்ஸாரமும் நீங்கி இந்த ப்ரஹ்மஸ்வரூபத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கையாலும், மோக்ஷம் வேண்டியவன் மூலப்ரக்ருதியை த்யாநம் செய்யவேண்டுமென்று எங்கும் சொல்லாமையாலும் இங்கு சொல்லப்பட்ட வஸ்து ப்ரஹ்மமே என்று ஸித்தாந்தம். ௩௬.

(ரா-ஹா.) ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இவனை உபாஸநம் செய்தவன் புண்யபாபங்களை உதறிவிட்டு முக்தனாய் இவனோடு ஸாம்யத்தை யடைகிறானென்றும், 'ஸ உத்தம: புருஷ:' ஸர்வோத்க்ருஷ்டனான இந்த புருஷனை முக்தன் அடைகிறானென்றும் சொல்லுகையாலே இவன் பரமாத்மா. ப்ரக்ருதி ஸம்ஸார தசையிலடையத்தக்கதொழிய மோக்ஷதசையிலடையத்தக்கதுமன்று அதுக்குப் புருஷனென்ற பேரும் கிடையாது. ௩௭.

ஸூ. ௩அ. நாநுமாநமதச்சப்தாத்.

(ஶ்ரு-ப்ர.) அதச்சப்தாத் - மூலப்ரக்ருதியைச் சொல்லுகிற சப்தமில்லாமையாலே, அநுமாநம் - மூலப்ரக்ருதி, ந - சொல்லப்படவில்லை. ௩அ

ஸூ. ப்ராணப்ருச்ச.

சங்கரபாஷ்யத்திற்கு இது இரண்டு ஸூத்ரமாக இருக்கும்.

(ஶ்ரு-ப்ர.) ப்ராணப்ருச்ச-ஜீவனும், (பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாக இங்குச் சொல்லப்படவில்லை). ௩அ.

(ரா-ஹா-ப்ர.) அதச்சப்தாத் - (இங்கு) மூலப்ரக்ருதியைச் சொல்லுகிற சப்தமில்லாமையால், அநுமாநம்-மூலப்ரக்ருதி,(யதா) ந - (எப்படி இங்கு) சொல்லப்படவில்லையோ, (அப்படியே ஜீவவாசக சப்தமில்லாமையால்) ப்ராணப்ருச்ச - ஜீவனும், ந - (இங்கு) சொல்லப்படமாட்டான்.

(ஶ்ரு - ஹா.) இந்த ப்ரகரணம் ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிறதென்பதற்கும், பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாக இங்குச்சொல்லப்பட்ட வஸ்து ப்ரஹ்மமென்பதற்கும் ஹேது, இவ்வஸ்துவுக்கு "*ஸர்வஜ்ஞன்" என்ற இதுமுதலிய அநேகமாகிய சேதநனுக்குள்ள தர்மங்கள் சொல்லியிருப்பாலும்,மூலப்ரக்ருதிக்குள்ள குணங்களை இவ்வஸ்துவுக்குச் சொல்லாமையாலும். அதைச்சொல்லும் சப்தம் இப்ப்ரகரணத்தில் காணாமையாலும் இங்கு மூலப்ரக்ருதி சொல்லப்படவில்லை.

(ர-ஹா.) மூலப்ரக்ருதி அசேதநமாகையால் ஆத்மா என்கிற பதம் அதைச் சொல்லாவிட்டாலும், சேதநனாகிய ஜீவன் ஆத்மாவென்பதற்கு அர்த்தமாகக்கூடும், அவன் ஸர்வஜ்ஞனுமாகலாமாகையால் இங்கு அவனைச் சொல்லலாமேயென்னில், அல்பசக்தியான ஜீவனும் பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாகக் கூடாதாகையால் அவனுமாகமாட்டான்.

---

* எல்லாமறிந்தவன்.

ஸூ. ௬௯. பேதவ்யபதேசாச்ச.

(ஸ-ரா-வ்.) பேதவ்யபதேசாச்ச - (ஜீவனைக்காட்டிலும் இவனை) பின்னமாகச்சொல்லுகையாலும், (இவன் பரமாத்மா.) ௬௯.

(ஸ - ஸா.) இங்கு அந்த "ஆத்மாவை" அறியுங்கோள் என்று அறியவேண்டும் வஸ்துவாகிய ஆதாரத்தை "ஆத்மாவை" என்று இரண்டாம் வேற்றுமையாலும், அறிகிற ஜீவர்களை "அறியுங்கோள்" என்றுமுதல் வேற்றுமையாலும் சொல்லுகையாலே, அதாவது - ஜீவனை ஜ்ஞாநத்திற்கு ஆச்ரயமாகவும், ஆத்மாவை அந்த ஜ்ஞாநத்திற்கு விஷயமாகவும் பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாகிய வஸ்துவைக்காட்டிலும் ஜீவனை வேறாகச் சொல்லுகையாலே இவன் ஜீவனன்று. ௬௯.

(ரா-ஸா.) "ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமிதி வீதசோக:" என்று ப்ரக்ருதி பரவசனாய் மோஹித்துக்கிடக்கிற ஜீவன், தன்னைக்காட்டிலும் பின்னனாய் அகர்மவச்யனாயிருக்கிற பரமாத்மாவையும் அவனுடைய மாஹாத்ம்யத்தையும் எப்பொழுது அறிகிறானோ, அப்போது சோகமோஹங்களை விடுகிறான் என்று இவனை ஜீவனைக்காட்டிலும் பின்னமாகச் சொல்லியிருக்கையாலே இவன் பரமாத்மா. ௬௯.

ஸூ. ௭௦. ப்ரகரணாத்.

(ஸ-ரா-வ்.) ப்ரகரணாத்-இது பரமாத்மாவை ப்ரதிபாதிக்கிற ப்ரகரணமாகையாலே, (இங்குசொல்லப்பட்டவன் ஜீவனன்று) ௭௦.

(ஸ-ரா-ஸா.) இது ஜீவனைச்சொல்லுகிற ப்ரகரணமன்று, ப்ரஹ்மத்தைச் சொல்லுகிற ப்ரகரணம். ஆகையால் இப் ப்ரகரணத்தில் சொல்லப்பட்டவன் ஜீவனாகமாட்டான். ௭௦.

ஸூ. ௭௧. ஸ்தித்யதநாப்யாஞ்ச.

(ஸ-ரா-வ்.) ஸ்தித்யதநாப்யாஞ்ச - (ஒருவனுக்கு) உத்தமமான இருப்பையும், (மற்றொருவனுக்கு அவ்விருப்பின்றிக்கே) கர்ம பலபோகத்தையும் சொல்லுகையாலும், (ஜீவனைக்காட்டிலும் பரமாத்மா பின்னனென்று தோற்றுகையாலே இங்கு சொல்லப்பட்டவன் ஜீவனாக மாட்டான்).

(ஸ-ஸா.) மேலும் பூமி முதலியவற்றுக்கு ஆதாரமாகிய வஸ்துவை புண்யபாப பலமாகிய ஸுகதுக்கங்களை யநுபவியாமல் உதாஸீநனாயிருக்கிறானென்றும், ஜீவனை, ஸுகதுக்கங்களை யநுபவிக்கிறானென்றும் சொல்லுகையாலே ஸுகதுக்கங்களையுடைய ஜீவன் எப்போதும் ஸுகதுக்கங்களற்ற வஸ்துவாகமாட்டான் ஆகையால் இங்குச் சொல்லப்பட்டவன் ஜீவனுமன்று, மூலப்ரக்ருதியுமன்று, வாயுவுமன்று, ப்ரஹ்மமே சொல்லப்பட்டதென்று ஸித்தாந்தம். ௭௧.

(ரா-ஸா.) "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநச்நந்நந்யோ அபிசாகசீதி" அவ்விருவரி லொருவன் கர்மபலத்தை புஜிக்கிறான், மற்றவன் அதில்லாதவனாய் விளங்குகிறான் என்று ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லுகையாலே, இங்கே மோக்ஷ ஹேதுவாகச் சொல்லப்பட்டவன் ஜீவனாகமாட்டான். ௭௧.

அதி. ௧௧. ஸூ-௭௨. பூமாஸம்ப்ரஸாதாதத்யுபதேசாத்.

(ஶ - வ்ய.) ஸம்ப்ரஸாதாதத்யுபதேஶாத் - ப்ராணனைக்காட்டிலும் மேலாக, உபதேஶாத் - சொல்லுகையாலே, பூமா - பூமா என்று சொல்லப்பட்டவன் (பரமேஶ்வரன்). ௭௨.

(ரா - வ்ய.) ஸம்ப்ரஸாதாதத்யுபதேஶாத் - ஜீவனைக்காட்டிலும் மேலாக, உபதேஶாத் - சொல்லுகையாலே, பூமா - பூமா என்று சொல்லப்பட்டவன், (பரமாத்மா). ௭௨,

(ஶ-பா.) "பூமாத்வேவ விஜிஜ்ஞாஸிதவ்ய:" மோக்ஷத்துக்காக பூமாவென்பதையே யறியவேண்டும் என்று சொல்லி, அதேது என்றால், "யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ பூமா" என்று சொல்லிற்று. இதற்கு பூர்வபக்ஷி சொல்லு மர்த்தமாவது யத்ர - எந்த ப்ராணனில் (உறங்கும்போது இந்த்ரியங்கள் லயித்தவளவில்) நாந்யத்பஶ்யதி - வேறொன்றையும் ஜீவன் பார்க்கிறதில்லையோ, பூமா - அது பூமாவெனப்படும், என்று ஸித்தாந்தி சொல்லு மர்த்தமாவது - யத்ர - எந்த நிர்குண ப்ரஹ்மத்தில் (ஜீவன் லயித்தவளவில்) நாந்யத்பஶ்யதி - ஸுஸத்யரூபமான வேறொன்றை, அதாவது - ஜகத்தை, ப்ராந்தியினால் முன்போல பார்க்கிறதில்லையோ, ஸ பூமா - அந்த நிர்குண ப்ரஹ்மமே பூமாவெனப்படும் என்று. பூர்வபக்ஷிக்கு ப்ராணன் அர்த்தம். ஸித்தாந்திக்கு நிர்குண ப்ரஹ்மம் அர்த்தம்.—ஸ பூமா என்கிற விடத்தில் பூமாவென்பதற்கு அதிகம் என்றர்த்தம். அதிகமென்று ஸாமாந்யமாக இருக்கையாலே ஓரர்த்தம் நிஶ்சயிக்கப்போகாது. அதற்காக வேறொரு பதத்தோடு அந்வயித்து இதினுடைய அர்த்தத்தை நிஶ்சயிக்கவேண்டும். இப்பதத்தை யந்வயிப்பதற்கு இரண்டிடமுண்டு அதாவது - இப்பதத்திற்கு ஸமீபத்திலுள்ள "ப்ராணோ வா ஆஶாயா பூயாந்" என்று ஆசையைக்காட்டிலும் மேலாகச்சொல்லப்பட்ட ப்ராணனிடத்தி லந்வயிக்கலாம். அல்லது - இப்ப்ரகரணத்தி னாதியில் "தரதி ஶோகமாத்மவித்" ஆத்மாவையறிந்தவன் ஸம்ஸார துக்கத்தைத் தாண்டுகிறான் என்று சொல்லப்பட்ட ஆத்மாவோடாவது அந்வயிக்கலாம். இவ்விரண்டில் எது உசிதமென்றால், இப்ப்ரகரணத்தில். நாமத்தைக்காட்டிலும் வாக்குமேலானது, வாக்கைக்காட்டிலும் மனஸ்ஸு மேலானது என்று மேல் மேல் சொல்லிக்கொண்டுபோய் ப்ராணனை எல்லாவற்றுக்கும் மேலாகச்சொல்லி முடித்துவிட்டது. இதற்கு மேலாக ஒன்றையும் சொல்லவில்லை. ஆகையால் எல்லாவற்றுக்கும் மேலாய், இப்பதத்திற்கு ஸமீபத்திலுள்ள ப்ராணபதத்தினால் சொல்லப்பட்ட ப்ராணனேஇங்கு "பூமா" வென்பதிற்கு அர்த்தம். 'யத்ர நாந்யத்பஶ்யதி' என்பதும், உறக்கத்தில் ப்ராணனிடத்தில் ஸகலேந்த்ரியங்களும் லயித்து அப்போது ஜீவன் ஸகல வ்யாபாரங்களையும் விட்டு ஸுகமாக உறங்குகையாலே இதற்கு விரோதமில்லை. இப்ப்ரகரணத்தி னாதியில் ஆத்மா என்பதற்கும் 'ப்ராணோ ஹ பிதா' ப்ராணனே பிதா மாதா என்று சொல்லுகையாலே விரோதமில்லை. ஆகையால் இங்கு பூமா வென்று ப்ராணனுக்குப் பெயர் என்கிற பூர்வபக்ஷத்தை,—ப்ராணனைக்காட்டிலும் இந்த பூமாவை மேலாகச்சொல்லியிருக்கையால் இது ப்ராணனாகமாட்டாது. எப்படியெனில், 'ஏஷ து வா அதிவததி யஸ்ஸத்யேநாதிவததி' என்று ப்ராணனை உபாஸநம்செய்து அதை எல்லாவற்று

க்கும் மேலாகத் துதிக்கிறவனை எல்லோரிலு முயர்ந்தவனாகச்சொல்லி, பின்பு, அவனைக்காட்டிலும் மேலானவனுண்டு,அவன்யாரெனில், ஸத்யம் என்கிற ப்ரஹ்மத்தை உபாஸனம்செய்து அதை எல்லாவற்றுக்கும் மேலாகப் புகழுகிறவன் அவனைக்காட்டிலு முயர்ந்தவனென்று சொல்லிற்று, ப்ராணனை உபாஸநம் செய்கிறவனைக்காட்டிலும் ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்கிறவன் மேலென்றால், ப்ராணனைக்காட்டிலும் ப்ரஹ்மம் மேலென்பது ஸித்தமே. ஆகையால் அந்த ப்ரஹ்மமே இங்கு பூமாவாகச் சொல்லப்பட்டது. மேலும் மோக்ஷத்திற்கு ப்ரஹ்மஜ்ஞாநத்தைக் காட்டிலும் வேறுபாயமில்லையென்று "நாநய꞉பந்தா வித்யதே(அ)யநாய" இத்யாதி அநேக வாக்யங்களில் சொல்லுகையாலே இங்கு மோக்ஷத்திற்காக அறியத்தக்கதாகச் சொன்ன பூமாவென்பது ப்ரஹ்மமே யாகவேண்டும் என்று நிரஸநம் செய்கிறார். எஉ.

(ஶா-ஹா.) "இந்த அதிகரணத்திற்கு, "யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ பூமா" என்கிறது விஷயவாக்யம்,—இதில், 'பூமா'-நிரதிசய ஸுகஸ்வரூபி என்று சொல்லப்பட்டவன் ஜீவனா, பரமாத்மாவா என்று ஸம்சயம். ஆத்மோபதேசம்பண்ணுகிற இவ்விடத்தில் நாமாதியாக மேல்மேல் சொல்லிக்கொண்டுபோய் இந்த உபதேசத்தை ஜீவனிடத்தில் ஸமாப்தி செய்தபடியால், "அவன் நிரதிசய ஸுகஸ்வரூபி" என்று சொல்லப்பட்டவன் ஜீவனேயாகவேண்டும் என்று பூர்வபக்ஷம்.—"ஏஷ து வா அதிவததி யஸ்ஸத்யேநாதிவததி" தானுபாஸநம் செய்கிற ஸத்ய சப்த வாச்யனை பரமாத்மாவை எவன் ஸ்லாகநம் செய்கிறானோ, ஜீவோபாஸகனைக்காட்டிலும் பிந்நனை இவனே* அதிவாதம் செய்கிறவன் என்று ஜீவோபாஸகனைக் காட்டிலும் பரமாத்மோபாஸகனை பிந்நனாய் உத்தமனாகச்சொல்லி அங்கே ஆத்மோபதேசத்தை ஸமாப்தி செய்திருக்கிறது; இதற்கு முன்பு ஜீவனிடத்தில் ஆத்மோபதேசம் ஸமாப்தியாகவில்லை. ஆகையால் ஸமாப்தியிற்சொன்ன பரமாத்மாவே இங்கு 'ஸ꞉' அவன் என்று சொல்லி 'பூமா' நிரதிசய ஸுகரூபி என்று சொல்லிற்று ஆகையால் இப்படி இங்கு சொல்லப்பட்டவன் பரமாத்மா என்று ஸித்தாந்தம். எஉ.

ஸூ. எ௩. தர்மோபபத்தேஶ்ச.

(ஶா-வ்ய-ஹா.) தர்மோபபத்தேஶ்ச-மேற்சொல்லிய குணங்கள் பரமாத்மாவினிடத்திலேயே அந்வயிக்கையாலும், (இவன் பரமாத்மா). எ௩.

(ம-ஶா-ஹா.)இப்ப்ரகரணத்தில் பூமாவுக்குச் சொல்லிய தர்மங்கள் ப்ரஹ்மத்திற்கேயுள்ளன. அவையாவன,—அழிவற்றிருக்கை, தன் மஹிமையினால்தான் விளங்குகை, எங்கும் பரந்திருக்கை முதலியவை. இவை மற்றொன்றுக் கொவ்வாமையால் இந்த பூமாப்ரஹ்மமே. மேலும் பேதவாஸனையும் அதற்கடியான அவித்யையும் நசித்து பிறகு நிர்குண ப்ரஹ்மத்தில் லயிக்கிறவன் ப்ரஹ்மஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறான ஜகத்தைப் பார்க்கமாட்டானாகையால் 'யத்ர நாந்யத்பஶ்யதி' என்கிற வாக்யமும் நிர்குண ப்ரஹ்ம பரமாயேயிருக்கிறதென்றுஸித்தாந்தம். எ௩.

அதி-௨௦-ஸூ-எ௪. அக்ஷரமம்பராந்தத்ருதே꞉

(ம-வ்ய.) அம்பராந்தத்ருதே꞉ - ஆகாசம் வரையிலுள்ள ஜகத்தைதரிக்கையாலே, அக்ஷரம்-அக்ஷரமென்று சொல்லப்பட்டதுபரப்ரஹ்மம். எ௪.

(ஶா - வ்ய.) அம்பராந்தத்ருதே꞉-ஆகாசத்துக்குக்காரணமாகிய மூல

* அதிவாதம் செய்கையாவது - தான் உபாஸநம்செய்யும் தேவதையைப்புகழுகை.

ப்ரக்ருதியை தரிக்கையாலே, அக்ஷரம் - அக்ஷரம் என்று சொல்லப்பட்டவன், (பரமாத்மா). ௭௪.

(ஸு-ஹா.) "ஏதத்வை தத³க்ஷரம் கா³ர்கி³ ப்³ராஹ்மணா அபி⁴வத³ந்தி" என்கிற வாக்யத்தில், பூமிக்காதாரம் ஜலம், ஜலத்திற்காதாரம் அக்நி; அக்நிக்காதாரம் வாயு, வாயுவுக்காதாரம் ஆகாசம், ஆகாசத்திற்காதாரமெது என்று கேட்டவனுக்கு அதற்கு ஆதாரம் இந்த அக்ஷரம் என்று சொல்லப்பட்டது. அக்ஷரமென்றால் எழுத்துக்கும் ப்ரஹ்மத்திற்கும் பெயர். இங்கு எதைச்சொல்லலாமெனில், அக்ஷரமென்பது எழுத்துக்குப் பெயராகவே உலகினில் அதிகமாய் வழங்கிவருகையாலும், 'ஓங்கார ஏவேத³ம் ஸர்வம்' என்று ஓம் என்கிற ப்ரணவரூபமான எழுத்தே இந்த ஜகத்து என்று ஓம் என்கிற எழுத்தை ஸகல ஜகத்துக்கும் ஆதாரமாய் மோக்ஷார்த்திகளால் உபாஸநம் செய்யத்தக்கதாகச் சொல்லுகையால் ஓம்என்கிற எழுத்தை இங்கு ஸகல ஜகத்துக்கு மாதாரமாகச்சொல்லிற்று என்கிற சங்கையை,—எழுத்து ஜகத்துக்கு ஆதாரமென்பது ஸம்பவியாது. கீழ் உதஹரித்த வசனமும், ஓம் என்பது ப்ரஹ்மத்திற்கு வாசகமாகையால் அவ்வெழுத்தினால் ப்ரஹ்மத்தைச்சொல்லி அந்த ப்ரஹ்மமே ஸகல ஜகத்துக்கும் ஆதாரமென்று அர்த்தமுள்ளதாயிருக்கும், ப்ரணவத்தைத் துதிக்கைக்காகவும் அப்படி சொல்லலாம். வேதங்களிலும் அநேக இடங்களில் அக்ஷரமென்பது ப்ரஹ்மத்தைச் சொல்வதாக ப்ரஸித்தியுண்டு. ஆகையால் இங்குள்ள அக்ஷர பதத்திற்கு எழுத்து அர்த்தமல்ல, ப்ரஹ்மமே அர்த்தமென்று நிரஸநம் செய்கிறார். ௭௪.

(ரா-ஹா.) "ஏதத்வை தத³க்ஷரம் கா³ர்கி³" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—இங்கு அக்ஷரமென்று சொல்லப்பட்டவன் ஜீவனா, மூலப்ரக்ருதியா, பரமாத்மாவா என்று ஸம்சயம்.— "கஸ்மிந்நு க²ல்வாகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்ச" என்று ஆகாசத்திற்கு ஆதாரம் எது என்று கேட்டதற்கு இந்த வாக்யம் உத்தரமாகையாலே ஆகாசத்திற்கு ஆதாரமாகச் சொல்லப்பட்டது அதற்குக் காரணமாகிய மூலப்ரக்ருதியே யாகவேண்டும். ஜீவனும் ப்ருதிவ்யாத்ய சேதந வஸ்துவுக்கு ஆதாரமாகையால் ஆகாசத்திற்கு ஆதாரமாகச் சொல்லப்பட்டவன் ஜீவனுமாகலாம். பரமாத்மாவுக்கு அசித்ஸம்பந்தமில்லாமையால் இவன் பரமாத்மாவன்று என்று பூர்வபக்ஷம்.—த்ரிகாலவர்த்தியாகிய ஸகல வஸ்துக்களுக்கும் ஆதாரமாகிய ஆகாசத்திற்கு ஆதாரம் எது என்கிற ப்ரச்நவாக்யத்தில், இந்த பூதாகாசம் அந்த ஸகலவஸ்துக்களுக்கும் ஆதாரமல்லாமையால் அப்படிப்பட்ட மூலப்ரக்ருதியே ஆகாசம் என்று சொல்லப்பட்டது—அதற்கு ஜீவனும் மூலப்ரக்ருதியும் ஆதாரமல்லாமையால் இங்கு மூலப்ரக்ருதியாகிய ஆகாசத்திற்கு ஆதாரமாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மா என்று ஸித்தாந்தம். ௭௪.

ஸூ. ௭௫. ஸா ச ப்ரஶாஸநாத்.

(ஸு-ரா-வ்யா.) ஸா ச-அந்த தரிக்கையும், ப்ரஶாஸநாத்-ப்ரக்ருஷ்டமான (அப்ரதிஹதமான) ஆஜ்ஞையினாலே, (என்று சொல்லுகையாலே இவன் பரமாத்மா). ௭௫.

(ஸு-ஹா.) பூமிக்காதாரம் ஜலம் என்கிற வரிசையில் அவ்வவ வஸ்துக்களுக்கு ஆதாரம் அவற்றுக்குக் காரணமாகிய தத்வம் என்று சொல்லிக்கொண்டுவந்து ஆகாசத்திற்கு அக்ஷரம் ஆதாரமென்றால் ஆகாசத்திற்குக் காரணமாகிய மூலப்ரக்ருதி

யே அக்ஷரபதத்திற்கு அர்த்தமாகு மல்லது ப்ரஹ்ம மர்த்தமாகாதென்கிற சங்கையை,—“ 𑌏𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑍇 ” என்கிற மேல்வாக்யத்தில் இந்த அக்ஷரத்தினுடைய ஆஜ்ஞையினால் ஸூரியசந்திரர்கள் அந்தரத்தில் நிற்கிறார்கள் என்று சொல்லுகையால், ஆஜ்ஞையிடுவது அசேதநமாகிய மூலப்ரக்ருதிக்குக் கூடாமையால் அது இங்கு அர்த்தமன்று என்று பரிஹரிக்கிறார். ௭௫.

(பா-ஹா.) “𑌏𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑍌 𑌵𑌿𑌧𑍃𑌤𑍌 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌃” இந்த அக்ஷரத்தினுடைய ஆஜ்ஞையிலே ஸூர்ய சந்த்ரர்களும் மற்றும் ஸமஸ்தவஸ்துக்களும் தரிக்கப்பட்டிருக்கின்றன என்று ஸமஸ்த வஸ்துக்களையும் தன்னுடைய ஆஜ்ஞையினால் தரிக்கிறானென்று சொல்லுகையாலே இந்த அக்ஷரன் பரமாத்மா. ௭௫.

ஸூ. ௭௬. 𑌅𑌨𑍍𑌯𑌭𑌾𑌵𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚.

(ஸூ-பா-வ்யா.) 𑌅𑌨𑍍𑌯𑌭𑌾𑌵𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃𑌚 - வேறொன்றாயிருக்கையைத்தவிர்க்கையாலேயும், (இவன் பரமாத்மா). ௭௬.

(ஸூ-ஹா) அந்யபாவமாவது-அசேதநமாயிருக்கை. அதைஶ்ருதி தவிர்க்கிறதென்று சப்தார்த்தம். இந்த அக்ஷரத்தை, ‘𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃 𑌅𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃’ இத்யாதி வாக்யங்களாலே பார்க்கிறதில்லை, பார்க்கிறது, கேட்கிறதில்லை, கேட்கிறது என்று சொல்லிற்று. மூலப்ரக்ருதிக்கு பார்க்கிறதில்லையென்பது சேர்ந்தாலும் அசேதநமாகிய அதற்குப்பார்க்கிறதென்பது சேராது. ஜீவனைச்சொல்லுவோமென்றால் இந்த அக்ஷரம் “𑌅𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍍𑌕𑌮𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑍍” கண் காது முதலிய இந்த்ரியங்களில்லாததென்கையாலே ஜீவனுமர்த்தமாகக்கூடாது. உபாதியுள்ள ஜீவனுக்கு இந்த்ரியங்களுள்ளது. உபாதியற்ற ஜீவனுக்கவையில்லாமையால் அவனைச்சொல்லலாமென்றால், உபாதியற்றவன் ஜீவனென்கிற பெயரை யுடையவனாகான். அந்த ஸ்வரூபம் நிர்குண ப்ரஹ்மஸ்வரூபம் ஆகையால் அதையே இங்கு அக்ஷரமென்று சொல்லிற்றென்று ஸித்தாந்தம். ௭௬.

(பா-ஹா.) வாக்யசேஷத்தில் “𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃” என்று இந்த அக்ஷரம் ஒருவனுடைய கண்ணுக்கு விஷயமன்று. இது எல்லாவற்றையும் பார்க்கிறது என்று சொல்லுகையால் இக்குணங்கள் ஜீவனுக்கும் ப்ரக்ருதிக்கும் இல்லாமையால் இவன் பரமாத்மா. ௭௬.

கூயி-௨௧-ஸூ-௭௭. 𑌈𑌕𑍍𑌷𑌤𑌿𑌕𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍𑌸𑌃.

(ஸூ-வ்யா.) 𑌈𑌕𑍍𑌷𑌤𑌿𑌕𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍-தர்சநத்திற்கு விஷயமாகச் சொல்லுகையால். 𑌸𑌃 - (𑌯𑌃𑌪𑍁𑌨𑌃 என்கிற வாக்யத்திற் சொல்லப்பட்டவன்) பரமேஶ்வரன். ௭௭.

(பா-வ்யா.) 𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍 - (பரமாத்மாஸாதாரண தர்மங்களைச்) சொல்லுகையாலே, 𑌈𑌕𑍍𑌷𑌤𑌿𑌕𑌰𑍍𑌮 - ‘𑌪𑍁𑌰𑌿𑌶𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇’ என்கிற விடத்திலில் தர்சநத்துக்கு விஷயமாகச் சொல்லப்பட்டவன், 𑌸𑌃 - அந்த பரமாத்மா. ௭௭.

(ஸூ-ஹா.) “𑌯𑌃𑌪𑍁𑌨𑌰𑍇𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣𑍋𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑍇𑌨𑍈𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑍇𑌣 𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑍀𑌤” எவனொருவன் இந்த பரமபுருஷனை மூன்று மாத்ரையுள்ள ஓம் என்கிற ப்ரணவத்தை அவலம்பித்துக்கொண்டு உபாஸ

நம் செய்கிருனே என்று இவ்வாக்யத்திற்கு அர்த்தம்.—இதற்கு முன் வாக்யத்தில் ஸத்யகாமனென்பவனைக்குறித்து பிப்பலாதனென்கிற ருஷிசொன்னதாவது—“ஸா த்வைஷ த்ர்யக்ஷரோ வாஸ்மா வ ப்ரஹ்மயோநிர்ஜ்ஞாநம்” என்று மூர்த்தியில் விஷ்ணு ஸ்வரூபத்தை த்யாநிப்பதுபோல் ஓங்காரத்தில் பரமான நிர்குண ப்ரஹ்மத்தையாவது, அபரமான ஸகுண ப்ரஹ்மத்தையாவது த்யாநிக்கலாம், நிர்குணத்தை த்யாநித்தவன் நிர்குணப்ரஹ்மத்தை யடைகிருன். ஸகுணப்ரஹ்மத்தைத் த்யாநித்தவன்ஸகுணப்ரஹ்மத்தை யடைகிருன் என்று ஸகுணப்ரஹ்மோபாஸநமும் நிர்குண ப்ரஹ்மோபாஸநமும் சொல்லிற்று. “யஃபுநஃ” என்கிற வாக்யத்தில் ஸகுணமென்றும் நிர்குணமென்றும் சொல்லாமல் பொதுவாக பரமபுருஷனை உபாஸநம் செய்யவேண்டுமென்று சொல்லிற்று. ஆகையால் இவ்வாக்யம் எந்த ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்யச்சொன்னதாக நிஸ்சயிக்கலாமென்னில், இதற்கு மேல்வாக்யத்தில் 'இந்த உபாஸநத்திற்கு பலமாக, “ஸ தேஜஸி ஸூர்யே ஸம்பந்நஃ” இத்யாதியினுல், இப்படி உபாஸநம் செய்தவன் ஸூர்யனிடம் சென்று அவ்வழியாய் ப்ரஹ்மலோகத்திற்குப்போய் அங்கு பரமாத்மாவைப் பார்க்கிருனென்று சொல்லிற்று. ஸகுணப்ரஹ்மத்தை உபாஸநம் செய்தவன்தான் வைகுண்டமென்கிற லோகத்தை யடைந்து ப்ரஹ்மாநுபவம் செய்வான். நிர்குண ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்தவன் இங்கிருந்தே நிர்குணப்ரஹ்மத்தை யநுபவிப்பான். இங்குசொன்ன உபாஸநத்திற்கு பலமாக ஒருலோகத்திற்சென்று செய்யவேண்டும் ப்ரஹ்மாநுபவத்தைச் சொல்லுகையால் இங்கு ஸகுணப்ரஹ்மோபாஸநமே யாகவேண்டும் என்கிற சங்கையை, இவ்வாக்யத்திற் சொல்லிய அர்த்தத்தை விவரித்துச் சொல்லுகிற வாக்யசேஷத்தில் “பராத்பரம் புரிஸயம் புருஷமீக்ஷதே” என்று இப்படி உபாஸநம்செய்தவன் பரமோத்தமனுன புருஷனைப்பார்க்கிருனென்று சொல்லிற்று. ஒருவிதமான வஸ்துவை மற்றொருவிதமாக த்யாநம் செய்யலா மல்லது ஒன்றை மற்றொன்ருகப் பார்ப்பது அஸம்பவம். புற்றினருகில் கிடந்த கயிற்றைப் பாம்பாகப்பார்ப்பது ப்ராந்தியாகுமல்லது உண்மையான பார்வையன்று, கயிறென்று பார்ப்பதே உண்மையானபார்வை. இங்கு நிர்குண ப்ரஹ்மத்தைப் பார்க்கிருனென்று சொல்லிற்று. அது நிர்குணப்ரஹ்மோபாஸநத்திற்கே பலமாகையால் இவ்வாக்யத்தில் சொல்லப்பட்டது நிர்குணேபாஸநமேயென்று பரிஹரிக்கிருர். ௭௭.

(பா-ஷா.) “யஃபுநரேதம் த்ரிமாத்ரேணோமித்யநேநைவாக்ஷரேண பரம்புருஷமபித்யாயீத” எந்த புருஷன் மூன்று மாத்ரையை யுடைய ஓம் என்கிற அக்ஷரமாகிய ப்ரணவத்தினுல் இந்த பரமபுருஷனை உபாஸநம் செய்கிருனே, என்றுதொடங்கி, 'பராத்பரம் புரிஸயம் புருஷமீக்ஷதே' பராத்பரனுன புருஷனை ஸாக்ஷாத்கரிக்கிருன் என்கிற விடத்தில், சதுர்முக ப்ரஹ்மாவா,பரமாத்மாவா ஸாக்ஷாத்காரத்துக்கு விஷயமாகச் சொல்லப்பட்டவன் என்று ஸம்சயம்.—ஒரு மாத்ரையையுடைய ப்ரணவத்தை உபாஸித்தவனுக்கு மனுஷ்ய லோக முண்டென்றும், இரண்டுமாத்ரையை யுடைய ப்ரணவத்தை உபாஸித்தவனுக்கு அந்தரிக்ஷலோக முண்டென்றும் சொல்லி மூன்று மாத்ரையையுடைய ப்ரணவத்தை உபாஸித்தவனுக்கு ப்ரஹ்மலோகத்திலிருக்கிற புருஷதர்சநம் உண்டாகுமென்று சொல்லுகையாலே, அந்தரிக்ஷலோகத்திற்கு மேல்பாகத்திலுள்ள ப்ரஹ்மலோகத்திலிருக்கிற சதுர்முகப்ரஹ்மாவே இங்கு ஸாக்ஷாத்கார விஷயமாகச் சொல்லப்பட்டான் என்று பூர்வபக்ஷம்.—ஸாக்ஷாத்காரவிஷயமாகச்சொல்லப்பட்ட புருஷனுடைய மஹிமையைச் சொல்லுகிற மேல்வாக்யத்தில் “ஸாமபிருந்நீயதே ப்ரஹ்மலோகம்”

என்று காமக்ரோதாதிகளில்லாதவன், ஜந்மாஜ்ஞாதி விகாரமில்லாதவன், பரமபோக்ய பூதன் என்று சொல்லுகையாலே ஸ்வதஸ்ஸித்தமாகிய இக்குணங்கள் சதுர்முக ப்ரஹ்மாவுக்குக் கூடாமையால் இவன் பரமாத்மா. இவனுக்கு வாஸஸ்த்தாநமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மலோகம் த்ரிபாத்விபூதியான பரமபதம் என்று ஸித்தாந்தம்.

கய-உஉ-ஸூ-எஅ. ஐஹர உத்தரேஹ்ய:

(ஶ்ரு-ப்ர-வ்யா.) உத்தரேஹ்ய: - உத்தரவாக்யத்திற் சொல்லிய பரமாத்மாவின் அஸாதாரண குணங்களாலே, ஐஹர:-தகராகாசமென்று சொல்லப்பட்டவன், (பரமாத்மா என்று நிஸ்சயிக்கவேண்டும்.) எஅ.

(ஶ்ரு-ஸா.) "அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேஶ்ம தஹரோஸ்மிந்நந்தர ஆகாஶ:" ப்ரஹ்மபுரமென்று சரீரத்திற்குப்பேர். இந்த சரீரத்தில் சிறிதாகிய ஹ்ருதயகமலமுண்டு; அதில் சிறிய ஆகாசமுண்டு, அதைத் தேடவேண்டும் என்று இதற்கு அர்த்தம்.—இங்கு ஆகாசமென்று, ஐம்பூதங்களிற்சேர்ந்த ஆகாசத்தையா, ஜீவனையா, அல்லது ப்ரஹ்மத்தையா சொல்லுகிறது; எதைச் சொன்னால் யுக்தமாயிருக்குமென்னில்,—ஆகாசமென்று ஐம்பூதங்களில் சேர்ந்த ஆகாசத்திற்கே பெயராக உலகத்தில் வழங்குகையால் அதைச்சொல்லுவது யுக்தம்; அல்லது,—ப்ரஹ்மமென்றால் ஜீவன், அவன் வாஸம் செய்யுமூர், அதாவது இடம். ஆகையால் சரீரத்திற்கு ப்ரஹ்மபுரமென்று பெயர். ஜீவனாவது - மனஸ்ஸு என்கிற உபாதியினால் மூடப்பட்ட ப்ரஹ்மத்தினுடைய ஒருபாகம். அந்த ஜீவன் முக்கியமாய் ஹ்ருதயத்திலேயிருக்குமாகையால்,சிறிய ஆகாசம்போல் சிறியனாயிருக்கிற ஜீவனையே இவ்வாக்யத்தில் ஹ்ருதயத்திலுள்ள தகராகாசமென்று சிறிய ஆகாசமாகச் சொல்லிற்றாகலாமென்பதும் யுக்தமே என்கிற சங்கையை,-ஐம்பூதங்களிலொன்றான ஆகாசத்தைச் சொல்வது அயுக்தம். ஏனென்றால், மேல் இவ்வாகாசம் ஆகாசம் போன்றதென்று சொல்லுகிற வாக்யம் அர்த்தமற்றதாயிருக்கும். மநுஷ்யன் மனுஷ்யன் போன்றவன், எருது எருது போன்றது என்று த்ருஷ்டாந்தம் சொல்வது கிடையாது. இந்த புருஷன் மந்மதன் போன்றவன் என்று ஒன்றுக்கு மற்றொன்றையே உபமானமாகச் சொல்வது ப்ரஸித்தம். இவ்வாகாசம் ஐம்பூதங்களிலொன்றான ஆகாசம் போன்றதென்றால், இவ்வாகாசம் ஐம்பூதங்களிலொன்றான ஆகாசமாகக்கூடாது, வேறொரு வஸ்துவாகவே யாகவேண்டு மாகையால் இது பூதாகாசமன்று. மேல் வாக்யங்களில் இந்த தகராகாசத்தை ஸகல லோகங்களுக்கும் ஆதாரமாகவும் அபஹத பாப்மத்வம் முதலிய குணங்களையுடையதாகவும் சொல்லுகையால் பரமாத்மாவுக்கே உள்ள இவை ஜீவனுக்கும் கிடையாதாகையால் இவ்வாகாச பதத்தினால் ஜீவனைச் சொல்லுவதும் யுக்தமன்று. ஆகாசம் அளவிட வொண்ணாதாகிலும் கடாகாசம் மடாகாசம் என்று சிறிதாய் அளவிட்டுக் காணும்படியு மிருப்பதுபோல் ஸகுண ப்ரஹ்மஸ்வரூபம், பக்திசெய்யு மவனுடைய ஹ்ருதயத்தில் சிறியவடிவுடன் இருக்குமாகையால் மேல் கூறப்படும் குணங்களையுடைய ஸகுண ப்ரஹ்மமே இங்கு சொல்லப்பட்டது. இதை உபாஸநம் செய்து இவ்வழியாய் நிர்குணப்ரஹ்மத்தையடையக் கடவனென்று இவ்வாக்யத்திற்குத் தாத்பர்யமென்று பரிஹரிக்கிறார். எஅ.

(ரா-ஸா.) "அத யதிதமஸ்மிந்" இத்யாதி "தஹரோஸ்மிந்நந்தர ஆகாஶஸ்தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம்" என்கிறது இந்த அதிகரணத்திற்கு விஷயவாக்யம்.—இவ்வாக்யத்தில், ஹ்ருதயபுண்டரீக மத்யவர்த்தியாக தகராகாசசப்தத்தினாற் சொல்லப்பட்டவன் ஜீவனா, பூதாகாசமா, பரமாத்மாவா

என்று ஸம்சயம். ஆகாசமென்கிற பதம் பூதாகாசத்தில் அதிகமாக வழங்குகிறபடியால் அதுவே இங்கு சொல்லப்பட்டது. மேல் இந்த தகராகாசத்திற்கு அபஹதபாப்மத்வாதி குணங்கள் சொல்லுகையால் அக்குணங்கள் பூதாகாசத்திற்குக் கூடாமையால் பூதாகாசமாகாது, ஆயினும், அக்குணங்கள் ஜீவனுக்கு ப்ரஜாபதி வாக்யத்தில் சொல்லப்பட்டன ஆகையால் அந்த ஜீவனே அக்குணங்களையுடையவனாக இங்கு தகராகாசமென்று சொல்லப்பட்டவன் என்று பூர்வபக்ஷம்.—ப்ரஜாபதி வாக்யத்தில் முன் அநாதிமாயையினால் மூடப்பட்டு பரமாத்மாவை யடைந்தபின் அபிவ்யக்தமான அபஹதபாப்மத்வாதி குணங்களையுடைய ஜீவன் சொல்லப்பட்டான். இவ்வாக்யம் மேலே, ஸர்வதா பரஸமாநமான அபஹதபாப்மத்வாதிகுணங்கள் தகராகாசத்திற்குச் சொல்லியிருக்கிறது. ஆகையால் ப்ரஜாபதி வாக்யத்திற் சொல்லப்பட்ட ஜீவனைக் காட்டிலும் பிந்நனுகிய பரமாத்மாவே தகராகாசசப்தத்திற்கு அர்த்தமென்று ஸித்தாந்தம். எ௮.

ஸூ. எகூ. கதிஶப்தாப்⁴யாம் ததா² ஹி த்³ருʼஷ்டம் லிங்க³ம் ச.

(ஶ-வ்ரு.) கதிஶப்தாப்⁴யாம் - (உறங்கும்போது ஜீவர்களுடைய கமநத்தினுலும் ப்ரஹ்மசப்தத்தினுலும், (இந்தஆகாசம் பரப்ரஹ்மம்) ததா² ஹி. அப்படி ப்ரஹ்மத்தினிடத்தில் ஜீவனுறங்கும்போது சேருகை, த்³ருʼஷ்டம் லோகத்தில் காணப்பட்டது. லிங்க³ம் ச. (ப்ரஹ்மலோகமென்கிறபதத்திற்கு ப்ரஹ்மமாகிய லோகமென்று அர்த்தம் சொல்லுகைக்கு இதுவே) ஹேது.

(ரா - வ்ரு.) கதிஶப்தாப்⁴யாம். (ஜீவர்களுடைய) கமநத்தினுலும் (ப்ரஹ்ம) சப்தத்தினுலும், (தஹராகாசம் பரமாத்மாவென்று நிஶ்சயிக்கப்படுகிறது). ததா² ஹி - அப்படியே ஜீவர்களுக்குப் பரமாத்மாவிடத்தில் கமநம், த்³ருʼஷ்டம் - காணப்பட்டிருக்கிறது. லிங்க³ம் ச - (இவ்வாக்யத்தில் சொல்லியிருக்கிற கமநமே தஹராகாசம் பரமாத்மா வென்பதற்கு) ஹேது வாகிறது. எகூ.

(ஶ.பா.) “இமா: ஸர்வா: ப்ரஜா அஹரஹர்க³ச்ச²ந்த்ய ஏதம் ப்³ரஹ்மலோகம் ந விந்த³ந்தி” என்று தினந்தோறு முறங்கும்போது ஜீவர்கள் தஹராகாசமென்று சொல்லப்பட்ட இந்த ப்ரஹ்மலோகமென்கிற ப்ரஹ்மஸ்வரூபத்தை யடைகிறார்கள் என்று சொல்லிற்று. லோகத்தில், “இவனுறங்கும்போது ப்ரஹ்மமாய்விட்டனன் என்று ப்ரஹ்மத்தில் சேர்ந்ததாகச்சொல்லுகிறார்களல்லது ஆகாசத்தில் சேர்ந்ததாகச் சொல்லுகிறதில்லை. உலகமொழியிருக்க வேதத்திலும் மற்ற அனேக இடங்களில் உறக்கத்தில் ஜீவன் ப்ரஹ்மத்தில் லயிக்கிறதாகவே சொல்லியிருக்கிறது. இப்படி லோகவேத ப்ரமாணங்களினுலும், இவ்வாகாசத்தை ப்ரஹ்மலோகமென்று ப்ரஹ்மமாகச் சொல்லுகையாலும் இந்ததஹராகாசம் ப்ரஹ்மமேயாகவேண்டும். ப்ரஹ்மலோகமென்றால் சதுர்முகப்ரஹ்மாவினுடைய லோகமென்று அர்த்தம் சொல்லாமல் ப்ரஹ்மஸ்வரூபமென்று அர்த்தம் சொல்லுகைக்குக் காரணமென்னென்னில், இந்த ப்ரஹ்மலோகத்தை ஜீவர்கள் உறக்கத்தில் அடைகிறதாகச் சொல்லுகையால், இப்படி அடைவது பரப்ரஹ்மஸ்வரூபத்தையே அடைவதாக மற்ற ப்ரமாணங்கள் சொல்லுகையால் இதற்கு இதுவே அர்த்தமாகக்கடவது. எகூ.

(ரா-பா.) உள்ளிருக்கிற பணத்தை யறியாமலே அந்த பூமிமேல் ஜநங்கள் ஸஞ்சரிப்பதுபோல் தினந்தோறும் ஸுஷுப்தி காலத்தில் பரமாத்மாவை அடைந்

தம் நான் பரமாத்மாவை அடைந்தேனென்று ஜநங்களறிகிறதில்லை என்றுப்ரகரணாந்தரங்களில் ஸுஷுப்திகாலத்தில் ஜீவன்கள் பரமாத்மாவை அடைகிறார்களென்று சொல்லுகையாலே ஸுஷுப்திகாலத்தில் ஜீவர்களா லடையப்பட்டவன் பரமாத்மாவாகிறான். இப்ப்ரகரணத்தில் தகராகாசத்தை ஸுஷுப்திகாலத்தில் ஜீவர்கள் அடைகிறார்கள் என்று சொல்லியிருக்கையாலே இந்த தகராகாசம் பரமாத்மா என்னக் குறையில்லை. மேலும் இந்த தகராகாசத்தை ப்ரஹ்மலோகமென்று சொல்லியிருக்கிறது. ப்ராஹ்மலோக மாகிறது. ப்ரஹ்மமாகிய லோகம் ப்ரஹ்மமென் றர்த்தம். இந்த விசேஷணத்தினாலும் தகராகாசம் பரமாத்மாவென்று நிஶ்சயிக்கப்படும். ௭௯

ஸூ. ௮௦. 𑌧𑍃𑌤𑍇𑌶𑍍𑌚 𑌮𑌹𑌿𑌮𑍍𑌨𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃.

(ஶ்ரு.ப்ர.) 𑌅𑌸𑍍𑌯 - இந்த, 𑌧𑍃𑌤𑍇𑌃- தரிக்கையாகிய, 𑌮𑌹𑌿𑌮𑍍𑌨𑌃-மாஹாத்ம்யத்திற்கு, 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - இந்த தகராகாசமாகிய பரப்ரஹ்மஸ்வரூபத்தில். 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 - காண்கையுண்டாகையால், (இது ப்ரஹ்மம்.) ௮௦.

(ரா-ப்ர.) 𑌅𑌸𑍍𑌯-இந்த பரமாத்மாவினுடைய, 𑌧𑍃𑌤𑍇𑌃 - ஜகத்தை தரிக்கையாகிற, 𑌮𑌹𑌿𑌮𑍍𑌨𑌃 - மாஹாத்ம்யத்துக்கு, 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - இந்ததகராகாசத்தில், 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌶𑍍𑌚 - உபலப்தியிருக்கையாலும்,(தகராகாசம் பரமாத்மா).

(ஶ்ரு-ஸா.) "𑌏𑌷 𑌸𑍇𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑍃𑌤𑌿𑌰𑍇𑌷𑌾𑌂𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑌸𑌂𑌭𑍇𑌦𑌾𑌯" என்ற, உலகத்தில் பயிர் முதலியவற்றில் வெள்ளம்வழிந்து அவையழிந்து போகாமற்படி அணையானது ஜலத்தைத்தடுத்து நிறுத்துவதுபோல், இந்த தகராகாசமாகிய பரமாத்மாவானவன் வர்ணாஶ்ரமாதி தர்மங்கள் ஒன்றுக்கொன்று கலந்து போகாமற்படி காக்கிறானென்கிற இம்மஹிமை மற்றொன்றுக் கொவ்வா தாகையால் இது பரமாத்மஸ்வரூப மெனப்படும். ௮௦.

(ரா-ஹா.) ப்ரகரணாந்தரங்களில் பரமாத்மாவே இந்த ஜகத்தை தரிக்கிறானென்று சொல்லுகிறது. இங்கு தகராகாசம் ஜகத்தை தரிக்கிறதென்று சொல்லியிருக்கையாலே இந்த தகராகாசம் பரமாத்மாவென்று நிஶ்சயிக்கப்படும். ௮௦.

ஸூ. ௮௧. 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌶𑍍𑌚.

(ஶ்ரு-ரா-ப்ர.) 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌶𑍍𑌚-ஆகாச சப்தத்திற்குப்பரமாத்மாவினிடத்திலும் ப்ரஸித்தியிருக்கையாலும், (தகராகாசம் பரமாத்மா). ௮௧

(ஶ்ரு-ஹா.) ஆகாசமென்று ஐம்பூதங்களிலொன்றான ஆகாசத்திற்கே பெயராயிருக்குமென்கிற நியமமில்லை. "𑌆𑌕𑌾𑌶𑍋 𑌹 𑌵𑍈 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌹𑌿𑌤𑌾" என்று நாமரூபங்களைப்படைத்த பரமாத்மாவை வேதத்தில் ஆகாசமென்று சொல்லுகையால் அவனுக்கும் ஆகாசமென்று பெயருண்டு. ௮௧.

(ரா-ஹா.) '𑌆𑌕𑌾𑌶 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍' இத்யாதியாகப் பலவிடங்களில் ஆகாசபதம் பரமாத்ம வாசகமாக ப்ரயோகித்திருக்கிறது. ஆகையால் ஆகாசமென்று பரமாத்மாவுக்கும் பேருண்டு. ஆனால் பரமாத்மாவையும் பூதாகாசத்தையும் இரண்டையும் சொல்லுகிற ஆகாசபதம் இங்கு யாரைச்சொல்வதாக நிஶ்சயிக்கவேண்டுமென்னில், இங்கு தகராகாசத்திற்குப் பரமாத்மகுணங்கள் விசேஷித்துச்சொல்லியிருக்கையாலே பரமாத்மாவையே சொல்வதாக நிச்சயிக்கவேண்டும். ௮௧.

ஸூ. ௮௨. 𑌇𑌤𑌰𑌪𑌰𑌾𑌮𑌰𑍍𑌶𑌾𑌤𑍍𑌸 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍𑌨𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍.

(ஸு-பா-வ்.) உத்தராத்-பரமாத்மாவைக்காட்டிலும் பின்னனா ஜீவனையும் (இப்ப்ரகரணத்தில்) சொல்லுகையாலே, ஸ:-அந்தஜீவன், (தஹராகாசபதத்திற்கு அர்த்தம்,) இதிசேத்-என்றால், அஸம்பவாத்-இவனுக்குச் சொல்லப்பட்ட குணங்கள் ஜீவனுக்கு ஸம்பவியாதாகையால், ந-ஜீவன் தஹராகாசமன்று. ௮௨.

(ஸு-ஹா) இப்ப்ரகரணத்தில் "யஷஸம்ப்ரஸாதஃ" என்று ஜீவனையும் சொல்லுகையாலே தஹராகாச சப்தத்திற்கு ஜீவனை அர்த்தமாகச்சொல்லாமல் பரப்ரஹ்மத்தையே சொல்லுவானேனென்னில், லோகங்களுக்கு ஆதாரமாகை முதலிய குணங்கள் ஜீவனுக்குக் கிடையாமையால் அவனிங்கு அர்த்தமாகமாட்டான் ()

(பா-ஹா.) இவ்வாக்யத்தில் ஜீவனை ப்ரஸ்தாவித்திருக்கிறபடியால் அவனே தகராகாசத்திற்கு அர்த்தமாகலாமென்கிற சங்கை வேண்டாம். ஏனென்றால்,—இந்த தஹராகாசத்திற்குச் சொல்லிய அபஹதபாப்மத்வாதி குணங்கள் பரமாத்மாவுக்கே உள்ளதொழிய ஜீவனுக்கு ஸம்பவியாது. ஆகையால் தஹராகாசம் ஜீவனன்று. ௮௨.

ஸூ. ௮௩. உத்தராச்சேதாவிர்ப்பூதஸ்வரூபஸ்து.

(பா-வ்.) உத்தராத்சேத் - மேல்வாக்யத்தினால் (அபஹதபாப்மத்வாதி குணங்களையுடைய ஜீவன் தோற்றுகிறானென்றால், ஆவிர்ப்பூதஸ்வரூபஃது - அபிவ்யக்தமான ஸ்வரூபத்தையுடைய ஜீவனே அவ்வாக்யத்தில்தோற்றுகிறான். ௮௩.

(ஸு-ஹா.) கீழ்,தஹராகாசபதத்தினால் சொல்லப்பட்டவனை, ஆகாசம்போல் ஸர்வவ்யாபி என்றும் புண்யபாபங்களற்றவனென்றும் சொல்லுகையால் இக்குணங்கள் ஜீவனுக்குக் கிடையாமையால் இப்பதத்திற்குப் பரமாத்மாவே அர்த்தமென்றது. இதில் இக்குணங்கள் ஜீவனுக்கு முண்டாகையால் இப்பதத்திற்கு ஜீவனுமர்த்தமாகலாமென்கிறது.—மேல் ப்ரஹ்மா இந்த்ரனுக்கு உபதேசம் செய்யும்போது ஜீவனை புண்யபாபங்களறுகை முதலிய குணங்களையுடையனாக உபதேசித்தாராகையால் தஹராகாசமென்பவன் ஜீவனாகலாமென்ற பூர்வபக்ஷத்தை,—அவ்வாக்யத்தில் ஜீவன்சொல்லப்படவில்லை, ஆவிர்ப்பூதஸ்வரூபமே, அதாவது - பரமாத்மஸ்வரூபமே சொல்லப்பட்டது. முதல் ஜீவனுடைய ஜாக்ரதவஸ்தையைச்சொல்லி, இந்த விழித்திருக்குந்தசை பலவிதமான ப்ராந்திக்குக் காரணம், ஸ்வப்நதசையில் இந்த்ரியங்கள் வெளியில் போகாமல் ஜீவனுடன் உள்ளுக்குள் மாத்ரம் ஸஞ்சரிக்கையால் இவ்வளவு ப்ராந்தி கிடையாது. சிறிது ப்ராந்தியே யுண்டாகுமாகையால் ஸ்வப்நதசை ஜாக்ரதவஸ்தையைக்காட்டிலும் மேலானதென்று அதை நிரூபித்து, பிறகு உறக்குந்தசையில் ஸகலகரணகளேபராபி மானங்களுமற்று எவ்விதப்ராந்தியுமின்றிகே யிருக்கிறானென்று சொல்லிற்று. அக்காலத்திலுள்ள ஸ்வரூபமே ஆவிர்ப்பூதஸ்வரூபமெனப்படும். அது பரப்ரஹ்மஸ்வரூபம். ப்ரஹ்மஸ்வரூபமே அவித்யை என்கிற உபாதியோடு சேர்ந்திருந்தால் ஜீவனாகிறது; அப்போது ப்ரஹ்மத்துக்குள்ள குணங்கள் ஸம்பவியாது. அந்த ஸ்வரூபமே உபாதியற்றால் ப்ரஹ்மமாகிறது. அக்குணங்கள் அப்போது கூடும், உபாதியினால் நிஜமான குணங்கள் மறைந்து விடுகையும், அதற்றால் பிரகாசிக்கையும் எங்கேகாணலாமென்னில், ஸ்படிக மணி வெளுப்பாயினும் அசோகம்பூ அருகிலிருந்தால் அதின் நிறமாகிய சிவப்பேகாணுமல்லது நிஜமான வெண்மை காணப்படாது. அதுபோல் அவித்யையுள்ளவரையில் ப்ரஹ்மகுணம் காணப்படாது. அது கழிந்த

ஸ்வரூபத்திற்கே அக்குணங்கள் மேல்வாக்யத்தில் சொல்லப்பட்டது ஆகையால் இங்குச்சொல்லப்பட்டவன் ஜீவனுகான். ௮௩.

(ரா-ஹா.) மேல் ப்ரஜாபதி வாக்யத்தில் அபஹதபாப்மத்வாதி குணங்கள் ஜீவனுக்கு முண்டென்று தோற்றுகையாலே அக்குணங்களையுடையதாகச் சொல்லப்பட்ட தஹராகாசமும் ஜீவனே யாகலாமென்று சங்கிக்கவேண்டாம். ஏனென்றால்,— அங்கு ஜீவனுக்குப் புண்யபாபரூப கர்மங்கழிந்தால் பிறகு அபஹதபாப்மத்வாதி குணங்கள் அபிவ்யக்தங்களாகிறதென்று சொல்லிற்று. இங்கு தஹராகாசத்திற்கு இக்குணங்கள் ஸர்வதா அபிவ்யக்தங்களாகச் சொல்லிற்று, ஆகையால் அபஹதபாப்மத்வாதி குணங்களையுடையதாகச் சொல்லப்பட்ட தஹராகாசம் ஜீவனன்று. ௮௩.

ஸூ. ௮௪. அந்யார்த்தஶ்ச பராமர்ஶ:.

(ஸூ-ரா-வ்ரு.) பராமர்ஶ:-இங்கு ஜீவனைச்சொல்லுகிறது, அந்யார்த்தஶ்ச - வேறு ப்ரயோஜநத்தை யுடையது. ௮௪.

(ஸூ-ஹா.) ஆகில் அவ்வாக்யத்தில் "ஸம்ப்ரஸாத:" என்று ஜீவனைச்சொல்லுவானென்னென்னில், எந்த ஜ்யோதிஸ்ஸ்வரூபத்தை யடைந்தால் ஜீவன் தன்னுடைய நிஜஸ்வரூபத்தையடைவனே, அதை இஜ்ஜீவன் பராமர்சிக்கக்கடவன் என்கைக்காகச் சொல்லிற்றல்லது கீழ்ச்சொன்ன அபஹதபாப்மத்வாதி குணங்களையுடையனாகவும் உபாஸ்யனாகவும் சொல்லவில்லை. ௮௪.

(ரா-ஹா.) ஆனால் இப்ப்ரகரணத்தில் ஜீவனைச்சொல்லுவானென்னென்னில், திரோஹித ஸ்வரூபனான ஜீவன் தஹராகாசசப்த வாச்யனான பரமாத்மாவை யடைந்து ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவத்தை யடைகிறான் என்று, தஹராகாசத்திற்கு ஜகதாதாரத்வம்போல் ஜீவஸ்வரூபாவிர்பாவ காரணத்வமுமுண்டென்று சொல்லுகைக்காக இப்ப்ரகரணத்தில் ஜீவனைச்சொல்லிற்று. அவ்வளவு சொன்னமாத்திரத்திலேயே ஜீவனே தஹராகாசமென்று நிஶ்சயிக்கக்கூடாது. ௮௪.

ஸூ. ௮௫. அல்பஶ்ருதேரிதி சேத்ததுக்தம்.

(ஸூ-ரா-வ்ரு.) அல்பஶ்ருதே:-(தஹராகாசம்) அல்பபரிமாண முடையதென்று சொல்லுகையாலே, (அப்பரிமாணமுடைய ஜீவனே யாகவேண்டும்; மஹத்பரிமாணமுடைய பரமாத்மாவாகக்கூடாது), இதி சேத் - என்றால், தத் - இப்பூர்வபக்ஷத்திற்கு உத்தரம், உக்தம் - (மஹத்பரிமாண முடையபரமாத்மாவுக்கும் அல்பபரிமாணம் த்யாநார்த்தமாகச் சொல்லிற்றென்று முன்னமே) சொல்லப்பட்டது. ௮௫.

(ஸூ-ரா-ஹா.) தஹராகாசத்தைச் சிறிதாகச்சொல்லிற்று. ப்ரஹ்மஸ்வரூபமெல்லை கடந்தது ஆகையால் இதஜீவனே யாகவேணுமென்னில்,—மஹத்தான ப்ரஹ்மஸ்வரூபத்தையே த்யாநிக்கைக்காகச் சிறியஅளவுள்ளதாகச்சொல்லிற்று. இது "அர்ப்ப கௌகஸ்த்வாத்" இத்யாதி ஸூத்ரத்தில் விவரிக்கப்பட்டது. ௮௫.

ஸூ. ௮௬. அநுக்ருதேஸ்தஸ்ய ச.

(ரா-வ்ரு-ஹா.) தஸ்ய-அந்த பரமாத்மாவினுடைய, அநுக்ருதே:ச- ஸாம்யத்தையுடைகிறதினால், (ஜீவன் ஆவிர்பூதஸ்வரூபனாய் அபஹதபாப்மத்வாதி குணங்களையுடையவனாகிறான் என்று சொல்லுகையாலே, தஹராகாசத்தோடு ஸாம்யத்தையடைகிற ஜீவன் தஹராகாசமாகமாட்டான்.

(ஶ்ரு-பா.) "ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்" என்று தொடங்கி, "தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" என்கிற வாக்யத்திற்கு; அந்த வஸ்து ப்ரகாசிக்கும்போது ஸூர்யன் சந்திரன் நக்ஷத்திரங்கள் மின்னல் அக்கினி இவைகள் பிரகாசிக்கமாட்டா, அவ்வஸ்துவை யநுஸரித்தே ஸூர்யாதிகள் பிரகாசிக்கின்றன, என்று பூர்வபக்ஷத்தில் அர்த்தம். அந்த வஸ்துவினுடைய பிரகாசத்தினால் ஸூர்யன் முதலிய இஜ்ஜகத்து பிரகாசிக்கிறது. அவ்வஸ்து இல்லாவிடில் இஜ்ஜகத்து பிரகாசிக்கமாட்டாது என்று ஸித்தாந்தத்திலர்த்தம் இவ்வாக்யத்தில் அவ்வஸ்துவென்று சொல்லப்பட்டது, தேஜஸ்ஸா, அல்லது பரப்ரஹ்மமா என்று, இந்த சப்தம் இரண்டுக்கும் பொதுவாயிருக்கையால் உண்டாகும் ஸம்சயத்தில்,—லோகத்தில் தேஜோரூபியான ஸூர்யன் இருந்தால் அதின்முன் மற்றதேஜோரூபியாகிய சந்திரன் நக்ஷத்திரம் மின்மினி முதலிய தேஜோரூபியான வஸ்துக்கள் காணுகிறதில்லையென்பது அநுபவஸித்தமாயிருக்கிறது. ஆகையால் ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸுக்களை மறைக்கத்தக்கவஸ்து தேஜஸ்ஸாகவே யாகவேணும். ஒன்றை ஒன்று அநுஸரிக்கிறதென்றால் அவ்விரண்டு வஸ்துவும். ஒரு ஜாதியாகவே யாகவேண்டு மாகையால் ஸூர்யாதிகளினு லநுஸரிக்கப்படுகிற அவ்வஸ்து ஸூர்யாதிகளைப்போல் தேஜஸ்ஸேயாகவேணும், பரமாத்மா வாகக்கூடாது என்று பூர்வபக்ஷி சொன்னான்.—அது பிரகாசிக்கில் ஜகத்து பிரகாசிக்கும், அதில்லாவிடில் ஜகத்து பிரகாசியாது என்கையால் அப்படிப்பட்ட வஸ்து பரப்ரஹ்மமே யாகவேணும். மேலும் ஒன்றை ஒன்று அநுஸரிக்கும்போது இரண்டும் ஒரு ஜாதியாகவேணுமென்கிற நியமமில்லை. காய்ச்சின இரும்பு அக்கினியைப்போல் பிரகாசிக்கிறது. அவையிரண்டும் ஒரு ஜாதியன்று; வாயுவை தூள் அநுஸரிக்கிறது வாயுவும் தூளும் ஒரு ஜாதியல்ல. அப்படி நியமமொப்புக்கொள்ளினும் பாதகமில்லை. அநுஸரிக்கிற ஸூர்யன் முதலியவைகளைப்போல ப்ரஹ்மமும் தேஜஸ்ஸென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையாலும் அந்த வஸ்து ப்ரஹ்மமென்பது ஸித்தம் என்று ஸூத்ரகாரர் சொல்லுகிறார். அசூ.

ஸூ. அஎ. அபி ஸ்மர்யதே.

(பா - வ்யா.) ஸ்மர்யதே அபி- (ஜீவன்பரமாத்மோபாஸநத்தினால் பரமாத்மாவோடுஸாம்யத்தை அடைகிறானென்று "இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:" என்று) கீதையிலும் சொல்லப்படுகிறது. அஎ.

(ஶ்ரு-ஹா.) இந்த ஶ்ருதிவாக்யத்தி னர்த்தத்தை கீதையிலும் "ந தத்பாஸயதே" இத்யாதி ஶ்லோகத்தினால் சொல்லப்பட்டது. அதற்குத் தாத்பர்யம். அவ்வஸ்து ஸூர்ய சந்த்ரர்களுடைய அபேக்ஷயின்றியே பிரகாசிக்கிறது. ஸூர்யாதி மற்ற வஸ்துக்களின் பிரகாசமெல்லாம் அவ்வஸ்துவின் பிரகாசாதீநமாயிருக்கிறது. என்று. ஆகையால் இப்படிப்பட்ட அவ்வஸ்து பரமாத்மாவேயாகவேணும். பௌதிகமான தேஜஸ்ஸு ஆகமாட்டாது. அஎ.

கயி-உரு-ஸூ-அஅ. ஶப்தாதேவ ப்ரமித:.

(ஶ்ரு-பா-வ்யா.) ஶப்தாத் - பரமாத்மவாசக சப்தத்தினால், ப்ரமித:- அங்குஷ்டமாத்ரப்ரமாணமாகச் சொல்லப்பட்டவன், பரமாத்மாவென்று நிஶ்சயிக்கப்படுவன்). அஅ.

(ஸு-ஹா.) கடவல்லியில் "அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி" இத்யாதி வாக்யத்தில், அங்குஷ்ட பிரமாணமுள்ள புருஷன் சரீரத்தின் மத்தியில் இருக்கிறான். அவனே இழ்க்கடந்தவைக்கும் மேல்வருமவைக்கும் பிரபு நீ கேட்டவஸ்து இதுதான்; என்று சொல்லப்பட்டவன் ஜீவனா பரமாத்மாவா வென்கிற ஸம்சயத்தில்,—விரலளவாகச்சொல்லப்பட்டவன், ஸர்வவ்யாபியான பரமாத்மாவாகமாட்டான். ஜீவனாகில் உபாதி ஸம்பந்தத்தினால் விரலளவாக இருக்கலாம். ஸ்ம்ருதியில் அங்குஷ்டமாத்ரமாயுள்ள புருஷனை சரீரத்திலிருந்து யமனிழுக்கிறானென்று சொல்லுகிறது; அது பரமாத்மாவுக்குச்சேராது. ஆகையால் இவன் ஜீவன் என்று பூர்வபக்ஷி சொன்னான்.—இந்தபுருஷன் கடந்தவைவருமவைகளுக்கெல்லாம் பிரபு என்று மேற்கூறிய குணம் ஜீவனுக்குச் சேராது. மேலும், ப்ரஹ்மஸ்வரூபம் எது என்று கேட்டதற்கு, அந்த ஸ்வரூபம் விரலளவாகச் சொல்லப்பட்ட இதுதான் என்கையாலே இந்த உத்தரம் ப்ரஶ்நவாக்யத்திற்குத் தக்கபடி பரமாத்மாவையே ப்ரதிபாதிக்கவேண்டும் ஆகையாலிவன் பரமாத்மாவென்று ஸித்தாந்தி சொன்னார். ௮௮.

(ரா-ஹா). "அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி | ஈசாநோ பூதபவ்யஸ்ய" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம். இங்கு பெருவிரலளவாகச்சொல்லப்பட்டவன் ஜீவனா, பரமாத்மாவா என்றஸம்சயம், ஸ்பஷ்டமாகஜீவபரமான "ப்ராணாதிப: ஸஞ்சரதி ஸ்வகர்மபிரங்குஷ்டமாத்ர:" என்கிற வாக்யத்தில் ஜீவன் பெருவிரலளவாகச் சொல்லப்பட்டிருக்கையால் ஜீவபரமாக அஸ்பஷ்டமான இந்தவாக்யத்திலும் பெருவிரலளவாகச் சொல்லப்பட்டவன் ஜீவனே என்று பூர்வபக்ஷம்.—'ப்ராணாதிப: ஸஞ்சரதி ஸ்வகர்மபி:' தன்னுடைய புண்யபாபரூபகர்மங்களினால் ப்ராணாதிபன் ஸஞ்சரிக்கிறான் என்கிறவிடத்தில் தன்னுடைய கர்மங்களினால் என்கிற அடையாளத்தைக்கொண்டு அவ்வாக்யத்திற் சொல்லப்பட்டவன் ஜீவன் என்று நிஶ்சயிப்பதுபோல், 'அங்குஷ்டமாத்ர: புருஷ:' என்கிற வாக்யத்தில், 'ஈசாநோ பூதபவ்யஸ்ய' த்ரிகாலவர்த்தியான ஸகல வஸ்துக்களுக்கும் நியாமகன் என்று பரமாத்மாவினுடைய லக்ஷணம் சொல்லியிருக்கையாலே இந்த லக்ஷணத்தைக்கொண்டு இவ்வாக்யத்தில் பெருவிரலளவாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவென்று நிஶ்சயிக்க வேண்டுமென்று ஸித்தாந்தம். ௮௮.

ஸூ. ௮௯. ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்.

(ஸு-ரா-வ்ரு.) மநுஷ்யாதிகாரத்வாத்—(ஶாஸ்த்ரம்) மநுஷ்யனுக்கு உபாஸநத்தை விதிக்கைக்காக ப்ரவர்த்தித்ததாகையாலே, ஹ்ருத்யபேக்ஷயா து - (மநுஷ்யர்களுடைய) ஹ்ருதயாநுகுணமாகவே. (பரமாத்மாவைப் பெருவிரலளவாச் சொல்லிற்று). ௮௯.

(ஸு-ஹா.) ஆகில் ஸர்வவ்யாபியான பரமாத்மாவை அங்குஷ்ட விரலளவாகச் சொல்லலாமோவென்னில், மநுஷ்யர்கள் தங்கள் ஹ்ருதயத்தில் அவனைத்யாநத்தினால் இருத்துகிறார்கள். அவர்களுடைய ஹ்ருதயம் அங்குஷ்டத் தளவாகவேயிருக்கும். அதிலிருக்குமவனும் அவ்வளவு பிரமாணமுள்ளவனாகவே யிருக்கவேண்டுமாகையால், த்யேயஸ்வரூபியான அப்பரமாத்மாவை அங்குஷ்டத்தளவாகச் சொல்லிற்று. தேவாதிகளுடைய ஹ்ருதயம் அங்குஷ்டத்தைக் காட்டிலும் மிகவிசாலமுள்ளதாயினும் த்யாநாதிகாரம் மநுஷ்யர்களுக்கே யாகையால் இப்படி சொல்லிற்று. இவ்வாக்

யம் உபாஸநபரமாகில் இவ்வர்த்தம்கொள்வது,—ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும்அபேதம் சொல்வது இவ்வாக்யத்திற்குத் தாத்பர்யமாகில்,—அங்குஷ்ட்டத்தளவாகச்சொல்லப்பட்டவன் ஜீவனே. அந்த ஜீவன்தான் ஸகலவஸ்துக்களுக்கும் பிரபுவாகிய பரமாத்மா வாகிறான் என்று அவ்வாக்யத்திற்கு அர்த்தம் கொள்க. அக.

(ரா-ஹா.) பரமாத்மா அபரிச்சின்னனாயிருக்க அவனைப்பெருவிரலளவாகச்சொல்லக்கூடுமோவென்னில்,—சாஸ்த்ரம் மநுஷ்யர்களுக்குப் பரமாத்மோபாஸநத்தை விதிக்கிறது. உபாஸநமாவது. ஹ்ருதயத்தில் த்யாநிக்கை. மநுஷ்யர்களுடைய ஹ்ருதயம் பெருவிரலளவானபடியால் அவ்வளவு ஹ்ருதயத்தில் அவ்வளவான ஸ்வரூபத்தையே த்யானிக்கக் கூடுமாகையால் பரமாத்மாவைப் பெருவிரலளவாகச் சொல்லக்கூடும் என்று ஸித்தாந்தம். அக.

கஅ-உ அ-ஸஉ-கூ0. தது³பர்யபி பா³த³ராயண: ஸம்ப⁴வாத்,

(ஸ-ரா-வ்ரு.) ஸம்ப⁴வாத் - உபாஸநஸாமக்ரி யுண்டாகையாலே, தது³பரி அபி - மநுஷ்யர்களுக்கு மேலுள்ள தேவதைகளுக்கும், (உபாஸநத்தில் அதிகாரமுண்டென்று) பா³த³ராயண:-பாதராயணர், (சொல்லுகிறார்)

(ஸ-ஹா.) பாதராயணரென்கிற ஆசார்யர், மநுஷ்யர்களுக்கு த்யாநம் செய்ய அதிகாரமுண்டென்று சொல்லிற்றல்லது தேவர்களுக்கில்லையென்று சொல்லவில்லை. த்யாநம் செய்கைக்குக் காரணமாகிய சரீரம் முதலியவை தேவர்களுக்குமுண்டென்பது வேதங்களிலும் இதிஹாஸபுராணங்களிலும் ப்ரஸித்தம். தேவதைக்கொரு தேவதையில்லை என்று தகர வித்யையில் சொல்லுகையால் அவர்கள் யாரை எதுக்காக த்யாநம் செய்யக்கூடுமென்னில், இந்த்ரனாகவேணுமென்றால் இந்த்ரனை த்யாநம்செய்யவேண்டும். இந்த்ரன்தான் இந்த்ரனாயேயிருக்கிறபடியால் அவன் அந்த இந்த்ரபதவிக்காக இந்த்ரனை த்யாநம் செய்யவேண்டியதில்லை என்று அந்த வாக்யத்திற்கு அர்த்தமொழிய மோக்ஷத்திற்காகப்பரமாத்மாவை த்யாநம் செய்யக்கூடாதென்பது அர்த்தமன்று,- இப்படி தேவர்களுக்கு த்யாநாதிகாரமுண்டாயினும் அவர்களுடைய ஹ்ருதயம் அவர்களுடைய அங்குஷ்ட்டத்தளவாகவேயிருக்கும். ஆகையால் அங்குஷ்ட்ட ப்ரமாணமுள்ளவனென்பது அவர்களுடைய அங்குஷ்ட்டத்தளவென்று அர்த்தமாய் பரமாத்மாவையே சொல்லுகிறதென்று சொன்னார். கூ0.

(ரா-ஹா.)கீழ் மநுஷ்யனுக்கே பரமாத்மோபாஸநத்தை சாஸ்த்ரம் விதித்ததென்று சொல்லிற்று. ஆனால் தேவதைகளுக்குப்பரமாத்மோபாஸநத்தில் அதிகாரமுண்டா, இல்லையா என்று ஸம்சயம்.—நித்யகர்மாநுஷ்டாநத்தினால் ராகத்வேஷாதிகள் நசித்து நிர்மல சித்தனானவனுக்கு உபாஸநத்தில் அதிகாரமுண்டு, தேவதைகளுக்கு சரீரமில்லையாகையால் நித்யகர்மாநுஷ்டாந யோக்யதையும், அதடியான சித்தநைர்மல்யமும் இல்லை ஆதலால் அவர்களுக்கு உபாஸநத்தில் அதிகாரமில்லை என்று பூர்வபக்ஷம்,—ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் தேவதைகளுக்கும் சரீரமுண்டென்று சொல்லுகையாலே அவர்களுக்கும் நித்யகர்மாநுஷ்டாநமும் சித்த நைர்மல்யமும், அதடியான உபாஸநமும்கூடும். உபாஸநத்திற்கு, பரமாத்மஸ்வரூப ததுபாஸந ப்ரகாரஜ்ஞாநம், அர்த்தித்வம், சரீரவத்வம், இம்மூன்றும் ஸாமக்ரீ. தேவதைகளுக்கு, பூர்வம் உத்பந்நமான பரமாத்மஸ்வரூப ததுபாஸநப்ரகாரஜ்ஞாநத்திற்கு மறுப்பில்லையாகையால் ஜ்ஞாநமும்,*தாபத்ரயாபிகாதமும் பரமாத்மஜ்ஞாநமு முண்டாகையால் அர்த்தித்வமும், கீழ்ச்சொன்னபடி சரீரமும் உண்டாகையாலே அவர்களுக்கும் அதிகாரம் உண்டென்று ஸித்தாந்தம். கூ0.

---

* தாபத்ரயாபிகாதமாவது - ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிகங்களென்கிற மூன்றுவிதமான துக்கங்களினால் வருந்துகை.

ஸூ. ௩௧. விரோதஃகர்மணீதிசேந்நாநேகப்ரதிபத்தேர்தர்ஶநாத் .

(ஶா-ப்ர) கர்மணி - (தேவர்களுக்கு சரீரம் ஒப்புக்கொண்டால்) யாகாதிக்ரியையில், விரோதஃ - அநுபபத்தி (ஸம்பவிக்கும்) இதிசேத் - என்றால், அநேகப்ரதிபத்தேஃ - (தேவர்களுக்கு) அநேகசரீர பரிக்ரஹத்தை, தர்ஶநாத் - காண்கையாலே, ந - அந்த விரோதம் வாராது. ௩௧.

(ஸ-ஹா.) இந்த்ராதி தேவர்களுக்குச் சரீரமுண்டென்று கீழ்சொல்லிற்று. ஆகில் யாகங்களில் ஹோமம் செய்கிற ருத்விக்குக்கள் எப்படி யாகத்திற் கருகிருந்தே நடத்துகிறார்களோ, அப்படியே தேவர்களும் யாகத்துக்கருகில் வந்தே இவர்கள்கொடுக்கும் ஹவிஸ்ஸைவாங்கவேண்டும்; ஒரு காலத்தில் அனேகம் இடங்களில் யஜ்ஞம்செய்தால்ஒரு சரீரத்துடன் இந்த்ராதிகள் அவ்வெல்லாவிடங்களுக்கும் எப்படிப்போவார்கள்? ஆகையாலவர்களுக்குச் சரீரமொப்புக்கொள்ளக்கூடாது என்கிறபூர்வபக்ஷத்திற்கு,-ஒருதேவதைக்கே ஒரேகாலத்தில் அநேகம்சரீரங்களுண்டென்று சாகல்ய யாஜ்ஞவல்க்ய ஸம்வாதத்தில் வேதம் சொல்லுகையால்அவர்கள் ஒவ்வொரு சரீரத்துடன் ஒவ்வொருஇடத்திற்குப்போய் ஹவிஸ்ஸைவாங்கலாம்.மநுஷ்யர்களே யோகஸித்தியினால் அணிமாதி அஷ்டைஶ்வர்யத்தை யுடையராய் அனேக சரீர மெடுக்கிறார்களென்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்க, தேவர்கள் தங்களுக்கிஷ்டமான அனேக சரீரங்களை ஒரே காலத்தி லெடுப்பது ஓராஶ்சர்யமன்று. மேலும், சரீரமுடையராயினும், ஒருவனுக்கு அனேகம்பேர் அந்நமிட அவன் ஒரு சரீரமுடையனையே புஜிப்பது போலவும், அனேகம் நமஸ்காரம் செய்யில் அவர்களுக்கெல்லாம் ஒருவனே வந்தநம் செய்வது போலவும், ஒரேகாலத்தி லனேகர்கள் ஒருவனை உத்தேசித்து ஹோமம் செய்வதிலும் அத்தேவர்கள் அதை அங்கீகரிப்பதிலும் பாதகமில்லை. அவர்களை உத்தேசித்து ஹோமம் செய்யவேண்டு மல்லது அவர்கள் அங்கு வரவேணு மென்கிற நியமமில்லை யென்று தாத்பர்யம். இப்படி தேவர்களுக்குச் சரீர முண்டாகையால் உபாஸநத்தி லதிகாரமுண்டு. ௩௧.

(ஶாஹா.) தேவதைகளுக்கு சரீரம் ஒப்புக்கொண்டால், ஒரேகாலத்தில் அநேக இடங்களில் யாகம் செய்யும்போது அந்தந்த இடங்களுக்கு ஹவிஸ்ஸை வாங்குகைக்காகப் போகவேண்டி வருகையில் ஒருசரீரத்தோடு அவ்வளவிடங்களுக்கும் போக முடியாது ஆகையால் அவர்களுக்கு சரீரம் ஒப்புக்கொள்ளக்கூடாது என்றுவரில்,— தபோமஹிமையுடைய ஸௌபரி முதலியவர்களும் அநேக சரீரம் ஒரே காலத்தில் பரிக்ரஹிக்கக் காண்கையாலே, அதுபோல் தேவதைகளும் ஒரே காலத்தில் அநேக சரீரங்களை யெடுத்துக்கொண்டு அநேக இடங்களுக்குப் போகலாமாகையால் இதில் ஒரு அநுபபத்தியுமில்லை. ௩௧.

ஸூ. ௩௨. ஶப்த இதிசேந்நாதஃப்ரபவாத் ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்.

(ஸ-ஶா-ப்ர.) ஶப்தே-(சரீரம்ஒப்புக்கொண்டால்) வைதிக சப்தத்தில், (விரோதம்வரும்) இதிசேத் - என்றால், அதஃப்ரபவாத் - (இந்த்ராதிகள்) இந்த வேதசப்தத்தில் நின்று முண்டாகையாலே, ந - அந்த விரோதமுமில்லை. ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம் - ஶ்ருதிஸ்ம்ருதிகளினாலே, (இந்த்ராதிகள் வேதசப்தத்தினா லுண்டாகிறார்களென்று நிஶ்சயிக்கப்படுகிறது. ௩௨.

(ஸ-ஹா.) தேவர்களுக்குச் சரீர மொப்புக்கொள்ளில் வேதம் அநித்யமாய் அப்ராமாணிகமாய்விடும். அதெப்படியெனில், சப்தம் நித்யமாகும்போது அதினால் சொல்லப்படுகிற அர்த்தமும் நித்யமாகவேண்டும். தேவர்கள் சரீரமும் நம்முடைய சரீரம்

போல் ஜநநமரணங்களோடுகூடி அநித்யமாயேயிருக்குமாகையால் அதைச் சொல்லுகிற வேதமும் அநித்யமாய்விடும் என்கிற சங்கையை,—வேதம் நித்யமே, அதிலிருந்தே தேவர்கள் உண்டாகிறார்கள். அதாவது - ஆதிஸ்ருஷ்டியில் ப்ரஹ்மா இந்த்ரனைச் செய்ய நினைத்து, அவனை இன்னபடி செய்யவேணுமென்றறியாமல், வேதத்தில் இந்த்ரனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களைச் சொல்லுகிற வாக்யத்தை பர்யாலோசநம்பண்ணி அதிற்சொல்லியபடி ஸ்ருஷ்டிக்கிறான். சப்தத்திற்கு, ஜநநமரணங்களோடுகூடிய ஒருசரீரம் அர்த்தமன்று, அம்மாதிரியான அநேக சரீரங்களிலுள்ள ஆகாரமேசப்தார்த்தம். அது நித்யம். ஆகையால் வேதமும் நித்யமென்றுதாத்பர்யம். ஒரு கலசமுடைந்தால் அவ்வாகாரமுள்ள மற்றொரு கலசமுண்டாவதுபோல் ஓரிந்த்ரன் நசித்தால் அவ்வண்ணமுள்ள மற்றோரிந்த்ர னுண்டாகிறானென்று பொருள். இவ்வர்த்தம்வேதத்திலும், மநு முதலிய தர்மசாஸ்த்திரங்களிலும் சொல்லியிருக்கிறது என்றுபரிஹரிக்கிறார். ௨௮.

(ரா-ஹா.) தேவர்களுக்கு ஏககாலத்தில் அநேக சரீரமொப்புக்கொள்ளுகையாலே கீழ்ச்சொன்ன அநுபபத்தி தப்பினாலும் வேதம் அர்த்த சூந்யம் என்கிற அநுபபத்தி தப்பாது. அதெப்படியெனில்,—அவர்களுக்கு சரீரம் ஒப்புக்கொண்டால் அந்த சரீரம் ஸாவயவமாகவேண்டும். அப்போது அது அநித்யமாகும். இப்படியானால் அந்த சரீரம் உண்டாகைக்கு முன்பும் அது நசித்தபிறகும் ஸர்வதாநித்யமான வேதம், தனக்கு அர்த்தமாகிய இந்த சரீர மில்லாமையால் நிரர்த்தகமாய்விடும். அல்லது தான் அநித்யமாகவேண்டும் என்றுவரில், இந்த்ரனென்று ஒருவனுக்கே பெயரன்று. கலசம்என்றால் அந்த ஆகாரத்தையுடைய ஸகலவஸ்துக்களுக்கும் பெயராயிருப்பதுபோல், இந்த்ரனென்றால் அந்த அதிகாரத்தையுடையவனாய் அந்த ஸ்தாநத்தில் வந்தவனுக்கெல்லாம் பேராயிருக்கும். முன்னுள்ள இந்த்ரன் நசித்தபிறகு, இந்த்ராதிகளுடைய ஆகாரவிசேஷவாசகமாகிய இந்த்ராதி சப்தங்களை ஆலோசித்து அதின்படியே வேறொரு இந்த்ரனை முன்புள்ள இந்த்ரன்போல் ப்ரஹ்மாஸ்ருஷ்டிக்கிறார் ஆகையால் அவ்வாக்யம் நிரர்த்தகமாகமாட்டாது. இவ்விஷயத்தில் வேதமும் தர்மசாஸ்த்ரங்களுமே ப்ரமாணம். ௨௮.

ஸூ. ௨௯. அதஏவ ச நித்யத்வம்.

(ஸ-ரா-வ்ரு.) அதஏவச- ஆகையாலேயே, நித்யத்வம்-(வேதங்களுக்கு) நித்யத்வம் ஸித்திக்கிறது. ௨௯.

(ஸ-ஹா.) நித்யமான ஆகார வாசகமான வேதத்தைப் பரிசீலித்து அவ்வாகாரமுள்ள ஜகத்தைப் பிரமன் ஸ்ருஷ்டிக்கையினாலேயே வேதம் நித்யமெனப்படும். ௨௯.

(ரா-ஹா.) இந்த்ராதி வேதசப்தங்களைக்கொண்டே அதிற்சொல்லிய ஆகாரவிசிஷ்டனான இந்த்ராதிகளை ஸ்ருஜிக்கிறானென்று அங்கீகரிக்கையினாலேதான், ஆதுநிகர்களான விஸ்வாமித்ராதிகளைச் சொல்லுகையாலே இந்த வேதம் அவர்களுக்கு பிற்பட்டே உண்டாயிருக்கவேண்டும் என்கிற சங்கையும்போய் வேதம் நித்யம் என்று நிஸ்சயிக்கப்படுகிறது. ப்ரளயாநந்தரம் ஸ்ருஷ்டி காலத்தில் ப்ரஹ்மா, "விஸ்வாமித்ரஸ்ய ஸூக்தம்பவதி" இத்யாதியான வேதவாக்யங்களை ஆலோசித்து, அத்யயநம் செய்யாமலே ஸ்வரவர்ணங்கள் தப்பாமல் வேதத்தில் சிலபாகங்களை ஸாக்ஷாத்கரிக்கத்தக்க சக்தியுடைய ஜீவன்களைப் பராமர்சித்து விஸ்வாமித்ராதிகளாக ஸ்ருஷ்டிக்கிறான். அவர்களும் அந்த வேதபாகங்களை அத்யயநமின்றியே யதாவத்தாக அறிகிறார்கள். அவர்களறிந்த பாகமாகையால் அதில் அவர்கள் பெயர் விளங்குகிறது;

இப்படி அநாதிஸித்தர்களான அதிகாரி விசேஷங்களைச் சொல்லுகையாலே விஶ்வாமித்ராதிபத கடிதமான வேதங்கள் அநித்யங்களாகமாட்டா. ௰௩.

ஸூ. ௩௰. ஸமாந நாமரூபத்வாச்சாவ்ருத்தாவப்யவிரோதோ தர்ஶநாத் ஸ்ம்ருதேஶ்ச.

(ஶ்ரு-ரா-வ்ய.) ஆவ்ருத்தௌ அபி-அவ்யாக்ருதாதிகளுடைய புநஸ்ஸ்ருஷ்டியிலும், ஸமாந நாமரூபத்வாத் - பூர்வகல்பத்திற் பதார்த்தங்களோடு ஸமாநமான பெயர்களையும் ஆகாரங்களையும் உடைத்தாயிருக்கையினாலேயும், அவிரோத: - (வேதநித்யத்வத்தில்) விரோதமில்லை. தர்ஶநாத்-இவ்வர்த்தம் வேதத்தினாலும், ஸ்ம்ருதேஶ்ச - ஸ்ம்ருதியினாலும் (நிஶ்சயிக்கப்படுகிறது). ௩௰.

(ஶ்ரு-ஹா.) ஒரு கலசமுடைந்தால் உடனே அதுபோன்ற மற்றொரு கலசம், அதுடைந்தால் வேறொன்று; இம்மாதிரி இடையின்றி உண்டாவதுபோல் ஜகத்தும் தேவர்களும் இடையின்றி உண்டானால் நீங்கள் சொல்வதுசரியாகும். மஹாப்ரளயத்தில் எல்லாமழிந்து வெகுநாள் ஜகத்து இல்லாமலே இருக்கிறது. மறுபடி ஆதி ஸ்ருஷ்டியில் ஜகத்தைப்புதிதாக உண்டாக்குகிறானென்று வேதமும் ஸ்ம்ருதிகளும் சொல்லுகையால், இந்த ஸ்ருஷ்டியில், முன்புள்ள ஆகாரம் மஹாப்ரளயத்தில் நசித்து மற்றோராகார முண்டானபடியால், அவ்வாகாரத்தைச் சொல்லுகிற இப்போது முள்ள வேதத்திற்கு இப்பொழுது விஷயமில்லாமையால் வேதம் அநித்யமாயேவிடும் என்கிற சங்கைக்கு, ப்ரளயம் கழிந்தபிறகு ஸ்ருஷ்டிக்கும் போதும் ப்ரஹ்மா முன்போலவே ஸ்ருஷ்டிக்கிறார், வேறுவிதமாக ஸ்ருஷ்டிக்கிறதில்லை. முன்கல்பத்தில் நடந்தது மற்றவர்களுக்கு மறந்துபோய் விடினும் பரமாத்மாவி னநுக்ரஹத்தினால் ப்ரஹ்மாவுக்கு அவ்வாகாரம் மறக்கிறதில்லை. முன்புள்ள விதமாகவே இப்போதும் ஸ்ருஷ்டிக்கிறா ரென்பதற்கு "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" இத்யாதி ஶ்ருதியும் தர்மசாஸ்த்ரங்களும் ப்ரமாணம். இந்த ப்ரமாணங்களினால் முன்புள்ள ஆகாரமே இப்போது முண்டாகையால் அதைச் சொல்லுகிற வேதமும் நித்யமேயாகக் குறையில்லை என்று ஸமாதானம் சொல்லுகிறார். ௩௰.

(ரா-ஹா.) அவாந்தர ப்ரளயத்தில் ப்ரஹ்மாவும் இன்னும் சில பதார்த்தங்களுமுண்டு ஆகையால் அப்போது வேதமிருந்தாலும், ஸர்வமும் நசித்துப்போன மஹாப்ரளயத்திற்குப்பின் ஸ்ருஷ்டியுண்டாகும்போது வேதமில்லை யாகையால் அது எப்படி நித்யமாகுமென்னில்,—அக்காலத்திலும் பரமபுருஷன் பூர்வ கல்பங்களிலுள்ள பதார்த்தங்கள்போலவே ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஜித்து அவற்றுக்கு அந்த நாமத்தையே இட்டு, முன்புள்ள ஆநுபூர்வீப்ரகாரமே வேதத்தை ப்ரஹ்மாவுக்கு உபதேசிக்கிறான் என்று ஶ்ருதிஸ்ம்ருதிகள் சொல்லுகையாலே வேதத்தை நித்யமென்று அங்கீகரிக்கத்தட்டில்லை. வேதம் நித்யமென்றால், முன் எவ்விதமான ஆநுபூர்வியிருந்ததோ அவ்விதமான ஆநுபூர்வியுடன் அத்யயநம்செய்கை.—ஆக இவ்வளவால் தேவர்களுக்கு சரீரமுண்டென்று ஸ்தாபிக்கையாலே அவர்களுக்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது. ௩௰.

அதி-௨௩-ஸூ-௩௧. மத்வாதிஷ்வஸம்பவாதநதிகாரம் ஜைமிநி:

(ஶ்ரு-ரா-வ்ய.) அஸம்பவாத்-உபாஸ்யரான வஸ்வாதிகளுக்கு உபாஸகத்வம் ஸம்பவியாதாகையால், மத்வாதிஷு - மதுவித்யை முதலானவற்றில், அநதிகாரம் - (தேவர்களுக்கு) அதிகாரமில்லாமையை, ஜைமிநி: ஜைமிநி சொன்னார். ௩௧.

(ஶ-ஹா.) ப்ரஹ்மவித்யையில் தேவர்களுக்கு அதிகாரமுண்டாகில்மதுவித்யையிலும் அதிகாரமுண்டாகவேண்டும். அது தேவர்களுக்கு ஸம்பவியாது,—எப்படியெனில்,—மது என்பது ஸூர்யனுடைய சில கிரண விசேஷங்களை. அவற்றையுடைய ஸூர்யனை உபாஸநம் செய்ய வேண்டும். அதற்கு பலம் தேவர்களாகப்பிறப்பது. ஸூர்யன் தன்னைத்தான் உபாஸிக்கச்சேராது. இப்போதே தேவர்களானவர்களுக்கு, அதற்கு பலமான தேவப்பிறப்பும் ஸித்தித்திருக்கிற படியால் அவ்வுபாஸநம் நிஷ்பலமாயிருக்கும் ஆகையால் மதுவித்யையில் அவர்களுக்கு அதிகாரமில்லை. அதுபோலவே ப்ரஹ்மவித்யையிலு மதிகாரமில்லை, என்றார் ஜைமினி. கஙி.

(ரா-ஹா.) "அஸௌவாஆதித்யோ தேவமது" இத்யாதிவாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்,—ருக் யஜுஸ் ஸாமவேதங்களிற் சொல்லிய யாகாதிகளினுலுண்டான ரஸம் ஸூர்யனிடத்திற் சேருகிறது. ஸூர்யன் அந்த ரஸஸ்வரூபியாயிருக்கிறான். அந்த ரஸஸ்வரூபனுன ஸூர்யனை ஒவ்வொரு பக்கங்களை வஸு ருத்ர ஆதித்யமருத்ஸாத்யர்களென்கிற ஐந்து கூட்டத்தார் புஜிக்கிறார்கள். அவர்களாலே புஜிக்கப்படுகிற அந்த பாகத்தை உபாஸநம் செய்யவேண்டும். அந்த அம்சம் வஸுவினால் புஜிக்கப்படுகிறதென்று உபாஸநம் செய்தவன் வஸுஸ்வரூபியாகிறான் (இப்படியே மற்ற உபாஸகர்களையும் கண்டுகொள்வது) என்று இந்த வாக்யத்திற்கு அர்த்தம்,—இந்த உபாஸநத்தில் வஸ்வாதிகளுக்கு அதிகார முண்டா இல்லையா என்று ஸம்சயம்,—தான் தன்னை உபாஸநம் செய்யக்கூடாதாகையாலே, இந்த அம்சம் வஸ்வாதிகளினுல் புஜிக்கப்படுகிறதென்கிற வஸ்வாதிவிஷயமான உபாஸநத்தை வஸ்வாதிகள் செய்யக்கூடாதாகையால் அவர்களுக்கு இந்த உபாஸநத்தில் அதிகாரமில்லை. மேலும் தான் இப்போது வஸுவாயிருக்கையாலே வஸுவாகைக்காக இப்படி உபாஸநம் செய்யவேண்டியது மில்லை. என்று பூர்வபக்ஷியான ஜைமினி மதம் இது பூர்வபக்ஷம். கஙி.

ஸூ. கூ௨. ஜ்யோதிஷிபாவாச்ச.

(ஶ-ரா-வ்ரு-ஹா.) ஜ்யோதிஷி-ஜ்யோதிச்சப்தவாச்யனுன பரமாத்மவிஷயத்தில், பாவாச்ச-தேவமநுஷ்யர்களிருவருக்கும் அதிகாரம் உண்டாகையாலும், (இப்படி அதிகாரமுண்டா யிருக்கச்செய்தே, ஜ்யோதிஸ்வரூபிகளுக்குள் ஜ்யோதிஸ்வரூபியான பரப்ரஹ்மத்தை தேவர்கள் உபாஸிக்கிறார்கள் என்று "தம்தேவா:ஜ்யோதிஷாம்ஜ்யோதி:" என்கிற வாக்யம் சொல்லுகிறது. இதில் தேவர்கள் என்றதுக்கு வஸ்வாதி தேவர்கள் அர்த்தம். அவர்களுக்கு இந்த வாக்யத்தில் தனியாக உபாஸநம் சொல்லியிருக்கையாலே இந்த உபாஸநத்தில் அதிகாரமில்லை) என்று பூர்வபக்ஷம்). கஉ.

(ஶ-ஹா.) மேலும் ஸ்வர்க்கம் ஸூர்யமண்டலம் முதலியவைகளை தேஜஸ்ஸென்று அசேதநமாகச் சொல்லுகிற படியால் அது ப்ரஹ்மத்தை உபாஸிக்க சேதனமுமன்று, அதற்கு சரீரமும் கிடையாது. ஆகையாலு மதிகாரமில்லை யென்றார். கஉ.

ஸூ. கூ௩. பாவந்துபாதராயணோஸ்திஹி.

(ஶ-ரா-வ்ரு.) பாதராயண:-பாதராயணர், பாவம்-இந்த உபாஸநத்தில் வஸ்வாதிகளுக்கும் அதிகாரமுண்டென்பதை, (ஒப்புக்கொண்டார்). அஸ்திஹி - அவர்களுக்கு உபாஸ்யத்வமும் ப்ராப்யத்வமும்) உண்டன்றோ.

(ஶ-ஹா.) மநுஷ்யரில் ப்ராஹ்மணர்களுக்கு ராஜஸூயயாகத்தில் அதிகாரமில்லாவிடினும் மற்றயஜ்ஞங்களி லதிகாரமுண்டு. அதுபோல் தேவர்களுக்கு மதுவித்யையி லதிகாரமில்லாவிடினும் ப்ரஹ்மவித்யையி லதிகாரமுண்டு.ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்து தேவர் வேண்டிய பலத்தை யடைந்ததாக வேதங்களில் சொல்லியிருக்கிறது. ஸூர்யாதி மண்டலம் தேஜோமயமாகிலும் "ஸூர்யன் புருஷவேஷங்கொண்டு குந்தியைப்புணர்ந்தான்" இத்யாதியைச் சொல்லுகிற ப்ரமாணங்களினால் அம்மண்டலத்திற்கு அதிஷ்டான தேவதையாக ஒருசேதனனுண்டு; அவனுக்கும் அவனைப்போன்ற மற்றத்தேவர்களுக்கும் கீழ்ச்சொன்னபடிப்ரஹ்மவித்யையி லதிகாரமுண்டு என்று பாதராயண பகவான் கூறினர். கஎ.

(ரா-ஹா.) கீழ்ச்சொன்ன ஜைமினி மதத்தைக்கண்டிக்கிற பாதராயணருடைய மதத்தை இந்த ஸூத்ரத்திற் சொல்லுகிறார். தன்னை "நான்" என்று உபாஸிக்கக்கூடாவிடினும்*ப்ரஹ்மாத்மகன் என்று உபாஸநம் கூடுமாகையாலே உபாஸகரான வஸ்வாதிகளுக்கு உபாஸ்யத்வமும்கூடும். இந்த கல்பத்தில் தாங்கள் வஸுக்களாயிருந்தாலும் மேல் கல்பத்தில் தாங்கள் வஸுக்களாகைக்காகவும் இப்படி உபாஸநம் செய்யக்கூடுமாகையால் வஸ்வாதிகளுக்கும் இந்த வித்யையில் அதிகாரமுண்டு என்று, இது ஸித்தாந்தம். கஎ.

கய-உக-ஸூ-கஅ. ஶுகஸ்ய தத³நாத³ரஶ்ரவணாத் ததா³த்³ரவணாத் ஸூச்யதே ஹி.

(ஶ-ரா-வ்.) தத³நாத³ரஶ்ரவணாத் - ஹம்ஸத்தினுடைய அநாதரவாக்யத்தைக் கேட்கையாலே, ததா³ - அப்போது, ஆத்³ரவணாத் - (ப்ரஹ்மோபதேசத்திற்காக) ஓடுகையால், அஸ்ய - இந்த ஜாநஶ்ருதிக்கு, ஶுக் - துக்கம், ஸூச்யதே - ஸூசிப்பிக்கப்படுகிறது. ஹி - அக்காரணத்தினால், (அவனை சூத்ரா!என்று ரைக்வர் அழைத்தார்.) கஅ.

(ஶ-ரா-ஹா.)ப்ரஹ்மவித்யையில் சூத்ரர்களுக்கு அதிகாரம் உண்டா இல்லையா என்று ஸம்சயம்,—அவர்களுக்கும் தேஹேந்த்ரியாதிகள் உண்டாகையால் பரமாத்மோபாஸநத்திற்கு வேண்டிய ஸாமர்த்யமும்,மோக்ஷேச்சையும் உண்டு.வேதாத்யயநத்தில் அதிகாரமில்லாவிடிலும் புராணுதிஶ்ரவணங்களில் அதிகாரமுண்டாகையாலே அதினாலேயே பரமாத்மோபாஸநத்திற்கு வேண்டிய பரமாத்மஸ்வரூபதத்ப்ராப்த்யுபா யஜ்ஞாநங்களுண்டாகலாம். சூத்ரஜாதியிற்பிறந்த விதுராதிகளுக்கும் ப்ரஹ்மவித்யை உண்டென்று பலவிடங்களிலும் சொல்லுகிறது."ஆஜஹாரேமா: ஶூத்³ர"என்று ஓ சூத்ரனே ! நீ இவைகளைக்கொண்டுவா; இவற்றை நானங்கீகரித்து உனக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கிறேன் என்று வேதத்திலும் ஜாநஶ்ருதியைக்குறித்து ரைக்வர் சொன்னதாகக் காண்கிறது. ஆகையால் சூத்ரர்களுக்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டென்று பூர்வபக்ஷம்,—வேதாத்யயநம்செய்து அதினுடைய அர்த்தத்தைப் பராமர்சித்து அதினாலுண்டான ஜ்ஞாநமே பரமாத்மோபாஸநத்திற்கு ஹேதுவாகிறது. புராணஶ்ரவணுதிகளினாலுண்டான ஜ்ஞாநம் பாபக்ஷயத்துக்கு ஹேதுவாகுமல்லது உபாஸநத்திற்கு ஹேதுவாகமாட்டாது. விதுராதிகளுக்கு ஜந்மாந்தரத்தில் வேதாத்யயநம்செய்து அதினாலுண்டான ஜ்ஞாநம் மறவாமலிருந்து அதினால் இந்த ஜந்மத்தில் பக்தி உண்டாயிற்றென்று கொள்ளவேண்டும். இரண்டு ஹம்ஸங்கள் வந்து அதில் ஒன்று ஜாநஶ்ருதியை ஸ்தோத்ரம்செய்ய, மற்றொன்று ப்ரஹ்மஜ்ஞாநமில்லாத இவனை என்ன ஸ்தோத்ரம் செய்கிறது என்று இவனு

* தன்னைத்தான் த்யாநம் செய்யக்கூடாதாகிலும் தன்னுடைய அந்தர்யாமியான பரமாத்மாவை த்யாநிக்கக்கூடுமென்று கருத்து.

க்கு அவமான மாகும்படி சொல்ல, அதை ஜாநச்ருதிகேட்டு எனக்குப்ரஹ்மஜ்ஞாநமி ல்லையே யென்கிற வ்யஸநத்தையறிந்து, ஓ சூத்ரா! என்று கூப்பிட்டார். சூத்ரன் என்பதற்கு சூத்ரஜாதியில் பிறந்தவன் என்று அர்த்தமன்று. தனக்குப்ரஹ்மவித்யை இல்லை யென்று துக்கப்படுகிறவன் என்று அர்த்தம். ஆகையால் வேதத்திலும் சூத்ர னுக்கு ப்ரஹ்மவித்யோபதேசம் சொல்லவில்லை. ஆதலால்சூத்ரனுக்கு ஸாமர்த்யமும் மோக்ஷேச்சையு மிருந்த போதிலும் ப்ரஹ்மவித்யையில் அதிகார மில்லை என்று ஸித்தாந்தம். கஅ.

ஸூ. கக. க்ஷத்ரியத்வாவகதேஶ்ச.

(ஶ்ரீ-வ்யா.) க்ஷத்ரியத்வாவகதேஶ்ச - (ஜாநச்ருதிக்கு) க்ஷத்ரியதர்மம் காண்கையாலும். (இவன் சூத்ரனன்று). கக.

(ஶ்ரு-ப்ர-ஸா.) சங்கரபாஷ்யத்தில் "க்ஷத்ரியத்வாவகதேஶ்சோத்தரத்ர சைத்ரரதேந லிங்காத்" என்கிற வரையிலும் ஒரேஸூத்ரம். இதுக்கர்த்தம்—உத்தரத்ர - ஸம்வர்க்கவித்யையின் மேல்வாக்யத்தில், சைத்ரரதேந - சித்ரரதனென்கிறவனுடைய வம்சத்திலுண்டான அபிப்ரதாரியோடுகூட (ச்சொல்லுகையாகிற), லிங்காத் - ஹேதுவினாலே, க்ஷத்ரியத்வாவகதேஃ - (ஜாநச்ருதி) க்ஷத்ரியனென்பது அறியப்படுகையினால், (ஜாநச்ருதி சூத்ரனன்று),இந்த வித்யையில்ஜாநச்ருதியுடன் கூட சொல்லப்பட்ட அபி ப்ரதாரியென்பவன் க்ஷத்ரியன். இருவருக்கு ஒரு வித்யையில் ப்ரஸ்தாவம் வந்தால் அவ்விருவரும் ஒரு ஜாதியிற் பிறந்தவர்களே யாவார்களாகையால் ஜாநச்ருதியும் க்ஷத்ரியன். சூத்ரனன்று.அபிப்ரதாரி க்ஷத்ரியனென்பதற்கு ப்ரமாணமென்னென்னில், காபேயரென்கிற ப்ராஹ்மணர் சித்ரரதனென் கிற க்ஷத்திரியனுடைய வம்சத்திற்பிறந்த அரசர்களுக்குப் புரோஹிதர்கள் அந்த ப்ராஹ்மண வம்சத்திற்பிறந்த ஒருவன் அபிப்ராதாரிக்குப் புரோஹித னென்று இங்குச் சொல்லியிருக்கிறது. ஆகையால் இவனும் அந்த ராஜவ ம்சத்திலுண்டானவனென் றறியப்படும். கக.

(ஶ்ரீ-ஸா.) இவன் அனேக க்ராமங்களைக் கொடுக்கிறானென்றும், பக்வாந்நதா நம் செய்கிறானென்றும் இதுமுதலான க்ஷத்ரியதர்மம் காண்கையாலே இவன் க்ஷத்ரியனே யாகவேண்டும். கக.

ஸூ. க00. உத்தரத்ர சைத்ரரதேந லிங்காத்.

(ஶ்ரீ-வ்யா.) உத்தரத்ர - மேல்வாக்யத்தில், சைத்ரரதேந-சைத்ரரதனோடு (காபேயனைக் கூட்டிச்சொல்லுகையாகிற), லிங்காத் - ஹேதுவினாலே (இந்த வித்யையில் ப்ராஹ்மண க்ஷத்ரியர்களுக்கே அந்வயம் காண்கிறது). க00.

(ஶ்ரீ-ஸா.) இப்ப்ரகரணத்தில் ப்ராஹ்மண க்ஷத்ரியர்கள் தவிர மற்றவரைச் சொல்லவில்லை. "அத ஹ ஶௌநகஞ்ச காபேயமபிப்ரதாரிணஞ்ச" என்று, இவ்வாக்யத்தில், சௌநகர் ப்ராஹ்மணன், அபிப்ரதாரி சைத்ரரதனென்கிற க்ஷத்ரி யன், இவன் க்ஷத்ரியனென்கைக்கு அடையாளமென்னவென்றால், ப்ரகரணாந்தரத் தில் காபேயனோடு ஸஹசாரியாயிருக்கிறவனை சைத்ரரதன் என்கிற க்ஷத்ரியனென்று

சொல்லிற்று. இங்கு அபிப்ரதாரியைக் காபேய ஸஹசாரியாகச்சொல்லிற்று ஆகை யால் இவன் க்ஷத்ரியன். ௩௦௦.

ஸூ. ௩௦௧. ஸம்ஸ்காரபராமர்சாத் ததபாவாபிலாபாச்ச.

(ஶ்ரு-ரா-வ்ய-ஸா.) ஸம்ஸ்காரபராமர்சாத்- (வித்யோபதேசத்திற்கு அங்கமாக)உபநயநாதி ஸ்ம்ஸ்காரத்தைச்சொல்லுகையாலும், ததபாவாபி லாபாச்ச - (சூத்ரனுக்கு) ஸம்ஸ்காரமே இல்லையென்று சொல்லுகையா லும், (ப்ரஹ்மவித்யையில் சூத்ரனுக்கு அதிகாரமில்லை). ௩௦௧.

ஸூ. ௩௦௨. ததபாவநிர்தாரணே ச ப்ரவ்ருத்தே:.

(ஶ்ரு-ரா-வ்ய-ஸா.) ததபாவநிர்தாரணே ச - (ஜாபாலிக்கு) சூத்ரத் வம் இல்லையென்று நிஸ்சயம் உண்டானபிறகுதான், ப்ரவ்ருத்தே: - (ப்ரஹ் மவித்யோபதேசத்தில்) ப்ரவர்த்திக்கையாலே, (சூத்ரனுக்கு இந்த வித்யை யில் அதிகாரமில்லை. ௩௦௨.

ஸூ. ௩௦௩. ஶ்ரவணாத்யயநார்த்தப்ரதிஷேதாத்.

(ரா-வ்ய.) ஶ்ரவணாத்யயநார்த்தப்ரதிஷேதாத் - (சூத்ரனுக்குவே தத்தைக்) கேட்கவும், அத்யயநம் செய்யவும், யாகாதிகளைச் செய்யவும் கூ டாதென்று நிஷேதிக்கையாலே, (வேதத்தைக் கேட்காமல் அதடியான ஜ்ஞாநமுண்டாகா தாகையால் அவனுக்கு இந்த வித்யையி லதிகாரமில்லை.

ஸூ. ௩௦௪. ஸ்ம்ருதேஶ்ச.

(ஶ்ரு-ரா-வ்ய-ஸா.)ஸ்ம்ருதேஶ்ச-"அத ஹாஸ்ய வேதமுபஶ்ருண்வதஸ்த்ரபு ஜதுப்யாம் ஶ்ரோத்ரப்ரதிபூரண முதாஹரணே ஜிஹ்வாச்சேதோ தாரணே ஶரீரபேத:" என்று சூத்ரன் வேதத்தைக் கேட்டால் அவனு டைய காதுகளில் ஈயத்தை உருக்கிவிட வேணுமென்றும், அத்யயநம் செ ய்தால் நாக்கை அறுக்கவேணுமென்றும், ஹ்ருதயத்தில் தரித்தால் அந்த ஹ்ருதயத்தைக் கிழிக்கவேணுமென்றும் சொல்லுகையாலேயும். (சூத்ரனு க்கு இதில் அதிகாரமில்லை). ௩௦௪,

ஸூ. ௩௦௫. கம்பநாத்.

(ஶ - ரா - வ்ய·) கம்பநாத்-(இந்த அங்குஷ்டமாத்ரனன புருஷனி டத்தில் பயந்து ஸகலஜகத்துகளும்) நடுங்குகையாலே, (அங்குஷ்டப்ரமித னன புருஷன் பரமாத்மா). ௩௦௫.

(ஶ-வ்ய-ஸா.) 'யதிதம்கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ஸ்ருதம் மஹத் பயம் வஜ்ரமுத்யதம் ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி" என்கிறவாக்யத்திற்குத்தா த்பர்யம். ஜகத்தெல்லாம் ப்ராணனை அவலம்பித்திருக்கிறது. இதைக்கண்டால் இடியை க்கண்டால்போல லோகம் பயப்படுகிறது· இந்த ப்ராணனை யறிந்தவன் முக்தியடை வானென்று-இப்படி சொல்லப்பட்ட வஸ்து, ப்ராணனோ அல்லது பரமாத்மாவோவென்று ஸம்சயம். ப்ராணனென்கிற பதம் ப்ராணவாயுவிலேயே லோகத்தில் வழங்குகையா லும், ப்ராணவாயுவினுல் லோகம் பிழைப்பது, அதில்லாவிடில் நசிப்பது என்பது ப்ரத் யக்ஷமாகக்காண்கிறது ஆகையாலும், ஜகத்துக்கு ஆதாரம் ப்ராணவாயுவே; வாயுவினு

லேயே இடியுண்டாகிற தாகையால் லோகத்துக்குபயஜநகமாயுமாகிறது. ஆகையாலி க்குச்சொல்லப்பட்டது.ப்ராணவாயுவேயென்ற பூர்வபக்ஷம்.—இது பரமாத்மப்ரகரணமாகையாலும் வஜ்ராயுதத்தை யெடுத்தால்,இது நம்தலையி லெங்கேவிழுகிறதோ வென்று ஜநங்கள் பயப்படுகிறது - "பீஷாஸ்மாத்வாத:பவதே" என்று அப்பரமாத்மாவுக்கேஸூர்யாதிகள் பயப்படுகிறார்களாகையாலும், "ப்ராணஸ்ய ப்ராண:" ப்ராணனுக்கும் ப்ராணன் என்று ப்ராணபதம் பரமாத்மாவி னிடத்திலும் வழங்குகையாலும், 'தஸ்மிந்லோகாஶ்ரிதாஸ்ஸர்வே' என்று பரமாத்மாவையே ஸகல ஜகத்துக்கு மாதாரமாகச் சொல்லுகையாலும், மோக்ஷத்துக்கு பரமாத்மஜ்ஞாநமேகாரண மாகையாலும் இங்குச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவே யென்று ஸித்தாந்தம். ௧௦௫.

ஸூ. ௧௦௬. ஜ்யோதிஶ்சரணாபிதாநாத்.

(ரா-வ்யா-ஸா.) ஜ்யோதிஶ்சரணாபிதாநாத் - இப்ப்ரகரணத்தில், ஸகல தேஜஸ்ஸுக்களுக்கும் ஆச்சாதகமாய்) நிரவதிக தேஜோரூபியான பரமாத்மாவை (ஓதக்) காண்கையாலே, (இந்தபுருஷன் பரமாத்மாவேயாகவேண்டும்)

(ஸ-ஸா.) "ஏஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத்ஸமுத்தாய பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" இதற் கர்த்தம்—இந்த ஜீவன் இச்சரீரத்திலிருந்து கிளப்பி மேலான ஜ்யோதிஸ்ஸை யடைந்து தன்ஸ்வரூபத்துடன் சேருகிறான் என்று. இங்கு ஜ்யோதிஸ்ஸென்ற இருளைப்போக்கும் தேஜஸ்ஸையா, பரமாத்மாவையா சொல்லுகிறதென்று ஸம்சயம்—இப்பதம் தேஜஸ்ஸிலே வழங்குகையாலும், இப்ப்ரகரணம் பரமாத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணமென்பதற்குக் காரணம் காணாமையாலும், ஜீவன் ஸூர்யனென்கிற தேஜஸ்ஸை மரித்த பிறகு முக்தியடையும்போது அடைகிறானென்று சொல்லுகையாலும், இப்பதம் பரமாத்மாவைச் சொல்லாதென்ற பூர்வபக்ஷம்,—இப்ப்ரகரணத்தில் அபஹதபாப்மத்வம் முதலிய பரமாத்மகுணங்களைச் சொல்லுகையாலும், இந்தஜ்யோதிஸ்ஸைவிமர்சிக்கவேணுமென்றும் அறியவேண்டுமென்றும் சொல்லுகையாலும், ப்ரத்யக்ஷமாகக் காண்கிற ஸூர்யனை இப்படி சொல்வது கூடாமையாலும், சரீரமழுகைக்காக ஜீவன் இந்த ஜ்யோதிஸ்ஸை யடைகிறானென்கையாலும், அதுபரமாத்மப்ராப்தியாலல்லது மற்றொன்றா லுண்டாகாதாகையாலும், இந்த ஜ்யோதிஸ்ஸை 'உத்தம:புருஷ:' என்று உத்தமபுருஷனாகச் சொல்லுகையாலும் இவன் பரமாத்மாவே யாகவேண்டுமென்று ஸித்தாந்தம். ௧௦௬.

அதி-உஎ-ஸூ-௧௦எ. ஆகாஶோऽர்தாந்தரத்வாதிவ்யபதேஶாத்.

(ஸ-ரா-வ்யா.) அர்தாந்தரத்வாதிவ்யபதேஶாத் - ஜீவாத்மாவைக் காட்டிலும் வேறான பரமாத்மாவுக்கு அஸாதாரணங்களான நாமரூப நிர்வாஹம் முதலிய தர்மங்களை (இவனுக்குச்) சொல்லுகையாலே, ஆகாஶ: - ஆகாசபதப்ரதிபாத்யன் (பரமாத்மா). ௧௦எ.

(ஸ-ஹா.) "ஆகாஶோ ஹ வை நாம நாமரூபயோர்நிர்வஹிதா" சப்தங்களையும் அர்த்தங்களையும் ஸ்ருஷ்டிக்கிறவன் ஆகாசம் என்று இதுக்கு அர்த்தம். இங்கு ஆகாசபதத்திற்கு பூதாகாசமா, ப்ரஹ்மமா அர்த்தமென்று ஸம்சயம். ஆகாச பதம் பூதாகாசத்தில் வழங்குகையாலும், சப்தங்களுக்கும் அர்த்தங்களுக்கும்

இடம் கொடுக்குமதாகையால் அதைப்பற்றி ஸ்ருஷ்டிக்கிறதென்று சொல்லக்கூடுமென்றும், ப்ரஹ்மமென்பதற்கு ஹேது காணமையாலும் இது பூதாகாசமென்று பூர்வபக்ஷம்,—ப்ரக்ருதியினிடத்தில் நின்று முண்டாய், நாமரூபங்களையடைந்திருக்கிற ஆகாசம் நாமரூபங்களுக்குக் கர்த்தாவாகக் கூடாமையாலும், அது பரமாத்மாவுக்கேயுள்ளதென்று "[Grantha]" என்கிற ஶ்ருதியில் சொல்லுகையாலும், இது பூதாகாசமன்று - பரமாத்மா என்று ஸித்தாந்தம். ௧௰௭.

(ரா-ஹா.) "[Grantha]" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம், இங்கு ஆகாசமென்று சொல்லப்பட்டவன் முக்தபுருஷனு, பரமாத்மாவா என்று ஸம்சயம்,—மேல்வாக்யத்தில் முக்தனைச்சொல்லி யிருக்கையாலே இவ்வாக்யத்திலுள்ள ஆகாச பதத்திற்கும் முக்தனே அர்த்தமென்று பூர்வபக்ஷம்,—நாமரூபங்களினுல் அஸ்ப்ருஷ்டனுய் அவைகளுக்கு நிர்வாஹகனுய் ப்ரஹ்மத்வம் முதலிய தர்மங்களையுடையனு யிருக்கிறனென்று முக்தனுக்கு அஸம்பாவிதமான இக்குணங்களையுடையன் என்று ஆகாசத்தை விசேஷிக்கையாலே இவன் முக்தனைக்காட்டிலும் பிந்நனுன பரமாத்மா என்று ஸித்தாந்தம். ௧௰௭.

௧௰௬-வது சூத்திரத்திற்கு ராமாநுஜபாஷ்யம் விட்டுபோனபடியால், இவ்விடம் போடப்பட்டது.

(ரா-ஹா.) இப்படி நடுவில் வந்த சங்கைகளுக்கு ஸமாதாநம் சொல்லிவிட்டு அங்குஷ்டமாத்ரனுன புருஷன் பரமாத்மா என்று முன்சொன்ன அர்த்தத்தை ஸ்தாபிக்கைக்காக இன்னும் சில ஹேதுக்கள் சொல்லுகிறர். அங்குஷ்ட ப்ரமித புருஷ ப்ரகரணத்தில் "[Grantha]" இத்யாதி வாக்யங்களினுல் இந்த புருஷனிடத்தில்பயந்து ஜகத்தெல்லாம் நடுங்குகிறதென்று சொல்லுகையாலே இந்த புருஷன் பரமாத்மாவேயாக வேண்டும். ௧௰௬.

ஸூ. ௧௰௮. [Grantha]

(ஸு-ரா-வ.) [Grantha]-நித்ரை செய்யும்போதும், மரண காலத்திலும், [Grantha] - ஜீவனைக்காட்டிலும் வேருக, [Grantha] - (பரமாத்மாவைச்) சொல்லுகையாலே) (ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்யமில்லை). ௧௰௮.

(ஶ்ரு - ஹா.) ப்ருஹதாரண்யத்தில், "[Grantha]" என்று தொடங்கி மேல் பகுவாக ஆத்மாவை நிரூபணம்செய்தது. அங்குசொல்லப்பட்ட ஆத்மா, ஜீவாத்மாவா, பரமாத்மாவா என்று ஸம்சயம். ஆதியில் "[Grantha]" ஹ்ருதயத்தி லிருக்கிறன் என்று இப்புருஷனை சரீரமுள்ளவனுகச் சொல்லுகையாலும், அந்தத்திலும் "[Grantha]" என்று ப்ராணஸம்பந்தமுள்ளவனுகச் சொல்லுகையாலும்; நடுவிலும் ஜாக்ரதவஸ்த்தையை - அதாவது - விழித்துக்கொள்வதைச் சொல்லுகையாலும், சரீரமும் ப்ராணனும் விழித்துக்கொள்கையும் பரமபுருஷனுக்குக் கிடையாதாகையாலும், இப்படி இவ்வாக்யத்தினடியிடை முடிவுகளில் ஜீவன் தோற்றுகையால் ஜீவனேஇங்கு புகழப்பட்டானென்று பூர்வபக்ஷம்,—உறக்கத்தில் "[Grantha]

த்மநா ஸம்பரிஷ்வக்த: ந பாஹ்யம் கிஞ்சந வேத நாந்தரம்” ஸர்வஜ்ஞனை பரமாத்மாவோடு இவ்வாத்மா சேர்ந்தவனாய் உள்ளும் வெளியு முள்ளவைகளை யொன்றையுமறிகிறதில்லை என்று ஸர்வஜ்ஞனை பரமாத்மாவை அஜ்ஞனை ஜீவனைக் காட்டிலும் வேறாகச்சொல்லுகையாலும், விழிக்கும்போதும், “ப்ராஜ்ஞேநாத்மநாந்வாரூட:” என்று ஸர்வஜ்ஞனை பரமாத்மாவினால் அதிஷ்டிக்கப்பட்டவனாக ஜீவ பரமபுருஷர்களுக்கு பேதம் சொல்லுகையாலும் இவன் பரமாத்மாவே யாக வேண்டும்—ஆத்யந்தங்களில் சரீரஸம்பந்தமுள்ள ஜீவனைச்சொல்லி பிறகு அஜ்ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லிற்று ஆகையால் உபக்ரமோபஸம்ஹார விரோதமில்லை. இடையில் விழித்துக்கொள்கை முதலிய அவஸ்த்தைகளைச் சொன்னதும் இவ்வவஸ்த்தைகள் ஜீவனுக்கொழிய இவ்வாத்மாவுக்குக் கிடையாதென்று சொல்லிற்றொழிய அவை இவனுக்குண்டென்று சொல்லவில்லை யாகையால் அவ்விரோதமும் கிடையாது ஆகையாலிவ்வாக்யம் பரமாத்மபரமென்று ஸித்தாந்தம். ௧௦௮

(ரா-ஸா.) “நேஹ நாநாஸ்தி” ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லையென்கையாலும், “தத்த்வமஸி” என்று ஜீவனும் பரமாத்மாவும் ஒன்றென்று சொல்லுகையாலும், முக்த புருஷனைக் காட்டிலும் பரமாத்மா பின்னனென்று சொல்லக்கூடாது என்கிற சங்கைக்கு ஸமாதாநம் சொல்லுகிறார். ஸுஷுப்திகாலத்திலும் உத்க்ராந்தி காலத்திலும் “ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்த:” ப்ராஜ்ஞேநாத்மநாந்வாரூட:” என்று மூடனாயிருக்கிற ஜீவனைக்காட்டிலும் அப்போதே பரமபுருஷனை ஸர்வஜ்ஞனாகச்சொல்லுகையாலே, ஒரேகாலத்தில் ஒருவனே அஜ்ஞனாகவும் ஸர்வஜ்ஞனாகவும் ஆகக்கூடாமையாலே, இவ்விருவருக்கும் ஐக்யம் சொல்லக்கூடாது. இவர்களுக்கு பேதமில்லையென்று சொன்னதுக்கு, குணம் த்ரவ்யத்தைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டாதுபோல் ஜீவனும் பரமாத்மாவைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டானென்று தாத்பர்யம். ௧௦௮.

ஸூ, ௧௦௯. பத்யாதிஶப்தேப்ய:.

(ஶ-ரா-ப்ர.) பத்யாதிஶப்தேப்ய: - (“ஸர்வஸ்யாதிபதி: ஸர்வஸ்ய வஶீ” இத்யாதிகளாலே ஆகாசசப்தவாச்யனை) பதிமுதலிய சப்தங்களினால், (விசேஷிக்கையாலே, ஸர்வத்திற்கும் அதிபதியாகிய இவன் பரமாத்மாவேயாகவேண்டும்.) ௧௦௯.

(ஶ-ரா-ஸா.) இவ்வாக்யத்தில் “ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந:” இத்யாதியாக இவ்வாத்மாவை ஸர்வஸ்வாமியாகச் சொல்லுகையால் இவன் ஜீவனைக் காட்டிலும் வேறான பரமாத்மாவாகக்கடவன். ௧௦௯.

௩-வது பாதம் ஸம்பூர்ணம்,

## ௪-வது பாதம்.



௩௰-௨_அ. ஸூ. ௧௧௦. ஆநுமாநிகமப்யேகேஷாமிதிசேந்ந ஶரீரரூபகவிந்யஸ்தக்ருஹீதேர் தர்ஶயதி ச.

(ஸ-ரா-வ்.) ஏகேஷாம் - ஒருவருடைய, (சாகையில்), ஆநுமாநிகம் அபி - (ஸாங்க்யர் சொல்லுகிற) ப்ரதாநமும், (ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டது), இதிசேத் - என்றால், ஶரீரரூபகவிந்யஸ்தக்ருஹீதேஃ - சரீரமாகிற ரூபகஸ்தாநத்தில் (ரதமாகச்) சொல்லப்பட்டதை க்ரஹிக்கை யாலே, ந - ப்ரதாநம் ஜகத்காரணமாகச்சொல்லப்படவில்லை தர்ஶயதி ச - ஶ்ருதியும் அப்படியே சொல்லுகிறது. ௧௧௦.

(ஸ-ஹா.) கீழ் - மோக்ஷார்த்தி ப்ரஹ்மத்தை யறியக்கடவனென்று சொல்லி அதற்கு லக்ஷணமும் சொல்லி, அந்த ஜகத்காரணமாகிய ப்ரஹ்மம் ஸாங்க்யர் சொல்லுகிற மூலப்ரக்ருதியாகலாமென்று சங்கித்து, ஜகத்காரணமாகிய வஸ்து ஸங்கல்ப ரூபஜ்ஞாநமுள்ளதாகச் சொல்லுகையால் அக்குணம் ஜடமான மூலப்ரக்ருதிக்குக் கிடையாதாகையால் வேதாந்தத்தில் மூலப்ரக்ருதி காரணமாகச்சொல்லப்படவில்லை என்று நிர்ணயித்தார்,—இங்கு கடவல்லியில் மூலப்ரக்ருதியைச் சொல்லுகையால் அதுவே ஜகத்காரணமாகலாம் என்கிற சங்கைக்கு, அதுவும் ப்ரஹ்மபரமென்று உத்தரம் சொல்லுகிறார். மற்ற அர்த்தம் ராமாநுஜபாஷ்யத்தில் காண்க. ௧௧௦.

(ரா-ஹா.) "இந்த்ரியேப்யஃ பரா ஹ்யர்தாஃ" என்று தொடங்கி "மஹதஃ பரமவ்யக்தமவ்யக்தாத் புருஷஃ பரஃ, புருஷாந்ந பரம் கிஞ்சித்" என்கிறவாக்யம் இந்தஅதிகரணத்திற்கு விஷயம்.—இங்கு அவ்யக்தமென்று ஸாங்க்யர் சொல்லுகிற ப்ரக்ருதியைச்சொல்லுமா, சொல்லாதா என்று ஸம்சயம்.—ஸாங்க்யர் சொல்லுகிற ஸ்ருஷ்டிக்ரமம் தோற்றுகையால் இந்த அவ்யக்தபதத்திற்கு அவர்கள் சொல்லுகிற ப்ரதாநமே அர்த்தமென்று பூர்வபக்ஷம்.—முன்வாக்யத்தில் சரீரத்தை ரதமாகவும் இந்த்ரியத்தைக் குதிரைகளாகவும் மநஸ்ஸைக் கடிவாளமாகவும் சொல்லி, இவ்வாக்யத்தில் இந்த்ரியாதிகளை அந்தந்தபதங்களினாலே சொல்லி, சரீரமென்று சொல்லவேண்டிய இடத்தில் அவ்யக்தம் என்று சொல்லுகையாலே அவ்யக்தபதத்திற்கு சரீரம் அர்த்தம் என்று ஸித்தாந்தம். ௧௧௦.

ஸூ. ௧௧௧. ஸூக்ஷ்மம் து ததர்ஹத்வாத்.

(ஸ-ரா-வ்.) ஸூக்ஷ்மம் - அவ்யக்தமே, (அவஸ்த்தாந்தரத்தை அடைந்து சரீரமாகிறது) ததர்ஹத்வாத் - அந்தசரீரத்துக்கே உபாஸநா நியோக்யதை உண்டாகையாலே, (காரணவாசி சப்தத்தினால் கார்யத்தைச் சொல்லுகிறது.) ௧௧௧.

(ஸ-ஹா.) அவ்யக்தம் என்றால் வ்யக்தமாகாதது, அதாவது கண்ணுக்ககப்படாதது என்று அர்த்தம். இவ்வர்த்தமுள்ள பதம் ஸ்தூலமாய்க் காண்கிற சரீரத்தை எப்படி சொல்லுமெனில் - சரீரம் அவ்யக்தமென்று சொல்லப்பட்ட மூலப்ரக்ருதியின் கார்யமாகையால் காரணத்தைச்சொல்லுகிறசப்தத்தினால் இங்கு கார்யம் சொல்லப்பட்டது "கோபிஃ ஶ்ரீணீத மத்ஸரம்" என்கிறவிடத்தில் பசுவைச்சொல்லுகிற கோபதத்திற்கு பசுவினிடத்தில் நின்றுமுண்டானபால் அர்த்தமாவதுபோல் இங்கும்

அவ்யக்தத்திலிருந்துண்டான சரீரம் அவ்யக்தபதத்தில் கர்த்தமென்று கண்டு கொள்க. ‹‹ஸோமம்›› இத்யாதிவாக்யத்திற்கு - பாலினால் ஸோமலதையைப் பாகம் செய்யக்கடவன் என்றர்த்தம். கக௧.

(ஸ்ரீ-ஹா.) அவ்யக்தமென்றால் மூலப்ரக்ருதிக்குப் பேராயிருக்க அந்தசப்தம் சரீரத்தை எப்படிச்சொல்லுமென்னில், சரீரம் அந்த மூலப்ரக்ருதியில் நின்று முண்டாகையாலே காரணவாசக சப்தத்தினால் கார்யத்தைச் சொன்னபடி. சரீரமே ப்ரக்ருதத்திற்சொல்லிய உபாஸநாதி கர்மங்களுக்கு யோக்யமாகையாலே வசீகார்யங்களைச் சொல்லுகிற இப்ப்ரகரணத்தில் சரீரத்தையே சொல்லவேண்டும். கக௧.

ஸூ. கக௨. தததீநத்வாத³ர்த²வத்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) தததீநத்வாத் - (சரீராதிகள்) அந்த பரமபுருஷாதீநமாகையாலே, அர்த²வத் - (இங்கு அவனைச்சொல்லுகை) ப்ரயோஜநமுடையதாயிருக்கும். கக௨.

(ஶ்ரு-ஹா.) அவ்யக்தத்திலிருந்து சரீரமும் மற்றஜகத்தும் உண்டாகிறதென்று நீங்களே ஒப்புக்கொண்டீர்கள். அதினால் ஜகத்துக்கு மூலப்ரக்ருதியே காரணமென்று நாங்கள் சொல்லுகிற அர்த்தமேஸித்தித்தது. இனியதை நீங்கள் தூஷித்தபடியென்னென்னில், அவ்யக்தம் ஜகத்காரணமென்பது ஸத்யம், ஆயினும் உங்களைப்போல் அந்த அவ்யக்தத்தை ஸ்வதந்த்ரமாக ஒப்புக்கொள்ளவில்லை. அது ஈஶ்வரனுடையசக்தி. அந்தசக்தியோடு கூடினவனாய் ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிறான். முக்தியையடைந்தவனுக்கு தத்வஜ்ஞாநத்தினால் அந்தசக்தி நசித்தபடியால் அவன் ஸ்ருஷ்டிக்கிறதில்லை இதுவே ஆகாசமென்றும் அக்ஷரமென்றும் மாயையென்றும் இப்படி பலவிதமாகச் சொல்லப்படும். இதனால் அவ்யக்தம் ஈஶ்வரனுக்குப் பராதீநமாய் ஜகத்காரணமாகிறதென்று சொல்லப்பட்டது. கக௨.

(ஸ்ரீ-ஹா.) ஆனால் இப்ப்ரகரணத்தில் ‹‹ புருஷாந்ந பரம் கிஞ்சித் ›› என்று பரமபுருஷனைச் சொல்லுவானென்னென்னில், சரீரம் இந்த்ரியம் ஆத்மா முதலிய ஸமஸ்தமும் அந்தர்யாமியான பரமபுருஷாதீநமாகையாலே அவனை வசீகரியாவிடில் உபாஸநம் நிறைவேறாதாகையால் அவனையும் வசீகரிக்க வேண்டுமென்கைக்காக பரமபுருஷனை இங்குச்சொல்லிற்றென்று தாத்பர்யம். கக௨.

ஸூ. ககங. ஜ்ஞேயத்வாவசநாச்ச.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ஜ்ஞேயத்வாவசநாச்ச - (மூலப்ரக்ருதியை) அறியவேண்டுகையாகச் சொல்லாமையாலும், (இது மூலப்ரக்ருதியன்று.) ககங.

(ஶ்ரு-ஹா.) அவ்யக்தத்தை யறிகை மோக்ஷஸாதகமென்றும் அதை உபாஸநம் செய்கை அணிமாதியான ஸித்திகளுக்கு ஸாதகமென்றும் ஸாங்க்யர்கள் சொல்லுகிறார்கள். அப்படியிங்கு அதையறியவேணுமென்றாவது உபாஸிக்கவேணுமென்றாவது சொல்லவில்லை. இந்த அவ்யக்தமென்கிற தேரை வசப்படுத்தினால் விஷ்ணுபதத்தை யடைவான் என்றே சொல்லிற்று ஆகையால் இது அவர்கள்சொல்லும் மூலப்ரக்ருதியன்று. ககங.

(ஸ்ரீ - ஹா.) அவ்யக்தமென்பது இங்கு மூலப்ரக்ருதியானால் ஸாங்க்யர்கள் மோக்ஷார்த்தமாக அதை அறியவேண்டுமென்று சொல்லுகையாலே, இங்கும் அப்படியே சொல்லவேண்டும். இங்கு அப்படிச்சொல்லாமையாலே இது ஸாங்க்யர் சொல்லுகிற மூலப்ரக்ருதியன்று. ககங.

ஸூ. ௧௧௪. வத³தீதிசேந்ந ப்ராஜ்ஞோஹி ப்ரகரணாத்.

(ஶ்ரீ-பா-வ்ய.) வத³தி - (மூலப்ரக்ருதிக்கு ஜ்ஞேயத்வம் மேல்வாக்யத்தில்) சொல்லுகிறது, இதிசேத் - என்றால், ந - அப்படியன்று, ப்ரகரணாத் - ப்ரகரணத்தினால், ப்ராஜ்ஞோஹி - ஸர்வஜ்ஞனான பரமபுருஷனே சொல்லப்படுகிறான். ௧௧௪.

(ஶ்ரீ-பா-ஸா.) "மஹத꞉பரம்த்⁴ருவம் நிசாய்ய தம் ம்ருத்யுமுகா²த் ப்ரமுச்யதே" என்கிற மேல்வாக்யத்தில் மஹத்தத்வத்தைக் காட்டிலும் மேலான மூலப்ரக்ருதியை அறிந்து பின்பு ஸம்ஸாரத்தில்நின்றும் விடப்படுவான் என்று மூலப்ரக்ருதிக்கும் ஜ்ஞேயத்வம் சொல்லியிருக்கையாலே இங்கு அவ்யக்தமென்று சொல்லுகிறது மூலப்ரக்ருதியே யாகவேணுமென்னில், அந்தமேல்வாக்யம் "அஶப்³த³மஸ்பர்ஶம்" என்று தொடங்கி பரமாத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே அந்தப்ரகரணத்தில் மூலப்ரக்ருதியைச் சொல்லமாட்டாது, ஆகையால் அங்கு பரமாத்மாவே சொல்லப்பட்டான். ௧௧௪.

ஸூ. ௧௧௫. த்ரயாணாமேவசைவமுபந்யாஸ꞉ ப்ரஶ்நஶ்ச.

(ஶ்ரீ-பா-வ்ய.) த்ரயாணாமேவ - உபாஸகன் உபாஸநம் உபாஸ்யன் இம்மூன்றுக்குமே, ஏவம் - இப்படி, உபந்யாஸ꞉ - (இப்ப்ரகரணத்தில், உபந்யாஸமும், ப்ரஶ்நஶ்ச - ப்ரஶ்நமும், (காண்கிறது.) ௧௧௫.

(ஶ்ரீ-ஸா.) இந்த ப்ரகரணத்தில் அக்நி, ஜீவன், பரமாத்மா இம்மூவர் விஷயமாகவே நசிகேதா என்பவர் கேட்டார். அவ்யக்தத்தைக் கேட்கவில்லை. ஆகையால் அதற்கு உத்தரம்சொல்லும்போதும் அம்மூன்றையுமே நிரூபிக்கவேண்டு மல்லது அவ்யக்தத்தைச்சொல்ல ப்ரஸக்தியேயில்லை. பரமார்த்தத்தில் ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமில்லாவிடினும் வ்யவஹாரதசையில் பேதமுண்டாகையால் அதைப்பற்றி வெவ்வேறாகக் கேட்டாரென் றறிக. ௧௧௫.

(பா - ஸா.) இப்ப்ரகரணத்தில், உபாஸகனான ஜீவன், உபாஸநமான பக்தி, உபாஸ்யனான பரமபுருஷன் இம்மூவரின் ஸ்வரூப ஸ்வபாவங்களே சிஷ்யன்கேட்கவும், அதற்கு குரு உத்தரம்சொல்லவும் காண்கிறது. மூலப்ரக்ருதிக்கு ப்ரஶ்நமும் உத்தரமும் காணவில்லை. ஆகையால் இங்கு ஜ்ஞேயனாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மா. ௧௧௫.

ஸூ. ௧௧௬. மஹத்³வச்ச.

(ஶ்ரீ-பா-வ்ய.) மஹத்³வச்ச- மஹத்தத்வத்தைப்போலவே, (அவ்யக்தமும் சொல்லப்படுகிறதில்லை. ௧௧௬.

(ஶ்ரீ - ஸா.) ஸாங்க்யர்கள் எந்த சப்தத்தினால் எவ்வஸ்துவைக் கூறுகிறார்களோ, வேதத்திலும் அந்தசப்தம் அவ்வஸ்துவையே கூறுமென்று நியமமில்லை. மஹத்து என்றால், அவ்யக்தத்தில் முதல்பரிணாமமாகிய நிர்விகல்பக ஜ்ஞாநமென்று சொல்லுகிறார்கள். வேதத்தில், "வேதா³ஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்று ஈஶ்வரனைச் சொல்லுகிறது. அதுபோல் இங்கும் அவ்யக்தமென்றாலும் அவர்கள் சொல்லுகிற ப்ரதாநமாகமாட்டாது ஆகையால் இங்கு ப்ரதாநம் சொல்லப்படவில்லை. ௧௧௬.

(ரா - ஸா.) "ஸோஶநாத்தாநுஹாநுவாத்" என்கிறவாக்யத்தில் மஹானென்பதை சேதநவாசியான ஆத்மசப்தத்தினால் விசேஷிக்கையாலே அந்தமஹத் சப்தம் அசேதநமான மஹத்தத்வத்தைச் சொல்லமாட்டாது. அதுபோலவே அவ்யக்தசப்தமும் ஸாங்க்யர்கள் சொல்லுகிற மூலப்ரக்ருதியாகமாட்டாது. கக௬.

அதி-௨௧. ஸூ. ககஎ. சமஸவதவிஶேஷாத்.

(ஶ-ரா-வ்ரு.) சமஸவத் - சமஸபதத்திற்குப்போல், அவிஶேஷாத்- விசேஷஹேதுவில்லாமையாலே, ("அஜா" என்கிறபதம் மூலப்ரக்ருதியைச்சொல்லாது.) ககஎ.

(ஶ-ரா-ஸா.) "அஜாமேகாம்லோஹித ஶுக்லக்ருஷ்ணாம் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமாநாம் ஸரூபா:" என்கிற வாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம். சிவப்பும் வெளுப்பும் கறுப்புமாய், அதாவது - ஸத்வரஜஸ்தமோமயமாய் தனக்கு ஸஜாதீயங்களான அநேகம் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கிறதுமான உத்பத்தியில்லாத ப்ரக்ருதியை ஒருவனடைகிறுன் மற்றொருவன்விடுகிறுன் என்று அர்த்தம். இதில் "அஜா என்கிறபதம் ஸாங்க்யர்சொல்லுகிற ப்ரஹ்மாத்மகமல்லாத ப்ரக்ருதியைச் சொல்லுமா சொல்லாதா என்று ஸம்சயம்.—"அஜா" என்று உத்பத்தியில்லையென்றும், அநேகம் ப்ரஜைகளைத் தானே ஸ்வதந்த்ரமாக ஸ்ருஷ்டிக்கிறதென்றும் சொல்லுகையாலே ஸாங்க்யர் சொல்லுகிற அப்ரஹ்மாத்மகமான மூலப்ரக்ருதியே அஜா சப்தத்திற் கர்த்தமென்று பூர்வபக்ஷம். அஜா என்றால் உத்பத்தி யில்லாதது என்று அர்த்தம். உத்பத்தியில்லாத வஸ்துக்கள் அநேகமாயிருக்க அவற்றிலொன்றான மூலப்ரக்ருதியையே இந்த சப்தம் சொல்லுகிறதென்று நிஶ்சயிக்கக்கூடாது. இவ்விதமான சப்தங்களுக்கு யௌகிகசப்தங்களென்று பெயர், அதாவது - தான் ஓரர்த்தத்தைச் சொல்லும்போது அதின்குணங்களைக்கொண்டு சொல்லுகை. இவ்விதமான சப்தங்கள் வ்யக்திவிசேஷங்களையே சொல்லத்தகுந்த மற்றொரு ஹேதுக்களில்லாவிடில் ஸ்வயமாக ஒருவ்யக்தியைக்காட்டாது. $ அதெப்படியென்றால்,—"அர்வாக்பிலஶ்சமஸ ஊர்த்வபுத்ந:" என்கிற வாக்யத்திற்கு கீழ்ப்புறம் த்வாரமுள்ளதும் மேல்பெருத்து மிருக்கிறது சமஸம் என்று அர்த்தம். சமஸமாவது - பக்ஷண ஸாதநமானது. இதில் சமஸசப்தத்திற்கு கீழ்ச்சொன்ன லக்ஷணங்களையுடைய பக்ஷண ஸாதநமான தெதுவென்னில் "இதம் தச்சிர:" என்று மேல்வாக்யத்தில் இந்த சமஸத்தை சிரஸ்ஸு என்று சொல்லுகையாலே அந்த ஹேதுவைக்கொண்டு இந்த சமஸசப்தத்திற்கு சிரஸ்ஸு அர்த்தமென்று நிஶ்சயிக்கப்படுகிறது. அதுபோல் ப்ரக்ருதத்தில் அஜாசப்தத்திற்கு விசேஷஹேது ஒன்றும் காணாமையாலே இது அப்ரஹ்மாத்மகமான மூலப்ரக்ருதியென்று நிஶ்சயிப்பது அரிது. மேலும் இது அநேகம் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கிறதென்று சொல்லிற்றல்லது ஸ்வதந்த்ரமாக ஸ்ருஷ்டிக்கிறதென்று சொல்லவில்லை. இந்தஸ்ருஷ்டி வேதாந்திகள் சொல்லுகிறபடி ப்ரஹ்மாத்மகமான ப்ரக்ருதிக்கும் கூடும் ஆகையால் இதனாலும் நிஶ்சயிக்கமுடியாது என்று ஸித்தாந்தம். ககஎ.

ஸூ. ககஅ. ஜ்யோதிருபக்ரமாத்து ததா ஹ்யதீயத ஏகே.

---

$ இதற்கு லோகத்ருஷ்டாந்தம்—பாசகன்-அதாவது சமையல் பண்ணுகிறவன் என்றால் இவ்வளவினால் இத்தொழிலையுடையவன் ஏற்படுகிறானல்லது இன்னானென்று ஏற்படான். பாசகன் ராமனென்றால் இன்னானென்றேற்படுவன் அதுபோலிருக்குமறிக.

(ஶ-வ்ரு.) ஜ்யோதிருபக்ரமா - தேஜஸ்ஸை ஆதியாக உடைய அக்நி ஜல அந்நங்கள் (அஜை - அதாவது ப்ரக்ருதியென்று சொல்லப்படுகிறது). ததாஹி - அப்படியே, ஏகே - ஒருசாகையை அத்யயனஞ்செய்பவர்கள், அதீயதே - அத்யயனம் செய்கிறார்கள். (ஒருசாகையில் இம்மூன்றையுமே ப்ரக்ருதியென்று சொல்லுகிறதென்று தாத்பர்யம். ககஅ.

(ரா - வ்ரு.) ஜ்யோதிருபக்ரமாது - (இங்கு சொல்லப்பட்ட ப்ரக்ருதி) பரமாத்மாவைக் காரணமாகஉடைய ப்ரஹ்மாத்மகமான ப்ரக்ருதியே சொல்லப்படுகிறது.) ததாஹி - அப்படியே, ஏகே - ஒருத்தர் (தைத்திரீயர்), அதீயதே - அத்யயனம் செய்கிறார்கள் (சொல்லுகிறார்கள்)

(ஶ-ஹா.) வாக்யசேஷத்தினால் சமஸபதத்திற்கு சிரஸ்ஸு என்றறிந்தோம் இங்கு அஜாசப்தத்திற்கு வாக்யசேஷத்தில் அர்த்தம் இன்னதென்று தோற்றவை. யால் எதைக்கொண்டு இந்த அஜாபதத்திற்கு அர்த்தம் தெரிந்துகொள்ளலாமென்னில், சாந்தோக்யத்தில் "யதக்நே ரோஹிதம் ரூபம் தேஜஸஸ்தத்ரூபம் யச்சுக்லம் தத்பாம் யத்க்ருஷ்ணம் தத்அந்நஸ்ய" என்கிறவாக்யத்தில், சிகப்பு வெளுப்பு கறுப்பு இம்மூன்றுகுணங்களையும் க்ரமமாக உடையது அக்நி ஜலம் அந்நம் இம்மூன்றும் என்று சொல்லிற்று. "அஜாமேகாம்லோஹிதசுக்லக்ருஷ்ணாம்" என்கிற வாக்யத்திற்கு சிகப்பு வெளுப்பு கறுப்பு இம்மூன்று குணங்களையுமுடையது அஜை என்று அர்த்தம். சிகப்பு வெளுப்பு கறுப்பு என்பது ரஜோகுண ஸத்வகுண தமோ குணங்கள். இம்மூன்றையுமுடையது மூலப்ரக்ருதி என்று ஸாங்க்யமதம். சிகப்பு வெளுப்பு கறுப்பு என்பது லோகத்திலும் வேதத்திலும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களில் வழங்கக் காணவில்லை மூன்றுவிதமாக ரூபங்களிலேயே வழங்கிவருகிறது. அம்மூன்று ரூபங்களையுமுடையது ப்ருதிவீ ஜல தேஜஸ்ஸுக்களென்று சாந்தோக்யத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே அதைக்கொண்டே இவ்வாக்யத்திற்கும் அர்த்தம் நிஶ்சயிக்கவேண்டும். ஆகையால் இங்கு அஜையென்பது மூலப்ரக்ருதியன்று. ககஅ.

(ரா-ஹா.) இங்கு சொல்லப்பட்ட ப்ரக்ருதி பரமாத்மாவினிடத்தில் நின்றும் பிறந்ததாய் ப்ரஹ்மாத்மகமாக வேதாந்திகள் சொல்லுகிற ப்ரக்ருதியே என்று நிஶ்சயிக்கப்படுகிறது. அதெப்படியெனில்,—தைத்திரீயசாகையில் "ஸர்வே நிமேஷா:" என்றுதொடங்கி ஸகலவஸ்துக்களும் பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பந்நங்களாகையாலே அவற்றை ப்ரஹ்மாத்மகமாக அநுஸந்திக்கவேண்டுமென்று சொல்லுகிற ஸமயத்தில் "அஜாமேகாம்" என்று ப்ரக்ருதியைச்சொல்லுகையாலே இந்தப்ரக்ருதியையும் ப்ரஹ்மாத்மகமாக அநுஸந்திக்கவேணுமென்றே நிஶ்சயிக்கப்படுகிறது. அதுபோலவே அம்மந்த்ரத்தோடு ஸமாநமாகிய இம்மந்த்ரத்திலும் அந்த ப்ரஹ்மாத்மகமான ப்ரக்ருதியேயாகவேண்டும் என்று நிஶ்சயிக்கப்படுகிறது ஆகையால் ஸாங்க்யர்சொல்லுகிற ப்ரஹ்மாத்மகமல்லாத ப்ரக்ருதி இங்கு சொல்லப்படவில்லை. ககஅ.

ஸூ. ககக. கல்பநோபதேஶாச்ச மத்வாதிவதவிரோத:.

(ஶ-வ்ரு.) மத்வாதிவத் - மதுமுதலானவைகளைப்போல், கல்பநோபதேஶாத் - (ஆடாகக்) கற்பித்துச் சொல்லுகையாலே, அவிரோத: - விரோதமில்லை. ககக.

(ரா-வ்ய.) கல்பநோபதேசாச்ச - உத்பத்தியை உபதேசிக்கையாலும், மத்வாதிவத் - (ஸூர்யனுக்கு) மதுஸ்வரூபம்போலே, அவிரோத:- (இந்த ப்ராக்ருதி உத்பந்நமென்றும் உத்பந்ந மல்லவென்றும் சொல்வதில் விரோதமில்லை. ௧௧௯.

(ஶ்ரு-ஹா.) அஜை என்கிற பதத்திற்கு ஜந்மமில்லாதது என்று அர்த்தமாயிருக்க அது ப்ருதிவீஜல தேஜஸ்ஸுக்களைச் சொல்லும்வகை யென்னென்னில், அஜைஎன்றால் பெண்ஆடு. அத்தோடொத்தது என்று அர்த்தம். சிகப்பு வெளுப்பு கறுப்பு இம்மூன்று ரூபங்களை யுடைய ஒருபெண்ஆடு எப்படி அநேகமான ஆடுகளை உண்டாக்குகிறதோ, அப்படியே ப்ருதிவீஜல தேஜஸ்ஸுக்களும் கீழ்ச்சொன்ன மூன்று ரூபங்களையுடையதாய் அநேகமான வஸ்துக்களை உண்டாக்குகிறதென்று இந்தவாக்யத்திற்குத் தாத்பர்யம். ஆகில் ஆட்டோடொத்ததென்று சொல்லவேண்டாவோ வென்னில், மதுஸ்வரூபியல்லாத ஸூர்யனை மதுவென்றும், வாக்கை காமதேநுவென்றும் த்ரிலோகத்தை அக்நியென்றும் அவ்வவகுணங்களைப்பற்றிச் சொல்வதுபோல் ஆட்டின் குணத்தைப்பற்றி இவற்றை ஆட்டைச்சொல்லுகிற சப்தத்தினால் சொல்லிற்று ஆகையால் இவ்வாக்யத்தில் ஸாங்க்யர்சொல்லுகிற மூலப்ரக்ருதி காரணமாகச் சொல்லப்படவில்லை என்று ஸித்தாந்தம். ௧௧௯.

௬ (ரா-ஹ.) ஆனால் இந்தப்ரக்ருதி "அஜா" என்று உத்பத்தி யில்லாததென்றும், "ஜ்யோதிருபக்ரமா" என்று பரமாத்மாவினிடத்திலிருந்து உண்டாயிற்றென்றும் சொல்லுகை பரஸ்பரவிருத்தமன்றோவென்னில், ப்ரளயகாலத்தில் இந்த ப்ரக்ருதி அதிஸூக்ஷ்மமாய் காரணாவஸ்த்தையை அடைந்து பரமாத்மாவுக்கு சக்திரூபமாயிருக்கிறதாகையால் அந்த அவஸ்த்தையைப்பற்றி இது உத்பத்தியற்றதென்றும், ஸ்ருஷ்டிகாலத்தில் முன் ஸூக்ஷ்மமாயிருந்த ப்ரக்ருதியை ஸ்தூலரூபமாகப் பரமாத்மா ஸ்ருஜிக்கையால் அந்த கார்யாவஸ்த்தையைப்பற்றி பரமாத்மாவினிடத்தில் நின்று முண்டாயிற்றென்றும் அவஸ்த்தா பேதங்களைப்பற்றிச் சொல்லுகையாலே விரோதமில்லை, இதற்கு த்ருஷ்டாந்தம்.—ஸூர்யனை மது என்று சொல்லியிருக்கிறது. மதுவாவது - வஸ்வாதிகள் அநுபவிக்கிற ரஸத்துக்கு ஆதாரமாயிருக்கை. மற்றோரிடத்தில் அந்த ஸூர்யனையே உதயாஸ்தமயங்களும் நாமரூபங்களும் இல்லாதவனென்று சொல்லியிருக்கிறது; இப்படி ரஸாஶ்ரயமான ரூபமுடையவனென்றும் ரூபமில்லாதவனென்றும் பரஸ்பரவிருத்தமாகச் சொல்லியிருக்கிறதற்குத் தாத்பர்யம், கார்யாவஸ்த்தையில் ரஸாதாரனென்றும், காரணாவஸ்த்தையில் நாமரூபங்களில்லாதவனென்றும் சொல்லிற்றென்று கொள்ளுகிறார்கள். அதுபோலவே இங்கும் கண்டுகொள்வது. ௧௧௯.

அதி-௩௦. ஸூ. ௧௨௦. ந ஸங்க்யோபஸங்க்ரஹாதபி நாநாபாவாததிரேகாச்ச.

(ரா - வ்ய.) ஸங்க்யோபஸங்க்ரஹாதபி - ("பஞ்சபஞ்சஜநா:" என்கிறவாக்யத்தில் இருபத்தைந்து என்கிற) ஸங்க்யை அர்த்தமாகக்கொண்டாலும், நாநாபாவாத் - (ஸாங்க்யர் ப்ரக்ரியையைக் காட்டிலும்) வேறுவிதமான ப்ரக்ரியை காண்கையாலும், அதிரேகாச்ச - இருப்புத்

தைந்தைக்காட்டிலும் அதிகமான தத்வம் காண்கையாலும், ந — (அந்தவாக்யத்தில்) இருபத்தைந்து தத்வங்கள் சொல்லப்படவில்லை. கஉ௦.

(ஶ்ரீ-பா-ஸா.) "யஸ்மிந் பஞ்ச பஞ்சஜநா ஆகாஶஶ்ச ப்ரதிஷ்டித:" இத்யாதி வாக்யம் இந்த அதிகரணத்துக்கு விஷயம்.—இந்தவாக்யத்தில் "பஞ்ச பஞ்ச ஜநா:" என்று ஸாங்க்யர் சொல்லுகிற இருபத்தைந்து தத்வங்கள் சொல்லப்படுகிறதா இல்லையா என்று ஸம்சயம்.—பஞ்சஜநா: என்றால் ஐந்து ஐந்து பேர்களாய்ச் சேர்ந்த கூட்டங்கள். அந்த கூட்டங்கள் ஐந்து என்றால், இருபத்தைந்து என்று அர்த்தம். இது மோக்ஷப்ரகரணமாகையால் இங்கு சொல்லப்பட்ட இருபத்தைந்து-ஸாங்க்யர் சொல்லுகிற இருபத்தைந்து தத்வங்களேயாக வேண்டும் என்று பூர்வபக்ஷம்.—இங்கு "பஞ்ச பஞ்சஜநா:" என்பதற்கு இருபத்தைந்து என்று அர்த்தமன்று. அப்படி யங்கீகரித்த போதிலும் "யஸ்மிந் பஞ்ச பஞ்சஜநா: ஆகாஶஶ்ச" எந்த ப்ரஹ்மத்தினிடத்தில் ஐந்தான பஞ்சஜநங்களும் ஆகாசமும் இருக்கிறதோ, (அந்தபரப்ரஹ்மத்தைத்யானித்து முக்தியையடைகிறான்) என்று ஐந்தான பஞ்சஜநங்களும் பரமாத்மாவை ஆதாரமாக உடையதென்று சொல்லுகையாலே ஸாங்க்யர் சொல்லுகிற ப்ரக்ரியை தப்பிவிட்டது ஆகையால் இங்கு ப்ரஹ்மாத்மகமானவற்றைச் சொல்லிற்றொழிய ஸாங்க்யர் சொல்லுகிற அப்ரஹ்மாத்மகமான இருபத்தைந்து தத்வங்கள் சொல்லப்படவில்லை. மேலும், அவர்கள் ஒப்புக்கொண்டது இருபத்தைந்து தத்வம். இங்கு அவற்றைக்காட்டிலும் அதிகமாய் அவற்றுக்கு ஆதாரமாக ஒன்றும், ஆகாசமும் சொல்லுகையாலே இது அவர்கள் சொல்லுகிற இருபத்தைந்து தத்வங்களாகமாட்டாது. கஉ௦.

ஸூ. கஉக. ப்ராணாதயோ வாக்யஶேஷாத்.

(ஶ்ரீ-பா-ப்ர.) வாக்யஶேஷாத்-வாக்யசேஷத்தினால், ப்ராணாதய:-ப்ராணன் முதலானவைகள் (பஞ்சஜநபதத்திற்கு அர்த்தமென்று நிஶ்சயிக்கப்படுகிறது.) கஉக,

(ஶ்ரீ-பா-ஸா.) முன்ஸூத்ரத்தில் "பஞ்ச பஞ்சஜநா:" என்கிற பதங்களுக்கு இருபத்தைந்து தத்வங்கள் அர்த்தமன்று. ஆனால் - பஞ்சஜநா: - பஞ்சஜநன் என்று பெயருடையவர்கள் ஐந்துபேர் என்று அர்த்தமென்று சொன்னார். அவர்கள் யாரென்னில் "ப்ராணஸ்ய ப்ராணம்" என்கிற மேல்வாக்கியத்தினால், ப்ராணன், சக்ஷுஸ், ஶ்ரோத்ரம், அந்நம், மநஸ்ஸு, ஆகிய இவ்வைந்துக்கும் பஞ்ச ஜநங்களென்று பெயர்; இவைகள் ஐந்து. "ஸப்த ஸப்தர்ஷய:" என்பதுபோல் சொல்லிற்றென்று நிர்ணயித்தார். கஉக,

ஸூ. கஉஉ. ஜ்யோதிஷைகேஷாமஸத்யந்நே.

(ஶ்ரீ-பா-ப்ர.) ஏகேஷாம்-ஒருவருடைய (காண்வர்களுடைய), (பாடத்தில்), அந்நே - அந்நம், அஸதி - இல்லாவிடினும், ஜ்யோதிஷா - ஜ்யோதிஶ்ஶப்தத்தினால், (பஞ்சஜநா: என்று சொல்லப்பட்டவைகள் இந்த்ரியங்களென்று நிஶ்சயிக்கப்படுகிறது.) கஉஉ,

(ஶ்ரீ-ஸா.) காண்வபாடத்தில் அந்நத்தைத்தவிர்த்து மற்றதனையுமே சொல்லுகையாலே ப்ராணன் முதலியவை ஐந்தென்று எப்படி சொல்லக்கூடுமென்னில்,

அம்மந்த்ரத்தில் ஐந்தாவதைச் சொல்லாவிடினும் அதற்குமுன் மந்த்ரத்தில் "தம் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்று சொல்லியிருக்கிற தேஜஸ்ஸையும் சேர்த்துக்கொண்டு ஐந்தாக எண்ணவேணுமாகையால் பாதையில்லை. கஉஉ.

(ரா - ஹா.) காண்வபாடத்தில் இவ்வாக்யத்தில் அந்நத்தைச் சொல்லாமல், மற்ற நாலையுமே சொல்லியிருக்க பஞ்சஜந பதத்திற்கு இந்த்ரியங்களென்று எப்படி அர்த்தநிஶ்சயம் பண்ணப்படும் என்னில், ஆரம்பத்தில் "தம் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்று ப்ரகாசகங்களுக்கெல்லாம் ப்ரகாசகனானவன் பரமாத்மா என்று சொல்லி, அந்தப்ரகாசகங்களென்று சொல்லப்பட்டவை எவையென்னில் "பஞ்சபஞ்சஜநா:" என்று ஸாமாந்யமாகச்சொல்லி பின்பு "ப்ராணஸ்யப்ராணம்" என்று விவரித்தது. முன்ப்ரகாசகங்களென்று சொல்லி அநந்தரம் அவை ஐந்தென்று விவரிக்கையால் பஞ்சேந்த்ரியங்களுமே ரூபாதிகளுக்கு ப்ரகாசகங்களாகையால் ப்ரகாசகவாசகமான ஜ்யோதிஶ்சப்தத்தினால் பஞ்சஜநபதத்திற்கு இந்த்ரியங்கள் அர்த்தமென்று நிஶ்சயிக்கப்படுகிறது. ப்ராணனென்றால் த்வகிந்த்ரியம், அந்நமென்றால் க்ராணேந்த்ரியமும் ரஸநேந்த்ரியமும். கஉஉ.

அதி. ஙக. ஸூ, கஉங. காரணத்வேந சாகாஶாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே:.

(ஶ-வ்ய.) ஆகாஶாதிஷு - ஆகாசம்முதலிய கார்யவஸ்துக்களின் ஸ்ருஷ்டியில் (பேதமுண்டாயினும்), யதாவ்யபதிஷ்டோக்தே: - அப்படிப்பட்ட குணங்களையுடையவனையே மற்றவாக்யங்களிலும் காரணமாகச்சொல்லுகையாலே, காரணத்வே - காரணத்வத்தில், ந - விவாதமில்லை. கஉங.

(ரா-வ்ய.) ஆகாஶாதிஷு - ஆகாசாதி பதங்களையுடைய வாக்யங்களில், காரணத்வே ந - காரணத்வவிசிஷ்டமாக, யதாவ்யபதிஷ்டோக்தே: - ஸர்வஜ்ஞத்வாதி குணவிசிஷ்டனையே சொல்லுகையாலே, (வேதாந்தவாக்யங்கள் பரமாத்ம பரங்கள்.) கஉங.

(ஶ-ஹா.) வேதாந்த வாக்யங்களில் ஓரிடத்தில் முன்னம் ஆகாசஸ்ருஷ்டியையும் மற்றோரிடத்தில், முன்னம் ப்ராணஸ்ருஷ்டியையும், வேறோரிடத்தில் முன்னம் ஜகத்ஸ்ருஷ்டியையும் இப்படி ஸ்ருஷ்டிக்ரமத்தில் ஒன்றுக்கொன்று விரோதமாகச் சொல்லியிருக்கையால் அவ்வாக்யங்கள் ப்ரமாணங்களாகமாட்டா. ஆகையால் அவற்றில் ப்ரஹ்மம் காரணம் என்று சொன்னதும் ப்ரமாணமாகமாட்டாது என்று பூர்வபக்ஷம் ஸ்ருஷ்டிக்ரமத்தில் ஒருவாக்யத்திற்கொருவாக்யம் விரோதமிருந்தாலும் ஸர்வஜ்ஞனை ஸர்வேஶ்வரனே ஜகத்காரணமென்று ஒருமிடறாக பரஸ்பரவிரோதமின்றி எல்லாவாக்யங்களிலும் சொல்லப்பட்டது. வேதாந்தத்திற்கு ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்று சொல்வதிலேயே முக்யதாத்பர்யம். ஜகத்ஸ்ருஷ்டிசொல்வது முக்யதாத்பர்யமில்லை. முக்யமானஅர்த்தத்தில் விரோதமுண்டாகில் அப்ரமாணமாகுமொழிய, அமுக்கியமான அர்த்தத்தில் விரோதமுண்டானாலும் அப்ரமாணமாகமாட்டாது. ஸ்ருஷ்டிக்ரமத்திலும் விரோதமில்லையென்பதையும் மேலே ஸூத்ரகாரர் சொல்லப்போகிறார். ஆகையால் வேதாந்தங்கள் அப்ரமாணங்களாகமாட்டாவென்று ஸித்தாந்தம். கஉரு.

(ரா - ஹா.) வேதாந்த வாக்யங்கள் ப்ரதாநத்தை ஜகத்காரணமாகச் சொல்லுகிறதா, பரமாத்மாவை ஜகத்காரணமாகச் சொல்லுகிறதா என்று ஸம்சயம்.—

"தத்3தே4த3ம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத் தந்நாமரூபாப்4யாம் வ்யாக்ரியத" என்று முதலில் அவ்யாக்ருத மிருந்ததென்றும், அதுவே நாமரூபங்களை யடைந்து ஜகத்ரூபமாகப்பரிணமித்ததென்றும் சொல்லுகிறது. அவ்யாக்ருதமென்றால் ப்ரக்ருதி. மற்றும் சிலஇடங்களில், "ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீத்" "அஸத்3வா இத3மக்3ர ஆஸீத்" என்று அஸத்தேமுதலிலிருந்தது என்று சொல்லுகிறது. இங்குச்சொல்லுகிற அஸத்பதத்துக்கு அர்த்தமேதுவென்னு மாகாங்க்ஷையில், முன்வாக்யத்தில் அவ்யாக்ருதமென்று சொன்ன ப்ரக்ருதியே யென்று நிஸ்சயிக்கப்படுகிறது. மற்ற ஸ்ருஷ்டி வாக்யங்களும் இவ்வாக்யங்களோடு ஸமாநார்த்தகங்களாக வேண்டுகையாலே அவ்வாக்யங்களிலும் இவற்றில் சொன்ன ப்ரக்ருதியே ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டதென்று பூர்வபக்ஷம் — "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம" என்று தொடங்கி "தஸ்மாத்3வா ஏதஸ்மாதா3த்மந ஆகாஶஸ்ஸம்பூ4த:" இத்யாதிவாக்யங்களில் ஸர்வஜ்ஞத்வ ஸத்யஸங்கல்பத்வாதி குணங்களையுடைய பரமபுருஷனே ஜகத்காரணமென்று சொல்லுகையாலே மற்றவாக்யங்களிலும் அக்குணங்களையுடைய பரமபுருஷனே ஜகத்காரணமாக ப்ரதிபாதிக்கப்பட்டானென்று நிஸ்சயிக்கப்படுகிறது. அவ்யாக்ருதமென்றாலும் அஸத் என்றாலும் நாமரூப விபாகங்களில்லை என்று அர்த்தம். காரணாவஸ்த்தையில் அந்த பரமபுருஷனுக்கு தேவாதிநாமரூப விபாக ஸம்பந்தமில்லாமையாலே அவனை அப்போது அஸத் என்றும் அவ்யாக்ருதம் என்றும் சொல்லுகிறது. ஆகையால் ஸகலகாரண வாக்யங்களும் பரமாத்மபரமென்று ஸித்தாந்தம். கஉடு.

ஸூ. கஉரு. ஸமாகர்ஷாத்,

(மூ.பா.வ்ய.) ஸமாகர்ஷாத் - (முன் ஸத்யஸங்கல்பனாகச் சொல்லப்பட்ட பரமபுருஷனையே இங்கு), ஆகர்ஷணம்பண்ணிக்கொள்ளுகையாலே, ("அஸத்" என்கிறவிடத்திலும் பரமாத்மாவேசொல்லப்படுகிறான்.) கஉரு

(மூ-ஸூ.) ஸ்ருஷ்டிக்ரமத்தில் பேதமிருந்தாலும் காரணவாதத்தில்பேதமில்லையென்றது கீழ்; இதில் காரணவாதத்திலும் பேதமுண்டென்று சங்கித்து அதை நிரஸநம்செய்கிறார். ஓரிடத்தில் "ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீத்" என்று ஸத்தினிடத்தில்நின்றும் ஜகத்துண்டாயிற்றென்றது மற்றோரிடத்தில் "அஸத்3வா இத3மக்3ர ஆஸீத்" என்று அஸத்தினிடத்திலிருந்து ஜகத்துண்டாயிற்றென்றது; ஆகையால் காரணவாதத்திலும் விரோதமுண்டென்னில் கீழ்ச்சொன்ன ஸத்ரூபமான ப்ரஹ்மத்தையே இங்கு அஸத்தென்று சொல்லுகிறது; "அஸத்3வா" என்கிற வாக்யம் கீழ்ச்சொன்னதின் விவரணமாகையால் அதற்கு இப்படியே அர்த்தம் சொல்லவேண்டும். அஸத்தென்றால் இல்லையென்று அர்த்தமன்று. பேருமுருவு மற்றதென்று அர்த்தமாய் ஸ்ருஷ்டிக்குமுன்புள்ள ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது ஆகையால் விரோதமில்லையென்கிறார். கஉரு.

(ஸா-ஸூ.) ஆனால், "அஸத்3வா இத3மக்3ர ஆஸீத்" என்று யாரைச்சொல்லுகிறதென்னில், "ஸோகாமயத ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயேய" என்று பூர்வம் "நான் நாநாரூபியாயாகக்கடவேன்" என்ற ஸங்கல்பமுள்ளவனாகச் சொல்லப்பட்ட பரமபுருஷனையே அநந்தரத்திலுள்ள இவ்வாக்யத்திலும் ஆகர்ஷித்துக்கொள்ளுகையாலே இங்கும் அவனையே சொல்லுகிறது. கஉரு.

கயி, ௩உ, ஸூ. கஉரு. ஜமஆாவிசுவாஜ.

(ஶ-ரா-வ்யா.) ஜமஆாவிசுவாஜ - (கர்மபதம்) ஜகத்துக்கு வாசகமாகையாலே, அறியத்தக்கவனுகச்சொல்லப்பட்டவன் பரமபுருஷன்.) கஉரு.

(ஶ-ரா-ஸா.) "யொவெவாஜாகவஜெதஷாம் வாராஷாணாம் கதாயஷ்வெதக்ஷவெதவ்யஃ" என்கிறவாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—இவ்வாக்யத்தில் அறியத்தக்கவனுகச் சொல்லப்பட்டவன் ஜீவனு, பரமபுருஷனு என்று ஸம்சயம்.—"யஷ்வெதக்ஷ" இந்த புண்யபாப ரூப கர்மம் எவனுக்கு உள்ளதோ, அவன் வேதிதவ்யன் என்று சொல்லுகையாலே புண்யபாபங்கள் பரமபுருஷனுக்கில்லாமையாலே அவற்றையுடைய ஜீவனே வேதிதவ்யனுகச் சொல்லப்பட்டான் என்று பூர்வபக்ஷம்.—கர்மம் என்றால் செய்யப்பட்டது. அதாவது லோகம், இப்படிச்சொல்லாவிடில் இந்தகர்மம் என்கைக்கு ப்ரயோஜநமில்லை. கர்மம் என்றாலேபோரும். ஆக, இந்தஜகத்து எவனுடைய ஸ்ருஷ்டியோ, அவன் என்று அந்தவாக்யத்துக்கு அர்த்தம் இந்த ஜகத்ஸ்ருஷ்ட்ருத்வம் ஜீவனுக்குக் கூடாமையாலே அதையுடைய பரமபுருஷனே இங்கு வேதிதவ்யனுகச் சொல்லப்பட்டவன் என்று ஸித்தாந்தம். கஉரு.

ஸூ. கஉசு. ஜீவமுவ்யவ்ராணலிஜாநெதிவெதவஸ்ராவ்யாதவு.

(ஶ-ரா-வ்யா). ஜீவமுவ்யவ்ராணலிஜாஜ - (இவ்வாக்யத்தில்) ஜீவபோதகமான லிங்கமும் முக்யப்ராணபோதகமான லிங்கமும் காண்கையாலே, ந-(இங்கு) பரமாத்மாவைச்சொல்லவில்லை, ஊதிவெஜ - என்றால், தஜ - அந்தவிஷயம், வ்யாவ்யாதவு - (முன்னமே) சொல்லப்பட்டது.

(ஶ-ரா-ஸா.) "ஸஜெதராதஷிஷஜெ" என்று இவன் புஜிக்கிருனென்று சொல்லுகிறது. போஜனம் ஜீவனுக்கேயல்லது பரமாத்மாவுக்குக் கிடையாது. "அயாஸ்மிநுவ்ராணஸஸ" என்று இவனைப் ப்ராணனுகவும் சொல்லியிருக்கிறது. இந்தஹேதுக்களாலே இவன் ஜீவனுவது ஆகவேண்டும், அல்லது ப்ராணனுவது ஆகவேண்டும், பரமாத்மா வாகக்கூடாது என்றால்,—பூர்வாபரவாக்ய ஸந்தர்ப்பங்களினுல் இவன் பரமாத்மாவென்று நிஶ்சயித்தபிறகு ஜீவாதிவாசக சப்தங்களும் ஜீவாதிசரீரகனை பரமாத்மாவையே சொல்லுகிறதென்ற இவ்வர்த்தம் முன்னமேவ்யாக்யாநம் செய்யப்பட்டது. இங்கும் அவ்விதமாகவே கொள்ளவேண்டும்.

ஸூ. கஉஎ. அநர்யாஷஜைமிநிஃ வ்ரஶ்நவ்யாவ்யாநாஷ்ரமவிவெவஶெகெ.

(ஶ-ரா-வ்யா.) அநர்யாஷம் - வேறு ப்ரயோஜனத்துக்காகவே, (இங்கு ஜீவனைச்சொல்லுகிறது). வ்ரஶ்நவ்யாவ்யாநாஷ்ரமவி - ப்ரஶ்நோத்தரங்களினுலேயும் (இவ்வர்த்தம் நிஶ்சயிக்கப்படுகிறது). (என்று), ஜைமிநிஃ - ஜைமிநிமஹர்ஷி சொன்னுர். ஸஜெ - சிலர் (வாஜஸநேயிகள்), ஸஸவு இவ்விதமான அர்த்தத்தையே) ஸ்பஷ்டமாகச்சொன்னுர்கள்.

(ஶ-ரா-ஸா.) ஸாஜாவும் அஜாத சத்ருவும், தூங்குகிற புருஷனிடம் சென்று ப்ராணனுடைய பேரைச் சொல்லிக்கூப்பிடுதல், தடியினுல் தட்டுதல் இவைமு

தலான வ்யாபாரங்களினால் சரீரேந்த்ரியாதிகளைக்காட்டிலும் அதிரிக்தனான ஜீவனொருவனிருக்கிறானென்று ப்ரதிபாதிப்பதாக இவ்வாக்யம் தோற்றுகையாலே பரமாத்மபரமாக மாட்டாதென்கிற பூர்வபக்ஷத்தில் சரீராதிகளைக்காட்டிலும் அதிரிக்தனாக ஜீவனிருப்பது போல், அவனைக்காட்டிலும் அதிரிக்தனாய் பரமாத்மா ஒருவனுண்டென்றுபதேசிக்கைக்காக இவ்வாக்யத்தில் ஜீவனைச்சொல்லிற்று. இதைஎப்படியறிகிறதென்றால்,—ப்ரஶ்நமும் உத்தரமும் பரமாத்மவிஷயமாகவே காண்கிறது. "கைஷ ததா பாலாகே ஶயிஷ்ட" என்று இதுவரையில் இந்தஜீவன் எங்கேபோய் படுத்துக் கொண்டிருந்தான் என்றது ப்ரஶ்நம். "அஸ்மின் ப்ராணஏவைகதா பவதி" என்று இதுவரையில் இந்தஜீவன் ஸகலப்ராணிகளுடைய ஜீவநஹேதுவான பரமாத்மாவினிடத்தில் ஏகீபவித்திருந்தான் என்றது உத்தரம். இந்த ப்ரஶ்நப்ரதிவசநங்களினால் இவ்வாக்யம் பரமாத்மபரமென்றே நிஶ்சயிக்கப்படுகிறது. இந்தஸம்வாதத்திலேயே வாஜஸநேயிகள் இவ்வாக்யத்தை "ய ஏஷோऽந்தர் ஹ்ருதய ஆகாஶ:" என்று பரமாத்மபரமென்று ஸ்பஷ்டமாகச்சொல்லிற்று. இவ்வர்த்தம் ஜைமினி முதலான பெரியோர்களுக்கும் ஸம்மதமானது. ௧௮.

அதி - ௩௩. ஸூ. ௧௯. வாக்யாந்வயாத்.

(ஶ்ரீ-பா-வ்ய.) வாக்யாந்வயாத் - பூர்வாபர ஸகலவாக்யங்களும் பரமாத்மாவினிடத்திலே அந்வயிக்கையாலே, (த்ரஷ்டவ்யனாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மா). ௧௯.

(ஶ்ரீ-பா-ஸா.) "ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி" இத்யாதி "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:" இத்யாதிவாக்யம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.—இங்கு த்ரஷ்டவ்யனாகச் சொல்லப்பட்டவன் ஜீவனோ, பரமாத்மாவா என்று ஸம்சயம்.—பதிஜாயா புத்ரபஶ்வாதிகள் ஆத்மாவுக்கு ப்ரியங்களாகிறதென்று சொல்லி அநந்தரம் அந்த ஆத்மாவை த்ரஷ்டவ்யனாகச் சொல்லுகையாலே பதிஜாயாதிகள் பரமாத்மாவுக்கு ப்ரியங்களாகாமையாலே இவன்ஜீவனேயாகவேண்டும்; அவனையே மேலும் த்ரஷ்டவ்யனாகச்சொல்லுகிறதென்று பூர்வபக்ஷம்.—எவனுடைய ஸங்கல்பத்தினாலே பதிஜாயாதிகள் பத்யாதிகளுக்கு ப்ரியமாக ஆகிறார்களோ, அவன் த்ரஷ்டவ்யனென்று அந்தவாக்யத்துக்கு அர்த்தம். ஸர்வேஶ்வரன் அவரவர்கள் கர்மாநுகுணமாக சிலவஸ்துக்களைப் ப்ரியமாகவும் சிலவஸ்துக்களை அப்ரியமாகவும் கற்பிக்கிறான். இவைகள் ப்ரியமாகுகை அவனுடைய ஸங்கல்பத்தினாலேயாகையாலே அந்த ஸர்வேஶ்வரனே த்ரஷ்டவ்யனென்று சொல்லப்பட்டவன். இப்படிசொன்னால் தான் பூர்வோத்தரஸகலவாக்யங்களும் ஸரஸமாக அந்வயிக்கும் என்று ஸித்தாந்தம். ௧௯.

ஸூ. ௨௦. ப்ரதிஜ்ஞாஸித்தேர்லிங்கமாஶ்மரத்ய:.

(ஶ்ரீ-பா-வ்ய.) ப்ரதிஜ்ஞாஸித்தே: - ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞாஸித்த்யர்த்தமாக, (ஜீவவாசகசப்தத்தினால் பரமாத்மாவைச் சொல்லிற்று) லிங்கம் - என்று, ஆஶ்மரத்ய: - ஆச்மரத்யர் சொன்னார். ௨௦.

(ஶ்ரீ-பா-ஸா) ஆனால் இப்ப்ரகரணத்தில் ஜீவனைச் சொல்லுவானேனென்னில், பரமாத்மஜ்ஞாநத்தினால் ஜீவாதி ஸகலவஸ்துக்களும் ஜ்ஞாதங்களாய்விடுக்

கன் என்று ப்ரதிஜ்ஞைபண்ணுகையாலே, ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லாமையாலே ஜீவவாசக சப்தத்தினால் பரமாத்மாவையே சொல்லிற்றென்று ஆஸ்மரத்யர் மதம். கஉக.

ஸூ. கஉ0. உத்க்ரமிஷ்யத ஏவம் பாவாதித்யௌடுலோமி:.

(ஶ்ரு.பா.வ்யா.) உத்க்ரமிஷ்யத: - (ஸம்ஸாரத்தில்நின்றும்) கிளம்பிப் போகப்போகிறவனுக்கு, ஏவம்பாவாத் - ப்ரஹ்மபாவம் உண்டாகையாலே, (ஜீவவாசகசப்தத்தினால் பரமாத்மாவைச் சொல்லிற்று), இதி - என்று ஔடுலோமி: - ஔடுலோமி சொன்னார். கஉ0.

(ஶ-ஹா.) ஸம்ஸாரத்திலிருக்கும் வரையில் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமிருந்தாலும் முக்திதசையில் பேதமில்லையாகையாலே அந்த அபேதத்தைப் பற்றி ஜீவவாசகசப்தத்தினால் பரமாத்மாவைச் சொல்லிற்றென்று ஔடுலோமி மதம். கஉ0.

ஸூ-கஉக. அவஸ்திதேரிதி காஶக்ருத்ஸ்ந:.

(ஶ்ரு.பா-வ்யா.) அவஸ்திதே: - (ஜீவனிடத்தில் பரமாத்மா அந்தர்யாமியாய்) இருக்கையாலே, ஜீவவாசகசப்தத்தினால் பரமாத்மாவைச் சொல்லிற்று), இதி - என்று, காஶக்ருத்ஸ்ந: - காசக்ருத்ஸ்நர் சொன்னார். கஉக.

(ஶ-ஹா.) பரமாத்மாவே ஜீவரூபியாயிருக்கையால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லிற்று என்று காசக்ருத்ஸ்நர் சொன்னார். இதுவே ஸூத்ரகாரருடைய ஸித்தாந்தமாகக்கடவது. கஉக.

(ரா-ஹா.) ஜீவாத்மாவுக்குப் பரமாத்மா சரீரியாகையாலே தேவதத்தாதி சரீரவாசகசப்தங்கள் அந்த சரீரமுள்ள ஆத்மாவைச் சொல்லுவதுபோல் ஜீவவாசகசப்தமும் ஜீவசரீரியான பரமாத்மாவைச் சொல்லுகிறதென்றபிப்ராயத்தினால் ஜீவவாசகசப்தத்தினால் பரமாத்மாவைச் சொல்லிற்றென்று காசக்ருத்ஸ்நமதம் இதுவே ஸூத்ரகாரமதம். கஉக.

கயி-கூச. ஸூ. கஉஉ. ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானுபரோதாத்.

(ஶ்ரு.பா-வ்யா.) ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானுபரோதாத்-(ஏகவிஜ்ஞானேந ஸர்வவிஜ்ஞாந) ப்ரதிஜ்ஞைக்கும் த்ருஷ்டாந்தத்துக்கும் விரோதம் வாராமைக்காக ப்ரக்ருதிஶ்ச - உபாதாநகாரணமும், (பரமபுருஷனே). என்றங்கீகரிக்கவேணும். கஉஉ.

(ஶ-ஹா.) ஜகத்காரணமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மம் "பஹுஸ்யாம்" நானே ஜகத்ரூபியாக ஆகக்கடவேனென்று ஸங்கல்பித்துக்கொண்டு ஸ்ருஷ்டித்ததென்கையாலே சேதநமாகிய மூலப்ரக்ருதிக்கு இவ்விதமான ஸங்கல்பங்கூடாதாயினும் ஸத்வரஜஸ்தமோமயமாய் ஜடமாகக்காண்கிற இஜ்ஜகத்திற்குக்காரணம் இத்தோஷஸஜாதீயமேயாகவேண்டும் சைதன்யமுள்ளப்ரஹ்மத்திற்கு இக்குணங்களில்லையாத.லோகத்தில்கடமகலசாதிகளுக்கு அத்தோஷஸஜாதீயமான ம்ருத்பிண்டம்முதலியதை உபாதாநமாகவும் சைதந்ய முள்ளவன் நிமித்த காரணமாகவும் காண்கிறது. அதுபோல ஜகத்துக்கும் நிமித்தகாரணமீச்வரனாயினும் உபாதாநகாரணம் மூலப்ரக்ருதியே யென்

று சொன்ன ஸாங்க்யனைக்குறித்து,—ப்ரஹ்மஜ்ஞாநத்தினால் உலகமெல்லாம் அறிந்ததாய்விடும் என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, அது எப்படி கூடுமெனில், ம்ருத்பிண்டத்தையறிந்தால் அதில்நின்று முண்டான கடகலசாதிகள் ம்ருத்விகாரங்களென்று அறியப்படுவதுபோல் என்று உதாஹரணம் காண்பித்தது ஶ்ருதி. இதனால் கடத்துக்கு ம்ருத்துப்போல் ஜகத்துக்கு ப்ரஹ்மம் உபாதாநகாரணமுமாகிறது என்று அங்கீகரிக்கவேண்டும் என்று உத்தரம் சொல்லுகிறார். கஙஉ.

(பா-ஹா.) ஸர்வேஶ்வரன் ஜகத்துக்குநிமித்தகாரணமாத்ரமா உபாதாநகாரணமாகவும் ஆகிறனா என்று ஸம்சயம்—கடகலசாதிகார்யங்களுக்கு உபாதாநமாகிய ம்ருத்திகைகளுக்கும நிமித்தகாரணமாகிய தண்டசக்ராதிகளுக்கும அபேதம் காணாமையாலே ஒருகார்யத்துக்கு நிமித்தோபாதாநங்கள்வெவ்வேறாகவேயாகவேண்டும்.ஜகத்துக்கும் ஈஶ்வரன் நிமித்தமாத்ரமேயாகிறான். உபாதாநமானால் பரிணாமாதி தோஷங்களும் ஸம்பவிக்கும்; இப்பரிணாமாதிகள் நிர்விகாரனான ஸர்வேஶ்வரனுக்கு ஸம்பவியாது ஆகையால் இவன் நிமித்த மாத்ரமே யென்று பூர்வபக்ஷம்.—ம்ருதாதிகளுக்கு ஸர்வஜ்ஞத்வமும் குலாலாதிகளுக்கு ஸர்வசக்தியுமில்லாமையாலே அவைகள் ப்ரதயேகம் இருவகையான காரணங்களாகாவிடினும், ஸமஸ்தவஸ்து விலக்ஷணனாய்,ஸர்வஜ்ஞனாய்,ஸர்வசக்தனாய், சிதசித்சரீரகனாய் சாஸ்த்ரைகவேத்யனானஸர்வேஶ்வரனுக்கு நிமித்தோபாதாநகாரணத்வங்களிரண்டும்கூடும். தேவதத்தாதிகள் பாலனாயும்யுவாவாயும் வ்ருத்தனாயும் பரிணமித்தாலும் அந்தபால்யயௌவனாதிகள் சரீரமாத்ரத்திலேயாய் ஆத்மாவுக்குதத்ஸம்பந்த மில்லாதாப்போலே ஸூக்ஷ்மசிதசித் சரீரகனான ஸர்வேஶ்வரன் உபாதாநமாகையால் இவன் ஜகதாகாரமாகப்பரிணமிக்கும்போது. அப்பரிணாமம் தன்சரீரமாகிய சிதசித்வஸ்துகதமாகையால் நிர்விகாரனாகிய தனக்குபரிணாமாததோஷமும் ஸம்பவியாது. மேலும் பரமாத்மஜ்ஞாநத்தினால், ஸர்வமும் ஜ்ஞாதமாகிறதென்று சொன்னப்ரதிஜ்ஞையும் ம்ருத்கடாதித்ருஷ்டாந்தமும் இவ்வர்த்தத்திலேயேஸங்கதமாகும். அதெப்படியெனில், நிமித்தமானகுலாலாதிஜ்ஞாநத்தினால் கலசாதிகார்யங்கள் இன்னஸ்வரூபமென்றறியப்படமாட்டா. உபாதாநமான ம்ருத்பிண்டஜ்ஞாநத்தினால் கலசாதி கார்யங்கள் மண்ணென்றறியப்படுகின்றன. அதுபோலவே ஈஶ்வரன் உபாதாநமானாலே இவனுடைய ஜ்ஞாநத்தினால் ஜகத்தும் ஜ்ஞாதமாகும் ஆகையால் ஜகத்துக்கு ஸர்வேஶ்வரன் உபாதாநகாரணமு மாகிறானென்று ஸித்தாந்தம். கஙஉ.

ஸூ. கஙங. அபித்யோபதேசாச்ச.

(ஶ்ரு-பா-வ்யா.) அபித்யோபதேசாச்ச - ("பஹுஸ்யாம்") என்று பரமபுருஷனே நானே ஜகதாகாரமாக பஹுவிதமாகப் பரிணமிக்கிறேன் என்று) ஸங்கல்பித்துக்கொண்டானென்று சொல்லுகையாலும் (உபாதாநகாரணமாகிறான்.) கஙங.

ஸூ. கஙச. ஸாக்ஷாச்சோபயாம்நாநாத்.

(ஶ்ரு-பா-வ்யா.) ஸாக்ஷாத் - நேராகவே, உபயாம்நாநாச்ச - நிமித்தோபாதாந காரணத்வங்களாகிற இரண்டும் (பரமாத்மாவுக்குச்) சொல்லுகையாலும், (உபாதாநகாரணமாகிறான்.) கஙச.

(ஶ்ரு-பா.) "ஸர்வாணி ஹவா இமானி பூதானி ஆகாஶாதேவ ஸமுத்பத்யந்தே ஆகாஶம் ப்ரத்யஸ்தம் யந்தி" என்று ஸகலவஸ்துக்களும் ஆகாசமென்

கிற ப்ரஹ்மத்தினிடத்தினின்று முண்டாகிறது கடைசியில் அதிலே லீநமாய் விடுகிறதென்று சொல்லிற்று. லோகத்தில் தாங்யம் முதலியவைகள் மண்ணினின்றுமுண்டாய் மண்ணிலேயே கடைசியில் லீனமாய்ச்சேருகின்றன. ஆகையால் அவற்றுக்கு மண் உபாதானமாகிறது; அதுபோலவே ஜகத்தின் உத்பத்திலயங்களுக்கு ஆதாரமாகிய ப்ரஹ்மமே உபாதாந காரணமாகக்கடவது. க௱ச.

(ஸா-ஹா.) "கிம்ஸ்வித் வநம்" என்று தொடங்கி இந்த ஜகத்துக்கு உபாதாந காரணமெது, நிமித்தகாரணமெது என்று கேட்டதற்கு; "ப்ரஹ்ம வநம்" என்று தொடங்கி, பரப்ரஹ்மமே உபாதாநமும் நிமித்தமும் என்று சொல்லுகையாலே பரமபுருஷன் உபாதாந மாகக்குறையில்லை. க௱ச.

ஆத்மக்ருதே:-பரிணாமாத்.

(ஸூ - வ்ய.) ஆத்மக்ருதே:- தனக்கேகர்த்ருத்வம் சொல்லுகையாலே (ப்ரஹ்மம் உபாதாநகாரணம். அதெப்படி சேருமெனில்), பரிணாமாத் - (ஜகத்ரூபமாகத் தன்னைப்) பரிணமிப்பிக்கையாலே. (க௱ரு-க௱சா)

(ஶ்ரு-ஹா.) இந்த பாஷ்யத்திற்கு "ஆத்மக்ருதே: பரிணாமாத்" என்பது ஒரேஸூத்ரம்—"ததாத்மாநம் ஸ்வயமகுருத" என்று ப்ரஹ்மம் தன்னையே ஜகத்ரூபமாகத்தானே செய்தது என்கையாலேதானே ஜகத்துக்கு உபாதாநமும் நிமித்தமும் ஆகிறது. ஆனால் லோகத்தில் ம்ருத்ஸுவர்ணம் முதலியவை கடமாகவும் குண்டலமாகவும் பரிணமிப்பது மற்றொருவன் செய்கையினால் இங்கு மற்றொருவன் செய்கையன்றியே ப்ரஹ்மம் ஸாமர்த்யமுள்ளதாகையால் தன்னைத்தானே இவ்விதமாகப் பரிணமிப்பித்தது "ஆத்மக்ருதே:" என்பது ஒருஸூத்ரமும், "பரிணாமாத்" என்பது வேறுஸூத்ரமுமாகலாம், அப்போது முதலுக்கு முன்போலவே அர்த்தம் இரண்டாம் ஸூத்ரத்திற்கு விகாரியாகிய இஜ்ஜகத் ஸ்வரூபமாக ப்ரஹ்மமாயிற்று என்று "ஸச்ச த்யச்சாபவத்" என்கிறவாக்கியத்திற் சொல்லுகையாலும் ஜகத்துக்கு ப்ரஹ்மம் உபாதாநகாரணமென்பது ஸித்தம் என்று. (க௱ரு-க௱சா.)

ஸூ. க௱ரு. ஆத்மக்ருதே:.

(ஸா - வ்ய - ஹா.) ஆத்மக்ருதே: - "ததாத்மாநம் ஸ்வயமகுருத" என்று தன்னையே (ஜகத்ரூபமாகச்) செய்கிறானென்று சொல்லுகையாலும் (உபாதாநகாரணமாகிறான்.) க௱ரு.

ஸூ. க௱சா. பரிணாமாத்.

(ஸா - வ்ய.) பரிணாமாத் - (சிதசித்வஸ்து சரீரகனான பரமபுருஷனே ஜகத்ரூபமாகப்) பரிணமிக்கையாலே, (ஜகத்கததோஷம் பரமபுருஷனுக்கு ஸம்பவியாது.) க௱சா.

(ஸா-ஹா.) பரமபுருஷனே ஜகத்ரூபமாகப் பரிணமித்தால் அவனுக்குள்ள அநவதிகாதிசயஜ்ஞாநாநந்தாதி குணங்கள்போய் ஜகத்கதமான துக்கம் அஜ்ஞாநம் முதலிய தோஷங்கள் சம்பவிக்குமே யென்னில், ப்ரஹ்மம் அவித்யையினால் ஆவரிக்கப்பட்டு ஜகத்ரூபமாகப்பரிணமிக்கிறதென்று சொல்லுகிற அத்வைதமதத்தில் இத்தோஷங்கள் ஸம்பவிக்கும். நாமரூப மற்றதாய் ஸூக்ஷ்மமாயிருக்கிற சிதசித்சரீரகனான பரமபுருஷன் ஸ்தூலசிதசித் விசிஷ்டனாகப் பரிணமிக்கிறானென்று வேதாந்திகள்

மதம். இம்மதத்தில் துக்கம் அஜ்ஞானம் முதலிய தோஷங்கள், சித்சித்துக்களுக்கே யுள்ளது, சரீரத்திலுள்ள கறுப்பு வெளுப்புமுதலிய வர்ணங்கள் ஆத்மாவுக்குஸம்பவியாதுபோலே இத்தோஷங்கள், இவற்றுக்கு ஆத்மாவான ஸகலகல்யாணகுணாகரனான பரமபுருஷனுக்கு ஸம்பவியாது. கஙகூ.

ஸூ. கஙஎ. யோநிஶ்ச ஹிகீயதே.

(ஶ-ரா-வ்ய.) ஹி - எந்தகாரணத்தினுல், யோநிஃச - உபாதாநகாரணமாகவும், கீயதே - சொல்லப்படுகிறனோ, (அக்காரணத்தினுல் பரமபுருஷன் உபாதாநகாரணமாகிறுன்.) கஙஎ

(ஶ ரா-ஸா.) "யத்பூதயோநிம்" என்றும் "கர்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோநிம்" என்றும் இவனை ஜகதுபாதாநமாகச் சொல்லுகையாலேயும் இவன் உபாதாநகாரணமாகவு மாகிறுன். யோநி யென்று உபாதாநகாரணம். கஙஎ.

கயி-கரு. ஸூ. கஙஅ. ஏதேந ஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யாதா:,

(ஶ-ரா.வ்ய.) ஏதேந-இந்த ந்யாயஸமுதாயத்தினுலே, ஸர்வே-ஸகலவேதாந்த வாக்யங்களும், வ்யாக்யாதா: - வ்யாக்யாநம் செய்யப்பட்டன. கஙஅ.

(ஶ-ஸா.) இந்த ப்ரதாந காரணவாதம் கபிலர்முதலிய சிலபெரியோர்களினுல் அங்கீகரிக்கப்பட்டும், அதற்குத்தக்கபடி வேதாந்தமாகிய உபநிஷத்துக்களில் இந்த மூலப்ரக்ருதியைக் காரணமாகச்சொல்வதுபோல் சிலஆபாஸ யுக்திகள் காண்கையாலும் அல்பபுத்திகளுக்கு அம்மதம் நம்பக்கூடியதாயிருக்குமென்று ஸூத்ரகாரர் மற்றமதங்களை விட்டு இம்மதத்தையே ப்ரதாநமாகக்கண்டநம் செய்தார். இதைப்போலவே பரமாணுகாரணவாதம் முதலியவையும் வேதங்களிலெங்கும் சொல்லப்படாமையால் அம்மதங்களும் நம்பத்தக்கவைகளல்லவென்று இதில் மற்றஅவைதிகமதங்களை யெல்லாம் நிரஸநம் செய்கிறுர். கஙஅ.

(ரா-ஸா.) "ஜந்மாத்யஸ்ய யத:" என்று தொடங்கி இதுவரையிற் சொன்ன ந்யாயகலாபங்களைக்கொண்டே இங்கு விசாரம்செய்யாத ஸகலவேதாந்த வாக்யங்களும் பரமபுருஷப்ரதிபாதகங்களென்று அர்த்தநிர்ணயம் செய்துகொள்ளவேண்டியது. "வ்யாக்யாதா:" என்கிறபதத்தை இரண்டாவ்ருத்திசொன்னது, அத்யாயம் முடிந்ததென்று ஸூசிப்பிக்கைக்காக. கஙஅ.

முதல் அத்தியாயத்தில் நாலாவது பாதம் முடிந்தது.

ப்ரதமாத்யாயம் ஸம்பூர்ணம்.



# உ - வது அத்யாயம்.

## க - வது பாதம்.

அதி - ௩௬. ஸூ - ௧௩௯. ஸ்ம்ருத்யநவகாஶ தோஷப்ரஸங்க இதி சேந்நா
ந்யஸ்ம்ருத்யநவகாஶதோஷப்ரஸங்காத்.

(ஶ-ரா-வ்யா.) ஸ்ம்ருத்யநவகாஶதோஷப்ரஸங்க: - (கபிலஸ்ருதியை உபப்ரும்ஹணமாகக் கொள்ளாவிடில்) அந்தஸ்ம்ருதக்கு (அதைக்கொண்டு அர்த்தநிர்ணயம் பண்ணுகையாகிற) அவகாசமின்மையாகிய தோஷம் ப்ரஸங்கிக்கும் (வரும்). இதிசேத் - என்றால், ந அந்யஸ்ம்ருத்யநவகாஶதோஷப்ரஸங்காத் - வேறான (மந்வாதி) ஸ்ம்ருதிகளுக்கு அவகாசமின்மையாகிற தோஷம் ப்ரஸங்கிக்கையாலே, ந-கபிலஸ்மருதியை உபப்ரும்ஹணமாகக்கொள்ளக்கூடாது. ௧௩௯.

(ஶ-ஹா.) முதல் அத்யாயத்தில் ஜகத்ஜந்மஸ்திதிலயகாரணம் ஸர்வஜ்ஞமான பரப்ரஹ்மமென்று நிர்ணயித்து மூலப்ரக்ருதி முதலியவற்றுக்கு ஜகத்காரணத்வம் இல்லையென்று நிரஸநம் செய்யப்பட்டது இதில் மூலப்ரக்ருதி முதலியவற்றை ஜகத் காரணமென்று சொல்லுகிற ஸாங்க்யாதி மதங்களிலுள்ள தோஷங்களை வெளியிடாவிடில் மந்தமதிகளான ஜனங்கள் அம்மதத்தை நம்பி அதையநுஸரித்து வேதங்களுக்கும் அபார்த்தங்களைச் சொல்லிக்கெட்டுப் போவார்களென்று அம்மதங்களில் தோஷத்தை தர்சிப்பிப்பாராக முயன்ற ஸ்ரீவேதவ்யாஸபகவான், முதலில் ஜைநபௌத்தாதி மதங்களைப்போல் கேவலம் வேதபாஹ்யமன்றியே வேதஸம்மதமான சிலஅர்த்தங்களைச்சொல்லுமதாய் சிஷ்டபரிக்ருஹீதமாய், இந்தஹேதுக்களினால் இம்மதம் வைதிகமென்கிற ப்ரமஜநகமாயிருக்கிற ஸாங்க்யபாதஞ்சலமதஸ்தர்களுக்குத்தரம் சொல்லுகிறார். ஸாங்க்யர்கள் வேதார்த்தம் மந்தமதிகளினால் நிர்ணயிக்கப்போகாது, ஸ்ம்ருதிகளைகொண்டே அவ்வர்த்தங்களை அறியவேணும், ஆகையால் வேதத்தில் ஸர்வஜ்ஞமானப்ரஹ்மம் ஜகத்காரணமென்று மேலெழத்தோற்றிலும் அவ்வர்த்தம், ஸர்வஜ்ஞராய் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் அவதாரமாகச்சொல்லப்பட்ட ஆப்ததமரான கபிலமஹர்ஷிவேதார்த்தத்தை நிர்ணயிக்கைக்காகச்செய்த ஸாங்க்யமதத்தைக்கொண்டே நிர்ணயிக்கத்தக்கது. அம்மதத்தில் மூலப்ரக்ருதியே ஜகத்காரணமென்று கூறையிடுகிறது, ஆகையால் இதற்கநுகுணமாகவே வேதார்த்தத்தையறுதியிட்டு வேதத்திற்கும் ப்ரதாநகாரணவாதத்திலே தாத்பர்யமென்றங்கீகரிக்கவேண்டும், மற்றமந்வாதி ஸ்ம்ருதிகளில் ப்ரஹ்மமேகாரணமென்று சொல்லியிருக்கினும், அந்த ஸ்ம்ருதிகளில் வர்ணாஶ்ரமாசாரங்களையும் மற்றுமுள்ள தர்மங்களையும் சொல்லியிருக்கையால் அவ்வர்த்தங்களில் அவைகள் ப்ரமாணமாய் ப்ரயோஜநவத்தாகக்கடவன, இந்த கபிலஸ்ம்ருதி அப்படியன்றியே கேவலமோக்ஷத்தைப்பற்றியே சொல்லுகிறதாகையால் அவ்விஷயத்திலும் இதப்ரமாணமாகில் இதுண்டானதற்கு ப்ரயோஜநம் காணாமையால் வ்யர்த்தமாய்விடும், அதற்காக இவ்வர்த்தத்தில் மற்ற ஸ்ம்ருதிகளைவிட்டு இதையே அவலம்பிக்கவேண்டும் என்றுசொன்னார்கள். இப்பூர்வபக்ஷத்தை, இரண்டு ஸ்ம்ருதிகளில் ஒன்றுக்கொன்று விரோதம்தோற்றினால் அவற்றில் எந்தஸ்ம்ருதிவேதத்துக்கிணங்கிருக்கிறதோ அதையே யங்கீகரிக்கவேண்டும், ஆகையால் வேதார்த்தத்

தோடு விரோதித்த கபிலஸ்ம்ருதியினர்த்தம் அங்கீகரிக்கத்தக்கதன்று. மேலும் இதொன்றுமே ப்ரதாநகாரணவாதம் சொல்லுகிறது; இதொன்றுக்காக,பரமாத்மகாரணவாதம் சொல்லுகிற மற்றுமுள்ள அநேகம்ஸ்ம்ருதிகள் இதிஹாஸங்கள் புராணங்கள் பகவத்கீதையாகிய இவ்வளவுக்கும் அப்ராமாண்யம் சொல்வதுசரியன்று,மேலும் வேதத்தில் ஆப்ததமராகச் சொல்லப்பட்டகபிலர், ஸகரபுத்ரர்களை நீறுக்கின வாஸுதேவாவதாரமானகபிலரொழிய அந்யவதாரமாகிய இக்கபிலர் சொல்லப்படவில்லை, மேலும் இந்த ஸ்ம்ருதிப்ரமாணம், மற்றவை அப்ரமாணமென்றால், மற்றவை ப்ரமாணம் இதே அப்ரமாணமாக வேணுக்கூடாது, ஆகையால் இவ்வர்த்தம் ப்ராமாணிகமாக நம்பத்தக்கதன்று என்று நிரஸித்தார். ௧௩௧.

(ரா-ஹா.) முதல்அத்யாயத்தில் ப்ரஹ்மமேஜகத்காரணமென்று சொல்லிற்று இந்தஅத்யாயத்தில் அதின்மேல்வரும் சங்கைகளைப்பரிஹரித்து அதையேத்ருடீகரிக்கிறது. கபிலஸ்ம்ருதியில் மூலப்ரக்ருதி ஜகத்காரணமென்று சொல்லிற்று.அந்த யுக்திகளினால் ப்ரஹ்மகாரணத்வவாதம்சலிக்குமா சலியாதாவென்று ஸம்சயம்.வேதார்த்தம் மந்தமதிகளுக்கு துர்க்ரஹமாயிருக்கிறதென்று அதற்குவ்யாக்யானரூபமாய்கேவலதத்வபரமாய் கபிலஸ்ம்ருதிப்ரவர்த்தித்தது.அதைப்ரமாணமாகக்கொள்ளாவிடில் அது வ்யர்த்தமாய்விடும் ஆகையால் அதிற்சொல்லிய ப்ரதாநகாரணவாதமே வேதஸம்மதமென்று அங்கீகரிக்கவேண்டுமென்று பூர்வபக்ஷம். வேதார்த்த நிர்ணயத்திற்கு உபப்ரும்ஹணம் வேண்டியிருந்தாலும், வேதார்த்தத்திற்கு விருத்தமல்லாத மந்வாதிஸ்ம்ருதிகளையே உபப்ரும்ஹணமாகக் கொள்ளவேண்டும். ஒரு கபிலஸ்ம்ருதிக்காக மந்வாதிஸ்ம்ருதிகளை உபப்ரும்ஹணங்களாகஸ்வீகரியாவிடில், அந்த அநேக ஸ்ம்ருதிகளுக்கு வையர்த்யம் ஸம்பவிக்கும். அவைகள் தத்வத்தையும் தர்மத்தையும் ப்ரதிபாதிக்கையாலே தத்வாம்சத்தில் அப்ரமாணமானாலும் தர்மப்ரதிபாதநாம்சத்தில் ப்ரமாணமாகையால் அவைகளுக்கு வையர்த்யமில்லையென்னக்கூடாது. தர்மமாவது பரப்ரஹ்மாராதநரூபம்.பரப்ரஹ்மம் ஸித்தியாவிடில் அதின் ஆராதநரூபமானதர்மமும் ப்ரமாணமாகமாட்டாது. ஆகையால் அவற்றுக்கு வையர்த்யம் ஸித்தம்,அது வாரணைக்காக அவைகளை ப்ரமாணமாகக்கொண்டு ப்ரஹ்மகாரணவாதமே வேதஸம்மதமென்று அங்கீகரிக்கவேண்டும் என்று ஸித்தாந்தம். ௧௩௧.

ஸூ - ௧௪ப. இதரேஷாஞ்சாநுபலப்தே:.

(ஸ-வ்ய.) இதரேஷாம் - மஹத்துமுதலியவற்றுக்கு, ச அநுபலப்தே: - காரணத்வம் (ஜகத்தில் ப்ரஸித்தமாகக்) காணாமையாலே, (இது வைதிகமன்று.) ௧௪௦.

(ரா-வ்ய.) இதரேஷாம்-மற்றமந்வாதிகளுக்கு, ச அநுபலப்தேச- (ப்ரதாநகாரணத்வத்துக்கு) உபலப்தியில்லாமையாலும், (அது வேதஸம்மதமன்று). ௧௪௦.

(ஸ - ஹா.) இம்மதத்தில் மஹத் அஹங்காரம் பஞ்சதந்மாத்ரைகள் சொல்லியிருக்கின்றன, இவை லோகத்திலும் ப்ரஸித்தமாகக்காணவில்லை, வேதத்திலுமில்லையாகையால் இம்மதம் அங்கீகரிக்கத்தக்கதன்று. ௧௪௦.

(ரா-ஹா.) அப்ரத்யக்ஷங்களான ஸகலவஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரிக்கவல்ல யோகமஹிமையுடைய கபிலமஹாமுனிக்கு ப்ரஹ்மகாரணத்வம் கோசரமாகாமையாலே ப்ரஹ்மகாரணத்வபக்ஷம் ப்ராமாணிகமன்றென்னில், வேதார்த்த வித்துக்களில் தலைவர்களாய், ப்ராமாணிகர்களாக ச்ருதிஸ்ம்ருத்யாதிகளில் ப்ரதிபாதிக்கப்ப

ட்டவர்களாய், ஸகலாதீந்த்ரியார்த்தவேத்தாக்களான மந்வாதிகளுக்கு ப்ரதாநகாரணத்வம் தோற்றுமையாலே ப்ரதாநகாரணத்வபக்ஷம் ப்ராமாணிகமன்று. வேதாந்தவிருத்தமான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிற கபிலஸ்ம்ருதி, கபிலருடைய ப்ராந்தியினால் கற்பிக்கப்பட்டதென்று நிஶ்சயிக்கப்படும். ௧௯௦.

அ - ௨. பா - ௧. ஸூ - ௧௯௧. ஏதேந யோக: ப்ரத்யுக்த:.

(ஶ - ரா - வ்யா.) ஏதேந - வேதாந்தார்த்த விரோதத்தினாலே, யோக: - யோகஸ்ம்ருதியும், ப்ரத்யுக்த: - நிரஸநம்செய்யப்பட்டது. ௧௯௧.

(ஶ - ஹா.) ஸாங்க்யமதம் வேதத்திலில்லாதவற்றைச் சொல்லுகையால் அப்ராமாணிகமாயினும், பாதஞ்சலமதத்தில் வேதத்தில் சொல்லிய பரமாத்மஸாக்ஷாத்கார ஹேதுவான யோகமும் ஆஸநக்ரமங்களும் சொல்லியிருக்கையால் வேதஸம்மதமான இந்தமதம் ப்ராமாணிகமாகலாம், ஆகில் இதிலும் ப்ரதாநகாரணவாதமே சொல்லுகையால் இந்தவாதம் அங்கீகரிக்கத்தக்கதென்று சொன்னவர்களுக்கு, யோகசாஸ்த்திரத்தில் எந்தஅம்சம் வேதத்தோடொத்திருக்கிறதோ, அதேப்ரமாணம், அதற்கு விருத்தமானஅம்சம் அப்ரமாணமேயாகையால் இந்தப்ரதாநகாரணவாதம் சரியன்று. ௧௯௧.

(ரா ஹா.) யோகஸ்ம்ருதி வேதார்த்தத்துக்கு உபப்ரும்ஹணம் ஆகுமா, ஆகமாட்டாதாவென்று ஸம்சயம். யோகஸ்ம்ருதியை ஸகல வேதப்ரவர்த்தகனான ப்ரஹ்மா ப்ரவர்த்திப்பிக்கையாலும், அந்த ஸ்ம்ருதியில் ஈஶ்வரனை ஒப்புக்கொள்ளுகையாலும் அதைக்கொண்டு ப்ரதாநகாரணவாதத்தில் வேதாந்தார்த்தத்தை நிஶ்சயிக்கலாமென்று பூர்வபக்ஷம். கபிலஸ்ம்ருதியைப்போல் இதுவும் வேதாந்தார்த்த விருத்தமாகையாலே இதையும் ப்ராமாணிகமாகக்கொள்ளக்கூடாது. ப்ரஹ்மாவே ப்ரவர்த்தகனாயினும் அவனும் ஸம்ஸார ஸம்பந்தமுள்ளவனாகையாலே ப்ரமாதம் அவனையுண்டு, அவனுடைய ப்ராந்தியினால் கற்பிக்கப்பட்டதென்று அங்கீகரிக்கவேணும் என்று ஸித்தாந்தம்.

அ - ௨. பா - ௧. ஸூ, ௧௯௨. ந விலக்ஷணத்வாதஸ்ய ததாத்வம் ச ஶப்தாத்.

(ஶ-ரா-வ்யா,) அஸ்ய - இந்த ஜகத்துக்கு, விலக்ஷணத்வாத் - (ப்ரஹ்மத்தைக்காட்டிலும்) வைலக்ஷண்யமுண்டாகையாலே, ந - ப்ரஹ்மகாரணத்வ ப்ரதிபாதநம் கூடாது. ததாத்வம் ச - அந்த வைலக்ஷண்யமும், ஶப்தாத் - சப்தத்தினால் (வேதவாக்யத்தினால். (அறியப்படுகிறது.) ௧௯௨.

(ஶ-ரா-ஹா.) வேதாந்தவாக்யம் ப்ரதாநத்தைக்காரணமாகச்சொல்லுகிறதா, ப்ரஹ்மத்தைக் காரணமாகச்சொல்லுகிறதா என்று ஸம்ஶயம். ஜ்ஞாநஶூந்யமாய் ஜடமானகலசாதிகளும் ம்ருத்தும் ப்ருதிவியானாற்போல கார்ய காரணங்களிரண்டும் ஏகத்ரவ்யமாய் ஏகரூபமாயிருக்கவேண்டும். ஜகத்தைக்காட்டிலும் ஸர்வஜ்ஞனாய் சேதநனான ஸர்வேஶ்வரன் விலக்ஷணனாய் பிந்நத்ரவ்யமாகையாலே ஸர்வேஶ்வரன் காரணனாகமாட்டான். ஜகத்தும் ப்ரக்ருதியும் ஜடமாய் ஏகரூபமாயிருக்கையாலே அந்தப்ரக்ருதியே ஜகத்காரணமாகவேண்டும். ஜகத்து ஈஶ்வரனைக்காட்டிலும் விலக்ஷணமென்பதை "விஜ்ஞாநஞ்சாவிஜ்ஞாநஞ்ச" என்கிற ஶ்ருதியேசொல்லுகிறது. "அவிஜ்ஞாநம்" என்றால் ஜ்ஞாநஶூந்யமான ஜகத்து. ஆகையால் வேதாந்தம் ப்ரதாநத்தைக்காரணமாகச்சொல்லுகிறது. என்று பூர்வபக்ஷம். ௧௯௨.

ஸூ - ௧௪௩. அபிமாநிவ்யபதேசஸ்து விசேஷாநுகதிப்யாம்.

(ஸ-ரா-வ்யா.) விசேஷாநுகதிப்யாம் - (தேவதையென்கிற) விசேஷணத்தினாலும் (சக்ஷுராதிகளில்) ப்ரவேசிப்பதினாலும், அபிமாநிவ்யபதேச: - (ப்ருதிவ்யாதிபதங்கள்) ப்ருதிவ்யாதிகளுக் கபிமாநிகளான தேவதைகளுக்கு வ்யபதேசமா யிருக்கிறது. ௧௪௩.

(ஸ-ரா-ஸா) ‹ ஆபோऽகாமயந்த - ஜலம் இச்சித்தது’’ ‹‹ தந்ம்ருதப்ரவீத் - அதைக்குறித்த ப்ருதிவி சொல்லிற்று’’ இத்யாதியாக ப்ருதிவ்யாதிகளுக்கும் ஜ்ஞாநமுண்டென்பதாகச் சொல்லுகையாலே அவைகளும் சேதநங்களாய், சேதநனான ஈச்வரனுக்கு ஸஜாதீயமாய் இருக்கையாலே அவைகளுக்கு ப்ரஹ்மம் காரணமாகலாமே யென்னில், ப்ருதிவீ சொல்லிற்றென்னும்போது ப்ருதிவியென்றால் ஜடமான இந்த ப்ருதிவியைச் சொல்லுகிறதன்று. அதற்கபிமாநியான தேவதையைச்சொல்லுகிறது. அப்படியே ஜலாதிபதங்களிலும் கண்டுகொள்வது. அந்த தேவதைகள் ஜ்ஞாநவத்துக்களானாலும் காண்கிற ப்ருதிவ்யாதிகள் ஜடங்களாகையாலேஇவற்றைக்குறித்து விஜாதீயனான ஈச்வரன் காரணமாகமாட்டான். ப்ருதிவ்யாதிபதங்களுக்கு அவற்றுக்கபிமானி தேவதைகளர்த்தமென்று சொல்லுகைக்கு ஹேது வென்னென்னில், ‘இமாஸ்திஸ்ரோ தேவதா: இந்தமூன்றுதேவதைகள்’’ என்று தேவதாசப்தத்தினால் ப்ருதிவீ ஜல தேஜஸ்ஸுக்களைச் சொல்லுகையாலும், ‹‹ அக்நிர்வாக்பூத்வா முகம் ப்ராவிசத் - அக்நி வாக்தேவதையாய்க்கொண்டு முகத்தில் ப்ரவேசித்தது இத்யாதியாக அக்ந்யாதிகளுக்கு ப்ரவேசம் சொல்லுகையாலும், இவ்விரண்டும் அசேதநமான இந்தப்ருதிவ்யாதிகளுக்குச் சேராமையால் அப்பதங்களுக்கு அபிமானிதேவதைகளே அர்த்தமென்று நிச்சயிக்கப்படுகிறது. ஆகையால் ப்ரஹ்மகாரணவாதமே வேதாந்தஸம்மதம் என்று பூர்வபக்ஷம். ௪௬.

ஸூ - ௧௪௪. த்ருச்யதே து.

(ஸ-ரா-வ்யா.) த்ருச்யதே து - (விலக்ஷணவஸ்துவில் நின்றும் அதைக்காட்டிலும் விலக்ஷணவஸ்துவுக்கு உத்பத்தி) காணப்படுகிறதன்றோ.

(ஸ-ரா-ஸா.) இந்தபூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார். விலக்ஷண வஸ்துக்களுக்குக் கார்யகாரணபாவமில்லையென்கிற நியமங்கிடையாது. தேனடையில் நின்றும் அநேகம் புழுக்களும் கோமயத்தில் நின்றும் தேளும் உண்டாகக்காண்கிறது. அதுபோலவே சேதநனாய் விலக்ஷணனான ஈச்வரனிடத்தில் நின்றும் அசேதனமான ஜகத்துக்கு உண்டாகலாம் ஆகையால் ப்ரஹ்மகாரணவாதம் உபபந்நமாகிறது. வேதாந்தமும் இப்பக்ஷத்தையே ப்ரதிபாதிக்கிறது என்று ஸித்தாந்தம். ௧௪௪.

ஸூ - ௧௪௫. அஸதிதி சேந்ந ப்ரதிஷேதமாத்ரத்வாத்.

(ஸ-ரா-வ்யா.) அஸத் - (இப்பக்ஷத்தில் கார்யோத்பத்திக்குப் பூர்வம்) காரணம் அஸத்தாய் (இல்லாததாய்) இருக்கும், இதி சேத் - என்றால், ப்ரதிஷேதமாத்ரத்வாத் - (கார்ய காரணங்கள் ஏகரூபங்களாயே யாகவேண்டும் என்கிற நியதத்துக்கு) ப்ரதிஷேதமாத்ரம் சொல்லுகையாலே, ந - அஸத்கார்யவாதமில்லை. ௧௪௫.

(ஸ - ஸா.) கார்யம் காரணத்தைக்காட்டிலும் விலக்ஷணமாகில் கார்யம் உண்டாவதற்கு முன்காரணரூபமாயிருக்குமென்று சொல்லப்போகாது. ஆகையால் அஸத்

கார்யவாதம் ஒப்புக்கொண்டதாகும் என்னில், கார்யம் மித்யாரூபமாகையால் உத்பத்திக்கு முன்பு எப்படி அஸத்தோ, இப்போதும் அப்படியே அஸத்தாயேயிருக்கிறது என்பது ஸித்தாந்தம். கார்யமொன்று உண்மையாயுண்டென்று ஒப்புக்கொண்டால் அவனுக்கே இவ்வாபத்தி ஸம்பவிக்குமொழிய எங்களுக்கு ஸம்பவியாதென்று கருத்து. கசடு.

(ரா-ஹா.) கார்யமான கடமும் காரணமான ம்ருத்தும் ப்ருதிவியே; கடம் உண்டாவதற்கு முன்பு ம்ருத்பிண்டத்தில்லீனமாயிருக்கிறது, பிற்பாடு உண்டாகிறது. உண்டாகையாவது-நாமரூபங்களையடைகை. முன்இல்லாதது இப்போது உண்டாகிறதென் றர்த்தமன்று. இல்லாதவஸ்து உண்டானால் குதிரைக்கொம்பும் உண்டாகவேண்டிவரும். பிண்டமாயிருந்தால் ம்ருத்து என்றும், அந்த அவஸ்தையைவிட்டு வேறுவிதமாய் வாயும் வயிறுமான ஆகாரத்தையடைந்தால் கடமென்றும் வ்யவஹரிக்கப்படுகிறது. இதற்கு ஸத்கார்யவாத மென்றுபெயர். இதுவேவேதாந்திகளுக்கு அபிமதமானது. இப்போது கார்யமான ஜகத்துக்கு விலக்ஷணமான ப்ரஹ்மம் காரணமானால், இவ்விரண்டும் ஏகத்ரவ்யமல்லாமையால் ஜகத்து உண்டாவதற்கு முன்பு ப்ரஹ்மத்தில் லீநமாயிருக்கிறதென்று அங்கீகரிக்கக்கூடாது. ஒருஜாதிவஸ்துவில் மற்றொருஜாதிவஸ்து லீநமாகவும்மாட்டாது. ஆகையால் ஜகத்து உண்டாவதற்குமுன் இல்லையென்று கொள்ளவேண்டும். அஸத்கார்யவாதம் ஸித்திக்கும். இந்தகடம் ம்ருத்து என்றுசொல்வதுபோல் இந்த ஸகலஜகத்தும் ப்ரஹ்மம் என்று சொல்லுகிற "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்கிற ஶ்ருதியும் அபார்த்தகமாகுமேயென்னில்; நாங்கள் கார்யகாரணங்கள் ஏகரூபமாயேயிருக்கவேணுமென்கிற நியமமில்லையென்றே சொன்னோம்; கார்யகாரணங்கள் ஏகத்ரவ்யமென்பது எங்களுக்கு இஷ்டமே. ஒருத்ரவ்யமே காரணாவஸ்தையைவிட்டுக் கார்யாவஸ்தையையடையும்போது காரணதசையோடு ஸமானலக்ஷணத்வத்தையுமடையலாம், அதைக்காட்டிலும் விலக்ஷணமாயுமாகலாமென்றே நாங்கள் சொன்னது. ஆகையால் நீங்கள்சொன்ன தோஷங்களுக்கு அவகாசமில்லை என்று ஸித்தாந்தம். கசடு.

ஸூ - கசகூ. அபீதௌ தத்வத்ப்ரஸங்காத் அஸமஞ்ஜஸம்.

(ஸூ-ரா-வ்ய.) அபீதௌ - (ஜகத்து ப்ரஹ்மத்தினிடத்தில்) லயிக்கும்போதும் (அங்கிருந்து உத்பந்நமாகும்போதும்), தத்வத் - ம்ருத்த்ரவ்யம்போலே, ப்ரஸங்காத் - (கார்யகுணங்கள் காரணத்தில்) ப்ரஸங்கிக்கிறபடியாலே, அஸமஞ்ஜஸம் - (வேதாந்தவாக்யம்) சரியான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிறதாகமாட்டாது. கசகூ.

(ஸூ-ஹா.) இவ்விகாராத்மகமான ஜகத்து ப்ரளயத்தில் ப்ரஹ்மத்தில்லயிக்கிறதென்றால், கார்யரூபமான இஜ்ஜகத்திலுள்ள புண்யபாபஸுகதுக்க ஜ்ஞாநசூந்யத்வஸததபரிணமித்வாதி ஸகலதோஷங்களும் ப்ரஹ்மத்திற்குண்டாகும்: மேலும்ப்ரஹ்மத்தோடு ஒன்றாய்லயத்தையடைந்தபிறகு மறுஸ்ருஷ்டியில் ஒருவன் மேன்மையையுடையனாகவும் ஒருவன் கீழ்மையையுடையனாகவும் பிறக்கைக்குக்காரணம்சாணுது. மேலும் ப்ரஹ்மத்தோடு சேர்ந்துவிட்டஜகத்துக்கு மறுபடிஸ்ருஷ்டி ஒப்புக்கொண்டால் முக்தியையடைந்தவனும் மறித்து ஸம்ஸாரியாகவேண்டிவரும். ஆகில் ப்ரளயத்தில் ஜகத்து ப்ரஹ்மததில்லயிக்கிறதில்லை, வேறுபட்டேயிருக்கிறது என்றால், அப்போது ஜகத்துக்கு ப்ரஹ்மம் காரணமென்றே ஏற்படவில்லை இத்யாதி தோஷங்கள் ப்ரஹ்மகாரணவாதத்திலுண்டு. என்று பூர்வபக்ஷம். கசகூ.

(ரா-ஹா.) காரணமான ப்ரஹ்மமே கார்யமான ஜகத்தாய்ப் பரிணமிக்கிறதென்னில், ம்ருத்துக்குக் காரணாவஸ்தையிலுள்ள பிண்டாகாரமும், கார்யாவஸ்தையிலுள்ள கடாகாரமும் ஸம்பவிப்பதுபோல், தோஷகந்தரஹிதமாய் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ப்ரஹ்மத்துக்கு ஜகத்திலுள்ள உத்பத்திவிநாசங்களும் துக்க அஜ்ஞாநங்களும் சேருமென்று ஒப்புக்கொள்ளவேணும். ப்ரஹ்மம் ஜடம் அஜடம் ஸாக்ஷி ஸூக்ஷ்மம் துஷ்டம் நிர்துஷ்டம் என்கிற விருத்தார்த்தங்களைச் சொல்லுகையாலே வேதாந்தவாக்யம் அப்ரமாணமென்றுகொள்ளவேண்டிவரும் என்று பூர்வபக்ஷம். கசசு.

ஸூ கசஎ. நது த்ருஷ்டாந்தபாவாத்.

(ஸ-ரா-வ்ய.) த்ருஷ்டாந்தபாவாத் - (பரிணாமத்தில் குணதோஷங்கள் வ்யவஸ்த்திதங்களென்பதில்) த்ருஷ்டாந்த முண்டாகையாலே, ந - (ப்ரஹ்மத்திற்கு ஜகத்திலுள்ள தோஷங்கள்) ஸம்பவியாது. கசஎ.

(ஸ-ஹா.) இந்தஸூத்திரத்தில், கீழ்ச்சொன்னதோஷங்களொன்றும் ப்ரஹ்மத்திற்குத் தட்டாதென்கிறது, அதாவது ஸுவர்ணம் கடகமகுடகுண்டல ரூபமாகக் கார்யாவஸ்தையையடைந்து மறித்து ஸுவர்ணபிண்டமாய் காரணாவஸ்த்தையை யடையும்போது அக்காரணத்தில் முன்கார்யாவஸ்த்தையிலுள்ள கடகமகுடாத்யாகாரங்கள் காணகிறதில்லை; அதுபோல் காரணமாகிய ப்ரஹ்மத்திலும் கார்யமான ஜகத்திலுள்ள தோஷங்கள் ஸம்பந்திக்கமாட்டா. ப்ரளயத்தில் ஜகத்துப்ரஹ்மத்தில்லயித்தபோதிலும் ப்ரஹ்மத்தினுடைய அந்தந்த அம்சத்துக்கு அவித்யையின் ஸம்பந்தத்தினாலுண்டான ஜீவபாவமும் அதினாலுண்டான புண்யபாப ரூபகர்மங்களும்உண்டு, அவை நசிக்கிறதில்லை, மறுஸ்ருஷ்டியில் அந்தபுண்யபாபங்களின் வைஷம்யங்களைப்பற்ற ஒருவருக்கொருவர் தேவன் மனுஷ்யன் தனிகன் தரித்திரன் புத்திமான் மூடன் முதலிய உயர்வு தாழ்வுகளையுடைய ஜன்மங்களையடைகிறார்கள். முக்தியையடைந்தவனுக்கு தத்வஜ்ஞாநத்தினால் அவித்யை நசித்துவிட்டபடியால் அவனுக்கு மறுபடி ஜன்மங்கிடையாது. இப்படி நீங்கள் சொல்லுகிற எவ்விதமாகிய தோஷமுமில்லையாகையால் இந்த ப்ரஹ்மகாரணவாதமே ஸரியென்று ஸித்தாந்தம். கசஎ.

(ரா-ஹா.) இந்தஸூத்திரத்தில் ஸமாதாநம் சொல்லுகிறார். ஒருமனுஷ்யன் பாலனாயிருந்து யுவாவாய்ப்பின்பு வ்ருத்தனாய்ப் பரிணமியாநின்றாலும், பால்யயௌவநவார்த்தகங்களென்கிறஅவஸ்த்தைகள் அவனுடைய சரீரத்திலேயேயிருக்கும்,ஆத்மாவுக்கு ஸம்பவியாது அதுபோல் சிதசித்துக்களை சரீரமாகவுடைய ஈஶ்வரன் ஜகத்ரூபமாகப்பரிணமித்தால் அந்தஜகத்திலுள்ள உத்பத்தி விநாசாதிதோஷங்கள் சரீரபூதங்களான சிதசித்துக்களிலேயேயிருக்கும்; அவற்றுக்கு அந்தராத்மாவான ஸர்வேஶ்வரனிடத்தில் ஸம்பவியாது அவனுடைய ஸ்வரூபம் நித்யாநந்தரூபமாயேயிருக்கும். ஆகையால் அந்த ஈஶ்வர ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிற வேதத்திற்கு அப்ராமாண்யமும்வராது. கசஎ.

ஸூ - கசஅ. ஸ்வபக்ஷதோஷாச்ச.

(ஸ-ரா-வ்ய.) ஸ்வபக்ஷதோஷாச்ச - தங்கள்பக்ஷத்தில் தோஷமிருக்கிறபடியாலும் (அப்பக்ஷத்தைவிட்டு இந்தவேதாந்திமதத்தையே பரிக்ரஹிக்கவேணும்.) கசஅ.

(ஸா-ஹா.) இத்தோஷங்கள் ஸாங்க்யருக்குமுண்டு. அதாவது காரணம் மூலப்ரக்ருதியென்றும், கார்யம் இஜ்ஜகத்தென்றும், கார்யகாரணங்களுக்கு பேதமில்லையென்றும் அவர்கள் அங்கீகரித்தார்கள், அதில் காரணமாகிய மூலப்ரக்ருதியில் சப்த

ஸ்பர்சரூபரஸம் முதலியகுணங்கள்கிடையாது, கார்யமாகிய இஜ்ஜகத்திலுண்டு. இஜ்ஜகத்து ப்ரளயத்தில் மூலப்ரக்ருதியில லயிக்கும்போது இதின்குணங்கள் காரணத்திலேன் ஸம்பந்திக்கமாட்டாது. இப்படி கார்யகாரணங்களுக்கு பேதமுண்டாகையால் அவைஇரண்டும் ஒருவஸ்துவாகமாட்டா. மேலும் ப்ருதிவ்யாதிகள் மூலப்ரக்ருதியில்லயித்தபின் மறுஸ்ருஷ்டியில் இந்தத்ரவ்யம் இந்தபுருஷனுடைய போகத்துக்கென்றும் மற்றொன்று மற்றொருவனுக்கென்றும்சொல்லுகைக்குஹேதுகாணவில்லை; இவ்விதமானநியமமில்லையென்னில், சிலத்ரவ்யங்கள் முக்தபுருஷனுக்கு ஏன்போகத்தைஉண்டுபண்ணமாட்டாது. இத்யாதிதோஷங்கள் கண்டுகொள்க. கசஅ.

(பா-ஹா.) வேதாந்திமதத்தை யவலம்பிக்கைக்குக் காரணம் இப்பக்ஷத்தில் தோஷமில்லாமையேயன்று; கபிலபக்ஷத்தில் தோஷங்களுமுண்டு, அவையாவன- ஆத்மா நிர்மலஸ்வரூபன்; அவனுக்குப்ரக்ருதிஸாந்நித்யமும் அதினால் ஆத்மாவில் ப்ரக்ருதி தர்மாத்யாஸமு முண்டானால் இந்தஜகத்து உண்டாகிறதென்று அவர்கள் பக்ஷம். அதின் ப்ரக்ருதி ஸாந்நித்யமாவது—ப்ரக்ருதியினுடைய ஸத்பாவம், அதாவது-இருக்கையேயானால் இவ்விதமான ஸாந்நித்யம் முக்தனுக்கு முண்டாகையால் அவனுக்கும் ஸம்ஸாரப்ரஸங்க முண்டாகும். விகாரத்தை யடைந்த ப்ரக்ருதியின் ஸத்பாவந்தான் ப்ரக்ருதிஸாந்நித்யமென்றால், அத்யாஸத்திற்கு, அதாவது-ப்ரக்ருதியிலுள்ள கர்த்ருத்வ போக்த்ருத்வகுணங்கள் ஆத்மாவில் ப்ரதிபலிக்கைக்கு ப்ரக்ருதியின் விகாரம் காரணமென்றாயிற்று. விகாரத்தைக்குமித்த அத்யாஸம் காரணமென்று முன்சொல்லிற்று. இப்படி பரஸ்பரவிருத்தங்களாயிருக்கிறபடியால் அம்மதம் தோஷயுக்தமாய் அஸங்கதமாயிருக்கும், ஆகையால் அதைவிட்டு இம்மதத்தையே யாஶ்ரயிக்கவேண்டும். கசஅ.

ஸூ - கசகூ. 𑌤𑌰𑍍𑌕𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌦𑌪𑌿.

(பா - வ்ய.) 𑌤𑌰𑍍𑌕𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌚𑍍𑌚𑌾𑌪𑌿 - யுக்திக்கு ஓரிடத்தில் நிலையில்லாமையாலும். (அப்பக்ஷம் அநாதரணீயம்.) கசகூ.

(பா - ஹா.) நாஸ்திகர்களுடைய யுக்திகளினால் காபிலர்கள் யுக்தி பாதிதமாகையாலும், யுக்திக்கு ஓரிடத்தில் நிலையில்லாமையாலும், யுக்தியையே முக்யமாகக் கொண்ட காபிலமதம் ஸமீசீநமன்று. கசகூ.

ஸூ-கரு0. 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾𑌨𑍁𑌮𑍇𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌦𑍇𑌵𑌮𑌪𑍍𑌯𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃.

(ஸூ-பா-வ்ய.) 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 - வேறுவிதமாக, 𑌅𑌨𑍁𑌮𑍇𑌯𑌂 - ஊஹிக்கத்தக்கது, 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - என்றால், 𑌏𑌵𑌮𑌪𑌿 - இப்படி ஊஹித்தாலும், 𑌅𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃 (யுக்திக்கு) முடிவில்லாமைப்ரஸங்கிக்கும். கரு0.

(ஸூ-ஹா.) இந்த பாஷ்யத்திற்கு "𑌤𑌰𑍍𑌕𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌦𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌥𑌾𑌨𑍁𑌮𑍇𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌦𑍇𑌵𑌮𑌪𑍍𑌯𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃" என்று இதுவரையில் ஒரு ஸூத்ரம். இதற்கர்த்தம்- வேதாந்தத்தைவிட்டுத் தங்கள்யுக்தியினாலொன்றைச்சொல்லில் இவனைக்காட்டிலும் புத்திமானொருவன் பிறந்து இதை தூஷிக்கலாம், அதையும் மற்றொருபுத்திமான் தூஷிக்கலாம், இப்படிஸித்தாந்தம் ஓரிடத்தில் நில்லாமலே போய்விடும், கபிலர்போன்ற மஹாபுத்திமான்கள் சொல்லுக்கு ஒருதூஷணம் வாராதாகையால் அதையங்கீகரிக்கலாமென்னில், அதுவும் அவரைப்போன்ற மஹாபுத்திமான்களான கணாதிகளினால், தூஷிக்கப்பட்டது. யுக்தியைக்கொண்டு ஒன்றைநிர்ணயிக்கக்கூடாதென்று சொல்லக்கூடாது. லோகத்தில் சிலர் ஒருகார்யத்தைச்செய்து

அதினால் அவர்கள் அடைகிற ஸுகதுக்கங்களைக்கண்டு பிற்புள்ளார் இக்கார்யம் நன்று இக்கார்யம்தீதென்று தங்கள்யுக்தியைக்கொண்டு நிர்ணயித்துச் சதாங்களுமக்கார்யங்களைச்செய்து ஸுகதுக்கங்களையடைகிறார்கள். ஆகையால் யுக்தியென்பதுமோர் ப்ரமாணமுண்டு. மூலப்ரக்ருதி ஜகத்காரணமென்பதற்குச் சொன்னயுக்திகள் தோஷமுடையவைகளாயினும் தோஷமற்ற மற்றயுக்திகளைக்கொண்டு அதைஸ்தாபிக்கிறோமென்னில்; லோகத்தில் யுக்தியினால் சிலவஸ்துக்களை நிர்ணயிக்கும்போது அவ்வஸ்துக்களைச் சிலவிடங்களில்கண்டு அதின்ஹேதுக்களையும்கண்டு பிறகு காலாந்தரத்தில் முன்கண்ட ஹேதுக்களோடு துல்யமானஹேதுவை ஓரிடத்தில்கண்டு, இதனால் முன்கண்டவஸ்துவோடு துல்யமானது இங்கிருக்கலாமென்று ஊஹிக்கிறார்கள் ப்ரஹ்மவிஷயத்தில் அப்படிப்பட்ட ப்ரத்யக்ஷம் எப்போதும் கிடையாதாகையால் இதை யுக்தியைக்கொண்டு நிர்ணயிக்கமுடியாது. ப்ரத்யக்ஷமூலமல்லாதயுக்திகள் மேல் மேல் தூஷிதங்களாயேயிரும் ஆகையால் யுக்தியைவிட்டு வேதாந்தங்களில் சொன்னவர்த்தத்தையே அங்கீகரிப்பது நலம். ௪௯௧ ௧௰.

(ரா-ஹா.) இப்போதுள்ள யுக்திகள் நாஸ்திகர்களின் யுக்திகளினால் பாதிக்கப்பட்டிருந்தபோதிலும், இனி அவர்களின் யுக்திகளினால் பாதிக்கப்படாமல் வேறுவிதமான யுக்திகளைக்கொண்டு இம்மதத்தை ஸ்தாபிக்கிறோமென்னில், இப்போதுள்ள யுக்திகளுக்கு மேலாக நீ யுக்திசொன்னபோதிலும், இனியொருவன் உன்னைக்காட்டிலும் புத்திமானாய்ப்பிறந்து உனக்குமேல் யுக்திசொன்னால் அப்போது உன்யுக்தி நில்லாது. இப்படி மேன்மேல் யுக்திசொல்லிக்கொண்டுபோனால் அதற்கொருகாலும் முடிவுகப்படாது. ஆகையால் அம்மதத்தை விடவேண்டியது. ௧௰.

அதி - ௩௪. ஸூ - ௧௧. ஏதேந ஶிஷ்டாபரிக்ரஹா அபி வ்யாக்யாதா:

(ஸ - ரா - வ்யா.) ஏதேந - யுக்திக்கோரிடத்தில் நிலையில்லாமையாலே, ஶிஷ்டாபரிக்ரஹா: அபி - மற்றுமுள்ளனவாய் (சிஷ்டர்களால்) அங்கீகரிக்கப்படாதவைகளுமான மதங்களும், வ்யாக்யாதா: - (நிரஸ்தங்களென்று) வ்யாக்யாநம் செய்யப்பட்டதுகள். ௧௧.

(ஸ-ஹா.) வ்யாஸபராசரர் முதலிய பெரியோர்கள் அங்கீகரியாத பரமாணு காரணவாதாதிமதங்களும் யுக்திமூலங்களாகையால், அந்தயுக்திகளும் கீழ்ச்சொன்னபடியே நிலைநிற்கத் தக்கவைகளல்லாமையால் அம்மதங்களும் இதனாலேயே நிராகரிக்கப்பட்டன. ௧௧,

(ரா-ஹா.) மற்றுமுள்ள வைசேஷிகமதம்முதலானவையும்யுக்திமாத்ரத்தையே ப்ரதானமாகக்கொள்ளுகையாலே கீழ்ச்சொன்ன ஹேதுவினாலேயே நிரஸநம்செய்யப்பட்டதுகளென்றறியவும். ௧௧.

அதி - ௪௰. ஸூ - ௧௨. போக்த்ராபத்தேரவிபாகஶ்சேத் ஸ்யால்லோகவத்.

(ஸ-ரா-வ்யா.) போக்த்ராபத்தே: - (ஈஶ்வரனுக்கும்) ஸுகதுக்காநுபவம் ப்ரஸங்கிக்குமாகையால், அவிபாக: - ஜீவேஶ்வரபேதம் ஸம்பவியாது; சேத் - என்றால், லோகவத் - லோகத்திற்போலவே, ஸ்யாத் - ஜீவேஶ்வரபேதம் ஸம்பவிக்கும். ௧௨.

(ஶ்-ஹா.) பரப்ரஹ்மம் சக்ஷுராதி இந்திரியங்களுக்கு விஷயமல்லாமையால் அதையுக்தியைக்கொண்டு நிர்ணயிக்கமுடியாதென்பது ஒப்புக்கொள்ளத்தக்கதே; ஆயினும்,ப்ரஹ்மமும்ஜகத்தும் ஒன்றேயென்பது ஒப்புக்கொள்ளத்தக்கதன்று. ஏனெனில், ஜகத்தில் போக்தாவென்றும் போக்யமென்றும் இருவகைவஸ்துக்களுண்டு, அதாவது புஷ்பம் பழம் முதலியவைகளையநுபவித்து ஸுகம்பெறுகிறவன் போக்தா, அவனுடைய ஸுகத்துக்குக் காரணங்களாகிய புஷ்பபலாதிகள் போக்யம்; இவையிரண்டும் ப்ரஹ்மமேயாகில், ஜீவன் போக்தாவாகவும் புஷ்பாதிகள் போக்யமாகவும் ஆவதுபோல் புஷ்பாதிகள் போக்தாவாகவும் ஜீவன் போக்யமாகவும் ஏனாகக் கூடாது. ஆகையால் இவ்விரண்டும் ப்ரஹ்மஸ்வரூபமென்று ஒப்புக்கொள்ளக்கூடாதென்றுபூர்வபக்ஷம். ஸமுத்திரத்திலுள்ள அலைநுரை குமிழிகள் ஜலத்தின் விகாரமேயாயினும் அவைகளில் ஒன்று மற்றொன்றாக ஆவதுமில்லை, ஒன்றைமற்றொன்றாக வ்யவஹரிப்பதுமில்லை. அதினால் அவைகள் ஜலத்தைக்காட்டில் வேறுவஸ்துவுமாக மாட்டாது. அதுபோல் இவை ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுவஸ்துக்களாகவுமாகமாட்டாவென்று ஸித்தாந்தம். ககூ.

(ஶா-ஹா.) கர்மவஶ்யனாய் துக்கியான ஜீவனைக்காட்டிலும் நிரதிஶயாநந்த ஸ்வரூபனான ஈஶ்வரன் விலக்ஷணனென்று ஸித்தாந்தம். ஈஶ்வரனுக்கும் சிதசித்துக்களாகிற சரீரமுண்டாகையால் சரீரமுள்ளவளவும ஜீவனுக்குப்போல் அவனுக்கும் ஸுகதுக்கநுபவமொக்குமாகையால் ஜீவனைகாட்டிலும் ஈஶ்வரனை விலக்ஷணனாகப் பிரித்துச் சொல்லமுடியாதென்று பூர்வபக்ஷம். "ஸஶரீரஸ்ய ஸதோ ..." என்று முக்தனுக்கும் சரீரமுண்டென்று சொல்லுகையாலே, அவனுக்கு துக்காநுபவமில்லாமையாலே, துக்காநுபவத்திற்கு சரீரஸம்பந்தமாத்ரமே ஹேதுவன்று. சாஸ்த்திரத்தில் விதித்தவிதிக்கு உட்பட்டவனாயிருந்து அந்த விதியைச்செய்யாமல் அதிக்ரமித்தால் அதுவே துக்காநுபவத்திற்குஹேது. ஈஶ்வரன் ஶாஸ்திரவிதிக்குட்பட்டவனன்றாகையால், சரீரவானானாலும் அவனுக்கு துக்காநுபவம் ஸம்பவியாது லோகத்தில் ராஜாவினுடைய உத்திரவை அதிக்ரமித்தால் ஜநங்களுக்கு தெண்டனையுண்டு; ராஜாவுக்கு அதில்லை. அதுபோலவே இங்கும் கண்டுகொள்வது. ஆகையால் ஈஶ்வரனுக்கு எவ்விதத்திலும் துக்காநுபவம் ஸம்பவியாது. இதைக்கொண்டுஜீவேஶ்வரர்களுக்கு வைலக்ஷண்யம் ஸம்பவிக்குமென்று ஸித்தாந்தம். கஉ

அதி-சக. ஸூ - கரு. தத³நந்யத்வமாரம்ப⁴ணஶப்³தா³தி³ப்⁴ய꞉.

(ஶ-ரா-ஸ.) ஆரம்ப⁴ணஶப்³தா³தி³ப்⁴ய꞉ - ஆரம்பண சப்தத்தை ஆதியாக உடைய வாக்யங்களினால், தத³நந்யத்வம் - பரமாத்மாவைக் காட்டிலும் (ஜகத்துக்கு) அபேதம், (ஸித்திக்கிறது). கரு.

(ஶ - ஹா.) கீழ்ஸூத்ரத்தில் வ்யாவஹாரிகபேதத்தை யொத்துக்கொண்டு ஸமாதானம்செய்தார். இதில் பரமார்த்தமாக பேதம்கிடையாது. ஆகாசம் முதலிய கார்யரூபமான ஜகத்துக்கும், இவற்றுக்குக்காரணமாகிய ப்ரஹ்மத்துக்கும் அபேதமே தோற்றுகிறது. இதற்குப்ரமாணம் "யதா² ஸோம்யைகேந ம்ருத்பிண்டே³ந" என்று தொடங்கி "வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்" என்கிற சாந்தோக்யத்தின்வாக்யம். இதின் கருத்து—கார்யமாகப் பரிணமிப்பதற்குமுன் பிண்டாகாரமாயிருக்கும் ம்ருத்து, அதாவது மண், அதை யறிந்தால் அதின் விகாரமாகிய கடம் (பானை) சராவம் (மடக்கு) முதலிய கார்யங்க

ளும் மண்ணென்று அறியப்படும். அதாவது - கார்யமும் மண், காரணமும் மண், இரண்டுக்கும் பேதமில்லை. வாயும் வயிறுமான ரூபமும் கடம் என்கிற பேரும்வெறுமனே வழங்குகிறது, நிரூபித்தால் அதொன்றும் உண்மையானதன்று. மண்என்பதே உண்மையானது. அதுபோல் ஆகாசம் வாயு அக்நிமுதலிய ரூபங்களையுடைய வஸ்துக்களடங்கிய ஜகத்தும் இதன்பேரும் உண்மையாகமாட்டாது. இதற்குக்காரணமாகிய ப்ரஹ்மமென்பதே ஸத்யமென்று இந்தப்ரமாணத்தைக்கொண்டு ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதமில்லையென்று கொள்ளவேணும். கஙு,

(ரா-ஹா.) பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பந்நமான ஜகத்து பரமாத்மாவைக்காட்டிலும் வேறு, அன்று என்று ஸம்சயம். கார்யகாரணங்களுக்கு பேதமுண்டா இல்லையா என்று பலித்தது.—கார்யகாரணங்களுக்குபேதமில்லையாகில் காரணத்தைப் போலவே கார்யமுப் முன்னமே இருக்கிறதென்று அங்கீகரிக்கவேணும், அப்படியானல், ஒருகார்யத்திற்காக லோகத்திற் செய்கிறயத்நம் வ்யர்த்தமாம். காரணத்தில் மருத்து என்றும் கார்யத்தில் கடமென்றும் வெவ்வேறுவிதமான வ்யவஹாரம்காண்கிறது, அதுவுமில்லாமற் போகவேணும் - ஆகையால் இவ்வநுபபத்திகள் வாராதபடி கார்யகாரணங்களுக்கு பேதமேயங்கீகரிக்கவேணும் என்று பூர்வபக்ஷம். "வாசாரம்பணம்விகாரோ நாமதேயம்" "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" இத்யாதி வாக்யங்கள் ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் அபேதத்தையே சொல்லுகையாலேகார்யகாரணங்களுக்கு அபேதமேயுள்ளது. காரணமான ம்ருத்த்ரவ்யமே பிண்டமான அவஸ்தையைவிட்டு கடரூபமான அவஸ்தையை அடைகையாலே கார்யகாரணங்களில் வெவ்வேறுவிதமான வ்யவஹாரங்கள் காண்கிறது. அந்த அவஸ்தாப்ராப்திக்காகவே லோகத்தில் யத்நம்செய்கிறார்கள். ஆகையால் கீழ்ச்சொன்ன அநுபபத்திகளொன்றும் ஸம்பவியாது. மேலும், காரணவஸ்தையிலுள்ள ம்ருத்தே கார்யாவஸ்தையிலுள்ள கடத்திலும் காண்கையாலே அதைவிட்டு, காணாத வேறொருத்ரவ்யம் கற்பிக்கை அநுசிதம்; ஆகையால் கார்யகாரணங்களுக்கு பேதமில்லை. கஙு.

ஸூ-கஙச. பாவேசோபலப்தே:.

(ப - வு) பாவே - (காரணம்) இருக்கும்போதே, உபலப்தே: (கார்யம்) காண்கையாலே, கார்யமும் காரணமும் ஒன்று).

(ப-ரா-வு.) பாவே - கார்யத்திலும், உபலப்தே: - (காரணம்) காண்கையாலே, (கார்யகாரணங்கள் ஏகமே). கஙச.

(ஸ-ஹா.) மேலும், காரணமிருந்தால் கார்யம் காண்கிறது. அதாவது - நூலிருந்தால் வஸ்த்திரம் காண்கிறது அதில்லாவிடில் வஸ்த்திரமுமில்லை. ஆகையால் நூலும் அதிலுண்டான வஸ்திரமும் ஒன்றே, வேறன்று. ஒன்றில்லாவிடிலும் மற்றொன்று காணுமாகில் அவ்விரண்டுக்கும் பேதமுண்டு. அதாவது—வஸ்திரம் நெய்கிறவன் இல்லாவிடிலும் வஸ்திரம் காண்கையால் நெய்கிறவனைக்காட்டிலும் வஸ்திரம் வேறுபட்டிருக்கும். நூலும் வஸ்திரமுமப்படியன்று, ஆகையால் அவ்விரண்டுக்கும் பேதம் ஒப்புக்கொள்ளக்கூடாது. அதுபோலவே, ஜகத்துக்குக்காரணமாகிய ப்ரஹ்மத்திற்கும் ஜகத்துக்கும் பேதம் ஒப்புக்கொள்ளக்கூடாது. கஙச.

(ரா-ஹா.) கடாதிகார்யத்திலும் காரணமான ம்ருத்த்ரவ்யமே காண்கையாலே கார்யகாரணங்களுக்கு பேதமில்லை. கஙச,

ஸூ-கஙரு. ஸத்வாச்சாவரஸ்ய.

(ஶ-ஶா-வ்யா.) அவரஸ்ய - கார்யத்துக்கு, ஸத்வாச்ச - (காரணத்தில்) இருப்பதாலும், (கார்யகாரணங்கள் அபிந்நங்கள்) கருரு.

(ஸு - ஹா.) "ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத்" என்கிற வாக்யம்—இஜ்ஜகத்து ஸ்ருஷ்டிக்கு முன்னும் ஸத்ரூபியாய்க்கொண்டு ஸத்தினிடத்திலேயிருந்ததென்று சொல்லுகிறது. ஸத்தென்பது - ப்ரஹ்மம், எது எந்த உருவம்கொண்டு எங்கேயிருக்கிறதோ, அவ்விரண்டுமேஸ்துவும் ஒன்றெனப்படும். ஜகத்து ஸத்ரூபியாய்க்கொண்டு ஸ்ருஷ்டிகாலத்திற்குமுன்பு ப்ரஹ்மத்திலில்லாவிடில், ஸ்ருஷ்டிகாலத்தில் அந்தப்ரஹ்மத்தில்நின்றும் ஜகத்துண்டாகமாட்டாது. அதெப்படியெனில்,—மணலில் எண்ணை கிடையாது. ஆகையால் மணலில்நின்றும் எண்ணை உண்டாகிறதில்லை. அதுபோல் கண்டுகொள்க. கருசு.

(ரா - ஹா.) ஒருவனேரிடத்திற்குப்போகும்போது வழியில் ம்ருத்பிண்டத்தைக்கண்டு, மறுபடியும் திரும்பிவரும்போது அதில்நின்றுமுண்டான கலசாதிகளைப் பார்த்து, இந்த கலசாதிகள் இதற்குமுன் ம்ருத்பிண்டமாயிருந்தது என்று சொல்லுகிறான்; இதனால்காரணத்திலேகார்யமும் இருக்கிறதென்று ஒப்புக்கொள்ளவேணும்; ஆகையால் கார்யகாரணங்களுக்கு பேதமில்லை. கருசு.

* ஸூ-கருஎ. அஸத்³வ்யபதே³ஶாந்நேதி சேந்ந த⁴ர்மாந்தரேண வாக்யஶேஷாத்³யுக்தே: ஶப்³தா³ந்தராச்ச.

(ஶ-ஶா-வ்யா.) அஸத்³வ்யபதே³ஶாத் - (காரணாவஸ்தையில் கார்யம்) இல்லையென்று சொல்லுகையாலே, ந - கார்யம் முன்னில்லை, இதி சேத் - என்றால், ந - அப்படியன்று, த⁴ர்மாந்தரேண - அவஸ்தாந்தரத்தோடு கூடியிருக்கையாலே, (இல்லையென்று சொல்லுகிறது). வாக்யஶேஷாத் - மேல்வாக்யத்தினாலும், யுக்தே: - யுக்தியினாலும், ஶப்³தா³ந்தராச்ச - (ஸமானப்ரகரணத்திலுள்ள) வேறுசப்தத்தினாலும், (கார்யம் முன்னிருக்கிறதென்றே ஸித்தமாகிறது). கருஎ.

(ஸு-ஹா.) "அஸதே³வேத³மக்³ர ஆஸீத்" என்கிற வாக்யம், இந்த ஜகத்து ஸ்ருஷ்டிக்குமுன் அஸத்தாயிருந்தது. அதாவது—இல்லாமலிருந்ததென்று சொல்லுகிறது; ஆகையால் ஸ்ருஷ்டிக்குமுன் காரணரூபியாயிருந்ததென்று சொல்லக்கூடாதென்னில்,—இல்லை என்பதற்கு இந்த ஆகாரங்களுடனும் இப்பெயர்களுடனுமில்லை என்றே அர்த்தம், வஸ்துவே இல்லை என்று அர்த்தமன்று. இதற்குஹேது-அஸத்என்கிற இந்தபதம், வாக்யத்தினாதியிலிருக்கிறது. இத இரண்டுவிதமான அர்த்தத்தைக் கொடுக்கினும இவ்வாக்யத்தின் கடைசியில் "ஸத்" என்று இந்தஜகத்து ஸத்தாயேயிருந்ததென்று ஸம்சயமறச்சொல்லுகிறது. ஆகையால் கீழ்ச்சொன்னபடியே அர்த்தம்கொள்ளவேணும். கருஎ.

(ஸு-ஹா.) ஸ்ருஷ்டிக்குமுன் காரணத்தில் கார்யமிருந்ததென்பதற்கு யுக்தியுமுண்டு. அதாவது—தயிருக்குக்காரணம் பால், வஸ்த்ரத்திற்குக்காரணம் நூல். தயிர்பாலிலும் வஸ்த்ரம்நூலிலுமிருப்பதினாலேயே அவ்வவை வேண்டினவன் பாலைத்தோய்ப்பதிலும் நூலை நெய்வதிலும் யத்நம்செய்கிறான் அவையவற்றிலில்லாவிடில் மற்றொன்றைவிட்டு அதிலேயே ப்ரவ்ருத்தி செய்யக்கூடாது: தேன் மண் முதலிய மற்றொன்றில் க்ருஷி செய்தால் அக்காரியங்களை லபிக்கலாம். ஆகையால் தயிர் வேணி

* இதுசங்கரபாஷ்யத்தற்கு இரண்டுஸூத்ரமாயிருக்கும்.

லும் வஸ்திரம் மண்ணிலுமில்லையென்றும் பாலிலும் நூலிலுமிருந்ததென்று மொப்புக்கொள்ளவேண்டும். தயிர் பாலிலில்லாவிடினும் தயிரையுண்டாக்கும் ஸ்வபாவம் பாலுக்கேயுள்ளது, தேனுக்குக்கிடையாது. ஆகையால் தேனில்நின்றும் தயிருண்டாகிறதில்லையென்னில், நாங்கள் ஸ்தூலாகாரமாகிய தயிர் முன்னம்ஸூக்ஷ்மாகாரமாய் பாலிலிருந்ததென்கிறோம், நீங்கள் அந்த ஸூக்ஷ்மாகாரத்தையே ஸ்வபாவமென்றீர்கள், உங்களுக்கும் எங்களுக்கும் சப்தபேதமொழிய அர்த்தபேதமில்லை. அதுபோல் ஜகத்தும் காரணரூபியாகிய ப்ரஹ்மத்திலிருந்ததென்பது ஸித்தம். இதற்கு வேதவாக்யமும் ப்ரமாணமுண்டு. அதாவது— "सदेव सोम्येदमग्र आसीत्" இந்த ஜகத்துஸ்ருஷ்டிக்குமுன் ஸத்தாயேயிருந்ததென்பது. கீழ்ச்சொன்னயுக்தியும் இந்த வேதவாக்யமும் அஸத்கார்யவாதத்திற்கு விரோதமாகையாயால் அந்தவாதம் ப்ராமாணிகமன்று. ௧௰௬.

(ரா - ஸா.) "असद्वा इदमग्र आसीत्" என்று இந்தகார்யம் முன்னம் இல்லையாயிருந்தது என்று சொல்லுகையாலே கலசாதிகார்யம் முன்னமே ம்ருத்பிண்டாதிகாரணத்திலிருந்ததென்று சொல்லுகை ஸம்பவியாதென்னில், அதற்குக்காரணம்—அப்போது கலசாவஸ்த்தையைவிட்டு பிண்டரூபமான வேறுஅவஸ்த்தையையடைந்திருக்கையாலே அதை இல்லையென்றுசொல்லிற்று. அதெப்படியறிகிறதென்றால், மேல்வாக்யத்தில் அந்த அஸத்து ஸங்கல்பித்ததென்று சொல்லுகையாலே, சூந்யமாயிருந்தால் ஸங்கல்பம் கூடாமையாலே முன்னமேயிருக்கிறதென்றே நிஸ்சயிக்கப்படுகிறது. யுக்தியும் அப்படியே காண்கிறது. அதாவது—கடம் இருக்கிறதென்றும் இல்லையென்றும் சொன்னால் முன்பொரு அவஸ்த்தையையும் பின்பொருஅவஸ்த்தையையும் அடைந்திருக்கிற வஸ்துவே காண்கிறதொழிய வஸ்துசூந்யமாகக்காண்கிறதில்லை. மேலும் இவ்வாக்யத்தோடு ஸமானப்ரகரணத்தில், இங்கு அஸத்துஎன்று சொன்னவிடத்தில் அங்கு ஸத்துஎன்று சொல்லுகையாலே இங்கும் அவஸ்தாந்தராபந்நமானவஸ்துவே சொல்லிற்றென்று நிஸ்சயிக்கவேண்டும். ஆகையால் கார்யம் காரணாவஸ்த்தையிலுமிருக்கிறதென்று ஸித்தாந்தம். ௧௰௬.

ஸூ-௧௰௭. पटवच्च.

(ஸூ-ராவ்ய.) पटवच्च - (நூல்) வஸ்த்ர மாகிறாப்போலவும், (ப்ரஹ்மம் ஜகத்தாகிறது.) ௧௰௭.

(ஸூ-ஸா.) வஸ்திரம் மடித்துவைத்திருக்கும்போது இதுவஸ்திரமோ அன்றோ என்று ஸம்சயிக்கும்படியாயிருக்கிறது. அதை விரித்துக்காட்டினால் முன் மடித்துவைத்திருந்தது வஸ்திரந்தான் என்று நிஸ்சயிக்கப்படுகிறது. மடித்தபோது ஓரவஸ்த்தையையும் விரித்தபோது ஓரவஸ்த்தையையும் அடைந்திருக்கும். அவஸ்த்தையில் பேதமொழிய வஸ்துவில் பேதமில்லை. அதுபோல் ஜகத்திலும்காண்க. ௧௰௭.

(ரா - ஸா.) நூற்கள் ஒன்றுக்கொன்று சேர்ந்தால் படம் என்கிற பேரையும் வேறுவிதமான ஆகாரத்தையும், அடைந்து உடுத்திக்கொள்ளல் முதலிய கார்யங்களுக்கும் உபயோகிக்கிறாப்போலே ப்ரஹ்மமும் ஜகத்ரூப்மாகப் பரிணமித்து நாமரூபங்களையடைகிறது. ௧௰௭.

ஸூ-௧௰௮. यथा च प्राणादिः.

(ஸூ-ரா-வ்ய.) यथा-எப்படி, प्राणादिः - ப்ராணன்கள் (வெவ்வேறு வ்ருத்திகளை யடைகிறதுகளோ, அப்படியே ப்ரஹ்மமும்). ௧௰௮.

(ஶ்-ஹா.) ப்ராணனை வெளியில்விடவொட்டாமல் உள்ளே யடக்கிவிட்டால் போவதுவருவதாகிற வ்யாபாரமற்றதாய் ஜீவிப்பதற்குமாத்திரம் உபயோகப்பட்டிருக்கும். அடக்காமல் விட்டுவிட்டால் போவதுவருவதாகிற வ்யாபாரத்தையுடைத்தாயிருக்கும். அவ்வளவே பேதமுள்ளது. ப்ராணவாயு என்பதற்கு இரண்டுகாலங்களிலும் ஸம்சயமில்லை. அதுபோல் ஜகத்திலும்காண்க. கஙஅ

(ரா-ஹா.) சரீரத்திலிருக்கிற ஒருப்ராணனே வ்ருத்திவிசேஷத்தினால் வெவ்வேறு நாமங்களையெப்படி யடைகிறதுகளோ, அப்படியே ப்ரஹ்மமும் ஜகத்ரூபேண பரிணமித்து வெவ்வேறு நாமரூபங்களையடைகிறது; ஆகையால் ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதமில்லை. கஙஅ.

அதி ௪௨. ஸூ-கஙக. இதரவ்யபதேஶாத்திதாகரணாதி தோஷப்ரஸக்திः.

(ஶ்-ரா-வ்.) இதரவ்யபதேஶாத் - (பரமாத்மாவை) இதரனை ஜீவனாகச் சொல்லுகையாலே, ஹிதாகரணாதிதோஷ ப்ரஸக்திः - (பரமாத்மா ஜகத்ஸதைஸ்ருஷ்டித்தால்) (தனக்கு) நன்மையைச் செய்துகொள்ளாமை முதலிய தோஷங்கள் ஸம்பவிக்கும். கஙக

(ஶ் - ஹா.) ப்ரஹ்மம் ஜகத்காரணமாகில் வேறொரு தோஷம் சொல்லப்படுகிறது. அதாவது—"தத்வமஸி" முதலான வாக்யங்கள் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றென்று சொல்லுகின்றன. ஜகத்து ஜீவனுக்கு பிறப்பு இறப்பு பிணி மூப்புமுதலிய அநேகமான துயரங்களை விளைக்குமதாயிருக்கிறது. ஸமர்த்தனானவன் தனக்குத் துயரத்தை விளைத்துக்கொள்ளான். ஆகையால்ப்ரஹ்மம் ஜகத்காரணமாகக்கூடாது மூலப்ரக்ருதியே காரணமாகவேண்டுமென்று பூர்வபக்ஷம். கஙக.

(ரா - ஹா.) கீழ்ச்சிதசித்ரூபமான ஜகத்துக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதமில்லையென்று சொல்லிற்று. "தத்வமஸி - அந்த பரப்ரஹ்மமே நீயாகிறாய்" "அயமாத்மா ப்ரஹ்ம - இந்த ஜீவாத்மா ப்ரஹ்மஸ்வரூபன்" என்று சொல்லுகிற வாக்யங்களைக்கொண்டு இந்த ஜகத்திற்சேர்ந்த ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதமில்லையென்று ஒப்புக்கொண்டால், அந்தப்ரஹ்மத்தை ஜகத்காரணமாகக்கொள்ளக்கூடாது. ஏனென்றால், இந்தஜகத்து ஜீவர்களுக்கு மிகவும் துக்கஜநகமாயிருக்கையாலே ப்ரஹ்மத்துக்கும் துக்கஜநகமாயேயிருக்கும், தான் ஸர்வஜ்ஞனாய், நினைத்தபடி பண்ணவல்ல ஸத்யஸங்கல்பனாயிருந்து தனக்குஸுகஜநகமான ஜகத்தை ஸ்ருஷ்டிக்கவேண்டியிருக்க அதைவிட்டு, தனக்கு அத்யந்த துக்கஜநகமான ஜகத்தை ஸ்ருஷ்டிக்கை அநுசிதம் இத்யாதியான அநுபபத்திகள் உண்டாகையால் ப்ரஹ்மம் ஜகத்காரணமன்று என்று பூர்வபக்ஷம். கஙக.

ஸூ-கச0. அதிகந்து பேதநிர்தேஶாத்.

(ஶ்-ரா-வ்.) பேதநிர்தேஶாத் - ஜீவப்ரஹ்மங்களுக்கு (வேதத்தில்) பேதம் (உண்டென்று) சொல்லுகையாலே, அதிகந்து - ஜீவனைக்காட்டிலும் ப்ரஹ்மம் வேறுபட்டதே. கச0

(ஶ்-ஹா.) "ஸதாஸோம்ய ததாஸம்பந்நோ பவதி" உறங்கும்போது ஜீவன் ப்ரஹ்மத்தோடுபோய் சேருகிறானென்று ஜீவனைக்காட்டிலும் ஜகத்காரணமாகிய ப்ரஹ்மத்தைப்பிரித்துச்சொல்லியிருக்கையால் கீழ்ச்சொன்ன தோஷம்வாராது.

ஆனால் அத்வைதமில்லையோவென்ன, பாரமார்த்திகதசையில், அதாவது - மோக்ஷ தசையில் அத்வைதந்தான். அப்போது ஜீவனென்றொருவனில்லை. ஸ்ருஷ்டியுமிலை யாது. ஸம்ஸாரதசையில் பேதமுண்டு. இப்போது இவ்விதமாக ஸ்ருஷ்டிக்கையில் பாதகமில்லையென்று ஸித்தாந்தம். கஆO.

(ஶ்ரீ - ஹா.) இந்த சங்கைக்கு ஸமாதானம் சொல்லுகிறார்.—"கரணாதி பாயிபஃ - இந்த்ரியங்களுக்கு யஜமானனான ஜீவனுக்கும் யஜமானன்" "ப்ரதான க்ஷேத்ரஜ்ஞபதிஃ - மூலப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஸ்வாமி" இப்படிப்பட்டவன் பரமாத்மா என்று இதுமுதலான வாக்யங்களினால் ஜீவனைக்காட்டிலும் பரப்ரஹ்மம் வேறென்று சொல்லுகையாலே ஜீவப்ரஹ்மங்களொன்றாகாது. அந்தப்ரஹ்மம் ஜீவனுடைய கர்மாநுகுணமாகவும் தன்னுடைய லீலார்த்தமாகவும் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறதென்று ஒப்புக்கொள்வதில் ஒருதோஷமுமில்லை. கீழ்ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமில்லையென்று சொன்னது-ஜீவன் ப்ரஹ்மத்திற்கு சரீரமாகையால், இவன் சேதனன் என்கிறவிடத்தில் கண்ணால்காண்கிறஜடமான சரீரத்தைக்காட்டி அதைச்சேதனனாகச் சொன்னால் இந்தசரீரத்தை யுடையவன் சேதநன் என்று அர்த்தமாய் அந்த சரீரத்திற்கும் சேதநனுக்கும் அபேதமாக வ்யவஹார முண்டாகிறாப்போல், இங்கும் ஜீவனை சரீரமாக உடையது ப்ரஹ்மம் என்று அர்த்தமாய் அவ்விரண்டும் அபேதமாக வ்யவஹரிக்கப்படுகிறது ஆகையால் அதிலுமொரு அநுபபத்தியில்லையாகையால் ப்ரஹ்மம் ஜகத்காரணமாகலாம் என்று ஸித்தாந்தம். கஆO.

ஸூ-கஆக. அஶ்மாதிவச்ச ததநுபபத்திஃ.

(ஶ-ஶ்ரீ-வ்ய.) அஶ்மாதிவச்ச -கல்முதலானவைகளுக்குப்போலவே, தத நுபபத்திஃ-ஜீவனுக்கும் ப்ரஹ்மத்தோடு அபேதம்ஸம்பவியாது. கஆக

(ஶ - ஹா.) லோகத்தில் மண்ணின் விகாரமாகிய கற்கள் சில விலையுயர்ந்த ஸூர்யகாந்த சந்த்ரகாந்தமணிகளாகவும், சில ரத்நங்களாகவும், சில நடுத்தரமான வெறும் கற்களாகவும் காணுகின்றன. அதுபோல் ப்ரஹ்மத்தினின்றுமுண்டாகிய ஜகத்தும் ஜடம் அஜடம் இத்யாதி நாநாவிதபேதங்களையுடையனவாக ஆகலாமென்று தாத்பர்யம். கஆக.

(ஶ்ரீ - ஹா.) ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதம் கூடாதென்பதில் யுக்தியுமுண்டென்கிறார். அதாவது—ஜடமான சிலாகாஷ்டாதிகள் ஸ்வயம்ப்ரகாசமான ப்ரஹ்மஸ்வரூபம் எப்படியாகாதோ, அப்படியே துக்கியான ஜீவனுக்கும் ஆநந்தரூபியான ப்ரஹ்மத்துக்குங்கூட அபேதம் ஸம்பவியாது. கஆக.

அதி-௬க. ஸூ-கஆஉ. உபஸம்ஹாரதர்ஶநாந்நேதி சேந்ந க்ஷீரவத்தி.

(ஶ-ஶ்ரீ-வ்ய.) உபஸம்ஹாரதர்ஶநாத் (ஸ்ருஷ்டிக்கிறவனுக்கு ஸாமக்ரிகளின்) சேர்கை காண்கையாலே, ந - (அதில்லாதப்ரஹ்மம்) ஜகத்காரணமாகாது, இதிசேத் - என்றால், ந - இந்தசங்கைகூடாது, க்ஷீரவத்ஹி - பால்போலே (ஜகத்காரணம் ஸம்பவிக்குமென்பது) ப்ரஸித்தமன்றோ.

(ஶ-ஶ்ரீ-ஹா.) லோகத்திலொருவனொரு கார்யத்தைச்செய்யும்போது அதற்கு வேண்டிய அநேகமான ஸாமக்ரிகளைச் சேர்த்துவைத்துக்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறான். அதுபோலவே பரமாத்மாவும் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும்போது அநேக ஸாமக்ரிகளை யுடையவனாயே ஸ்ருஷ்டிக்கவேண்டும். "ஸதேவஸோம்ய" என்கிற

ஶ்ருதியில், ஜகத்ஸ்ருஷ்டிக்குமுன் பரமாத்மா ஒரு உபகரணமுமில்லாதவனாயிருந்தானென்று சொல்லுகையாலே உபகரணமில்லாத அந்த பரமாத்மாவுக்கு ஜகத்காரணத்வம் கூடாதென்று பூர்வபக்ஷம். கார்யத்தைச்செய்யும்போது அநேக ஸாமக்ரி வேண்டுமென்கிற நியமம் கிடையாது. அதெப்படியென்றால், பால் தயிராகும்போது ஒரு ஸாமக்ரியுமில்லாமல் தானேதயிராய்விடுகிறது; அதுபோலவே பரமாத்மாவும் ஸாமக்ரி சூந்யனாய் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கலாமென்று ஸித்தாந்தம். ௧௯௨.

ஸூ-௧௯௩. தேவாதிவதபி லோகே.

(ஸூ-பா-வ்யா-ஸா) லோகே - (தங்கள் தங்களுடைய) லோகத்தில், தேவாதிவதபி - (இந்த்ராதி) தேவதைகள் (தங்களுடைய ஸங்கல்பத்தினாலேயே தங்களுக்கு வேண்டிய பதார்த்தங்களை ஸாமக்ரிசூன்யராய்க்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறது) போலவும், (ஸாமக்ரீசூன்யனான பரமாத்மாவும ஸங்கல்பத்தினாலேயே ஜகத்தை ஸ்ருஷ்டிக்கலாம்). ௧௯௩.

அதி. ௪௪. ஸூ-௧௯௪. க்ருத்ஸ்னப்ரஸக்திர்நிரவயவத்வசப்தகோபோ வா.

(ஸூ-பா-வ்யா.) க்ருத்ஸ்னப்ரஸக்தி:-நிரவயவமான (ப்ரஹ்மத்தினுடைய) ஸம்பூர்ணஸ்வரூபமும் ஜகத்ரூபமாக உபயோகிக்கவேண்டிவரும். நிரவயவத்வசப்தகோபோவா - (இதற்காக ப்ரஹ்மம் ஸாவயவமென்றால்) ப்ரஹ்மம் நிரவயவம் என்கிற சப்தத்திற்கு பாதைவரும். ௧௯௪.

(ஸூ-பா-ஸா.) ப்ரஹ்மம் நிரவயவமாகையால் அவயவரூபமான அம்சமில்லையாகையால் ஜகத்ரூபமாகப் பரிணமிக்கும்போது இந்தஅம்சம் ஜகத்ரூபமாகப் பரிணமித்தது. மற்ற அம்சம் நித்யவிபூதியில் இருக்கிறதென்று சொல்லமுடியாது. ஸம்பூர்ணஸ்வரூபமும் ஜகத்ரூபமாய்ப் பரிணமித்துவிட்டது என்று கொள்ளவேணும். ஆனால் நித்யவிபூதியில் ப்ரஹ்மம் இல்லாமல்போகவேண்டிவரும். இந்த அநுபபத்திக்காக ப்ரஹ்மம்ஸாவயவம் என்று அங்கீகரித்து அதினுடைய சில அம்சம் ஜகத்ரூபமாகப்பரிணமித்து சிலஅம்சம் நித்யவிபூதியிலிருக்கிறதென்று அங்கீகரித்தால் ப்ரஹ்மம் நிரவயவம் என்று சொல்லுகிற ஶ்ருதிகளந்வயியாது. ஆகையால் ப்ரஹ்மம் ஜகத்காரணமாகமாட்டாது என்று பூர்வபக்ஷம். ௧௯௪.

ஸூ-௧௯௫. ஶ்ருதேஸ்து சப்தமூலத்வாத்.

(ஸூ-பா-வ்யா.) ஶ்ருதே: - (இந்தவிஷயத்தில்) வேதம் ப்ரமாணமாகையாலே (இந்தசங்கைக்கு அவகாசமில்லை). சப்தமூலத்வாத் - வேதவாக்யமே (ஈஶ்வரஸத்பாவத்தில்) ப்ரமாணமாகையாலே, (அந்த ஈஶ்வரன் லோகவிஜாதீயனாகையாலே நிரவயவனான அவன் ஜகத்காரணனாகலாம்.)

(ஸூ-பா-ஸா.) இதற்கு ஸமாதானம்.—லோகத்ருஷ்டாந்தத்தைக்கொண்டு இப்படி சங்கிக்கக்கூடாது. ப்ரஹ்மமுண்டென்பதில் வேதமேப்ரமாணம். இதரப்ரமாணம் கிடையாது ஆகையால் அது லோகவிஜாதீயம். லோகத்தில் நிரவயவவஸ்து விஷயமாக உண்டாகவேண்டிய சங்கையை லோகவிஜாதீயமான ப்ரஹ்மத்தின் விஷயத்தில் செய்யக்கூடாது. இது நிரவயவமாயினும் ஜகத்ரூபமாகப்பரிணமிக்கிறதென்பதிலும் வேதமே ப்ரமாணமாகையாலே ப்ரஹ்மத்தை ஒப்புக்கொண்டாற்போல் இதையும் ஒப்புக்கொள்ளவேணும் ஆகையால் ப்ரஹ்மம் ஜகத்காரணமாகமாட்டாதென்கிற சங்கையில்லை என்று ஸித்தாந்தம். ௧௯௫.

ஸூ-கக௬. ருதநிவெவம் விவிதாஹூஹி.

(ஶ-ரா-வ்ய.) ருதநிவ - ஜீவாத்மாவினிடத்திலும், வவழ - (விஜாதீயமாகையாலே) அசேதநதர்மங்கள் (ஜடத்வாதிகள்) ப்ரஸங்கியாது, விவிதாவஹி-(அசேதநங்களான அக்ந்யாதிகளிடத்திலும்) விசித்ரசக்திகள் காண்கின்றனவன்று. கக௬.

(ஶ-ரா-ஸா.) ஜீவனிடத்தில் ப்ரக்ருதிதர்மம் ஏன் ஸம்பவிக்கவில்லையென்றால் ப்ரக்ருதியைக்காட்டிலும் ஜீவன் விஜாதீயனாகையாலேயென்று சொல்லவேண்டும். அப்படியே ஈஸ்வரனும் விஜாதீயனாகையாலே நீங்கள் சொல்லுகிற சங்கைக்கு அவகாசமில்லை. அசேதநங்களான ஜலம் தேஜஸ்ஸு முதலியவையும் பரஸ்பரம் விஜாதீயமான சைத்யம் உஷ்ணமுதலிய குணங்களையுடையவைகளாய்க் காண்கின்றன. அதுபோலவே விஜாதீயனான ஈஸ்வரனிடத்திலும் விஜாதீயசக்திகள் உண்டாகலாம். கக௬.

ஸூ-கக௭. ஸ்வபக்ஷதோஷாஞ்ச.

(ஶ-ரா-வ்ய.) ஸ்வபக்ஷதோஷாசவ - தங்கள் (காபிலர்) பக்ஷத்தில் தோஷமிருக்கிறபடியாலும், (ப்ரஹ்மகாரண வாதமே ஒப்புக்கொள்ள வேணும்.) கக௭.

(ஶ-ரா-ஸா.) ப்ரதாநகாரணவாதபக்ஷத்தில் ப்ரதாநம் லௌகிகவஸ்து ஸஜாதீயமாகையாலே லௌகிகவஸ்துக்களை த்ருஷ்டாந்தமாகக்கொண்டு நீங்கள் சொல்லுகிற தோஷங்கள் ப்ரதாநத்திற்கு ஸம்பவிக்கும் ஆகையால் ப்ரதாநத்தைக் காரணமக் கொள்ளக்கூடாது. கக௭.

ஸூ. கக௮. ஸவோவெதாவ தஜுஶநாத.

(ஶ-ரா-வ்ய.) தஜுஶநாத-(ஈஸ்வரன் ஸர்வசக்தியுள்ளவன் என்று ப்ரதிபாதிக்கிற) வேதம்காண்கையாலே, ஸவோவெதாவ - ஈஸ்வரன் ஸர்வசக்தியை யுடையவனாகிறான். கக௮.

(ஶ - ரா - ஸா.) ஈஸ்வரன் ஸகலவஸ்து விஜாதீயனென்று அவனிடத்தில் சக்தி யொப்புக்கொள்வதேயன்று. "பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே" என்று வேதமும் அவனுக்கு ஸர்வ சக்திகளுண்டென்று சொல்லுகிறது. கக௮.

ஸூ - கக௯. விகரணவாநெதிவெஷதஜுக்தம்.

(ஶ-ரா-வ்ய.) விகரணவாச - (ஈஸ்வரனுக்கு) உபகரணமில்லாமையாலே, ந - (அவன்) ஜகத்காரணமாகமாட்டான். இதிசேத்-என்றால், தஜுக்தம் - இதற்கு ஸமாதாநம் (முன்னமே) சொல்லப்பட்டது: கக௯.

(ஶ-ரா-ஸா.) ஈஸ்வரனுக்குக் கரணம், அதாவது-ஸாமக்ரி யில்லாமையாலே ஸ்ருஷ்டி ஸாமர்த்தியம் அவனுக்குக் கிடையாதென்றால் இதற்கு ஸமாதாநம்-கக௫-கக௬ - ஸூத்ரங்களிற் சொல்லப்பட்டது - இங்கு மறுபடியும் சங்கித்தது - இந்த அர்த்தத்தை சிஷ்ய புத்தியில் ஊன்றிவைக்கைக்காக. கக௯.

அதி - ௭௫. ஸூ-கஉ0. நப்ரயொஜநவவாச.

(ஶ-ரா-வ்ய.) நப்ரயொஜநவவாச-(கார்யமெல்லாம்) ப்ரயோஜநத்தை யுடைத்தாகையினாலே, ந - (பரிபூர்ணனான ஈஸ்வரனுக்கு ப்ரயோஜநமில்லாமையால்) ஜகத்காரணத்வம்கூடாது. கஉ0.

(ஸ-ரா-ஸா.) ஒருவனொரு கார்யத்தைச் செய்யும்போது ஒருப்ரயோஜநத்தை யுத்தேசித்தே செய்கிறான். அதாவது—தானொரு பலத்தை யடையவேணுமென்றாவது, மற்றொருவனுக்கு நன்மையைச் செய்யவேணுமென்றாவது செய்கிறான். ஈச்வரன் அவாப்த ஸமஸ்த காமனாகையால், தனக்கொரு பலத்திலுமபேக்ஷையில்லையாகையால், தன்னுடைய ப்ரயோஜநத்துக்காக ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்று சொல்லக்கூடாது, இந்த ஸம்ஸாரம் ஜீவன்களுக்கு நரகவாஸம் முதலிய அநந்த துக்கங்களுக்குக் காரணமாயிருக்கையால் ஜீவன்களுக்கு இஸ்ஸம்ஸாரம் நலமாகமாட்டாது; ஆகையால் அவர்களுடைய ப்ரயோஜநத்துக்காகச் செய்கிறானென்றும் சொல்லமுடியாது. இப்படி இருவகையான ப்ரயோஜநமுமில்லாமையால் ஈச்வரனுக்கு ஜகத்ஸ்ருஷ்டி ஸம்பவியாது என்று பூர்வபக்ஷம். ௧௭௦.

ஸூ. ௧௭௧. லோகவத்து லீலாகைவல்யம்.

(ஸ-ரா-வ்ய.) லீலாகைவல்யம் – கேவலம் லீலையே ஜகத்ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநமாகிறது. (அதெப்படியென்றால்), லோகவத் - லோகத்தில் ராஜாக்களுக்குப் பந்தாடுகிற வ்யாபாரம்போலே. ௧௭௧.

(ஸ-ரா-ஸா.) இந்த சங்கைக்கு ஸமாதாநம் சொல்லுகிறார்.—லோகத்தில் ராஜாவானவன் ஸமஸ்தகாம பரிபூர்ணனா யிருந்தாலும் விநோதார்த்தமாகப் பந்தாடுகை, வேட்டையாடுகைமுதலிய வ்யாபாரங்கள் செய்வதுபோல், இந்த ஜகத்ஸ்ருஷ்டியில் ஈச்வரனுக்கு மற்றொரு ப்ரயோஜநமில்லாவிடினும் லீலார்த்தமாகவே இந்த ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான் என்று ஸித்தாந்தம். ௧௭௧.

ஸூ - ௧௭௨. வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்சயதி.

(ஸ-ரா-வ்ய.) வைஷம்யநைர்க்ருண்யே - (ஈச்வரன் ஜகத்ஸ்ரஷ்டாவானால் அவனுக்கு) வைஷம்யமும் நிர்தயத்வமும் ப்ரஸங்கிக்கும் (என்றால்), ந - அவை ஸம்பவியாது. (ஏனென்றால்), ஸாபேக்ஷத்வாத் - சேதநர்களுடைய கர்மஸாபேக்ஷனா யிருக்கையாலே, ததா ஹி - அப்படியே, தர்சயதி - (வேதவாக்யம்) காண்பிக்கிறது. ௧௭௨.

(ஸ-ரா-ஸா.) இந்த ஜகத்துக்கு ஈச்வரன் கர்த்தாவென்று ஒப்புக்கொண்டால், சிலரை ஜாதி குணம் வித்யைஸம்பத்து முதலானவைகளினால் ஸுகிகளாய் உயர்ந்தவர்களாகவும், சிலரை ஜாதிகுண வித்யாஸம்பத்து முதலானவை யற்றவர்களாய் துக்கிகளாய்த் தாழ்ந்தவர்களாகவும், இப்படி விஷமமாக ஸ்ருஷ்டிக்கையால் அவனுக்கு வைஷம்யம்வரும், ஜீவன்களை இந்த துக்கமயமான ஸம்ஸாரத்தில் ஸ்ருஷ்டிக்கையாலே அவன் நிர்தயனுமாவான், ஆக இவ்விரண்டு தோஷமும் ஸம்பவிக்குமாகையால் அவனுக்கு ஜகத்காரணத்வம் கூடாது என்று பூர்வபக்ஷம்—ஈச்வரன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும்போது, ஜந்மாந்தரத்திற் செய்த அந்தந்த சேதநர்களுடைய புண்யபாபரூப கர்மங்களைப்பார்த்துத் ததநுகுணமாகப் புண்யவான்களை உயர்ந்தவர்களாகவும், பாபிகளைத் தாழ்ந்தவர்களாகவும் ஸ்ருஷ்டிக்கிறான். இந்த உயர்வும், தாழ்ச்சியும், துக்கா நுபவமும் சேதநர்களுடைய கர்மாநுகுணமாகையால் ஈச்வரனுக்கு வைஷம்யமும் நிர்தயத்வமும் ஸம்பவியாது என்று ஸித்தாந்தம்.—வேதத்திலும், “ஸாது காரீ ஸாதுர்ப்பவதி பாபகாரீ பாபோ பவதி” - புண்யத்தைப் பண்ணினவன்

புண்யவானுய்ப் பிறக்கிறான், பாபத்தைப் பண்ணினவன் பாபியாய்ப் பிறக்கிறான்' என்று அவரவருடைய கர்மமே அவரவருடைய ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று சொல்லுகிறது. களஉ.

ஸூ-களஙு. ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத்

தேவாவ்யுபபத்யதே ச.

(ஸூ-ரா-வ்.) ஸுவிஹாமாக - (ஸ்ருஷ்டிக்குமுன்) ஜீவன் என்கிற விபாகமில்லாமையாலே, கர்ம - புண்யபாப ரூபகர்மமும், ந - இல்லை; இதிசேத் - என்றால், ந - அப்படியில்லை. (ஏனென்றால்), அநாதித்வாத் - (ஜீவனும் கர்மமும்) அநாதியாகையாலே, உபபத்யதே ச - (ஜீவன் அநாதியானாலும் ஸ்ருஷ்டிக்குமுன் விபாகமில்லையென்பதும்) உபபந்நமாகிறது. உபலப்யதே ச - (ஜீவன் அநாதியென்பது ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும்) காணப்படுகிறது. களஙு.

(ஸூ-ஹா.) இந்த பாஷ்யத்திற்கு இது இரண்டு ஸூத்ரம். "ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத்" என்கிறவரையில் ஒரு ஸூத்ரம் "உபபத்யதே சாப்யுபலப்யதே ச" என்கிறவரையில் வேறொரு ஸூத்ரம். ஜந்மாந்தரத்தில் பண்ணின புண்யபாபங்களினுல் இந்தஜந்மத்தில் ஸுகியாகவும் துக்கியாகவும் ஜீவன்களைப் பிறப்பித்தபோதிலும் ஆதிஸ்ருஷ்டிக்குமுன் கர்மமில்லாமையால் அந்த ஆதி ஸ்ருஷ்டியில் ஒருவனை சுகியாகவும் மற்றொருவனை அசுகியாகவும் பிறப்பிக்கக் காரணமென்னெனில்;—ஆதிஸ்ருஷ்டி யென்பது கிடையாது. இந்த ஸம்ஸாரம் அநாதி. நீங்கள் எதை ஆதியாக நினைக்கிறீர்களோ, அதுக்குமுன்னும் ஸம்ஸாரமுண்டு; அப்போது செய்த கர்மங்களினுல் பின் இப்படிஸ்ருஷ்டிக்கிறுனென்று முதல் ஸூத்திரத்திற்குத் தாத்பர்யம்—ஸம்ஸாரத்தை அநாதியென்றொப்புக்கொள்வதே யுக்தமானது. அல்லாதபக்ஷத்தில் முன் ஸம்ஸாரமில்லாமலிருந்து புதிதாக ஸம்ஸாரமொப்புக்கொள்ளில் முக்தியையடைந்தவனுக்கும் ஸம்ஸாரத்தில் பிறப்புண்டாகவேண்டிவரும். இதுமுதலாக அநேக தோஷங்களுண்டாம். ஆகையால் அப்பக்ஷம் அங்கீகரிக்கக்கூடாது. வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் ஸம்ஸாரம் அநாதியென்றே சொல்லப்படுகிறது. களஙு.

(ரா-ஹா.) "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்று இந்த ஜகத்ஸ்ருஷ்டிக்குமுன் சிதசித்துக்களொன்றுமில்லை, பரமாத்மா ஒருவனே யிருந்தானென்று சொல்லுகையாலே, ஸ்ருஷ்டிக்குமுன் ஜீவனில்லை; அவனில்லாதபோது அவனுடைய புண்யபாபரூப கர்மமுமில்லையாகையால், அந்த கர்மத்தைப்பற்றி விஷமமாக ஸ்ருஷ்டிக்கிறுனென்று சொல்லக்கூடாதென்று பூர்வபக்ஷம்—ஜீவனை அநாதியாக ஒப்புக்கொள்ளாவிட்டால், ஜீவன் முன்செய்யாத புண்யபாபங்களை இப்போது அநுபவிக்கிறுனென்றும், இப்போது செய்கிற புண்யபாபங்களை அநுபவிக்கப்போகிறதில்லை என்றும் இத்யாதி தோஷங்கள் வரும். முன் செய்யாததை இப்போது அநுபவித்தால் எல்லாருமே ஸுகியாவது, எல்லாருமே துக்கியாவது ஆகவேண்டுமல்லது ஒருவன் ஸுகியாகவும் ஒருவன் துக்கியாகவு மாகக்கூடாது. இப்போது செய்கிற கர்மத்தை அநுபவியாமற்போனால் "அவஶ்யமநுபோக்தவ்யம்"—செய்த கர்மத்தை அநுபவித்தே தீரவேணுமென்கிற சாஸ்த்ரம் வ்யர்த்தமாய்விடும். ஆகையால் ஜீவனும் அவனுடைய கர்மமும் அநாதியென்றே ஒப்புக்கொள்ளவேண்டும். "ஜ்ஞாஜ்ஞௌ

ஆரவஜள—ஸர்வஜ்ஞனை ஈஸ்வரனும் அஜ்ஞனை ஜீவனும் இவ்விருவரும் உத்பத்திருக்யர், என்று வேதத்தில் அநேக இடங்களிற் சொல்லுகிறது.—ஜீவனுதியாயிருந்தாலும் ஸ்ருஷ்டிக்குமுன் தேவமநுஷ்யாதி நாமரூபங்க ளொன்றுமில்லாமல்ஸூக்ஷ்மாவஸ்தையை யடைந்து இல்லையென்னலாம்படி யிருக்கையால், ஈஸ்வரனொருவனே யிருக்கிறனென்று சொல்லிற்று; ஆகையா ல் வாக்யத்திற்கும் விரோதமில்லை என்று ஸித்தாந்தம். ௧௫௩.

ஸூ - ௧௫௪. ஸவஷயெஉ-ரவவடூதஜு.

(ஶ-ரா-வ்யா.) ஸவஷயெஉ-ரவவடூதஃவ - (காரணத்வோபயோகியான) ஸ்கலதர்மமும் (ஈஸ்வரனிடத்தில்) உபபந்நமாகையாலேயும் (ப்ரஹ்மகாரணவாதம் உபபந்நம்.) ௧௫௪.

(ஶ-ரா-ஸா.) பரமாணுக்களும் ப்ரதாநமும் ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான சக்தியற்றவையாகையால் ஜகத்காரணங்களாகமாட்டா. பரமாத்மா ஸமஸ்த சக்தியுக்தனாகையால் அவனே ஜகத்காரணம் என்று ஸித்தாந்தம், ௧௫௪.

2-வது அத்யாயம் ௧-வதுபாதம் ஸம்பூர்ணம்.

---

## ௨-வது அத்யாயம். ௨-வது பாதம்.

---

௬ம்-௪௬. ஸூ-௧௫௫. ரவநாநுவவடூதஜு நாநுமாநம்

வ்ருவ்ருடூதஜு.

(ஶ-ரா-வ்யா.) ரவநாநுவவடூதஃவ - (ப்ரதாநத்திற்கு) ஸ்ருஷ்டிக்கையி லநுபபத்தியினலும், வ்ருவ்ருடூதஃவ - (ஸ்ருஷ்டியில்) ப்ரவ்ருத்தியினுடைய, (அநுபபத்தியினலும்), ஈநுாநடி - மூலப்ரக்ருதி, ந - ஜகத்காரணமாகமாட்டாது. ௧௫௫.

(ஶ-ஸா.) இந்த பாஷ்யத்திற்கு "ரவநாநுவவடூதஜு நாநுமாநடி" என்று ஒரு ஸூத்ரமும், "வ்ருவ்ருடூதஜு" என்பது வேறு ஸூத்ரமுமாக இருக்கும் அர்த்த பேதம் கிடையாது. ௧௫௫

(ஶ-ரா-ஸா.) இந்த பாதத்தில் பரபக்ஷங்களிலுள்ள தோஷங்களை சொல்லுகிறர்.—ப்ரதாநம் ஜகத்காரணமாகுமா, ஆகாதா வென்று இந்த அதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது—ஜகத்து ஸுகதுக்க மோஹாத்மகமா யிருக்கிறது. அதில்ஸுகம் ஸத்வகுணத்தினுடையவும், துக்கம் ரஜோகுணத்தினுடையவும் மோஹம் தமோகுணத்தினுடையவும் கார்யங்களாகையாலே, ஜகத்தும் ஸத்வரஜஸ்தமோமயமாயிருக்கும்; இவ்விதமான ஜகத்துக்கு இதுக்கநுரூபமான வஸ்துவே காரணமாக வேண்டும். ம்ருண்மயமான கடாதிகளைக்குறித்து அதுக்கநுரூபமான ம்ருத்பிண்டமே காரணமாகிறபோலே இந்த ஜகத்துக்கும் இதுக்கநுரூபமாய் ஸத்வரஜஸ்தமோரூபமான ப்ரக்ருதியே காரணமாகவேண்டும் என்று பூர்வபக்ஷம்—க்ருஹம் தேர் முதலியவை செய்கைக்குக் கட்டைகாரணமாயினும், அது அசேதநமாகையால் ஒரு புருஷனுடைய ப்ரயத்நமின்றிக்கேதானே க்ருஹாதிகளைச் செய்ய ஸமர்த்தமாகிறதில்லை. அதுபோ

லவே, ப்ரதாந மசேதநமாகையால் ஒரு புருஷனபேக்ஷையின்றி இந்த விசித்ரமான ஜகத்தை ஸ்ருஷ்டிக்க ஸமர்த்தமாகமாட்டாது ஆகையால் ப்ரக்ருதி ஜகத்காரணமாகமாட்டாதென்று ஸித்தாந்தம். கஎ௫.

ஸூ-கஎ௬. பயோம்பு வச்சேத் தத்ராபி.

(ஶ-ரா-பா.) பயோம்புவத்சேத் - பால்போலவும் ஜலம்போலவும் (ப்ரக்ருதியும் ஜகத்தைஸ்ருஷ்டிக்கும்) என்றால், தத்ராபி - அந்த பால் ஜலங்களிலும், (பரமபுருஷன் அதிஷ்டித்திருக்கிறான்.) கஎ௬.

(ஶ-ஹா.) பால் பசுவின் முலையிலிருந்து தானே வழிவதுபோலும், நீர்தானே ஓடுவதுபோலும் ஒருவனுடையவபேக்ஷையின்றியே ப்ரதாநமும் தானே ஜகத்ரூபமாகப்பரிணமிக்கிறதென்று பூர்வபக்ஷம். பாலைப்பசு, கன்றினிடமிரக்கும்போதே பெருகச்செய்கிறது; அன்றியே கன்று ஊட்டுகையாலும் பால் முலையில்நின்றும் ஒழுகுகிறது. இவ்விரண்டு காரணமுமின்றித் தானே பெருகுகிறதில்லை. நீர் பெருகுகைக்கும் தாழ்ந்ததேசமென்பதொரு காரணமுண்டு. அதுவுமன்றி அந்தர்யாமியதிகரணத்தின்படி பாலிலும் நீரிலும் பரமாத்மா இருந்து அவற்றைப் பெருகச்செய்கிறானென்பது ஸித்தம். அவ்வித காரணமில்லாமையால் ப்ரக்ருதி ஜகத்காரணமாகமாட்டா. கஎ௬.

(ரா-ஹா.) ஒரு புருஷ ப்ரயத்நமின்றியிலே பால் தயிராகவும், ஜலம் மதுரமான இளநீராகவும், புளிப்பான எலுமிச்சரஸமாகவும் பரிணமிக்கிறாப்போல் ப்ரக்ருதியும் ஜகத்ரூபமாகத்தானே பரிணமிக்கலாமேயென்னில், "யோப்ஸு திஷ்டந்" என்றுஜலம்முதலானவற்றிலும் பரமபுருஷன் அந்தர்யாமியாயிருக்கிறானென்றுசொல்லுகையாலே, ஜலாதிகளும் பரமபுருஷ ப்ரயத்நத்தினாலேயே இளநீர் முதலானவையாகப் பரிணமிக்கிறதென்றே கொள்ளவேண்டுமாகையால் அவை த்ருஷ்டாந்தமாகமாட்டா. கஎ௬.

ஸூ-கஎஎ. வ்யதிரேகாநவஸ்திதேஶ்சாநபேக்ஷத்வாத்.

(ஶ-ரா-பா.) அநபேக்ஷத்வாத் - புருஷாபேக்ஷையில்லாமையாலே, வ்யதிரேகாநவஸ்திதேஶ்ச - ஸ்ருஷ்டியில்லாமலிருக்கக்கூடாதென்கிற தோஷம் வருகையாலும், (அது ஜகத்காரணமாகாது.) கஎஎ.

(ஶ-ஹா.) ஜீவர்களுடைய கர்மமே ப்ரக்ருதியைப் பரிணமிக்கச் செய்கிறதென்னக்கூடாது. ஜீவன் நிர்லிப்தன், அவனொரு கார்யத்தில் ப்ரவர்த்திக்கமாட்டான். இப்படியிருக்க, ஸாம்யாவஸ்த்தையை யடைந்திருக்கிற ஸத்வரஜஸ்தமோகுணங்களின் ஸமுதாயமாகிற ப்ரக்ருதி ஒன்றற்கொன்றுஸ்பூநாதிக பாவத்தை யடைந்து ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறதென்பது அநுபபந்நமாயிருக்கும். ஸாம்யாவஸ்தையில் ப்ரக்ருதி யென்றும், வைஷம்யாவஸ்த்தையில் மஹதாதிகளென்றும் ஸாங்க்யர்கள் வ்யவஹரிக்கிறார்கள். கஎஎ.

(ரா-ஹா.) புருஷனுனல் அவன் தனக்கு இச்சையிருந்தபோது ஸ்ருஷ்டிக்கவும், இல்லாதபோது தவிர்வும் கூடும். அசேதநமான ப்ரதாநத்திற்கு இச்சையில்லாமையாலே, இதுவே ஜகத்காரணமென்றபக்ஷத்தில் எப்போதும் ஸ்ருஷ்டித்துக்கொண்டேயிருக்கவேணும். அல்லது எப்போதும் ஸ்ருஷ்டிக்காமலேயிருக்கவேணும் இத்யாதி தோஷம் வரும். கஎஎ.

ஸூ-கஎ௮. அந்யத்ராபாவாச்ச ந த்ருணாதிவத்.

(ஸ-ரா-வ்ய.) கூ ருத் - எருதுதின்ற புல்லில், க்ஷீராவாகவ-பாலா கப்பரிணமிக்கை யில்லாமையாலும், த்ருணாதிவகு - புல் பாலாகிருப்போ லே, (ப்ரதாநம் ஜகத்தாகிறதென்றது), ந-கூடாது. கஎஅ.

(ஸ-ரா-ஹா.) பசு புல்லைத் தின்றால் அப்புல் தானுகவே பாலாய்ப் பரிண மிக்கிறது. அதற்கு ஒரு புருஷனுடையவும் ப்ரயத்நம் காண்கிறதில்லை; அது போலவே ப்ரக்ருதியும் ஸ்வதந்த்ரமாய் ஜகத்ரூபமாகப் பரிணமிக்கலாமே யென் னில், அப்புல்லையே எருது தின்றால் ,அது பாலாகப் பரிணமிக்கிறதில்லை. ஆகை யால் பசு தின்ற புல்லையும் பரமபுருஷனே பாலாகப் பரிணமிப்பிக்கிறானென்று அங் கீகரிக்கவேண்டுமாகையால் அதுவும் த்ருஷ்டாந்தமாகாது. கஎஅ.

ஸூ-கஎகூ. வு-ரா-ஷா ஸ்ரீவ கிதிசெ த்தயாவி.

(ஸ-ரா-வ்ய.) வு-ரா-ஷாஸ்ரீவகு - குருடனை காலுள்ளபுருஷனைப் போலவும், இரும்பைப்போலவும், (ஜீவன் ப்ரக்ருதியைப் பரிணமிப்பிக்கி றான்) ஜதிசெவு - என்றால், தயாகவி - அப்படியும்கூட, ப்ரதாநம் ஜக த்ஸ்ருஷ்டியில் ப்ரவர்த்தியாது.) கஎகூ.

(ஸ-ரா-ஹா,) காந்தத்தை ஸமீபத்தில் வைத்தால் அசேதநமான இரும்பு இப்பால் சலிக்கத் தொடங்குகிறது, காலுள்ள ஒரு குருடன் தானே ஓரிடத்திற் குப் போக அஸமர்த்தனாயினும், கண்ணுள்ள ஒரு நொண்டி தானே ஓரிடம் போகச் சக்தியற்றவனாயினும், இந்த நொண்டி அந்த குருடன்மேலேறிக்கொண்டு இப்படி போவென்று சொன்னால் அந்த குருடன் போகிறான்; அதுபோலவே இந்த ப்ரக் ருதிக்குத் தானே ஸ்ருஷ்டிக்க சக்தியில்லாவிடினும், ஜீவன் வ்யாபாரசூன்யனாயிருந் தாலும் இந்த ஜீவன்தான் கிட்ட இருந்து அசேதநமான ப்ரக்ருதியை ஜகத்ஸ்ருஷ் டியிலேவுகிறான். எவுகையாவது சமீபத்திலிருக்கையே. அதினால் ப்ரக்ருதி ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறதென்று சொல்லலாமென்னில் —காந்தம் ஏதோ ஒரு வேளைதான் இரும்பின் கிட்ட இருக்கும்; அப்போது அதின் ஸம்பந்தத்தினால் இரும்பு சலிக் கிறது. அதில்லாதபோது சலிக்கிறதில்லை. நொண்டி ஏதோ ஒரு வேளையில்தான் வழி காட்டுகிறான்; அப்போதுதான் குருடன் போகிறான்; மற்றபோது போகிற தில்லை. இங்கு புருஷன் எப்போதும் ப்ரக்ருதிக்கு ஸமீபத்திலே யிருக்கையாலே ப்ரக்ருதி எப்போதும் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கவேண்டும்; ப்ரளய காலம் வரக்கூடாது ஆகையால் அவையிரண்டும் இவ்விடத்திற்கு த்ருஷ்டாந்தமாகமாட்டா. கஎகூ.

ஸூ - கஅ0. அங்கித்வா நு-பபத்தேஶ்ச.

(ஸ-ரா-வ்ய) அங்கித்வா நு-பபத்தேஶ்ச - அங்கித்வம் கூடாமையா லும், (ப்ரக்ருதிஜகத்காரணமாகாது). கஅ0.

(ஸ-ரா-ஹா.) ப்ரளயத்தில் ஸத்வரஜஸ்தமோ குணங்கள் ஸமமாயிருக்கிற தென்றும், ஸ்ருஷ்டிகாலத்தில் வைஷம்யத்தையடைந்து ஒன்று அதிகமாகவும் மற் றவை குறைந்தும் இருக்கிறதென்றும் இந்த விஷமாவஸ்த்தையே ஸ்ருஷ்டிக்குக் காரணமென்றும் சொன்னால், ப்ரளயத்தில் ஸமமாயிருந்த ப்ரக்ருதி ஸ்ருஷ்டிகாலத் தில் விஷமாவஸ்த்தை யடைகைக்குக் காரணமில்லாமையால் அப்போது ஸ்ருஷ்டி க்கக்கூடாது, (அங்கியாவது—மூன்று குணங்களில் எது அதிகமாயிருக்கிறதோ அது அங்கியென்றும் குறைந்திருக்கிற மற்றையிரண்டும் அங்கமென்றும் பெயர்.) ஆகையால் ப்ரக்ருதிக்கு ஜகத்காரணத்வம் ஸம்பவியாது. கஅ0.

ஸூ-௧அ௧. அந்யதா'நுமிதௌ ச ஜ்ஞசக்திவியோகாத்.

(ஸ-ரா-வ்யா.) அந்யதா - வேறுப்ரகாரமாக, அநுமிதௌ ச - ஊஹிக்கிலும், ஜ்ஞசக்திவியோகாத்-புருஷனுடைய ஜ்ஞாநசக்தியில்லாமையாலே, (கீழ்ச்சொன்ன தோஷங்கள் ஸம்பவிக்கும்.) ௧அ௧.

(ஸ-ரா-ஸா.) இப்போது சொன்ன யுக்திகளைவிட்டு வேறுவிதமான யுக்தியினால் ப்ரதாநம் ஜகத்காரணமென்று ஊஹித்தாலும், அதற்கு அப்போதும் ஜ்ஞானமில்லாமையாலே ஜகத்ஸ்ருஷ்டி ஸம்பவியாது. ௧அ௧.

ஸூ-௧அ௨. அப்யுபகமே'ப்யர்த்தாபாவாத்.

(ஸ-ரா-வ்யா.) அப்யுபகமேபி - (ப்ரதாநத்தை) ஒப்புக்கொண்டாலும், அர்த்தாபாவாத் - (அதினால்) ப்ரயோஜநமில்லாமையாலே, (அது ஸித்தியாது.) ௧அ௨.

(ஸ-ஸா.) இந்த ஸூத்ரம் சங்கரபாஷ்யத்தில் "புருஷாச்மவத்" என்கிற ஸூத்ரத்திற்குமுன் இருக்கிறது.—இப்படியொரு ப்ரக்ருதி யென்பதை யங்கீகரித்ததினால் என்னப்ரயோஜனம். ஜீவன் எப்போதும் நிர்லிப்தனாகையால் அவனுக்கு இதனால் ஸம்ஸாரபோகமும் கிடையாது. அவன் எப்போதும் முக்தனாகையால் இதனால் அவனுக்கு உண்டாகவேண்டிய முக்தியும் கிடையாது. இப்படி ப்ரயோஜநமற்ற ப்ரக்ருதியை ஒப்புக்கொள்வது அநுசிதம். ௧அ௨.

(ரா-ஸா.) ஜீவனுக்கு ஸம்ஸாரமோக்ஷங்கள் ஸித்திக்கைக்காகப் ப்ரக்ருதிஒப்புக்கொள்ளவேணும். நிர்விகாரனான ஜீவனுக்கு ப்ரக்ருதி ஸந்நிதாநத்தினால் ப்ரக்ருதியினுடைய தர்மங்கள் ஜீவனில் பிரதிபலிக்கிறது. இதுவே ஸம்ஸாரம். ப்ரக்ருதி புருஷவிவேகம்பண்ணி பின்பு யோகாப்யாஸத்தினால் ப்ரக்ருதி தர்மம் ஜீவனில் ப்ரதிபலியாமலிருக்கை மோக்ஷம் என்று கொண்டார்கள். ஸம்ஸாரம் இவ்விதமானால், ப்ரக்ருதியும் ஜீவனும் இரண்டும் நித்யமாய் ஸர்வகதமாகையாலே இரண்டுக்கும் ஸந்நிதாநமும் நித்யமாகையால் நித்யஸம்ஸாரமே ப்ரஸங்கிக்கும்; மோக்ஷமேயுண்டாகாது. மோக்ஷத்துக்கும் இந்தஸந்நிதாநமே காரணமானால் ஸம்ஸாரம் ஸித்தியாது; ஆகையால் ப்ரக்ருதியை ஒப்புக்கொண்டும் ஜீவனுக்கு ஸம்ஸாரமோக்ஷங்கள் ஸித்திக்காது. ஆகையால் இதை ஒப்புக்கொள்வதிலொரு ப்ரயோஜநமுமில்லை. ௧அ௨.

ஸூ-௧அ௩. விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்.

(ஸ-ரா-வ்யா.) விப்ரதிஷேதாச்ச - பரஸ்பரவிருத்தமாகையாலும், அஸமஞ்ஜஸம் - (இம்மதம்) ஸமீசீநமன்று. ௧அ௩.

(ஸ-ஸா.) ஸாங்க்யமதத்தில் சில இடங்களில், ஏழு இந்த்ரியங்கள், மஹானிலிருந்து தந்மாத்ரைகளுக்கு உத்பத்தி, மூன்று அந்தக்கரணங்கள் சொல்லப்பட்டன; மற்றோரிடத்தில், பதினொரு இந்த்ரியங்கள், அஹங்காரத்திலிருந்து தந்மாத்ரைகளுக்கு உத்பத்தி, ஒரு அந்தக்கரணம் சொல்லப்பட்டது. இப்படி ஒன்றுக்கொன்று விருத்தமாயிருக்கையால் அம்மதம் ப்ரமாணமாகமாட்டாது. ௧அ௩.

(ரா-ஸா.) ப்ரக்ருதி, ஜீவனுடைய ஸம்ஸாரமோக்ஷங்களுக்காக இருக்கிறது. அதினுடைய ஸந்நிதாநத்தினால் ஜீவன் கர்த்தாவாயும் போக்தாவாயும் ஆகிறான். அதின் ஸந்நிதாநத்தையே ஹேதுவாகக்கொண்டு முக்தனாகிறான் என்றும், ஜீவன்

நிர்விகாரன், இவன் கர்த்தாவாகவும் போக்தாவாகவு மாகிறதில்லை ; இவனுக்கு ஸம்ஸாரபந்தமும் மோக்ஷமும் கிடையாது ; நித்யமுக்தன் என்றும் பரஸ்பரவிருத்தமாகச் சொல்லுகையாலே இம்மதம் ஸயுக்திகமன்று. கஅக.

கய-சஎ. ஸூ-கஅச. மஹத்தீர்க்கவத்வா ஹ்ரஸ்வபரிமண்டலாப்யாம்,

(ஸு-பா-வ்.) ஹ்ரஸ்வபரிமண்டலாப்யாம் - த்வ்யணுகத்தினுலும் பரமாணுவினுலும், மஹத்தீர்க்கவத்வா . மஹத்வதீர்க்கத்வ குணங்களையுடைய த்ர்யணுக (த்வ்யணுக) ங்களுடைய உத்பத்தியைப்போல் மற்றவையும் (ஸயுக்திகமன்று.) கஅச.

(ஸு-ஸா) ப்ரதானகாரணவாதத்தில் உபாதானகாரணமாகிய ப்ரதானத்திலுள்ள ஸுகாதிகள் ஜடாத்மகமான ஜகத்தில் காணுமையால் ப்ரதானம் ஜகத்காரணமாகமாட்டாதென்று தூஷணம் சொல்வில். இதற்கு ஸாங்க்யர் சொல்லுகிருர்கள்—ப்ரஹ்மம் ஜகத்துக்கு உபாதாகாரணமென்கிற பக்ஷத்திலும், ப்ரஹ்மத்திலுள்ள சைதந்யம் ஜகத்தில்காணுமையால் ப்ரஹ்மமும் ஜகத்காரணமாகமாட்டாதென்கிற இத்தோஷம் ஸமானமே என்று. இதற்கு ஸமாதானமாவது—இரண்டு பரமாணுக்கள் த்வ்யணுகத்துக்கு உபாதாகாரணம். பரமாணுக்களிலுள்ள சுக்லம் முதலிய ரூபங்களும் மதுரம் முதலிய ரஸங்களும் இப்படியே மற்றுமுள்ள குணங்களுமே த்வ்யணுகத்திலுள்ள சுக்லம் முதலிய ரூபங்களுக்கும் மதுரம் முதலிய ரஸங்களுக்கும் மற்றுமுள்ள குணங்களுக்கும் காரணமாகிறது. பரமாணு ஒருரூபமாயிருக்கில் த்வ்யணுகம் மற்றொரு ரூபமாயாகமாட்டாது. அப்படியே த்வ்யணுகம் த்ர்யணுகத்துக்கும், த்வ்யணுகத்திலுள்ள ரூபாதிகள் த்ர்யணுகத்திலுள்ள ரூபாதிகளுக்கும் காரணமாகின்றன. ஆயினும் பரமாணுவிலுள்ள பாரிமாண்டல்யமென்கிற பரிமாணம் த்வ்யணுகத்திலுள்ள ஹ்ரஸ்வத்வ பரிமாணம் த்ர்யணுகத்திலுள்ள மஹத்வ தீர்க்கத்வங்களென்கிற பரிமாணங்களை உண்டாக்குகிறதில்லை. அதுபோலவே ப்ரஹ்மத்திலுள்ள சைதந்யமும் ஜகத்தில் சைதந்யத்தை யுண்டாக்குகிறதில்லை யென்று தாத்பர்யம். கஅச.

(ஸு-பா-ஸா.) இவ்வதிகரணத்தில் காணுதர்களை நிரஸிக்கிருர்—நானா அவயவங்கள் சேர்ந்தால் அவயவியென்றொரு வஸ்து உண்டாகிறது. அந்த அவயவங்கள் அதிகமாகச் சேர்ந்தால் மேருவைப்போல் பெரியவஸ்துவும், அற்பமாகச்சேர்ந்தால் கடுகைப்போல் சிறியவஸ்துவும் உண்டாகிறது. இப்படி அவயவங்கள் குறையக் குறைய அதற்கு ஓரிடத்தில் எல்லை சொல்லி நிறுத்தவேண்டும். அந்த எல்லையான அவயவம் பரமாணு. அப்பரமாணுக்கள் ஸர்வேச்வரனுடைய ஸங்கல்பத்தினுல் ஒன்றுக்கொன்று சேர்ந்து த்வ்யணுகம் முதலாக ஜகத்உண்டாகிறது. என்று காணுதர் சொன்னுர்கள். இது அஸங்கதம்—ஏனென்றுல்,—ஒரு அவயவத்திற்கு நாலு திக்கில் நாலும் மேலும கீழுமாக இரண்டும் ஆக ஆறு பக்கங்கள், அவ்வாறுபக்கங்களோடுசேர்ந்து (நூல்)முதலிய அவயவங்கள் ஒன்றுக்கொன்று சேர்ந்து படம்(வஸ்த்ரம்) முதலிய அவயவியுண்டாகிறது. அதுபோலவே த்வ்யணுகமுண்டாகும்போதும் பரமாணுக்கள் தன்னுடைய ஆறு பக்கங்களோடு ஒன்றுக்கொன்று சேர்ந்து த்வ்யணுகத்தை உண்டாக்குகிறதுகள் என்று அங்கீகரிக்கவேணும். பரமாணு நிரவயவமானுல் அவை ஆயிரம் சேர்ந்தாலும் ஒரு பெரிய வஸ்து உண்டாகமாட்டாது. ஆகையால் அவற்றுக்கும் அவயவம் ஒப்புக்கொள்ளவேணும். இப்படியே அவற்றினவயவத்திற்கும். இந்த யுக்தியினுல் அவயவத்துக்குக் கீழ் எல்லை இருந்ததென்று ஏற்படாது. ஆகையால் பரமாணுக்கள் ஜகத்காரணங்களாகமாட்டா. இதுபோலவே அவர்களொப்புக்கொண்ட மற்றவையும் அஸங்கதங்களாகையால் அம்மதம் சரியன்று. கஅச.

—

ஸூ-கஅரு. உபயதாபி நகர்மாதஸ்தத³பா⁴வ꞉.

(ஶ்ரு - வ்ய.) உபயதா-பிரயத்தினாலும், அபிகாதத்தினாலும், கர்ம ந-சலநமுண்டாகாது, அத꞉ - ஆகையினால், தத³பா⁴வ꞉ - பரமாணுஸம்யோகமில்லை.

(ரா - வ்ய.) உபயதாபி - அத்ருஷ்டரூப கர்மத்தைச் சேதநனிடத்தி லொப்புக்கொண்டாலும் பரமாணுவிடத்தி லொப்புக்கொண்டாலும், கர்ம - அத்ருஷ்டமானது, ந - காதாசித்கமாகக்கூடாது; அத꞉ - ஆகையினால், தத³பா⁴வ꞉-கர்மத்தினால் பரமாணுஸம்யோகம்கூடாது.கஅரு.

(ஶ்ரு-ஹா.) இதில் பரமாணுகாரணவாதிகள் நிரஸிக்கப்படுகிறார்கள். அவர்கள் லோகத்தில் வஸ்த்திரம்நெய்கிறவன் நெய்கைக்குப்பிரயத்தினம்செய்ய, அவனுடைய ப்ரயத்தினத்தினால் நூல்களில் சலநமுண்டாய் அதினால் ஒருநூல் மற்றொருநூலுடன் சேர்ந்து வஸ்த்திரம் உண்டாகிறது. அதுபோலவே லோகத்திலுள்ள மண், நீர், தீ, காற்று, என்கிற நாலுவிதமான வஸ்துக்களும் உண்டாவது நசிப்பதாய்க் காண்கையாலே, அவைகள், அவற்றுக்குக்காரணமாகியஅவயவங்களில் க்ரியையுண்டாய்ப்பின்பு ஸம்யோகமுண்டாய் அது மூலமாக உண்டாகின்றனவென்று நிர்ணயிக்கப்படுகிறது. வஸ்திரத்துக்கு நூல்போலே பெரிதுக்கு சின்னது அவயவமாகும். இவ்வவயவ ப்ரம்பரை கீழ் கீழ்போய் ஓரிடத்தில் நில்லாவிடில் அநவஸ்தைவரும். ஆகையால் அதைப் பரமணுவில் நிறுத்தி அப்பரமாணுக்கள் நித்யங்களென்று அங்கீகரிக்கவேணும். ஆதியில் ஸ்ருஷ்டியுண்டாகும்போது கீழ்ச்சொன்னவிதம் பரமாணுக்களில் சலநமுண்டாய் அவை ஒன்றோடொன்று சேர்ந்து, த்வ்யணுகம் முதலாகக் கார்யங்களை உண்டுபண்ணுகின்றனவென்று சொல்லுகிறார்கள்; ஆகையால் பரமாணுக்களே ஜகத்காரணமாயிருக்க ப்ரஹ்மம் ஜகத்காரணமாகக்கூடாதென்று பூர்வபக்ஷம். அதை தூஷிக்கிற விதமாவது—கிரியை - அதாவது - சலநம், ஒருவனுடைய பிரயத்தினத்தினாலாவது அபிகாதத்தினாலாவது உண்டாகவேணும். ஜீவனுடைய ப்ரயத்தினத்தினால் சரீரத்தில் சேஷ்டையும், ஒருவனசைப்பதினால் மரம் முதலியவற்றில் சலநமுமுண்டாகக்காண்கிறோம். மற்றப்படி சலனம் காணவில்லை. ஆதிஸ்ருஷ்டியில பரமாணுக்களில் சலனமுண்டாம்போது எதினாலுண்டாயிற்று. ப்ரயத்நம் முதலியவை ஜகத்ஸ்ருஷ்டிக்குப் பின்பு உண்டாகப்போகிறதாகையால் அப்போதவை கிடையாது. அவையில்லாமல் சலநமுண்டாகாது, ஆகையால் பரமாணுகாரணவாதம் யுக்தி யுக்தமன்று. கஅரு.

(ரா-ஹா.) இதுமுதல் அவர்களுடைய அஸங்கதியைச் சொல்லுகிறது. அத்ருஷ்டம் பரிபக்வமானால் பரமாணுவில் க்ரியை உண்டாகிறது. அதினால் ஜகத்து உண்டாகிறது என்றார்கள்; அந்த அத்ருஷ்டம் ஜீவனிடத்திலாவது இருக்கட்டுமே பரமாணுவிலாவது இருக்கட்டும். எங்கேயிருந்தாலும் அது நித்யமாகையால் இதற்குமுன் அந்த அத்ருஷ்டத்தினால் பரமாணுக்கள் சேர்ந்து ஜகத்து ஏன் உண்டாகவில்லை. அது இப்போதுதான் பரிபக்வமாயிற்றென்றால் இவ்வளவு ஜீவன்களுடைய அத்ருஷ்டம் ஒரேகாலத்தில் பரிபக்வமாயிற்றென்பதில் என்னப்ரமாணம்; ஸர்வேஶ்வரனுடைய ஸங்கல்பத்தினால் பரமாணுவில் க்ரியை உண்டாயிற்றென்றால் உங்களுடைய அநுமானத்தினால் ஈஶ்வரன் ஸித்திக்கமாட்டானாகையால் அவனுடைய ஸங்கல்பத்தினாலுண்டாகிறதென்பதும் கூடாது. ஆகையால் பரமாணுவில் க்ரியையுண்டாகைக்குக் காரணமில்லாமையால் ஜகத்ஸ்ருஷ்டி ஸித்தியாது. கஅரு.

ஸூ-கஅசு. ஸமவாயாப்⁴யுபக³மாச்ச ஸாம்யாத³நவஸ்தி²தே꞉.

(ஶ-ரா-வ்ரு.) ஸமவாயாப்யுபகமாச்ச - ஸமவாயமென்கிற ஸம்பந்த மொப்புக்கொள்ளுகையினாலும், ஸாம்யாத் - (ஸமவாயத்திற்கு மொரு ஸம்பந்தம் வேண்டுமென்கிற) ஸாம்யத்தினால், அநவஸ்திதே:- அநவஸ்த்தா ப்ரஸங்கம் வருமாகையால், (இம்மத மஸமஞ்ஜஸம்.) கஅசு.

(ஶ-ஹா) த்வ்யணுகாதிகள் பரமாண்வாதிகளில் ஸமவாயஸம்பந்தத்தினா லிருக்கிறதென்று அவர்கள்மதம். அப்போது ஸமவாயம் கடாதிகளில் இருக்கும்போது அதற்கொரு ஸம்பந்தம் வேணும், அப்படியே அந்த ஸம்பந்தத்துக்குமொரு ஸம்பந்தம் வேணும் என்று அநவஸ்தை வருமாகையால் அம்மதம் சரியன்று. கஅசு.

(ரா-ஹா.) கடாதிகள் பூதலத்திலிருக்கும்போது அவையிரண்டுக்கும் ஸம்யோகமென்றொரு ஸம்பந்தம் காணப்படுகிறது. அதினால், ஒன்று மற்றொன்றிலிருக்கும்போது அவையிரண்டுக்கும் ஒரு ஸம்பந்தம் வேணும். அது ஸம்யோகமென்றும் ஸ்வரூபமென்றும் பலவிதமாயிருக்கும். ஸம்யோகமென்பது எந்தத்ரவ்யம் முன்பு ஓரிடத்திலிருந்து பின்பு எந்த இடத்தில் வந்து சேருகிறதோ அவையிரண்டுக்கு முண்டான ஸம்பந்தம். அது மற்றொன்றுக்கு ஸம்பந்தமாகமாட்டாது. அப்படியே, ரூபாதி குணங்களுக்கும் த்ரவ்யத்திற்கு மொரு ஸம்பந்தம் வேண்டுமென்று ஸமவாயமென்றொரு ஸம்பந்த மங்கீகரித்தார்கள். இப்படியானால் ஸமவாயத்திற்கும் த்ரவ்யத்திற்குமொரு ஸம்பந்தம்வேண்டுமாகையால் அதற்காக வேறொரு ஸம்பந்த மங்கீகரிக்க வேணும்., அதற்கு மப்படியே யென்று அநவஸ்தைவரும். ஸமவாயத்திற்கு ஸ்வரூபமே ஸம்பந்தமென்றால் ரூபாதிகளுக்குங்கூட ஸ்வரூபமே ஸம்பந்தமென்று சொல்லவமையுமாகையால் ஸமவாயம் ஸித்தியாது. கஅசு.

ஸூ-கஅஎ. நித்யமேவ ச பாவாத்.

(ஶ-ரா-வ்ரு.) நித்யமேவ - நித்யமாகவே, பாவாச்ச - (குணகுணிகள்) இருக்கையாலும் (கார்யகாரணபாவம் ஸித்தியாது). கஅஎ.

(ஶ-ஹா.) மேலும், பரமாணுக்களுக்கு ஸ்ருஷ்டிக்கை ஸ்வபாவமா, அல்லது ஸ்ருஷ்டியாமலிருக்கையா, இரண்டுமா, இரண்டுமற்றிருக்கையா, ஸ்ருஷ்டிக்கை அவற்றுக்கு ஸ்வபாவமாகில் அது நித்யமேயுள்ளதாகையால்நித்யம் ஸ்ருஷ்டியுண்டாகட்டும்; இரண்டாம்பக்ஷத்தில் ஸ்ருஷ்டியே உண்டாகாமற்போகவேண்டிவரும்; மூன்றாம்பக்ஷத்தில், இரண்டு ஸ்வபாவமொன்றுக்குக் கூடாமையால் அது சொல்லக் கூடாது. நாலாம்பக்ஷத்தில் காரணமுள்ளபோது ஸ்ருஷ்டியும், அதில்லாதபோது ப்ரளயமுமென்று ஏற்படுகிறது. அக்காரணம் ஜீவன்களுடைய அத்ருஷ்டமாகவேணும். அவை நித்யமாகையால் முன்சொன்ன தூஷணங்களே வருமாகையால் அப்பக்ஷம் கூடாது. கஅஎ.

(ரா-ஹா.) ஸமவாயமென்கிற ஸம்பந்தம் நித்யமானால் அது நிராஶ்ரயமாயிராதாகையால்அதற்காஶ்ரயமான அவயவாவயவிகளாகிற கடகபாலங்களும்நித்யமாகவேணும். அப்போது ஒன்று காரணமென்றும் ஒன்று கார்யமென்றும்ஸித்தியாது. கஅஎ.

ஸூ-கஅஅ. ரூபாதிமத்த்வாச்ச விபர்யயோ தர்ஶநாத்.

(ஶ-ரா-வ்ரு.) ரூபாதிமத்த்வாத் - (ப்ருதிவீஜல தேஜோவாயு பரமாணுக்கள்) ரூப ரஸ கந்த ஸ்பர்சவத்துக்களாகையாலே, தர்ஶநாச்ச - (ரூபாதிமத்தான கடாதிகள் அநித்யமாகக்) காண்கையாலும், விபர்யய: (பரமாணுக்களுக்கும்) அநித்யத்வம்வரும். கஅஅ.

(ஶ-ரா-ஹ.) கடம்முதலியரூபவத்தான வஸ்துக்கள் அநித்யமாகக் காண்கையாலே, தசநுகுணமாக ரூபவத்துக்களெல்லாம் அநித்யங்களென்று வ்யாப்தி ஸித்திக்கையாலே ரூபவத்தான பரமாணுவும் அநித்யமாக வேண்டும். கஅஅ.

ஸூ-கஅகூ. உபயதாச தோஷாத்.

(ஶ-ரா-வ்யா.) உபயதாச - ரூபாதிகளைப் பரமாணுக்களில் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாமற்போனாலும், தோஷாத் - தோஷம் ஸம்பவிக்கையால் (இம்மத மஸங்கதம்.) கஅகூ.

(ஶ-ஹ.) மேலும், ப்ருதிவியில், ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம் என்கிற நாலு குணங்களும், ஜலத்தில் கந்தம்தவிர்த்து மற்றமூன்றும், தேஜஸ்ஸில், ரூபஸ்பர்சங்களும், வாயுவில் ஸ்பர்சமும் ஒப்புக்கொண்டார்கள். இம்மாதிரி அவ்வவபரமாணுக்களிலும் ஒப்புக்கொண்டால் ப்ருதிவீபரமாணு வாயுபரமாணுவைக்காட்டிலும் பெரிதாகக்காணவேணும். எது எதைக்காட்டிலும் அதிககுணமுள்ளதோ, அது அதைக்காட்டிலும் பெரிதாயே லோகத்தில் காண்கிறது. ஒருபலம் சந்தனத்தில் கொஞ்சம் வாசனையும், பத்துபலம் சந்தனத்தில் அதிகவாசனையும் இதுக்கு த்ருஷ்டாந்தம். அப்படி ஒப்புக்கொள்ளாமல் நாலுவிதமான பரமாணுக்களிலும் நாலுகுணங்களு முண்டென்றுவது, ஒரேகுணமுண்டென்றுவது, அல்லது குணமே இல்லையென்றுவது ஒப்புக்கொண்டால் முதல்பக்ஷத்தில் ப்ருதிவ்யாதி வாயுபர்யந்தமான கார்யங்களிலும் அந்நாலுகுணங்களும் இருக்கவேணும். இரண்டாம்பக்ஷத்தில் எல்லாக்கார்யங்களும் ஒரேகுணமுள்ளதாகவேணும், மூன்றும்பக்ஷத்தில் கார்யங்கள் நிர்குணமாக வேண்டும். ஆகையால் அம்மதம் சேராது. கஅகூ.

(ரா-ஹ.) நூல் வெளுப்பாகில் அதிலுண்டான வஸ்த்திரம் வெளுப்பாகவும், கறுப்பாயிருந்தால் கறுப்பாகவும் காண்கையாலே, காரணத்தில் எந்த குணமிருக்கிறதோ, அதேகுணம் கார்யத்திலுமுண்டாகிறது. மற்றொரு குணமுண்டாகாது. இப்படியிருக்க, கார்யமான ஜகத்தில் ரூபம் காண்கையாலே அதற்குக் காரணமாகப் பரமாணுக்களில் ரூபம் ஒப்புக்கொள்ளவேணும். அப்படி பரமாணுக்களில் ரூபாதிகளொப்புக்கொண்டால் கீழ்ச்சொன்ன வ்யாப்தியாலே அவை அநித்யமாம். அதற்காக அவற்றில் ரூபாதிகளை யொப்புக்கொள்ளாமற் போனால், காரணம் ரூபசூந்யமானால் கார்யமும் ரூபசூந்யமாகுமாகையால் பரமாணு கார்யமான ஜகத்தும் ரூபசூந்யமாக வேண்டிவரும். இப்படி இரண்டுவிதத்திலும் தோஷம் தவிராது. கஅகூ.

ஸூ-ககூ0 அபரிக்ரஹாச்சாத்யந்தமநபேக்ஷா.

(ஶ-ரா-வ்யா.) அபரிக்ரஹாச்ச - (இம்மதத்தை சிஷ்டர்கள்) பரிக்ரஹியாமையாலும், அத்யந்தமநபேக்ஷா - அத்யந்த முபேக்ஷைசெய்ய வேண்டியது ககூ0.

(ஶ-ரா-ஹ.)ஸாங்கியமதத்தில் வேதவிருத்தார்த்தங்களிருந்தாலும் ஸத்காரிய வாதம் முதலிய சிலஅர்த்தம் வைதிகஸம்மதமாயிருந்தது. இதில் எல்லாம் வேதவிருத்தமாகையால் இதை வைதிகர்கள் கொஞ்சமும் ஆதரிக்கக்கூடாது. ககூ0.

அதி-ரு அ. ஸூ ககூக. ஸமுதாய உபயஹேதுகேபி ததப்ராப்தி:.

(ஶ-ரா-வ்யா.) உபயஹேதுகேபி - பரமாணுக்களை ஹேதுவாக உடையதும் ப்ருதிவ்யாதிகளை ஹேதுவாக உடையதுமான, ஸமு-

உபயெ - ப்ருதிவ்யாதி ஸமுதாயத்திலும் சரீரேந்த்ரியாதிஸமுதாயத்திலும், தத³ப்ராப்தி: - ஸமுதாயத்வ ப்ராப்தி (ஜகத்ரூபமான ஸமுதாயோத்பத்தி) ஸம்பவியாது. ககூக.

(ஶ்ரு - ஸா.) ப்ருதிவீ பரமாணு ஜலபரமாணு தேஜ:பரமாணு வாயுபரமாணு வென்று பரமாணுக்கள் நான்குவிதமாயிருக்கும், ப்ருதிவியென்று வேறே ரவயவி கிடையாது. ப்ருதிவீ பரமாணுக்களின் கூட்டமே ப்ருதிவியெனப்படும்; இவ்வண்ணமே ஜலாதிகளிலும் காண்க. பரமாணுக்களின் ஸமுதாய ரூபமாயிருக்கிற ப்ருதிவீ ஜலம் தேஜஸ்ஸு வாயுவென்கிற பூதங்களிலிருந்தும் சரீராதிகளும் இந்த்ரியங்களும், ஆத்மாவென்கிற ஆலய விஜ்ஞானமும், ஸுகது:கா நுபவமும், வஸ்துக்களையறியும் ஜ்ஞானமும், ராகத்வேஷமோஹ தர்மாதர்மங்களு முண்டாகின்றன. இவ்வளவினாலேயே லோகவ்யவஹாரம் நடந்து வருகிறது, ஆகையால் இதைவிட வேறுவஸ்து வில்லையென்றார்கள் வைபாஷிகர். அவர்களுக்குத்தரமாயிருக்கிற திந்த ஸூத்ரம். பரமாணுக்கள் ஜடமாகையால் ஒருவன் சேர்க்காமல் தானே ஒன்றுக்கொன்று சேர்ந்து ஸமுதாயமாக மாட்டாது. ஆலயவிஜ்ஞானமென்பது, பரமாணுக்கள் ஸமுதாயமானபிறகு அதிலிருந்து உண்டாகிறதாகையால் அது ஸமுதாயத்துக்குக் காரணமாகாது. இவற்றைக்காட்டிலும் வேறாய், இவற்றைச் சேர்க்கவல்ல ஒருசேதநனை நீங்கள் ஒப்புக்கொள்ளவில்லை. சேதநனன்றியே தானே சேரும்படியான ஸ்வபாவமவற்றுக்கொப்புக்கொள்ளில், அவை எப்போதும் சேர்ந்துகொண்டே யிருக்கவேணும். ப்ரளயத்திலு மொழியக்கூடாது. மேலும் இவை உண்டான மறுக்ஷணத்தில் நசிக்கிறவைகளாகையால், இவை முதலிலுண்டாய், அதற்குமேல் இவற்றில் வ்யாபாரமுண்டாய், அதற்குமேல் மூன்றும்க்ஷணத்தில் சேருமளவும் மூன்றுக்ஷணமிருக்கிறனவென்றொப்புக்கொள்ளாமையாலும் ஸமுதாய முண்டாகமாட்டாது. ஆகையாலும் மதம் நிலைபெற்றதன்று. ககக

(ரா-ஸா.) இவ்வதிகரணத்தில் வைபாஷிகனையும் ஸௌத்ராந்திகனையும் நிரஸிக்கிறார்—இவ்விருவரும், ப்ருதிவீஜலதேஜோவாயுவென்கிற நாலுவிதமான பரமாணுக்களுண்டு. அவை கும்பலாய்ச்சேர்ந்தால், ப்ருதிவ்யாதி நாலுபூதங்களுண்டாகின்றன. அந்தநாலுபூதங்களும்சேர்ந்தால் சரீரேந்த்ரியாதிகளுண்டாகின்றன. ஜ்ஞானபரம்பரையே ஆத்மா. இவை யெல்லாம் முதல்க்ஷணத்திலுண்டாய் இரண்டாம் க்ஷணத்தில் நசிக்கின்றனவாகையால் க்ஷணிகங்களாம். என்றார்கள். இது அஸங்கதம். ஏனென்றால்— பரமாணுக்கள் முதல்க்ஷணத்தில் உத்பந்நமாய் இரண்டாம் க்ஷணத்தில் சேர்ந்து மூன்றும்க்ஷணத்தில் ப்ருதிவ்யாதியாய், அதற்குமேல் அதைக்காரியத்தில் உபயோகப்படுத்திக்கொள்ளவேணும். பரமாணுக்களும் ப்ருதிவ்யாதிகளும் க்ஷணிகமானால் அவை ஒன்றோடொன்று சேரவேண்டிய ஸமயத்திலேயே நஷ்டமாய்விட்டபடியால் அவைகளால் ப்ருதிவ்யாதிகளும், அவைகளால் சரீராதிகளும் உண்டாகமாட்டா. ககக.

ஸூ-ககூஉ, இதரேதரப்ரத்யயத்வாதிதி சேந்நோத்பத்திமாத்ரநிமித்தத்வாத்.

(ஶ்ரு-ரா-வ்ரு.) இதரேதரப்ரத்யயத்வாத் - அவித்யைமுதல் ப்ருதிவ்யாதிபர்யந்தமான பதார்த்தங்கள் ஒன்றுக்கொன்று காரணமாக உடைத்தானதாகையாலே, உபபத்தி - (ஜகதுத்பத்தி) உபபந்நமாகிறது. இதி சேத் - என்றால், ந உத்பத்திமாத்ரநிமித்தத்வாத் - (அவித்யைக்கு) ஸமுதா

யத்தின் கார்யமான வ்யவஹாரங்களைக் குறித்துக் காரணத்வமில்லாமை யாலே, ந - (அதுவும்) ஸம்பவியாது. ககஉ.

(ஶ-ஹா.) இந்தபாஷ்யத்துக்கு "உத்தரோத்பாதே ச பூர்வநிரோதாத்" என்று ஸூத்ரபாடம். இதற்கர்த்தம்—அவித்யை முத லானவற்றினால் ஸமுதாய முண்டாகிறது. மறுபடி அந்தஸமுதாயத்தினால் அவித் யை முதலானவை யுண்டாகிறது என்று ஒப்புக்கொள்ளக் கூடாது, ஏனென்றால் முன்புண்டான அவித்யை முதலானவை மேல்மேலுண்டாகும் பரமாணுக்களுக் குக் காரணமென் றொப்புக்கொள்ளினும் அவற்றின் ஸமுதாயத்திற்குக் காரணமா கமாட்டாது என்று. மேலும் பீஜாங்குரம் போல் அவித்யையினால் ஸமுதாயம், ஸமுதாயத்தினால் அவித்யை என்று இவ்விதமான உத்பத்தியை அநாதியென் றொ ப்புக் கொள்ளினும், இந்தஸமுதாயம் எவனுடைய போகத்திற்காக உண்டாகி றதோ, இதுண்டானபிறகு இதை யபேக்ஷித்து இதனால் ஸுகம் பெறத்தக்க ஒரு ஸ்த்திரமான ஆத்மாவைக் காணவில்லை அவனநுபவிக்கும் வரையில் இந்த ஸமு தாயமும் ஸ்திரமாக இருக்கிறதில்லை யாகையால். இதனால் லோகவ்யவஹாரம் நடக்காது. ககஉ.

(ரா-ஹா.) பரமாணுக்கள் க்ஷணிகமாயினும் ஜகதுத்பத்திஸம்பவிக்கும் - எப் படியென்றால்,—அஸ்திரமான ப்ருதிவ்யாதிகளில் ஸ்திரமென்ற அவித்தை. அதா வது அஜ்ஞானம். அந்த அவித்யையினால் ராகத்வேஷாதிகள், அவற்றால் சித்தா பிஜ்வலந மென்கிற விஜ்ஞாநம், அதினால் த்ரவ்யோத்பத்தி, அதினால் இந்த்ரியோத் பத்தி. அதினால் சரீரோத்பத்தி, அதினால் ஜ்ஞாநம், அதினால் மறுபடியும் அவித்யை, இந்தமாதிரி சக்கிரம்போல் இவையே மாறி மாறி உண்டாகின்றன வாகையால் ஜக துத்பத்தியில் அநுபபத்தியில்லை யென்றால், ஆயினும். அஸ்திரத்தில் ஸ்திரம் என் கிற அவித்யையினால் அஸ்த்திரமான ஜகத்து ஸ்த்திரமாக மாட்டாது. அதினால் ஒருகார்யமும் ஸாதிக்கமுடியாது. ஆத்மாவும் அநித்யமாகையால் ஜ்ஞாநம் பிறந்த இரண்டாம் க்ஷணத்தில் நசித்துப்போகையால் அதினால் ராகத்வேஷாதிகள் யாருக்கு உண்டாகும்? ஆகையாலிம்மதம் சரியன்று. ககஉ.

ஸூ-ககங. உத்தரோத்பாதே ச பூர்வநிரோதாத்.

(ஶ-ரா-வ்.) உத்தரோத்பாதே-உத்தரக்ஷணம் உண்டாகும் ஸமயத் தில், பூர்வநிரோதாச்ச - பூர்வக்ஷணம் நசிக்கையாலும், (ஜகதுத்பத்தி கூடாது.) ககங.

(ஶ-ரா-ஹா.) மேலும் கடம் உண்டாகைக்குக் காரணமெது? அதற்குமுன் க்ஷணம் காரணமென்று சொன்னால், அந்தக்ஷணம் கடமுண்டாகும்போது நசித்துப் போனபடியால் கடமுண்டாகக்கூடாது. பூர்வக்ஷணாபாவமே ஹேதுவென்றால், இந்த அபாவம் எல்லாவற்றுக்கும் ஸமானமாகையாலே கடமுண்டாகும்போது மற்ற எல்லா வஸ்துக்களு முண்டாகவேண்டிவரும். கடாதிகரண பூர்வக்ஷணாபாவ ரூபகாரணத்தி னால் கடஜாதியேயுண்டாகிறதென்றால், தேசாந்தரத்திலிருக்கிறகடமும் இங்கு உண் டாகவேண்டும். ஒருவ்யக்தியே யுண்டாகிறதென்றால், எந்தவ்யக்தி யுண்டாகிறதோ அதைச்சொல்லவேணும். எந்ததேசத்தில் எந்தவ்யக்தி யிருந்ததோ, அந்ததேசத்தில் தத்தேசஸம்பந்தியான வ்யக்தியே யுண்டாகிறதென்னில், பூர்வோத்தரக்ஷணங்களி லொருதேசத்தை ஸ்த்திரமாகக் கொள்ளாமையாலே இதுவும் ஸம்பவியாது. ககங.

ஸூ-ககூச. அஸதி ப்ரதிஜ்ஞோபரோதோ யௌகபத்யமந்யதா.

(ஶ-ரா-ப்ர-ஸா.) அஸதி-காரணமில்லாமலே கார்யமுண்டாகிறதென்னில். ப்ரதிஜ்ஞோபரோத: - (இந்த்ரியம், ப்ரகாசம், விஷயம்முதலிய காரணங்களினால் பதார்த்த தர்சநாதி கார்ய முண்டாகிற தென்கிற உங்களுடைய) ப்ரதிஜ்ஞைக்கு விரோதம் வரும். அந்யதா - இந்த அநுபபத்தி போகைக்காக, பூர்வகடத்துக்குக்காரணமானக்ஷணமே இந்தகடோத்பத்தி வரையில் இருக்கிறதென்று ஒப்புக்கொண்டால், யௌகபத்யம் - பூர்வ கடக்ஷணமும் இப்போதுண்டானக்ஷணமும் ஒரேகாலத்தில் தோற்றவேண்டிவரும். (அப்படிதோற்றுகிறதில்லை, ஆகையால் இந்த கார்யகாரண பாவம் சரியன்று.) ககூச.

ஸூ-ககூரு. ப்ரதிஸங்க்யாப்ரதிஸங்க்யா நிரோதாப்ராப்தி ரவிச்சேதாத்.

(ஶ-ரா-ப்ர) அவிச்சேதாத்-(ம்ருத்பிண்டாதிகளுக்கு) நாசம் காணாமையாலே, ப்ரதிஸங்க்யா ப்ரதிஸங்க்யா நிரோதாப்ராப்தி: - ஸ்த்தூல விநாசமும் ஸூக்ஷ்மவிநாசமும் ப்ராபியாது (ஸம்பவியாது). ககூரு.

(ஶ-ஹா.) ப்ரதிஸங்க்யையாவது - இதை அழிப்பேன் என்கிறபுத்தி, அதினால் உண்டாகும் நாசத்துக்கு, ப்ரதி ஸங்க்யா நிரோத மென்று பெயர். அதைக்காட்டிலும் வேறானது, அப்ரதிஸங்க்யா நிரோத மெனப்படும். புத்தி பூர்வகமாக அழிக்க அழிகை ப்ரதிஸங்க்யா நிரோதமென்றும், ஒருவனழிக்காமல் தானேயழிகை அப்ரதிஸங்க்யாநிரோத மென்றும் தாத்பர்யம். இவ்விரண்டுவிதமான நாசமும் கூடாது, ஏனென்றால், ஸ்த்தூலத்திலிருந்து வேறொருஸ்தூலமும், ஸூக்ஷ்மத்திலிருந்து வேறொருஸூக்ஷ்மமும். உண்டாம் பக்ஷத்தில் அவற்றுக்கு மேல்மேல் ஸஜாதியான வஸ்துக்களை உண்டாக்குகை ஸ்வபாவமாயிருக்க, அந்தஸ்வபாவத்திற்கு அழிவையொப்புக்கொண்டு இனிமேல் அந்த வஸ்து வேறொன்றை உண்டாக்குகிறதில்லையென்று முடித்து விடுவது என்பது சேராது. ஆகையாலும் இப்பக்ஷம் நன்றன்று. ககூரு.

(ரா-ஹா.) கடாதிகள் தண்டம் முதலானவைகளினால் அடிபட்டு உடைந்தால் அந்த நாசத்திற்கு ப்ரதிஸங்க்யாநிரோதமென்றும், ப்ரதிக்ஷணம் உண்டாகிற கடநாசத்திற்கு அப்ரதிஸங்க்யா நிரோதமென்றும் பெயர். முதலாவது - ஸ்தூலநாசம்; இரண்டாவது ஸூக்ஷ்மநாசம். இவ்விரண்டுவிதமான நாசமும் த்ரவ்யத்திற்கு ஸம்பவியாது. ஏனென்றால், விநாசமாவது த்ரவ்யத்திற்கு ஓரவஸ்த்தையென்றும், அது த்ரவ்யத்தை யாஶ்ரயித்திருக்கிறதென்றும் எங்களைப்போல் நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. விநாசமென்கிற அவஸ்த்தைக்கு ஆஶ்ரயமே இல்லையென்றீர்கள். நாங்கள் இதற்குமுன்னமே ஆரம்பணாதிகரணத்தில் உத்பத்திவிநாசங்கள் அவஸ்த்தா விசேஷங்களென்றும், அவை ஒருத்ரவ்யத்தையாஶ்ரயித்தேயிருக்குமென்றும் ஸ்தாபித்திருக்கிறோம். ஆகையால் நீங்கள்சொல்லுகிற நிரந்வயவிநாசம்ஸம்பவியாது. ககூரு.

ஸூ - ககூசு. உபயதா ச தோஷாத்.

(ஶ - ப்ர.) உபயதாசவி - அஜ்ஞாநம் ஜ்ஞாநத்தினால் நசிக்கிறதென்றாலும் தானே நசிக்கிறதென்றாலும், தோஷாத் - தோஷமுண்டாகையால், (அம்மதம் சரியன்று)

(ரா-வ்ரு.) உபயதாசுவி - துச்சத்திலிருந்து ஜகத்து உண்டாகிறதென்றாலும், உத்பந்நமான ஜகத்துதுச்சமென்றாலும், தோஷாசு - தோஷம் ஸம்பவிக்கையாலே, இம்மதமஸங்கதம்.) ககசு

(ஶ்ரு-ஹா.) மேலும் அஜ்ஞானம் நசிக்கும் போது அது, ஒளியினால் இருள் போல், ஜ்ஞானத்தினால் நசிக்கிறதா, அல்லது தானே நசிக்கிறதா, ஜ்ஞானத்தினால் நசிக்குமாகில், காரண மின்றியே நசிக்கிறதென்று நீங்களொப்புக்கொண்டது விரோதிக்கும். தானே நசிக்குமாகில், வழிதெரியாத குருடனுக்கு வழியறியாமையாகிற அஜ்ஞானத்தைப் போக்குகைக்காக வழிகாட்டுகை வீணாய்விடும். இப்படி இருவழியிலும் உங்கள் மதத்தில் தோஷமுண்டென்கிறார்கள். ககசு.

(ரா-ஹா.) துச்சமென்பது - குதிரைக்கொம்புபோல் இல்லாதவஸ்துவை. ஜகத்து உனக்கும் காண்கையாலே அதைத் துச்சமென்னவொண்ணாது. துச்சத்தில் நின்றும் ஜகத்து உண்டாகிறதென்று நீ கீழ்ச்சொன்னபடி ஒப்புக்கொண்டால், ம்ருத்தில் நின்று ம்ருண்மயமான கடம், ஸுவர்ணத்தில் நின்றும் ஸுவர்ணமயமான மகுடாதிகளே உண்டாகக்காண்கையாலே துச்சத்தில் நின்றுமுண்டான ஜகத்தும் துச்சமேயாம். அதினால் ஒருப்ரயோஜநமும் ஸித்தியாது. ககசு.

ஸூ - ககஎ. ஆகாஶே சாவிஶேஷாத்.

(ஶ்ரு-ரா-வ்ரு.) அவிஶேஷாத் - மற்றபதார்த்த ஜ்ஞாநத்திற்காட்டில் ஆகாசஜ்ஞாநத்திற்கு விசேஷமில்லாமையாலே: ஆகாஶே ச - ஆகாசத்திலும், (துச்சஸ்வரூபத்வம் ஸம்பவியாது.) ககஎ.

(ஶ்ரு-ஹா.) ஆகாசமும் மற்றவஸ்துக்களைப்போல் ஒருவஸ்துவாக லோகத்தில் வ்யவஹாரம் காண்கையால் அம்மதத்தில் ஆகாசமில்லை யென்பதும் சரியன்று. லோகவ்யவஹாரம் தப்பென்றாலும் காதினால்கேட்பது சப்தமென்றொரு குணமுண்டு, அதற்காதாரம் ப்ருதிவி முதலிய மற்றவஸ்துக்களாக மாட்டாவாகையால் அதற்காதாரமாகிய ஒருவஸ்து ஒப்புக்கொள்ள வேணும். அதேஆகாசமெனப்படும்.

(ரா-ஹா.) ஆகாசம் இல்லையென்று நீ சொன்னது சரியன்று. ஏனென்றால், அங்கே உயரப்பருந்து பறக்கிறதென்றால் அங்கே என்கிறபதத்திற்கு அர்த்தம் இன்னதென்று சொல்லவேணும். அது ப்ருதிவீ ஜல தேஜோவாயுக்களாக மாட்டாது ஆகையால் அங்கே இங்கே என்று ப்ரத்யக்ஷமாகக் காண்கிற தேசவிசேஷமான ஆகாசமும், ப்ரத்யக்ஷமாய்க் காண்கிற ப்ருதிவ்யாதிகளைப்போல் ஒப்புக்கொள்ளவே வேண்டும். ககஎ.

ஸூ - ககஅ. அநுஸ்ம்ருதேஶ்ச.

(ஶ்ரு-ரா-வ்ரு.) அநுஸ்ம்ருதேஶ்ச - ப்ரத்யபிஜ்ஞையினாலும் (கடாதிகளை க்ஷணிகமென்னவொண்ணாது. ககஅ.

(ஶ்ரு-ரா-ஹா.) நான்முன்னே பார்த்தவஸ்துவை இப்போதுபார்க்கிறேனென்று லோகத்திற் சொல்லுகிறார்கள். கடமும் பார்க்கிறவனும் க்ஷணிகமானால் முன்னே பார்த்த உடனே அந்த கடமும் பார்த்தவனும் நசித்துப்போனபடியால், அதையிப்போது பார்க்கிறேனென்று சொல்லக்கூடாது. தீபம் ப்ரதிக்ஷணம்நசித்துப் போனாலும் முன்பார்த்ததீபமே இதுவென்று சொல்லுகிறார்கள் அதற்குக்காரணம் இத்தீபம் அத்தீபத்தோடொத்திருக்கை. அதுபோலவே இங்கும் ஸாம்யத்தைக் கொ

ண்டு அதுவே இதுவென்கிறார்கள் என்றால், ஆகிலும் அப்போது பார்த்தவன் இப்போதும் இருக்கவேண்டுகையாலே உன்மதத்தி லதில்லாமையாலே அஸங்கதமாகிறது. ககஅ.

ஸூ—ககக. நாஸதோऽத்ருஷ்டத்வாத்.

(ஶ்ரு-ரா-வ்யா.) அத்ருஷ்டத்வாத் - (நசித்தவஸ்துவின் தர்மம் வேறொன்றில் ஸங்க்ரமிக்கக்) காணாமையாலே, அஸத: - இல்லாதபதார்த்தத்தினுடைய, (தர்மம்), ந - ஜ்ஞாநத்தில் ஸங்க்ரமியாது. ககக.

(ஶ்ரு-ஹா.) பீஜம் நசித்தபின் முளைஉண்டாவது போலவும், பாலின் ஸ்வபாவம் மாறினபின் தயிர் உண்டாவது போலவும், அபாவத்திலிருந்தே ஜகத்து உண்டாகிறது என்றார்கள். அதாவது இதுக்கிது காரணமென்கிற நியமமில்லை என்று சொல்லிற்றும். ஆகில், பாலில்நின்றும் தயிரும் நூலில்நின்றும் வஸ்த்ரமும், மண்ணில்நின்றும் கலசமும் உண்டாவதுபோல் இக்கார்யங்களே மற்றோரிடத்தில் நின்றும் ஏனுண்டாகக்கூடாது. மேலும், மண்ணினு லுண்டானது மண்ணையும், பொன்னினு லுண்டானது பொன்னையும் காண்பதுபோல், அபாவத்தினு லுண்டான ஜகத்தும் அபாவமேயாய், அதாவது ஒன்றும் இல்லாததாகவே யாகவேணும், அப்படியன்றி வஸ்துவாகக்காண்கையால் அந்தயுக்தி ஸாரமன்று. பாலினவஸ்த்தைமாறித் தயிராகிறதென்பதும் கிடையாது. பாலேதயிராகவும், வித்தேமுளையாகவும் ஆகிறதாகையால் உங்களது உதாஹரணமும் சரியன்று. ககக.

(ரா-ஹா.) ஸௌத்ராந்திகன், கடாதிபதார்த்தங்கள் நசிக்கும்போது தன்னுடைய நீலம்,பீதம்,ப்ருதுபுத்நோதரம்முதலிய ஆகாரங்களை ஜ்ஞானத்திற் றொற்றிவைத்துப் போகிறதுகள். அதினால் ஜ்ஞானம் அவ்வாகாரங்களை யடைந்து ஒன்றுக்கொன்று விலக்ஷணமாயிருக்கிறது. ஜ்ஞானம் விலக்ஷணமாயிருக்கைக் கடியாக விஷயங்கள் விலக்ஷணங்களாய் முன்புண்டாயிருக்கவேணும். என்று ஜகத்தை யுண்டென்று அநுமித்தான். அவனுக்கு ஜகத்து ப்ரத்யக்ஷ ஸித்தமன்று. அவன் மதத்தை நிரஸிக்கிறார்.— கடாதிகள் நசித்தால் அவற்றினுடைய ரூபாதிகள் மற்றொன்றில் ஸங்க்ரமிக்கக் காணாமையாலே கடம் நசிக்கும்போது அதினுடைய நீலாத்யாகாரம் ஜ்ஞானத்தில் ஸங்க்ரமிக்கிறதென்பது அஸங்கதம். ககக.

ஸூ - உ௦௦. உதாஸீநாநாமபி சைவம் ஸித்தி:.

(ஶ்ரு-ரா-வ்யா.) ஏவம்ச - இப்படியானால், உதாஸீநாநாமபி - ப்ரயத்நம் செய்யாதவர்களுக்கும், ஸித்தி: - பலம் ஸித்திக்கவேண்டிவரும்.

(ஶ்ரு-ஹா.) காரணமின்றியே கார்யமுண்டாகுமாகில் ஒருவனொரு பலத்தைக்குறித்து முயற்சிசெய்யவேண்டுவதேயில்லை. அவனுக்கும் தன்னடையே பலம்கைபுகக்காணலாம். அதாவது - குயவன் மண்ணைப்பிசைவது, கைக்கோளயன் நூலை நெய்வது, தொழிலாளி ஏருழுவது முதலிய இவை வீண்முயற்சியாய்விடும் ஆகையாலும் அம்மதம் சரியன்று. உ௦௦

(ரா-ஹா.) இது வைபாஷிக ஸௌத்ராந்திகர்களிருவர்க்கும் தூஷணம்.— எல்லாம் க்ஷணிகமானால், ஒருப்ரயோஜநத்தைக் குறித்து ப்ரயத்தனம் செய்தவன் உடனே நசித்துப்போனான் அவன்யத்நித்தப் பிரயோஜநத்தை இப்போது மற்றொருவன் ப்ரயத்ந மில்லாமலே அடைகிறான் என்று ஒப்புக்கொள்ளவேணும். இப்படியானால், ஒருப்ரயோஜநத்தைக் குறித்து ப்ரயத்நம் செய்கைவ்யர்த்தமாய் ப்ரயத்ந மில்லாமலே ஸர்வர்க்கும் ஸமஸ்தப்ரயோஜநங்களும் ஸித்திக்க வேண்டிவரும். உ௦௦.

ஊபி - சகூ. ஸூ - உ0க. நாஸாவஉவலஷ்யேঃ

(ஶ-ரா-வ்ய.) உவலஷ்யேঃ - (ஜ்ஞாநம் ஸகர்மகமாயும் ஸகர்த்ருக மாயும்) காண்கையாலே, ஊஸாவঃ - ஜ்ஞாநாதிரிக்தமான வஸ்துக்களின் அபாவம், ந - ஸித்தியாது. உ0க.

(ஶ-ஸா.) ஜ்ஞாநமாவது அறிவு. மரம் செடி முதலியவற்றைப்பார்த்து "இது மரம், இது செடி" என்றே உலகத்தார் அறிகிறார்கள்; அல்லது "இதுஅறிவ" என்று ஒருவரும் சொல்வதில்லை. கண்ணால்காண்கிற வஸ்துக்களை இல்லையென்பது ஒருவன் பசிதணியபுஜித்து, "நான் புஜிக்கவுமில்லை, என்பசி தணியவுமில்லை" என்பது போல் இருக்கிறது. உ0க.

(ரா-ஸா.) இதில் யோகாசாரனை நிரஸிக்கிறார்.— அவன், ஜ்ஞாநம் மாத்ரமேயுள்ளது. அதைக்காட்டிலும் அதிரிக்தமான பதார்த்தங்கள் கிடையாது, அந்த ஜ்ஞானமே நீலபீதாதி ஸமஸ்தாகாரங்களையு முடையது. அந்த ஆகாரத்தையுடைய ஹ்ருதயத்திலிருக்கிற ஜ்ஞாநமே வெளியில் கடாதி பதார்த்தங்கள் போல் ப்ரமத்தினால் காண்கிறது. கடாதிகளை ஒப்புக்கொண்டவனும், ஜடங்களான அவை தானே ப்ரகாசிக்க மாட்டா வாகையால் அவை ப்ரகாசிசைக்காக ஜ்ஞானம் அங்கீகரிக்கவேண்டும். அப்போது, பதார்த்தம் ஜ்ஞாநம் என்று இரண்டுஅங்கீகரிப்பதைக் காட்டிலும் ஜ்ஞாநமொன்றே அங்கீகரிப்பது உசிதம். அதினாலேயே ஸகலவ்யவஹாரங்களும் நடக்கிறது என்றான்.— நான் இதை அறிகிறேன் என்னும்போது நான் என்று ஜ்ஞாநத்துக் காஶ்ரயமாக கர்தாவும், இதை என்று அதற்கு விஷயமான கர்மமும் ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேறாகத் தோற்றி, அறிகிறேன் என்று ஜ்ஞாநமும் வேறாகத்தோற்றிக் கொண்டிருக்க அம்மூன்றில் ஒன்றை யங்கீகரித்து, ப்ரத்யக்ஷமாகக் காண்கிற மற்ற இரண்டையும் இல்லை யென்றது அநுசிதம். ஆகையால் இந்த மதம் ஸயுக்திகமன்று. உ0க.

ஸூ - உ0உ. வைத⁴ர்ம்யாச்ச ந ஸ்வப்நாதி³வத்.

(ஶ-ரா-வ்ய.) வைத⁴ர்ம்யாச்ச - ஸ்வப்நத்திற்காண்கிற பதார்த்தங்களைக்காட்டிலும் இப்பதார்த்தங்கள் விஜாதியமாகையாலே, ஸ்வப்நாதி³வத் - ஸ்வப்நத்திற்காண்கிற பதார்த்தங்களைப்போல், ந - (இப்பதார்த்தங்கள்) ஆகமாட்டா. உ0உ.

(ஶ-ரா-ஸா.) இல்லாதபதார்த்தங்களை ஸ்வப்நத்தில் ப்ரமத்தினால் காண்கிறதுபோல், இல்லாதபதார்த்தங்களே நமக்கிப்போது ப்ரமத்தினால் காண்கின்றன, அவை வாஸ்தவமல்ல வென்னில், அதற்கு மிதற்கும் பேதமுண்டு. ஸ்வப்நத்திற்கண்ட பதார்த்தங்கள் விழித்தெழுந்தபின் காணாமையாலே, உறக்கத்திலுண்டான இந்த்ரியதோஷத்தினால் அஸத்யமானவையே நம்மால் ஸத்யம்போல் காணப்பட்டனவென்று அங்கீகரிக்கிறோம். இங்கு பார்க்கிறபதார்த்தங்கள் ஸ்திரமாகக் காண்கையாலும், அவ்விதமான தோஷங்களொன்று மில்லை யாகையாலும், அவற்றைப்போல் இப்பதார்த்தங்களை அஸத்யமாக ஸ்வீகரிக்கக்கூடாது. உ0உ.

ஸூ - உ0ங. ந பா⁴வோऽநுபலப்³தே⁴ঃ

(ஶ-ரா-வ்ய.) அநுபலப்³தே⁴ঃ-ப்ரத்யக்ஷமில்லாமையாலே, பா⁴வঃ- ஜ்ஞாநஸத்தை, ந - உபபந்நமாகாது. உ0ங.

(ஶ்ரு-ஹா.) ஜ்ஞாநாதிரிக்தவஸ்து வில்லையாகில் அந்த ஜ்ஞாநம் ஏகரூபமாயே யிருக்கவேணும், அப்படியன்றியே ஜ்ஞாநம் "இதுமண், இது மரம்" என்று அனேகவிதமாகக் காண்கிறது. அதற்குக்காரணமாக மண் மரம் முதலிய வஸ்துக்களையும் ஒப்புக்கொள்ளவேணும் என்ற கேள்விக்கு; ஜ்ஞாநத்தில் வாஸனையென்பதொன்றுண்டு; அதாவது - ஸம்ஸ்க்காரம். அந்த வாஸனை அனேகவிதமாயிருக்கும் ஆகையால் அந்த வாஸனைக்கு ஆதாரமாகிய ஜ்ஞாநமும் அனேகவிதமாகக் காண்கிறது, அவ்வளவேயன்றி, மற்று மண் மரம் முதலிய வஸ்துக்களினாலன்று என்று உத்தரம் சொன்ன நாஸ்திகருக்கு உத்தரமாயிருக்கிறது இந்தஸூத்ரம்.—வாஸனையாவது - ஒன்றைக் கண்ணால் பார்த்தாவது காதினால் கேட்டாவது மற்றும் வேறு விதமாயாவது அறிந்தபின் அதினாலுண்டான ஸம்ஸ்காரம். வஸ்து அனேகவித மாகையால் அதையறியும் ஜ்ஞாநமு மனேகவிதமாய் அதினாலுண்டான ஸம்ஸ்காரமும் அனேகவிதமாயிருக்கும். நாஸ்திகர் ஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேறான ஒரு வஸ்துவை ஒப்புக்கொள்ளவேயில்லை. இப்படியிருக்க, வாஸனை அனேகவிதமென்றும் அதினால் ஜ்ஞாநமும் அனேகவிதமா யிருக்கிறதென்றும் சொல்லி லோகவ்யவஹாரத்தை நிர்வஹிக்க முடியாது. உ0௩.

(ரா-ஹா.) ப்ரத்யக்ஷஸித்தமாய் அபாதிதமான விஷயங்களை ஒப்புக்கொள்ளாமல் அப்ரத்யக்ஷமான ஜ்ஞாநத்தை அங்கீகரித்தல் யுக்திமத்தன்று. உ0௩.

ஸூ. க்ஷணிகத்வாச்ச.

(ஶ்ரு - வ்யா.) க்ஷணிகத்வாச்ச - (ஆலயவிஜ்ஞாநம்) க்ஷணிகமாகையால், (ந - வாஸனைக்கு ஆதாரமாகமாட்டாது. இந்தபாஷ்யத்தில் இந்தஸூத்ரம் அதிகமாக இருக்கிறது.

(ஶ்ரு-ஹா.) நாஸ்திகமதத்தில் ஆலயவிஜ்ஞாந மென்றொன்றுண்டு, அதே ஆத்மா என்பது; வாஸனையென்பது-அவ்வாலய விஜ்ஞாநத்திலிருந்து நாநாவிதமான ஜ்ஞாநத்திற்குக் காரணமாகிற தென்றூர்கள். அந்த ஆலயவிஜ்ஞாநமென்பது க்ஷணந்தோறும் உண்டாய் நசிக்கிறதென்றும் சொன்னார்கள். அதற்கு தூஷணமாயிருக்கிறது இந்த ஸூத்ரம். ஆதாரமானது முன்னே உண்டாய் அதற்குப்பின் அதினாலுண்டாகவேணும். அப்படிக்கன்றியே, வாஸனையும் அதற்கு ஆதாரமாகச்சொல்லுகிற ஆலயஜ்ஞாநமும் ஒரே க்ஷணத்திலுண்டாகிறது. மறுக்ஷணத்தில் நசிக்கிறது என்று சொல்லுகிற அம்மதத்தில் ஆலயவிஜ்ஞாநம் வாஸனைக்கு ஆதாரமாக மாட்டாது. ஒருபசுவின் தலையில் இரண்டுகொம்புகள் ஒரே காலத்தில் முளைக்கும் போது அதில் ஒன்று ஆதாரமாயும் மற்றொன்று அதில் முளைத்ததாயு மாகமாட்டாது. அதுபோலவே இங்கும் கண்டுகொள்வது.

அதி - ௫௦. ஸூ - உ0௪. ஸர்வதாநுபபத்தேஶ்ச.

(ஶ்ரு-ரா-வ்யா.) ஸர்வதா-ஸர்வப்ரகாரத்தாலும், அநுபபத்தேஃ - உபபத்தியில்லாமையாலே, (மாத்யமிகமத மஸங்கதம்.) உ0௪.

(ஶ்ரு-ஹா.) நாஸ்திகர்கள் எவ்விதமான யுக்திகளைச்சொன்னபோதிலும் அந்த யுக்திகளெல்லாம் ஒன்றோடொன்று பொருத்தமற்றதாகையால், மணலினால் கட்டின கிணறுபோல் பிதிர்ந்தேபோமல்லது அம்மதத்தை நிலைநிறுத்த உபயோகிக்க மாட்டாது. உ0௪.

(ரா-ஹா.) இதில் மாத்யமிகனை நிரஸிக்கிறார்.—அவன், ஜ்ஞாநம், ஜ்ஞேயம், ஜ்ஞாதாவென்கிற பதார்த்தங்களொன்றுமேகிடையாது. ஸர்வமும் ப்ராந்தியினால்

தோற்றுகிறது. பதார்த்தங்களை ஒப்புக்கொண்டால் அவற்றுக்கு உத்பத்தி சொல்ல வேணும். அந்தஉத்பத்திக்குக் காரணம் பாவமென்றும் அபாவமென்றும் சொல்ல முடியாது. பாவத்தினாலுண்டாகிறதென்றால், ம்ருத்து பிண்டமாயிருக்கும்போது கடமாகமாட்டாது. அதைத்துகைத்தபின்பே கடமாகிறது. அப்போது ம்ருத்பிண்டம் நசித்ததாகையால் பாவத்திலிருந்து கடோத்பத்தியில்லை; அபாவத்திலிருந்து உத்பந்நமாகிறதென்றால், அபாவத்திலிருந்து உத்பந்நமானது அபாவமாயே யாய் விடும். கார்யம் அபாவமானால் அது ஒருப்ரயோஜநத்துக்குப்யோகிக்காது. இப்படி பதார்த்தோத்பதி நிரூபிக்கமுடியாமையாலே ஸர்வம் சூந்யமென்றே ஸித்தித்ததென்றான்.—பாவமென்றும் அபாவமென்றும் பதார்த்தத்தினுடைய அவஸ்த்தா விசேஷங்கள். பாவமென்று அப்போதிருக்கிற அவஸ்த்தையைச் சொல்லுகிறது. அபாவமென்று காலாந்தரத்திலிருக்கிற அவஸ்த்தையைச் சொல்லுகிறது. நீ பாவமென்றாலும் அபாவமென்றாலும் அந்தந்த அவஸ்த்தைகளையுடைய ஒரு தர்மிரூபபதார்த்தம் ஸித்திக்கும் அல்லது நீ சொல்லுகிற ஸர்வசூன்யம் ஸித்தியாது. ஆகையால் உன் மத மஸங்கத மென்கிறார். உ0ச.

ஜயி - ருக. ஸூ - உ0ரு. நைகஸ்மிந்நஸம்பவாத்.

(ஶ்ரீ.ரா-வ்யா.) ஏகஸ்மிந் - ஒருவஸ்துவில், அஸம்பவாத் - விருத்த தர்மங்கள் ஸம்பவியாமையால், ந - (ஜைநமதம்) ஸமீசீநமன்று. உ0ரு.

(ஶ்ரீ-ரா-ஹா.) இதில் ஜைநமதத்தை நிரஸிக்கிறார்.—அவர்கள், கார்யகாரணரூபமான இந்த ஜகத்து ஏகமாயு மனேகமாயும் நித்யமாயு மநித்யமாயும், பிந்நமாயு மபிந்நமாயு மிருக்கிறது. காரணரூபமாவது-ம்ருத்து. அது கார்யாவஸ்த்தையிலும் காரணாவஸ்த்தையிலும் காண்கையாலே, நித்யமாய், ஏகரூபமாய் அபிந்நமாயிருக்கும். கார்யரூபமாவது - கடாவஸ்த்தை அது. சிலபோது கண்டும் சிலபோது காணாமையாலே அநித்யமாய், கடம், சராவம் என்று வெவ்வேறாகக் காண்கையாலே அநேகமாய் பிந்நமாயிருக்கும். இப்படியே ஸகலவஸ்துக்களும் பரஸ்பரவிருத்த தர்மயுக்தங்களா யிருக்குமென்றார்கள். காரணரூபேண, அதாவது-த்ரவ்யரூபேண நித்யம் ஏகம் அபிந்நமென்றும், கார்யரூபேண, அதாவது-அவஸ்த்தாரூபேண அநித்யம் அநேகம் அபிந்நம் என்றும் சொன்னது கூடாது. அநித்யமாவது உத்பத்தி விநாசங்களையுடையது. நித்யமாவது உத்பத்தி விநாசங்களில்லாதது. பிந்நமாவது. விருத்த தர்மத்தையுடையது. அபிந்நமாவது விருத்ததர்மமில்லாதது. பரஸ்பரவிருத்தங்களான இவை இருளுமொளியும்போ லோரிடத்திற் சேராது. தர்மியான த்ரவ்யம் நித்யமேகமபிந்நமென்றும், அதில் விசேஷணமான அவஸ்த்தை அநித்ய மநேகமபிந்நமென்றும் சொன்னால் ஓரிடத்தில் விருத்ததர்மங்கள் எப்படி சேர்ந்தது? இப்படி அர்த்த பர்யாலோசனை யில்லாமற் சொல்லுகிற இம்மதம் ஸயுக்திகமன்று.

ஸூ - உ0சு. ஏவஞ்சாத்மாகார்த்ஸ்ந்யம்.

(ஶ்ரீ.ரா-வ்யா.) ஏவஞ்ச - இப்படியே, ஆத்மாகார்த்ஸ்ந்யம் - ஆத்மாவுக்கு அபூர்த்தியும் (அம்மதத்தில் வருகிறது.) உ0சு.

(ஶ்ரீ-ராஹா.) ஆத்மா சரீரமளவாக இருக்கிறதென்றார்கள்—ஆனால், ஆனையின் சரீரத்திலிருந்தபோது அவ்வளவு பெரிதாயிருந்த ஆத்மா அதைவிட்டு எறும்பின் சரீரத்தில் ப்ரவேசித்தால் அவ்வளவு பெரிய ஆத்மா எறும்பின் சரீரத்திலடங்காதாகையால் எறும்பின் சரீரத்தில் ஆத்மா பூர்ணமாக இல்லையென்று அங்கீகரிக்க வேண்டிவரும். உ0சு.

ஸூ. உ0எ. நவஸாந்ராயாஃவந்விரோயோவிகாராதிஹ்ய:.

(ஶ - ரா - வ்யா.) ஸாந்ராயாக்ஃவி - ஆத்மா அல்பபரிமாணத்தை யடைந்தாலும், விகாராதிஹ்ய: - விகாரம்முதலியவை ஸம்பவிக்கையாலே, ஃவிரோய: - விரோதமில்லையென்கிறது, ந - இல்லை.

(ஶ-ரா-ஹா.) ஆத்மாகஜசரீரத்தைவிட்டுப் பிபீலிகாசரீரத்தில் ப்ரவேசிக்கும் போது பிபீலிகா சரீரமளவாக ஸூக்ஷ்மமாய் விடுகிறதென்னில், ஸ்தூலஸூக்ஷ்மா வஸ்த்தைகளை யடைகிறதென்று ஒப்புக்கொண்டால் கடாதிகளுக்குப்போல் உத்ப த்தி விநாசாதி தோஷங்கள் ப்ரஸங்கிக்கும். உ0எ.

ஸூ. உ0அ. ஃஞ்யாவஸ்தி தஸ்தோரஸ்ய நித்யத்வாஃவிஶேஷ:.

(ஶ-ரா-வ்யா.) ஃஞ்யாவஸ்திதே: - கடைசியில் (மோக்ஷத்தில்) உண் டாகிற பரிமாணத்துக்கு(ப்பின்பு எப்போதும் ஏகரூபமான) ஸ்த்திதி யுண் டாகையாலே, உஸய நித்யத்வாஃவ - அந்தபரிமாணமும் ஆத்மாவும் நித்ய மாயிருக்கையாலும், ஃவிஶேஷ: - (பூர்வாவஸ்த்தையிலும்) விசேஷம் கிடையாது. (முன்னமும் அந்த பரிமாணத்தையே அங்கீகரிக்கலாமென்று தாத்பர்யம். உ0அ.

(ஶ-ஹா.) ஸம்ஸார தசையிலிருந்த ஜீவன் மோக்ஷத்தை யடைந்தானாகில் அவ னுக்கு மறுபடியும் ஸம்ஸாரத்தில் ஜந்மமில்லை யாகையால் அப்போது அந்த ஜீவனு க்குள்ள பரிமாணமும் நசிக்கிறதில்லை, நித்தியமாயிருக்கும். அதே ஆத்மாவுக்கு ஸம் ஸார தசையில் அவ்வவசரீரத்தளவான பரிணாமமுண்டென்றும், அப்பரிமாணம் அவ யவங்களின் சேர்த்தியினாலும் பிரிவினாலும் உத்பத்தி விநாசங்களை யுடைத்தாயிரு க்குமாகில், ஒரு வஸ்துவில் இருளு மொளியும்போல் நித்யபரிமாணமும் அநித்ய பரிமாணமும் சேரமாட்டா தாகையால் ஸம்ஸாரதசையிலுள்ள பரிமாணமும் நித்ய மென்றே ஒப்புக்கொள்ளவேணும். இம்மாதிரி விரோதங்களுண்டாகையால் ஜைந மதம் சரியன்று. உ0அ.

(ரா - ஹா.) ஜீவனுக்கு ஸம்ஸாரதசையில் சரீரந்தோறும் சரீராநுகுணமா ன பரிமாண மங்கீகரித்தாலும் மோக்ஷமுண்டான பின்பு அப்போதுண்டான பரி ணாமத்திற்குப் பிற்பாடு நாசமில்லாமையால் நித்யமாகையாலே அதே பரிமாணமே முன்னமு மங்கீகரிக்க வேண்டியிருக்க இப்போது வெவ்வேறு பரிணாம மங்கீகரிப் பது அயுக்தம். உ0அ.

ஃயி. ருஉ. ஸூ. உ0கூ. வத்யுராஸாமஞ்ஜஸ்யாஃ.

(ஶ-வ்யா.) ஃஸாமஞ்ஜஸ்யாஃ - தோஷவத்தாகையால், வத்யு: - ஸர் வேஶ்வரனுக்கு, (நிமித்தகாரணத்வமாத்ரம்ஸம்பவியாது.) உ0கூ

(ரா-வ்யா.) வத்யு: - பசுபதியினுடைய (மதம்), ஃஸாமஞ்ஜஸ்யாஃ - (விருத்தார்த்த ப்ரதிபாதகமாய்) அஸமஞ்ஜஸமாகையாலே, ந - ஆதரணீய மன்று. உ0கூ.

(ஶ-ஹா.) இந்த அதிகரணத்தில், கடகத்துக்கு ஸுவர்ணம்போல், ஈஶ்வரன் ஜகத்துக்கு உபாதாந காரணமன்று, கடகத்துக்குத் தட்டான்போல் நிமித்தகாரண மாகமாத்திரமாகிறான். என்றமதம் தூஷிக்கப்படுகிறது. ஸாங்க்யர்களும்பாசுபதர்க ளும் தார்க்கிகர்களும் ஈஶ்வரன் ஜகத்தைஸ்ருஷ்டிக்கும்போது ஜகத்துக்கு உபாதா

நகாரணமாகிய மூலப்ரக்ருதிக்கும் பரமாணுக்களுக்கும் அதிஷ்டாதாவா யிருந்து ஸ்ருஷ்டிக்கிருனென்ருர்கள். அப்படி சொல்லும் பக்ஷத்தில், ஐஶ்வர்யத்திஞலும் புத்தியிஞலும் வித்யையிஞலும் பலத்திஞலும் மற்றுமுள்ள ஆயுஸ்ஸு முதலானவைகளிஞலும் ஒரு ஜீவனை யுயர்ந்தவனுகவும் மற்ருெருவனைத் தாழ்ந்தவனுகவும் ஸ்ருஷ்டிக்கக்கூடாது. உயர்ந்தவனுக ஸ்ருஷ்டிக்கைக்கு ப்ரீதியும் தாழ்ந்தவனுக ஸ்ருஷ்டிக்கைக்கு அவனிடத்தில் த்வேஷமும் காரணமாகையால். இம்மாதிரி இன்னுமனேக தோஷங்கள் ஈஶ்வரனிடத்தில் ஒப்புக்கொள்ள வேண்டிவரும். உயர்வு தசழ்வுகளுக்கு அவரவர்களுடைய புண்ய பாபங்கள் காரணமென்ருல், அவற்றைச்செய்விக்கிறவனு மீஶ்வரனுகையால் அந்த தோஷம் தவருது. ஆகையால் அம்மதம் சரியன்று. உ0க.

(ரா - ஹா.) இதில் பாசுபதனை நிரஸிக்கிருர். பசுபதியான ருத்ரன் ஸர்வஜ்ஞனுகையாலும், அவன், மோக்ஷஸ்வரூபத்தையும் தத்ஸாதநஸ்வரூபத்தையும் அறிவிக்கைக்காகவே இந்த ஆகமத்தை யுபதேசிக்கையாலும். இம்மதம் எல்லாருக்கு மாதரணீயமாயிருக்குமென்று பூர்வபக்ஷம்—அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமாய் ஸ்வதஃப்ரமாணமான வேதத்திற் சொன்ன வர்த்தங்களைக் காட்டிலும் இந்த ஆகமத்தில் விருத்தமான அர்த்தங்கள் சொல்லப்படுகின்றன. அவையாவன—ஈஶ்வரன் ஜகத்துக்கு நிமித்த காரணம், ப்ரக்ருதி உபாதாநகாரணம், ஸதாசிவன் பரதத்வம், ஸமாரம்ப ஸ்தாபநம், அதில் பரதேவதார்ச்சநம் முதலியவை மோக்ஷஸாதநம், இத்யாதிகள். ஆகையால் இம்மதத்தை சிஷ்டர்கள் அங்கீகரிக்கக்கூடாது என்று ஸித்தாந்தம். உ0க.

ஸூ - ஸம்பந்தா நுபபத்தேஶ்ச.

(ஸ - வ்ய.) ஸம்பந்தா நுபபத்தேஶ்ச- ஸம்பந்தம் சரிப்படாதாகையாலும், (ஈஶ்வரன் நிமித்தகாரணமன்று) இந்தபாஷ்யத்தில் இந்தஸூத்ரம் அதிகமாகக் காண்கிறது.

(ஸ-ஹா.) மேலும், ஈஶ்வரன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும்போது, குயவன் மண்ணைத்தொட்டுப் பானையைச் செய்வதுபோல் மூலப்ரக்ருதியையும் ஜீவர்களையும் தொட்டுச்செய்யவேண்டும். மூலப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஈஶ்வரனுக்கும் மண்ணையும் குயவனையும்போல் ஒருருவில்லை யாகையால் அப்படி தொட்டுச் செய்ய முடியாது.

ஸூ. உக0. அதிஷ்டாநா நுபபத்தேஶ்ச.

(ஸ-ரா-வ்ய.) அதிஷ்டாநா நுபபத்தேஶ்ச - (ஈஶ்வரன் ப்ரதாநத்திற்கு) அதிஷ்டாநம் என்பது அநுபபந்நமாகையாலேயும், (இம்மதம் ஸமீசீநமன்று.) உக0.

(ஸ-ஹா.) மேலும் கண்ணுல் காணத்தகுந்த ஸுவர்ணம் முதலானவற்றைக் கொண்டு தட்டான் முதலிய வேலைக்காரர்கள் கடகம் முதலிய வஸ்துக்களைச் செய்கிருர்கள். ரூபமில்லாத மூலப்ரக்ருதியும் ஜீவனும் கண்ணுக்குக் காணமாட்டாவாகையால் அவற்றைக்கொண்டு ஈஶ்வரன் ஜகத்தைச் செய்யமுடியாது. உக0.

(ரா-ஹா.) ஜகத்காரணமான ப்ரதாநம் அசேதநமாகையால் தானே ஜகத்தை ஸ்ருஷ்டிக்க ஸாமர்த்யமுடையதன்று. ஒரு புருஷனை அதைக்கொண்டு ஜகத்தை ஸ்ருஷ்டிக்க வேண்டும் என்ற அநுமாநத்திஞல் ஈஶ்வரனை ஒப்புக்கொண்டு அவன் ஜகத்ஸ்ருஷ்டிக்காக ப்ரதாநத்தை யதிஷ்டிக்கிரு னென்ருர்கள். லோகத்

தில் கடாதிகளுக்குக் கர்த்தாக்களான குலாலாதிகள் சரீரமுடையவர்களாய் கொண்டே ம்ருத்பிண்டாதிகாரணங்களை யதிஷ்டித்து ஸ்ருஷ்டிக்கிறார்கள். அதுபோலவே ப்ரதாநத்தை யதிஷ்டிக்கிற ஈஸ்வரனுக்கும் சரீரம் ஸித்திக்கும். அவனுக்கு சரீரம் ஒப்புக்கொண்டால் அது நித்யமென்றும் அநித்யமென்றும் சொல்லக்கூடாது. என்று கீழே தூஷணம் சொல்லியிருக்கிறது. சரீரம் ஒப்புக்கொள்ளாமற்போனால் ப்ரதாநத்திற்கு அதிஷ்டாநமாகமாட்டான் ஆகையால் அம்மதம் யுக்தி யுக்தமன்று.

ஸூ. உகக. கரணவச்சேந்ந போகாதிப்ய:.

(ஶ்ரீ-பா-வ்யா) கரணவச்சேத்-இந்த்ரியத்துக்கும் சரீரத்திற்கும் அசரீரியான ஜீவன் அதிஷ்டாநமாகிறாப்போலே அசரீரியான ஈஸ்வரன் ப்ரதாநத்திற்கு அதிஷ்டாநமாகலாம் என்றால், போகாதிப்ய: - புண்யபாபாநுபவம் முதலானவை ப்ரஸங்கிக்கையாலே, ந - அப்படி ஈஸ்வரனுக்கு ஸம்பவியாது. (அதாவது - ஜீவனுக்குக் கர்மாநுபவத்துக்காக இந்த்ரியாத் யதிஷ்டாநமுண்டு. ஈஸ்வரனுக்குக்கர்மாநுபவமில்லாமையால் அது கூடாது. ஒப்புக்கொண்டால் ஜீவனைப்போலவே கர்மாநுபவம்முதலானவையு மொத்துக்கொள்ளவேண்டிவரும்.) உகக.

ஸூ. உகஉ. அந்தவத்த்வமஸர்வஜ்ஞதா வா.

(ஶ்ரீ-பா-வ்யா.) அந்தவத்த்வம் - விநாசத்தை யுடைத்தாகையும், அஸர்வஜ்ஞதா வா-ஸர்வவிஷயஜ்ஞாந மில்லாமற்போகையும், (ப்ரஸங்கிக்கும்.) உகஉ.

(ஶ்ரீ-ஹா.) மேலும், தார்க்கிகர் ஜீவர்களையும் ஈஸ்வரனையும் எங்கும் நிறைந்தவர்களாகச் சொல்லுகிறார்கள். ஈஸ்வரன், அவர்களை அளவற்றவர்களாக அறிகிறானாகில், அவை அளவுபட்டிருக்கவேணும். அளவுடைய கடாதி வஸ்துக்கள் உத்பத்தி விநாசவத்துக்களாகக் காண்கையாலே, ஜீவேஸ்வரர்களும் அப்படியே உத்பத்தி விநாசமுடையவர்களாவர்கள். இது இவ்வளவென்று அவற்றினளவை ஈஸ்வரனறியானாகில், அவனை நீங்கள் ஸர்வஜ்ஞன்-அதாவது - எல்லாமறிந்தவன் என்று சொல்வது பொய்யாம் ஆகையாலும் அம்மதங்கள் சரியன்று. உகஉ.

(பா-ஹா.) ஈஸ்வரனுக்கு ப்ரதாநாதிஷ்டாநம் ஸித்திக்கைக்காக சரீரமும், அந்த சரீரம் ஸித்திக்கைக்காக புண்யபாபங்களும் ஒப்புக்கொண்டால், ஜீவனைப்போலே ஈஸ்வரனும் ஜந்மமரணங்களை யுடையவனாவன். இப்படி கர்மபரவசனானபின் அவனுக்கு ஸர்வஜ்ஞத்வமும் ஸித்தியாது. இத்யாதி தோஷங்களுண்டாகையாலே இம்மதம் ஸமீசீநமன்று. உகஉ.

அதி. ருஎ. ஸூ. உகங. உத்பத்த்யஸம்பவாத்.

(ஶ்ரீ-பா-வ்யா.) உத்பத்த்யஸம்பவாத்-(ஜீவனுக்கு) உத்பத்திஸம்பவியாமையாலே, (ஜீவோத்பத்தி சொல்லுகிற பாஞ்சராத்ரம் ப்ரமாணமாகமாட்டாது.) உகங.

(ஶ்ரீ-ஹா.) கீழ் பாசுபத மதத்தை நிரஸித்து இவ்வதிகரணத்தில் பாஞ்சராத்ராகமத்தைத் தூஷிக்கிறார். பாஞ்சராத்திரத்தில் வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று நாலு வ்யூஹங்கள் சொல்லப்பட்டது. அதில், வாஸுதேவன் ஷாட்குண்ய பரிபூர்ணனான பகவான். ஸங்கர்ஷணன் - ஜீவன், ப்ரத்யும்நன் - மநஸ்ஸு, அநிருத்தன் அஹங்காரம். வாஸுதேவனிடத்திலிருந்து ஸங்கர்

ஷணனென்கிற ஜீவனுண்டாகிறான், ஸங்கர்ஷணனிடத்திலிருந்து ப்ரத்யும்நன், ப்ரத்யும்நனிடத்திலிருந்து அநிருத்தன் என்று இப்படி உத்பத்தி சொல்லி யிருக்கிறது. ஜீவனுக்கு உத்பத்தி கிடையாது. அவன் நித்யன் என்று வேதத்தில் சொல்லி யிருக்க அதற்கு விருத்தமான ஜீவோத்பத்தியை ப்ரதிபாதிக்கையாலும், ஜீவனுக்கு உத்பத்தி ஒத்துக்கொள்ளில் விநாசமும் ஒப்புக்கொள்ள வேண்டுகையாலே மோக்ஷமில்லா தொழிகை முதலான தோஷங்கள் வருகையாலும், ஸூத்ரவிரோத முண்டாகையாலும் அம்மதம் சரியன்று. ௨௧௨.

(ரா-ஹா.) இவ்வதிகரணத்தில் பகவத்ப்ரோக்தமான பாஞ்சராத்ரம் வேதம் போலே ப்ரமாணதமமென்று ஸ்தாபிக்கிறார்.—அதற்காக முதலில் பூர்வபக்ஷத்தைக்காண்பிக்கிறார்.—ஸாங்க்யஸ்ம்ருதிபோலவும் சைவாகமம்போலவும், பாஞ்சராத்திரத்திலும்சிலவேதவிருத்தார்த்தங்கள்ப்ரதிபாதிக்கப்படுகின்றன. அவையாவன- "வாஸுதேவாத் ஸங்கர்ஷணோ நாம ஜீவோ ஜாயதே" என்று ஸங்கர்ஷணனென்கிற ஜீவன் உண்டாகிறானென்று சொல்லிற்று. இது, "ந ஜாயதே ம்ரியதே" என்று ஜீவனுக்கு உத்பத்திவிநாசங்க ளில்லையென்று சொல்லுகிற வேதத்தோடு விரோதிக்கிறது. மேலும், நாலுவேதங்களிலும் பரமபுருஷார்த்த மின்னதென்ற கப்படாமல் பின்பு இப்பாஞ்சராத்ரத்தைக் கற்றானென்று வேதத்தையநாதரித்துச் சொல்லிற்று; ஆகையால் இவ்வாகமமும் அப்ரமாணமென்று பூர்வபக்ஷம். ௨௧௩.

ஸூ. ௨௧௪. ந ச கர்த்து: கரணம்.

(ஸூ-ரா-வ்யா) கர்த்து: - கர்த்தாவான ஜீவனிடத்தில்நின்றும், கரணம் - இந்த்ரியமானமனஸ்ஸு (உண்டாயிற்றென்பது வேதவிருத்தமாகையால்), ந - ஸம்பவியாது. ௨௧௪.

(ஸூ-ஹா.) மேலும்; ஒரு மரத்தை வெட்டுகைக்குக் கர்த்தா-தச்சன், அதுக்குக் கரணம் - கோடாலி, இந்த கரணம் அந்த கர்த்தாவினிடத்திலிருந்து உண்டாகிறதில்லை. இங்கு, கர்த்தாவாகிய ஜீவனிடத்திலிருந்து கரணமாகிய மநஸ்ஸுக்கு உத்பத்தி சொல்லியிருக்கிறது. அதுவும் அநுபவவிருத்தமாகையால் அம்மதம் சரியன்று

(ரா-ஹா) மேலும், "ஸங்கர்ஷணாத் ப்ரத்யும்நஸம்ஜ்ஞம் மநோ ஜாயதே" ஸங்கர்ஷணனிடத்திலிருந்து ப்ரத்யும்நனென்கிற மனசு உண்டாகிறதென்றுசொல்லிற்று. வேதத்தில் "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந:" என்று இந்த பரமாத்மாவினிடத்திலிருந்து மநஸ்ஸு உண்டாகிறதென்று சொல்லுகையாலே இதுவும் வேதவிருத்தம்ஆகையால் இவ்வாகமமும் ப்ரமாண மாகமாட்டாதென்று பூர்வபக்ஷம்.

ஸூ. ௨௧௫. விஜ்ஞாநாதிபாவே வா தத்ப்ரதிஷேத:.

(ஸூ-ரா-வ்யா.) விஜ்ஞாநாதிபாவே வா - (ஸங்கர்ஷணாதிகளுக்கு) ஜ்ஞாநஸ்வரூபனாய் ஜகத்காரணனான பரமாத்மஸ்வரூபத்வம் ஸித்தித்தவளவில், தத்ப்ரதிஷேத: - (பாஞ்சராத்ரத்துக்கு) ப்ராமாண்யப்ரதிஷேதம் கிடையாது. ௨௧௫.

(ஸூ-ஹா.) கீழ்ச்சொன்ன நாலு வ்யூஹங்களும் ஜ்ஞாநஸ்வரூபியான பரமாத்மாவே யாகையால் ஜீவோத்பத்தி அங்கு சொல்லவில்லையேயென்னில், ஆகிலும் வாஸுதேவனிடத்திலிருந்து மற்ற மூவர்க்கும் உத்பத்தி சொல்லுவதும் அஸங்கதந்

தான்.ஸுவர்ணத்திலிருந்து உண்டான கடகம் அதைக்காட்டிலும் விலக்ஷணமான அவஸ்தையை யடைந்திருக்கிறது. இங்கு அதுபோல் நால்வர்க்கும் கொஞ்சமும் பேதம் ஒப்புக்கொள்ளவில்லை. ஏக ரூபமானவர்களென்கிறார்கள். மேலும், ஒரு ஈஶ்வரனே ஜகத்தினுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குப் போருமாயிருக்க நாலுஈஶ்வரர்களையொப்புக்கொள்வதும் சரியன்று. உகரு.

(ரா-ஹா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்.—ஸங்கர்ஷணு நிருத்தாதிகள் பரப்ரஹ்மமான வாஸுதேவஸ்வரூபர்கள்.ஆகையால் ஸங்கர்ஷணாதிகளுக்குச் சொன்ன உத்பத்தி "அஜாயமானோ பஹுதா விஜாயதே" என்று கர்மாதீநமான உத்பத்தியன்றிக்கே ஸ்வேச்சையினால் ஜகத்ரக்ஷணத்துக்காகப்பண்ணின அவதாரமாகையால் நீங்கள் சொன்ன தோஷம் வாராது. ஸங்கர்ஷண னென்றொரு ஜீவனுக்குப் பேர்கிடையாது. ப்ரத்யும்நனென்றும் ஒரு மநஸ்ஸுகிடையாது. அவ்வாக்யங்களுக்கர்த்தம் - ஜீவனுக்கு அதிஷ்டாதாவான ஸங்கர்ஷணனும், மநஸ்ஸுக்கு அதிஷ்டாதாவான ப்ரத்யும்நனும் அவதரித்தார்கள் என்றர்த்தம். கீழ் வேதத்தை யநாதரித்துச் சொன்னது, அநுதிதஹோமத்தை ஸ்தோத்ரம் செய்யும்போது உதிதஹோமத்தை நிந்தித்தாற்போல் வேதத்தை நிந்திப்பதில் தாத்பர்யமில்லை. இவ்வாகமத்தில் ப்ராமாண்யஜ்ஞாந முண்டாகைக்காக அப்படிசொல்லிற்று. ஆகையால் வேதத்துக்கு விருத்தமான அம்சங்களொன்றும் இதில் சொல்லாமையாலும் வேதத்திற்சொன்னபடி ஜகத்துக்கு உபாதாநநிமித்தகாரணங்களும் ப்ராப்யனும், பரதத்வமும் பரமபுருஷனை ஸ்ரீமந்நாராயணனென்றும், அவன்விஷயமாக கர்மஜ்ஞாநபக்திபூஜைகள் செய்யவேண்டியதென்றும் சொல்லுகையாலும் பாஞ்சராத்ரம் முக்யப்ரமாணமாகக்கூடும் என்று ஸித்தாந்தம். உகசு.

ஸூ. உகசு, விப்ரதிஷேதாச்ச.

(ஶ - வ்ய.) விப்ரதிஷேதாச்ச - (வேதத்தை) நிந்திக்கையாலும், (இம்மதம் சரியன்று).

(ரா - வ்ய.) விப்ரதிஷேதாச்ச - (பாஞ்சராத்ரத்தில்) ஜீவோத்பத்தியை நிஷேதிக்கையாலும், (இது ப்ரமாணதமம்.) உகசு.

(ஶ-ஹா.) சாண்டில்யமுனி, நாலுவேதங்களிலும் க்ஷேமகரமாகச் சொல்லப்பட்ட தொன்றைக் காணுமல் இந்த பாஞ்சராத்ரத்தை அத்யயநம் செய்தாரென்று வேதத்தை நிந்தித்திருக்கையாலும் அந்த ஆகமம் சரியன்று. உகசு.

(ரா-ஹா) இவ்வாகமத்தில் "அஸத்த்வாதிஜ நாஶ" என்று ஜீவனுக்கு உத்பத்தி விநாசங்களில்லையென்று சொல்லுகையாலே ஸங்கர்ஷணனுண்டாகிறானென்றுசொன்னது ஜீவோத்பத்தியைச் சொன்னதன்று. பரமபுருஷனுடைய அவதாரவிசேஷத்தைச் சொன்னது ஆகையால் இதில் வேதவிருத்தார்த்தமொன்றும் கிடையாது, இதுவேதம்போல் ப்ரமாணதமமென்று ஸித்தாந்தம். உகசு.

இரண்டாம் அத்தியாயத்தில் இரண்டாம்பாதம்

ஸம்பூர்ணம்.

---

## உ-வது அத்யாயம் ௩-வது பாதம்.

கயி-டுச, ஸூ - உகஎ. நவியதஶ்ருதெ:.

(ஸ-ரா-வ்யா.) வியத் - ஆகாசம், ந - உண்டாகிறதில்லை. (நித்யம்) அஶ்ருதெ: - (அஸம்பாவிதமான அர்த்தத்துக்கு) ஶ்ரவணம் கூடாதாகை யாலே, (ஶ்ருதியிற்சொன்ன ஆகாசோத்பத்தி கௌணம்.) உகஎ.

(ஸ-ஹா.) பரமதங்களில் பூர்வாபர விரோத முண்டாகையால் அம்மதங்கள் சரியன்றென்று சொல்லப்பட்டது. இனி; உபநிஷத்துக்களிலும் பூர்வோத்தர விரோத முண்டாகையால் அம்மதமும் சரியன்று என்று சங்கித்துப் பரிஹாரம் செய்கிறார்.

சாந்தோக்யத்தில் ஸ்ருஷ்டிக்ரமம் சொல்லும்போது முதல் தேஜஸ்ஸு உண் டாயிற்று, பிறகு ஜலம், பின்பு ப்ருதிவி உண்டாயிற்றென்று சொல்லியிருக்கிறது. ஆகாசமுண்டானதாகச் சொல்லவில்லை. ஆகையால் ஆகாசமும் ப்ரஹ்மத்தைப் போல் நித்யமாயிருக்கிறதென்று ஒப்புக்கொள்ளவேணும். இப்படியாகில் ப்ரஹ்மத் தைக்காட்டிலும் வேருகிய ஆகாசமொன்றுண்டாகையால், ப்ரஹ்மமொன்றே, மற் ெறாருவஸ்து வில்லையென்கிற அத்வைதமதம் சரியன்று என்று பூர்வபக்ஷம். உகஎ.

(ரா-ஹா.) இந்தபாதத்திலும் மேல்பாதத்திலும் வேதாந்த வாக்கியங்களுக் குப் பரஸ்பரம் விரோதமில்லை யென்று ஸமர்த்திக்கிருர் — கீழ்ஜீவனுக்கு உத்பத்தி யில்லை யென்று சொல்லிற்று; ஜீவனைப்போலவே ஆகாசமும் நிரவயவமாகையா லும், லோகத்தில் ஸாவயவமான பதார்த்தங்களுக்கே உத்பத்திகாண்கிறே மாகை யாலும் ஆகாசத்திற்கும் உத்பத்தி கூடாது "ஆகாஶஸ்ஸம்பூத:" என்கிற வேதவாக்யம், ஆகாசத்திற்கு இல்லாத உத்பத்தியைச் சொல்லமாட்டாதாகை யால், ஜீவனுண்டாகிருனென்று சொல்வதுபோல் ஆகாசமுண்டாகிற தென்பதும் கௌணமாகவே அங்கீகரிக்கப்படும். அதாவது—ஸூக்ஷ்மமாயிருந்த ஆகாசம் ஸ்த்தூ லாவஸ்த்தையை யடைந்த தென்றதற் கர்த்தம் என்று பூர்வபக்ஷம். உகஎ.

ஸூ - உகஅ. அஸ்தி து.

(ஸ-ரா-வ்யா.) அஸ்தி து - (ஆகாசத்திற்கும் உத்பத்தி) உண்டு. உகஅ.

(ஸ-ஹா.) சாந்தோக்யத்தில் சொல்லாவிடினும் "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத:" என்று தைத்திரீயத்தில் ஆகாசோத்பத்தி சொல்லியிருக்கையால் அத்வைத மதம் சரியென்று ஸமாதானம். உகஅ.

(ரா-ஹா.) அதீந்திரியமான அர்த்தங்களைப்ப்ரதிபாதிக்கிற வேதத்தில் ஆகா சோத்பத்தி சொல்லியிருக்கையாலே ஆகாசமுண்டாகிறதென்றங்கீகரிக்கவேணும். ப்ரபலப்ரமாணமான வேதத்திற்சொல்லிய அர்த்தத்திற்கு விருத்தமாக, நிரவயவமா கையால் ஆகாசத்திற்குத்பத்தி கூடாதென்கிறயுக்திப்ரவர்த்தியாது. ஆத்மாவுக்கும் உத்பத்தி யில்லையென்றங்கீகரிப்பது வேதத்திற் சொல்லுகையாலே. யுக்தியினு லன்று என்று ஸித்தாந்தம். உகஅ.

ஸூ—உ௨௯. கௌண்யஸம்பவாச்சப்தாச்ச.

(ஸ-ரா-வ்யா.) அஸம்பவாத் - (தேஜஸ்ஸு உண்டானதின் பிறகு ஆகாசோத்பத்தி) கூடாமையாலேயும், ஶப்தாச்ச - (ஆகாசத்துக்கு நாச

மில்லையென்று சொல்லுகிற) வசனத்திலேயேயும், மளணீ - (வேதத்திற் சொல்லிய ஆகாசோத்பத்தி) கௌணமேயாகவேணும். உகக.

(ஸ - ஹா.) ஆகிலும், ஓரிடத்தில், ப்ரஹ்மம் ஆகாசம் முதலாக ஸ்ருஷ்டித்த தென்றும், மற்றோரிடத்தில் தேஜஸ்ஸு முதலாக ஸ்ருஷ்டித்ததென்றும் சொல்லியிருக்கையால், ஆகாசமுண்டான பிறகு வாயு, அதன்பிறகு தேஜஸ்ஸு உண்டாயிற்று என்கிற தைத்திரீயத்துக்கும், தேஜஸ்ஸே முதலி லுண்டாயிற்றென்கிற சாந்தோக்யத்துக்கும் சேர்த்தியில்லாமையால் அம்மதம் சரியன்று, மேலும் கடகத்துக்கு ஸுவர்ணம்போலவும், வஸ்திரத்துக்கு நூல்போலவும், கலசத்துக்கு மண்போலவும், ஆகாசத்திற்கு மற்றோருபாதாநகாரண மில்லாமையால் அதற்கு உற்பத்தி சொல்லமுடியாது. ஆகையால் "இவ்விடத்தில் முன் சிலவஸ்துக்கள் வைத்திருந்து ஆகாசமில்லாமலிருந்தது, இப்போது அவைகளை எடுத்துவிட்டபடியால் ஆகாசமுண்டாயிற்று" என்ற லோகவ்யவஹாரம்போலவே ஆகாச முண்டாயிற்றென்பதை முக்யமாகக்கொள்ளக்கூடாது. கௌணமாகக் கொள்ளவேணும் இப்போது உபநிஷத்துக்களுக்கு விரோதமில்லை. ஆகிலும் அத்வைதமதம் மாத்திரம் சரியன்று என்று பூர்வபக்ஷம்.

(ஸ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு "ஸவோ" என்பது வேறு ஸூத்ரம், "வாயுஶ்சாந்தரிக்ஷம் சைததம்ருதம்" என்கிற ஶ்ருதி ஆகாசம் நித்யமென்றே சொல்லுகிறது. மற்றோரிடத்தில் "ஆகாஶவத்ஸர்வகதஶ்ச நித்ய:" ப்ரஹ்மம் ஆகாசம்போல் ஸர்வவ்யாபியும் நித்யமுமாயிருக்குமென்று சொல்லுகிறது. இதனாலும் ஆகாசம் உத்பத்தியற்றதென்று ஏற்படுகிறது. ஆகையால் இதனாலும் அத்வைதமதம் சரியன்று. உகக.

(ரா-ஹா.) சாந்தோக்யத்தில், ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும்போது முதலிலே தேஜஸ்ஸு உண்டாயிற்றென்று சொலிற்று. ஆகாசமுத்பந்நமானால் அதற்குமுன்னமே அதினுத்பத்தியைச் சொல்லவேணும். அப்படி சொல்லவில்லை தேஜஸ்ஸுக்கு ஆதிகாரணமாகிய ஆகாசம் அதற்கநந்தரம் உத்பந்நமாகிறதென்று சொல்லக்கூடாது. மேலும் "வாயுஶ்சாந்தரிக்ஷஞ்சைததம்ருதம்" என்று ஆகாசத்திற்கு நாசமில்லையென்றும் சொல்லியிருக்கிறது. எதுக்கு நாசமில்லையோ அதுக்கு உத்பத்தியுமில்லை; ஆகையால், ஆகாசமுண்டாகிறதென்று சொன்ன ஶ்ருதிக்கு ஸூக்ஷமமாயிருந்த ஆகாசம் ஸ்தூலாவஸ்தையை யடைகையாகிற கௌணமான உத்பத்தியையே சொல்லிற்றென் றங்கீகரிக்கவேணும் என்று பூர்வபக்ஷம். உகக.

ஸூ-உ௨௦. ஸ்யாச்சைகஸ்ய ப்ரஹ்மஶப்தவத்.

(ஸ-ரா-வ்.) ப்ரஹ்மஶப்தவத் - ப்ரஹ்ம சப்தத்திற்குப்போலே, ஏகஸ்ய - ஒரு ஸம்பூதசப்தத்திற்கே, ஸ்யாச்ச - (கௌணோத்பத்தியும் முக்யோத்பத்தியும்) அர்த்தமாகலாம். உ௨௦.

(ஸ-ரா-ஹா.) ஆனால் "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத:" என்ற வாக்யத்திலிருக்கிற ஸம்பூதசப்தத்தையே "வாயோரக்நி:" இத்யாதி மேல்வாக்யங்களில் வைத்துக்கொள்ள வேண்டுகையாலே, அந்த ஒருஸம்பூதபதத்திற்கே ஓரிடத்தில் கௌணோத்பத்தியும், "வாயோரக்நி:" இத்யாதி மற்ற இடங்களில் முக்யோத்பத்தியும் அர்த்தமாகக்கூடாதேயென்னில், "தபஸா சீயதே ப்ரஹ்ம ததோऽந்நமபிஜாயதே" என்கிறவிடத்தில் ப்ரஹ்மசப்தத்திற்கு மூலப்ரக்ருதியர்த்தமும், அதே

ப்ரகரணத்திலுள்ள "தவஸாவீயஜதவ்ஸ" என்கிற வாக்கியத்திலுள்ள ப்ரஹ்மசப்தத்திற்குப் பரமாத்மா அர்த்தமுமாய், இப்படி ஒருப்ரகரணத்திலுள்ள ஒருசப்தத்திற்கு இரண்டர்த்தமானாற்போலே இங்கும் ஒருஸம்பூத சப்தத்திற்கு இரண்டு விதமான உத்பத்தியு மர்த்தமாகலாமென்று பூர்வபக்ஷம். உஉ0.

ஸூ-உஉக. ப்ரதிஜ்ஞாஹாநிரவ்யதிரேகாத்.

(ஸூ-பா-வ்ய.) அவ்யதிரேகாத் - (ஆகாசம் ப்ரஹ்மத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களைக் காட்டிலும்) அதிரிக்த மாகாமையினாலே, ப்ரதிஜ்ஞாஹாநி: - (ப்ரஹ்மஸ்வரூபத்தை யறிந்தால் ஸர்வமும் அறிந்ததாகுமென்கிற) ப்ரதிஜ்ஞைக்கு ஹாநிவராது. உஉக.

(பா-ஹா.) அந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார். "யேநாஸ்ருதம்" என்று தொடங்கி பரப்ரஹ்மத்தை யறிந்தால் மற்ற ஸகலபதார்த்தங்களும் அறியப்பட்டதாம் என்று முதலில் சொல்லிற்று. அதெப்படியென்றால் காரணமான ம்ருத்பிண்டத்தை யறிந்தால் அதின் கார்யமாகிய கடஸ்வரூபமும் அறியவருமாப்போலே, ஸகல ஜகத்துக்கும் ப்ரஹ்மம் காரணமாகையாலே அதையறிந்தால் ஸகலமும் அறிந்ததாமென்றர்த்தம். அதில், ஆகாசம் ப்ரஹ்மத்தினிடத்திலிருந்து உத்பந்நமாகாமற்போனால் இது ப்ரஹ்மகார்ய மல்லாமையாலே ப்ரஹ்மஜ்ஞாநத்தினால் ஆகாசஸ்வரூபம் அறியப்படமாட்டாது. அதினால் முன்சொன்ன ப்ரதிஜ்ஞை கெட்டுப்போகும். அது கெட்டுப்போகாமைக்காக ஆகாசமும் ப்ரஹ்மத்தினிடத்திலிருந்து உத்பந்நமாயிற்றென்று அங்கீகரிக்கவேணும் என்று ஸித்தாந்தம். உஉக.

ஸூ-உஉஉ. ஶப்தேப்ய:.

(ஸூ-பா-வ்ய.) ஶப்தேப்ய: - சப்தங்களினாலும் (ஆகாசோத்பத்தியங்கீகரிக்கவேணும்.) உஉஉ.

(ஸ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு "ப்ரதிஜ்ஞாஹாநிரவ்யதிரேகாச்சப்தேப்ய:" என்று ஒரே ஸூத்ரம். இதனால் கீழ் பூர்வபக்ஷத்துக்கு ஸமாதாநம் சொல்லுகிறார். "யேநாஸ்ருதம்ஸ்ருதம்" என்று தொடங்கி ப்ரஹ்மத்தை யறிந்தால் ஸகல பதார்த்தங்களு மறிந்ததாம். என்று சொல்லிற்று. அதாவது - காரணவஸ்துவை யறிந்தால் அதின் கார்யங்களையெல்லா மறியலாமென்றபடி, ஆகாசம் நித்யமாகில் அது ப்ரஹ்மத்தின் கார்ய மல்லாமையால் ப்ரஹ்மத்தை யறிந்தபோதிலும் ஆகாசமறிந்ததாகமாட்டாது—ஆகாசமென்பது ப்ரஹ்மம்போல் நித்யமாய் ஸர்வவ்யாபியாகையால் ப்ரஹ்மத்தோடு ஸஜாதீயமாய் ப்ரஹ்மத்துடன் கலந்தே எங்குமிருக்கையால் ப்ரஹ்மத்தை யறிந்தபோதே ஆகாசமுமறிந்ததாகலாம் எதுபோலவென்னில், பாலில் நீர்கலந்திருந்தால் அப்பாலையறிந்தபோதே அத்துடன்சேர்ந்த நீரு மறிந்ததாமாப்போலே, என்றுசொல்லக்கூடாது. மேலே உதாஹரணம் காண்பிக்குமிடங்களில், ம்ருத்து, கடம், ஸுவர்ணம், கடகம், என்று இம்மாதிரி உபாதாந காரணத்தையும் கார்யத்தையுமே காண்பித்திருக்கையால் ஆகாசமும் அம்மாதிரியான கார்யமென்றே ஒப்புக்கொள்ளவேணும். மேலும் "ஐததாத்ம்யமிதம் ஸர்வம்" என்கிற வாக்யங்களும் ஆகாசம் முதலிய ஸகலவஸ்துக்களும் ப்ரஹ்மஸ்வரூபமென்றே சொல்லுகிறது. ஆகையால், ஆகாசம் ப்ரஹ்மத்தில் நின்று முண்டாகிறதென்கிற வேதாந்திமதமே சரியானது. உஉக உஉஉ.

(ரா-ஹா.)ஸ்ருஷ்டிக்குமுன் ப்ரஹ்மம் ஒன்றேயிருந்ததென்றும், இவையெல்லாம் ப்ரஹ்மஸ்வரூபமேயென்றும் சொல்லுகையாலே முன் ஆகாச மில்லையென்றும் பிற்பாடு உண்டாயிற்றென்றும் ஸ்பஷ்டமாகத் தோற்றுகிறது. சாந்தோக்யத்தில் ஆகாசோத்பத்தி சொல்லாமல் தேஜஸ்ஸினுத்பத்தியை முதலில்சொல்லியிருந்தாலும் அது தைத்திரீயத்தில் ஆகாசோத்பத்தியைச் சொல்லுகிற வாக்கியத்திற்கு பாதகமாகாதென்று தாத்பர்யம். ௨௨

ஸூ-௨௩. யாவத்விகாரந்து விபாகோ லோகவத்.

(ம-ரா-வ்யா.) லோகவத் - லோகத்திற்போலே, யாவத்விகாரம் - ஆகாசம் முதலிய ஸகலவஸ்துக்களும் ஜந்யம், (என்று அங்கிகரிக்கையாலே) விபாக: - உத்பத்தி (சொல்லப்பட்டது). ௨௩.

(ம-ஹா.) லோகத்தில் விகாரத்தையடைந்த வஸ்துக்களே வளையென்றும், குண்டலமென்றும், கலசமென்றும், மடக்கென்றும், ஊசியென்றும், சாலென்றும் வேறுபட்டுக்காண்கிறது. விகாரமில்லாவிடில் ஸுவர்ணமென்றாவது மண்ணென்றாவது, இரும்பென்றாவது ஓரேவிதமாய்க் காணப்படுகிறது. அதுபோல் ஆகாசமும் ப்ருதிவி ஜலம் தேஜஸ்ஸுக்களைக் காட்டிலும் வேறுபட்டுக் காண்கையால் இதுவும் ப்ரஹ்மத்தின்விகாரமாயே யாகவேணும். ஆகையால் ஆகாசத்துக்கு உத்பத்தியங்கிகரிக்கவேணும். ௨௩.

(ரா-ஹா.) லோகத்தில், இவர்கள் நால்வரும் தேவதத்தனுடைய புத்திரர்கள் என்று சொல்லி அதில் இருவருடைய பிறப்பின் வகையைச்சொல்லி மற்றிருவர்க்கும் சொல்லாமற்போனாலும் அவ்விருவரும் தேவதத்தனுக்குப் புத்திரரன்றென்று தோற்றமாட்டார்கள்; அதுபோலவே ".ஐததாத்ம்யம்" என்று இதெல்லாம் பரமாத்மகார்யமென்று சொல்லுகையாலே ஆகாசத்திற்குப்பிரித்து உத்பத்தி சொல்லாமற்போனாலும் பரமாத்மாவினிடத்திலிருந்து உண்டாயிற்றென்று ஸித்திப்பதில் தடையில்லை. ௨௩.

ஸூ - ௨௪. ஏதேந மாதரிஶ்வா வ்யாக்யாத:.

(ம - ரா - வ்யா.) ஏதேந - இந்தயுக்தியினாலேயே, மாதரிஶ்வா - (விநாசமில்லாதவனென்று சொல்லப்பட்ட) வாயுவும், வ்யாக்யாத:(பரமாத்மாவினிடத்திலிருந்துண்டானானென்று) வ்யாக்யானம் செய்யப்பட்டான்.

ஸூ-௨௫. அஸம்பவஸ்து ஸதோ(அ)நுபபத்தே:.

(ம-வ்யா.) அநுபபத்தே: - உபபத்தியில்லாமையாலே, ஸத: - ப்ரஹ்மத்துக்கு, அஸம்பவ: - உத்பத்திஸம்பவியாது. ௨௫.

(ரா-வ்யா-ஹா.) ஸத: - பரமாத்மாவுக்கே, அஸம்பவ:-உத்பத்யபாவம் (உத்பத்தியில்லையென்று சொல்லப்பட்டது) அநுபபத்தே: - (பரமாத்மஜ்ஞானத்தினால் ஸகலவஸ்துவிஷயக ஜ்ஞானம் உண்டாகிறதென்பது, இவை பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பந்நங்களாகாமற்போனால்) சேராதாகையாலே, (இவை பரமாத்மகார்யங்களென்றே சொல்லப்பட்டன.) ௨௫.

(ம-ஹா.) வாயு முதலிய வஸ்துக்கள் விகாரியான ஆகாசாதிகளில் நின்றுமே உண்டானதாகக் காண்கிறது. அதுபோல் ஆகாசமும் விகாரியான ப்ரஹ்மத்தில் நின்றுமே உண்டாயிற்றென்று கொள்ளவேண்டுகையால், ப்ரஹ்மமும் விகாரியெ

ன்று கொள்ளவேண்டிவரும் என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார். ஸன்மாத்ரஸ்வரூபியாகிய ப்ரஹ்மத்துக்கு உத்பத்தி சொல்லும்போது அதற்குக்காரணமாகிய வஸ்துவும் ஸன்மாத்ரஸ்வரூபியாகில் அந்த காரணவஸ்துவுக்கும் இந்த ப்ரஹ்மத்துக்கும் ஒரு விசேஷமுமில்லாமையால் அந்த வஸ்து காரணமாகமாட்டாது. லோகத்தில் ஓராகாரமில்லாமல் பிண்டமாயிருக்கிற மண் ஸுவர்ணம் முதலியவற்றில் நின்றும் பானை குண்டலம் முதலியவை வாயும் வயிறும் உருட்சி நீட்சி முதலிய ஆகாரங்களையுடையதாய் உண்டாகையாலே காரணத்தைக்காட்டிலும் கார்யத்தில் சில விசேஷங்கள் ஒப்புக்கொள்ளவேணும். இந்த ப்ரஹ்மம் நிர்விசேஷமாகையால் இது ஒன்றில்நின்று முண்டாயிற்றென்று சொல்லமுடியாது. மேலும், இப்படியே, இந்த ப்ரஹ்மத்திற்குக் காரணமாகிய வஸ்துவுக்கும் மற்றொன்று காரணமொப்புக்கொள்ளவேணும். அதுக்கு மப்படியே. இம்மாதிரி அநவஸ்தைவரும். மேலும், ஆகாசத்துக்குச் சில விடங்களில் உத்பத்தி சொல்லியிருக்கிறது. ப்ரஹ்மத்திற்கு அப்படி சொல்லவில்லை. எல்லாவிடங்களிலும் ப்ரஹ்மம் நித்யமென்றே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ப்ரஹ்மத்திற்கு உத்பத்தி சொல்வது உபபந்நமன்று. ௨௨௯.

௩யி-ருரு, ஸூ-௨௨௬. தேஜோऽதஸ்ததா ஹ்யாஹ.

(ஸூ-ரா-வ்யா.) அத: - இந்த வாயுவினிடத்தில் நின்றும், தேஜ: - தேஜஸ்ஸு (உண்டாயிற்று.) ததாஹி - அப்படியே, ஆஹ-சொல்லிற்று.

(ஸு-ஹா.) உபநிஷத்துக்களில் சில விடங்களில் "ததைக்ஷத ... " என்று எல்லாப்பதார்த்தங்களையும் ப்ரஹ்மமே படைத்ததாகச் சொல்லுகிறது. சில விடங்களில், "ஆகாசாத் வாயு: । வாயோரக்நி:" இத்யாதியினால் ஆகாசத்தில் நின்றும் வாயுவும், அதில் நின்றும் தேஜஸ்ஸு முண்டானதாகச் சொல்லுகிறது. இப்படி யொன்றுக்கொன்று விருத்தமாயிருக்கிற வேதவாக்யங்களில் எதை உண்மையாக நம்பவேண்டியதென்னில்; ஆகாசத்தில் நின்றும் வாயு அதில் நின்றும் தேஜஸ்ஸு இம்மாதிரியாக ஒரு பூதத்தில் நின்றும் மற்றொரு பூத முண்டாகிறதென்பதையே உண்மையாக நம்பவேண்டியது. தகப்பனிடத்திலிருந்து பிள்ளை, அவனிடத்திலிருந்து அவன் பிள்ளை இம்மாதிரி ஸந்ததியுண்டானபோதிலும், இந்த ஸந்ததியெல்லாம் அந்த மூலபுருஷனிடத்தில் நின்று முண்டாயிற்றென்று சொல்லுவதுபோல், ஸகலவஸ்துக்களுக்கும் ஸாக்ஷாத்தாகவாவது பரம்பரையாகவாவது ப்ரஹ்மமே மூலகாரணமாகையால் ஜகத்துக்கெல்லாம் ப்ரஹ்மமே காரணமென்கிற ஶ்ருதிவாக்யத்திற்கும் விரோதமில்லை. என்று ஸித்தாந்தம். ௨௨௬.

(ரா-ஹா.) இவ்வதிகரணத்தில் தேஜஸ்ஸு முதலிய பதார்த்தங்களுக்கும் பரமாத்மாவே காரணமென்கிறார். "வாயோரக்நி:"என்றுவாயுவினிடத்திலிருந்து அக்நி உண்டாயிற்றென்று வேதத்தில் சொல்லுகையாலே அக்நிக்கு வாயுவேகாரணம்; பரமாத்மாவன்று "தத்தேஜோऽஸ்ருஜத"என்கிறவாக்யத்தில் பரமாத்மாவை இதற்குக்காரணமாகச் சொல்லியிருந்தாலும் தேஜஸ்ஸுக்குக் காரணமாகிய வாயுவுக்குக் காரணமாகிய ஆகாசத்திற்குக் காரணமாகையால் பரம்பரயா காரணமென்றபிப்ராயத்தினால் பரமாத்மாவைக் காரணமாகச் சொல்லிற்று என்று பூர்வபக்ஷம். ௨௨௬.

ஸூ-௨௨௭. ஆப:

(ஸூ-ரா-வ்யா.) ஆப: - ஜலம், (அத: - இந்ததேஜஸ்ஸில் நின்றுமுண்டாயிற்று.) ததாஹி - அப்படியே, ஆஹ - சொல்லிற்றுவேதம்.) ௨௨௭.

(ஸ-ஹா.) ஜலமும் தேஜஸ்ஸில்நின்றுமே யுண்டாகிறது, ப்ரஹ்மத்தினிடத்தில் நின்றும் ஸாக்ஷாத் உண்டாகிறதில்லை. "அக்னேராப:"என்கிற வாக்யமும் இவ்வர்த்தத்தையே சொல்லுகிறது. என்று ஸித்தாந்தம். ௨௨௭.

(பூ-ஹா.) அப்படியே "அக்னேராப:" என்று அக்நியினிடத்தில் நின்றும் ஜலம் உண்டாயிற்றென்று சொல்லுகையாலே ஜலத்திற்குக் காரணம் தேஜஸ்ஸேயாகிறது. பரமாத்மாவாகிறதில்லை. என்று பூர்வபக்ஷம். ௨௨௭.

ஸூ-௨௨௮. ப்ருதிவீ.

(ஸ-பூ-வ்யா.) ப்ருதிவீ-பூமி, (அத்ப: இந்தஜலத்தில் நின்றும் உண்டாயிற்று) ததாஹ்யாஹ - அப்படியே வேதம்சொல்லிற்று.) ௨௨௮.

(பூ-ஹா.) "தா அந்நமஸ்ருஜந்த" அந்தஜலம், அந்ந மென்று சொல்லப்பட்ட ப்ருதிவியைஸ்ருஷ்டித்ததென்று சொல்லுகையாலே ப்ருதிவிக்கு ஜலமேகாரணம்; பரமாத்மா காரணமன்று என்று பூர்வபக்ஷம். ௨௨௮.

ஸூ-௨௨௯. அதிகாரரூபசப்தாந்தரேப்ய:.

(ஸ-பூ-வ்யா) அதிகாரரூபசப்தாந்தரேப்ய: - ப்ரகரணத்தினுலும், (மேற்சொல்லுகிற) வர்ணத்தினுலும், (ஸமாநப்ரகரணஸ்த்த) சப்தத்தினுலும், (அந்நசப்தத்திற்கு ப்ருதிவி அர்த்தமென்று நிஸ்சயிக்கப்படுகிறது.

(ஸ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு "ப்ருதிவ்யதிகாரரூபசப்தாந்தரேப்ய:" என்று ஒரேஸூத்ரம் "தா அந்நமஸ்ருஜந்த" அந்த ஜலம் அந்நத்தை ஸ்ருஷ்டித்தது என்கிற வாக்யத்தில் அந்நமென்றுசொல்லப்பட்டது தான்யமா, அல்லது ப்ருதிவியாவென்று ஸம்சய முண்டாகும். அதற்குப்பூர்வபக்ஷி சொல்லுகிறுன்—அந்நமென்று லோகத்தில் நெல் முதலிய தாந்யங்களிலேயே வழங்கிவருகிறது. மழையினுல் தாந்யம் விளைகையால், ஜலம் அந்நத்தை ஸ்ருஷ்டித்ததென்று சொல்லப்படுகிறது என்றுன். இது ஆகாசம் வாயு முதலிய பூதங்களின் நாலாவது பூதமாகிய ஜலத்திற்குப்பின் ஐந்தாவதான ப்ருதிவியைச்சொல்லவேண்டியிருக்க அதைவிட்டு தாந்யத்தைச்சொல்வது ப்ரகரணத்திற்குச் சேராதாகையாலும், இந்த அந்நம் க்ருஷ்ணவர்ணமென்று சொல்லுகையாலும், அந்த வர்ணம் ப்ராயிகமாக ப்ருதிவிக்கேயுள்ள தாகையாலும், "அத்ப்ய: ப்ருதிவீ" என்ற வாக்யம் ஜலத்தில் நின்றும் ப்ருதிவியுண்டாயிற்றென்று ஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலும். இங்கு ப்ருதிவிதான் அந்நமென்று சொல்லப்பட்டது என்று ஸித்தாந்தம். ௨௨௮. ௨௨௯.

(பூ-ஹா.) அந்ந மென்றுல் ப்ருதிவிக்கு எப்படி பேராகு மென்னில், பஞ்சபூதங்களைச்சொல்லுகிற இந்தப்ரகரணத்தில் மற்றவைகளைச் சொல்லிப்ருதிவியைச் சொல்லவேண்டிய இடத்தில் அந்நமென்று சொல்லிற்று. மேல்வாக்யத்தில், ப்ருதிவிக்குண்டானக்ருஷ்ண வர்ணத்தை "யத்க்ருஷ்ணம் தத் அந்நஸ்ய" என்று அந்நத்திற்குச் சொல்லிற்று. இத்தோடு ஸமாநமான மற்றெரு ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் "அத்ப்ய: ப்ருதிவீ" என்று ஜலத்தில்நின்று ப்ருதிவி உண்டாயிற்றென்று ஸ்பஷ்டமாகச்சொல்லிற்று. ஆக இந்தஹேதுக்களைக் கொண்டு இங்குள்ள அந்நசப்தத்திற்குப்ருதிவியே அர்த்தமென்று நிஸ்சயிக்கப்படும். என்று பூர்வபக்ஷம். ௨௨௯.

ஸூ-உ௩௦. தத³பி⁴த்⁴யாநாதே³வ து தல்லிங்கா³த் ஸ꞉.

(ஶ்ரு-பா-வ்ரு.) தல்லிங்கா³த் - அவற்றின்ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாய், தத³பி⁴த்⁴யாநாத் . பரமாத்மாவினுடைய ஸங்கல்பத்தைச் சொல்லுகையாலே, ஸ꞉ஏவ - அந்தபரமாத்மாவே. (அவற்றுக்குக்காரணம்) (பா) து-என்கிறது கீழ்ச்சொன்ன பூர்வபக்ஷத்தைக் காட்டிலும் வேறான ஸித்தாந்த ரூபார்த்தத்தைச் சொல்லுகிறதென்கைக்காக. உ௩௦.

(ஶ்ரு-ஹா.) ஆகாசம்முதலிய பூதங்கள், தனக்குப் பின்புள்ள வாயுமுதலிய பூதங்களைத் தாங்களே ஸ்ருஷ்டிக்கின்றனவா, அல்லது அவற்றில் பரமாத்மா அந்தர்யாமியாயிருந்து இவற்றை ஸ்ருஷ்டிக்கிறானென்று உதித்த ஸம்சயத்துக்குப் பூர்வபக்ஷி, "ஆகாஶாத்³வாயு꞉ - வாயோரக்³நி꞉" என்று ஒருபூதத்தில் நின்றும், மற்றொருபூதமுண்டானதாகச் சொல்லுகையாலே, பின்புள்ள வாயுமுதலிய பூதங்களை முன்புள்ளஆகாசம்முதலிய பூதங்களே ஸ்ருஷ்டிக்கிறனவென்றான். "ய꞉ப்ருதி²வ்யாம் திஷ்ட²ந்" என்றுதுடங்கி ப்ருஹதாரண்யத்திலும் மற்றும் அனேகஉபநிஷத்துக்களிலும் ப்ருதிவீமுதலிய ஸமஸ்தவஸ்துக்களும் ஸர்வேஶ்வரனுக்குச்சரீரமாக இருக்கிறதென்கையாலும், "தாஆப ஐக்ஷந்த" இத்யாதி வாக்யங்கள் ஜலம் முதலிய பூதங்கள் ப்ருதிவிமுதலியபூதங்களை ஸ்ருஷ்டிப்பதாக ஸங்கல்பித்துக்கொண்டுஅவற்றைஸ்ருஷ்டித்ததாகச் சொல்லுகையாலும் இப்படிஸங்கல்பிக்கை அசேதநமாகிய ஆகாசாதிபூதங்களுக்குக் கூடாமையாலும், ஸர்வேஶ்வரனே ஆகாசாதிகளைச் சரீரமாகக்கொண்டு அந்தந்த பூதஸ்வரூபமாயிருந்து ஸ்ருஷ்டிக்கிறானென்பதுஸித்தாந்தம். உ௩௦.

(ரா-ஹா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்.—"தத்தேஜ ஐக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய"என்று அந்ததேஜஸ்ஸு ஸங்கல்பித்தது, அநந்தரம் ஜலத்தைஸ்ருஷ்டித்தது என்று சொல்லுகையாலே அசேதநமான தேஜஸ்ஸுக்கு சேதநதர்மமான ஸங்கல்பம் கூடாமையாலே அப்படி ஸங்கல்பித்தவன் தேஜஸ்ஸை சரீரமாக உடையபரமாத்மா,அவனே தேஜꞮபதத்தினால் சொல்லப்பட்டவன்;ஆகையால்வெறும்தேஜஸ்ஸு ஜலத்திற்குக் காரணமாகச்சொல்லவில்லை, அதைச்சரீரமாக உடைய பரமாத்மாவே காரணமாகச் சொல்லப்பட்டானாகையால் அவனே ஜலாதிகளுக்குக்காரணமென்று ஸித்தாந்தம். உ௩௦.

ஸூ-உ௩௧. விபர்யயேண து க்ரமோ(அ)த உபபத்³யதே ச.

(ஶ்ரு.வ்ரு.) அத꞉ - இந்த ஸ்ருஷ்டிக்ரமத்தைக் காட்டிலும், விபர்யயேண - விபரீதமாக, க்ரம꞉ - ப்ரளயக்ரமமானது, (இருக்கிறது). உபபத்³யதே ச - (இதுவே) உபபந்நமாயிருக்கிறது. உ௩௧.

(ரா.வ்ரு.) அத꞉ - பரமாத்மாவினிடத்தில் நின்றும் ஜலாதிகளுண்டாகையினாலேயே, விபர்யயேண - (இங்குச்சொன்ன க்ரமத்தைக்காட்டிலும்) வேறுவிதமாகச்சொல்லப்பட்ட, க்ரம꞉ - (ஸ்ருஷ்டி) க்ரமம், உபபத்³யதே - உபபந்நமாகிறது. உ௩௧.

(ஶ்ரு-ஹா.) இதுவரையில் ஸ்ருஷ்டிக்ரமம் சொல்லியாயிற்று. இனி ப்ரளயக்ரமம் சொல்லப்படுகிறது. ஆகாசத்தில் நின்றும் வாயு,வாயுவில் நின்றும், அக்நி,அக்நி

யில்நின்றும் ஜலம்,ஜலத்தில்நின்றும் ப்ருதிவி உண்டாகிறதென்று ஸ்ருஷ்டிக்ரமம். லயிக்கும்போது முதல் வாயு ஆகாசத்தில் லயித்து பின்பு வாயுவில் தேஜஸ்ஸு லயித்து அதன்பின்பு தேஜஸ்ஸில் ஜலம் இம்மாதிரியாக பூதங்கள் தன் தன் காரணத்தில் லயிக்கிறதா, அல்லது ப்ருதிவி ஜலத்தில் லயித்து, பின்பு அது தேஜஸ்ஸில் லயித்து அதன்பின்பு அது வாயுவில்லயித்து இம்மாதிரி லயிக்கிறதா, அல்லது இவ்விரண்டுவிதமுமின்றிக்கே இப்படி அப்படி என்கிற நியமமுமின்றிக்கே இஷ்டமானபடி லயிக்கிறதாவென்னில், லோகத்தில், ஒருவன், மேலே யேறும்போது கீழ்ப்படியிலிருந்து மேல்படி வரைக்குமேறி உயரப்போகிறான், இறங்கும்போது கடைசியாக ஏறின மேல்படியிலிருந்து க்ரமக்ரமமாகக் கீழ்ப்படியளவும் இழிந்து வருகிறான். அதுபோலவே, ஆகாசம் முதல் ப்ருதிவி யாளவாக உண்டான வஸ்துக்கள் லயிக்கும்போது,ப்ருதிவி ஜலத்தில்,அது தேஜஸ்ஸில் இம்மாதிரி தலைகீழாகவே லயிக்கிறது. மேலும், குண்டல மிருக்கும்போது ஸுவர்ணம் நசிக்கிறதில்லை யாகையால் கார்யமழிந்தபிறகே காரணமழிகிறதென்று சொல்லவேண்டுகையாலும் இந்த லயக்ரமமே சரியானது. ௨௩௧.

(ரா-ஹா.) ஸமஸ்தவஸ்துக்களுக்கும் பரமாத்மாவே காரணமென்று ஒப்புக்கொள்ளுகையில், ஆகாசத்தில் நின்றும் வாயு அதில்நின்றும் அக்நி அதில்நின்றும் ஜலம் அதில் நின்றும் ப்ருதிவி உண்டாயிற்றென்று சொன்ன ஸ்ருஷ்டிக்ரமத்திற்கு விபரீதமாக "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மநஸ்ஸர்வேந்த்ரியாணி ச கம் வாயு:" இத்யாதிவாக்யத்தில் பரமாத்மாவினிடத்திலிருந்தே ப்ராணன் மநஸ்ஸு இந்திரியம் ஆகாசம் வாயு அக்நி முதலியவை உண்டாயிற்றென்று சொன்னதும் உபபந்நமாகிறது. ஆகையால் பரமாத்மாவே இவற்றுக்குக் காரணம். ௨௩௧.

ஸூ-௨௩௨. அந்தரா விஜ்ஞாந மநஸீ க்ரமேண தல்லிங்காதிதி சேந்நாவிஶேஷாத்.

(ஶ-வ்ரு.) தல்லிங்காத் - ஸ்ருஷ்டிவாக்யரூபமான ஹேதுவினால், அந்தரா - ஆத்மாவுக்கும் ஆகாசத்திற்கும் நடுவே, விஜ்ஞாநமநஸீ :- ஜ்ஞாநம் மநஸ்ஸு (முதலிய கரணங்கள் உண்டாகின்றனஎன்று நிஸ்சயிக்கப்படுகிறதாகையால்), க்ரமேண - (முன்சொன்ன) ஸ்ருஷ்டிக்ரமத்தோடு, (வேறுபட்டிருக்கிறது). இதி சேத் - என்றால், அவிஶேஷாத் - (பூதோத்பத்திக்ரமத்தைக்காட்டில் இந்த்ரியோத்பத்தி க்ரமத்துக்கு) விசேஷமில்லாமையால், ந-விரோதமில்லை. ௨௩௨.

(ரா-வ்ரு.) தல்லிங்காத் - இந்தக்ரமமாக லயம் தோற்றுகையாகிற ஹேதுவினாலே, அந்தரா - தந்மாத்ரைகளுக்கும் ஆகாசத்திற்கும் நடுவில், க்ரமேண - க்ரமமாக, விஜ்ஞாநமநஸீ - இந்த்ரியங்களும் மநஸ்ஸும், (உண்டாகிறதென்று இவ்வாக்யத்திற்கு அர்த்தம்). இதி சேத்-என்றால், அவிஶேஷாத் - (ப்ராணஶப்தத்திற்கும் ஆகாசவாசக சப்தத்திற்கும், தத்தச்சரீரகனை பரமாத்மாவே அர்த்தமென்று சொல்லவேண்டுகையாலே, "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராண:" என்பதற்கும் "ஏதஸ்மாஜ்ஜாயதே கம்" என்பதற்கும் விசேஷமில்லாமையாலே, ந - அப்படி சொல்லக்கூடாது. இவ்வாக்யம் ஸாக்ஷாத் பரமாத்மகாரண பரமென்றே ஸ்வீகரிக்கவேணும். ௨௩௨.

(ஶ்ரு-ஹா) தைத்திரீயத்தில் "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத:" என்று தொடங்கி, ஆத்மாவில் நின்று மாகாசம், அதில் நின்றும் வாயு இம்மாதிரி உத்பத்தி க்ரமம் சொல்லப்பட்டது. அதர்வணோபநிஷத்தில் "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந ஸர்வேந்த்ரியாணிச, கம் வாயுர்ஜ்யோதிராபஃ ப்ருதிவீ" என்று ஆத்மாவில் நின்றும் ஆகாசமுண்டாவதற்கு முன்னமே இந்த்ரியோத்பத்தி சொல்லியிருக்கிறது; இப்படி ஒன்றுக்கொன்று விருத்தங்களாயிருக்கிற இவ்விரண்டு ஶ்ருதிகளில் எதை நம்பவேணுமென்னில்; இந்த்ரியங்களெல்லாம் பஞ்சபூதங்களிலுண்டான தாகையால், முதல் ஆத்மாவில் நின்றும் ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களுண்டாய், அதன்பின் அந்த பஞ்சபூதங்களினால் இந்த்ரியங்களுண்டாயிற்றென்று கொள்வதே யுக்தமாகையால், தைத்திரீயத்தில்சொன்ன க்ரமமேசரி.மற்றோருபநிஷத்தில் ஆத்மாவினிடத்தில் நின்றும் இந்த்ரியங்களும் பூதங்களுமுண்டாயிற்றென்று மொத்தமாகச் சொல்லிற்றல்லது உத்பத்தி க்ரமம் சொல்லவில்லை. உ௩உ.

(ரா-ஹா.) ப்ரளயக்ரமத்தில் ஆகாசம் இந்த்ரியங்களிலும் அவை தந்மாத்ரைகளிலும் லீநமாகிறதென்று சொல்லிற்று. லயக்ரமம்போலவே ஸ்ருஷ்டிக்ரமமாகையால் க்ரமமாக தன்மாத்ரைகளில் நின்றும் இந்த்ரியங்கள் அவற்றில் நின்றும் ஆகாசம் உண்டாயிற்றென் றங்கீகரிக்கவேணும். அந்த க்ரமத்தையே "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராண:" இத்யாதி வாக்யம் சொல்லுகிறது. எல்லாம் பரமாத்மாவினிடத்தி லிருந்துண்டாகிறதென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யமன்றென்று பூர்வபக்ஷம்—ஸ்ருஷ்டிக்ரமம் இவ்விதமாக ஒப்புக்கொண்டாலும் ஆகாசவாய்வாதி சப்தங்கள்போலே இந்த்ரியமந:ப்ராண சப்தங்களும் அவற்றைச்சரீரமாக உடைய பரமாத்மாவுக்கே வாசகங்களானமையால், அவ்வவைகளைச் சரீரமாக உடைய பரமாத்மாவினிடத்தில்நின்றும் அந்தந்த பதார்த்தங்க ளுண்டாயிற்றென்றே அங்கீகரிக்கவேணும்.ஆதலால் இவ்வாக்யம் ஸர்வவிதத்திற்கும் பரமாத்மா காரணமென்றதென்பதிற் குற்றயில்லையென்று ஸித்தாந்தம். உ௩உ.

ஸூ-உ௩௩. சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஶோ பாக்தஸ்தத்பாவபாவித்வாத்.

(ஶ்ரு-வ்யா.) தத்வ்யபதேஶ:- ஜந்மமரணமுள்ளதாகச் சொல்லுகை, சராசரவ்யபாஶ்ரய:- ஜங்கமஸ்த்தாவர விஷயமானதே, (முக்யம்). தத்பாவபாவித்வாத் - சரீரமுண்டாகும்போதே ஜீவனுண்டானென்கிற வ்யவஹாரமுண்டாகையாலே, பாக்த: - (ஜீவனிடத்தில் ஜநநமரண வ்யவஹாரம்) கௌணம். உ௩௩.

(ரா - வ்யா) தத்பாவபாவித்வாத் - (பரமாத்மா) அவைகளில் ஆத்மாவாக அநுப்ரவேசித்திருக்கையாலே, சராசரவ்யபாஶ்ரய: - ஜங்கமஸ்த்தாவரங்களை ஆஶ்ரயித்திருக்கிற (சொல்லுகிற) தத்வ்யபதேஶ: - தேஜஸ்ஸு வாயுமுதலியசப்தம், அபாக்த: - (பரமாத்மாவினிடத்தில்) முக்யமாக, ஸ்யாத் - ஆகும். உ௩௩.

(ஶ்ரு-ஹா.) பூதங்களினுடைய உத்பத்தி க்ரமம் சொன்னபின், "தேவதத்தன் பிறந்தான், இறந்தான்" என்று ஜீவாத்மவிஷயமாகவும் உத்பத்திவிநாச வ்யவஹாரம் காண்கையாலே இவனுக்கும் உத்பத்திவிநாசங்களுண்டோவென்னில்; மநுஷ்ய பசுபக்ஷி முதலிய ஜங்கமங்களும்,கொடிசெடி முதலிய ஸ்த்தாவரங்களுமே உண்டாகின்றன,நசிக்கின்றன;அவற்றைச் சரீரமாகவுடைய ஆத்மா நசிக்கிறதில்லை.ஆகிலும்

அவனுடைய சரீரம் போனமையால் அவன் போனுனென்று சொல்லுகிருர்கள். அது முக்யமான வ்யவஹாரமன்று. சரீரமுண்டாம்போது, "உண்டானுன்" என்றும் அது நசித்தபோது, "நசித்தான்" என்றும் சொல்லுகையால் அந்த வ்யவஹாரத்துக்கு இப்படியே உபபத்தி சொல்லவேணும். இல்லையாகில், ஆத்மாநித்யமென்கிற வசநங்களோடு விரோதம்வரும். உகரு.

(ஙா-ஹா.) லோகத்தில் தேஜஸ்ஸு வாயு முதலியவற்றுக்கு வாசகங்களாக ப்ரஸித்தமாயிருக்கிற சப்தங்கள் பரமாத்மாவுக்கு வாசகங்களாக எப்படியாகும் என்னில்,—ஸகல பதார்த்தங்களிலும் பரமாத்மா அந்தர்யாமியாய் ப்ரவேசித்து அவற்றுக்கு ஆத்மாவாக இருக்கிருன், அவனுக்கு இவையெல்லாம் சரீரமாயிருக்கிறது. சரீரத்தைச் சொல்லுகிற சப்தங்கள் அந்த சரீரத்தோடுகூடிய ஆத்மாவையே சொல்லு மாகையால் ஸகல சப்தங்களும், அவற்றுக்கர்த்தமாகிய வஸ்துக்களுக்கந்தர்யாமியாகிய பரமாத்மாவைச் சொல்லத்தட்டில்லை. உகரு.

கம-ருக. ஸூ-உகச. நாத்மாஶ்ருதேர்நித்யத்வாச்ச தாப்ய꞉.

(ஸ-ஙா-வ்ய.) ஶ்ருதே꞉ - ஜீவனுக்கு உத்பத்தியில்லையென்று சொல்லுகையாலும், தாப்ய꞉ - அந்த வேதவாக்யங்களின்லே, நித்யத்வாச்ச - நித்யத்வம் தோற்றுகையாலும், ஆத்மா - ஜீவன், ந - உண்டாகிறதில்லை.

(ஸ-ஙா-ஹா.) இதில் ஜீவாத்மாநித்யனென்று ஸ்தாபிக்கிருர்,—ஜீவாத்மாவுக்கு உத்பத்தி ஒப்புக்கொள்ளாமற்போனுல் அவ்வாத்மா ப்ரஹ்மஸ்ருஷ்டியிற் சேராமையாலே ப்ரஹ்மஜ்ஞாநத்தினுல் ஜீவாத்மஜ்ஞாநமுண்டாகாதாகையால் முன்சொன்ன ஏகவிஜ்ஞாநத்தினுல் ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞைக்கு பங்கம்வரும். மேலும் "ஸதாயேந ஜீவாநிஸஸர்ஜ" ஜலத்துடன்கூட ஜீவன்களை பூமியில்விட்டான் (ஸ்ருஷ்டித்தான்) என்றும், "ப்ரஜாபதி꞉ ப்ரஜா அஸ்ருஜத" ப்ரஹ்மா ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தானென்றும் சொல்லுகிறது. ஆகையால் ஜீவனுக்கும் உத்பத்தி ஒப்புக்கொள்ளவேணும். ஜீவன் நித்யனென்று சொல்லுகிற வாக்யங்களுக்கு பஹுகாலமிருக்கிருனென்று கௌணமாக அர்த்தம் சொல்லவேணும் என்று பூர்வபக்ஷம். "நஜாயதே ம்ரியதேவா விபஶ்சித்" என்று ஜீவனுக்குஉத்பத்தி விநாசங்களில்லையென்று சொல்லுகையாலும், ஜீவனை அநித்யனென்று ஒப்புக்கொண்டால் அவன் உண்டான உடனே அநுபவிக்கிற ஸுகதுக்கங்களுக்கு புண்யபாபரூப ஹேதுக்களில்லை யாகையால் காரணமில்லாமலே கார்யமுண்டாயிற்றென்ற தோஷமும், அவன் நசிக்கைக்கு முன்செய்த புண்யபாபங்களுக்கு பலமில்லாமற் போகையும், ஈஶ்வரன் காரணமில்லாமலே ஒருவனை அதிகமாகவும் மற்றொருவனைக்குறையவும் ஸ்ருஷ்டிக்கையாகிற அவனுக்கு வைஷம்யமும், துக்கரூபமான இந்த ஸம்ஸாரத்தில் ஸ்ருஷ்டிக்கையாகிற நிர்தயத்வமும் ஸம்பவிக்கையும் ஆக இந்த தோஷங்கள் வருகையாலும் இப்பக்ஷத்தைவிட்டு "நித்யோ நித்யாநாம்" என்று வேதத்திற் சொல்லியபடி ஜீவன்நித்யனென்றே அங்கீகரிக்கவேணும் என்றுஸித்தாந்தம். உகச.

கம-ருஎ. ஸூ-உகரு. ஜ்ஞோத ஏவ.

(ஸ-வ்ய.) அத꞉ஏவ - நித்யனுகையாலே (பரமாத்ம ஸ்வரூபியாகையாலே) ஜ்ஞ꞉ - (ஜீவன்) சித்ஸ்வரூபமானவன். உகரு.

(ஙா-வ்ய.) அத꞉ - இந்த வேதத்தினுலே, ஜ்ஞ꞉ஏவ - (ஜீவன்) ஜ்ஞாநாஶ்ரயனுயே ஆகிருன். உகரு.

(ஸ-ஹா.) இந்த ஜீவனுக்குச் சைதந்யம் எப்போது முள்ளதா, அல்லது சில காலங்களிலே யுள்ளதாவென்னில்; உறங்கும்போதும் மூர்ச்சையடைந்திருக்கும்

போதும் சைதந்யத்தைக் காணுமையாலும், தெளிந்தெழுந்தபின் அவனைக்கேட்டால், நான் இத்தனையில் ஒன்றும் அறியேன் என்று சொல்லுகையாலும், சைதந்யம் சிலகாலங்களிலேயே யுள்ளதென்று தார்க்கிகர் சொன்னார்கள். இந்த ஜீவனுக்கு உத்பத்தியில்லாமையாலே, பரப்ரஹ்மமே அநாதியாகிய அஜ்ஞாநத்தினால் இப்படி ஜீவனாயிருக்கிறானென்று ஜீவனை ப்ரஹ்மஸ்வரூபமாகச் சொல்லுகையாலும், அந்த ப்ரஹ்மம் "விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம" என்று ஸ்வயம் ப்ரகாசமாய் ஜ்ஞாநஸ்வரூபி யென்று சொல்லுகையாலும், ஜீவன் ஸ்வயம்ப்ரகாசமான சித்ஸ்வரூபியா யிருக்கிறான். உறங்கும்போது அறியவேண்டிய விஷயமொன்றும் எதிரிலில்லாமையால் ஜ்ஞாநம் உண்டாகிறதில்லை. ஸ்வஸ்வரூபஜ்ஞாநம் மாத்திரம் அப்போது முண்டென்று ஸித்தாந்தம். உ௩௫.

(ரா-ஸா.) ஜீவன் ஜ்ஞாநஸ்வரூபனு, அல்லது - ஜடஸ்வரூபனாய் காலவிசேஷங்களிலேயே ஜ்ஞாநத்தையுடையவனு, அல்லது-எப்போதும் ஜ்ஞாநத்தையுடையவனு என்று ஸம்சயம்.—"விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மா யஜ்ஞத்தைச்செய்கிறான் என்றும், "விஜ்ஞாநே திஷ்டந்" ஜ்ஞாநஸ்வரூபனான ஜீவாத்மாவில் பரமாத்மா இருக்கிறான் என்றும், இத்யாதி அநேகவசநங்கள் இருக்கையாலே ஜீவன் ஜ்ஞாநஸ்வரூபனாகலாம்; உறக்கத்திலும் மூர்ச்சையிலும் ஜ்ஞாநமில்லாமையாலும், "நப்ரேத்ய ஸம்ஜ்ஞாஸ்தி" என்று முக்தியில் ஜ்ஞாந மில்லையென்று சொல்லுகையாலும், ஜீவனானவன் ஜடஸ்வரூபனாய் சிலகால விசேஷங்களில் ஜ்ஞாநமுள்ளவனாகிறான் என்றும் சொல்லலாம்; எப்போதும் ஜ்ஞாநாச்ரயனென்பது கூடாது. என்று பூர்வபக்ஷம்.—"அதயோவேதேதம் ஜிக்ராணீதி ஸ ஆத்மா" எவன் வாஸனை மோருகிறேனென்கிறானே; அவனே ஜீவன் என்று ஸம்ஸாரதசையிலும், "ஸர்வம் ஹபச்ய: பச்யதி" என்று ஸர்வவிஷயகஜ்ஞாந முடையவனென்று முக்திதசையிலும் ஜீவனை ஜ்ஞாநமுள்ளவனாகச் சொல்லுகையாலே எப்போதும் ஜ்ஞாநமுடையவனேயாகிறான். உறக்கத்திலும் மூர்ச்சையிலும் ஜ்ஞாநம் இருந்தாலும் அப்போது ஸங்கோசத்தை யடைகிற தாகையால் ப்ரகாசிக்கவில்லை. அவ்வளவுமாத்திரத்தினால் ஜடஸ்வரூபனாய் சில காலங்களில் ஜ்ஞாநமுடையவன், மற்ற காலங்களில் ஜ்ஞாநமில்லாதவனென்று சொல்லக்கூடாது. ஜ்ஞாநத்தைப்போல் ஆத்மாவும் ஸ்வயம் ப்ரகாசமாகையாலும், ஜ்ஞாநம் ஜீவனுக்கு முக்யகுணமாகையாலும் ஜீவனைஜ்ஞாநஸ்வரூபனென்கிறது. அது கௌணம். முக்தியில்ஜ்ஞாந மில்லையென்றதுக்கு ஸம்ஸாரஜ்ஞாநமில்லையென்றர்த்தம். ஆகையால் முன்பக்ஷங்களைத்தவிர்த்து எப்போதும் ஜ்ஞாநமுடையவனென்றே அங்கீகரிக்கவேணுமென்று ஸித்தாந்தம். உ௩௫.

ஸூ—உ௩௬. உத்க்ராந்திகத்யாகதீநாம்.

(ஶ-ரா-வ்ரு.) உத்க்ராந்திகத்யாகதீநாம் - சரீரத்தைவிட்டுப் புறப்படுகை லோகாந்தரம் போகை அங்கிருந்து வருகை இவைகளை, ஜீவனுக்கு வேதம் சொல்லுகையாலே ஜீவன் விபுவன்று. உ௩௬.

(ஶ-ஸா.) ஜீவன் அணுஸ்வரூபியா, விபுஸ்வரூபியாவென்ற சங்கையில் அணுஸ்வரூபியென்று, இதுமுதல் பத்து ஸூத்ரங்களினால் பூர்வபக்ஷ யுக்தியைச்சொல்லி அதன்பின், ஜீவன் அணுஸ்வரூபியன்று, இவன் பரப்ரஹ்மமாகையால் விபுஸ்வரூபி யென்று ஸித்தாந்தம் செய்கிறார். ராமாநுஜபாஷ்யத்துக்கு ஜீவன் அணுவென்றுமதமாகையால், ஜீவன் அணுவென்பதற்குத்தக்க யுக்திகளைச்சொல்லுகிற இந் தஸூத்

ரங்கள் விஸ்தாந்த ஸூத்ரங்கள். இந்த பாஷ்யத்துக்கு இவை பூர்வபக்ஷ ஸூத்ரங்களாயிருக்கின்றன.—மரணகாலத்தில் ஜீவன் சரீரத்தைவிட்டுக் கிளம்பிப்போகிறானென்றும், ஸ்வர்க்க நரகாதிகளில்நின்றும் வருகிறானென்றும் சொல்லுகையாலே ஜீவன் விபுவாகில் அவனுக்கு வெளிக்கிளம்புகை போக்குவரவுகூடாமையால் ஜீவன் அணுவென்று பூர்வபக்ஷம். ௨௩௪.

(ரா-ஹா.) இந்தஅதிகரணத்தில் ஜீவன் விபுவன்றென்கிறார்.—"உத்க்ராந்தி" இந்த ஜீவாத்மா வெளிக்கிளம்புகிறான் என்றும், "சந்த்ரலோகம் கச்சந்தி" இத்யாதியில் இந்த லோகத்திலிருந்து சந்த்ரலோகம் முதலியவற்றுக்குப் போகிறானென்றும், "தஸ்மாத் லோகாத் புநரேதி" அந்தலோகத்திலிருந்து திரும்பி யிங்கே வருகிறானென்றும் சொல்லுகையாலே, ஜீவன் விபுவானால் இவைகள் ஸம்பவியா வாகையால் அணுஸ்வரூபனென்றே ஒப்புக்கொள்ளவேணும்.

ஸூ-௨௩௭. ஸ்வாத்மநா சோத்தரயோ:.

(ஸூ-ரா-வ்ய.) உத்தரயோ: - பிற்பட்டதான கமநாகமநங்களுக்கு, ஸ்வாத்மநா - தன்ஸ்வரூபத்தினுலேயே, (ஸம்பவம் சொல்லவேண்டும்.)

(ஸூ-ஹா.) முன் ராஜாவாயிருந்தவன், அந்த ராஜ்யாதிகாரம் போனவாறே, அவனந்த ராஜ்யத்திலேயே யிருந்தபோதிலும், "அவன் ராஜ்யத்தைவிட்டு வெளிக்கிளம்பினன்" என்பதுபோல், ஜீவன் சனியாமலிருக்கச்செய்தேயும் மரணகாலத்தில் இந்த தேகத்தி லபிமாநத்தை விட்டுவிடுகிறானுகையால் இதைவிட்டு வெளிக்கிளம்பினனென்கிறது. இது அணுவென்பதற்கு ஸாதகமாகாதே யென்னில், ஆயினும், போக்குவரத்துக்கள் அணுஸ்வரூபிக்கேயுள்ள தர்மமாகையால் அவ்விரண்டினுல் ஜீவன் அணுஸ்வரூபியாகிறானென்று பூர்வபக்ஷம். ௨௩௭.

(ரா-ஹா.) கீழ்ச்சொன்ன மூன்றில் முதலதான உத்க்ராந்தியாவது சரீர நாசமே என்று ஒப்புக்கொண்டு அதற்கு ஒருவிதமான ஸமாதாநம் சொன்னாலும், அநந்தரம் சொன்ன போக்கு வரத்துக்கள் ஆத்மாவினுலேயே நடக்கவேண்டிய தாகையால் ஆத்மா விபுவானுல் அவை ஸூதராம் சேராது. ௨௩௭.

ஸூ-௨௩௮. நாணுரதச்ருதேரிதி சேந்நேதராதிகாராத்.

(ஸூ-ரா-வ்ய.) அதச்ருதே: - (ஜீவனை) அணுவிந்நமான மஹானென்று சொல்லுகையாலே, அணு: - அணுஸ்வரூபனுக, ந - ஆகமாட்டான், இதி சேத் - என்றால், இதராதிகாராத் - இதரனை பரமாத்மாதிகாரமாகையாலே, ந - அப்படியன்று.

(ஸூ-ஹா.) "ஸவா ஏஷ மஹாநஜ ஆத்மா" இந்த ஆத்மா மிகவும் பெரியவன், விபுவானவன் என்று சொல்லிற்றேயென்னில், அவ்வாக்யம் பரமாத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணத்திலிருக்கையால் அது பரமாத்மவிஷயம், ஜீவவிஷயமன்று. ௨௩௮.

(ரா-ஹா.) ஜீவனைச்சொல்லுகிற ப்ரகரணத்தில் "மஹாநஜ ஆத்மா" என்று கீழ்ச்சொன்ன ஜீவனை மஹாந் அதாவது - விபு என்று சொல்லுகையாலே அவன் அணுவாகமாட்டானென்னில், இவ்வாக்யத்திற்கு முன்னமேஜீவப்ரகரணம்முடிந்து அநந்தரம் ஆரம்பித்தபரமாத்மாதிகரணத்தில் இவ்வாக்யமிருக்கிறதாகையால் இவ்வாக்யத்தில் விபுவென்று பரமாத்மாவையே சொல்லிற்று. ஜீவனைச் சொல்லவில்லை.

ஸூ-உ-௩-௧௯. ஸ்வஶப்³தோ³ந்மாநாப்⁴யாஞ்ச.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ஸ்வஶப்³தோ³ந்மாநாப்⁴யாம் ச - அணுவென்கிற சப்தத்தி ஞலும் ஊர்நெல்லின் நுனியை த்ருஷ்டாந்தமாகவெடுத்து அதின் பரிமா ணத்தை ஜீவனுக்குச்சொல்லுகையாலும் (ஜீவனணு) உ௩௧௯.

(ஶ்ரு-ஹா.) "ஏஷோऽணுராத்மா சேதஸா வேதி³தவ்ய꞉ யஸ்மிந் ப்ராண꞉ பஞ்சதா⁴ ஸம்விவேஶ" எவனிடத்தில் பஞ்சப்ராணன்கள் சேர்ந்திருக்கிறதோ அந்த ஆத்மா அணுஸ்வரூபியென்று சொல்லுகையால், ப்ராணஸம்பந்தமுள்ளவன் ஜீவனே யாகையால் ஜீவன் அணுஸ்வரூபியாகிருன். மேலும், "வாலாக்³ரஶதபா⁴க³ஸ்ய ஶததா⁴ கல்பிதஸ்ய ச | பா⁴கோ³ ஜீவஸ்ஸ விஜ்ஞேய꞉" நெல்லின்வால் நுனியில் பதிஞயிரத்தி லொருபங்குபோல் ஜீவன் அணுஸ்வரூபியாயிருக்கிருன் என்று சொல்லுகையாலும் ஜீவன் அணுஸ்வரூபியாகிருன். உ௩௧௯.

(ஶா-ஹா.) "ஏஷோऽணுராத்மா" இந்த ஜீவாத்மா அணுஸ்வரூபனென்றும் "ஆராக்³ரமாத்ர꞉" ஊர் நெல்லின் நுனியளவே யிருக்கிருனென்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே ஜீவன் அணுஸ்வரூபன். உ௩௧௯.

ஸூ-உ-௩-௨௦. அவிரோத⁴ஶ்சந்த³நவத்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) சந்த³நவத் - சந்தநம்போலே. அவிரோத⁴꞉ - விரோதமில்லை. உ௨௦.

(ஶ்ரு-ப்ர-ஹா.) ஆத்மா அணுவாஞல் சரீரத்திலோரிடத்திலிருக்கவேணும்; அப்போது சரீரத்தில் இதராவயவங்களில்பிறக்கிற ஸுகதுக்கங்களை எப்படி யநுபவிக்கிருனென்னில், சந்தநத்தை ஓரிடத்தில் பூசிக்கொண்டபோதிலும் அது சரீராத்யந்தம்ஸந்தோஷ ஜநகமாகிறுப்போலே, ஆத்மா ஓரிடத்தி லிருந்தாலும் சரீராத்யந்தமுள்ள ஸுகதுக்கங்களை யநுபவிக்கிருனென்று சிலர்சொன்ஞர்களென்கிருர்.

ஸூ-உ-௩-௨௧. அவஸ்தி²திவைஶேஷ்யாதி³தி சேந்நாப்⁴யுபக³மாத்³த்⁴ருதி³ ஹி.

(ஶ்ரு-ப்ர-வ்யா-ஹா.) அவஸ்தி²திவைஶேஷ்யாத் -(சந்தனம்) சரீரத்திலொருஸ்த்தலத்திலிருக்கையாலே அது ஆபாதமஸ்தகம் ஸுகஜநகமாகலாம். ஆத்மா அப்படி ஓரிடத்திலில்லாமையால் இவன் ஆபாதமஸ்தகம் ஸுகதுக்காநுபவம் செய்யக்கூடாது). இதி சேத் - என்ருல். ஹ்ருதி³ - ("ஹ்ருத்³யேஷ ஆத்மா" என்று ஜீவனுக்கும்) ஹ்ருதயத்தில் அப்⁴யுபக³மாத் -(ஸ்த்தி) ஒப்புக்கொள்ளுகையாலே. ந - அந்த அநுபபத்தியில்லை. உ௨௧.

ஸூ-உ-௩-௨௨. கு³ணாத்³வா லோகவத்.

(ஶ்ரு-வ்யா.) லோகவத் - லோகத்தில் (மணிமுதலியவற்றின் காந்தி) போல். கு³ணாத்³வா - (ஜ்ஞாந) குணத்திஞலேயாவது. (ஜீவன் ஸகலசரீரவ்யாபியாகிருன்.) உ௨௨.

(ஶா - வ்யா.) ஆலோகவத்-வெளிச்சம்போலே. கு³ணாத்³வா-(தன்) குணமான ஜ்ஞாநத்திஞலேயே (ஸுகதுக்கங்களை யநுபவிக்கிருன்). உ௨௨.

(ஶ்ரு-ஹா.) கீழ் ஸூத்ரத்தில், ஜீவன் அணுவாயினும் அவனேடு ஸம்பந்தித்த தர்மிஜ்ஞாநம் ஸகலசரீரவ்யாபியாகையால் அவ்வழியாக இவன்ஸகலாவயவங்களிலு

முள்ள ஸுகதுக்கங்களை யறிகிறானென்று சொல்லி இதில், அப்படியில்லாவிடினும், லோகத்தில் மணி முதலியவை யோரிடத்திலிருக்க அவற்றினொளி யெங்கும்பரவி அங்கங்குள்ள பதார்த்தங்களைக் காட்டுமாப்போலே, ஜீவனோரிடத்தி லிருந்தபோதிலும் ஜீவனுடைய குணமாகிய ஜ்ஞாநம் உடம்பெங்கும் வ்யாபித்திருக்கையால் அங்கங்குண்டாகிற ஸுகதுக்கங்களை யறிகிறானென்றான் பூர்வபக்ஷி. ருஉஉ.

(ரா-ஹா.) இதில் தன்மதத்தைச்சொல்லுகிறார்.—தீபம் முதலியவற்றினொளி தீபமோரிடத்திலிருக்கத் தான் மற்றவிடங்களில் வ்யாபித்து அங்கங்குள்ள பதார்த்தங்களைப் ப்ரகாசிப்பிக்கிறாப்போலே ஆத்மா ஓரிடத்திலிருந்தாலும் அதின் ஜ்ஞாநம் மற்றசரீராவயவங்களில் வ்யாபித்து ஸுகதுக்கங்களை யநுபவிப்பிக்கிறது. உசஉ.

ஸூ-உசரு. வ்யதிரேகோ கந்தவத் ததா ஹி தர்சயதி.

(ஸ-வ்யா.) கந்தவத் - பரிமளம்போல். வ்யதிரேக꞉ - (ஜ்ஞாநம் ஜீவனைவிட்டுப்) பிரிந்திருக்கை (கூடும்.) ததா ச - அப்படியே. தர்சயதி - (ச்ருதி) காண்பிக்கிறது. உசரு.

(ரா-வ்யா.) கந்தவத் - கந்தம்போலே, வ்யதிரேக꞉ - பேதம். (அங்கீகரிக்கவேணும்.) ததா ஹி - அப்படியே. தர்சயதி - ச்ருதிசொல்லுகிறது.

(ஸ-ஹா.) இந்த பாஷ்யத்திற்கு, "வ்யதிரேகோ கந்தவத்" என்றவரையில் ஒரு ஸூத்ரம். "ததா ஹி தர்சயதி" என்பது வேறு ஸூத்ரம். ஜ்ஞாநம் குணமாகில் அது தனக்காச்ரயமான ஆத்மாவைவிட்டு மற்றோரிடத்திலிராது. ஆகையால், அம்மூலமாக ஸகலாவயவங்களிலுமுள்ள ஸுகதுக்கங்களை அணுவாகிய ஆத்மா அறிகிறானென்பது கூடாதென்னில்; ரூபம் ரஸம் முதலிய குணங்கள் வஸ்திரம் சர்க்கரை முதலிய ஆச்ரயத்தைவிட்டு மற்றோரிடத்தில் இல்லாவிடினும். புஷ்பமோரிடத்திலிருக்க, அதின் பரிமளம் மற்றோரிடத்திலு மிருக்குமாப்போலே; ஆத்மா ஓரிடத்திலிருந்தபோதிலும் அதின்குணமாகிய ஜ்ஞாநம் மற்றோரிடத்திலும் வ்யாபித்திருக்கலாம்.

(ஸ-ஹா.) "ஆலோமப்ய꞉ ஆநகாக்ரேப்ய꞉" என்கிற ச்ருதியும், அணுரூபியாய் ஹ்ருதய தேசத்திலிருக்கிற ஆத்மா தன்னுடைய ஜ்ஞாநத்தினால் கால் முதல் தலைவரையில் வ்யாபிக்கிறானென்று சொல்லுகிறது. உசரு.

(ரா-ஹா.) விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" இத்யாதி வாக்யங்களில் ஆத்மாவை ஜ்ஞாநஸ்வரூபமாகச் சொல்லுகையாலே அப்படியே அங்கீகரிக்கவேணுமாகையால், ஆத்மா ஓரிடத்திலிருக்கிறதென்றும் அதினுடைய குணமாய் அதைக்காட்டிலும் வேறான ஜ்ஞாநம் எங்கும் வ்யாபிக்கிறதென்றும் சொல்லவொண்ணாதென்னில், வாஸனையுடையது சந்தநம் என்றால் சந்தநத்தைக்காட்டிலும் வாஸனை பிந்நமாகத் தோற்றுமாப்போலே, நானறிகிறேன் என்கிற விடத்திலும் நான் என்று ஆத்மாவும், அவனைக்காட்டிலும் பிந்நமாக ஜ்ஞாநம், அதாவது அறிகை ஒன்றும் தோற்றுகையாலும், "ஜாநாதி" என்று வேதத்திலும் ஜீவனைக்காட்டிலும் ஜ்ஞாநத்தை வேறாகச்சொல்லுகையாலும் ஆத்மாவைக்காட்டிலும் ஜ்ஞாநம்வேறு. உசரு.

ஸூ-உசசு. ப்ருதகுபதேசாத்.

(ஸ-ரா-வ்யா-ஹா.) ப்ருதகுபதேசாத்-("ந விஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோ வித்யதே" ஜ்ஞாதாவான ஆத்மாவினுடைய ஜ்ஞாநத்தி

ர்கு நாசமில்லையென்று ஆத்மாவையும் அதினுடைய ஜ்ஞானத்தையும்) பிரித்துச்சொல்லுகையாலே (ஆத்மாவைக்காட்டிலும் ஜ்ஞானம் வேறு.)    உசச.

ஸூ-உசரு. தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத்.

(ஶ - வ்யா.) ப்ராஜ்ஞவத் - பரமாத்மாவைப்போல், தத்குணஸார த்வாத் - அந்த புத்தியினுடைய குணத்தைப் ப்ரதானமாக உடைத்தாயிருக்கையினால், தத்வ்யபதேஶ: - அணுவென்கிற வ்யவஹாரம்.    உசரு.

(ரா - வ்யா.) தத்குணஸாரத்வாத் - ஜ்ஞானமாகிற குணத்தைஸாரமாக உடையவனாகையாலே, ப்ராஜ்ஞவத் - ஸர்வஜ்ஞனான ஈஶ்வரன்ஜ்ஞானஸ்வரூபனென்று சொல்லப்படுகிறாப்போலே, தத்வ்யபதேஶ: - ஜ்ஞானஸ்வரூபனென்று சொல்லப்படுகிறான்.    உசரு.

(ஶ-ஹா.) இந்த ஸூத்ரத்தினால் ஸித்தாந்தத்தைச் சொல்லுகிறார். ஜீவாத்மா அணுஸ்வரூபியன்று; ஜீவாத்மாவென்பவன், விபுஸ்வரூபமான பரப்ரஹ்மஸ்வரூபியாகையால் இவனும் விபுஸ்வரூபியாகிறான். அணுவாகிய ஜீவன் தானோரிடத்திலிருந்து தன்னுடைய குணமாகிய ஜ்ஞானத்தினால் ஸகல சரீரங்களையும் வ்யாபிக்கிறானென்பது சரியன்று. ஜ்ஞானம் ஜீவனுடைய குணமாகில் அவனைவிட்டு அப்பால் போகமாட்டாது. புஷ்பத்தினுடைய பரிமளமும் ஆஶ்ரயத்தைவிட்டுப்போகிறதில்லை. புஷ்பத்தினுடைய ஸூக்ஷ்மமான பரமாணுக்கள் புஷ்பத்தில் நின்றும் புறப்பட்டுகொற்றினால் சுற்றும் வ்யாபிக்கையால் அதிலுள்ள கந்தம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறது. மேலும் ஆத்மா குணியென்றும் ஜ்ஞானம் குணமென்றும் இப்படிவிபாகமேகிடையாது. ஆகில் ஜீவனை அணுவாக வேதத்தில் சொல்லிற்றேயென்னில்; அணுத்வம் புத்தியினுடைய குணம். புத்தியிலுள்ள ஸுகதுக்கங்கள் முதலிய குணங்கள் ஆத்மாவில் அத்யஸ்தமாய் ஆத்மா ஸுகியென்றும் துக்கியென்றும் வ்யவஹரிக்கப் படுகிறான். இக்குணங்களொன்றும் ஆத்மாவுக்குக்கிடையாது. இந்த அத்யாஸமுள்ளவளவும் ஜீவனுக்கு ஸம்ஸாரம். ஸுகதுக்காதிகளைப்போலவே அணுத்வமும் ஜீவனிடத்தில் அத்யஸிக்கையால் ஜீவன் அணுஸ்வரூபியெனப்படுகிறான். உபாதியாகிய புத்தியின் குணம் ஜீவனில் வ்யவஹரிக்கப்படுமோவென்னில்; ஸகுணப்ரஹ்மோபாஸநத்தில் "அணீயாநுவ்ரீஹேர்வா" என்லிக்காட்டிலும் பரமாத்மா சின்னவன் என்று த்யாநிக்கிறவனுடைய ஹ்ருதயமாகிற உபாதிஸம்பந்தத்தினால் பரமாத்மாவையும் அணுவாகச்சொல்லுகிறது. அதுபோலவே இங்கும் ஜீவனும் உபாதிஸம்பந்தத்தினால் அதினுடைய குணத்தினாலேதான் அணுவென்று வ்யவஹரிக்கப்படுகிறான். ஹ்ருதயத்திலிருக்கிறதும், வெளிக்கிளம்புகிறதும், போவதும் வருவதும் எல்லாம் புத்தியே. அதை வ்யவஹரிக்கவேண்டும் வ்யவஹாரத்தினால் ஜீவன் வ்யவஹரிக்கப்படுகிறான் ஆகையால் ஜீவன் விபு என்று ஸித்தாந்தம்.    உசரு,

(ரா-ஹா.) ஆனால் ஆத்மாவை ஜ்ஞானமென்று சொல்லுவானேனென்னில். ஜ்ஞானமே இவனுக்கு ப்ரதானமானகுணம்; அதைப்பற்றி இவனை ஜ்ஞானமென்கிறது. இதற்கு த்ருஷ்டாந்தம்—ஸர்வஜ்ஞனான பரமாத்மாவை "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்று ஜ்ஞானஸ்வரூபனென்று சொன்னாற்போல் இங்கும் கண்டுகொள்வது. லோகத்திலும் ஒருவன்வேதாத்யயநம் செவ்வையாகச்செய்திருந்தால் அவனை வேதமூர்த்தி யென்கிறார்கள்.    உசரு.

ஸூ-உசசு. யாவதாத்மபாவித்வாச்ச ந தோஷஸ்தத்தர்ஶநாத்.

(ஶ-வ்ய.) யாவதாத்மாவிகாரச-ஜீவனுக்கு ஸம்ஸாரியா யிருக்குமளவும் புத்திஸம்பந்த மிருக்கையாலே, தத்தஶநாத் - அப்படியே ஶ்ருதி சொல்லுகையாலே, நதோஷ: - தோஷமில்லை. உசசு.

(ரா-வ்ய.) யாவதாத்மாவிகாரச்ச - ஜ்ஞானம் ஆத்மா உள்ளவரையில் அதைப்பற்றியிருக்கையாலும், தத்தஶநாத் - அப்படியே லோகத்தில் காண்கையாலும், நதோஷ:- ஜ்ஞானசப்தத்தினால் ஆத்மாவைச்சொல்வதில் தோஷமில்லை. உசசு.

(ஶ-ஹா.) கீழ் ஸூத்ரத்தில் ப்ரஹ்மஸ்வரூபமே புத்தியினுடைய ஸம்பந்தத்தினால் ஜீவனாகிறது. அந்த புத்தி ஸம்பந்தமுள்ள வரையில்தான்ஸம்ஸாரியாயிருக்கிறது என்று சொல்லிற்று. இப்படியாகில் புத்திஸம்பந்தம் நசித்த பின்பு ஜீவனில்லாமல் போகட்டும், அவன் ஸம்ஸாரியாகாமல் போகட்டும் என்ற சங்கைக்கு இந்த ஸூத்ரத்தினால் ஸமாதானம்சொல்லுகிறார்.—புத்திக்குமாத்மாவுக்கும் ஸம்பந்தம் அஜ்ஞானத்தினா லுண்டாயிற்று. அந்த அஜ்ஞானம் தத்வஜ்ஞானத்தினா நசிக்கிறது. அப்போதுதான் புத்தியும் நசிக்கும். அதன்பின் ஜீவன் முக்தனாய்விடுகிறான். அதாவது தன்னுடைய ஜீவத்வத்தையும் ஸம்ஸாரித்வத்தையும் விட்டு விட்டு, ஜ்ஞானாநந்தஸ்வரூபமாகிய ப்ரஹ்மஸ்வரூபத்தோடு கலந்துவிடுகிறான். இவன் முக்தியடைவதற்குமுன் எதுவரையில் ஸம்ஸாரியாயிருக்கிறானோ, அதுவரையிலும் புத்தியிருக்கிறபடியால் கீழ்ச்சொன்ன தோஷம்வாராது. "யோயம்விஜ்ஞாநமய:" என்கிற ஶ்ருதியும், புத்தியோடு ஸம்பந்தித்தவனாய்க்கொண்டு, தான்போவது வருவதுபோ லிருக்கிறானென்று இவ்வர்த்தத்தையே சொல்லுகிறது. உசசு.

(ரா-ஹா.) கோ (கௌ) பதத்திற்குப் பசுவினாகார மர்த்தமா யிருந்தாலும் அவ்வாகாரம் பசு உள்ளவரையில் அதைப்பற்றி யிருக்கையாலே பசுவையும் கோ (கௌ) வென்று சொல்லுகிறார்கள்; அதுபோலவே ஜ்ஞானம் ஆத்மாவை யெப்போது மாஶ்ரயித்திருக்கையாலே அவனை ஜ்ஞானமென்று சொல்லலாம்; இதில் பாதகமில்லை. உசசு.

ஸூ-உசஎ: பும்ஸ்த்வாதிவத்த்வஸ்ய ஸதோபிவ்யக்தியோகாத்.

(ஶ-வ்ய.) பும்ஸ்த்வாதிவத் - ஆண்தன்மை முதலானதுபோல், ஸத: (ஸூக்ஷ்மமாக) இருக்கிற அஸ்ய - அந்தபுத்திக்கு, அபிவ்யக்தியோகாத் - ப்ரகாசமுண்டாகையால், (உறக்கத்தில் புத்தியில்லை யென்கிறதோஷமில்லை.

(ரா-வ்ய.) ஸத: - இருக்கிற, அஸ்ய - இந்த ஜ்ஞானத்திற்கு, பும்ஸ்த்வாதிவத்-பும்ஸ்த்வமென்கிற தாதுவைப்போலே, அபிவ்யக்தியோகாத் - அபிவ்யக்தி ஸம்பவிக்கையாலே, (ஜ்ஞானம் யாவதாத்மபாவி). உசஎ.

(ஶ-ஹா.) ஜீவன் உறங்கும்போதும் ப்ரளயகாலத்திலும் பரப்ரஹ்மத்தில்லயித்துவிடுகிறானென்று "ஸதாஸோம்ய ததாஸம்பந்நோ பவதி" என்கிற ஶ்ருதி சொல்லுகையாலே, அப்போது புத்தி ஸம்பந்தமில்லை யென்றே ஒப்புக்கொள்ளவேணும். இப்படியாகில், இந்த ஜீவன் முக்தியை யடையும் வரையில் புத்தியோடு ஸம்பந்தித்திருக்கிறானென்பது சேராது என்கிற சங்கைக்கு ஸமாதானம்.—அக்காலங்களிலும் புத்தி ஸூக்ஷ்மமாய்க்கொண்டு ஜீவனோடு ஸம்பந்தித்திருக்கிறது, அதுவே உறங்கி யுணரும்போதும் ஸ்ருஷ்டிகாலத்திலும் ப்ரகாசத்தை யடைகிறது. அவ்

ளவேயன்றி அக்காலங்களில் புத்தி நசித்துப்போகிறதென்பதில்லை. இப்படி ஸூக்ஷ்மமாயிருந்த ப்ரகாசத்தை யடையுமோவென்னில்; பால்யத்தில் பிள்ளைகளுக்கு புஸ்த்வம் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. அதுவே வயஸ்ஸு வந்தால் ப்ரகாசத்தை யடைகிறது. அந்தபுஸ்த்வம் பால்யத்திலில்லாமலிருந்து நல்லவயஸ்ஸில் உண்டாகிறதென்றால் நபும்ஸகனுக்கும் அம்மாதிரியே யுண்டாக வேண்டிவரும். ஆகையால் முன்பு ஸூக்ஷ்மமாயிருந்ததே பின்பு ப்ரகாசிக்கிறதென்று சொல்லவேணும். அது போலவே புத்தி விஷயத்திலும் சொல்லவேண்டியது.புத்தியாவது - அந்தःகரணம்.

(ரா-ஹா.) உறக்கம் மூர்ச்சை முதலிய அவஸ்த்தைகளில் ஜ்ஞாநம் காணுமை யாலே ஆத்மா உள்ளவரையில் ஜ்ஞாநமிருக்கிறதென்று எப்படி சொல்லலாமென்னில், ஜ்ஞாநம் அப்போது முண்டு; ஆனல் அப்போது ஸங்கோசத்தை யடைந்து ப்ரகாசியாமலிருக்கிறது. அதுவே விழித்தெழுந்தால் ப்ரகாசிக்கிறது. இதற்கு த்ருஷ்டாந்தம்—ரேதஸ்ஸு என்று சரீரத்தில் ஒருதாதுவுண்டு, அதையே பும்ஸ்த்வமென்பது. அந்த தாதுவில்லாவிட்டால் ஸப்ததாதுமயமான சரீரமேயாகாது. ஆகையால் சரீரத்தில் பால்யம் முதல் இருக்கிறதென்று அங்கீகரிக்கவேணும். இருந்தாலும் பால்யத்தில் ப்ரகாசியாது; யௌவநத்தில் ப்ரகாசிக்கிறது. அதுபோலவே இங்கும் கண்டுகொள்வது. உசஎ.

ஸூ-உசஅ. 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑌰
𑌨𑌿𑌯𑌮𑍋 𑌵𑌾𑌽𑌨𑍍𑌯𑌥𑌾.

(ஶ்ரு-ப்ர.) 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 - அந்தःகரணத்தை யங்கீகரியாமல்போனல், 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃-எப்போதும் விஷயங்களினுடைய ப்ரத்யக்ஷமாவது அப்ரத்யக்ஷமாவது உண்டாகவேண்டிவரும். 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌨𑌿𑌯𑌮𑍋 𑌵𑌾 - ஆத்மா இந்த்ரியம் இவ்விரண்டிலொன்றுக்கு ப்ரதிபந்தகம் இருக்கிறதென்றாவது ஒப்புக்கொள்ளவேணும். உசஅ.

(ரா-ப்ர) 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 - ஆத்மாஜ்ஞாந ஸ்வரூபனென்றாலும் விபுவென்றாலும், 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃 - நித்யமாக ஜ்ஞாநப்ரகாசமும் அப்ரகாசமும் வரவேண்டிவரும். 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌨𑌿𑌯𑌮𑌃 𑌵𑌾 - இரண்டிலொன்றே எப்போது முண்டாகவேண்டியாவது வரும். உசஅ.

(ஶ்ரு-ஹா.) இதில் அந்தःகரண முண்டென்பதற்கு யுக்தி சொல்லுகிறார். அந்தःகரணத்துக்கே சித்தமென்றும் மநஸ்ஸென்றும் புத்தியென்றும் இப்படி யனேக நாமங்களுண்டு. அந்தःகரண மெதுக்காக ஒப்புக்கொள்ள வேணுமென்னில்; ஒருபதார்த்தத்தை யறிகைக்குக்காரணம் இன்னதென்று சொல்லவேணும்.ஆத்மா,இந்த்ரியம், பதார்த்தம் ஆகிய இவையேகாரணம்,இம்மூன்றும் இருந்தால் வஸ்து அறியப்படுகிறது என்றால், ஒருவனுக்கு ஐந்திந்த்ரியங்களும் ஐந்து வஸ்துக்களில் ஸம்பந்தித்திருக்கும்போது ஒரேகாலத்தில் ஐந்துஜ்ஞாநங்களுண்டாகவேண்டிவரும். அப்படி யுண்டாகிறதில்லை. இம்மூன்றுமிருந்தாலும் சில ஜ்ஞாநம் உண்டாகிறதில்லையென்னில், ஆனலது எப்போதும் உண்டாகாமலே போகட்டும். ஆத்மாவுக்காவது இந்த்ரியங்களுக்காவது ஏதாவது தோஷமிருந்தால் உண்டாகிறதில்லை யென்னில்; முன்பின் க்ஷணங்களில் அவை ஒரு தோஷமுமின்றியே ஜ்ஞாநங்களை உண்டுபண்ணுகிற, அந்த நடுக்ஷணத்தில் மாத்திரம் அவற்றுக்கு தோஷம் ஸம்பவிக்கைக்குத் தகுந்தகாரணம் காண்கிறதில்லை.இவ்விதமான அநுபபத்திகளைப்பரிஹரிக்கைக்காக, மநஸ்ஸென்பதை யொப்புக்கொள்ள வேணும். இப்போது, அந்த மநஸ்ஸு எந்த

விஷயத்திலவதானம் செய்கிறதோ, அந்த ஜ்ஞானமுண்டாகிறது; மற்ற ஜ்ஞானமுண்டாகிறதில்லை என்கிற நியமம் சரியாயிருக்கிறது. ஆகையால் மநஸ்ஸென்பதொன்று ஒப்புக்கொள்ளவேணும். உ௪அ.

(ரா-ஹா.) ஆத்மா ஜ்ஞாநஸ்வரூபனென்றால், ஆத்மா ஒருகால் ப்ரகாசித்து ஒருகால் ப்ரகாசியாம லிருக்கக்கூடாது. ஏனென்றால் ஆத்மா ப்ரகாசிக்கைக்கு ஜ்ஞாநம்காரணம், ஆத்மாவே ஜ்ஞாநஸ்வரூபமாய் அதுநித்யமுமாயிற்று. ஆகையால் எப்போதும் ப்ரகாசிக்கவேண்டும். அப்படிப்ரகாசிக்கிறதில்லை ஜ்ஞாநமிருக்கும் போது ப்ரகாசியாமைக்குவேறொரு சரியான காரணம் கூடாமையால் அதுக்கும் ஜ்ஞாநமே காரணமென்று சொல்லவேண்டும் ஆகையால் நித்யமாகப்ரகாசியாமலும் இருக்கவேண்டும்.—இப்படி ப்ரகாசிக்கைக்கும் ப்ரகாசியாமைக்கும் ஒன்றே காரணமாகக் கூடாமையால் இவ்விரண்டில் ஏதோ ஒன்றுக்கே ஜ்ஞாநம் காரணமாக வேண்டுமென்னில், அப்போது ஏதோ ஒன்றே நித்யமாயிருக்கவேண்டும். மற்றொன்று எப்போதுமுண்டாகக்கூடாது. இப்படியே, ஆத்மா விபுவானால் ஸமஸ்த ஆத்மாக்களோடும் மநஸ்ஸு ஸர்வதாசேர்ந்திருக்கையால் எல்லாருக்கும் எப்போதும் ஜ்ஞாநமுண்டாகவேண்டிவரும் ஆகையால் ஆத்மாஜ்ஞாநமுமன்று விபுவுமன்று. உ௪அ.

கயி-ரு அ. ஸூ-உ௪௯. கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்.

(ஶ-ரா-வ்ரு.) ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத் - சாஸ்த்ரம் ப்ரயோஜநவத்தாகையாலே, கர்த்தா - (ஆத்மா) கர்தாவாகிறான். உ௪௯.

(ஶ-ஹா.) இதில் இன்னும் ஜீவனுக்குள்ள தர்மங்களைச்சொல்லுகிறது. யாகாதிகளைச் செய்யவேண்டியவன் அதின்ஸ்வரூபத்தையறிந்து, 'நாமிதைச்செய்வோம்' என்று ஸங்கல்பித்துக்கொண்டு செய்யவேணும். அந்தஃகரணம் அசேதநமாகையால் அதுக்கு இம்மாதிரி ஜ்ஞாநம் கூடாமையால் அதினால் யாகம் செய்யவொண்ணாது. ஜீவனும் செய்யாவிடில் யாகாதிகளைச் செய்யச்சொல்லுகிற சாஸ்த்ரம், செய்கிறவனில்லாமையால் வீணாய்விடும். ஆகையால் சேதநனே கர்த்தாவென்று ஒப்புக்கொள்ளவேணும். உ௪௯.

(ரா-ஹா.) இவ்வதிகரணத்தில் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வமுண்டென்று ஸாதிக்கிறார்.—"அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே" ஆத்மா அஹங்காரத்தினால் மூடனாய் (யதார்த்த ஜ்ஞாநஶூந்யனாய்) நான் கர்த்தாவென்றெண்ணுகிறானென்றும், "நாந்யம் குணேப்ய: கர்த்தாரம்" என்று ஸத்வரஜஸ்தமோகுணங்களைக்காட்டிலும் வேறு கர்த்தா இல்லையென்றும் சொல்லுகையாலே ப்ரக்ருதியே கர்த்தா, ஆத்மா கர்த்தாவன்றென்று பூர்வபக்ஷம்.—ஸ்வர்க்காதிலோகங்களை யடைகைக்காக யஜ்ஞயாகாதிகளைப்பண்ணு என்று சாஸ்த்ரம் விதிக்கிறது. சொன்னதையறிந்து செய்யவல்ல புருஷனைக்குறித்தே ஒரு அர்த்தத்தை சாஸ்த்ரம் விதிக்கும். ப்ரக்ருதிக்கு ஜ்ஞாநமில்லாமையால் அதைக்குறித்து விதிக்கக்கூடாது. ஆத்மாவுக்குக்கர்த்ருத்வமில்லையென்றால் இவனைக்குறித்து விதித்து உபயோகமில்லை. அப்போதுசாஸ்த்ரம் நிரர்த்தகமாய்ப் போய்விடும். அப்படிபோகாமைக்காக ஜீவாத்மா கர்த்தாவென் றங்கீகரிக்கவேணும் என்று ஸித்தாந்தம். உ௪௯.

ஸூ-உரு0. உபாதாநாத்விஹாரோபதேஶாத்.

(ஶ-ரா-வ்ரு-ஹா.) உபாதாநாத் "ஏவமேவைஷ ஏதாந் ப்ராணாந் க்ருஹீத்வா" இந்தஆத்மா இந்தப்ராணன்களை க்ரஹித்துக்கொண்டு

என்று ஆத்மாவுக்கு ப்ராணன்களை க்ரஹிக்கைசொல்லுகையாலும், விஹாரோபதேசாச்ச - "யதா காமம் பரிவர்த்ததே" யதேச்சமாக உலாவுகிறானென்று உலாவுகை சொல்லுகையாலும், (இவ்விரண்டு கர்மங்களையும் ஆத்மா செய்கிறானென்று சொல்லுகையாலே ஆத்மா கர்தாவென்பது ஸித்தம்). உ௩௦.

(ஶ்ரீ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு இது இரண்டு ஸூத்ரம். அதில் "விஹாரோபதேசாச்" என்பது முதல் ஸூத்ரம், "உபாதாநாத்" என்பது இரண்டாவது ஸூத்ரம். இவற்றினர்த்தம் - விஹாரோபதேசாச் - (ஸ்வப்நகாலத்தில் ஜீவன் "ஸம்ப்ரஸாதஸ்ஸஞ்சரதி" யதேஷ்டமாகஸஞ்சரிக்கிறானென்றும் "ஸ்வேஶரீரே யதா காமம் பரிவர்த்ததே" தன்சரீரத்தில் யதேஷ்டமாக ஸஞ்சரிக்கிறானென்றும் ஜீவனுக்கு) ஸஞ்சாரம் சொல்லுகையாலே, (ஜீவன் கர்த்தாவாகிறான் என்று முதல் ஸூத்திரத்தின் தாத்பர்யம்—உபாதாநாத்-( ப்ராணாந் க்ருஹீத்வா" இந்த்ரியங்களைக் கரணமாக அங்கீகரித்துக்கொண்டு என்று, இந்த்ரியங்களை) அங்கீகரிக்கிறானென்கையால் (இவன் கர்த்தாவாகிறானென்று அங்கீகரிக்க வேண்டும்). என்று இரண்டாம் ஸூத்ரத்திற்குத் தாத்பர்யம். உ௩௦.

ஸூ-உ௩௧. வ்யபதேசாச்ச க்ரியாயாம் நசேந்நிர்தேஶ விபர்யய:

(ஶ்ரீ-ரா-வ்.) க்ரியாயாம் - யஜ்ஞாதி கார்யங்களில், வ்யபதேசாச்ச - (ஆத்மாவைக் கர்த்தாவென்று) சொல்லுகையாலும், (ஆத்மா கர்தாவாகிறான். நசேத் - (இப்படி) இல்லாமற்போனால், நிர்தேஶவிபர்யய: வேறுவிதமாக (த்ருதீயாந்தமாக)ச் சொல்லவேண்டி வரும். உ௩௧

(ஶ்ரீ-ரா.) விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்கிற விடத்தில் ஜ்ஞானவானான ஆத்மா யஜ்ஞம் முதலிய கர்மங்களைச் செய்கிறானென்று சொல்லுகையாலேயும் ஆத்மா கர்த்தாவாகிறான். அவ்வாக்கியத்தில் விஜ்ஞானபதத்திற்கு ஆத்மா அர்த்தமன்று; ஜ்ஞானமே அர்த்தமானதையால் ஆத்மாவைக் கர்த்தாவாகச் சொல்லவில்லை என்கிற பக்ஷத்தில், ஜ்ஞானம் ஒரு கார்யத்திற்குக் கரணம் (ஸாதநம்) ஆகுமல்லது கர்த்தாவாகமாட்டாது. அப்போது ஜ்ஞானத்தினால் செய்கிறானென்று சொல்லவேணும், அப்படி மூன்றும் வேற்றுமையாகச் இங்கு சொல்லாமையால் ஆத்மாவையே கர்த்தாவாகச் சொல்லிற்று. உ௩௧

ஸூ-உ௩௨. உபலப்திவதநியம:.

(ஶ்ரீ-வ்.) உபலப்திவத் - பார்ப்பதுபோல், அநியம: - (செய்வதிலும்) நியமமில்லை. உ௩௨.

(ரா-வ்.) உபலப்திவத் - ஜ்ஞானம்போலவே, அநியம: - போக்த்ருத்வ நியமமில்லாமற் போகவேண்டிவரும். உ௩௨.

(ஶ்ரீ-ஹா.) ஜீவன் ஸ்வதந்த்ரனாய்க் கர்த்தாவாகில் தனக்கு நன்மையையே செய்துகொள்ளவேணும். அப்படியன்றியே லோகத்தில் ப்ராணிகள் நன்மையைப் போல் தீமையையும் விளைத்துக்கொள்ளக் காண்கிறார்கள் ஆகையால் இவன் ஸ்வதந்த்ரகர்த்தாவன்று என்ற சங்கைக்கு, ஜீவன் ஸ்வதந்த்ரனானபோதிலும் தனக்கு

அனுகூலமானதையே பார்க்கிறானென்கிற நியமமில்லை, கண் முதலான இந்த்ரியங்கள் எதில் ஸம்பந்திக்கிறதோ, அதைப்பார்க்கிறான் என்பதுபோல், நன்மைத்தீமைகளைச் செய்கைக்கும், தேசமும் காலமும் மற்ற புத்தி அத்ருஷ்டம்முதலிய காரணங்களும் எதைச் செய்கைக்கு அனுகூலங்களா யிருக்கின்றனவோ, அதைச்செய்கிறான். மற்ற காரணங்களை யபேக்ஷித்தே இவன் காரியம் செய்தபோதிலும் இவன் கர்த்தாவாகைக்குத் தடையில்லை. ஒருவன் சமையல் பண்ணும்போது அனேக உபகரணங்களைக்கொண்டே செய்தபோதிலும் அவனே அதுக்குக் கர்த்தாவாகிறாப்போலே இங்கும் கண்டுகொள்வது. நன்மையை விளைக்கும் என்கிற ப்ராந்தியினால் தீமையைச்செய்கிறானென்று கருத்து. ௨௫௨.

(ரா-ஹா.) ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வமும் ஆத்மாவுக்கு போக்த்ருத்வமும் அங்கீகரித்து அதின் ஸாந்நித்யத்தினால் ஆத்மாவுக்கு ஸுகாத்யநுபவமென் றங்கீகரித்தால், ப்ரக்ருதி ஸகலாத்மாக்களுக்கும் ஸமானமாகையாலே தத்ஸாந்நித்யமுடைய இந்த ஆத்மாவுக்குப்போலே மற்ற ஆத்மாக்களுக்கும் ஸமானமான ஸுகதுக்கங்களுண்டாகவேண்டிவரும். ப்ரக்ருதி ஸர்வஸாதாரணமாயினும் அவ்வவ ஆத்மாக்களுக்கு அஸாதாரணமான அந்தஃகரணமுண்டு, அதினுடைய ஸாந்நித்யத்தினாலேயே ஸுகதுக்கானுபவம் பிறக்கிறதென்றால், ஆயினும் ஆத்மா ஸர்வவ்யாபியாகையாலே ஸகலாந்தஃகரணங்களோடும் ஸாந்நித்யம்ஸகலாத்மாக்களுக்கு முண்டாகையாலே ஸர்வர்க்கும் ஸமானமாக ஸுகாத்யநுபவம் ப்ரஸங்கிக்கும். ஆகையால்கர்த்தா ஆத்மாவேயாகவேணும். ௨௫௨.

ஸூ-௨௫௩. ஶக்திவிபர்யயாத்.

(ஶ-ரா-வ்ரு.) ஶக்திவிபர்யயாத் - போக்த்ருத்வ சக்திக்கு ஹானிவருகையாலே, (ஆத்மா கர்த்தாவாகவேண்டும்.) ௨௫௩.

(ஶ-ஹா.) கர்த்ருத்வத்தை ஜீவனிடத்தில் ஒப்புக்கொள்ளாமல் அந்தஃகரணத்திலொப்புக்கொள்ளில், கர்த்தா கரணங்களிரண்டு மொன்றாகக் கூடாதாகையால் அந்த அந்தஃகரணத்துக்குக் கரணத்வம் நழுவும். அந்தஃகரணம் கர்த்தாவாய், அதற்கு வேறொரு கரணமொப்புக்கொள்ளில் நாங்களொப்புக்கொண்டதும் நீயொப்புக்கொண்டதும் ஒன்றே; ஆகில் நாமத்தில் பேதம் ஆகையால் ஜீவனே கர்த்தாவாகிறான். ௨௫௩.

(ரா-ஹா.) எவன்புண்ய பாபங்களைச் செய்கிறானோ, அவனேஅதின்பலமான ஸுகதுக்கங்களை யனுபவிக்கிறான். மற்றொருவனுக்கவ்வநுபவம் கிடையாது. புத்தி புண்யபாபங்களைச் செய்கிறதாகில் ஆத்மாஸுகாதிகளை அனுபவியாமற் போகக்கடவன். ஆகையால் ஆத்மாவேகர்த்தாவும் போக்தாவுமாகிறான். ௨௫௩.

ஸூ.௨௫௪. ஸமாத்யபாவாச்ச.

(ஶ-ரா-வ்ரு.) ஸமாத்யபாவாச்ச - ஸமாதிஸம்பவியாதாகையாலும், (ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வம் கூடாது.) ௨௫௪.

(ஶ-ஹா.) ஜீவன் கர்த்தா வாகாவிடில் "நிதித்யாஸிதவ்ய:" இத்யாதியினால் பரமாத்மப்ராப்திக்கு ஸாதநமாகச் செய்யச்சொன்ன த்யாநம் சேதநனுக்கு ஸம்பவியாது. ஆகையாலும் சேதனனே கர்த்தாவென்பது ஸித்தம். ௨௫௪.

(ரா-ஹா.) ப்ரக்ருதியைக்காட்டிலும் ஆத்மாபின்னனென்று ஏகாக்ரசித்தனாகத் யாநிக்கையே மோக்ஷஸாதநமென்று சொல்லிற்று. ப்ரக்ருதியேத்யாநம் செய்கிற

தென்றபக்ஷத்தில் தன்னைக்காட்டிலும் வேறாகத்தன்னைத்தான் த்யாகிக்கக்கூடா தாகையால் ப்ரக்ருதிக்குக்கர்த்ருத்வம் கிடையாது. ௨௫௪.

ஸூ-௨௫௫. யதா ச தக்ஷோபயதா.

(ஸ-வ்யா.) தக்ஷா தச்சன், யதா - எப்படி, உபயதா - ஸுகதுக்கங்களிரண்டையு மடைகிறானோ, (அப்படியே ஜீவனும்) ௨௫௫.

(ரா-வ்யா.) தக்ஷா - தச்சன், யதா - எப்படி, உபயதா - செய்கைக்கும் செய்யாமைக்கும் ஸமர்த்தனாகிறானோ, (அப்படியே ஆத்மாவும்.) ௨௫௫

(ஸ-பா.) இந்த அதிகரணத்தில் ஜீவனுக்குக் கர்த்ருத்வம் ஸ்வதஸ்ஸித்தமா, அல்லது வந்தேறியாவென்று விசாரிக்கப்படுகிறது.— கீழதிகரணத்தில், விதிநிஷேதசாஸ்திரங்கள் வ்யர்த்தமாகாமைக்காக ஜீவன்கர்த்தா வென்று ஒப்புக்கொள்ள வேணுமென்று சொல்லப்பட்டது. அந்தகர்த்ருத்வம்ஜீவனுக்குஸ்வதஸ்ஸித்தமன்று; ஏனென்றால், லோகத்தில் தச்சன் எதுவரையில் வாசிமுதலியவைகளைப் பிடித்துக் கொண்டுவேலைசெய்கிறானோ, அதுவரையில் அவன் துக்கியாகவேகாண்கிறான், அவனே அவ்வாயுதங்களைப் பொகட்டுவிட்டு வீட்டிற்குவந்து சேர்ந்து ஒருவ்யாபாரமும் செய்யாதிருந்தானாகில் ஸுகத்தையடைகிறான்; அதுபோலவே ஜீவன்கர்த்தாவாகும்வரையில் துக்கியாயேயிருப்பன் மோக்ஷமெப்போது முண்டாகாது;அதற்காக, அந்தஃகரணத்தினுடைய ஸம்பந்தத்தினால் இவனுக்குக் கர்த்ருத்வம்வந்தேறியென்றே ஒப்புக்கொள்ளவேணும் என்கிறார். ௨௫௫.

(ரா-பா.) ஆத்மா கர்த்தாவானால் தனக்கு இச்சையுள்ளபோது செய்யலாம் இல்லாதபோது தவிரலாம். அதெப்படியெனில், தச்சன் தன்னிடத்தில் ஸகல ஸாமக்ரியுமிருந்தாலும் இச்சையிருந்தால் சில்பவேலைசெய்கிறான்; இச்சையில்லையாகில் வெறுமனேயிருக்கிறான். அது போலிங்குங்கண்டு கொள்வது. புத்திக்குக் கர்த்ருத்வ மொப்புக்கொண்டால் அதுஅசேதநமாகையால் அதற்குஇச்சைபிறவாது; அப்போது ஒரு கார்யத்தைச் செய்கைக்கும் தவிருகைக்கும் இவ்விதமானவ்யவஸ்தைசொல்லமுடியாது. ௨௫௫.

அதி-௫௬. ஸூ-௨௫௬. பராத்து தச்ச்ருதே꞉.

(ஸ-ரா-வ்யா.) தச்ச்ருதே꞉ - கர்த்ருத்வம் பராத்மாயத்தமென்று வேதத்திற்சொல்லுகையாலே, பராத்து - பரமபுருஷனிடத்தில் நின்றுமே, (ஜீவனுக்குக் கர்த்ருத்வம் ஸித்திக்கிறது.) ௨௫௬.

(ஸ-பா.) ஜீவனுக்குக் கர்த்ருத்வமுண்டென்று கீழ்சொல்லப்பட்டது. அது ஸ்வதந்த்ரகர்த்ருத்வம்மா, அல்லது ஈச்வராதீனம்மாஎன்று இதில் விசாரிக்கப்படுகிறது. ஜீவன் ஒரு காரியத்தைச் செய்யும்போது ஈச்வரன் ஸகாயமாக வேண்டியதில்லை. வ்யவஸாயம் செய்யும்போது ஏருதுகலப்பை முதலிய ஸாமக்ரிகளைக்கொண்டே ஜீவன் கார்யத்தை நடத்துகிறான்; இதுபோலவே மற்றும் எக்காரியத்திலும் ஈச்வரனிருந்து தலைக்கட்டிவைக்கிறானென்பதில்லை. என்கிற பூர்வபக்ஷத்துக்கு,— ஜீவன் ஒருகாரியத்தைச் செய்யும்போது ஈச்வரனாலேயே செய்விக்கப்படுகிறான். இதற்குப்ரமாணம்,—"ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி" இந்த ஈச்வரனே ஸத்கர்மங்களையும் அஸத்கர்மங்களையும் செய்விக்கிறான் என்கிற வேதவாக்யம் என்று ஸமாதாநம். சொல்லுகிறார். ௨௫௭

(ஶா-ஸா.) இவ்வதிகரணத்தில், கீழ்சொன்ன ஜீவனுடைய கர்த்ருத்வமும் பரமாத்மாதீநமென்கிறார்.— ஜீவன்புண்ய பாபங்களைச் செய்யும்போது ஸ்வதந்த்ரனுய்ச்செய்கிறிலன். பரமாத்மாவினுல் செய்விக்கப் படுகிறான் என்றால், இவன் ஸ்வபுத்தியினுல் புண்யபாபங்களைச் செய்யாமையாலே ஸுகதுக்கங்களும் இவனுக்குக்கிடையாதொழிய வேணும்; மேலும் ஜீவனைக்குறித்து, இதைச்செய், இதைத்தவிரென்று சொல்லுகிற சாஸ்திரத்திற்கும் ப்ரயோஜநமில்லையாய்விடும் ஆகையால் ஜீவன் ஸ்வதந்த்ரனுயே கர்த்தாவாகிறானென்று பூர்வபக்ஷம்.—“ அந்த꞉ப்ரவிஷ்ட꞉ ஶாஸ்தா” “ய ஆத்மநி திஷ்ட²ந் ஆத்மாநமந்தரோ யமயதி” என்று பரமாத்மாவே உள்ளே பிரவேசித்து ஜீவனை அந்தந்தகார்யங்களில் நியமிக்கிறானென்றுசொல்லுகையாலே ஜீவன்ஸ்வதந்த்ரகர்த்தாவன்று. பரமாத்மாவினுலேவப்பட்டவனுய்ச் செய்கிறானென்று ஸித்தாந்தம். ௨௫௬.

ஸூ-௨-௩-௪௧. க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்³தா⁴வையர்த்²யாதி³ப்⁴ய꞉.

(ஶ-ஶா-வ்ய.) விஹிதப்ரதிஷித்³தா⁴வையர்த்²யாதி³ப்⁴ய꞉-விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்கு வையர்த்யம் வாராமைக்காக, க்ருதப்ரயத்நாபேக்ஷ꞉-(பரமபுருஷன் ஜீவனுற்)செய்யப்பட்ட ப்ரயத்நத்தையபேக்ஷித்திருக்கிறான்.

(ஶ-ஸா.) ஜீவனுடைய புண்யபாபங்களை ஈஶ்வரனே செய்வித்தானுகில், ஒருவனுக்கு ஸத்கர்மத்தைச் செய்வித்து ஸுகத்தைக்கொடுக்கையும், மற்றொருவனுக்கு துஷ்கர்மத்தைச் செய்வித்து து꞉கத்தைக் கொடுக்கையும் செய்தால் ஈஶ்வரன்பக்ஷபாதியர்வான்; நரகம் முதலியதுன்பத்தை விளைக்கையால் நிர்த்தயனுவான் என்கிறசங்கைக்கு ஸமாதாநம்,—ஜீவன் செய்த புண்யபாபங்களைப் பார்த்தே ஈஶ்வரன் ஜீவனுக்கு நன்மைதீமைகளை விளைக்கிறானுகையால் அவனுக்குக் கீழ்ச்சொன்னதோஷம் வரமாட்டாது. மேகமானது பயிர் செடி கொடி முதலான எல்லாஇடங்களிலும் பெய்வதுபோல் ஈஶ்வரன் எல்லாருக்கும் ஸுகதுக்க ரூபமான பலங்களைக்கொடுக்கிறான். அந்தந்த கொடி செடிகளுக்கு அந்த விரைகாரணமாவதுபோல் அவரவர்களுடைய ஸுகதுக்கங்களுக்கு அவ்வவர்களது புண்யபாபங்கள் காரணம். அந்தபுண்யபாபங்களையும், ஜீவன் “இதைச்செய்யவேணும்” என்று முயன்றபின்பு அந்த ஈஶ்வரனே அதை முற்றும் தலைக்கட்டிவைக்கிறான் இப்படி ஒப்புக்கொள்ளாமல் ஈஶ்வரனே எல்லாவற்றையும் அடியே தொடங்கி செய்விக்கிறானென்றால் “ இதைச்செய் இதைத்தவிர்” என்று சொல்லுகிற சாஸ்த்ரம் வீணாய்விடும்.

(ஶா-ஸா.) ஆனுல் விதிநிஷேதசாஸ்த்ரங்களுக்குப் ப்ரயோஜநமென்னென்னில், ஒருகார்யத்தில் முதலில் ஜீவன் ஸ்வதந்த்ரனுகவே ப்ரவர்த்திக்கிறான். இவனுக்கவ்வளவே சக்தியுள்ளது; பின்பு ஈஶ்வரன்தான் இவன், யத்நித்ததைத் தலைக்கட்டிவைக்கிறான். அதைத்தலைக்கட்டிக்கொள்ள ஜீவனுக்கு சக்தியில்லை. இப்படி ஜீவன்முதலில் நல்வழியில் முயலுகைக்காக சாஸ்த்ரங்களேற்பட்டது ஆகையால் அவை வீணுகமாட்டா. அந்த முதல்முயற்சியைப் பற்றியே இவனுக்கு ஸுகதுக்கங்களுண்டாகின்றன. அந்தப்ரதம ப்ரவ்ருத்தியையும் ஜீவனுக்கு ஈஶ்வரன் கர்மாநுகுணமாகக் கொடுக்கிறானுகையால் ஒருவிதமானபாதையுமில்லை. ௨௫௭.

அதி-௨௦. ஸூ-௨-௩-௪௨. அம்ஶோ நாநாவ்யபதே³ஶாத³ந்யதா² சாபி தா³ஶகிதவாதி³த்வமதீ⁴யத ஏகே.

(ஸ-ரா-வ்ய.) நாநா - பிந்நமாகவும், அந்யதா - அபிந்நமாகவும், வ்யபதேசாத் - சொல்லுகையினாலே, அம்ஸ: - (ஜீவன் பரமாத்மாவினுடைய) ஏகதேசம். ஏகே-ஒருத்தர், (ஆதர்வணிகர்), தாஸகிதவாதித்வம் - (பரமாத்மாவுக்கு) தாசன் கிதவன் முதலான ஸ்வரூபமா யிருக்கையை, அதீயதே - அத்யயநம் செய்கிறார்கள். உரு அ.

(ஸ-ஹா.) ஜீவனுக்கு க்ரியைகளைச் செய்வித்து ஈஶ்வரன் உபகாரம் செய்கிறானென்று கீழேசொல்லிற்று. அந்த உபகாரமானது யஜமானன் வேலைக்காரனுக்குச் செய்வதுபோலாயிற்று, அப்பொழுது ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறான ஜீவனுண்டென்று ஏற்பட்டது. இதனால் அத்வைதம் ஸித்திக்கவில்லையே யென்னில், ''யஆத்மநிதிஷ்டந்நாத்மநோந்தரோயமயதி'' என்ற ஈஶ்வரன் ஜீவாத்மாவினுள்ளேயிருந்து அவனை அவ்வவகார்யங்களில் நியமிக்கிறானென்ற ஜீவேஶ்வரர்களுக்கு பேதமும், ''ப்ரஹ்மதாஸா:'' ஓடக்காரன் முதலிய ஸகலப்ராணிகளும் ப்ரம்மஸ்வரூபமேயென்று ஒன்றாகவும் சொல்லுகையாலே ஜீவன்ப்ரம்மத்தினுடைய அம்சமென்று ஏற்படுகிறது. சரீரத்திலோர் பாகமாகிய கால் கைகளை ஒருகால் சரீரத்தைக்காட்டிலும் வேறிட்டு இந்த சரீரத்தின் கை கால்கள் என்பதுமுண்டு, ஆகிலும் அது சரீரத்தைக் காட்டிலும் வேறாகாது. அதுபோலவே இங்கும் ஜீவன்ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறாகானுகையால் அத்வைதத்துக்குஹானியில்லை. இதனால் பேதஶ்ருதிக்கும் அபேதஶ்ருதிக்கும் விரோதமில்லை யென்பதும் சொல்லப்பட்டது. உகூஅ.

(ரா-ஹா) ''ப்ருதகாத்மாநம்ப்ரேரிதாரஞ்சமத்வா'' என் ஜீவாத்மாவைக்காட்டிலும் பரமாத்மாவை பிந்நமாக அறியவேணுமென்று இருவர்க்கும் பேதம் சொல்லுகையாலே பரமாத்மாவைக் காட்டிலும் ஜீவன் அத்யந்தம் பிந்நனென்றார்கள். சிலர் ''தத்வமஸி'' அந்த பரப்ரஹ்மமே நீயாகிறாயென்று ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லுகையாலே இருவர்க்கும் பேதமில்லை. ப்ரஹ்மமே மாயையினால் அஜ்ஞாநத்தை யடைந்து ஜீவனாகத் தோற்றுகிறதென்றார் சிலர்; அந்த ப்ரஹ்மமே பாமார்த்தமான உபாதியோடு கூடி ஜீவனாய் பாவிக்கிறதென்றார் சிலர்; இம்மூவரையும் இவ்வதிகரணத்தினால் நிரஸிக்கிறார். ஜீவன் பரமாத்மாவைக் காட்டிலும் அத்யந்த பிந்நனென்றால் அபேதம் சொல்லுகிற ஶ்ருதிக்கு அரசனால் பரிபாலிக்கப்பட்ட ஜகத்தை ''அரசனே ஜகத்து'' என்பதுபோல் கௌணமாகஅர்த்தம் சொல்லவேணும். மற்ற இரண்டு பக்ஷத்திலும் பேதஶ்ருதிவ்யாவஹாரிக தசையிலுள்ள பேதத்தைச் சொல்லுகிறதென்றுஅதுக்குஸங்கோசம்செய்யவேண்டும்.ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மத்திற்கு அஜ்ஞாநாதிதோஷங்களும் கற்பிக்கவேண்டும்; இம்மூன்று பக்ஷங்களைக்காட்டிலும்; ஜீவன்பரமாத்மாவுக்குசரீரம். இதில்ப்ரமாணம்''யஸ்யாத்மாஶரீரம்''என்றஶ்ருதி.சரீரமானது சரீரியினுடைய ஏகதேசம், ஆகையால் ஜீவனைசரீரமாக உடைய பரமாத்மாவினுடைய ஏகதேசம அவனுக்கு சரீரமான ஜீவன் என்றபக்ஷமே ஶ்ரேஷ்டம். இப்பக்ஷத்தில், சரீரவாசகசப்தம் சரீரியைச்சொல்லுகையாலே'' தத்வமஸி'' ''அயமாத்மாப்ரஹ்ம'' இத்யாதி வாக்யங்களில் ஜீவவாசக சப்தத்திற்கு ஜீவசரீரியானபரமாத்மா அர்த்தமாகையாலே அந்தஶ்ருதிகளுக்கும் விரோதமில்லை. அணுவாய் அல்பஜ்ஞனை ஜீவனுக்கும் விபுவாய் ஸர்வஜ்ஞனை பரமாத்மாவுக்கும் ஸ்வரூபஸ்வபாவங்கள் பிந்நங்களாகையாலே பேதஶ்ருதிக்கும் விரோதமில்லை. இப்படியங்கீகரிக்கையினாலே, ஸகலாந்

தர்வாமியான பரமாத்மாவை "ப்ரஹ்மதாஸா ப்ரஹ்மதாஸா ப்ரஹ்மேமே கிதவா:" "என்று தாசனென்றும் தாஸனென்றும் கிதவனென்றும் ஆதர்வணிகர் சொல்லுகிறஸ்ருதியினர்த்தமும் ஒத்திருக்கிறது ஆகையால் ஜீவன் ப்ரஹ்மத்தினுடைய அம்சமென்பதே ஸித்தாந்தம் ௨௫௮.

ஸூ-௨௩௪௩. மந்த்ரவர்ணாச்ச.

(ஸ-ரா-வ்ரு.) மந்த்ரவர்ணாச்ச - "பாதோऽஸ்ய விஶ்வா பூதாநி" என்கிற மந்த்ரத்தினுலும், (ஜீவன் பரமாத்மாம்சமென்பது ஸித்தம்.) இந்த பரமாத்மாவுக்கு ஸமஸ்தபூதங்களும் பாதமென்று இந்தஸ்ருதிக் கர்த்தம். பாதமாவது ஏகதேசம். சரீரத்தில் பாதம் ஏகதேசமானதுபோல் பரமாத்மாவுக்கு ஸமஸ்த்தபூதங்களும் ஏகதேசமென்றபடி. ௨௫௯.

(ஸ-ரா-ஹா.)இவ்வர்த்தத்தில்ப்ரமாணம்"பாதோऽஸ்ய ஸர்வா பூதாநி" என்கிற வேதவாக்யம். ஸர்வா பூதாநி - ஸகலப்ராணிகளும், அஸ்ய - இந்த ப்ரஹ்மத்தினுடைய, பாத: அம்சம்; அதாவது-ஏகதேசம் என்று இதுக்கு அர்த்தம். ௨௫௯.

ஸூ-௨௩௪௪. அபி ச ஸ்மர்யதே.

(ஸ-ரா-வ்ரு.) ஸ்மர்யதே அபி - ("மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:" என்கிற) கீதாவாக்யத்திலும் ஜீவன் பரமாத்மாவினுடைய அம்சமென்று சொல்லப்பட்டது. (அநாதியான ஜீவன் என்னுடைய அம்சமென்று அந்த க்ருஷ்ணவசநத்திற் கர்த்தம்.) ௨௬௦.

(ஸ-ரா-ஹா.) "மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:" லோகத்தில் அநாதியான ஜீவன் என்னுடைய அம்சந்தான் என்ற கீதையும் இதுக்கு ப்ரமாணம். ௨௬௦.

ஸூ-௨௩௪௫. ப்ரகாஶாதிவத்து நைவம் பர:.

(ஸ-ரா-வ்ரு.) ப்ரகாஶாதிவத் - (மணிமுதலியவற்றின்) ப்ரகாசாதிகளைப்போல், பர: பரமாத்மா, ஏவம் ந - ஜீவனுடைய ஸ்வபாவத்தையுடையவனன்று. ௨௬௧.

(ஸ-ஹா) ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதமில்லையாகில் ஜீவனுக்குண்டான து:கங்களெல்லாம் ப்ரஹ்மத்துக்குமுண்டாம். ஒருவனுக்குக்காலில்வேதனையுண்டானுல் அவ்வேதனையவனுக்குமுண்டாகிறுப்போலே அம்சத்திலுண்டான துக்கம் அம்சிக்குத்தவருது.இனிமுக்தியடைந்து ப்ரஹ்மமாவதைக்காட்டிலும் ஸம்ஸாரியாயிருப்பதே நலமென்று வேதாந்தத்தைக்கேட்க அதிகாரிகளே யகப்படார்களேயென்னில்,—ஜீவனுடைய துக்கம் ப்ரஹ்மத்துக்குஸம்பவியாது. ஜீவன் அஜ்ஞாநத்தினுல் மூடப்பட்டுஇந்ததேஹமே ஆத்மாவென்றுப்ரமித்து,அதுக்கொரு தீங்குவிளைந்தால் அதைத்தன்னதாகப்ரமிக்கிருன். இவ்விதமானப்ரமம் ப்ரஹ்மத்துக்குக்கிடையாது. ஜீவனுக்கும் துக்கப்ரமமொழிய வாஸ்தவமாக துக்கம்கிடையாது. எப்படியானுல் ஸூர்யகிரணம் கோணலில்லாமலிருந்தபோதிலும் வெய்யிலில் கைகால்களைக்கோணலாகக்காட்டினுல் அக்கிரணம்கோணலாகக்காண்கிறதோ,எப்படியானுல், முகம் சலியாமலிருந்தபோதிலும் நீரில் பார்க்கும்போது அதின்சலநத்தினுல்தான் சலிப்

பதுபோல் காண்கிறதோ, ஜீவனுடைய துக்கப்ராந்தியும் அப்படிப்பட்டதேயாகையால் ஜீவனுக்கு வாஸ்தவமான துக்கம் கிடையாது. அதினால் ப்ரஹ்மத்துக்கும் துக்கம் கிடையாது. உகக.

(ரா-ஹா) அம்சமாவது ஏகதேசம். சரீரத்தினோரம்சத்தில் ஒருதோஷமிருந்தால் அதுசரீரத்தின்தோஷமாகிறது. அப்படியே பரமாத்மாவினுடைய ஏகதேசமான ஜீவனிலுள்ளதோஷங்களும் பரமாத்மாவினதேயாகவேணும். அப்போது பரமாத்மா நிர்தோஷனென்கிறஶ்ருதியோடு விரோதம்வருமென்னில், காந்தியோடுகூடின மணிக்குக்காந்திஎப்படி அம்சமோ, அதுபோல் பரமாத்மாவுக்கு ஜீவன் அம்சமாகிறான். காந்திக்குஸங்கோசவிகாஸங்கள் முதலியதோஷங்கள்வந்தாலும் அத்தோஷங்கள் மணிக்குஸம்பவியாதாப்போலே ஜீவனுடையதோஷங்களும் பரமாத்மாவுக்குஸம்பவியாது. சரீரியானஆத்மாவுக்கு சரீரம் அம்சம். சரீரத்திற்குண்டான ஜநநமரணம் முதலியதோஷங்கள்ஆத்மாவுக்கு ஸம்பவியாது. இதுமுதலான த்ருஷ்டாந்தங்கள் கண்டுகொள்வது. உகக.

ஸூ-உகூஉ. ஸ்மரந்தி ச.

(ஶ-வ்-ஹா) ஸ்மரந்தி ச - "தத்ர ய꞉ பரமாத்மா ஹி ஸ நித்யோ நிர்குணஸ்ஸ்ம்ருத꞉ । ந லிப்யதே ஃபலைஶ்சாபி பத்மபத்ரமிவாம்பஸா" தாமரையிலையில் நீர் ஒட்டாததுபோல் நிர்க்குணனாகிய பரமாத்மாவினிடத்தில் புண்யபாபங்கள் சேராதென்று வ்யாஸரும்சொல்லியிருக்கிறார். உகூஉ.

(ரா-வ்-ஹா.) ஸ்மரந்தி ச - ஏகதேஶஸ்தி தஸ்யாக்னேர் ஜ்யோத்ஸ்நா விஸ்தாரிணீ யதா । பரஸ்ய ப்ரஹ்மண꞉ ஶக்திஸ்ததேதமகிலம் ஜகத்" என்று அக்நிக்குக்காந்திபோல் பரமாத்மாவுக்கு ஜகத்து அம்சமாகிறது என்று இவ்வர்த்தத்தையே பராசராதிகளும் சொல்லுகிறார்கள். உகூஉ.

ஸூ - உகூங. அநுஜ்ஞாபரிஹாரௌ தேஹஸம்பந்தாஜ்ஜ்யோதிராதிவத்.

(ஶ-ரா-வ்.) ஜ்யோதிராதிவத் - அக்நிமுதலிய வற்றுக்குப்போல, தேஹஸம்பந்தாத் - சரீரஸம்பந்தத்தினாலே, அநுஜ்ஞாபரிஹாரௌ - (வேதாத்யயநாதிகளில்சிலர்க்கு) அநுமதியும் (சிலர்க்கு) நிஷேதமும்கூடும்.

(ஶ-ஹா.) கீழ் ஜீவன் ப்ரஹ்மத்தினுடைய அம்சமென்று சொல்லப்பட்டது. ப்ரஹ்மம் நிரவயவமாகையால் அதுக்கு அம்சமென்பதுகூடாது. ஸாவயவமான வஸ்துவுக்கே அம்சமுண்டு. ஆகையால் ஜீவன் அம்சமென்றது-அம்சம்போலே என்றாய், ஜீவன் ஸாக்ஷாத் ப்ரஹ்மஸ்வரூபமென்றே அங்கீகரிக்கவேணும். இப்படியாகில் எல்லா ஜீவர்களும் ப்ரஹ்மஸ்வரூப மாகையால், ருதுஸ்நாநம்பண்ணினவன்று தன் பார்யையைப் புணரவேணும், யாகத்தில் பசுவதம் செய்யவேணும் என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட அந்தந்த கார்யங்களிலநுஜ்ஞையும், குருபத்நியுடன் புணரலாகாது, ஸகல பூதங்களையும் ஹிம்ஸிக்கலாகாது என்ற நிஷேதமும்கூடாது. தன்னுடைய பத்நியென்றும் குருபத்நியென்றும் பேதமாக சாஸ்த்ரம்சொன்னதுக்குத் தாத்பர்ய மென்னென்னில்,—இந்த பேதம் தேஹஸம்பந்தத்தினாலுண்டானது. அதாவது - தேஹமே ஆத்மாவென்கிற ப்ராந்தி - லோகத்தில், "நான்செய்கிறேன், நான் போகிறேன்" என்ற வ்யவஹாரமெல்லாம் தேஹாத்ம ப்ரமமூலமாயேயிருக்கிறது. தத்வஜ்ஞாநம் பிறந்தபின் பேதமில்லாவிடினும், அது பிறப்பதற்குமுன் ஸம்ஸாரதசையில் பேதமுண்டாகையால், அக்காலத்தில் செய்யவேண்டு மவைகளுக்கு அநுஜ்ஞாபரிஹாரங்கள் சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டது. தத்வஜ்ஞாநம் பிறந்தவ

னுக்கு இந்த அநுஜ்ஞாபரிஹாரங்கள் கிடையாது. ஆகிலும் அவனுக்கு தேஹாத்ம ப்ராந்தி யில்லாமையால், அவன் ஒருநிஷித்தகர்மங்களையும் செய்யவும் மாட்டான். இதற்கு த்ருஷ்டாந்தம்—லோகத்தில் நெருப்பு ஒன்றாயிருந்தபோதிலும், சவத்தில் பட்ட நெருப்புக்கூடாதென்றும், மற்ற நெருப்பு கூடுமென்றும், ஸூர்யகிரண மொன்றாயிருந்தபோதிலும் அமேத்யத்தில்பட்ட கிரணம் கூடாதென்றும் மற்ற கிரணம் கூடுமென்றும் லோகத்தில் காண்கிற அநுஜ்ஞாபரிஹாரங்களைப்போல் சாஸ்த்ரத்திலும் கண்டுகொள்வது. ௨௪௩.

(ரா-ஹா.) ஆத்மாக்களெல்லாம் பரமாத்மாவினுடைய அம்சமானுல் ஒருவரதிகரென்றும் ஒருவர் ந்யூநரென்று மில்லாமையாலே எல்லார்க்கும் வேதாத்யயந யஜ்ஞயாகாதிகளில் அதிகாரம்உண்டாயிருக்க, சிலர்க்குண்டென்றும் சிலர்க்கில்லை யென்றும் சொல்லும்வித மென்னென்ன, அக்நி ஒன்றேயாயினும் அது யஜ்ஞத்தில் ஸம்பந்தித்திருந்தால் பரிசுத்தமாய் ஸத்கர்மங்களுக்கு யோக்யமாயும். ஶ்மசாநத்தில் ஸம்பந்தித்திருந்தால் அசுத்தமாய் அயோக்யமாயு மாகிறப்போலே, பரிசுத்தமான ப்ராஹ்மண சரீரமெடுத்தவன் அவற்றுக்கு யோக்யனென்றும் பரிசுத்தமில்லாத சூத்ரசரீரமெடுத்தால் அயோக்யனென்றும் சொல்லுகை உபபந்நமாகும்.

ஸூ-௨௪௪. அஸந்ததேஶ்சாவ்யதிகர:.

(ஶ-வ்ய.) அஸந்ததே: - ஸர்வசரீர ஸம்பந்தமில்லாமையால், அவ்யதிகர: - ஸுகதுஃகஸாங்கர்யமில்லை. ௨௪௪.

(ரா-வ்ய.) அஸந்ததே: ச - ஜீவபரமாத்மாக்களுக்குப் பரஸ்பரம் பேதத்தினாலும், அவ்யதிகர: - (போகத்தில்) ஸம்பர்க்கமில்லை. ஸந்ததியாவது - விடாமல் ஒன்றாய் சேர்ந்திருக்கை. அதாவது அபேதம். அஸந்ததியாவது - அதுக்கெதிர்த்தட்டான பேதம். ௨௪௪.

(ஶ-ஹா.) ஜீவன்களெல்லாம் ப்ரஹ்மஸ்வரூபிகளாகில், ஜீவன்களுக்குப் பரஸ்பரம் பேதமில்லாமையால், ஒருவன் செய்த கர்மத்தின் பலத்தை மற்றொருவனும் அநுபவிக்கட்டும். இதனால் எல்லாரும் எல்லாபலங்களையும் அநுபவிக்க வேண்டிவரும். இவன் ஸுகி, இவன் துஃகி என்கிற பேதம் இல்லாமல் போய்விடும். ஆதற்காக ஜீவன்கள் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறா யிருக்கிறார்களென் றொப்புக்கொள்ளவேணும். இப்பொழுது எந்த ஜீவன் எந்த கர்மத்தைச்செய்கிறானே, அவன் அதின்பலத்தை யடைகிறான் என்று வ்யவஸ்த்தை யேற்பட்டிருக்கும் என்கிற சங்கைக்கு உத்தரம்—ஜீவனென்பது கேவலப்ரஹ்ம ஸ்வரூபத்தையன்று, புத்தியோடு கூடின ப்ரஹ்மாம்சமே ஜீவனெனப்படும். அந்தபுத்தியென்பது அணுஸ்வரூபமாகையால்அது எல்லாசரீரத்திலுமுள்ள தொன்றன்று;அது ஒவ்வொருசரீரத்திலும் வேறுபட்டிருக்கும், ஆகையால் அந்த புத்தியோடுகூடின ஜீவனும் ஒவ்வொரு சரீரத்திலும் வேறுபட்டிருக்கையால், அந்தந்த புத்தியோடுகூடின ஜீவன் பண்ணின கர்மத்தின் பலத்தை அந்தந்த ஜீவனநுபவிக்கிறானென்கிற வ்யவஸ்த்தை கூடுமென்று.

(ரா-ஹா.) இப்பக்ஷத்தில், ஜீவர்கள் அணுவாய் ப்ரதிசரீரம் பிந்நராய் இருக்கையாலே ஒருவனுக்குண்டான ஸுகதுக்கங்கள் மற்றொரு ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ப்ரஸங்கியாது. ப்ரஹ்மமே ஜீவனென்கிற பக்ஷத்தில் ஜீவனுக்குண்டான ஸகலதோஷங்களும் ப்ரஹ்மத்திற் குண்டாகும். ௨௪௪.

ஸூ-௨௪௫. § ஆபாஸ ஏவ ச.

§ ஆபாஸ ஏவ ச - ஆபாஸா ஏவ ச - என்று இரண்டுபாடமுண்டு.

(ப - வ்ரு.) ஆபாஸஏவச-ப்ரஹ்மத்தின் அஜ்ஞானத்தினுல் ப்ரதிபிம்பமே.

(ரா - வ்ரு.) ஆபாஸா:ஏவ வ - (ப்ரஹ்மமே அஜ்ஞானத்தினுல் ஜீவனுகிறதென்றபக்ஷத்தில் ஸர்வஜ்ஞனை பரமாத்மாவுக்கு அஜ்ஞானமும் ஸ்வரூபாவரணமும் கல்பிக்கவேண்டுமாகையால், அபேதஸாதகமான ஹேதுக்களெல்லாம்) தோஷயுக்தங்களாயே யிருக்கும். ப்ரஹ்மம் நிர்துஷ்டமென்கிற ஶ்ருதியும் விரோதிக்கும். உகரு

(ப-ஹா.) கீழ் இதுவரையில், ஜீவனென்பவன், புத்தியென்கிற உபாதியோடு கூடின ப்ரஹ்மத்தி னம்சமென்று சொல்லிக்கொண்டுவந்து, அதற்குமேல் வந்ததோஷங்களையும் பரிஹரித்தார். இதில் அப்பக்ஷம் ஸரியன்றென்கிற அபிப்ராயத்தினுல் வேறொருபக்ஷம் சொல்லுகிறார். ஜீவனென்பவன் ப்ரஹ்மத்தினுடைய ப்ரதிபிம்பமே, மற்றொன்றன்று. இப்பக்ஷத்தில் கீழ்ச்சொன்ன தோஷங்களொன்றும் வராது. எப்படியெனில்—நாலுகலசங்களில் நீரைநிறைத்து வெய்யிலில் வைத்தால் அந்நாலிலும் ஸூர்யனுடைய ப்ரதிபிம்பம் விழுகிறது. அவற்றில் ஒரு கலசம் அசைந்தால் அக்கலசத்தில் காணப்படுகிற ப்ரதிபிம்பமே யசையும். மற்றொரு கலசத்தில் காண்கிற ப்ரதிபிம்பம் அசைகிறதில்லை. அதுபோலவே, ஒவ்வொரு புத்தியிலும் ஜீவனென்று சொல்லப்படுகிற ப்ரதிபிம்பம் வெவ்வேறாகையால், ஒரு ஜீவனுக்குண்டாகிய ஸுகதுஃகங்கள் மற்றொருவனுக் குண்டாகாதென்று கண்டுகொள்க. உகரு

ஸூ-உகசு. அத்ருஷ்டாநியமாத்.

(ப - வ்ரு.) அத்ருஷ்டாநியமாத் - புண்யபாபங்களுக்கு நியமமில்லாமையாலே, (இந்ததோஷம் ஆத்மா விபுவென்பவர் பக்ஷத்தில்வரும்.) உகசு.

(ரா - வ்ரு.) அத்ருஷ்டாநியமாத் - அத்ருஷ்டத்தினுலும் நியமம்கூடாதாகையால், (அபேதவாதம் அஸாரம்.) உகசு.

(ப-ஹா.) ஆத்மா விபுவென்றும் அனேகமென்றும் ஒப்புக்கொள்ளில், எல்லா ஆத்மாக்களும் எல்லா இடங்களிலு மிருக்கையாலே, ஒரு ஆத்மாவோடு சேர்ந்த எந்த மநஸ்ஸும் வாக்கும் காயமும் அவ்வாத்மாவினுடைய புண்யபாபங்களுக்கு ஹேதுவாகிறதோ, அந்தமனோவாக் காயங்கள் மற்றோ ராத்மாவோடும் சேர்ந்திருக்கையால் அதினுலுண்டான புண்யபாபங்கள் ஒருவனுக்கேயுண்டு, மற்றொருவனுக்கு இல்லையென்கிற நியமம் சொல்லமுடியாது. உகசு.

(ரா-ஹா.) பாரமார்த்தி கோபாதியோடுகூடின ப்ரஹ்மத்தினுடைய சிலசில அம்சங்களுக்கு ஜீவனென்று பெயர்; இந்த அம்சங்களிலுண்டான அநாதியான அத்ருஷ்டத்தினுலே உண்டான உபாதியும் அநாதியாகையால் அவ்வம்சங்களிலுண்டான தோஷங்கள் ப்ரஹ்மத்தினுடைய இதரபாகத்தில் ஸம்பவியாது. ப்ரஹ்மம் நிர்துஷ்டமென்கிற ஶ்ருதிக்கும் விரோதமில்லை. ஸுகதுக்கா நுபவங்களிலும் பரஸ்பரஸம்பர்க்கமில்லை என்கிற பாஸ்கரமதத்திலும், அத்ருஷ்டாதிகளினுல் ப்ரஹ்மத்தில் நின்றும் அம்சத்தைப் பிரித்தெடுக்க முடியாமையால் அத்ருஷ்டமும் உபாதியும் ப்ரஹ்மாஶ்ரயங்க ளாகையாலே தோஷங்களும் ப்ரஹ்மாஶ்ரயங்களேயாகும் ஆகையால் கீழ்ச்சொன்ன தோஷங்கள் நிவர்த்தியாது. உகசு.

ஸூ-உகஎ. அபிஸந்த்யாதிஷ்வபிசைவம்.

(ப-வ்ரு.) அபிஸந்த்யாதிஷு அபி - அபிஸந்திமுதலான வற்றிலும் ஏவம் - இப்படியே. உகஎ.

(ரா-வ்ய-ஸா.) அபிஸந்த்யாதிஷ்வபி- (அத்ருஷ்டத்திற்குக்காரணமாக ஒப்புக்கொண்ட) ஸங்கல்பம் (அநுஷ்டாநம்) முதலியவைகளிலும், ஏவம் - இப்படியே. (இவைகளும் ப்ரஹ்மத்தையே ஆஸ்ரயிக்குமென்று கருத்து ) உசுஎ.

(ஸு-ஸா.) எந்த ஜீவன் "இக்காரியத்தை நான் செய்யக்கடவேன்" என்று ஸங்கல்பித்துக்கொண்டு எக்காரியத்தைச் செய்கிருனே, அதிஞலுண்டான புண்ய பாபங்களை அந்த ஜீவனே அடைகிருன் என்று ஒப்புக்கொள்ளுகிறேமென்னில்,—ஸங்கல்பமாவது ஒருவிதமான ஜ்ஞாநம், அது எந்த ஆத்மா வோடுமநஸ்ஸு சேர்ந்தால் அந்த ஆத்மாவிலுண்டாகிறதென்று சொல்லவேணும். எல்லா ஆத்மாக்களும் எங்கும் நிறைந்திருக்கையால், இந்த ஆத்மாவோடு மநஸ்ஸு சேரும்போது மற்ற எல்லா ஆத்மாக்களோடும் சேருமாகையால், இவ்வாத்மாவிற்போல் மற்ற ஆத்மாக்களிலும் இந்த ஸங்கல்பம் ஏன் உண்டாகக்கூடாது. அதிஞலுண்டான புண்ய பாபங்கள்தான் மற்ற ஆத்மாக்களுக்கு ஏன் ஸம்பவியாது. ஆகையால் ஆத்மாவிபு அனேகம் என்ற மதம் சரியன்று. உசுஎ.

ஸூ-உசுஅ. ப்ரதேசாதிதி சேந்நாந்தர்பாவாத்

(ஸு-வ்ய.) ப்ரதேசாத் - சரீரமாகிற ப்ரதேசபேதத்திஞல் (நியமம் ஸம்பவிக்கும்), இதிசேத் - என்றால், அந்தர்பாவாத் - (அந்தசரீரத்தில் மற்ற எல்லா ஆத்மாக்களும்) அந்தர்ப்பவித்திருக்கையாலே, ந - (அந்நியமம்) சரிப்படாது. உசுஅ.

(ரா-வ்ய-ஸா.) ப்ரதேசாத்-உபாதியுக்தப்ரதேசத்தைக்காட்டிலும் அதில்லாத ப்ரஹ்மப்ரதேசம் பிந்நமாயிருக்கையால், (அதுக்குக் கீழ்ச்சொன்ன தோஷங்கள் வாராது), இதிசேத் - என்றால், அந்தர்பாவாத் - (அப்ப்ரதேசமும்) உபாதியுக்த ப்ரதேசத்திற்குள் அந்தர்பவிக்கையாலே, ந - அப்படிசொல்லக்கூடாது. (ப்ரஹ்மம் விபுவாகையால் அதுசலியாது உபாதியேபோகவேண்டும். அது உபாதியில்லாத ப்ரஹ்மப்ரதேசங்களிலுங் கூடப்போமாகையாலே கீழ்ச்சொன்னவிபாகம் வாராதென்று தாத்பர்யம்.)

(ஸு-ஸா.) ஆத்மாக்கள் விபுவாயினும் அனேகமாயினும், ஒவ்வொரு ஆத்மாவுக்கும் சரீரம் வேறுவேருயிருக்கும். எந்த சரீரத்துக்கு எந்த ஆத்மாவோ, அந்த சரீரத்திற்குள் அந்த ஆத்மாவோடு மநஸ்ஸு சேர்ந்தால் அவ்வாத்மாவுக்கு ஜ்ஞாநமுண்டாகிறதென்று ஒப்புக்கொள்ளினும், எங்குமுள்ள ஆத்மாக்கள் அந்த சரீரத்திற்குள்ளு மிருக்கையாலே அம்மநஸ்ஸு அந்த சரீரத்திற்குள் அவ்வாத்மாவோடு ஸம்பந்திப்பதுபோல் மற்ற ஆத்மாக்களோடும் ஸம்பந்தித்தே யிருக்குமாகையால். அவ்வாத்மாவுக்கே ஜ்ஞாநமுண்டாகிறது, மற்ற ஆத்மாவுக்கு உண்டாகிறதில்லை என்கிற நியமம் சரிப்படாது. இப்படி ஆத்மா விபுவென்கிற பக்ஷத்தில், புண்யபாப வ்யவஸ்த்தையில் எவ்விதமான யுக்தியும் சரிப்படா தாகையால் அத்வைத ஸித்தாந்தப்படி அணுஸ்வரூபியான புத்தியென்னு மந்தஃகரணத்திஞ லாவரிக்கப்பட்ட ப்ரஹ்மாம்ச மாத்மாவென்ருவது, அல்லது, அந்தபுத்தில் ப்ரதிபலிக்கிற ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்ப மாத்மாவென்ருவது ஒப்புக்கொள்ளவேணும்.

உ-ம் அத்யாயத்தில் ௩-ம் பாதம் முற்றிற்று.

## ச - வது பாதம்.

அதி - கூக. ஸூ- உகூக. தயாப்ராணா꞉.

(ஸ - பா - வ்ரு.) ப்ராணா꞉ - ப்ராணன்கள், தயா - அப்படியே, (ஜீவனைப்போலே நித்யங்கள்). உகூக.

(ஸ-ஹா.) இந்த பாதத்தில் இந்த்ரியஸ்வரூபம் நிஷ்கர்ஷிக்கப்படுகிறது—உபநிஷத்தில் சிலவிடங்களில், "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மனஸ்ஸர்வேந்த்ரியாணிச" என்றுஆகாசாதிகளைப்போல் இந்த்ரியங்களும் ஸ்ருஷ்டிகாலத்திலுண்டாகின்றனவென்று சொல்லப்பட்டது. சிலவிடங்களில் 'அஸத்வா இதமக்ர ஆஸீத்' ததாஹு꞉கிம்தத்ஸதாஸீதிதி ருஷயோ வாவதே அக்ரே அஸதாஸீத் தத்ருஷய꞉" என்று ஸ்ருஷ்டிக்குமுன் ருஷிகளிருந்தார்களென்றும், ருஷிகளென்று ஆரைச்சொல்லுகிறதென்றால், இந்த்ரியங்களைச் சொல்லுகிறதென்றும், இப்படி இந்த்ரியங்கள் ஸ்ருஷ்டிக்கு முன்னிருந்தனஎன்று சொல்லுகையாலே, அவற்றுக்கு உத்பத்தியில்லை, ஆத்மாவைப்போல் நித்யங்களென்று தோற்றுகிறது. இவ்விரண்டில் எதை ஸித்தாந்தமாகக் கொள்ள வேணுமென்னில், ஆகாசாதிகளைப்போல் இந்த்ரியங்களுமுண்டாகின்றனவென்பதேஸித்தாந்தம் "ப்ராணா꞉" என்பது - இந்த்ரியங்களை. உகூக.

(பா-ஹா.) இவ்வதிகரணத்தில் இந்த்ரியங்களும் உத்பத்தி விநாசங்களையுள்ளவையென்று ஸ்தாபிக்கிறார்.—"அஸத்வா இதமக்ர ஆஸீத்—கிம் தத்ஸதாஸீதிதி - ருஷயோ வாவதே அக்ரே அஸதாஸீத் தத்ருஷய꞉" ஜகத்ஸ்ருஷ்டிக்குமுன்னே ருஷிகளிருந்தார்கள். அவர்கள் யாரென்றால் ப்ராணன்கள் என்று, இந்த்ரியங்கள் ப்ரளயகாலத்திலும் இருந்ததாகச் சொல்லுகையாலே அவையும் ஆத்மாவைப்போல் நித்யங்கள் என்று பூர்வபக்ஷம். உகூக.

ஸூ- உஎ0. கௌண்யஸம்பவாத் தத்ப்ராக்ச்ருதேஶ்ச

(ஸ-வ்ரு.) கௌண்யஸம்பவாத்-(இந்த்ரியங்களுக்கு)கௌணோத்பத்தி கூடாமையாலும்.

(ஸ-வ.) தத்ப்ராக் - (இந்த்ரியவாசகமான) ப்ராணசப்தத்திற்குமுன், ச்ருதே꞉ - "ஜாயதே"என்கிற சப்தம் கேட்கப்படுகையாலே, (இந்த்ரியங்கள் அநித்யங்கள்.) உஎ0.

(பா-வ்ரு.) தத்ப்ராக்ச்ருதே꞉ - அந்த பரமாத்மாவுக்கே ஸ்ருஷ்டிக்குமுன் ஸத்திதி சொல்லுகையாலே,(இந்த்ரியங்களநித்யங்கள்). அஸம்பவாத்- (ப்ரளயத்தில்) அனேகவஸ்து இல்லாமையால், கௌணீ - (பகுவசநம்) கௌணம். உஎ0.

(ஸ-ஹா.) பூர்வபக்ஷி,இந்த்ரியங்களுக்கு உத்பத்தியில்லையென்று ஸ்திரப்படுத்திக்கொண்டு, சில இடங்களில் இந்த்ரியங்களுக்கு உத்பத்தி சொல்லியிருந்தபோதிலும், அதை கௌணமாகக் கொண்டான். இதில் அதை நிரஸிக்கிறார்.—"கௌண்யஸம்பவாத்" இந்த்ரியங்களுக்குக் கௌணமான உத்பத்தி ஸம்பவியாமையாலே, இந்த்ரியங்களுத்பன்னங்களென்கிற ஶ்ருதியே முக்யம். எனென்றால், இந்த்ரியங்கள் ப்ரஹ்மத்தினிடத்தில் நின்றும் உண்டாகாவிடில், அவை ப்ரஹ்மத்தின் விகாரங்களல்லாமையால்ப்ரஹ்மத்தையறிந்தால் இந்த்ரியங்களறிந்ததாகமாட்டாது.

இப்படியாகில், "கஸ்மிந்நு ஹ்ருவெவிஜ்ஞாதெ ஸர்வமிதம் விஜ்ஞாதம் ஹவதி" என்று ப்ரஹ்மத்தையறிந்தால் மற்ற ஸகலபதார்த்தங்களு மறிந்ததா மென்கிறஸ்ருதியோடுவிரோதம் வரும், ஆகையால் உத்பத்தியை ஸித்தாந்தமாகக்கொண்டு, ஸ்ருஷ்டிக்குமுன் இந்த்ரியங்க ளிருந்தன வென்பதற்கு, அவாந்தர ஸ்ருஷ்டிக்குமுன் அவாந்தரப்ரளயத்திலிருந்ததென்று அர்த்தம் சொல்லவேணும்;இப்படி சொல்லில் ஆதிஸ்ருஷ்டிக்குமுன் மஹாப்ரளயத்திலிருந்ததாக ஏற்படாமையால் ஸ்ருதிவாக்யங்களுக்கு விரோதமில்லை.அவாந்தர ஸ்ருஷ்டியாவது-சதுர்முகப்ரஹ்மா,தன்னுடைய ஒவ்வொரு தினத்திலும் ஸ்வர்க்கபூமி பாதாளாதி லோகங்கள் ஸமுத்ரஜலத்தினால் முழுகிப்போக, அந்த அவாந்தர ப்ரளயத்திற்குப்பின் தன்னுடைய மறுதினத்தில் படைக்கிற படைப்பு. ஆதிஸ்ருஷ்டியாவது - சதுர்முகப்ரஹ்மாவும்கூட அழிந்திருக்கிற மஹாப்ரளயத்திற்குப்பின் பரப்ரஹ்மம் மற்றொரு சதுர்முக ப்ரஹ்மாவைப் படைக்கிற படைப்பு. ௨௭௦.

"ஏதஸ்மாஜ்ஜாயதெ ப்ராணः" (இந்த ப்ரஹ்மத்தில் நின்றும் ப்ராணன் மநஸ்ஸு இந்த்ரியங்கள் ஆகாசம் முதலிய பஞ்சபூதங்கள் இவையெல்லா முண்டாயிற்றென்று சொல்லிற்று) என்ற விவாக்யத்தில் ஆகாசாதிகளைப்போல் இந்த்ரியங்களு முண்டாயிற்றென்று சொல்லியிருக்க, அவற்றில், இந்த்ரியங்களைவிட்டு மற்றவையுண்டாயிற்றென்றும், இவைமாத்திர முண்டாகவில்லை யென்றும் சொல்வது சரியன்றாகையால் அவைகளைப்போலவே இந்த்ரியங்களும் உண்டாயிற்றென்று அங்கீகரிக்கவேணும். இந்தபாஷ்யத்திற்கு "கௌணாஸம்பவாத், தத்ப்ராக்ஶ்ருதெஶ்ச" என்று இரண்டு ஸூத்ரம்.

(ரா-ஹா.) இதில் ஸித்தாந்தம் சொல்லுகிறார்—"ஏகோ ஹவை நாராயண ஆஸீத்" என்று ப்ரளயகாலத்தில் ஸ்ரீமந்நாராயணனொருவனே இருந்தானென்கையாலே இந்த்ரியங்கள் இல்லை என்று ஸித்தம். மேலும் ஆத்மாவுக்கு உத்பத்தி விநாசங்களில்லையென்று சொன்னாற்போற் இந்த்ரியங்களுக்குச் சொல்லவில்லை. முன் சொன்ன வாக்யத்தில் ப்ராணனென்று பரமாத்மாவையே சொல்லிற்று. ருஷி என்றால் கண்ணுக்கெட்டாதவைகளை யறிகிறவனென்றர்த்தம். அறிகை அசேதநமான இந்த்ரியங்களுக்குக் கூடாதாகையால் அவையங்குசொல்லவில்லை. "ப்ராணா:" என்று பஹுவசநமாகச்சொன்னது - ப்ரளயத்தில் அநேகர் இல்லாமையால் அந்த பஹுவசநத்திற்கு பஹுத்வம் அர்த்தமன்று. ஆகையால் இந்த்ரியங்களநித்யங்களென்று ஸித்தாந்தம். ௨௭௦.

ஸூ - ௨௭௧. தத்பூர்வகத்வாத்வாச:.

(ஶ - வ்யா.) வாச: - வாகிந்த்ரியத்துக்கு, தத்பூர்வகத்வாத் - தேஜஸ்ஸை முன்னமுடைத்தாகையினால், (இந்த்ரியங்களினுத்பத்தி சொல்லப்பட்டது.) ௨௭௧.

(ரா-வ்யா.) வாச: - நாமதேயத்துக்கு, தத்பூர்வகத்வாத் - ஆகாசம் முதலிய பதார்த்தங்களை முன்னாக உடையதாகையாலே, (ப்ராணபதத்திற்குப் பரமாத்மாவே அர்த்தம்.) ௨௭௧.

(ஶ-ஹா.) சாந்தோக்யத்தில் ஸ்ருஷ்டிக்ரமம் சொல்லும்போது ஆதியில் "தத்தேஜோऽஸ்ருஜத" என்று தொடங்கி தேஜஸ்ஸு ஜலம்ப்ருதிவீ இவைகளுக்கே உத்பத்தி சொல்லிற்று, இந்த்ரியங்களினுத்பத்தி சொல்லவில்லை. ஆயினும்

"அந்நமயம் ஹிஸோம்ய மந:" என்று தொடங்கி அந்த உபநிஷத்திலேயே,ப்ருதிவி பரிணாமமாகிய அந்நத்தில்நின்றும் மநஸ்ஸும்,ஜலத்தில் நின்றும் ப்ராணனும், தேஜஸ்ஸில்நின்றும் வாகிந்திரியமுமுண்டாயிற்றென்கையால், ஓரிந்த்ரியத்துக்குத்பத்தி சொன்னது ஸகலேந்த்ரியோத்பத்திக்கு முபலக்ஷணமாய், ஸகலேந்த்ரியங்களுமுத்பத்திமத்துக்கள் என்பதே அந்த உபநிஷத்துக்கும் தாத்பர்யமாயிருக்கிறது. உசக.

(ரா-ஹா.) ஸ்ருஷ்டிகாலத்தில் முதலில் ஆகாசாதிகளை ஸ்ருஷ்டித்து அநந்தரம் அவைகளுக்கு நாமகரணம் செய்ததாகச் சொல்லுகையாலே ஆகாசாதிகளுண்டானபோதே அவற்றுக்கு வாசகங்களான நாமங்களுண்டு. ப்ரளயத்தில் அவையில்லாமையால் அவற்றின் நாமங்களுமில்லை யாகையால் அப்போது ப்ராணனென்று, அப்போதுள்ள பரமாத்மாவையே சொல்லிற்று. அப்போதில்லாத வாயுவிகாரணமான ப்ராணனைச் சொல்லவில்லை. உசக.

கயி-சுஉ. ஸூ-உஎஉ. ஸப்த கதே-விஶேஷிதத்வாச்ச.

(ஶ்ரு-வ.) கதே: - ஜீவனோடுகூடப் போகையாலும், விஶேஷிதத்வாச்ச - கீழ் ஏழையே குறித்திருக்கையாலும், ஸப்த - (இந்த்ரியங்கள்) ஏழு. உஎஉ.

(ரா-வ.) கதே: - (ஏழுக்கே ஜீவனுடன்) கமநம் சொல்லுகையாலும், விஶேஷிதத்வாச்ச - (அவற்றின்) பேரைக்குறித்துச் சொல்லுகையாலும், ஸப்த - (இந்த்ரியங்கள்) ஏழு. உஎஉ.

(ஶ்ரு-ஹா.) இந்த அதிகரணத்தில் இந்த்ரியங்களின் ஸங்க்யை நிர்ணயிக்கப்படுகிறது. இந்த்ரியங்கள் ஏழென்றும், பதினொன்றென்றும், பலவிடங்களில் பலவாறாகச் சொல்லி யிருக்கையால் எது ஸித்தாந்தமென்னும் சங்கையில்,—ஜீவன் இந்த சரீரத்தைவிட்டுப் போம்போதும்கூட எவை கூடப்போகிறனவோ,அவையே இந்த்ரியங்களெனப்படும், "ஸப்த வை ஶீர்ஷண்யா: ப்ராணா:" என்று தொடங்கி சக்ஷுஸ்ஸு, ஶ்ரோத்ரம், த்வக், ஜிஹ்வை, க்ராணம், மநஸ்ஸு, புத்தி என்றிவ்வேழையும்சொல்லி, பின்பு, "தமுத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி" என்று கீழ்ச்சொன்ன ஸகல இந்த்ரியங்களும், ஜீவன் இச்சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பிப் போகும்போது அவனுடன்கூடப் போகிறனவென்று இவ்வேழுக்குமே ஸஹகமநம் சொல்லுகையாலே இந்த்ரியங்களேழேயென்று பூர்வபக்ஷி சொன்னான். உஎஉ.

(ரா-ஹா) இந்த்ரியங்கள் எத்தனையென்றால் "ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி" என்று ஏழு இந்த்ரியங்களுக்கே ஜநநமரணங்களில் ஜீவனுடன் ஸஞ்சாரம் சொல்லுகையாலும் "யதா பஞ்சாவதிஷ்டந்தே ஜ்ஞாநாநி மநஸா ஸஹ | புத்திஶ்ச" என்று ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்கள் மநஸ்ஸு புத்திகளாகிற இவை இந்த்ரியங்களென்று இவைகளைப் பேரிட்டுச்சொல்லி மற்றவையைச்சொல்லாமையாலும் இந்த்ரியங்கள் ஏழு என்று பூர்வபக்ஷம். உஎஉ.

ஸூ-உஎங. ஹஸ்தாதயஸ்து ஸ்திதேऽதோ நைவம்.

(ஶ்ரு-வ.) ஹஸ்தாதய: - கைமுதலானவைகளும் (உண்டு). ஸ்திதே - (ஏழிந்த்ரியங்களைக்காட்டிலு மதிகம்) உண்டாயிருந்தவளவில், (ஏழே என்னப்போகாது). அத: - ஆகையால், நைவம் - இப்படியன்று. உஎங.

(ரா-வ்யா.) ஹஸ்தாதய: து - கை முதலானவைகளும், ஸ்திதே - (சரீரம்) இருக்குமளவில், (ஜீவனுக்கு உபகரணங்களாகின்றன). அத: - ஆகையால் - ஏவம் - இந்த்ரியங்கள் ஏழுளன்கிறபடி, ந - அன்று. உஎ௩.

(ஸ-ஸா.) எந்த ஜந்மத்திலும் விட்டுப்பிரியாமல் கூடவேயிருந்து ஜீவனுக்கு வேண்டுமுபகாரங்களைச் செய்கிறவைகளே இந்த்ரியங்களெனப்படும். ஜீவனை ஸம்ஸாரத்தில் நின்றும் போகவொட்டாமல் ப்ரதிபந்தகங்களானவை இந்த்ரியங்களென்று தாத்பர்யம். வேதத்தில் மற்றோரிடத்தில் "தசேமே புருஷே ப்ராணா: ஆத்மைகாதச" என்று, த்வக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், ஜிஹ்வை, க்ராணம்; என்கிற ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்களும், வாக், பாதம், பாணி, பாயு, உபஸ்த்தம், என்கிற ஐந்து கர்மேந்த்ரியங்களும், ஆத்மாவென்று சொல்லப்பட்ட மநஸ்ஸும் ஆகிய பதினொரு இந்த்ரியங்களுண்டென்றுசொல்லுகையாலும், 'ஹஸ்தோவை க்ரஹ:' என்று துடங்கி, கர்மேந்திரியங்களும் எல்லா ஜந்மங்களிலும் ஜீவனுடன்கூடவேயிருந்து அவனை ஸம்ஸாரத்தில் பந்திப்பிக்கிறன வென்கையாலும், இந்த்ரியங்கள் ஏழேயன்று, பதினொன்று என்று ஸித்தாந்தம். இவற்றைக்காட்டிலும் அதிகமாக, பன்னிரண்டு பதின்மூன்று உண்டென்பது, அவையும் இவற்றின் அவாந்தர பேதமாகையால் விரோதமில்லை. ஜ்ஞாநத்துக்கு ஸாதகமானவை ஜ்ஞாநேந்த்ரியமென்றும் க்ரியைக்கு ஸாதகமானவை கர்மேந்த்ரியமென்றும் சொல்லப்படுகிறது. இப்பத்தும் வெளியிலே யிருக்கிறவையாகையால் பாஹ்யேந்த்ரியமென்றும், மநஸ்ஸு உள்ளே இருக்கிறதாகையால் அதுக்கு ஆந்தரிந்த்ரியமென்றும் பெயர். உஎ௩.

(ரா-ஸா.) "தசேமே புருஷே ப்ராணா: ஆத்மைகாதச" ஜீவனிடத்தில் பத்து இந்த்ரியங்கள், மநஸ்ஸு பதினோராவது என்றும், "இந்த்ரியாணி தசைகஞ்ச" இந்த்ரியங்கள் பதினொன்றும் என்று வேதத்திலும் கீதையிலும் பதினொரு இந்த்ரியங்களைச் சொல்லுகையாலும் த்வக்சக்ஷுஶ்ஶ்ரோத்ர ஜிஹ்வாக்ராணங்களாகிற ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்கள்போல், வாக் பாத பாணி பாயூபஸ்த்தங்களாகிற ஐந்து கர்மேந்த்ரியங்களும் ஜீவனுக்கு உபகரணங்களாகையாலும், வாக் பாதாதிகளையும் இந்த்ரியங்களாக அங்கீகரித்து ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்து கர்மேந்த்ரியங்கள் மநஸ்ஸு ஆக இந்த்ரியங்கள் பதினொன்று என்பது ஸித்தாந்தம்— த்வச்சக்ஷுராதிகள் ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும் ஆத்மாவினுடைய ஜநந மரணங்களில் அத்துடன் போவது வருவதாயிருக்கும்; கர்மேந்த்ரியங்களைந்தும் சரீரத்தோடுண்டாய் அத்துடன் நசித்தபோதிலும் சரீரமிருக்குமளவும் ஜீவனுக்குபகாரகங்களாகையால் அவற்றையும் இந்த்ரியங்களாகச் சொல்லத்தட்டில்லை. உஎ௩.

அதி. ௩. ஸூ-உஎ௪. அணவஶ்ச

(ஸ-வ்யா.) அணவ: ச - இந்த்ரியங்கள் கண்ணால் பார்த்தறியத்தக்க ரூபங்களற்றவையாய், அளவுபட்டவையுமா யிருக்கின்றன. உஎ௪.

(ரா-வ்யா.) அணவ: ச - (இந்த்ரியம்) அணுவாயுமிருக்கும். உஎ௪.

(ஸ-ஸா.) இந்த்ரியங்கள் "இவ்வளவு அவ்வளவு" என்று பரிமிதியற்றவையாய் ஸகலதேச வ்யாபியாயிருக்குமென்று ஸாங்க்யர் சொன்னது சரியன்று. அப்படியாகில், அணுஸ்வரூபியாகிய ஆத்மாவுக்கு விபுவாயிருக்குமது கரணமாக மாட்டாது. பரமாணுவைப்போல் மிகவும் சிறியதென்ற தார்க்கிகர் பக்ஷத்தில், த்வகிந்த்ரியம் சரீரமெங்கும் வ்யாபித்திருக்கக்கூடாது. அதுசரீரமெங்கும் வ்யாபித்து அங்கங்குண்டான ஸுகதுக்கங்களை யறிகைக்கு ஸாதநமாயிருக்கையால், சரீரத்தளவுண்

டென்று ஒப்புக்கொள்ளவேணும். ஆகில், அது சரீரத்தைவிட்டுக் கிளம்பிப்போகும் போது அருகேயுள்ளவர்களுக்கு ஏன் தெரிகிறதில்லை யென்னில்; பிறர் காண்கைக் குரிய ரூபம் அதிலில்லாமையால் காண்கிறதில்லை என்று வேதாந்திமதம். உஎ௪.

(ரா-ஹா.) இந்த்ரியங்கள் விபுவா, அணுவா என்னில், ,,ஸவெ_ந ஞா:'' இந்த்ரியங்கள் எல்லாம் அவதியற்றவைகளென்று சொல்லுகையாலே விபுக்கள் என்று பூர்வபக்ஷம்—,,ப்ராணஃநமுத்க்ராமஂதம ஸவெ_ப்ராணாஃநமுத்க்ராமந்தி'' என்று ப்ராணன் சரீரத்தைவிட்டுக் கிளம்பும்போது அத்துடன் ஸகலேந்த்ரியங்களும் கிளம்பிப்போகின்றனவென்று சொல்லுகையாலே விபுவுக்கு கமனம் ஸம்பவியாமையால் விபுவன்று; கண்ணுக்குக் காணாமையால் ஸ்தூலமுமன்று; இதனால் அணுவென்பது ஸித்தம். அவதியில்லையென்பதுக்கு - அதை உபாஸித்தால் அவனுக்குப் பலம் நிரவதிகமாகக்கிடைக்கு மென்றர்த்தம்; ஆகையால் அந்த ஶ்ருதிக்கும் விரோதமில்லை என்று ஸித்தாந்தம். உஎ௪.

ஸூ - உஎரு. ஶ்ரேஷ்டஶ்ச.

(ஶ-ரா-ப்ர-ஸா.) ஶ்ரேஷ்டஶ்ச - ஶ்ரேஷ்டப்ராணனென்ற ப்ராண வாயுவும்(உத்பத்தியையுடையது.) உஎரு.

அபி-௪. ஸூ - உஎ௬. நவாயுக்ரியெ ப்ருதகுபதெஶாத்.

(ஶ-ரா-ப்ர.) ப்ருதகுபதெஶாத் - (வாயுவைக்காட்டிலும்) வேறாகச்சொல்லுகையாலே, வாயுக்ரியெ ந - (ப்ராணன்) கேவலம் வாயுவாகவும், கேவலம் க்ரியையாகவும் ஆகமாட்டாது. உஎ௬.

(ஶ-ரா-ஹா.)ப்ராணனென்பது வாயுவா,அல்லது வாயுவின்க்ரியாவிசேஷமா, அல்லது - வாயுவிசேஷமா என்றுஸம்சயம்.',,யஃப்ராணஃஸவாயு:'' என்று ப்ராணனென்பது வாயுவென்று சொல்லுகையாலே வாயுவே ப்ராணனென்று சிலரும், மற்ற வாயுக்களில் ப்ராணனென்கிற வ்யவஹார மில்லாமையாலும், மூச்சுவாங்குவது விடுவதாகிறவாயுவின்க்ரியையையே ப்ராணனென்று வ்யவஹரிக்கையாலும் வாயுவின் க்ரியையே ப்ராணனென்று சிலரும்பூர்வபக்ஷித்தார்கள்—இதை நிரஸிக்கிறார். ',,ஏதஸ்மாஜ்ஜாயதெ ப்ராணோ மநஃஸவெந்த்ரியாணிச...வாயு:'' என்று பரமபுருஷனிடத்தில்நின்றும் ப்ராணனும்வாயுவும் உண்டாகிறதென்று வாயுவையும் ப்ராணனையும் வெவ்வேறாகச் சொல்லுகையாலே ப்ராணனென்பது கேவல வாயுவன்று. வாயுவின் க்ரியையாகலாமென்னில், மேல்தேஜஸ்ஸு முதலியவற்றைச்சொல்லி, அநந்தரம் அவற்றின் க்ரியையும் உண்டாகிறதென்று சொல்லாமையாலே தேஜஸ்ஸைச்சொன்னபோதே அவற்றின்க்ரியையும் ஸித்தமென்பதுபோல இங்கும் வாயுவைச்சொன்னமாத்ரமே போருமாயிருக்க அதின் க்ரியையான ப்ராணனைச் சொல்லவேண்டியதில்லை. இப்படி யிருக்க இங்கு வேறாகச் சொன்னது ப்ராணன் வாயுவின் க்ரியையன்றென்பதை ஸ்தாபிக்கிறது. ஆகையா லவ்விரண்டுபக்ஷமுமன்று; உச்வாஸ நிஶ்வாச ரூபவ்யாபாரத்தையுடைய வாயு விசேஷமே ப்ராணனென்பது ஸித்தாந்தம். உஎ௬.

ஸூ-உஎஎ. சக்ஷுராதிவத்து தத்ஸஹஶிஷ்ட்யாதிப்ய:.

(ஸ-வ்ய.) தத்ஸஹஶிஷ்ட்யாதிப்ய: - அந்த நயநேந்திரியம் முதலான வற்றோடுகூட சொல்லியிருக்கையாலே, சக்ஷுராதிவத் - (ப்ராணனும்) நயநேந்திரியம் முதலானதைப்போலே (ஜீவனுக்குக்கரணம்) உஎஎ.

(ரா-வ்ய.) தத்ஸஹஶிஷ்ட்யாதிப்ய:-அந்தசக்ஷுராதிகளுடன் சொல்லுகையாலே, சக்ஷுராதிவத் து-சக்ஷுராதிகளைப்போலே, (ப்ராணனும் ஜீவனுக்குபகரணம்.) உஎஎ

(ஸ-ஹா) மற்ற இந்த்ரியங்கள் ஜீவனுக்கு ஆட்பட்டிருப்பதுபோல் இந்தப்ராணனும் ஜீவனுக்கு ஆட்பட்டேயிருக்கும். அவைகள் ஜீவனுக்கு, ராஜாவுக்கு மற்ற பரிஜநங்களைப்போலிருக்கும். அவ்விந்த்ரியங்களுக்கெல்லாம் இந்த முக்ய ப்ராணன் ப்ரதாநமாகையால் ஜீவனுக்கு, ராஜாவுக்கு மந்த்ரியைப்போலிருக்கும். இது மற்ற இந்த்ரியங்களைப்போல் ஆட்பட்டிருக்குமோவென்னில்; உபநிஷத்துக்களில் அவற்றுடன்கூடவே இதையும் சொல்லியிருக்கிறது. எங்கும் கூடச்சொல்லப்படுகிற வஸ்துக்களிரண்டும் ஒரு தர்மத்தை யுடைத்தாயிருக்கு மாகையால், இந்த்ரியங்களைப்போல் ப்ராணனும் ஜீவனுக்கு ஆட்பட்டிருக்கு மென்று நிஸ்சயிக்கப் படுகிறது. உஎஎ.

(ரா-ஹா.) ஆனால் ப்ராணன், வாயுவைக்காட்டிலும் பிந்நமாய் ஆகாசாதிகளைப்போல் வேறு பூதமாகுமோவென்னில், ஆகாது. ப்ராணனென்பது - பஞ்சபூதங்களிலொன்றான வாயுவில் சேர்ந்ததே.அவ்வாயுவே, உச்வாஸ நிஸ்வாஸரூபக்ரியையை யுடைத்தாய் ஜீவனுக்கு சக்ஷுராதிஇந்த்ரியங்கள்போல உபகரணமாயிருக்கிறது. ப்ராணனுக்கும் உபகரணங்களாகிற மற்ற இந்த்ரியங்களுக்கும் நடந்தஸம்வாதத்தைச் சொல்லுகிற ப்ரகரணத்தில் ப்ராணனை இந்த்ரியங்களோடொக்கச் சொல்லுகையாலே இதுவும் ஜீவனுக்கு உபகரணமென்பது ஸித்தம். உஎஎ

ஸூ - உஎஅ. அகரணத்வாச்ச நதோஷஸ்ததா ஹிதர்ஶயதி.

(ஸ-வ்ய.) அகரணத்வாச்ச-கரணமல்லாமையினால் நேரிடும், தோஷ:-தோஷமானது. ந - கிடையாது, ததா - அப்படியே, தர்ஶயதி ஹி - வேதம் சொல்லுகிறதன்றோ. உஎஅ.

(ரா - வ்ய.) அகரணத்வாச் - ஜீவனுக்கு உபகாரம் செய்கையாகிற வ்யாபாரத்தை யுடைத்தாகாமையால், (உண்டான), தோஷ: - (ப்ராணன் ஜீவனுக்கு உபகரணமன்றென்கிற) தோஷம், ந - வாராது, ததா ஹி - ஜீவனுக்கு ப்ராணன் உபகாரம் செய்கிறதென்பதை, தர்ஶயதி - வேதம் சொல்லுகிறது. உஎஅ:

(ஸ-ஹா.) எந்த வஸ்து எவ்விதத்திலாவது ஜீவனுடைய போகத்துக்குஸாதகமாகிறதோ,அவ்வஸ்துவே ஜீவனுக்குக் கரணமாகிறது. த்வக் ஸ்தோத்ரங்களையும்,சக்ஷுஸ்ஸு ரூபாதிகளையும்,ஸ்ரோத்ரம், சப்தத்தையும், ஜிஹ்வை ரஸத்தையும், க்ராணம் கந்தத்தையும் அறிகைக்கு ஸாதகங்களாயிருந்து அதிலுண்டான ஸுகத்தை ஜீவனுக்கு விளைக்கின்றன. பாதம் ஸஞ்சரிக்கைக்கும், பாணி ஒன்றை எடுக்கைக்கும், வாக்கு சப்தத்தைச் சொல்லுகைக்கும், பாயு மலத்தை விடுகைக்கும், உபஸ்த்தம் ஸ்த்ரீபுருஷர்களுடைய சேர்த்தியிலுண்டான ஸுகத்துக்கும், மநஸ்ஸு வஸ்துக்களை நினைக்கைக்கும் காரணமாயிருந்து ஜீவனுக்கு அதிலுண்டான போ

கத்தை விளக்கின்றன. ஜீவனுடைய போகத்துக்கு இவை யொழிய வேறொருவிஷயமில்லாமையால், இந்த்ரியங்களைக் காட்டிலும் அதிகமாக ப்ராணனென்றொரு உபகரணம் அங்கீகரிப்பதில் ப்ரயோஜநமில்லை. ஆகையால் ப்ராணன் ஜீவனுக்கு உபகரணமாகமாட்டாதென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார்.—ப்ராணன் ஜ்ஞாநத்துக்கும் கர்மத்துக்கும் ஸாதநமாயிருந்து ஜீவனுடையபோகத்துக்கு உபகரணமாகாவிடிலும், ப்ராணனுள்ளவளவுமே மற்ற இந்த்ரியங்கள் தங்கள் தங்கள் கார்யங்களை ஸாதிக்கின்றன. ப்ராணன் கிளம்பிப்போனால் ஒரு இந்த்ரியமும் ஒரு காரியமும் செய்யாது. மேலும் ஒரு இந்த்ரியம்போனால் அதினுடைய கார்யமே நின்றுவிடும். ப்ராணன்போனால் எல்லாக்காரியங்களும் நின்றுவிடும். சரீரமும் அழிந்துவிடும், இப்படி சரீரதாரணத்துக்கு ப்ராணன் முக்யமான தாகையால், மற்ற இந்த்ரியங்களைப் போல் ஜீவனுக்கு உபகரணமாகையேயன்றிக்கே அவற்றைக்காட்டிலும் முக்யமான உபகரணமாயிருக்கும். "யஸ்மிந்நுத்க்ராந்தே இதம் ஶரீரம் பாபிஷ்டதரமிவ த்ருஶ்யதே" எது வெளிக்கிளம்பினால் இந்த சரீரம் விகாரமாய்க் காண்கிறதோ வென்று உபநிஷத்தும் இவ்வார்த்தையேசொல்லி இதுக்கு உபகரணத்வத்தை ஸ்தாபிக்கிறது. உஎஅ.

(ரா-ஹா.) சக்ஷுராதிகள் ஜீவனுக்கு ஜ்ஞாநத்தையுண்டாக்குகிறது. வாகாதிகள் அவனுக்கு சப்தத்தை உச்சரித்தல் கமனம்செய்தல் முதலிய வ்யாபாரங்களைச்செய்விக்கிறது. அதுபோல ப்ராணன் ஆத்மாவுக்கு ஒரு ப்ரயோஜநத்தையும் செய்யாமையால் இது உபகரணமாக மாட்டாதென்னில், ஜீவனுக்கு உபகரணங்களாகிய சரீரமும் இந்த்ரியமும் ப்ராணவாயுவினாலேயே தரித்திருக்கிறது; ப்ராணன் இல்லாவிடில் சரீரமும் இந்த்ரியமும் நசித்துவிடும்; ஆகையால் அவைகளைக்காட்டிலும் ப்ராணன் ஆத்மாவுக்கு விசேஷமான உபகாரத்தைச் செய்கையால் இது உபகரணமாகக் குறையில்லை. 'யஸ்மிந்நுத்க்ராந்தே இதம் ஶரீரம் பாபிஷ்டதரமிவ த்ருஶ்யதே ஸ ஏஷ:' என்று எது எழுந்துபோனால் சரீரம் விகாரத்தை யடைகிறதோவென்று ப்ராணனே சரீரதாரகமாக வேதத்திலும் சொல்லிற்று. உஎஅ.

ஸூ-உஎக. பஞ்சவ்ருத்திர்மநோவத் வ்யபதிஶ்யதே.

(ஸு-வ்யா.) மநோவத் - மநஸ்ஸைப்போல், பஞ்சவ்ருத்தி: - ஐந்துவ்யாபாரங்களை யுடைத்தானதாக, வ்யபதிஶ்யதே - சொல்லப்படுகிறது. உஎக.

(ரா-வ்யா.) பஞ்சவ்ருத்தி: - ஐந்துவிதமான வ்யாபாரங்களையுடைய ப்ராணனே, மநோவத் - மநஸ்ஸைப்போலே, வ்யபதிஶ்யதே - (ஐந்துவிதமாகச்) சொல்லப்படுகிறது. உஎக.

(ஸு-ஹா.) மநஸ்ஸானது எப்படி காமமென்றும் ஸங்கல்பமென்றும் அநேகவிதமான வ்யாபாரங்களினால் ஜீவனுக்கு போகஸாதகமாகிறதோ, அப்படியே ப்ராணனும் ப்ராண அபாந வ்யாந உதாந ஸமாநங்களென்கிற ஐந்து வ்யாபாரங்களினால் ஜீவனுக்கு அத்யந்தோபகாரகங்களா யிருக்கின்றனவென்று உபநிஷத்துக்களில் சொல்லப்படுகிறது. ப்ராணனென்பது மூச்சை வெளியில்விடுகைக்கும், அபாநமென்பது மூச்சை இழுக்கை முதலானவற்றுக்கும், வ்யாநம் தைர்யமாக ஒரு கார்யம் செய்கைக்கும், உதாநம் மேலே கிளம்புகைக்கும், ஸமாநம் சரீரமெங்கும் வ்யாபித்து அந்த ரஸத்தை எல்லாவிடங்களிலும் அடைவிப்பிக்கைக்கும் ஸாதகமாயி

ருக்கையால் இதில்லாவிடில் இக்காரியங்கள் நடவாமையால் சரீரம் தரிப்பதரிதாகையால் இதுவே ஜீவனுக்கு முக்யமான உபகரணம். உஎக.

(ஶ்ரீ-ஹா.) அபாநம் வ்யாநம் முதலிய வாயுக்களும் இந்த ப்ராணவாயுவிலேயே சேர்ந்தது. இதுக்கு, ப்ராணநம், அபாநநம், வ்யாநநம், ஸமாநநம், உதாநநம், அதாவது-மூச்சைவிடுதல், இழுத்தல், ஸ்தம்பித்தல், சரீரமெங்கும் பரவுதல், மேற்கிளம்பல்என்கிற ஐந்துவிதமான வ்யாபாரங்களுண்டு.அவற்றில் ஒவ்வொரு வ்யாபாரத்தையடையும்போது ஒவ்வொருநாமத்தை யடைகிறது. இதற்குத்ருஷ்டாந்தம்—மநஸ்ஸு ஒன்றேயாகிலும் அது ஒவ்வொரு விகாரத்தை யடையும்போது காமம், ஸங்கல்பம்,இத்யாதி நாமங்களை யடைகிறது. அதுபோலவே இங்கும். உஎக.

அதி-கரு. ஸூ-உ௮௦. அணுச்ச.

(ஸ-ஶ்ரீ-வ்ரு.) அணுச்ச - (ப்ராணன்) அணுவாயுமாகிறது. உ௮௦.

(ஸ-ஹா.) மற்ற இந்த்ரியங்களைப்போல் ப்ராணனும் பரமாணுவைப்போல் அணுவும் ஆகாசத்தைப்போல் விபுவுமன்றிக்கே சரீரத்தளவாய், பிறர் காணத்தக்க ரூபமற்றதாயிருக்கும். உ௮௦

(ஶ்ரீ-ஹா.) இந்த ப்ராணன் அநந்தம், அதாவது அவதியற்றது என்று சொல்லுகையாலே இது விபுவென்று சிலர் பூர்வபக்ஷித்தார்கள்.— "ப்ராணோநூத்க்ராமதி" என்று ஜீவன் சரீரத்தில் நின்றும் புறப்பட்டுப்போம்போது ப்ராணனும் புறப்படுகிறதென்று சொல்லுகையாலே விபுவானால் புறப்படுகை கூடாமையால் ப்ராணன் அணுஸ்வரூபமென்பது ஸித்தாந்தம். உ௮௦.

அதி-கசு. ஸூ-உ௮க. ஜ்யோதிராத்யதிஷ்டாநம் து ததாமநநாத் ப்ராணவதா ஶப்தாத்.

(ஸ - வ்ரு.) ததாமநநாத் - அப்படியே வேதத்தில் சொல்லுகையாலே, ஜ்யோதிராத்யதிஷ்டாநம் - அக்நிமுதலானவற்றுக்கு அதிஷ்ட்டாநதேவதைகளினால் அதிஷ்ட்டிக்கப்பட்டதாய்க்கொண்டு (இந்த்ரியங்கள் தங்கள் தங்கள் கார்யங்களைச் செய்கின்றன.)

(ஸ-வ்ரு.) ஶப்தாத் - வேதவாக்யத்தினால், ப்ராணவதா - ஜீவனோடே, (இந்த்ரியங்களுக்கு ஸம்பந்தம் சொல்லப்படுகிறது.) உ௮க.

(ஶ்ரீ-வ்ரு.) ததாமநநாத் - அந்த பரமாத்மாவினது ஸங்கல்பத்தினால், ப்ராணவதா - ப்ராணனுக்கு அதிஷ்ட்டாதாவான ஜீவனோடுகூட, ஜ்யோதிராத்யதிஷ்டாநம் - அக்ந்யாதிகளுக்கும் இந்த்ரியாதிஷ்ட்டாநம், (உண்டு), ஶப்தாத் - வேதவாக்யத்தினால், (இவ்வர்த்தம் நிஶ்சயிக்கப்படுகிறது.)

உ௮க.

(ஸ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு இது இரண்டு ஸூத்ரமாயிருக்கிறது. சக்ஷுஸ்ஸு முதலான இந்த்ரியங்கள் தங்கள் தங்கள் ஸாமர்த்யத்தினால் பார்க்கை கேட்கை முதலான கார்யங்களைச் செய்கின்றனவா, அல்லது - ஒரு தேவதையினால் ஆவேசிக்கப்பட்டு அத்தேவதை ஏவ அதின் மஹிமையினால் செய்கின்றனவா வென்

னில்; தேவதை இந்த்ரியங்களை ஆவேசித்து ஏவக் கார்யம் நடக்குமாகில், அதிஞ லுண்டான ஸுகதுக்கங்கள் அத்தேவதைக்கு உண்டாகவேண்டிவரும், ஜீவனுக்கு இல்லாமல் போய்விடும் ஆகையால் இந்த்ரியங்கள் தங்கள் ஸாமர்த்தியத்திஞலே யே கார்யம்செய்து தங்களுக்கு ஸ்வாமியாகிய ஜீவனுக்கு ஸுகதுக்கங்களையுண்டா க்குகின்றனவென்று பூர்வபக்ஷி சொன்ஞன். உபநிஷத்துக்களில் "அக்நிர்வாக்பூத்வா முகம் ப்ராவிசத்" என்று தொடங்கி அக்நிவாகிந்த்ரியமாய்க்கொண்டு, அதாவது வாகிந்திரியத்துக்கு அதிஷ்டாதாவாய்க்கொண்டு முகத்தில் ப்ரவேசித்தது என்று இம்மாதிரி ஸகலேந்த்ரியங்களுக்கும் ஒவ்வொரு அதிஷ்டாந தேவதையைச் சொல்லுகையாலே, இந்த்ரியங்கள் அக்நி முதலிய அதிஷ்டாந தேவதைகளிஞலேவப்பட்டதாய்க்கொண்டே கார்யம் செய்கின்றன. இந்த்ரியங்களுக்கே கார்யம் செய்ய சக்திஉண்டான போதிலும், தேசாந்தரம் போகவல்ல வண்டி எருதுகளிஞ லிழுக்கப்பட்டே எப்படி போகிறதோ, அப்படியே தேவதையிஞ லதிஷ்டிக்கப்பட்டே கார்யம் செய்கின்றன என்று ஸித்தாந்தம்.

(ஶ-ஹா.) இந்த்ரியங்களுக்கு அக்நி முதலானவர்கள் அதிஷ்டாதாக்களாகில் அதிஞலுண்டான ஸுகதுக்கங்களை அவர்களே யடைவார்களென்கிற சங்கைக்குஸமாதாநம்—'அத யோ வேதேதம் ஜிக்ராணீதி ஸ ஆத்மா கந்தாய க்ராணம்' இத்யாதி உபநிஷத்துக்கள், இந்த்ரியங்களின் செயலிஞலுண்டான ஸுகதுக்கங்கள் ஜீவனுக்கேயுள்ளதென்று சொல்லுகிறது. மேலும், ஒவ்வொரு இந்த்ரியத்துக்குமொவ்வொரு தேவதையாய் அனேக தேவதைகளுண்டாகையால் அவையெல்லாவற்றுக்கும் போக்த்ருத்வம் கூடாமையால் ஒரு ஜீவனுக்கே அதை யொப்புக்கொள்ளவேணும். உ௪௧.

(ரா-ஹா) "யோ(அ)க்நௌ திஷ்டந் அக்நிமந்தரோ யமயதி" என்று பரமாத்மா அக்நி முதலியவற்றிலிருந்து அவ்வவகார்யங்களில் நியமிக்கிருனென்று சொல்லுகையாலே, ஜீவனும் அக்ந்யாதிகளும் பரமாத்ம ஸங்கல்பத்திஞலேயே இந்த்ரியங்களுக்கு அதிஷ்டாந மாகின்றனவென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஜீவனும் அக்ந்யாதி தேவதைகளும் இந்த்ரியங்களுக்கு அதிஷ்டாநமாம்போது பரமாத்மாவின் நியமநத்திஞலாகிறுர்களல்லது தாங்களே ஸ்வதந்த்ரராய்க்கொண்டு இந்த்ரியங்களை அதிஷ்டிக்க சக்தரல்லரென்று தாத்பர்யம். உ௪௧.

ஸூ-உ௪உ. தஸ்ய ச நித்யத்வாத்.

(ஶ-வ்ய.) தஸ்ய-அந்த போக்த்ருத்வத்துக்கு, நித்யத்வாத் - (ஜீவனேடு) எப்போதும் ஸம்பந்தமுண்டாகையால், (ஜீவனேபோக்தா). உ௪உ.

(ரா - வ்ய.-ஹா.) தஸ்ய ச - அந்த பரமாத்மநியமநத்துக்கும், நித்யத்வாத் - நித்யத்வமுண்டாகையாலே, (பரமாத்மா இவற்றை நியமிப்பது அவனுக்கு ஸ்வபாவஸித்தமாகையாலே மற்ற கார்யங்களும் அவன் நியமநத்திஞலேயே நடக்கிறதென்பது ஸித்தமென்று கருத்து ) உ௪உ.

(ஶ-ஹா.) ஜீவனுடைய புண்யபாபங்களிஞல் அவனுக்கு ஸுகதுக்காநுபவார்த்தமாக ஏற்பட்ட சரீரத்திலுள்ள இந்த்ரியங்களின் செயல்கள் அவனுக்கே ஸுகதுக்கங்களை விளைக்கின்றன. இந்த்ரியங்களை தேவதைகள் ஆவேசித்து ஏவுவதும், வண்டியோட்டுகிற வண்டிக்காரன் செயல்போன்றனவாயிருக்கும். ஜீவன் இருக்கும்போதுகூட இருந்தும் வெளிக்கிளம்பி லோகாந்தரம் சரீராந்தரம் போகும்போ

தும் கூடவே போகுமவைகளாகையால் இந்த்ரியங்கள் ஜீவனுக்கே எப்போதும் கரணமாயிருந்து போகத்தை விளைக்கும். ௨௮௨.

௧௰-௬௭ ஸூ ௨௮௩. த இந்த்³ரியாணி தத்³வ்யபதே³ஶாத்

அந்யத்ர ஶ்ரேஷ்டா²த்.

(ஸூ-வ்யா.) தத்³வ்யபதே³ஶாத் - அப்படி (ப்ராணனைக்காட்டிலும் வேறாகச்) சொல்லுகையினால், ஶ்ரேஷ்டா²த³ந்யத்ர-முக்யப்ராணனைக் காட்டிலும் வேறான, தே-அந்தசக்ஷுராதிகளே, இந்த்³ரியாணி-இந்த்ரியங்கள். ௧௮௩

(பா-வ்யா.) ஶ்ரேஷ்டா²த் - ஶ்ரேஷ்டமான ப்ராணவாயுவைக் காட்டிலும், அந்யத்ர - வேறான இந்த்ரியங்களிலேயே, தத்³வ்யபதே³ஶாத் - இந்த்ரியவ்யவஹாரம் காண்கையாலே, தே - ப்ராணவாயுவைக்காட்டிலும் பிந்நமானவையே, இந்த்³ரியாணி - இந்த்ரியங்கள். ௨௮௩

(ஸூ-ஹா.) இந்த்ரியங்கள், ப்ராணாபாநாதிகளைப்போல் முக்யப்ராணனுடைய அவஸ்தாபேதமா, அல்லது வேறு தத்வமாவென்கிற சங்கையில், இந்த்ரியங்களையும் முக்ய ப்ராணனையும் "ப்ராணன்" என்று ஒருசப்தத்தினால் சொல்லுகையாலே அவையும் முக்யப்ராணனிற் சேர்ந்தவையே, வேறு தத்வமன்று என்றான் பூர்வபக்ஷி. "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்³ரியாணி ச" பரமாத்மாவில் நின்றும் ப்ராணன் மநஸ்ஸு இந்த்ரியங்கள் உண்டாயிற்றின என்று முக்ய ப்ராணனைக் காட்டிலும் வேறாக இந்த்ரியங்களைச் சொல்லுகையாலே இந்த்ரியங்கள் ப்ராணனைக்காட்டிலும் வேறு தத்வங்கள். இந்த்ரியங்களைக்காட்டிலும் மநஸ்ஸை வேறாக இவ்வாக்யத்தில் சொல்லியிருந்தபோதிலும்,மற்றும் அநேக இடங்களில் மநஸ்ஸைப் பதினோராவது இந்த்ரியமாகச் சேர்த்திருக்கிறது. ப்ராணனை அப்படி யெங்கும் சேர்க்கவில்லை. இந்த்ரியங்களை ப்ராணனென்று சொல்லுவது - ப்ராணனுண்டானபோதே அவைகள் கார்யகாரிகளாய் அதில்லாதபோது அல்லாதவைளா யிருக்கையாலே அவையெல்லாம் ப்ராணனுக்குக்கீழ்ப்பட்டதென்ற அர்த்தத்தைக்கொண்டு ப்ராணனென்று சொல்லப்படுகின்றன என்று ஸித்தாந்தம். ௨௮௩

(பா-ஹா.) ப்ராணனென்று சொல்லப்பட்டவை யெல்லாம் இந்த்ரியந்தானா, அவற்றில் சிலதே இந்த்ரியமா என்று ஸம்சயம். ப்ராணனென்கிற சப்தமெல்லாம் ஏகரூபமாகையாலே அந்தசப்தத்தினாற் சொல்லப்பட்ட சக்ஷுராதிகளும் வாகாதிகளும் மநஸ்ஸும் முக்யப்ராணனுமாகிய இவையெல்லாம் இந்த்ரியங்களென்று பூர்வபக்ஷம்.—ப்ராணவாயுவைவிட்டு மற்ற சக்ஷுராதிகளிலேயே இந்த்ரிய வ்யவஹாரமுண்டாகையாலும், இந்த்ரியங்கள் பதினொன்று என்று கணக்கிட்டிருக்கையாலும் ப்ராணவாயுவுக்கு இந்த்ரியமென்கிற பேரில்லையென்று ஸித்தாந்தம்.௨௮௩.

ஸூ-௨௮௪. பே⁴த³ஶ்ருதேர்வைலக்ஷண்யாச்ச.

(ஸூ-வ்யா.) பே⁴த³ஶ்ருதே: - (வேதத்தில் ப்ராணனை இந்த்ரியங்களைக் காட்டிலும்) வேறாகச் சொல்லுகையாலும், (ப்ராணன் இந்த்ரியங்களைக் காட்டிலும் வேறு.)

(ஸூ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு இது இரண்டு ஸூத்ரம். வேதங்களில் இவ்விடமேயன்றிக்கே மற்று மநேக இடங்களிலும் இந்த்ரியங்களைக்காட்டில் ப்ராணனை வேறாகச்சொல்லுகையாலேயும் ப்ராணன் இந்த்ரியமன்று.

(ஸூ-ஸா) "வைலக்ஷண்யாச்ச" இந்த்ரியங்களைக்காட்டிலும் ப்ராணன் விலக்ஷண மாகையாலும் ப்ராணன் இந்த்ரியமன்று. அதாவது - ப்ராணன் சரீரத்துக்கு தாரகம், இந்த்ரியங்க ளப்படியல்ல. இந்த்ரியங்கள் ஜ்ஞாநத்துக்கு ஸாதகங்கள். ப்ராணனப்படிப்பட்டதல்ல. உறங்கும்போது இந்த்ரியங்களுறங்கிவிடும்; ப்ராணன் மாத்திரம் அப்போதும் தன் கார்யத்தைச் செய்யும். இம்மாதிரி அனேக பேதங்களுண்டாகையால் ப்ராணன் இந்த்ரியமன்று. உஅச.

(ரா-வ்ய-ஸா.) ஹேதுஶ்ருதே:-("ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணி ச" என்று இந்த்ரியங்களையும் ப்ராணனையும்) வெவ்வேறாகச் சொல்லுகையாலும், வைலக்ஷண்யாச்ச - (உபக்கத்தி லிந்த்ரியங்களொழிந்தாலும் ப்ராணனிருக்கையாலே இந்த்ரியவ்யாபாரங்களைக் காட்டிலும் ப்ராணனுடைய வ்யாபாரம்) விலக்ஷணமாகையாலும், (ப்ராணன் இந்த்ரியங்களைக்காட்டிலும் வேறு). உஅச.

அதி-கூ-அ. ஸூ-உஅரு. ஸம்ஜ்ஞாமூர்த்திக்லுப்திஸ்து த்ரிவ்ருத்குர்வத உபதேஶாத்.

(ஸூ-ரா-வ்ய.) த்ரிவ்ருத்குர்வத: - த்ரிவ்ருத்கரணம் பண்ணுகிறவனுக்கே, உபதேஶாத் - நாமரூபங்களைப்பண்ணுகை சொல்லுகையாலே, ஸம்ஜ்ஞாமூர்த்திக்லுப்தி: - நாமரூபங்களைச்செய்கை (வ்யஷ்டிஸ்ருஷ்டி) (பரமாத்மாவினாலேயே செய்யப்பட்டது.) உஅரு.

(ஸூ-ரா-ஸா.) ஸமஷ்டிஸ்ருஷ்டியென்றும் வ்யஷ்டி ஸ்ருஷ்டியென்றும் ஸ்ருஷ்டி இரண்டுவிதம். ப்ரக்ருதியில் நின்றும் மஹத் அஹங்காரம் பஞ்சதந்மாத்ரை ஆகாசாதி மஹாபூதங்கள் இவைகளை ஸ்ருஷ்டிக்கை ஸமஷ்டிஸ்ருஷ்டி. அண்டத்திலுள்ள தேவமநுஷ்யாதிகளை ஸ்ருஷ்டிக்கை வ்யஷ்டி ஸ்ருஷ்டி இதுவரையில் ஸமஷ்டி ஸ்ருஷ்டியைப்பரமாத்மா செய்கிறானென்று சொல்லிற்று. இதில் வ்யஷ்டிஸ்ருஷ்டியும பரமாத்மாவே செய்கிறானென்றுசொல்லுகிறது.—"அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" என்று, நாமரூபங்களை (வ்யஷ்டி ஸ்ருஷ்டியை)ச்செய்கிறேன், அதற்காகப் பஞ்சபூதங்களையும் பஞ்சீகரணம் பண்ணுகிறேனென்று சொல்லுகையாலே பஞ்சீகரணம் செய்தவனும் ஜகத் ஸ்ருஷ்டி செய்தவனும் ஒருவனே என்று தோற்றுகிறது. இங்கு த்ரிவ்ருத்கரணம் சொன்னது பஞ்சீகரணத்திற்கும் உபலக்ஷணம். பஞ்சீகரணம்செய்தவன் யாரென்னில், பஞ்சபூதங்களை ஸ்ருஷ்டித்தபின் அவைகள் ஒரு கார்யத்தைச்செய்ய யோக்யதையற்றிருந்ததைக்கண்டு, அநந்தரம் பஞ்சீகரணம் செய்து அதினால் அண்டத்தையும் அதில் ப்ரஹ்மாவையும் ஸ்ருஷ்டித்தான் பரமபுருஷன், ஆகையால் அந்த பரமபுருஷனே ஜீவனை ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு ஜகத்தை ஸ்ருஷ்டித்தானென்று ஸித்தாந்தம். உஅசு.

ஸூ உஅஎ. மாம்ஸாதி பௌமம் யதாஶப்தமிதரயோஶ்ச.

(ஸூ-ரா-வ்ய.) மாம்ஸாதி-மாம்ஸம் முதலானது, பௌமம் - பூமியினாலே வ்ருத்தியடைவிக்கப்பட்டது. இதரயோஶ்ச-மற்ற இரண்டுக்கும், யதாஶ

வ்ய-("ஆபஃஷீதாஃ" இத்யாதியாகச்சொன்ன) சப்தப்ரகாரம், (ஜலத்தினு லும் தேஜஸ்ஸினுலும் வ்ருத்திசெய்விக்கப்படுகை என்று அறிக.) உஅசு

(ஶ்ரீ-பா-ஸா) "அன்னமஶிதம் த்ரேதா விதீயதே" என்று தொடங்கி, புஜிக்கப்பட்ட அந்நத்தில் ஸ்தூலபாகம் மலமாகவும், மத்யமபாகம் மாம்ஸமாகவும், ஸூக்ஷ்மாம்சம் மநஸ்ஸாகவும், ஜலத்தில் ஸ்த்தூலாம்சம் மூத்ரமாகவும், மத்யமாம்சம் ரக்தமாகவும், ஸூக்ஷ்மாம்சம்ப்ராணனுகவும், தேஜஸ்ஸில் ஸ்த்தூலபாகம் எலும்பாகவும் மத்யமபாகம் மஜ்ஜையாகவும், ஸூக்ஷ்மபாகம் வாக்காகவும் பரிணமிக்கிறனென்று, ப்ரஹ்மாஸ்ருஷ்டித்த இந்த லோகத்திலுள்ள பதார்த்தங்களிலேயே த்ரிவ்ருத்கரணம் சொல்லுகையாலே இந்தத்ரிவ்ருத்கரணம் ப்ரஹ்மாவுக்கும்கூடுமாகையால் இந்த ஜகத்தையும் ப்ரஹ்மாவே ஸ்ருஷ்டிக்கலாமென்னில், இங்கு த்ரிவ்ருத்கரணம் சொல்லவில்லை த்ரிவ்ருத்கரணம் செய்த பதார்த்தங்கள் புஜித்தால் மூன்றுவிதமாகப் பரிணமிக்கின்றனவென்றுசொல்லிற்று. இதே த்ரிவ்ருத்கரணமானுல் அந்நம் ஜலம் தேஜஸ்ஸு இவைகளை மூன்ருகப் பிரித்தபோது அவைகளில் ஸ்த்தூலபாகமெல்லாம்ப்ருதிவியாகவும், மத்யமபாகமெல்லாம்ஜலமாகவும், ஸூக்ஷ்மமாகமெல்லாம் தேஜோம்சமாகவும் ஆகவேண்டிவரும். அவ்வாக்யத்திலப்படிசொல்லாமல் மலமாம்ஸ மநஸ்ஸுக்களை அந்நமாகவும், இப்படியே மேலிரண்டையும் சொல்லுகையாலே இது த்ரிவ்ருத்கரணமன்றென்பது ஸித்தம். ஆகையால் இதற்கு முன்னுனதே த்ரிவ்ருத்கரணம்; அதுக்குக் கர்த்தாவான பரமபுருஷனே ஜகத்துக்கும் கர்த்தாவென்று ஸித்தம். உஅசு.

ஸூ-உஅஎ. வைஶேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாதஃ.

(ஶ்ரீ-பா-வ்ய.) வைஶேஷ்யாத் - அதிகபாகமிருக்கையாலே, தத்வாதஃ-அப்படி சொல்லப்படுகிறது. உஅஎ.

(ஶ்ரீ-பா-ஸா.) ஸமஸ்தவஸ்துக்களும் த்ரிவ்ருத்கரணமாயிருந்தால் ஸமஸ்தத்திலும் ப்ருதிவீ ஜலதேஜஸ்ஸுக்கள் மூன்று மிருக்கையாலே, ஒன்றை ப்ருதிவியென்றும் ஒன்றை ஜலமென்றும் சொல்லுகிறவிதம் எப்படியென்னில், ப்ருதிவீ ஜல தேஜஸ்ஸுக்களை ஒவ்வொன்றையும் நாலு நாலு பாக மாக்கி அவற்றில் இரண்டிரண்டு பாகத்தை யெடுத்து ஒவ்வொரு பாகத்தை மற்ற இரண்டு தத்வங்களிலும் சேர்க்கை த்ரிவ்ருத்கரணமாவது. இப்படி செய்தால் ப்ருதிவியில் ப்ருதிவீ பாகம் இரண்டும் ஜலபாக மொன்றும் தேஜோபாக மொன்று மிருக்கிறது. இப்படியே மற்றவைகளிலும், இனி ப்ருதிவியில் அந்தபாக மதிகமாயிருக்கிறபடியாலே ப்ருதிவி யென்று சொல்லப்படும். இப்படியே மற்றவைகளிலும் கண்டுகொள்வது. இங்கு "தத்வாதஃ" என்று இரண்டாம்தரம்சொன்னது அத்யாயம்முடிந்ததென்று தெரிகைக்காக. உஅஎ.

இரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.

---

# மூன்றாவது அத்யாயம் - முதல்பாதம்.

அதி-௬௬. ஸூ-௨௮௮. தத³ந்தரப்ரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த꞉ ப்ரஶ்நநிரூபணாப்⁴யாம்.

(ப - ரா - வ்ய.) தத³ந்தரப்ரதிபத்தௌ (ஜீவன்) சரீராந்தரத்தை யடையும்போது, ஸம்பரிஷ்வக்த꞉ - (சரீரத்துக்குக் காரணங்களான பூதங்களுடைய ஸூக்ஷ்மாம்சங்களோடு) சூழப்பட்டவனாய், ரம்ஹதி-போகிறான். ப்ரஶ்நநிரூபணாப்⁴யாம் - ப்ரச்நத்தினாலும், அதற்குத்தரம்சொன்ன வாக்யத்தினாலும் (இவ்வர்த்த மறியப்படுகிறது.) ௨௮௮.

(ஶ்ரு-ஹா.) இப்பொழுது ஜீவனுடைய வைராக்யோத்பத்திக்காக சாந்தோக்யத்தில் சொல்லப்பட்ட பஞ்சாக்நிவித்யை நிரூபிக்கப்படுகிறது. கீழ்பாதத்தில் ஜீவன் இந்த சரீரத்தைவிட்டுப் போம்போது ப்ராணன் மநஸ்ஸு இந்த்ரியங்கள் ஆகிய இவைகளும் அவனுடன்கூடவே போகின்றனவென்று சொல்லப்பட்டது. அதுபோல் இவனுடைய சரீரத்துக்கு உத்பாதகங்களான ஸூக்ஷ்மமாயுள்ள பஞ்சபூதங்களும் கூடவே போகிறதென்று இங்கு சொல்லப்படுகிறது. ஜீவனுக்கு இந்த்ரியாதிகளைப்போல் சரீரமும் ஸுகதுக்க ஸாதகமாகையால், "அவ்விந்த்ரியாதிகள் மாத்திரம் போகின்றன, இந்த சரீரஹேதுவான பஞ்சபூதங்களும் ஸூக்ஷ்மமாய்க்கொண்டு போகிறதில்லை"என்பதுசரியன்றாகையால் இவையும்கூடவே போகிறதென்று சொல்வதே உசிதம். ஆகிலும், அவ்வாக்யத்தில் இந்த்ரியாதிகள் மாத்திரமே கூடப்போவதாகச் சொல்லப்பட்டது; பூதஸூக்ஷ்மங்கள் போவதாகச் சொல்லவில்லை. இதனால் இவையும் போகிறதா இல்லையாவென்று ஸம்சய முதிக்கிறது. ()

(ரா-ஹா.) கீழ் இரண்டு அத்தியாயங்களினால் பரமாத்ம ஸ்வரூபத்தை அபாதிதமாக நிரூபித்து இந்த மூன்றா மத்யாயத்தினால் அந்த பரமாத்ம ப்ராப்திக்கு ஹேதுவான பக்த்யுபாயத்தை நிரூபிக்க ஆரம்பிக்கிறார். அதில் முன்னம், பக்திக்கு விஷயாந்தர வைராக்யம் காரண மாகையால் அந்தவைராக்யம் பிறக்கைக்காக இப்பாதத்தில் ஸம்ஸாரஸ்வரூபத்தை நிரூபிக்கிறார்.—ஜீவன் மரணமடைந்தபின், இங்குச்செய்த புண்யபாப கர்மங்களின் பலத்தை யநுபவிக்கைக்காக ஸ்வர்க்க நரகங்களுக்குப்போய் அங்கு அவ்வநுபவத்துக்குத் தகுதியான சரீரமெடுக்கிறான். அந்த சரீரங்களுக்கும் பூதஸூக்ஷ்மங்களே காரணம். அந்த காரணமாகிய பூதஸூக்ஷ்மங்கள் அந்தலோகங்களிலே யிருக்கிறதா, அல்லது,ஜீவனிந்த சரீரத்தைவிட்டுப் போம்போதுதனக்கு ஸ்வர்க்கநரகங்களில் சரீரமுண்டாகைக்காக இந்தசரீரத்தைக்கடந்தெடுத்த பூதஸூக்ஷ்மங்களோடுகூடினவனாய்ப்போகிறானாவென்று ஸம்சயம்.—இவ்வுலகினிற்போல் லோகாந்தரங்களிலும் அவ்வவசரீரங்களுக்குக் காரணமாகிய பூதஸூக்ஷ்மங்களுண்டாகையாலே அவற்றினாலேயே அங்குச்சரீரமுண்டாகிறது. அதற்காக இங்குள்ள பூதஸூக்ஷ்மங்களுடன் போகவேண்டியதில்லை என்று பூர்வபக்ஷம். சாந்தோக்யத்தில் பஞ்சாக்நி வித்யையில் ஶ்வேத கேதுவை ப்ரவாஹணரென்கிற ராஜா "வேத்த² யதா² பஞ்சம்யாமாஹுதாவாப꞉ புருஷவசஸோ ப⁴வந்தி" ப்ருதிவ்யாதிகளோடுகூடின ஜலம், ஸ்வர்க்கலோகம், மேகம், பூமி, புருஷன் ஆகிய இந்த நாலு அக்நிகளிலும் ஹோமம்பண்ணப்பட்டு ஸ்த்ரீயாகிற ஐந்தாவதான அக்நியில் ஹோமம் செய்யும்போது நாமரூபங்களை யுடைத்தாய் புருஷனாகிறவிதம் தெரியுமாஎன்று ப்ரஶ்நம் செய்ய,ஶ்வேதகேது அதையறியாமல் தன்தகப்பனான உத்தாலகனிடம் சென்று கேட்க, அவருமறியாமல் அந்த வரசனிடம்சென்று கேட்க

அப்போதந்த ருஷிக்கு அவ்வரசன் "இதி து பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி" இவ்விதமாக ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் ப்ரவேசித்தலாகிற ஐந்தாவது ஆஹுதியில் ப்ருதிவ்யாதிகளோடுகூடிய ஜலம் புருஷனென்று வ்யவஹரிக்கப்படுகிறது என்று உத்தரம் சொன்னார். இங்கு ஜலம் என்று பூதஸூக்ஷ்மங்களோடு கூடின ஜீவனுக்குப்பெயர். இந்த ப்ரஶ்ந ப்ரதிவசநங்களில் ஜலம் என்று சொல்லப்பட்ட பூதஸூக்ஷ்மங்களோடே கூடினவனுயே அக்நியாக நிரூபிக்கப்பட்ட ஸ்வர்க்கத்தில் ப்ரவேசிக்கிறானென்று சொல்லுகையாலே ஜீவன் சரீரத்தை விட்டுப் போம்போது பூத ஸூக்ஷ்மங்களோடு கூடினவனுயே போகிறானென்று ஸித்தாந்தம். உ அஅ.

ஸூ-உஅக. த்ர்யாத்மகத்வாத்து பூயஸ்த்வாத்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) த்ர்யாத்மகத்வாத் - (ஜலம் த்ரிவ்ருத்கரணம் செய்யப்பட்டு) ப்ருதிவிஜலம் தேஜஸ்ஸு என்கிற த்ரிதயஸ்வரூபமாயிருக்கையாலே (ஜலபதத்திற்கு ப்ருதிவீஜலம் தேஜஸ்ஸுக்கள் அர்த்தம்.) பூயஸ்த்வாத் - (ஜலபாகம்) அதிகமாகையினாலே, (ஜலமென்றுசொல்லப்படுகிறது.) உஅக.

(ஶ்ரு-ஹா.) சரீரத்தில் ரக்தம் சவுர் முதலிய ஜலபாக மதிகமாயிருந்த போதிலும் அந்த பாகம் ப்ருதிவீபாகத்தைவிடக் குறைந்தேயிருக்கும். ஆயினும் ப்ருதிவி தவிர மற்ற பூதங்களைக்காட்டிலும் ஜலபாக மதிக மாகையால் அதையுட்கொண்டு சரீராரம்பகங்களானபூதஸூக்ஷ்மங்கள் ஜலமென்றசப்தத்தினால் சொல்லப்பட்டது.

(ப்ர-ஹா.) கீழ் ப்ரஶ்நோத்தர வாக்யங்களில் "ஆப:" என்று ஜலத்தையே சொல்லிற்று. இப்படியிருக்க ப்ருதிவீ ஜலதேஜஸ் ஸூக்ஷ்மங்களோடு போகிறதாகச் சொன்னவித மெப்படி சேருமென்னில், த்ரிவ்ருத்கரணம் பண்ணும்போது ஜலத்தில் ப்ருதிவீபாகமும் தேஜோபாகமும் சேர்ந்திருக்கையாலே அவற்றின் ஸூக்ஷ்மாம்சங்களோடும் கூடப்போகிறானென்பது ஸித்தம். சரீரத்தில் ரக்தம் முதலியவை ஜலபாகம். இந்த பாகமே சரீரத்தி லதிகமாகையால் அதுக்குக்காரணமாகிய பூதஸூக்ஷ்மங்களிலும் ஜலபாக மதிகமென்று அம்மூன்றையும் ஜலமென்று சொல்லிற்று. உஅக

ஸூ-உகூ0. ப்ராணகதேஶ்ச.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ப்ராணகதேஶ்ச - இந்த்ரியங்களுடைய கமநம்சொல்லுகையாலும், (ஜீவன் பூதஸூக்ஷ்மங்களோடே போகிறான்.) உகூ0.

(ஶ்ரு-ப்ர-ஹா.) "தமுத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி ப்ராணமநூத்க்ராமந்தம்ஸர்வே ப்ராணா அநூத்க்ராமந்தி" என்று ஜீவன் சரீரத்தைவிட்டுப் புறப்படும்போது அவனுடன் ப்ராணனும், அத்துடன் இந்த்ரியங்களும் புறப்படுகிறதுகள் என்று சொல்லிற்று. இந்த்ரியங்களுக்கு ஆஶ்ரயமான ஸூக்ஷ்ம சரீரம் போகாமல் இந்த்ரியங்கள் போகாதாகையால் பூதஸூக்ஷ்மங்களும்கூடவே போகின்றன என்று ஒப்புக்கொள்ளவேணும். உகூ0.

ஸூ - உகூக. அக்ந்யாதிஷு கதிஶ்ருதேரிதி சேந்ந பாக்தத்வாத்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) அக்ந்யாதிஷு கதிஶ்ருதே: - அக்நிமுதலியவற்றில் வாக்குமுதலிய இந்த்ரியங்களுக்கு கமநம்சொல்லுகையாலே, (இந்த்ரியங்கள் ஜீவனோடுபோகிறதில்லை), இதி சேத் - என்றால், பாக்தத்வாத் - (வாக்குமுதலிய பதங்கள்) அமுக்யங்களாகையாலே, ந-அப்படியன்று. உகூக.

(ஸ-ரா-ஸா.) "ஆத்மவாஹ்வெ..தி" என்று தொடங்கி ஜீவன் மரணமடைந்த பின் வாகிந்த்ரியம் அக்நியில் லயிக்கிறதென்று தொடங்கி ஒவ்வொரு இந்த்ரியமும் ஒவ்வொரு தேவதையில் லயிக்கிறதென்று சொல்லுகையாலே ஜீவனுடன் போகிற தென்பது எப்படி சேருமென்னில், அங்கு வாகிந்த்ரியமென்றால் வாகிந்த்ரியத்து கதிஷ்ட்டாதாவான தேவதைக்குப்பேராய் அந்த தேவதை அக்நியில் லயிக்கிறது என்று சொல்லிற்று. இப்படியே மேலும் காண்க. அந்த வாக்யத்திலேயே "ஓஷதீ லோமாநி வநஸ்பதீந்கேஶாः" என்று மயிர் முதலானவை புருஷனுடைய மரணகாலத்தில் இவனைவிட்டுப் பிரிந்துபோய் ஓஷதிமுதலானவற்றை அடைகிற தென்று சொல்லிற்று. அவைகளப்படிப்போவதாகக் காணவில்லை. இங்கே பஸ்மமாயாவது மண்ணாயாவது ஆய்விடுகிறது. ஆகையால் அங்கு அவற்றினதிஷ்ட்டான தேவதை போகிறதென்றே சொல்லவேணும். அதுபோல் விடங்களிலும்கண்டு கொள்க. ஆகையால் இந்த்ரியங்கள் ஜீவனோடு போகிறதென்பதில் பாதையில்லை.

ஸூ-உகூஉ, ப்ரதமேஶ்ரவணாதிதிசேந்ந தாஏவ ஹ்யுபபத்தேः.

(ஸ-ரா-வ்ரு.) ப்ரதமே -(ஐந்து ஆஹுதியில்) முதலாவதான ஸ்வர்க்கமாகிற அக்நியிற்செய்யப்பட்ட ஆஹுதியில் (ஸ்வர்க்கப்ரவேசத்தில்), அஶ்ரவணாத்-(ஜலத்துக்கு) ஶ்ரவணமில்லாமையாலே, (ஜீவனுடன் பூதஸூக்ஷ்மங்கள் போகிறதில்லை), இதிசேத் - என்றால், ந - அப்படியன்று. உபபத்தேः - ப்ரஶ்நோத்தரங்களுபபந்நமாகையாலே, தாஏவ - "ஶ்ரத்தா" என்று சொல்லப்பட்டஜலமே, (அங்கும் சொல்லப்பட்டதென்று நிச்சயிக்கப்பட்டது.) உகூஉ.

(ஸ-ஸா.) மேல் "ஶ்ரத்தை" யென்பது ஒரு ஜ்ஞாநவிஶேஷம். அதை ஹோமம்செய்கிறார்களென்றே சொல்லிற்று. ஜலத்தைச் சொல்லவில்லையேயென்னில் அந்தஶ்ரத்தை ஜீவனிடத்திலுள்ளது. அதை ஜீவனைவிட்டுப் பிரித்தெடுத்து ஹோமம் செய்யமுடியாது. ஆகையால்ஶ்ரத்தையென்பதற்கு அங்கு ஜலமேயர்த்தமாகக் கொள்ளவேணும். ஆகில் ஜலபாகத்துக்கு ஶ்ரத்தை யென்ற பெயர் வருவானேனென்னில், ஜீவன்ஶ்ரத்தையோடு யஜ்ஞயாகாதிகளைப் பண்ணினால் அதினால் தேவாதி சரீரமுண்டாகையால், அதற்கு ஶ்ரத்தை காரணமாயிற்றென்று கார்யத்லை லக்ஷணையாகக் காரணவாசி சப்தத்தினால் சொல்லுகிறது. ஸிம்ஹம்போன்ற வீர்யமுடையவனைப்பார்த்து இவன் ஸிம்ஹம் என்று சொல்வது லோகப்ரஸித்தமாயிருக்கும். உகூஉ.

(ரா - ஸா) "தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவாஃஶ்ரத்தாம் ஜுஹ்வதி" இந்த த்யு லோகத்தில் ப்ராணன்கள் ஶ்ரத்தையை ஹோமம் பண்ணுகிறதுகள். அதாவது—அதில் ப்ரவேசிப்பிக்கிறதுகள் என்று சொல்லிற்று. ஶ்ரத்தையாவது ஜீவன். இதனால் ஜீவனுக்கே ஸ்வர்க்கலோக ப்ரவேசம் சொல்லிற்று. பூதஸூக்ஷ்மங்களுக்குச் சொல்லவில்லையே யென்னில், "ஶ்ரத்தா" என்று சொல்லப்பட்ட ஜலத்தினுடைய ஐந்துஆஹுதியின் விஷயமாகச்செய்த ப்ரஶ்நத்திற்கு உத்தரம் "தஸ்மிந்நேதஸ்மிந்" என்று கீழ்ச்சொன்ன வாக்யம். இவ்வாக்யத்திற்கு ப்ரஶ்நவாக்யாநுகுணமாக அர்த்தம் சொல்லவேணுமாகையால் உத்தரவாக்யத்திலுள்ள ஶ்ரத்தாபதத்திற்கு "ஆபः" என்ற பதத்தினாற் சொல்லப்பட்ட பூதஸூக்ஷ்மங்களே அர்த்தம் ஆகையால் முதலிலும் பூதஸூக்ஷ்மங்கள் சொல்லப்பட்டன. உகூஉ.

ஸூ-உகூகூ. அஶ்ருதத்வாதிதி சேந்நேஷ்டாதிகாரிணாம் ப்ரதீதே:.

(ஸ-ரா-வ்ய.) அஶ்ருதத்வாத் - (ஜீவன்) கேட்கப்படாமையாலே, (த்யுலோகாதிகளுக்கு ஜீவன்போகிறதில்லை), இதி சேத் - என்றால், இஷ்டாதிகாரிணாம் - (மேல்வாக்யத்தில்) யஜ்ஞம் முதலியவை செய்கிறவர்களுடைய, ப்ரதீதே: - ப்ரதீதியினாலே, ந - அப்படிசொல்லக்கூடாது. உகூகூ.

(ஸ-ஹா.) அப்பு என்கிற ஜலபாகம் ஐந்தாவது ஆஹுதியில் புருஷாகாரத்தையடைகிறதென்று ஒப்புக்கொள்ளலாம். அத்துடன் சேர்ந்தே ஜீவன் போகிறானென்று எங்கும் சொல்லாமையால் அது ஒப்புக்கொள்ளத்தக்கதன்று என்கிற பூர்வபக்ஷத்துக்கு ஸமாதாநம்—அக்நிஹோத்ர தர்சபூர்ணமாஸாதி கர்மங்களில் ஆஹவநீயாக்நியில் ஹோமம் செய்யப்படுகிற தயிர் பால் நெய் முதலியவை அதிஸூக்ஷ்மரூபங்களையடைந்து ஹோமம் செய்கிற யஜமானனுடைய சரீரத்தோடேவந்து சேர்ந்திருக்கிறதுகள். பின்பு அந்த யஜமானன் மரித்தபின் அவனுடையசரீரத்தை இங்குள்ளவர்கள் “இவனுக்கு இந்த சரீரம் ஸ்வர்க்கலோகத்தில் ஸுகபோகத்துக்கு ஸாதநமாக ஆகக்கடவது” என்று மந்த்ரத்தைச்சொல்லி தஹநம் செய்கிறார்கள். அப்பொழுது அந்த யஜமாநனுடைய சரீரத்துடன் சேர்ந்திருந்த முன்கூறிய ஜலபாகமானது ஸ்வர்க்கலோகத்தில் அவனுக்கு ஸுகத்தை யுண்டுபண்ணுகைக்காக அந்த ஜீவாத்மாவுடனே சேர்ந்துபோய் ஸ்வர்க்கலோகத்தில் அவனுக்குச் சரீரமாகப் பரிணமித்து அவனுக்கு ஸுகத்தை உண்டுபண்ணுகிறதுகள். இப்படிச் சொல்லுகைக்குக்காரணம்—ஸ்வர்க்கத்தில் இந்த ஆஹுதி ஸோமராஜனாக ஆகிறதென்று, முன்கூறிய ஜலபாகத்துக்கு ஸோமராஜனாக ஆகுகையைச் சொல்லிற்று. அதன்பின் வாக்யசேஷத்தில், இஷ்டாபூர்த்தங்களைச்செய்த இந்தயஜமானன் தூமாதிமார்க்கமாக ஸ்வர்க்கலோகமடைந்து அங்கே ஸோமராஜனாக வாகிறானென்றுமுன்சொலிய அர்த்தத்தை விவரித்தது. ஆஹுதி ஸோமராஜனாகுகையாவது, ஆநந்தகரமான சரீரமாகப் பரிணமிக்கை, யஜமானன் ஸோமராஜனாகுகையாவது; ஆநந்தகரமான சரீரத்தையுடையனாகை, இதனால், ஹோமம் செய்யப்பட்ட முற்கூறிய ஜலபாகமே இவனுக்கு ஸ்வர்க்கலோகத்தில் சரீரமாக ஆகிறதென்று தோற்றுகையால், அவை இங்கிருந்தே ஜீவனுடன் சேர்ந்தே ஸ்வர்க்கலோகம் போகிறதென்ற அர்த்தம் கிடைக்கிறது. உகூகூ.

(ர-ஹா.) கீழ்ப்ரஶ்நோத்தர வாக்யங்களில் “ஆப:” என்று சொல்லப்பட்ட ஜலமே த்யுலோகம் முதலியவற்றில் போகிறதென்று சொல்லிற்று. ஜீவன்போவதாகச் சொல்லவில்லை. ஆகையால் ஜீவன் மரணாநந்தரம் த்யுலோகாதிகளுக்குப் போகிறதில்லை என்று பூர்வபக்ஷம்—கீழ்வாக்யங்களில் ஜீவனைச் சொல்லாவிடினும், மேல், “அத ய இமே க்ராம இஷ்டாபூர்த்தே தத்தமித்யுபாஸதே” இத்யாதியால் யாகாதிகள் செய்கிறவனும் கோவில் குளம் தோப்பு முதலியவைகளை நிர்மிக்கிறவனும் தாநம் செய்கிறவனும் த்யுலோகத்தை யடைகிறானென்றுசொல்லுகையாலே, அவ்வர்த்தத்துக்கநுகுணமாக கீழ்வாக்யத்தில் “ஆப:” என்கிற பதத்திற்கு பூதஸூக்ஷ்மங்களோடுகூடின ஜீவனே அர்த்தமென்றங்கீகரித்து அவனுக்கே லோகாந்தரங்களில் கமநம் சொல்லிற்றென்று ஸ்வீகரிக்க வேணுமென்று ஸித்தாந்தம். உகூகூ.

ஸூ-உகூச. பாக்தம்வா நாத்மவித்த்வாத்ததாஹி தர்சயதி.

(ஸ-ரா-ஹா) அநாத்மவித்த்வாத் - பரமாத்மஸ்வரூப மறியாதவனாகையாலே, (அவனை தேவர்கள் புஜிக்கிறார்களென்பது), பாக்தம் - கௌணம். ததாஹி - அப்படியே, தர்சயதி - ஶ்ருதிசொல்லுகிறது.

(ஶ்ரு-ஹா.) ஆஹவனீயாக்நியில் ஹோமம் செய்யப்பட்ட பால் தயிர் முதலானவை ஸூக்ஷ்மரூபமாய்ச்சென்று ஸ்வர்க்கலோகத்தில் சரீரமாகப் பரிணமித்து யஜமானனுக்கு ஸுகத்தை விளைக்கின்றனவென்று கீழே சொன்னதுசரியன்று. "தெவாஸ்தம் ஸக்ஷயந்தி" இங்கிருந்துபோனவனை அங்குள்ள தேவர்கள்பக்ஷிக்கிறார்களென்று சொல்லியிருக்கிறது. அப்படி இவனை பக்ஷித்தால் இவனுக்கென்ன ஸுகமுண்டாகும்? புலி முதலியவை மநுஷ்யனைப் பிடுங்கித்தின்னும்போது அந்த மநுஷ்யனுக்கு ஒரு ஸுகத்தையும்காணோம். அவன் துக்கத்தையே அநுபவிக்கிறதாகக் காண்கிறோமென்கிற சங்கைக்கு ஸமாதாநம்—அந்நம் என்றால் சோற்றுக்கே பெயரன்று, ஸுகபோகத்துக்கு ஸாதகமாகிய பெண்டாட்டி பிள்ளை தநம் வீடு சரீரம் வேலைக்காரன் முதலிய பரிஜநங்கள் இவை யெல்லாவற்றையும் அந்ந மென்கிற பதம் சொல்லும். பக்ஷிக்கிறார்களென்றால் புலி முதலியவற்றைப்போல் பிடுங்கித்தின்று விடுகிறார்களென்றே அர்த்த மன்று. இவனைப்பார்த்தும் தொட்டும் இவனிடத்தில் தங்களுக்குரிய வேலைகளைச்செய்வித்துக் கொண்டும் தாங்கள் ஸுகிக்கிறார்கள் என்றர்த்தம். ஆகையால் இங்கிருந்து போகிறவன் அங்குள்ள தேவர்களுக்கு வேலைக்காரனாயிருந்து அவர்களிட்டவேலையைச்செய்து அவர்களுக்கு ஆநந்தத்தை யுண்டுபண்ணுகையால் இவனை அந்நமென்றும் அங்குள்ளவர்கள் இவனை பக்ஷிக்கிறார்களென்றும் சொல்லுகிறது. அரசனுடைய வேலைக்காரன் அவனுக்கு வேலைசெய்தபோதிலும் தன்வீட்டிலகப்படாத அங்குள்ள சந்தநம் தாம்பூலம் முதலிய வஸ்துக்களைக் கொண்டு தானும் ஸுகத்தை யநுபவிப்பதுபோல், இந்த யஜமானனும் அவர்களுக்குத் தொழிலாளியா யிருந்தபோதிலும் தானும்ஸுகத்தை யநுபவிக்கிறான். இவன் பரமாத்மாவைக்குறித்து யாகம் செய்யாமல் கேவலம் இந்த்ராதிகளைக் குறித்தே செய்கையால் இவனை தேவர்கள் தங்களுக்குத் தொழிலாளியாக்கிக்கொள்ளுகிறார்கள். "யதா தெவாநாஂ பஶுரெவஂ ஸ தெவாநாம்" என்று வேதமே இவ்வர்த்தத்தை வெளியிடுகிறது. ௨௩௪.

(ஶ்ரா-ஹா) "தெவாநாமந்நம் தம் தெவா ஸக்ஷயந்தி" என்று "ஸோமஃ" என்றுசொல்லப்பட்டவஸ்து தேவலோகத்திற்போய் தேவர்களுக்கு அந்நமாகிறது. அதை தேவர்கள் புஜிக்கிறார்கள் என்று சொல்லிற்று; ஜீவன் நித்யனாகையால் அவனை புஜிக்கக்கூடாதாகையால் கீழ் ஜீவனைச்சொல்லவில்லை என்று பூர்வபக்ஷம்.— "தெவாநாமந்நம்" என்றகீழ்வாக்யத்தில் தேவதைகளிவனை புஜிக்கிறார்களென்று சொல்லவில்லை. இந்த ஜீவன் பரமாத்மயாதாத்ம்ய மறியாதவனாகையால் இவனைக் கொண்டு அவர்கள் தங்கள் கார்யங்களைச் செய்வித்துகொள்ளுகிறார்களென்றே சொல்லிற்று. மற்றோரிடத்திலும் "யதா பஶுரெவஂ ஸ தெவாநாம்" என்று பசுவைப்போல்தேவர்களுக்கு இந்த ஜீவன்உழைக்கிறானென்றேசொல்லிற்று ஆகையால் ஜீவனை இங்கு சொல்வதி லொருபாதகமில்லையென்று விஸ்தாரம். ௨௩௪.

௩யி-௭௦, ஸூ-௨௩௫. க்ருதாத்யயெ நுஶயவாந் த்ருஷ்டஸ்ம்ருதிப்யாம் யதெதமநெவஂ ச.

(ஶ்ரு-ஶ்ரா - வ்யா.) க்ருதாத்யயெ - முன்செய்த புண்யகர்மம் (ஸ்வர்க்கா நுபவத்தினால்) நசித்தவளவில், அநுஶயவாந் - (ஜீவன்) அநுபவித்து மிகுந்த கர்மசேஷத்தை யுடையவனாய், (பூலோகத்திற்குத் திரும்புகிறான்). த்ருஷ்டஸ்ம்ருதிப்யாம் - வேத வாக்யத்தினாலும் ஸ்ம்ருதி வாக்யத்தினாலும், (இவ்வர்த்தம் நிஶ்சயிக்கப்படுகிறது), யதெதம் - எவ்வழியினால் ஸ்வர்க்

கத்தை யடைகிறானோ அவ்வழியினாலும், ஊெநவஂவ - வேறுவழியினாலும். (திரும்புகிறான்.) உகரு.

(ஶ்ரீ-ஹா.)புண்யம்செய்தவன் தேவலோகத்திற்குப்போய் புண்யபலமான ஸுகமநுபவித்துத் திரும்பும்போது எல்லாபுண்யத்தையும் ஸம்பூர்ணமாக அநுபவித்துத் திரும்புகிறானா, அல்லது கொஞ்சம் புண்யசேஷமுடையவனாகத் திரும்புகிறானா என்று ஸம்சயம். "யாவத்ஸம்பாதம்" என்று புண்யத்தைக் கடைசிவரையில நுபவித்துத் திரும்புகிறானென்று சொல்லுகையாலே கொஞ்சமும் புண்ய சேஷமில்லாதவனாயே திரும்புகிறானென்று பூர்வபக்ஷம். "ரமணீயசரணா: ..." என்று புண்யமுடையவன் உயர்ந்த ஜந்மத்தை யடைகிறானென்று வேதத்திலும், "... " என்று அங்கிருந்து திரும்பும்போது புண்ய சேஷத்தினால் ஜாதி ரூபம் முதலியவற்றில் உயர்ந்த பதவியை யடைகிறானென்று ஆபஸ்தம்பரும் சொல்லுகையாலே புண்யசேஷ முடையவனாயே திரும்புகிறான். "யாவத்ஸம்பாதம்" என்று கீழ்ச்சொன்னதற்கு எந்தபுண்யம் ஸ்வர்கத்தில் பலத்தைக் கொடுக்குமோ, அதைப்பூர்ணமாக அநுபவித்து என்று அர்த்தமாகையால் விரோதமில்லை. பூலோகத்திற்கு இறங்கும்போது, ஏறும்போது எவ்வழியாலேறினானோ அவ்வழியாகச் சிலவிடங்களிலும் வேறுவழியாகச் சில விடங்களிலும் இழிகிறான். அதாவது சந்த்ரலோகத்திலிருந்து ஆகாசத்திலிழியும்போது போன வழியே இழிகிறான், வாய்வாதிகளிலிழியும்போது வேறுவழியாக இழிகிறான் என்று ஸித்தாந்தம். உகரு.

ஸூ-உகசு. சரணாதிதி சேந்நோபலக்ஷணார்தேதி

கார்ஷ்ணாஜிநி:.

(ஶ்ரீ-ஹா-வ்யா.) சரணாத் - ஆசாரத்தைச்சொல்லுகையாலே, (புண்யத்தைச்சொல்லவில்லை.) இதி சேத் - என்றால், ந - அப்படியன்று, உபலக்ஷணார்தா - (சரணபதம்) புண்யத்திற்கும் உபலக்ஷகமாகிறது, இதி - என்று, கார்ஷ்ணாஜிநி: - கார்ஷ்ணாஜிநி என்பவர் சொன்னார் உகசு.

(ஶ்ரீ-ஹா.) கீழ்ச்சொன்ன "ரமணீயசரணா:" என்கிறவாக்யத்தில் சரணமென்று ஸந்த்யாவந்தனாதியான நல்ல ஆசாரத்திற்குப்பேராய் நல்லொழுக்கமுடையவன் உயர்ந்தஜாதியாகிறானென்றே சொல்லிற்று; புண்யத்தைச் சொல்லவில்லையென்னில், புண்யத்தையும் சொல்லவேணுமென்கிற அபிப்ராயத்தினாலேயே அங்கு நல்லொழுக்கத்தைச் சொல்லிற்று. ஆகையால் புண்யவானே உயர்ந்தவனாய்ப்பிறக்கிறானென்று கார்ஷ்ணாஜினியென்பவர் சொன்னார். உகசு.

ஸூ-உகஎ. ஆநர்தக்யமிதி சேந்ந ததபேக்ஷத்வாத்.

(ஶ்ரீ-ஹா-வ்யா.) ஆநர்தக்யம் - ப்ரயோஜநமில்லாமை, (ப்ரஸங்கிக்கும்), இதி சேத் - என்றால், ததபேக்ஷத்வாத் - (புண்யமும்) ஆசாராபேக்ஷையுடையதாகையாலே, ந - வையர்த்யம் வாராது. உகஎ.

(ஶ்ரீ-ஹா.) ஸந்த்யாவந்தனாதி நல்லொழுக்கத்தினால் உயர்ந்தபதவி கிடையாவிட்டால் அவ்வாசாரம் வீணாய்விடுமேயென்னில், ஸந்த்யாவந்தனம் முதலிய நல்லொழுக்கமில்லாதவன் ஒருகர்மத்திற்கும் யோக்யதையற்றவனாகையால் அது வீணாகமாட்டாது. உகஎ.

ஸூ-உகஅ. ஸுக்ருததுஷ்க்ருதே ஏவேதி து பாதரி:.

(ஸ-ரா-வ்.) ஸுக்ருததுஷ்க்ருதே ஏவ - புண்யபாபங்களே, (சரணசப்தத்தினற் சொல்லப்பட்டது), இதி - என்று, பாதரி:- பாதரியென்பவர் சொன்னர். உகஅ.

(ஸ-ரா-ஸா.) "ரமணீயசரணா:" "கபூயசரணா:" என்ற விடங்களில் சரணசப்தம் கர்மத்திற்குப்பேராய் புண்யபாபங்களைச் சொல்லுகையால் அவையே உயர்வுதாழ்வுகளுக்குக் காரணங்களென்று அவ்வாக்யங்களிற் சொல்லிற்று என்று பாதரிசொன்னர். இதுவேஸித்தாந்தம். உகஅ.

கயி-எக. ஸூ·உகக. அநிஷ்டாதிகாரிணாமபி ச ஸ்ருதம்.

(ஸ-ரா-வ்.) அநிஷ்டாதிகாரிணாம் அபி - யாகம் முதலிய புண்ய கர்மங்களைச் செய்யாதவர்களுக்கும், ஸ்ருதம் - (சந்த்ரலோகப்ராப்தி) வேதத்திற் சொல்லப்பட்டது. உகக.

(ஸ-ரா-ஸா.) பாபிகள் மரணமடைந்தபின் புண்யவான்களைப் போல் சந்த்ரலோகத்திற்குப் போகிறார்களா இல்லையா என்றால்,— "யே வை கே சாஸ்மா லோகாத் ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி" இங்கிருந்து மரித்துப் போகிறவர்களெல்லாம் சந்த்ரலோகத்திற்குப் போகிறார்களென்று சொல்லுகையாலே அவர்களும் போகிறார்களென்று பூர்வபக்ஷம். உகக

ஸூ-ங௦௦. ஸம்யமநே த்வநுபூயேதரேஷாமாரோஹா

வரோஹௌ தத்கதிதர்ஸநாத்.

(ஸ - ரா - வ்.) தத்கதிதர்ஸநாத் - பாபிகளுக்கு யமலோககமநம் வேதவசநத்திற் காண்கையாலே, இதரேஷாம் - பாபிகளுக்கு, ஆரோஹாவரோஹௌ - சந்த்ரலோகத்திற்கு ஏறுகையும் அங்கிருந்து இறங்குகையும், ஸம்யமநே - யமனுடைய ஆஜ்ஞையில், அநுபூய - (நரகங்களை) அநுபவித்து, (அநந்தரமுண்டாகிறது.) ங௦௦

(ஸ-ஸா.) பாபம்செய்தவனும் ஸ்வர்க்கத்தையடைந்து ஸுகத்தை யநுபவிதால் புண்யம் செய்தவனுக்கும் இவனுக்கும் ஒருபேதமில்லையாயிருக்க கஷ்டப்பட்டுப் புண்யம் என்செய்யவேணும்? அதற்காகப் பாபம்செய்தவன் ஸ்வர்க்கலோகம் போகிறானென்று சொல்லுகிறவர்களும்கூட அவனுக்கு அங்கே ஸுகாநுபவம் கிடையாதென்றே சொல்லவேணும். இப்படியாகில் இவன் ஸ்வர்க்கலோகம் போவதற்கு ஒருப்ரயோஜநமுமில்லை. ப்ரயோஜநமில்லாமல் அங்கேயேறுவது அநுசிதம். மரமேறுகிறவன் பழம்முதலியவை பறித்து அநுபவிக்கவேணுமென்றால் ஏறுகிறான். விழவேணுமென்றாவது, வெறுமனே யேறியிறங்கவேணுமென்றாவது ஏறமாட்டான் ஆகையால் பாபிக்கு ஸ்வர்க்கலோககமநம் சொல்வது அநுசிதம். ங௦௦.

(ரா-ஸா.) ஆனால்பாபிகளுக்கும் புண்யவான்களுக்கும் விசேஷமென்னென்னில், "வைவஸ்வதம் ஸங்கமநம் ஜநாநாம்" என்று பாபிகளுக்கு யமலோகப்ராப்தி சொல்லுகையாலே முதல் யமலோகத்தில் பாபபலத்தையனுபவித்து அநந்தரம் சந்த்ரலோகம் போகிறார்கள் இதுவே இவர்களுக்கு விசேஷம். ங௦௦.

ஸூ-கூ0க. ஸ்மரந்தி ச.

(ஸ-ரா-வ்ய-ஸா) ஸ்மரந்தி ச - ("ஸர்வே சைதே வசம் யாந்தி யமஸ்ய" என்று பாபிகளெல்லாரும் யமனுக்கு வசப்படுகிறார்களென்று) தர்ம சாஸ்த்ரங்களும் சொல்லுகிறதுகள். கூ0க.

ஸூ-கூ0உ. அபி ஸப்த.

(ஸ-ரா-வ்ய-ஸா.) ஸப்த அபி - (பாபிகள் அடையத்தக்க நரகங்கள்) ஏழு (என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.) கூ0உ.

(ஸ-ரா-ஸா.) பாபம் செய்தவர்கள் ரௌரவம் முதலிய ஏழுவிதமான நரகங்களை யடைகிறதாகச் சொல்லியிருக்கையால், அவர்களுக்குச் சந்த்ரலோக ப்ராப்தி கிடையாது. கூ0உ

ஸூ-கூ0கூ. தத்ராபி ச தத்வ்யாபாராதவிரோத:.

(ஸ-ரா-வ்ய.) தத்ர அபி - அந்த ஏழுநரகங்களிலும், தத்வ்யாபாராத் - யமனுடைய ஆஜ்ஞை நடக்கையாலே, அவிரோத: - விரோத மில்லை. கூ0கூ.

(ஸ-ஸா.) பாபம்பண்ணினவர்கள் யமதண்டனையையடைந்து யமலோகத்திலே வாஸம்செய்யவேண்டும். அதைவிட்டு சித்ரகுப்தன் முதலியவர்கள் அதிகாரம் செலுத்துவதாகச் சொல்லுகிற ரௌரவாதி நரகங்களுக்கு எப்படிப் போவார்களென்னில்; அந்நரகங்களும் இயமனுடைய அரசாட்சிக்குட்பட்டதே, சித்ரகுப்தன் முதலியவர்களும் இயமனுடைய ஸேவகர்களாய்க்கொண்டே அந்த நரகங்களில் அதிகாரம் செலுத்துகிறார்கள். கூ0கூ

(ரா-ஸா.) பாபிகள் ரௌரவாதி ஏழுவகையான நரகங்களுக்குப் போவதாகவும் யமன்வீட்டிற்குப் போவதாகவும் இரண்டுவிதமாகச்சொன்ன வாக்யங்களெப்படி சேருமென்னில், ரௌரவாதிகளும் யமனுடைய ஆஜ்ஞைக்குட்பட்டதாகையால் அவற்றையே யமாலயமென்று சொல்லிற்று ஆகையால் இரண்டுவாக்யங்களுக்கும் விரோதமில்லை. கூ0கூ

ஸூ-கூ0ச. வித்யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத்.

(ஸ-ரா-வ்ய.) வித்யாகர்மணோ: - (அர்ச்சிராதியும் தூமாதியும், வித்யைக்கும் கர்மத்துக்கும்) பலமாகச்சொல்லப்பட்டது. இதி - இவ்விதமாகவே, ப்ரக்ருதத்வாத் - இப்ப்ரகரணமுபக்ரமித்திருக்கையாலே, (இவ்வர்த்தமே கொள்ளவேணும்.) கூ0ச.

(ஸ-ஸா.) சாந்தோக்யத்திற் சொல்லியிருக்கிற பஞ்சாக்நி வித்யையில், "வேத்த யதாஸௌ லோகோ ந ஸம்பூர்யதே" இந்த ஸ்வர்க்கலோகம் யாரால் நிறைகிறதில்லை, அதாவது—இதற்குயார்வருகிறதில்லையென்றுகேட்க, "அதைதயோ: பதோர்ந கதரேண சந தாநீமாநி க்ஷுத்ராண்யஸக்ருதாவர்த்தீநி பூதாநி பவந்தி ஜாயஸ்வ ம்ரியஸ்வேத்யேதத் த்ருதீயம் ஸ்தாநம் தேநாஸௌ லோகோ ந ஸம்பூர்யதே" ப்ராணிகளிறந்தபின் போகைக்கு தேவயாநமென்றும் பித்ருயாணமென்றும் இரண்டுவழிகளுண்டு ப்ரஹ்மவித்யையறிந்தவர்கள் தேவயாநத்தினால் போய் முக்தியை யடைகிறார்கள். அதையறியாமல் யஜ்ஞயாகாதிகளைப் பண்ணுகிறவர்கள் பித்ருயாணத்தினால்போய் ஸ்வர்க்கலோகத்தை யடைகிறார்கள். பாபிகள் இவ்விரண்டு வழிகளிலும் போகிறதில்லை; அவர்கள் புழுமுதலிய க்ஷுத்ர

ஜந்துக்களாய் அடிக்கடி பிறப்பதுமிறப்பதுமா யிருக்கிறார்கள், இவர்கள்தான் ஸ்வர்க்கலோகத்துக்குப் போகிறதில்லை என்றுத்தரம் சொல்லியிருக்கிறது. இதனாலும் பாபிகள் ஸ்வர்க்கலோக மடைகிறதில்லை யென்று வித்திக்கிறது. ௩0௪.

(ரா-ஹா.) கீழ்ச்சொன்ன பூர்வபக்ஷத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்.— மரித்தவர்களெல்லாரும் சந்த்ரலோகத்திற்குப் போகிறார்களென்று கீழ்ச்சொன்ன ப்ரகரணத்தில், அர்ச்சிராதிமார்க்கமென்றும் தூமாதிமார்க்கமென்றும் இரண்டு. இதில் ஜ்ஞானவான்கள் அர்ச்சிராதியினாலும் புண்யவான்கள் தூமாதியினாலும் போகிறார்களென்று இவ்விருவர்க்குமே இவ்விரண்டையும் பலமாகச்சொல்லிற்று. ஆகையால்பாபிகளுக்கு தூமாதிமார்க்கத்தினாற் சென்று சந்த்ரலோகத்தை யடைகிறதில்லை. அவ்வாக்யத்தில் எல்லாரும் போகிறார்களென்றதுக்கு புண்யவான்களெல்லாரு மென்றர்த்தம் என்று வித்தாந்தம். ௩0௪

ஸூ-௩0௫. ந த்ருதீயே ததோபலப்தே:.

(ஸு-ரா-வ்ரு.) த்ருதீயே - பாபஜந்மத்தில், (சரீரோத்பத்திக்காக), ந - சந்த்ரலோகம்முதலிய ஐந்துஸ்தாநங்களில் ப்ரவேசிக்கையாகிற பஞ்சாஹுதி வேண்டியதில்லை. ததா - அப்படியே, உபலப்தே: - காண்கையாலே, (இவர்கள் தேவலோகம் போகிறதில்லை.) ௩0௫.

(ஸு-ஹா.) புழு முதலியவைகளாய்ப் பிறக்கிறவர்கள் ஐந்தாவது ஆஹுதியில் இப்படி பிறக்கிறார்களென்பதும் கிடையாது. பாபிகள் க்ஷுத்ரஜந்துக்களாய்ப் பிறப்பிறப்புக்களை யடைகிறார்களென்று மாத்திரமே சொல்லியிருக்கிறது. ஸ்வர்க்கலோகமடைந்தவன் மாத்திரமே ஐந்தாவது ஆஹுதியில் புருஷனாகப் பிறக்கிறானென்றும் சொல்லியிருக்கிறது. பாபிகளும் ஸ்வர்க்கம்போய்த் திரும்பிவரும்போது தங்கள் பாபத்தினால் க்ஷுத்ர ஜந்துக்களாய்ப்பிறக்கிறார்கள், மநுஷ்யராகப்பிறக்கிறதில்லையென்று சொல்லில், ஸ்வர்க்கம்போனவர்கள் ஐந்தாவது ஆஹுதியில் புருஷர்களாய், அதாவது மநுஷ்யராய்ப் பிறக்கிறார்களென்கையால் அவர்களுக்கு இந்த புழு முதலிய க்ஷுத்ரஜந்மம் கிடையாது. இதனாலும் பாபிகளுக்கு ஸ்வர்க்கலோகமில்லையென்று ஏற்படுகிறது. ஐந்தாஹுதியாவது-புருஷன் ஶ்ரத்தையினால் ஸ்வர்க்கத்தை யடைகிறான். பின்பு அங்குநின்றும் அழிகிய தன்னுடைய சரீரம் கரைந்து மேகத்தில் வந்து சேருகிறான். அதன்பின், மழைவழியாக பூமியில்வருகிறான், பிறகு அந்நமாய்க்கொண்டு புருஷனுடைய கர்ப்பத்தில் வருகிறான். கடைசியில் அங்குநின்று ரேதஸ்ஸு வழியாக ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் சேருகிறான். இதே ஐந்தாஹுதி யென்பது. ஸ்வர்க்கம் மேகம் பூமி புருஷன் ஸ்த்ரீ இவைகளையே பஞ்சாக்நியென்று சொல்லுகிறது. ௩0௫.

(ரா-ஹா.) சந்த்ரலோகம் மேகம் பூமி புருஷன் என்கிற நாலிடங்களிலும் தங்கி அநந்தரம் ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் ப்ரவேசித்தால் சரீரமாகிறதென்று சொல்லிற்று இந்த ந்யாயத்தினால் பாபிகளுக்கும் சரீரமுண்டாகைக்காக சந்த்ரலோகத்தில் சிலநாள் தங்கி அநந்தரம் கீழ்ச்சொன்ன மேகாதிகளிற் றங்கி வரவேண்டுவதாவஶ்யகமாகையாலே பாபிகளுக்கும் சந்த்ரலோக கமநம் ஒப்புக்கொள்ளவேணுமென்னில், வேண்டா; கேவல பாபிகளுக்குச் சரீரமுண்டாம்போது அவர்கள் சந்த்ரலோகாதிகளில் தங்கிவரவேணு மென்கிறதில்லை, "ஏதந்ரவஸ்ரௌ தேந ஸம்பராயோ," என்று பாபிகள் தேவலோகத்திற்குப் போகிறதில்லையென்றும் சொல்லுகிறது. ஆகையால் பாபிகளுக்குச் சந்த்ரலோக கமநமில்லை. ௩0௫.

ஸூ-௩௰௬. ஸ்மர்யதேऽபி ச லோகே.

(ஶ்ரு-ப்ர-வ்ய.) லோகே-லோகத்தில், ஸ்மர்யதே அபி - ஸ்மரிக்கவும் படுகிறது. ௩.௰௬.

(ஶ்ரு-ஹா.) கீழ் புழு முதலியவைகளாகப் பிறப்பதற்கு ஐந்தாஹூதி யென்கிற க்ரமம் வேண்டியதில்லையென்று சொல்லிற்று; அப்படி ஐந்தாவது ஆஹூதியில் பிறக்கிறவன் மநுஷ்யனேயேபிறப்பன், மற்றொரு ஜந்துவாகப்பிறவான் என்றே நியமம்; மநுஷ்யனாகப் பிறக்கிறவனெல்லாம் ஐந்தாவது ஆஹூதியில் பிறக்கிறானென்கிற நியமமில்லை யென்கிறது. த்ரோணாசார்யர் ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் ப்ரவேசமில்லாமலே பிறந்தார். த்ரௌபதிமுதலியவர்கள் அக்நியில் நின்றும் பிறந்தார்கள். அவர்களுக்கு ஸ்த்ரீகர்ப்பம் புருஷ கர்ப்பம் இரண்டிலும் ப்ரவேசமில்லை. இப்படியே பக்ஷிகளிலும் பலாகைகள் ஸ்த்ரீபுருஷஸம்யோக மில்லாமலே பிறக்கிறதென்று லோகத்தில் ப்ரஸித்தமாகச் சொல்லுகிறார்கள். ஆகையால் சரீரம் ஐந்தாவது ஆஹூதியிலேயே வருகிறதென்ற நியமமில்லை. ௩.௰௬.

(ப்ர-ஹா.) கீழ்ச்சொன்ன பஞ்சமாஹூதி யில்லாமலே த்ரௌபதிமுதலியவர்களுக்குச் சரீரம் அக்நியில் நின்று முண்டாயிற்று என்பது லோகத்தில் ப்ரஸித்தமாயிருக்கிறது. ௩.௰௬.

ஸூ-௩௰௭. தர்ஶநாச்ச.

(ஶ்ரு-ப்ர-வ்ய.) தர்ஶநாச்ச - (பஞ்சமாஹூதியின்றி சரீரோத்பத்தி) வேதத்திற் சொல்லுகையாலும், (பாபிகளுக்குச் சந்த்ரலோக கமநமில்லை.)

(ஶ்ரு-ப்ர-ஹா.) "தேஷாம் கல்வேஷாம் பூதாநாம்" என்கிற ஶ்ருதியில் பேன்செடி முதலானவைகளுக்குக் கீழ்ச்சொன்ன பஞ்சமாஹூதியில்லாமலே சரீரமுண்டாகிறதென்றும் சொல்லியிருக்கிறதுகள். ௩.௰௭.

ஸூ-௩௰௮. த்ருதீயஶப்தாவரோத: ஸம்ஶோகஜஸ்ய.

(ஶ்ரு-ப்ர-வ்ய.) ஸம்ஶோகஜஸ்ய - வேர்வையினாலுண்டான (பேன் முதலிய) ஜந்துவுக்கு, த்ருதீயஶப்தாவரோத: - மூன்றாவதான உத்பிஜ்ஜ சப்தத்தினால் ஸங்க்ரஹம் செய்யப்பட்டது. ௩.௰௮.

(ப்ர-ஹா.) அவ்வேத வாக்யத்தில் அண்டஜ மென்றும் ஜீவஜ மென்றும் உத்பிஜ்ஜமென்றும் மூன்றுவிதமான ஜந்துக்களையேசொல்லிற்று. ஸ்வேதஜமென்றொன்றைச் சொல்லவில்லையே யென்னில், மூன்றும் பதமான உத்பிஜ்ஜ சப்தத்திற்கே ஸ்வேதஜமும் அர்த்தமென்று கண்டுகொள்வது. ஆகையால், பாபிகளுக்குச் சந்த்ர லோக கமநமில்லை என்று விஸ்தாரம். ௩.௰௮.

அதி-௭௨-ஸூ-௩௰௯. தத்ஸ்வாபாவ்யாபத்திருபபத்தே:.

(ஶ்ரு-ப்ர-வ்ய.) உபபத்தே:-ஸுகதுக்காநுபவாபாவமில்லாமை உபபந்நமாகையாலே, தத்ஸ்வாபாவ்யாபத்தி: - ஆகாசாதி ஸாத்ருஶ்யப்ராப்தி, (ஜீவனுக்குள்ளது.) ௩.௰௯.

(ஶ்ரு-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு 'ஸாம்யாபத்திருபபத்தே:" என்று பாடம். ஸாம்யாபத்தியாவது - ஸமாநதர்மத்தை யுடையதாகை. சந்த்ரலோகத்தையடைந்த புண்யபுருஷன் புண்யபல மநுபவித்தபின் அங்கு நின்றும் பூலோகத்தில் விழும்போது "யதேதமாகாஶமாகாஶாத்வாயும் வாயுர்பூத்வா தூமோ பவதி" இத்யாதியினால், முதலில் ஆகாசமாகிறான், பின்பு வாயுவாகிறான்

அதன்பின் தூமமாகிறான், அப்புறம் அப்ரமாகிறான், மேகமாகிறான் என்று இம்மா திரியாக இறங்கும் க்ரமம் சொல்லிற்று. அப்பொழுது ஆகாசமாகிறா னென்பத ற்கு, ஆகாசஸ்வரூபமாய் விடுகிறானா, அல்லது அதின் தர்மத்தையடைகிறானா என்ற சங்கையில்,—ஆகாசமாகிறானென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையால் ஆகாச ஸ்வரூபமாயேயாய்விடுகிறானென்று பூர்வபக்ஷி சொன்னான். சந்த்ரலோகத்திலு ள்ள புண்யபுருஷனுடைய சரீரம், அவனுடைய புண்யம் கழிந்தபின் "இனி பூமியில் விழப்போகிறோமே" என்கிற துக்காக்நியினால்கரைந்து, ஆகாசம்போல் அதிஸூக்ஷ் மாவஸ்த்தையையடைகிறது. இந்த அவஸ்த்தையையே ஆகாசமாகிறா னென்கிறது. ஜலதத்வம் ஆகாசதத்வமாகக் கூடாமையால் பூர்வபக்ஷிசொன்னது அர்த்தமன்று. ஆகாசமாகிறா னென்பதற்கு ஆகாசம்போலாகிறானென்றே அர்த்தம். இப்படியே, வாயுவாகிறானென்பதற்கும், அந்த சரீரத்தினுடைய ஸூக்ஷ்மபாகம் வாயுவுக்குப் பரவசமாகிறதென்றே அர்த்தம். இப்படியே மேல்வாக்யங்களிலும் கண்டுகொள் வது என்று ஸமாதாநம். ௩0௯.

(ஙா-ஹா.) இதில் சந்த்ர லோகத்தி லிருந்திறங்கும்போதுள்ள விதத்தைச் சொல்லுகிறார்.— சந்த்ரலோகத்திலிருந்து பூலோகத்திற்கு ஜீவன் திரும்பும்போது ஆகாசமாகவும்பின்புவாயுவாகவும்அநந்தரம்தூமமாகவும்மேகமாகவுமாகிறானென்று சொல்லிற்று. இங்கு ஆகாசமாகையாவது ஆகாசத்தைச் சரீரமாகக் கொள்கையா, ஆகாசத்தைப்போ லிருக்கையா என்று ஸம்சயம். சந்த்ர லோகத்தில் அம்ருத மயமான சரீரமெடுப்பதுபோல் ஆகாசமாகிறசரீரமெடுக்கையே ஆகாசமாகைஎன்று பூர்வபக்ஷம். சரீர மெடுப்பது ஸுகதுக்கா நு பவத்திற்காக. ஆகாசாதிகளைச்சரீரமாகக் கொண்டு ஜீவன்ஸுகதுக்கங்களை யனுபவியாமையால் ஆகாசாதிகளைச் சரீரமாகக் கொள்ளுகையில் ப்ரயோஜநமில்லை யாகையால் ஆகாசாதிகளைச் சரீரமாகக் கொ ள்ளுகிறதில்லை. ஆகாசாதிகளைப்போ லிருக்கிறானென்று ஸித்தாந்தம். ௩0௯.

ஸூ-எ௩-ஸூ-௩௧0. நாதிசிரேண விஶேஷாத்.

(ஶ-ஙா-வ்யா.) விஶேஷாத் - வ்ரீஹியில் பகுகால மாத்ரம் இருக்கிறா னென்று விசேஷிக்கையாலே, அதிசிரேண - (ஆகாசாதிகளில்) பகுகாலம் ந-இருக்கிறதில்லை. ௩௧0.

(ஶ-ஙா-ஹா.) ஜீவனிறங்கும்போது ஆகாசம் வாயு முதலிய வற்றில் பகுகால மிருந்து வருகிறானா, அல்லது அங்கிருந்து சீக்கிரத்திலிறங்குகிறானா, அல்லது சிலரிப்படியும் சிலரப்படியும் வருகிறார்களாஎன்று ஸம்சயம். சீக்கிரத்திலிறங்குகிறா னென்றும் அங்குசிலகாலம் தங்குகிறானென்றும் சொல்லாமையாலே அதில் நியமமில்லை என்று பூர்வபக்ஷம்.— "அதோ வை கலு துர்நிஷ்ப்ரபதரம்" என்று மேலே வ்ரீஹியில் (தாந்யத்தில்) நின்றும் சீக்கிரத்தில் இந்தஜீவன் வெளிக் கிளம்புகிறதில்லை யென்று சொல்லுகையாலே, அதற்குக் கீழுள்ள ஆகாசாதிகளில் சிரகாலம் தங்குகிறதில்லை யென்று நிஶ்சயிக்கப்படுகிறதென்று ஸித்தாந்தம். ௩௧0.

ஸூ-எச-ஸூ-௩௧௧. அந்யாதிஷ்டிதே பூர்வவதபிலாபாத்.

(ஶ.ஙா-வ்யா.) பூர்வவத் - முன் (ஆகாசாதிகளில்) போலவே, அபி லாபாத் - சொல்லுகையாலே, அந்யாதிஷ்டிதே - வேறொரு ஜீவனாலதிஷ் டிக்கப்பட்ட வ்ரீஹியில், ஜீவன் ஸம்யோகத்தை மாத்ரம் அடைகிறான்.

(ஶ-ஙா-ஹா.) ஜீவன் தேவலோகத்தில் நின்றும் ஆகாசம் வாயு தூமம் அப்ரம் மேகம் ஆக இவற்றின்வழியாக இறங்கி "வ்ரீஹியவா ஓஷதிவநஸ்பதயஸ்திலமாஷா ஜாயந்தே" என்று வ்ரீஹ்யாதி தாந்யங்களி லொருவனாகப் பிறக்கிறானெ

ன்றுசொல்லிற்று. தாந்யாதியாகப்பிறக்கையாவது, தன்னுடைய ஸுகதுக்காநுபவ யோக்யமாக அத்தை சரீரமாகப் பரிக்ரஹிக்கிறுை, வேறொருவனால் அப்படி பரி க்ரஹித்த தாந்யத்தில் சேர்ந்திருக்கிறுை என்று ஸம்சயம்—பிறக்கிறு னென்று சொல்லுகையாலே அத்தை சரீரமாகப் பரிக்ரஹிக்கிறுனென்று பூர்வபக்ஷம்—ஆகா சாதிகளிற்போலவே தாந்யத்தில் பிறக்கைக்கும் புண்யபாப ரூபஹேது ஒன்றும் சொல்லாமையாலே தான்யத்தை சரீரமாகப் பரிக்ரஹிக்கிற தில்லை. மற்றொரு ஜீவன் பரிக்ரஹித்த தாந்யத்தில் சேர்ந்துமாத்ர மிருக்கிறுனென்று ஸித்தாந்தம்.

ஸூ-௩௧௨. அஶுத்தமிதி சேந்ந ஶப்தாத்.

(ஸூ-ரா-வ்யா.) அஶுத்தம் - (யஜ்ஞாதிகள்) சுத்தமன்று,(ஹிம்ஸாரூபம்) இதி சேத் - என்றால், ஶப்தாத் - (இதுஹிம்ஸை யன்றென்று) வேதவாக்யம் சொல்லுகையாலே, ந - (இது) ஹிம்ஸையாகமாட்டாது. ௩௧௨.

(ஸூ-ஹா.) அந்த ஜீவன் நெல்லாயிருக்கிறு னென்னும்போது, வேறொரு ஜீவ னுக்குச் சரீரமாயிருக்கிறநெல்லில்சேர்ந்திருக்கிறுனென்றுசொல்லிற்றுக்கீழ்.இதில் இவனுக்குஅந்த நெல் சரீரமாகமாட்டாது என்பது சரியன்று.நாய் முதலிய ஜந்மங் கள்மிக்கபாபத்தினுல் நேரிடுகிறது. நெல்முதலிய ஸ்த்தாவர ஜந்மம் அதைக்காட்டி லும் மிகுந்த பாபத்தினுல் நேரிடுகிறது.அவ்விதமான ஜந்மத்தை யடையத்தக்க பாப மிவனுக்குண்டு. அதாவது-யாகத்தில் பசுவைக்கொல்லுகை.அப்பாபத்தின் பலத்தை யநுபவிக்கைக்காக இப்படிநெல்லைச்சரீரமாக தரிக்கிறுனென்பதே உசிதமென்றுன் பூர்வபக்ஷி.—ஒருகார்யமே தேசகால நிமித்த பேதங்களினுல் தர்மமுமாகும், அதர் மமுமாகும். யாகத்தில் தேவதைக்கு அர்ப்பணம் செய்யவேணுமென்று உத்தேசியா மல் பசுஹிம்ஸை பண்ணினுல் அதுவே அதர்மமெனப்படும். யாகத்தில் பசுஹிம்ஸை புண்யமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே, யாகரூப நிமித்த பேதத்தினுல் அந்த ஹிம்ஸையே தர்மமாய்விடுகிறது. ஆகையால், நெல்லாகப் பிறப்பதற்குரிய பாபமிவ னுக்கில்லை யாகையால், இவன் நெல்லோடு கூடியிருக்கிறுன். அப்போது அந்நெல் இவனுக்குச் சரீரமாகிறதில்லை என்று ஸித்தாந்தம். ௩௧௨.

(ரா-ஸா.) தாந்யமாகப் பிறக்க ஹேது சொல்லா விடிலும் இவன்செய்த யஜ்ஞயாகாதிகளில் செய்கிற பசுஹிம்ஸை பாபமாகையாலே அப்பாபத்தை யனுப விக்கைக்காக தாந்யமாகப் பிறக்கிறுனென்று நிஶ்சயிக்கலாமென்னிலும், யாகாதி களில் செய்த பசுஹிம்ஸை பாபமாகாது. அந்தபசு ஸ்வர்க்கம் போய் ஸுகிக்கிற தென்று சொல்லுகையாலே. அது தாந்ய ஜந்மத்திற்கு ஹேதுவாகமாட்டாது. ௩௧௨.

ஸூ-௩௧௩. ரேதஸ்ஸிக்யோகோऽத².

(ஸூ-ரா-வ்யா.) அத² அதற்குப்பின், ரேதஸ்ஸிக்யோக:-ரேதஸ்ஸேசநம் செய்கிற புருஷனிடத்தில் சேர்கை, (ஜீவனுக்குச் சொல்லிற்று.) ௩௧௩.

(ஸூ-ஹா.) மேல்வாக்யத்தில் 'யோயோ ஹ்யந்நமத்தி யோ ரேத: ஸிஞ்சதி"என்று,ஸ்வர்க்கத்தில்நின்றும் விழுந்தபுருஷன் அந்நமாய்க்கொண்டுபுருஷனு டைய உதரத்தில் போனபின் அப்புருஷன் ரேதஸ்ஸேகம் பண்ணுகிறுனென்று சொல்லுகிறது. அப்படி ரேதஸ்ஸேகம்செய்கை, வெகுகாலம் கழிந்து யௌவநம் வந்தபின் செய்யவேண்டிய வ்யாபாரம். அப்படியிருக்க, இவன் அந்நரூபியா யிருக் கச்செய்தே ரேதஸ்ஸேகம் செய்கிறுனென்பது சரியன்று. ஆகையால் ரேதஸ்ஸே கம் செய்கிற புருஷனோடு சேர்ந்திருக்கிறுனென்றே சொல்லவேணும். அப்படியே நெல்லாகிறுனென்ற விடத்திலும் நெல்லோடு கூடியிருக்கிறுனென்றே அர்த்தம் சொல்லவேணும். ௩௧௩.

(ரா-ஹா.) அதற்குப்பின், அந்த ஜீவன் சேர்ந்திருக்கிற தான்யத்தை எவன்புஜிக்கிருனே, ஸ்த்ரீயினிடத்தில் ரேதஸ்ஸேசநம் செய்கிருனே, அந்த புருஷனிடத்தில் வந்து அந்த ஜீவன் சேருகிருன். அநந்தரம் புருஷனிடத்திலும் பூர்வம் ஆகாசாதிகளிலும் சேர்ந்திருக்கையே சொல்லுகையாலே நடுவிலுள்ள தான்யத்திலும் சேர்ந்திருக்கிருனென்றே யங்கீகரிக்கவேணும். நகச.

ஸூ_நகச. யொநெ: ஶரீரம்.

(ஸ-ரா-வ்யா.) யொநெ: யோநியையடைந்ததற்கு (அநந்தரம்) ஶரீரம் - சரீரமுண்டாகிறது. நகச.

(ஸ-ரா-ஹா.) ஸ்த்ரீயின் கர்ப்பத்திற்சேர்ந்த பின்பே ஜீவனுக்கு சரீரமுண்டாகிறது. அந்த சரீரத்திலேயே அந்த ஜீவனுக்கு ஸுகதுக்காநுபவமுண்டாகிறது. அதற்குமுன் ஸுகதுக்காநுபவமில்லை யாகையால் இதற்குமுன்புள்ள ஆகாச வாய்வாதிகள் அந்த ஜீவனுக்கு சரீரமாகமாட்டாவென்று ஸித்தாந்தம். நகச.

ந-வது அத்யாயம் க-வது பாதம் ஸம்பூர்ணம்.

---

## ந-வது அத்யாயம், உ-வது பாதம்.

அதி-எரு. ஸூ-நகரு. ஸந்த்யெ ஸ்ருஷ்டிராஹ ஹி.

(ஸ-வ்யா.) ஸந்த்யே - ஸ்வப்நத்தில், ஸ்ருஷ்டி: - ஸ்ருஷ்டியானது, (பரமார்த்தம் ஏனென்றல்,) ஆஹ ஹி - (ஶ்ருதி) சொல்லிற்றன்ரு. நகரு.

(ரா-வ்யா.) ஸந்த்யே - ஸ்வப்நத்தில் (காண்கிற பதார்த்தங்களினுடைய), ஸ்ருஷ்டி: - ஸ்ருஷ்டி, (ஜீவனல் செய்யப்பட்டது). ஆஹ ஹி - (அவனையே கர்த்தாவாக வேதம்) சொல்லிற்றன்ரு. நகரு.

(ஸ-ஹா.) கீழ்பாதத்தில் பஞ்சாக்நி வித்யையைக்காட்டி ஜீவனுடைய ஸம்ஸாரத்திலிருப்பி னவாந்தர பேதங்கள் சொல்லப்பட்டது. இப்பாதத்தில் இவ்விருப்பின வஸ்த்தாபேதங்கள் சொல்லப்படுகின்றன.—ஜீவனுறங்கும்போது ஸ்வப்நம் காண்கிருன். அந்த ஸ்வப்நத்தில் காண்கிற, தேர், ஊர், வீடு, முதலிய வஸ்துக்கள், விழித்துக்கொண்டிருக்கையில் காண்கிற வஸ்துக்களைப்போல் உண்மையானவைகளா - அல்லது, இந்த்ர ஜாலத்தில் காண்கிற விசித்ர வஸ்துக்களைப்போல் மாயையாவென்னில், "ரதாந்ரதயொகாந்பதஸ்ஸ்ருஜதெ" தேர்களையும் குதிரைகளையும் வழிகளையும் அந்தஸ்வப்நகாலத்தில் ஸ்ருஷ்டிக்கிருனென்று ஶ்ருதி சொல்லுகையாலே அவைகள் உண்மையானவைகளே. நகரு.

(ரா-ஹா.) இந்த பாதத்தில், பரமபுருஷனிடத்தில் பக்திருசி யுண்டாகைக்காக அவனுடைய கல்யாணகுணங்களையும் ஹேயப்ரத்யநீகத்வத்தையும் சொல்லுகிறது.—"ந தத்ர ரதா ந ரதயொகா ந பந்தாநோ பவந்த்யத ரதாந்ரதயொகாந்பத: ஸ்ருஜதெ" என்று தொடங்கி "ஸஹி கர்த்தா" என்னுமளவாக, ஸ்வப்நத்தில் ஜீவன் ரதம் முதலிய அநேக பதார்த்தங்களைப் பார்க்கிருன். அவை, அதற்குமுன் இல்லை. அப்போதே ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. அவைகளை ஸ்ருஷ்டிக்கிறவனே கர்த்தாவாகிருனென்று சொல்லிற்று. இங்கு அப்பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கிறவன் ஜீவனு, பரமபுருஷனு என்று ஸம்சயம்.—இதற்குமுன் வாக்யத்தில் ஸ்வப்நத்தைப்பார்க்கிறவன் ஜீவன் என்று சொல்லி, இங்கு அவன் கர்த்தாவென்று சொல்லுகையாலே ஜீவனே கர்த்தாவென்று தோற்றுகிறது. அவனுக்கும்

ஸத்யஸங்கல்பத்வாதிகள் - அதாவது தான் நினைத்தபடி செய்யவல்ல ஸாமர்த்யம் உண்டென்று சொல்லுகையாலே ஜீவனே ஸ்வப்நத்திற் காண்கிற பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கிறுனென்று பூர்வபக்ஷம். கடு.

ஸூ. கசு. நிர்மாதாரஞ்சைகே புத்ராதயஶ்ச.

(ஶ்ரு ரா-வ்யா.) ஏகே - சிலர், நிர்மாதாரம் - (ஜீவனை) ஸ்ருஷ்டி கர்த்தாவாக, (சொல்லுகிறுர்கள்) புத்ராதயஶ்ச - புத்ராதிகளும் (ஸ்வப்நத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்கள்). கசு.

(ஶ்ரு-ஹா.) மேலும், இந்த ஸ்வப்நவஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கிறுனென்று சொல்லுகிறது பரமாத்மப்ரகரணமாயிருக்கிறது. ஆகையால் இவற்றைப் பரமாத்மாவே ஸ்ருஷ்டிக்கிறுனென்று அந்த ஶ்ருதிக்கு அர்த்தம். ஆகையால், பரமாத்மா ஸ்ருஷ்டித்த இந்த ஜகத்து இப்போது உண்மையா யிருப்பதுபோல் அவனே ஸ்ருஷ்டித்த அதுவும் உண்மையாயே யிருக்கவேணும் என்று பூர்வபக்ஷி சொன்னுன். கசு.

(ரா ஹா) "யஏஷ ஸுப்தேஷு ஜாகர்தி காமங்காமம் புருஷோ நிர்மிமாண:" என்று தனக்கு இச்சாவிஷயங்களான புத்ர பசு தநாதிகளை ஜீவனை புருஷன் ஸ்ருஷ்டிக்கிறுனென்றும் சொல்லுகையாலே ஜீவனே ஸ்ருஷ்டிக்கிறுன். கசு.

ஸூ-கஎ. மாயாமாத்ரந்து கார்த்ஸ்ந்யேநாநபிவ்யக்தஸ்வரூபத்வாத்.

(ஶ்ரு-வ்யா) கார்த்ஸ்ந்யேந - ஸம்பூர்ணமாக, அநபிவ்யக்தஸ்வரூபத்வாத் - (இவ்வஸ்து தர்மங்களின்) அபிவ்யக்தியில்லாத ஸ்வரூபத்தை யுடைத்தா யிருக்கையால், மாயாமாத்ரம் - (ஸ்வப்நத்தில் காண்கிற வஸ்துக்கள்) கேவல மாயையே (உண்மையானவையன்று). கஎ.

(ரா - வ்யா.) கார்த்ஸ்ந்யேந - ஸம்பூர்ணமாக, அநபிவ்யக்தஸ்வரூபத்வாத் - (ஜீவனுடைய ஸத்யஸங்கல்பத்வம் ஸம்ஸாரதசையில்) ப்ரகடஸ்வரூபத்தை உடைத்தாகாததாகையால், மாயாமாத்ரம்-ஆஶ்சர்யகரமான ஸ்வப்நபதார்த்தங்களெல்லாம், (பரமபுருஷனுல் ஸ்ருஷ்டிக்கப்படுகிறது. கஎ.

(ஶ்ரு-ஹா.) இந்த பூர்வபக்ஷத்துக்கு ஸமாதாநம் சொல்லுகிறுர்.—ஸ்வப்நத்தில் காண்கிற வஸ்துக்கள் உண்மையேயன்று. அவ்வளவும் இந்த்ரஜாலம்போல் மாயை தான். ஏனென்றுல்,—ஜீவன் தன் சரீரத்திற்குள் தேர் யானை குதிரை நகரம் வநம் முதலிய ஸமஸ்த வஸ்துக்களையும் காண்கிறுன். அவ்வளவு பெரிய வஸ்துக்கள் இந்த அல்ப சரீரத்தில் ஒருகாலு மடங்கமாட்டா. இவன் உறங்குகிற அந்த அல்ப காலத்திற்குள் பகுதூரம் நூறு இருநூறுயோஜனை தூரமுள்ள இடங்களுக்கு போவதாகவும் அங்கிருந்து திரும்பி வருவதாகவும் தோற்றுகிறுன். அந்த அல்பகாலத்திற் குள் அவ்வளவுதூரம் போவதும் வருவதும் ஒருகாலும் இணங்காது. அப்போது காண்கிற தேர் முதலியவற்றைச்செய்ய எவ்வளவோ தினங்கள் பிடிக்கும். அவ்வளவு தினங்களில் செய்யவேண்டியவற்றை அந்த சிறிதுகாலத்திலேயே செய்து ஸித்தமாய்விட்டதாகக் காண்கிறுன். அதுவும் யுக்திக்குச்சேராது. ஒரு தேர் செய்யவேணுமாகில் அதற்கு மரம் உளி வாச்சி முதலிய அனேக ஸாமக்ரிகள்வேணும், அவையொன்றும் அக்காலத்தில் கிடையாது. அவை யில்லாமல் உண்மையான தேஶாச்

செய்யவும் முடியாது. மேலும் ஸ்வப்நத்தில் ஒரு யானையைப் பார்த்துக்கொண்டிருக்கச்செய்தேயே அந்த யானை சிறிது காலத்திற் குதிரையாகவும், இன்னும் நொடிப்பொழுதில் குரங்காகவும் மநுஷ்யனாகவும் மரமாகவும் இப்படி ஒரே வஸ்து வெவ்வேறாக மாறி மாறிக் காண்கிறது. உண்மையான வஸ்துவாகில் அப்படி மாற மாட்டாது. இப்படி உண்மையான வஸ்துக்களுக்குள்ள குணங்களொன்று மிதற்கில்லை யாகையால் இந்த ஸ்வப்நவஸ்துக்கள் உண்மையாகமாட்டா. ௩௪.

(ஶ்ரீ-ஹா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்.—ஜீவனுக்கு ஸத்யஸங்கல்பத்வமிருந்தாலும் அது ஸம்ஸாரதசையில் கார்யகரமல்லாமல் மறைந்திருக்கையால், அப்பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்க ஜீவன் ஸமர்த்தனாகமாட்டான். பரமபுருஷனே ஸ்ருஷ்டிக்கிறான். இப்ப்ரகரணத்தில் உபக்ரமத்தில் "யஏஷ ஸுப்தேஷு ஜாகர்தி" உறங்கும்போது எவன் விழித்துக்கொண்டிருக்கிறானோ என்றும், கடைசியில் "தஸ்மிம்ல்லோகா: ஶ்ரிதா:" அவனிடத்தில் ஸமஸ்தலோகங்களும் ஆஶ்ரயித்திருக்கிறதுகள் என்றும் பரமபுருஷனையே சொல்லுகையாலே நடுவிலுள்ள "ஸ ஹி கர்தா" என்கிற வாக்யமும் அந்த பரமபுருஷனையே கர்த்தாவாகச் சொல்லிற்றென்று ஸித்தாந்தம். ஸ்வப்நபதார்த்தங்கள் மற்றொருவனுக்குக் காணாமலும் காலாந்தரங்களிலில்லாமலும் விசித்ரமா யிருக்கையாலே மாயையென்று சொல்லிற்று. ௩௪.

ஸூசகஶ்ச ஹி ஶ்ருதேராசக்ஷதே ச தத்வித:॥

(ஶ-வ்ய.) ஶ்ருதே: - வேதவாக்யத்தினால், ஸூசகஶ்ச ஹி - (சுபாசுபங்களுக்கு) ஸூசகமாக மாத்திரம் ஆகிறதன்றோ. தத்வித: - அந்த ஸ்வப்ந சாஸ்த்ரமறிந்தவர்களும், ஆசக்ஷதே ச - ஸ்வப்நம் சுபாசுப ஸூசகமென்று சொல்லுகிறார்கள். ௩௫.

(ஶ-ஹா.) ஸ்வப்நத்தில்பார்த்த வஸ்துக்கள் பொய்யாகில், வேதத்திலும் ஸ்வப்நாத்யாயங்களிலும், ஸ்வப்நத்தில் ஸ்த்ரீ கண்ணாடி பழம் பூ சித்ரம் முதலிய நல்ல வஸ்துக்களைப்பார்த்தால் சீக்கிரத்தில் இவனுக்கு ஸுகமுண்டாகுமென் றறியவேணும், கறுத்தபுருஷன் கறுத்தபற்களை யுடையவன் முதலியகெட்டவஸ்துக்களைப்பார்த்தால் சீக்கிரத்தில் இவனுக்குத் துன்பமுண்டாகவேணுமென் றறியவேணுமென்றும் சொல்லியிருக்கிறது, அப்படியே அநுபவத்திலும் காண்கிறது, அதெல்லாம் சரிப்படாமல் போய்விடுமேயென்னில்;—வழியில் விழுந்துகிடக்கிற தகரத்தைப்பார்த்து வெள்ளியென்று ப்ரமித்து அதினால் ஆநந்தத்தை யடைகிறான். இருட்டிலுள்ள ஒரு கயிற்றைப்பார்த்துப் பாம்பென்று ப்ரமித்து பயப்படுகிறான். இவனடைகிற ஆநந்தமும் பயமும் உண்மையானபோதிலும், அவற்றுக்குக் காரணமாக நினைத்த வெள்ளியும் பாம்பும் உண்மையானதன்று, இதனால் காரணமுண்மையாகாவிடினும் ப்ராந்தியினால் உண்மையான காரியமுண்டாவது அநுபவமாயிருக்கிறதென்று ஏற்பட்டது. அதுபோலவே இங்கும், ஸ்வப்நத்தில் கண்ட வஸ்துக்கள் உண்மை யாகாவிடினும், அதைப்பார்ப்பது,உண்மையாகிய சுபாசுபங்களுக்குக் காரணமாகலாம். ஸ்வப்நவஸ்துக்களைச் சிலவிடங்களில் ஜீவன் ஸ்ருஷ்டிப்பதாகவும், சிலவிடங்களில் பரமாத்மா ஸ்ருஷ்டிப்பதாகவும் சொல்லியிருந்தபோதிலும், "இக்கலப்பைதான் என்னைக் காப்பாற்றுகிறது" என்று உலகமொழியுண்டு; கலப்பை மநுஷ்யனைக் காப்பாற்றுகையாவது, தாயானவள் பிள்ளையைக் காப்பாற்றுவதுபோலன்று, கலப்பையினால் வ்யவஸாயம் செய்தால் அதினால் பூமிவிளைந்து அதினால் இவன் சோறுண்டு பிழைக்கையாம். அதுபோலவே ஜீவன் ஸ்ருஷ்டிக்கிறானென்பதும். அதாவது - இந்த மாதிரி ஸ்வப்நம் காண்பதற்கு ஜீவனுடைய அத்ருஷ்டம் காரணமாகையால் இப்படி சொ

ல்லக்கூடும். பரமாத்மா ஸ்ருஷ்டிக்கிறானென்பதும், ஜீவன் பரமாத்மாவினுடைய அம்சமாகையால் அந்த ஸ்ருதிக்கு மொருபாதையில்லை. ௫௧௮.

ஸூ-௫௧௮. பராபி⁴த்⁴யாநாத்து திரோஹிதம்
ததோ ஹ்யஸ்ய ப³ந்த⁴விபர்யயௌ.

(ஸூ-வ்ய.) திரோஹிதம்-மறைந்திருக்கிறகுணம், பராபி⁴த்⁴யாநாத்-பரமாத்மாவின் த்யாநத்தினால், (வெளிப்படுகிறது). ததஃ - அந்த த்யாநத்தினால், அஸ்ய-இந்த ஜீவனுக்கு, ப³ந்த⁴விபர்யயௌ-ஸம்ஸாரமோக்ஷங்கள்.

(ஸூ-ஹா.) பெருநெருப்பிலிருந்து தெறித்த சிறுநெருப்பு நெருப்பேயாகிறாப் போல் பரமாத்மாவினிடத்தில் நின்றுமுண்டான ஜீவன் பரமாத்மாவேயாகிறான். அவ்விருவர்க்கும் பேதமில்லை யென்றது கீழ். அதுசரியன்று. பெருநெருப்பில்நின்றுமுண்டான சிறுநெருப்பில் அதுக்குண்டான ப்ரகாசம் உஷ்ணம்முதலிய குணங்கள் முற்றும் காண்கிறது. ஜீவனிடத்தில் பரமாத்மாவின் குணங்களாகிய ஜ்ஞாந சக்தி முதலியவைகளொன்றும் காணவில்லையே யென்னில், சாம்பல்மூடின நெருப்பில் ப்ரகாசம் மறைந்திருப்பதுபோலவும், அரணிக்கட்டையிலுள்ள நெருப்பில் ப்ரகாசம் உஷ்ணம் முதலிய குணங்கள் மறைந்திருப்பதுபோலவும், ஜீவனுக்கும் அநாதி மாயையினால் ஜ்ஞாநசக்தி முதலான குணங்கள் காண்கிறதில்லை. அவ்வளவேயன்றி ஜீவனுக்கு இக்குணங்கள் இல்லை யென்னப்போகாது. அக்குணங்கள் அந்த ஜீவனுக்கு பகவத்த்யாநத்தினால் அம்மாயைநீங்கி பின்பு ப்ரகாசத்தையடைகின்றன. இவனீஸ்வரனை யறியாமலிருப்பதே ஸம்ஸாரத்துக்கும், அவனை யறிவதே மோக்ஷத்துக்கும் காரணமாயிருக்கின்றன. இதனால், ஸ்வப்நத்தில் காண்கிற தேர் முதலியவை செய்கைக்கு மரம் உளி வாச்சி முதலிய காரணங்களில்லாவிடினும் பரமாத்ம ஸ்வரூபியாகிய ஜீவனே தன்னுடைய ஸத்யஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக்கிறான், ஆகையால் ஈஸ்வரன் தன்ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டித்த இவ்வஸ்துக்களைப்போல் அவையும் உண்மையாகலாமென்றதுக்கு,—ஜீவன் ஈஸ்வரனானபோதிலும் அவனுக்கு ஸம்ஸாரதசையில் ஸத்யஸங்கல்பம் மறைந்திருக்கையால் அதினாலவன் ஸ்ருஷ்டிக்க முடியாதென்று ஸமாதாநம் சொன்னதாயிருக்கிறது. ௫௧௮.

ஸூ-௫௧௯. தே³ஹயோகா³த்³வா ஸோऽபி.

(ஸூ-வ்ய.) ஸோऽபி - அதுவும், தே³ஹயோகா³த்³வா - சரீரஸம்பந்தத்தினாலுண்டாகிறது. ௫௧௯.

(ஸூ-ஹா.) ஜீவன் ஈஸ்வராம்சமாகில் இவனுக்கு ஸத்ய ஸங்கல்பத்வாதிகள் மறைந்திருப்பானேனென்னில், ஸம்ஸாரதசையில் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் அவைமறைந்திருக்கின்றன என்று ஸித்தாந்தம். ௫௧௯.

ஸூ-௫௧௮. பராபி⁴த்⁴யாநாத்து திரோஹிதம்
ததோ ஹ்யஸ்ய ப³ந்த⁴விபர்யயௌ.

(ஸூ-வ்ய.) பராபி⁴த்⁴யாநாத் - பரமபுருஷ ஸங்கல்பத்தினால்; திரோஹிதம்-மறைக்கப்பட்டது. ததஃ-அந்த பரமாத்மாவினிடத்திலிருந்து, அஸ்ய - இந்த ஜீவனுக்கு, ப³ந்த⁴விபர்யயௌ - ஸம்ஸாரமோக்ஷங்கள் (உண்டாகின்றன.) ௫௧௮.

(ரா-ஹா.) ஜீவனுக்கு ஸத்யஸங்கல்பத்வம் ஸ்வாபாவிகமானால் அது ஸம்ஸார தசையில் மறைந்திருப்பானென்னென்னில் இவனுடைய கர்மாநுகுணமாக பரம புருஷ ஸங்கல்பத்தினால் மறைந்துபோகிறது. இவனுடைய ஸம்ஸாரமும் மோக்ஷமும் பரமபுருஷ ஸங்கல்பத்தினாலேயே யுண்டாகிறது. ௩௧௮.

ஸூ - ௩௧௯. தேஹயோகாத்வாஸோபி.

(ரா-வ்ரு.) ஸோபி - அந்தஸத்யஸங்கல்பத்திற்குமறைவும், தேஹயோகாத் - சரீரஸம்பந்தத்தினால் (உண்டாகிறது). ௩௧௯.

(ரா-ஹா.) இப்போது இந்த சரீரமாகிற அசித்தின் ஸம்பந்தத்தினாலும் ப்ரளயத்தில் ஸூக்ஷ்மமான அசித்தின் ஸம்பந்தத்தினாலும் ஜீவனுக்கு ஸத்யஸங்கல்பத்வம் கார்யகரமல்லாமற் போய்விடுகிறது. ௩௧௯.

ஸூ-௩௨௦. ஸூசகஸ்ச ஹி ஸ்ருதேராசக்ஷதே ச தத்வித:.

(ரா-வ்ரு.) ஸ்ருதே: - வேதவாக்யத்தினால், ஸூசக:ச-(ஸ்வப்நம் சுபாசுபங்களுக்கு) ஸூசகமாகவுமாகிறது. (என்று நிஸ்சயிக்கப்படுகிறது). தத்வித: - ஸ்வப்நசாஸ்த்ர மறிந்தவர்கள், ஆசக்ஷதே ச-(ஸ்வப்நம் சுபாசுப ஸூசகமென்று) சொல்லுகிறார்கள். ௩௨௦

(ரா-ஹா.) ஸ்வப்நத்தில் ஸ்த்ரீயைப்பார்த்தால் ஸம்பத்து உண்டாகிறதென்றும் கறுத்த புருஷனைப்பார்த்தால் அநிஷ்ட முண்டாகிறதென்றும் சொல்லிற்று, ஜீவன் ஸ்வப்நபதார்த்தங்களை ஸ்ருஷ்டித்தால் தன்னுடைய நன்மைக்காக நல்ல வஸ்துக்களையே ஸ்ருஷ்டித்து அதையே பார்ப்பன். அப்போது கெட்ட ஸ்வப்நம் ஒருவனுக்கும்வரக்கூடாது. ஆகையால் அப்பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கிறவன்பரம புருஷன்; ஜீவனன்று. ௩௨௦.

ஸுஷுப்தி - ௭௬-ஸூ௩௨௧. ததபாவோ நாடீஷு தச்ச்ருதேராத்மநி ச.

(ஸு-ரா-வ்ரு) தச்ச்ருதே: - அம்மூன்றையும் (ஸ்த்தாநமாகச்) சொல்லுகையாலே, ததபாவ: - ஸ்வப்நமில்லாமை, (உறங்குகை). நாடீஷு - நாடிகளிலும், ஆத்மநி ச-ஆத்மாவிலும், (உண்டாகிறது). ௩௨௧.

(ஸு-ரா - ஹா) "ஆஸு ததா நாடீஷு ஸ்ருப்தோ பவதி" அப்போது இந்நாடிகளில் உறங்குகிறானென்றும், "புரீததி ஶேதே" புரீதத் என்கிற ஸ்த்தாநத்தில் படுக்கிறானென்றும், "ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி" அப்போது பரமாத்மாவோடு சேருகிறானென்றும், ஆக இப்படி ஜீவன் ஸ்வப்நமில்லாம லுறங்கும்போது நாடிகளிலும், புரீதத்திலும் பரமாத்மாவிலும் உறங்குகிறானென்று மூன்றுஸ்த்தாநம் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு மூன்றிடத்திலும் ஒரேகாலத்தில் உறங்குகிறானா, அல்லது, ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொன்றிலுறங்குகிறானென்று ஸம்சயம்.—ஒருவனொருகாலத்தில் மூன்றிடங்களிலிருக்கக்கூடாமையாலே ஒவ்வொருகாலத்தில் ஓரோரிடத்தி லிருக்கிறானென்று பூர்வபக்ஷம்—ஒருவன் உப்பரிக்கையின்மேல் கட்டிலையும் அதின்மேல் மெத்தையையும் பரப்பிக்கொண்டு அதின்மேல் படுத்திருந்தால் அவன் உப்பரிக்கையில் படுத்தான். கட்டிலில் படுத்தான், மெத்தையில் படுத்தான் என்று ஒருவனுக்கே ஒரேகாலத்தில் மூன்றிலும் படுக்கை கூடுமாகையால், அதுபோலவே இங்கும் மூன்றிலும் படுக்கிறானென்று ஸித்தாந்தம். ௩௨௧.

ஸூ-௩௨௨. அத: ப்ரபோதோऽஸ்மாத்.

(ப-ரா-வ்ய.) அஸ்மாத்-இந்த பரமபுருஷனிடத்திலிருந்து, ப்ரபோத: - விழிக்கை (சொல்லப்படுகிறது). அத: - ஆகையால், (ஜீவன் பரமாத்மாவிடத்திற் படுக்கிறான்). ௩௨௨.

(ப-ரா-பா.) "ஸத ஆகம்ய ந விது: ஸத ஆகச்சாமஹ இதி" என்று ஜீவன் விழிக்கும்போது பரம்புருஷனிடத்தில் நின்றும் வருகிறான், ஆகிலும் நானங்கிருந்து வந்தேனென்றறிகிறதில்லை என்று சொல்லுகையாலே உறங்கும்போது அவனிடத்திற் சேராமற்போனால் விழிக்கும்போது அவனிடத்திலிருந்து வரக்கூடாமையாலே ஸுஷுப்தி காலத்தில் நியமேந பரமபுருஷனிடத்திற்போய்ச் சேருகிறானென்று நிஶ்சயிக்கப்படுகிறது. ௩௨௨.

அதி-௭௭-ஸூ-௩௨௩. ஸ ஏவ து கர்மாநுஸ்ம்ருதிஶப்தவிதிப்ய:.

(ப-ரா-வ்ய.) கர்மாநுஸ்ம்ருதிஶப்தவிதிப்ய:-கர்மாநுபவத்தினாலும், அவனே நானென்கிற ஸ்மரணத்தினாலும், முன் சரீரத்துடனே யாகிறானென்ற வாக்யத்தினாலும், மோக்ஷோபாய விதானத்தினாலும், ஸ ஏவ - அவனே, (எழுந்திருக்கிறானென்று நிஶ்சயிக்கப்படுகிறது.) ௩௨௩.

(ப-பா.) ஜீவன் உறங்கும்போது பரமாத்மாவினிடத்தில் லயித்துவிடுகிறானென்று சொல்லி, விழிக்கும்போது அவனிடத்தில் நின்று மெழுந்து வருகிறானென்று சொல்லிற்று. அப்படி எழுந்து வரும்போது இந்த ஜீவனே எழுந்து வருகிறானோ, அல்லது மற்றொருவனும் எழுந்து வந்து இந்த சரீரத்தில் ப்ரவேசிக்கலாமா வென்னில்;—அவனே வந்து இதில் பிரவேசிக்கவேணும், மற்றொருவன் பிரவேசித்தானாகில், சரீரத்தில் நேற்றிருந்த ஜீவன் ஒரு கார்யத்தைச் செய்யத்தொடங்கி அது முடிவதற்குமுன் உறங்கிவிட இன்றை அவனல்லாத மற்றொருவன் அதின் வகையை யறியானாகையால் அவனால் அக்காரியத்தை மேல்நடத்தி முடிக்கப்போகாது. தொடங்கினவனே அக்காரியத்தை முடிய நடத்தவேணும். இதனால் நேற்றிருந்தவனே இன்றும் இச்சரீரத்தில் பிரவேசித்தானென்று ஒப்புக்கொள்ளவேணும். மேலும், நேற்றுத்தான் நேரேபார்த்து அநுபவித்ததை இன்று நினைக்கிறான். இவன் வேறுஜீவனாகில் இதுவும் சரிப்படாது. வேதமும் "த இஹ வ்யாக்ரோ வா ஸிம்ஹோ வா யத்பவந்தி" உறக்கத்தில் பரப்ரஹ்மத்தில் லயித்திருந்த ஜீவன் மறுநாள் எழுந்திருந்துவந்து, நேற்று எப்படியிருந்தானோ, புலியாகவோ, ஸிம்ஹமாகவோ, இன்றும் அந்த புலியாக வேஸிம்ஹமாகவே ஆகிறான், என்று நேற்றும் இன்றும் ஒரு ஜீவனே இந்தசரீரத்தில் பிரவேசிக்கிறானென்று சொல்லுகிறது. மேலும் யாகாதிகளையும் பரமாத்மோபாஸநத்தையும் விதிக்கிற வேதங்கள், நேற்றுள்ள ஜீவனின்றைக்கு வந்தால் மாத்திரமே சரிப்படும். இல்லையாகில் உபயோகமற்றதாம். உறங்கின மாத்திரத்தில் அவன் பரமாத்மாவில்லயித்து முக்தனாய் விட்டானாகில், எல்லோருமே ஸுகமாக உறங்கி முக்தியடைவதைவிட்டு கடினமாகிய யோகாப்யாஸாதிகளை யார்தான் செய்வார்கள்? இன்றைக்கு ஒருவனுறங்கி ப்ரஹ்மத்தில்லயித்து முக்தனாய் விடுகிறான். மறுநாள், இதுவரையில் இம்மாதிரி முக்தனான மற்றொருவனெழுந்து வருகிறானென்றால், முக்தியென்பது அநித்யமாய்விடும். ஸம்ஸாரத்தை மறித்து எப்போதும் திரும்பியடையாமற்படி யிருக்கவேணுமென்று முக்திக்கு யத்நம் செய்கிறார்கள். அந்த முக்தி இம்மாதிரியாய்விட்டால் அதை ஒருவரும் விரும்பார்கள். ஒரு குணத்

தில் ஒருதுளி நீரைவிட்டு மறுநாள் அவன் அக்குளத்தில் நீரை மொள்ளும்போது முதல்நாள்விட்ட துளியையே யெடுக்கிறனென்ற நியமமில்லை, அதுபோல், நேற்று உறங்கி ப்ரஹ்மத்தில் லயித்தவனே இன்றைக்கு வருகிறனென்ற நியமமில்லை யெ ன்னில்,—நேற்றுப்பொகட்ட நீர்த்துளியைக் கண்டுபிடிக்க இவனுல் முடியாதாகை யால் அதை யெடுக்க முடியாது; இங்கு இந்தஜீவனுடைய கர்மபேதங்களையும் அவி த்யா பேதங்களையும் கண்டு ஸர்வஜ்ஞனை ஜீவன் எடுத்துவிடுகிறனுகையால் நேற் றுப்போனவனே வரலாம். பாலில் கலந்த நீரை நம்மால் பிரிக்க முடியாதபோதி லும், அதையறிந்து ஹம்ஸம் பிரித்தெடுப்பதுபோல் இந்த ஜீவனை நாமறியாவிடினும் பரமாத்மா அறிந்து எடுத்துவிடக்கூடும். கஉக.

(ரா-ஹா.) ஸுஷுப்திக்கநந்தரம் விழிக்கும்போது பரமாத்மாவினிடத்திலி ருந்து வருகிறவன் முன்புபோய்ச் சேர்ந்தவனு, அல்லது வேறொருவனு என்று ஸம் சயம்.—முன்புள்ளவன் கரணகளேபரங்களைவிட்டு பரமாத்மாவில் லீநமாய் முக்த னைப்போலேயாய் விட்டபடியால் அவன் திரும்பி வருகிறதில்லை ஆகையால் அங்கி ருந்து அநந்தரம் வருகிறவன் வேறொருவன் என்று. பூர்வபக்ஷம்—ஸுஷுப்தியில் ப்ரஹ்மத்தில் லயிக்கிற ஜீவனுக்கு தத்வஜ்ஞாந மில்லாமையாலே, அவன் முன்புசெ ய்த புண்யபாபங்களை அவனே அநுபவிக்கவேண்டு மாகையால் அதற்காக அவனே வரவேண்டும். மேலும் நானே முன் இக்காரியம் செய்தேன். பின்புறங்கினேன். இப்போது விழித்தேன் என்கிறன்; இதனுலும் அவனுமிவனு மொருவனே யாகவே ண்டும். மேலும் "த இஹ வ்யாக்ரோ வா ஸிம்ஹோ வா" இத்யாதி வாக்யத்தில் விழித்த அநந்தரம் முன்யாராயிருந்தானே,அவனுயே யாகிறனென்றும் சொல்லுகி றது. உறங்கினமாத்திரத்தில் முக்தனுய்ப்போனுல் மோக்ஷப்ராப்திக்காக உபாயங் களை விதிக்கிற சாஸ்த்ரங்கள் நிஷ்ப்ரயோஜநங்களாய்விடும். இந்த ஹேதுக்களினுல் முன்புபோய்ச் சேர்ந்தவனே திரும்பிவருகிறனென்று ஸித்தாந்தம். ஸுஷுப்தி காலத்தில் கரணகளேபரங்களை விடுவதும்கிடையாது விழித்திருக்கும்போது வேலை செய்து ஆயாஸமுண்டானுல் அதைத்தீர்த்துக்கொள்ளுகைக்காகச் சிறிதுகாலம் வ்யாபார சூன்யனுயிருக்கிறன் ஆகையால் முக்தனைப்போலாகமாட்டான். கஉக.

கயி-எஅ ஸூ-கஉஅ. முக்தே(அ)ர்த்தஸம்பத்தி: பரிசேஷாத்.

(ஶ்ரு-ரா-வ்யா.) முக்தே-மூர்ச்சையடைந்தவனிடத்தில், (காண்கிற அவ ஸ்த்தை), பரிசேஷாத் - மூர்ச்சுவருகை முதலியவை காண்கையாலே, அர்த்தஸம்பத்தி: (மரணத்தில்) பாதியவஸ்த்தை யாகிறது. கஉஅ.

(ஶ்ரு-ரா-ஹா.) மூர்ச்சாவஸ்த்தை மரணத்திற் சேர்ந்ததா, வேறுனதா வென்று ஸம்சயம்.—இந்த்ரிய வ்யாபாரங்களும் ப்ராணவ்யாபாரங்களும் காணுமையாலே மரணுவஸ்த்தையேயென்று பூர்வபக்ஷம்—மரணத்திற் காண்கிற விகாரம் மூர்ச்சை யில் சரீரத்திற் காணுமையாலும் கொஞ்சமாக மூச்சுவருகையாலும் மூர்ச்சை தெ ளிந்தபின் எழுந்திருக்கையாலும் இது மரணுவஸ்த்தையன்று. மூச்சு ஓடுங்கியிருக் கிறபடியால் ஜாகராவஸ்த்தையுமன்று. அதைக்காட்டில் வேறுன் அவஸ்த்தை என்று ஸித்தாந்தம். கஉஅ.

கயி-எகூ-ஸூ-கஉகூ. ந ஸ்த்தாநதோ(அ)பி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி.

(ஶ்ரு வ்யா) பரஸ்ய - பரமாத்மாவுக்கு, ஸ்த்தாநத: அபி - உபாதியினு லும், உபயலிங்கம்-ஸாகாரம் ஸாகார நிராகாரம் என்கிற இரண்டு லிங்கம்.

களும், ந - இடையாது; ஸர்வத்ர ஹி - வேதத்தில் எல்லா விடங்களிலும் (அப்படியே சொல்லியிருக்கிறது.) ௩-௨-௫.

(ஸூ - வ்ரு) ஸ்தாநத: - (மநுஷ்யாதிசரீரத்தில்) ஸ்திதியினால் (உண்டான தோஷம்), பரஸ்ய - பரமபுருஷனுக்கு, ந - ஸம்பவிக்கிறதில்லை. ஸர்வத்ர - வேதசாஸ்த்ரங்களிலெங்கும், உபயலிங்கம்-நிர்தோஷத்வம் கல்யாணகுணத்வமாகிற இரண்டு ஸ்வரூபமும் (பரமாத்மாவுக்குச் சொல்லப்பட்டது.) ௩-௨-௫.

(ஶ-பா.) ஜீவனுறங்கும்போது உபாதி கழிந்து ப்ரஹ்மத்தில் லீநமாகிறானென்றது.—வேதத்தில்சிலவிடங்களில், "ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ:" அந்த பரமாத்மாவாகிய ப்ரஹ்மம், ஸகலகர்மங்களையுடையது, ஸகலவிதமான போக்யவஸ்துக்களை யுடையது, ஸர்வவித பரிமளங்களையுடையது, எல்லா ரஸங்களையுடையது என்று ப்ரஹ்மத்துக்குக் குணங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. சில விடங்களில், "அஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கம்" அந்த ப்ரஹ்மம், மஹத்தன்று, நுண்ணியதன்று, சிறியது மன்று, பெரியது மன்று என்று ஸ்தௌல்யம் கார்ஶ்யம் முதலிய குணங்கள் ஒன்றுமே இடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது; இவ்விரண்டில் எது உண்மை, எதுபொய்; ஒரே ப்ரஹ்மம் குணவத்தாகவும் குணஶூந்யமாகவு மாகமாட்டாது, ஆகையால் இவ்விரண்டில் ஏதோ ஒருபடியாக இருக்கிறதென்றே சொல்லவேணும். இவ்விருவகையு முண்மையாக மாட்டாது.—ப்ரஹ்மத்துக்கு நிர்க்குணமாயிருக்கை ஸ்வபாவம், உபாதியின் ஸம்பந்தத்தினால் அந்த ப்ரஹ்மமே ஸகுணமுமாகிறதென்னில்,—ஸ்வச்சமான ஸ்வபாவத்தையுடைய ஸ்படிகம் செகப்பு முதலிய மற்றொரு வஸ்துக்களின் ஸம்பந்தத்தினால் தன்ஸ்வபாவத்தைவிட்டு அவ்வஸ்துவைப்போல் செகப்பாக எப்படியாகாதோ, அப்படியே நிர்க்குண ஸ்வபாவமாகிய ப்ரஹ்மம், உபாதியின் ஸம்பந்தத்தினால் அந்த ஸ்வபாவத்தை விட்டு ஸகுணமாக எப்படியாகும். ஶ்ருதி சொல்லுகிறபடியே ப்ரஹ்மத்துக்கு ஸகுணம் நிர்குணம் என்கிற இரண்டு ஸ்வபாவத்தையும் ஒப்புக்கொள்வோமென்னில், அவை ஒன்றுக்கொன்று விருத்தங்களாகையால், அவ்விரண்டு ஸ்வபாவங்களும் ஒன்றில் சேராது. ஆகையால் எந்த ஸ்வபாவத்தை விடலாம், எந்த ஸ்வபாவத்தைக் கைக்கொள்ளலாமென்னில்,—வேதங்களில் ப்ரஹ்மம் ஸகுணம் என்கிற வாக்யங்களுங்கூட முதல் ஸகுணமென்று சொல்லிப் பின்பு நிர்க்குணமென்று சொல்லுகையாலும், மற்ற வாக்யங்கள் முதலிலே தொடங்கி நிர்க்குண மென்றே சொல்லுகையாலும் இப்படி நிர்க்குணவாக்யம் அதிகமா யிருக்கையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பதே ஸித்தாந்தம். ௩-௨-௯.

(ஸ்ரீ-பா.) ஜீவன் சரீரத்திலிருப்பதினால் தோஷவானாகிறாப்போல் ஸர்வத்திலும் அந்தர்யாமியாயிருக்கிற பரமபுருஷன் தோஷவானாகிறானா, இல்லையா என்று ஸம்சயம்—ஸர்வாந்தர்யாமியானவன் மலாதிகளில் ஸ்வேச்சையினாலுங்கூட அந்தர்யாமியாயிருக்கை ஹேயமாகையாலே அவனுக்கு அதினால் தோஷமுண்டு என்று பூர்வபக்ஷம்—வஸ்துக்கள் அவனவனுடைய கர்மாநுகுணமாகவே ஒருவனுக்கொன்று ஹேயமாயும் மற்றொருவனுக்கு உபாதேயமாயுமாகிறது. பரமபுருஷனுக்கு அப்படிப்பட்ட புண்யபாபரூபகர்மங்களில்லையாகையால் மலாதி ஸம்பந்தம் ஹேயமாக மாட்டாது. "அபஹதபாப்மா" இத்யாதி வாக்யங்களில் பரமபுருஷனுக்கு தோஷமே இடையாதென்றும் "ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:" இத்யாதி வாக்யங்களில் அநேககல்யாண குணங்களுண்டென்றும் சொல்லுகையாலே பரமாத்மா நிர்தோஷனென்று ஸித்தாந்தம். ௩-௨-[illegible]

ஸூ-௩௨௬. ஸெஷாதிதிவெ நெஷ ப்ரதெ௱கஂதஷவநாஜ.

(ஶ-வ்ய) ஸெஷாத் - (உபாஸநப்ரகரணங்களில்) பேதம் சொல்லியி ருக்கையாலே, ந - ப்ரஹ்மம் நிர்க்குணமன்று, இதிசெத் - என்றால், ப்ர தெ௱கம் - ஒவ்வொரு ப்ரகரணங்களிலும், அதத்வசநாத் - நிர்க்குணமென் கையாலே, ந - ப்ரஹ்மம் ஸகுணமன்று. ௧௨௬.

(ஙா - வ்ய) ஸெஷாத் - ஸ்த்திதிபேதத்தினாலே, (பரமாத்மாவுக்கும் தோஷமுண்டு), இதிசெத் - என்றால், ப்ரதெ௱கம் - ஒவ்வொரு வாக்யத் திலும், அதத்வசநாத் - தோஷசூந்யனென்று சொல்லுகையாலே, ந - தோ ஷவானாகமாட்டான். ௩௨௬.

(ஶ-ஹா) உபநிஷத்துக்களில், முப்பத்திரண்டு வித்யைகள் சொல்லி யிருக்கி ன்றன. அதாவது - ப்ரஹ்மத்தை இத்தனை விதமாக உபாஸநம் செய்யவேணுமெ ன்று. அப்படி உபாஸநம் முப்பத்திரண்டு விதமாகைக்குக்காரணம் - ஒருவித்யை யில் உபாஸ்யமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மகுணங்களை மற்றொருவித்யையில் சொ ல்லாமல், அதில்உபாஸ்யமாக வேறுப்ரஹ்மகுணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த விஷயம் மேல் மூன்றாம்பாதத்தில் விசதமாகும். இப்படி ஒவ்வொரு உபாஸந கட்டங்கள்தோறும் ப்ரஹ்மத்துக்கு வெவ்வேறு குணங்களைச் சொல்லுகையால், இப் படி அநேக குணமுள்ள ப்ரஹ்மத்தை நிர்க்குணமென்று சொல்லமுடியாது, ஆகை யால், ப்ரஹ்மத்தின் ஸ்வபாவம் நிர்க்குணமென்றும், ஸகுணஸ்வபாவம் உபாதியி னால் வந்ததென்று மொப்புக்கொள்ளவேண்டும்; இப்படி சொல்லாவிடில், ஸகுண மென்று சொல்லுகிற வேதங்களெல்லாம் பொய்யாய்விடும் என்னில், — ஒன்றுக்கு இரண்டாகாரம் சேராதென்பதை முன்னமேசொன்னோம்; ஸகுணமென்று சொல் வது - ப்ரஹ்மத்தை ஸகுணமாக உபாஸநம் செய்யவேணுமென்கைக்காக. ஆகையி னாலேயே, அந்தந்த உபாஸந கட்டங்களில் கடைசியில், 'யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்' என்றுதுடங்கி எல்லாவிடங்களிலும் ப்ரஹ்மம் ஏகாகாரமே, இரண்டாகாரம் கிடை யாது என்று முறையிடுகிறது. ஆகையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம்.

(ஙா ஹா) ஜீவனுக்கும் தோஷஸம்பந்தம் ஸ்வபாவஸித்தமன்று, ஆயினும் தே வாதி சரீரஸம்பந்தத்தினால் தோஷவானாகிறான்; அதுபோல் ஸ்வபாவத்தினால் தோ ஷசூந்யனான ஈஸ்வரனுக்கும் ஸகலாந்தர்யாமியா யிருக்கையைப்பற்றி தோஷ ஸம்பந்த முண்டாகலாமென்னில், அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் ஒவ்வொரு வாக்ய த்திலும் ப்ருதிவ்யாதிகளுக்கு அந்தர்யாமியாயிருக்கிறான், அவனுக்கு தோஷஸம் பந்தமில்லை என்று சொல்லுகையாலே அந்தர்யாமியாயிருக்கை இவனுக்கு தோஷ ஹேதுவாகமாட்டாது. ௩௨௬.

ஸூ-௩௨௭. அபிசெவமெகெ.

(ஶ-வ்ய) அபி ச - பின்னும், ஏவம் - இப்படியே, ஏகே - ஒருசா கிகள் சொல்லுகிறார். ௧௨௭.

(ஶ-ஹா.) "நெஹ நாநாஸ்தி கிஞ்சந | ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநெவ பஶ்யதி" என்று ஒருசாகையில், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறான இரண்டாவது வஸ்துகிடையாது. எவன் அப்படி இரண்டாவதுவஸ்து இரு க்கிறதென்றறிகிறானோ அவன் ஸம்ஸாரத்திலேயே உழலக்கடவன் என்று, ப்ரஹ்மத் தைக்காட்டிலும் வேறாக ப்ரஹ்மகுணம் முதலானவை யுண்டென்றறிகையை நிந்தி க்கையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம். ௧௨௭.

களும், ந - கிடையாது; ஸர்வத்ர ஹி - வேதத்தில் எல்லா விடங்களிலும் (அப்படியே சொல்லியிருக்கிறது.) க உரு.

(ரா - ஸூ) ஸ்தாநத: - (மநுஷ்யாதிசரீரத்தில்) ஸ்த்தியினால் (உண்டான தோஷம்), பரஸ்ய - பரமபுருஷனுக்கு, ந - ஸம்பவிக்கிறதில்லை. ஸர்வத்ர - வேதசாஸ்த்ரங்களிலெங்கும, உபயலிங்கம் - நிர்தோஷத்வம் கல்யாணகுணத்வமாகிற இரண்டு ஸ்வரூபமும் (பரமாத்மாவுக்குச் சொல்லப்பட்டது.) ௩-உரு.

(ஶ-ஸா.) ஜீவனுறங்கும்போது உபாதி கழிந்து ப்ரஹ்மத்தில் லீநமாகிறுனென்றது.—வேதத்தில்சிலவிடங்களில், "ஸர்வகர்மா ஸர்வகாமஸ்ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" அந்த பரமாத்மாவாகிய ப்ரஹ்மம், ஸகலகர்மங்களையுடையது, ஸகலவிதமான போக்யவஸ்துக்களை யுடையது, ஸர்வவித பரிமளங்களையுடையது, எல்லா ரஸங்களையுடையது என்று ப்ரஹ்மத்துக்குக் குணங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. சில விடங்களில், "அஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கம்" அந்த ப்ரஹ்மம், மஹத்தன்று, நுண்ணியதன்று, சிறியதுமன்று, பெரியதுமன்று என்று ஸ்த்தௌல்யம் கார்ஶ்யம் முதலிய குணங்கள் ஒன்றுமே கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது; இவ்விரண்டில் எது உண்மை, எதுபொய்; ஒரே ப்ரஹ்மம் குணவத்தாகவும் குணசூந்யமாகவு மாகமாட்டாது, ஆகையால் இவ்விரண்டில் ஏதோ ஒருபடியாக இருக்கிறதென்றே சொல்லவேணும். இவ்விருவகையு முண்மையாக மாட்டாது.—ப்ரஹ்மத்துக்கு நிர்க்குணமாயிருக்கை ஸ்வபாவம், உபாதியின் ஸம்பந்தத்தினால் அந்த ப்ரஹ்மமே ஸகுணமுமாகிறதென்னில்,—ஸ்வச்சமான ஸ்வபாவத்தையுடைய ஸ்படிகம் செகப்பு முதலிய மற்றொரு வஸ்துக்களின் ஸம்பந்தத்தினால் தன்ஸ்வபாவத்தைவிட்டு அவ்வஸ்துவைப்போல் செகப்பாக எப்படியாகாதோ, அப்படியே நிர்க்குண ஸ்வபாவமாகிய ப்ரஹ்மம், உபாதியின் ஸம்பந்தத்தினால் அந்த ஸ்வபாவத்தை விட்டு ஸகுணமாக எப்படியாகும். ஶ்ருதி சொல்லுகிறபடியே ப்ரஹ்மத்துக்கு ஸகுணம் நிர்குணம் என்கிற இரண்டு ஸ்வபாவத்தையும் ஒப்புக்கொள்வோமென்னில், அவை ஒன்றுக்கொன்று விருத்தங்களாகையால், அவ்விரண்டு ஸ்வபாவங்களும் ஒன்றில் சேராது. ஆகையால் எந்த ஸ்வபாவத்தை விடலாம், எந்த ஸ்வபாவத்தைக் கைக்கொள்ளலாமென்னில்,—வேதங்களில் ப்ரஹ்மம் ஸகுணம் என்கிற வாக்யங்களும்கூட முதல் ஸகுணமென்று சொல்லிப் பின்பு நிர்க்குணமென்று சொல்லுகையாலும், மற்ற வாக்யங்கள் முதலிலே தொடங்கி நிர்க்குணமென்றே சொல்லுகையாலும் இப்படி நிர்க்குணவாக்யம் அதிகமா யிருக்கையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பதே ஸித்தாந்தம். க உரு.

(ரா-ஸா.) ஜீவன் சரீரத்திலிருப்பதினால் தோஷவானாகிறப்போல் ஸர்வத்திலும் அந்தர்யாமியாயிருக்கிற பரமபுருஷன் தோஷவானாகிறுனு, இல்லையா என்று ஸம்சயம்—ஸர்வாந்தர்யாமியானவன் மலாதிகளில் ஸ்வேச்சையினாலுங்கூட அந்தர்யாமியாயிருக்கை ஹேயமாகையாலே அவனுக்கு அதினால் தோஷமுண்டு என்று பூர்வபக்ஷம்—வஸ்துக்கள் அவனவனுடைய கர்மாநுகுணமாகவே ஒருவனுக்கொன்று ஹேயமாயும் மற்றொருவனுக்கு உபாதேயமாயுமாகிறது. பரமபுருஷனுக்கு அப்படிப்பட்ட புண்யபாபரூபகர்மங்களில்லை யாகையால். மலாதி ஸம்பந்தம் ஹேயமாகமாட்டாது. "அபஹதபாப்மா" இத்யாதி வாக்யங்களில் பரமபுருஷனுக்கு தோஷமே கிடையா தென்றும் "ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்ப:" இத்யாதி வாக்யங்களில் அநேககல்யாண குணங்களுண்டென்றும் சொல்லுகையாலே பரமாத்மா நிர்துஷ்டன் என்று ஸித்தாந்தம். ௩-உரு.

ஸூ-௩௨௬. பேதா³தி³தி சேந்ந ப்ரத்யேகமதத்³வசநாத்.

(ஸூ-வ்ய) பேதா³த் - (உபாஸநப்ரகரணங்களில்) பேதம் சொல்லியிருக்கையாலே, ந - ப்ரஹ்மம் நிர்க்குணமன்று, இதி சேத் - என்றால், ப்ரத்யேகம் - ஒவ்வொரு ப்ரகரணங்களிலும், அதத்³வசநாத் - நிர்க்குணமென்கையாலே, ந - ப்ரஹ்மம் ஸகுணமன்று. ௩௨௬.

(ரா-வ்ய) பேதா³த் - ஸ்த்திதிபேதத்தினாலே, (பரமாத்மாவுக்கும் தோஷமுண்டு), இதி சேத் - என்றால், ப்ரத்யேகம் - ஒவ்வொரு வாக்யத்திலும், அதத்³வசநாத் - தோஷசூந்யனென்று சொல்லுகையாலே, ந - தோஷவானாகமாட்டான். ௩௨௬.

(ஸூ-ஹா) உபநிஷத்துக்களில், முப்பத்திரண்டு வித்யைகள் சொல்லியிருக்கின்றன. அதாவது - ப்ரஹ்மத்தை இத்தனை விதமாக உபாஸநம் செய்யவேணுமென்று. அப்படி உபாஸநம் முப்பத்திரண்டு விதமாகைக்குக்காரணம் - ஒருவித்யையில் உபாஸ்யமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மகுணங்களை மற்றொருவித்யையில் சொல்லாமல், அதில்உபாஸ்யமாக வேறுப்ரஹ்மகுணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த விஷயம் மேல் மூன்றாம்பாதத்தில் விசதமாகும். இப்படி ஒவ்வொரு உபாஸந கட்டங்கள்தோறும் ப்ரஹ்மத்துக்கு வெவ்வேறு குணங்களைச் சொல்லுகையால், இப்படி அநேக குணமுள்ள ப்ரஹ்மத்தை நிர்க்குணமென்று சொல்லமுடியாது, ஆகையால், ப்ரஹ்மத்தின் ஸ்வபாவம் நிர்க்குணமென்றும், ஸகுணஸ்வபாவம் உபாதியினால் வந்ததென்று மொப்புக்கொள்ளவேண்டும்; இப்படி சொல்லாவிடில், ஸகுணமென்று சொல்லுகிற வேதங்களெல்லாம் பொய்யாய்விடும் என்னில், — ஒன்றுக்கு இரண்டாகாரம் சேராதென்பதை முன்னமேசொன்னோம்; ஸகுணமென்று சொல்வது - ப்ரஹ்மத்தை ஸகுணமாக உபாஸநம் செய்யவேணு மென்கைக்காக. ஆகையினாலேயே, அந்தந்த உபாஸந கட்டங்களில் கடைசியில், 'அயமாத்மா ப்ரஹ்ம' என்றுதுடங்கி எல்லாவிடங்களிலும் ப்ரஹ்மம் ஏகாகாரமே, இரண்டாகாரம் கிடையாது என்று முறையிடுகிறது. ஆகையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம்.

(ரா-ஹா.) ஜீவனுக்கும் தோஷஸம்பந்தம் ஸ்வபாவஸித்தமன்று, ஆயினும் தேவாதி சரீரஸம்பந்தத்தினால் தோஷவானாகிறான்; அதுபோல் ஸ்வபாவத்தினால் தோஷசூந்யனான ஈஸ்வரனுக்கும் ஸகலாந்தர்யாமியா யிருக்கையைப்பற்றி தோஷஸம்பந்த முண்டாகலாமென்னில், அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் ஒவ்வொரு வாக்யத்திலும் ப்ருதிவ்யாதிகளுக்கு அந்தர்யாமியாயிருக்கிறான், அவனுக்கு தோஷஸம்பந்தமில்லை என்று சொல்லுகையாலே அந்தர்யாமியாயிருக்கை இவனுக்கு தோஷஹேதுவாகமாட்டாது. ௩௨௬.

ஸூ-௩௨௭. அபி சைவமேகே.

(ஸூ-வ்ய) அபி ச - பின்னும், ஏவம் - இப்படியே, ஏகே - ஒருசாகிகள் சொல்லுகிறார். ௩௨௭.

(ஸூ-ஹா.) "மநஸைவேதமாப்தவ்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சந | ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி" என்று ஒருசாகையில், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறான இரண்டாவது வஸ்துகிடையாது. எவன் அப்படி இரண்டாவதுவஸ்து இருக்கிறதென்றறிகிறானோ, அவன் ஸம்ஸாரத்திலேயே உழலக்கடவன் என்று, ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறாக ப்ரஹ்மகுணம் முதலானவை யுண்டென்றறிகையை நிந்திக்கையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம். ௩௨௭.

(ரா-பா.) "த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" என்கிற ஶ்ருதியில் ஜீவனும் ஈஶ்வரனும் ஒருசரீரத்திலிருக்கிறார்கள். அதில் ஜீவன் கர்மபலத்தை அநுபவிக்கிறான். ஈஶ்வரன் அநுபவிக்கிறதில்லை என்று சொல்லுகையாலே கர்மபலாநுபவரூபமான கீழ்ச்சொன்ன தோஷம் ஈஶ்வரனுக்குக்கிடையாது. ௧௨௭

ஸூ-௩.௨.௧௪. அரூபவதேவ ஹி தத்ப்ரதாநத்வாத்.

(ம-வ்ய) தத்ப்ரதாநத்வாத் - நிர்க்குணப்ரஹ்ம ப்ரதிபாதநத்திலே ப்ரதாநங்களாகையாலே, அரூபவதேவ ஹி - (ப்ரஹ்மம்) ரூபம் முதலானவை அற்றதென்றே நிஶ்சயிக்கப்படுகிறதன்றோ. ௧௨௮.

(ரா-வ்ய.) வ்யாபாரப்ரதாநத்வாத் - நிர்வாஹகனாகையாலே, தத்-அந்தப்ரஹ்மம், அரூபவத் - ரூபஶூந்யம். ௧௨௮.

(ம-பா.) ப்ரஹ்மம் ஸகுணமென்று சிலவாக்யங்களும் நிர்க்குணமென்று சிலவாக்யங்களும் சொல்லியிருக்க, அவ்விரண்டில் நிர்க்குண வாக்யங்களையே முக்யமாக அங்கீகரிப்பானேனென்னில்,—ஸகுணவாக்யம் ப்ரஹ்மஸ்வரூபத்தைச்சொல்வதற்காக வந்ததன்று; அது உபாஸநத்தைச் சொல்வதற்காகவந்தது, ஆகையால் அதுப்ரஹ்மஸ்வரூப நிரூபணத்தில்ப்ரதாநமாகமாட்டாது. நிர்க்குணவாக்யம், அதைப்போல் வேறொன்றைச் சொல்லவந்த தன்றிக்கே, ப்ரஹ்மஸ்வரூபத்தைச் சொல்வதற்காகவே வந்ததாகையால் அந்தவாக்யமே முக்யப்ரமாணமாகக்கடவது. அதைக்கொண்டு ப்ரஹ்மம் நிர்க்குணமென்று நிஶ்சயிக்கப்படுகிறது. ௧௨௮.

(ரா-பா.) ஜீவன் சரீரஸம்பந்தத்தினால் நாமரூபங்களை யடைந்து ஸுகதுக்கங்களை யநுபவிக்கிறான். அதுபோல் ஈஶ்வரனும் சரீரவானாகையாலே, இவனுக்கும் நாமரூபங்களும் அதினால் ஸுகதுக்கங்களுமுண்டு என்னில்,—ஜீவன் சரீரத்தில் தன்னுடைய கர்மாநுகுணமாக ஸுகதுக்கங்களை யநுபவிக்கைக்காக விருக்கிறான். ஈஶ்வரன் ஜீவனுக்கு அக்கர்மாநுகுணமாக பலம் கொடுக்கைக்காக இருக்கிறானாகையால் கர்மாநுபவம் பண்ணிவைக்கிற இவனுக்குக் கர்மாநுபவத்துக்குக் காரணமாகிய நாமரூபங்களும் தத்ப்ரயுக்ததோஷமும் கிடையாது. ௧௨௮.

ஸூ-௩.௨.௧௫. ப்ரகாஶவச்சாவையர்த்யாத்.

(ம-வ்ய) ப்ரகாஶவச்ச - தேஜஸ்ஸைப்போல், அவையர்த்யாத் - (ஸகுணவாக்யங்களுக்கு) ப்ரயோஜநமில்லை யென்பதில்லை. ௧௨௯.

(ரா - வ்ய) அவையர்த்யாத்-(குணபோதகவாக்யங்களுக்கு)வையர்த்யம்வாராமைக்காக, ப்ரகாஶவச்ச-ப்ரகாசஸ்வரூபம்போலவே,(குணவானென்று மங்கீகரிக்கவேண்டும்.) ௧௨௯.

(ம-பா.) ஆகில், ப்ரஹ்மம் ஸகுணம் என்று சொல்லுகிற வாக்யங்கள் பொய்யைச்சொன்னதாய், அப்ரமாணங்களாகும், வேதத்தில் சில வாக்யங்கள் ப்ரமாணங்களென்றும் சில அப்ரமாணங்களென்றும் ஒப்புக்கொள்வது சரியன்றே யென்னில்,—நாங்கள் ஸகுணவாக்யங்களை அப்ரமாணங்களென்று சொல்லவில்லை. வேதத்தில் அப்ரமாண வாக்யங்களே கிடையாது. ஸகுணவாக்யங்கள், ப்ரஹ்மத்துக்கு ஸகுணம் ஸ்வபாவம் என்று சொல்லமாட்டாதுகள் என்றே சொன்னோம். அந்த ஸகுணமென்பது ப்ரஹ்மத்துக்கு ஸ்வபாவமாகாவிடினும், உபாதிஸம்பந்தத்தினால்

வந்தது. அது ப்ரஹ்மத்துக்கு ஸஹஜ தர்மமாகமாட்டாது. எப்படியெனில்,—வெய்யில் நிலா முதலியவை ஆகாசமெங்கும் ஏகாகாரமாகப் பரவியிருக்கிறது. அதில் குறுக்காகக் கையையாவது கட்டையையாவது பிடித்தால், கட்டை முதலியவை கோணலாயிருந்தால் அவ்விடத்தில் வெய்யிலும் கோணலாகக்காண்கிறது. அப்படி கோணலாயிருக்கை, கட்டைமுதலிய உபாதியினால்வந்தது ஆகையால் அதுவெய்யிலுக்கு ஸ்வபாவமாகமாட்டாது, அதை எடுத்துவிட்டால் முன்போல ஏகாகாரமாகவே காணும். அதுவே அதுக்கு ஸ்வபாவம். அதுபோல் இங்கும் உபாதி நசித்துவிடில் அதினாலுண்டான ஸகுணமான ஆகாரம்போய் ஸ்வாபாவிகமான நிர்க்குணமான ஆகாரமே தோற்றும் என்றே சொன்னோம். இந்த்ரஜாலத்தில் காண்கிற வஸ்துக்கள் பொய்யாயினும், இந்த இந்தவிதமாயிருக்கும், இந்த்ரஜாலத்தில் காண்கிற வஸ்துக்கள் என்கிற வாக்யம் அப்ரமாணமன்றே, அதுபோல் ஸகுணவாக்யமும் அப்ரமாணமன்று. ௩௨௧.

(ரா-ஸா.) "ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம" என்கிற வாக்யத்தில், ப்ரஹ்மத்துக்கு ஸ்வயம் ப்ரகாசமான ஜ்ஞானமே ஸ்வரூபமென்று சொல்லியிருக்க அவனுக்குக் குணங்களை எப்படி யங்கீகரிக்கலாமென்னில், அவ்வாக்யாநுகுணமாக ஞாநஸ்வரூபமங்கீகரித்தாற்போல் "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" இத்யாதியான அவனுக்கு ஜ்ஞாநாதிகுணங்களைச் சொல்லுகிற வாக்யாநுகுணமாக கல்யாணகுணமும்கூட வங்கீகரிக்கவேண்டும். ௩௨௧.

ஸூ-௩௩௦. ஆஹ ச தந்மாத்ரம்.

(ஶ-வ்ரு.) தந்மாத்ரம்-(ப்ரஹ்மத்துக்கு) ஜ்ஞாநமாத்ரத்தையே (ஆகாரமாக) ஆஹ - சொல்லுகிறது (வேதம்) ௩௩௦.

(ரா - வ்ரு.) தந்மாத்ரம் - ஜ்ஞாநஸ்வரூபமாத்ரத்தையே, ஆஹ - (ஸத்யம்ஜ்ஞாநம், என்கிற ஶ்ருதி) சொல்லிற்று. ௩௩௦.

(ஶ-ஸா.) "யதா ஸைந்தவகநோऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்நோ ரஸகந ஏவைவம் வா அரேऽயமாத்மாऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்ந: ப்ரஜ்ஞாநகந ஏவ" உப்பானது உள்ளே ஒரு ரஸம் வெளியில் ஒரு ரஸம் என்றில்லாமல் எல்லாம் லவணரஸமாயே எப்படியிருக்கிறதோ, அப்படியே ப்ரஹ்மமும் உள்ளே ஒருவிதம்வெளியிலொருவிதமென்றில்லாமல் உள்ளும் வெளியு மெங்கும் ஜ்ஞாநஸ்வரூபமாயே யிருக்கும் என்று உபநிஷத்தில் சொல்லியிருக்கையால், ப்ரஹ்மம் ஜ்ஞாநஸ்வரூபமே, அதில் மற்றொரு குணம் கிடையாது என்பது ஸித்தம். ௩௩௦.

(ரா-ஸா. "ஸத்யம்ஜ்ஞாநம்" இத்யாதி ஶ்ருதி பரப்ரஹ்மம் ஜ்ஞாநஸ்வரூபனென்று சொல்லிற்றொழிய அவனுக்குக் குணமில்லை யென்று சொல்லவில்லையாகையால் அவனுக்குக் கல்யாணகுணங்களுண்டென்பதில் அந்த ஶ்ருதி பாதகமாகாது. ௩௩௦.

ஸூ-௩௩௧. தர்ஶயதி சாதோ அபி ஸ்மர்யதே.

(ஶ-வ்ரு.) ச-அத: - ஸகலவேதமும், (தர்ஶயதி - ப்ரஹ்மம் நிர்குணம் என்று) சொல்லுகிறது. ஸ்மர்யதே அபி - (அப்படியே) ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது.

(ரா-வ்ய.) கூலெ - ஸகலவேதமும், ஈஶஹ்யதிவ-(பரமபுருஷன் ஹேயப்ரத்யநீகன் கல்யாணகுணாகரன் என்று) வேதம் சொல்லுகிறது. ஸ்ம்ருதிகஷவி - ஸ்ம்ருதியிலும் சொல்லப்படுகிறது. ௩௯௧.

(ஸ-ஹா.) உபநிஷத்தில் முன்னம் ப்ரபஞ்சம் முதலிய பேதத்தைச்சொல்லி, அதன்பிறகு "அதாத ஆதேஶோ நேதி நேதி" இனிப்ரஹ்மஸ்வரூபத்தை உள்ளபடி சொல்லுகிறேன். கீழ்ச்சொல்லிய ப்ரபஞ்சம் ஒன்றுமிடையாது என்று அத்வைதத்தையே சொல்லுகிறது. "யதோ வாசோ நிவர்த்தந்தே | அப்ராப்ய மநஸா ஸஹ" ஒரு வஸ்துவைச் சொல்லவும் நினைக்கவும் வேணுமாகில் அதின்குணத்தையிட்டுச் சொல்லவேணும், ப்ரஹ்மம் நிர்க்குண மாகையால் வேதங்கள் அதின் ஸ்வரூபத்தைச் சொல்லவும் நினைக்கவும் மாட்டாமல் திரும்பிவந்து விடுகிறதுகள் என்றும் சொல்லுகிறது. இம்மாதிரி அத்வைதம் சொல்லுகிற ஶ்ருதிபலவுமுண்டாகையால் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம். ௩௯௧

(ரா-ஹா.) "நிஷ்கலம் நிஷ்க்ரியம்" இத்யாதிவாக்யம் பரமபுருஷனை தோஷமற்றவனென்றும் "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:" இத்யாதி வாக்யம் கல்யாணகுணாகரனென்றும், இப்படியே கீதையிலும் சொல்லுகையாலே இவன் ஸகலஹேய ப்ரத்யநீகனும் ஸமஸ்தகல்யாணகுணாகரனுமிருக்கிறானென்று அங்கீகரிக்கவேணும். ௩௯௧.

ஸூ-௩௯௨. அத ஏவ சோபமா ஸூர்யகாதிவத்"

(ஸ-வ்ய.) அத ஏவ - ஆகையாலே, ஸூர்யகாதிவத்-ஸூர்யன்முதலானவற்றைப்போல் (என்று) உபமா - ஸாத்ருஶ்யம் சொல்லப்பட்டது.

(ரா - வ்ய.) அத ஏவ - ஆகையினாலேயே, ஸூர்யகாதிவத் - ஸூர்யன் முதலானவைபோல, (என்று) உபமா - உபமானம் சொல்லப்படுகிறது.

(ஸ-ஹா.) ப்ரஹ்மம் ஜ்ஞானஸ்வரூபம், நிர்க்குணம், சொல்லவும் நினைக்கவும் போகாது, சிஷ்யனுக்கு ப்ரஹ்மஸ்வரூபத்தை உபதேசிக்கும்போது, இதுவன்று இதுவன்று என்று மற்ற வஸ்துக்களைக்கழித்துமிருந்ததைப்ரஹ்மமென்றறியென்றே உபதேசிக்கவேணும்என்றும் கீழ்ச்சொல்லிற்று. இதற்கநுகுணமாகவே த்ருஷ்டாந்தமும் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது—"யதா ஹ்யயம் ஜ்யோதிராத்மா விவஸ்வாந் அபோ பிந்நா பஹுதைகோऽநுகச்சந்" என்று துடங்கி, ஸூர்யன் ஒருவன் ஆயினும், நீர்நிறைந்த அநேகம் கலசங்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவனாய்ப் பல ஸூர்யர்களாய்க் காண்கிறான். அதுபோலவே ப்ரஹ்மமும் நிர்க்குணமாய் ஏகாகாரமா யிருக்கச்செய்தேயும், அந்தஃகரண ரூபஉபாதியின் ஸம்பந்தத்தினால் அநேகமாயும் ஸகுணமாயும்காண்கிறது என்று, இதனாலும் ப்ரஹ்மம் நிர்க்குணமென்பது ஸித்தம். ௩௯௨.

(ரா-ஹா.) பரமபுருஷன் ப்ருதிவ்யாதிகளி லிருந்தாலும் அதினால் எவ்வித மானதோஷமும் அவனுக்கு இடையாதென்பதற்கு, ஸூர்யன் ஜலத்தில் ப்ரதிபலித்தாலும் அந்த ஜலத்திலுள்ள தோஷம் ஸூர்யனுக்கு நேரிடாதாப்போலவும், எங்கும் வ்யாபித்த ஆகாசம் கடத்துக்குள்ளிருந்தாலும் அதின் தோஷ மாகாசத்திற்கு ஸம்பவியாதாப்போலவும் பரமபுருஷன் ப்ருதிவ்யாதிகளிலிருந்தாலும் அவற்றிலுள்ள தோஷங்கள் இவனுக்கு ஸம்பவியாதென்று உபமானமாகச் சொல்லியிருக்கிறதும் ஸங்கதமாகிறது. ௩௯௨.

ஸூ-௪௩. அம்பு வதக்ரஹணாத்து ந ததாத்வம்.

(ஸ-வ்ய.) அம்புவத் - ஜலத்தைப்போல், அக்ரஹணாத் - க்ரஹிக்கப் படாமையால், ந ததாத்வம் - ஸூர்யனைப்போல் ஒன்றே அநேகமாகக் காணகை யென்பது சரியன்று. ௩௩௩.

(ரா-வ்ய.) அம்புவத் - ஜலத்தில் (ஸூர்யனைக்ரஹிப்பது) போல, அக்ரஹணாத் - (ப்ருதிவ்யாதிகளில் பரமாத்மாவை) க்ரஹிக்காமையாலே, ததாத்வம் - அப்படி நிர்தோஷனுயிருக்கை, ந - கூடாது. ௩௩௩.

(ஸ-ஹா.) இதில் பூர்வபக்ஷி சொல்லுகிறன்—ஜலத்தில் ஸூர்யனைப்போல் அந்தஃகரணத்தில் ப்ரஹ்மம் அநேகமாகவும் ஸகுணமாகவும் காண்கிறதென்று த்ருஷ்டாந்தம் சொன்னது சரியன்று. ஏனென்னில்,— ஸூர்யனுக்கு உருவமுண்டு, ப்ரஹ்மத்திற்கு அதில்லை. உருவமுள்ளதற்கே ப்ரதிபிம்பம் லோகத்தில் காண்கிறோம். ஸூர்யனைக்காட்டிலும் ஜலம் தூரத்திலிருக்கிறது. ப்ரஹ்மம் ஸர்வவ்யாபியாகையால் அந்தஃகரணமுள்ள விடத்திலேயேயிருக்கிறது. ஸூர்யனைக்காட்டிலும்ஜலம் வேறுபட்டது, அந்தஃகரணம் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுபட்டதன்று. ஆகையால் அதை த்ருஷ்டாந்தமாகச் சொல்லக்கூடாது. ௩௩௩.

(ரா-ஹா.) கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தம் இங்கு ஒவ்வாது. ஏனென்றால், ஜலத்திலில்லாத ஸூர்யனை ஜலத்திலிருக்கிறப்போல ப்ரமிக்கிறார்கள். ஜலத்தில் ஸூர்யனில்லாமையால் ஜலத்திலுள்ள தோஷம் ஸூர்யனுக்கு ஸம்பவியாது. இங்கு அதுபோலன்றிக்கே வாஸ்தவமாகவே ப்ருதிவ்யாதிகளில் பரமாத்மா இருக்கையாலே அவற்றிலுள்ள தோஷம் இவனுக்கு ஸம்பவிக்கலா மாகையால் முன்சொன்னது த்ருஷ்டாந்த மாகமாட்டாது என்று பூர்வபக்ஷம். ௩௩௩.

ஸூ-௪௪. வ்ருத்திஹ்ராஸபாக்த்வமந்தர்பாவாதுபய

ஸாமஞ்ஜஸ்யாதேவம் தர்சநாச்ச.

(ஸ-வ்ய.) வ்ருத்திஹ்ராஸபாக்த்வம் - பெருப்பது சிறுப்பதென்கிற தர்மங்களையடைந்திருக்கை, அந்தர்பாவாத் - த்ருஷ்டாந்தத்திலும் தார்ஷ்டாந்திகத்திலும் சேர்ந்திருக்கையால், உபயஸாமஞ்ஜஸ்யாத் - த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்கள் சரியானதாகையால், ஏவம் - இப்படிசொல்லுகிறது.

இந்த பாஷ்யத்துக்கு "தர்சநாச்ச" என்பது வேறு ஸூத்ரம்.

(ஸ-வ்ய.) தர்சநாத்ச-ஶ்ருதி சொல்லுகையாலும், (ப்ரஹ்மத்திற்கு உபாதி ஸம்பந்தமுண்டு.) ௩௩௪.

(ரா-வ்ய.) அந்தர்பாவாத் - (ப்ருதிவ்யாதிகளில்) ஸ்த்திதியினால், (உண்டான) வ்ருத்திஹ்ராஸபாக்த்வம் - வளர்தல் குறைதல்களை யடைகை, (ஸம்பவியாது)(ஏனென்றால்), உபயஸாமஞ்ஜஸ்யாத் - இரண்டு த்ருஷ்டாந்தத்துக்கும் சேர்த்தியுண்டாகைக்காகவும், ஏவம்-இப்படி, தர்சநாச்ச - (வேறுத்ருஷ்டாந்தங்களிற், காண்கையாலும், (ப்ருதிவ்யாதிதோஷமிவனுக்கில்லையென்று நிஶ்சயிக்கப்படுகிறது. ௩௩௪.

(ஸ-ஹா.) ரூபமற்ற ஆகாசத்திற்குப்போல் ரூபமற்ற ப்ரஹ்மத்துக்கும் ப்ரதிபிம்பம் இண்டியாதென்பது அறுசிதம். த்ருஷ்டாந்தத்தி லுள்ளவைகளெல்லாம் தார்ஷ்டாந்திகத்தில்வராது. ஏகாகாரமான ஸூர்யன் சிறியகல்சத்தில் சிறியனுகவும்

பெரியகலசத்தில் பெரியனுகவும் உபாதிக்கநுகுணமாகக் காண்பதுபோலவும், ஒருவனே அனேகமாகக் காண்பதுபோலவும் ஏகாகாரமாகிய ஒரு ப்ரஹ்மமே சரீரம் முதலிய உபாதியின் ஸம்பந்தத்தினுல் அனேகமாகவும் அனேக குணங்களை யுடையதாகவும் காண்கிறதென்று சொன்னேம். இந்த தர்மங்கள் இரண்டுக்கும் ஒத்திருக்கிறது. "ஸூர்யன் ரூபவான், ப்ரஹ்மம் நிரூபம் ஆகையால் இவ்விரண்டுக்கும் ஒற்றுமை யில்லை" என்பது-கலசத்தைப்போல் வஸத்திரத்தையும் ஒருவன் செய்தே யிருக்கவேணுமென்னில், அவனைப்போல் இவனும் குயவனேயாகவேணும்; அவனைப்போல் இவனும் குருடனேயாகவேணுமென்று கேட்பதுபோலிருக்கிறது. ஆகையால் சொன்ன த்ருஷ்டாந்தம் ஸரியானதே என்று ஸித்தாந்தி சொல்லுகிருர்.

(ஶ-ஹா.) "पुरश्चक्रे द्विपदः पुरश्चक्रे चतुष्पदः पुरः स पक्षी भूत्वा पुरः पुरुष आविशत्" பரமாத்மா இரண்டு கால்களையுடைய மநுஷ்யன் முதலானவற்றையும், நாலுகால்களையுடைய பசு முதலானவற்றையும் ஸ்ருஷ்டித்து, அதில்தான் ப்ரவேசித்தானென்றும், "अनेन जीवेनात्मनानुप्रविश्य" தான் ஜீவாத்மாவாய்க்கொண்டுவஸ்துக்களில் ப்ரவேசித்து அவற்றுக்கு நாமரூபங்களை யுண்டாக்கினு னென்றும் ப்ரஹ்மம் சரீராதியான உபாதியில் பிரவேசித்து அந்தந்த ஸ்வரூப மாயாகிறதென்று சொல்லுகையாலே உபாதி ஸம்பந்தத்தினுலேயே ப்ரஹ்மம் ஸகுணமாகிறது அதற்கு ஸகுணமென்பது ஸ்வபாவமன்று. நிர்க்குண மென்பதே ஸ்வபாவம் என்று ஸித்தாந்தம். ௨௧௬.

(ரா-ஹா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிருர்.—கீழ், ஜலத்திலில்லாத ஸூர்யனையும், கடாதிகளிலுள்ள ஆகாசத்தையும் த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்று, அதிலொன்றுன ஆகாசம் கடாதிகளிலிருந்தாலும் அதைப்போல் பெருத்தல் சிறுத்தல் முதலிய தோஷங்களை யடைகிறதில்லை. இந்த த்ருஷ்டாந்தமும் ப்ரக்ருதத்தில் ஸங்கதமாகைக்காக ப்ருதிவ்யாதிகளிலுள்ள ஈஶ்வரனுக்கும் அவற்றின் தோஷம் ஸம்பவிக்கிறதில்லை என்றே அங்கீகரிக்கவேணும். இரண்டாவது த்ருஷ்டாந்தமான ஸூர்யன் ஜலத்திலில்லாமற் போனபோதிலும், ஜலத்திலுள்ள தோஷம் அவனிடத்தில் ஸம்பவியாமை மாத்ரத்தைக்கொண்டே த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டான். முகம் சந்த்ரன்போன்றதென்று த்ருஷ்டாந்தம் சொன்னுல் த்ருஷ்டாந்தமான சந்த்ரனிடத்திலுள்ள எல்லா குணங்களும் முகத்திலிருக்க வேண்டுமென்கிற நியமமில்லை. அதுபோலவே ஸூர்யனிடத்திலுள்ள ஜலாஸம்பந்தம் பரமாத்மாவினிடத்தில்லாமற்போனுலும் அவனுக்கு ஜலத்தில்ப்ரதிபலித்தால் அதிலுண்டான தோஷமவனுக்கு வராதாற்போல் ப்ருதிவ்யாதிகளி லிருப்பதினுலுண்டான ஈஶ்வரனுக்கு அவற்றின் தோஷங்கள் ஸம்பவியாதென்று ஸித்தாந்தம். ௨௧௪.

ஸூ-௨௨. प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः।

(ஶ வ்.) प्रकृतैतावत्त्वं हि - கீழ்ச்சொன்ன இவ்வளவாயிருக்கையையன்று, प्रतिषेधति - நிஷேதிக்கிறது, ततः - அதன்பிறகு, भूयः - மறுபடியும், ब्रवीति च - சொல்லுகிறது.

(ரா-வ்.) प्रकृतैतावत्त्वं - கீழ்ச்சொன்ன இவ்வளவென்பதையன்று, प्रतिषेधति - நிஷேதிக்கிறது. ततः - அதைக்காட்டிலும், भूयः - இன்னு மதிகமாக, ब्रवीति - சொல்லுகிறது. ௨௧௫.

(ஶ-ஹா.) "द्वे वाव ब्रह्मणो रूपे मूर्तं चैवामूर्तं च" ப்ரஹ்மத்துக்கு மூர்த்தமென்றும் அமூர்த்தமென்றும் இரண்டுருவமுண்டு. (மூர்த்த

மாவது - உருவமுள்ள ப்ருதிவீ ஜலதேஜஸ்ஸுக்கள். அமூர்த்தமாவது - உருவமற்ற வாய்வாகாசங்கள்) என்று துடங்கி பஞ்சபூதங்களையும்சொல்லி, இவற்றுக்கு ஆதாரம் பரமபுருஷன் என்று சொல்லி, அதன்பின் "அதாத ஆதேசோ நேதி நேதி" இனிதத்வோபதேசம் பண்ணப்படுகிறது, கீழ்ச்சொன்ன இது தத்வமன்று இதுதத்வமன்று என்று சொல்லிற்று. இங்கு இது தத்வமன்று இது தத்வமன்றென்று, கீழ் ப்ரஹ்மத்தினுடைய இரண்டுருவமாகச் சொல்லப்பட்ட பஞ்சபூதங்களை மாத்திரம் நிஷேதித்ததா, அல்லது. அவற்றுக்கு ஆதாரமாகச்சொல்லப்பட்ட ப்ரஹ்மத்தையும் நிஷேதித்ததாவென்னில்,—"இதுவன்று இதுவன்று" என்று இரண்டுதரம் சொல்லுகையால், முதல் அன்றென்பதினால் ப்ரஹ்மத்தினுடைய மூர்த்தாமூர்த்த ரூபங்களை இல்லையென்று சொல்லி, இரண்டாவதான அன்றென்பதினால் ப்ரஹ்மத்தை யில்லையென்று சொல்லுகிறதென்று பூர்வபக்ஷி சொன்னான். ஆதிதுடங்கி "ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறேன்" என்று பெரிய ப்ரயத்நத்துடன், ப்ரமாணாந்தரா விஷயமான ப்ரஹ்மத்தைத் தானே சொல்லி, இப்போது அதை யில்லையென்பது அநுசிதம்; காண்கிற பஞ்சபூதங்களும் ப்ரஹ்மரூபங்களென்று சொல்லி, இதற்கெல்லாம் ஆதாரமாக அத்ருஶ்யமா யொரு ப்ரஹ்மமுண்டென்றுசொல்லி, பின்பு இப்படி காண்கிற இந்த பஞ்சபூதங்களும் தத்வமன்று என்று, லோகத்தில் ஸாதாரணமாகத் தத்வமாகக்காண்கிற இவற்றைத் தத்வமாக நினைக்கவேண்டாமென்றே சொல்லிற்று ப்ரஹ்மமில்லையென்று சொல்லவில்லை. இந்த ஶ்ருதிக்கு இதேயர்த்தமென்பதென்கொண்டென்னில், இவ்வாக்யத்திற்குமேல், "அந்யத் பரமஸ்தி" இவற்றைக்காட்டிலும் வேறான தத்வமொன்றுண்டென்று சொல்லுகையாலே இதேயர்த்தமென்று நிஶ்சயிக்கப்படுகிறது. என்று ஸமாதாநோத்தரம். ௨௨௨.

(ரா ஸா.) "அதாத ஆதேசோ நேதி நேதி" இத்யாதி வாக்யத்தில் கீழ்ச்சொன்ன சிதசித்துக்களெல்லாம் பரமாத்ம ஸ்வரூபங்களன்னென்று நிஷேதிக்கையாலே நிர்விசேஷ சிந்மாத்ரமே ப்ரஹ்மஸ்வரூபம் என்றங்கீகரிக்க வேணும், ஆகையால் உபயலிங்க மாகமாட்டா தென்கிற பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்.—சிதசித்துக்கள் பரமாத்மாவுக்கு சரீரங்களாயிருக்கிறவிதம் ப்ரத்யக்ஷாதி வேறு ப்ரமாணங்களுக்கு விஷயமாகமாட்டாது. அப்படியிருக்க கீழெல்லாம் அவை பரமாத்மாவுக்கு சரீரங்களென்று ஒருவர்க்கும் தெரியாதவற்றைத் தெரியச்சொல்லி, அநந்தரம் அவை சரீரங்களாகமாட்டாவென்று சொல்லுகை அஸங்கதமாயிருக்கும். லோகத்தில் ஹிதபரனாயிருக்கிறவன், ஒருவனுக்கு முன்புள்ள ப்ராந்தியைப் போக்குகைக்காகவே சிலவற்றை யுபதேசிக்கிறான். அவ்வளவேயல்லது, இல்லாத ப்ராந்தியைக் கற்பித்து அதைப்போக்குகைக்காக உபதேசிப்பது காணவில்லை. அதுபோலவே வேதம் ஹிதபரமாகையாலே உள்ள ப்ராந்தியையே போக்கவேண்டுமொழிய இல்லாததைக் கற்பித்துச்சொல்லி அதைப்போக்குகைக்காக யத்நம் செய்யக்கூடாது. ஆகையால் இங்கு சிதசித்துக்களை பரமாத்மாவுக்கு சரீரங்களென்று இல்லாத ப்ராந்தியை உண்டாக்கி, அநந்தரம் அதை நிஷேதிக்கிறதென்பது ஸம்பவியாது. ஆனால் இங்கு எதை நிஷேதிக்கிறதென்றால், முன்பு பரமாத்மாவினைஶ்வர்யத்தைச்சொல்லி, அநந்தரம், அவனுடைய ஐஶ்வர்யம் இவ்வளவேயன்று, இன்னும் அநந்தமாயிருக்கிறதென்று சொல்லுகைக்காக "நேதிநேதி" என்று பரமாத்மாவினுடைய ஐஶ்வர்யத்திற்கு அவதியை நிஷேதித்தது. அவனுடைய ஐஶ்வர்யத்தையே நிஷேதித்தால் மேல்வாக்யத்தில், "ஸத்யஸ்ய ஸத்யம்" இத்யாதியால், பரமாத்மாவைக்காட்டிலும் எவ்விதத்திலும் மேலான வஸ்து ஒன்றுமில்லை யென்றும், அசித்தைப்போலே ஜீவனும் பரமாத்மாவுக்கு சேஷப்பட்டவனென்றும் இவற்றையெல்லாம் நிர்வஹிக்கும்படியான ஐஶ்வர்யத்தையுடையவன் பரமாத்மாவென்றும் சொல்

வது சேராது. ஆகையால் இவ்வாக்யம் இயத்தா நிஷேத பரமென்றே கொள்ள வேண்டும். ௨௨

ஸூ- ௨௩. ததவ்யக்தமாஹ ஹி.

(மூ-வ்ய.) தத் - அந்தப்ரஹ்மம், அவ்யக்தம் - இந்த்ரியத்துக்கு விஷய மாகாதது; ஆஹ ஹி-(வேதம் அப்படியே) சொல்லிற்றன்றோ. ௨௩.

(ரா-வ்ய.) தத் - அந்தப்ரஹ்மம், அவ்யக்தம் - இந்த்ரியாதிகளுக்கு விஷயமன்று (என்று), ஆஹ ஹி - சொல்லிற்றன்றோ. ௨௩.

(மூ-ஹா.) பரப்ரஹ்மமென்றொன்றுண்டாகில் அதேன் ஒருவர்க்கும் தெரிய வில்லையென்னில், — அது கண்ணுக்குத்தோற்றாது. இதற்குப்ரமாணம் — "ந சக்ஷுஷா க்ருஹ்யதே" கண்ணினால் அந்த ப்ரஹ்மம் அறியப்படாது இத்யாதி வேத வாக்யம். ௨௩.

(ரா-ஹா.) ஜகத்து ஸத்யமென்பதில் ப்ரமாணமில்லை. ஸ்வப்நத்திற் காணுகிறதுபோல் இவையெல்லாம் ப்ரஹ்மத்தினால் காணப்படுகிறது. பரப்ரஹ்மமொன்றே ஸத்யம். அதே ஸகலஜ்ஞாநத்திலும் தோற்றுகிறது. ஆகையால், கீழே, ப்ரமவிஷயங்களான அஸத்யபதார்த்தங்களைச்சொல்லி அநந்தரம் "நேதிநேதி" என்று அவற்றை ஸத்யங்களன்றென்று நிஷேதிக்கிறதென்று சொன்னால், — 'ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய' என்று பரமாத்மஸ்வரூபம் இந்த்ரியாதிகளுக்கு விஷயமன்றென்று சொல்லுகையாலே ஸகல ஜ்ஞாநத்திலும் பரப்ரஹ்மம் தோற்றுகிறதென்பது அஸங்கதம். ௨௩.

ஸூ- ௨௪. அபி ஸம்ராதநே ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்.

(மூ-வ்ய.) அபி - மேலும், ஸம்ராதநே - த்யாநத்தில், (க்ருஹிக்கப் படுகிறது.) ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்-ச்ருதிஸ்ம்ருதிகளினால் (இவ்வர்த்தம் சொல்லப்படுகிறது.) ௨௪.

(ரா-வ்ய.) அபி ச - இன்னும், ஸம்ராதநே - பக்தியில் (அடையப்படுகிறானென்று), ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்-வேதத்தினாலும் கீதையினாலும் (சொல்லப்பட்டது.) ௨௪.

(மூ-ஹா.) அந்தப்ரஹ்மம் இந்த மாம்ஸ நேத்ரத்திற்குத்தெரியாவிடினும், யோகாப்யாஸத்தினால் காமக்ரோதம் முதலிய கல்மஷங்கள்போய் நிர்மலமான மநஸ்ஸைக்கொண்டு பக்திசெய்யும்போது அந்த பக்தியினால் அந்த நிர்க்குண ப்ரஹ்மத்தை யறியலாம். இதற்குப்ரமாணம் — "ஜ்ஞாநப்ரஸாதேந விசுத்தஸத்வஸ் ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமாந:" என்ற ச்ருதியும், — "யோகிநஸ்தம் ப்ரபச்யந்தி பகவந்தம் ஸநாதநம்" என்ற ஸ்ம்ருதியும். ௨௪.

(ரா-ஹா.) "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:" என்று தொடங்கி "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" என்று வேதத்திலும், "நாஹம் வேதைர் ந தபஸா" இத்யாதி கீதாவாக்யத்திலும், வேதாத்யயநம் யாகம் முதலியவைகள் பரமாத்ம ப்ராப்திக்கு ஸாதநங்களன்றென்றும், பக்தியினாலேயே அடையத்தக்கவனென்றும் சொல்லுகையாலே ஸகலஜ்ஞாநத்திற்கும் பரமாத்மா விஷயமாகிறானென்பதஸங்கதம். ௨௪

ஸூ-௩௩௮ ப்ரகாசாதிவச்சாவைசேஷ்யம் ப்ரகாசச்ச கர்மண்யப்யாஸாத்.

(ஶ-ப்.) ப்ரகாசாதிவத் - வெய்யில்போலே, ப்ரகாச: - ஜீவன், கர்மணி - உபாதியில் (பேதத்தையடைகிருன்.) அவைசேஷ்யம் (ப்ரஹ்மம் ஸ்வத:) பேதமற்றது. அப்யாஸாத் - (இவ்வர்த்தம்) அடிக்கடி சொல்லுகையினுல் நிஶ்சயிக்கப்படுகிறது). ௩௩௮.

(ரா-ப்.) கர்மணி - பக்திரூபக்ரியையில், அப்யாஸாத் - ஆவ்ருத்தியினுலே, ப்ரகாச:-ஜ்ஞாநம், (யாருக்குண்டாயிற்ரே, அவர்களுக்கு) ப்ரகாசாதிவச்ச - ஜ்ஞாநாதியைப்போல், அவைசேஷ்யம் - (ஜகதைஶ்வர்யத்திற்கும்) விசேஷமில்லை. (ஜ்ஞாநம்போல் ஜகத்தும் ப்ராமாணிகர்களான மஹர்ஷிகளுக்குத் தோற்றுகையால் அதுவும் ஸத்யமென்றர்த்தம்.)

(ஶ-ஸ.) ப்ரஹ்மம் த்யாநம் பண்ணப்படுகிறதாகில், த்யாநத்திற்கு விஷயமான ப்ரஹ்மம் ஒன்று, த்யாநம் செய்கிறவனொருவன் என்று பேதம் ஸித்தித்தது, அபேதம் ஸித்திக்கவில்லையே யென்னில், அக்நியானது ஏகாகாரமாயிருந்தபோதிலும் கட்டையின் ஸம்பந்தத்தினுல் சிலவிடத்தில் கறுப்பாகவும் சிலவிடத்தில் பசுமையாகவும் சில விடத்தில் மஞ்சளாகவும் எப்படி காண்கிறதோ, ஆகாசம் ஏகாகாரமானபோதிலும் கடம் மடம் முதலியவற்றின் ஸம்பந்தத்தினுல் கடாகாசம் மடாகாசம் என்று பேதப்பட்டுக் காண்கிறதோ, அப்படியே ஜீவனும் சரீராத்யுபாதி ஸம்பந்தத்தினுல் இப்படி நாநாவாகக் காண்கிருன். அவ்வளவேயன்றி ஜீவனுக்கு பேதப்பட்டிருக்கை ஸ்வபாவமன்று. இப்படி சொல்லுகைக்குக்காரணம்—"அயமாத்மா ப்ரஹ்ம" இந்த ஜீவன் ப்ரஹ்மந்தான். "தத்வமஸி" நீ அந்த ப்ரஹ்மமாகிருய் என்று பலவிடங்களிலும் சொல்லுகிற வேதவாக்யம். ௩௩௮.

(ரா-ஸா.) வாமதேவாதிகள் பக்தியினுல் பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கும்போது பரமாத்மாவினிடத்தில் ஜ்ஞாநாநந்தாதி குணங்களும் உபயவிபூத்யைஶ்வர்யமும் தோற்ற, அவர்களுக்குத் தோற்றினவற்றில் பரமாத்மா ஒருவனே ஸத்யமென்றும் மற்றகுண ஐஶ்வர்யாதிகள் அஸத்யமென்றும் ஸ்வீகரிக்கக்கூடாது. ஆகையால் பரமாத்மா அகிலஹேய ப்ரத்யநீகனும் ஸமஸ்த கல்யாணகுணத்மகனுமிருக்கிருன். ௩௩௮.

ஸூ-௩௩௯. அதோऽநந்தேந ததா ஹி லிங்கம்.

(ஶ-ப்-ஸா.) அத:-பேதம் பொய்யாய் அபேதம் வாஸ்தவமாகையால் அநந்தேந - பரமாத்மாவோடு, (ஜீவன் ஒன்றாய்விடுகிருன்). ததா ஹி - அப்படியேயன்று, லிங்கம் - ("ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி" ப்ரஹ்மத்தையறிந்தவர் ப்ரஹ்மமேயாய் விடுகிருனென்று சொல்லுகிற வேதம் இப்படி நிஶ்சயிக்கைக்கு) ஹேதுவாயிருக்கிறது. ௩௩௯.

(ரா - ப்-ஸா.) அத: - ஆகையால், அநந்தேந - அஸங்க்யாதமான கல்யாணகுணங்களோடே, (பரமாத்மா கூடியிருக்கிருன்) ததா ஹி அப்படியாகையால், லிங்கம் - (பரமாத்மாவுக்கு) ஹேயப்ரத்ய நீகத்வகல்யாண குணத்மகத்வங்களாகிற உபயலிங்கம் (ஸித்திக்கிறது.) (௩௩௯.)

௯. அ-ப-ஸூ-௨௭. உபயவ்யபதேசாத்த்வஹிகுண்டலவத்.

(ப-வ்ரு, உபயவ்யபதேசாத் - பேதம் அபேதம் இரண்டையும் சொல்லுகையால், அஹிகுண்டலவத் - குண்டலாகாரமான ஸர்ப்பம்போல், (பேதம் அபேதம் இரண்டுமுண்டு.) ௨௭.

(ரா - வ்ரு.) உபயவ்யபதேசாத் - (பரமாத்மாவை அசித்தைக் காட்டிலும் பிந்நமென்றும் அபிந்நமென்றும்) இரண்டுவிதமாகச் சொல்லுகையாலே, அஹிகுண்டலவத் - ஸர்ப்பத்தினுடைய குண்டலாகாரம்போலே, (ஜகத்தும் பரமாத்மாவினுடைய அவஸ்தாவிசேஷமே). ௨௭.

(ப-ஹா.) சிலவிடங்களில் "யஸ்ஸர்வாணிபூதாந்யந்தரோயமயதி" எந்தபரமாத்மா ஸர்வ ப்ராணிகளையும் உள்ளே புகுந்து நியமிக்கிறானோ, என்று இம்மாதிரியாக பரமாத்மாவை நியந்தாவாகவும் ஜீவனை நியாம்யனாகவும் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் சொல்லுகிறது. சில விடங்களில், "அஹம்ப்ரஹ்மாஸ்மி" நான் பரப்ரஹ்மமாகிறேன் என்று அபேதம் சொல்லுகிறது. இவ்விரண்டு வாக்யங்களும் ப்ரமாணங்களாகையால் அவற்றில் சொல்லியபடியே ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதம் அபேதம் இரண்டும் ஒப்புக்கொள்ளவேணும். ஒரு ஸர்ப்பம் சுருட்டிக்கொண்டிருந்தால் "இது முன் நீண்டு காணப்பட்ட ஸர்ப்பந்தான். ஆகிலும் இது சுருட்டிக்கொண்டிருக்கிறது என்று நீட்சியையுடைய அந்த ஸர்ப்பத்துக்கும் குண்டலாகாரத்தையுடைய அந்த ஸர்ப்பத்துக்கும் இரண்டும் ஸர்ப்பந்தானென்கிற அபேதமும், அது நீண்டது, இதுசுருண்டது என்று பேதமும் சொல்வதுபோல் இங்கும் அங்கீகரிக்கவேணுமென்று பேதாபேத வாதி சொன்னான். ௨௭.

(ரா-ஹா.) ஸ்தூலஸூக்ஷ்மங்களான அசித்வஸ்துக்கள் பரமாத்மஸ்வரூபங்களென்று சொல்லிற்றுக்கீழ். இதற்குத் தாத்பர்யமென்; ம்ருத்துகடமாகிறாப்போலே ப்ரஹ்மமே ஜகத்ரூபமாகப் பரிணமிக்கிறதா; அல்லது. அவனே இவன் என்றாற்போல் ப்ரஹ்மமும் ஜகத்தும் ஒருவிதமான வஸ்துவா, அல்லது இவை ப்ரஹ்மத்திற்கு சரீரங்களா என்று ஸம்சயம். "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம" இதெல்லாம் ப்ரஹ்மமென்று ஜகத்தையும் ப்ரஹ்மத்தையும் ஏகமாகச் சொல்லுகையாலும், "போக்தாபோக்யம்ப்ரேரிதாரஞ்ச மத்வா" என்றுஜகத்தையும்ப்ரஹ்மத்தையும்பிந்நமாகச் சொல்லுகையாலும் இவ்விரண்டு ப்ரயோகமும் ஸரியாகும்படிக்கு ஜகத் ப்ரஹ்மங்களை ஒருவஸ்துவாகவே கொள்ளவேணும். ஆனால் ஜகத்து என்றும் ப்ரஹ்மம் என்றும் வ்யவஹாரம் வருகைக்குஹேது வென்னென்னில், ஸர்ப்பம் வட்டமாய்ச் சுற்றிக்கொண் டிருக்கும்போது குண்டலாவஸ்த்தையையும், ஸ்வபாவமாயிருக்கும் போது தீர்க்காவஸ்தையையும் ஆக இரண்டவஸ்த்தையை யடைகிறாப்போலே ப்ரஹ்மத்திற்கும் இரண்டவஸ்தையுண்டு - அதில் ஸ்வபாவாவஸ்தையில் ப்ரஹ்மமென்றும், மற்றோரவஸ்தையில் ஜகத்தென்றும் வ்யவஹரிக்கப்படுகிறதென்று பூர்வபக்ஷம். ௨௭.

ஸூ-௨௮. ப்ரகாசாச்ரயவத்வா தேஜஸ்த்வாத்.

(ப-வ்ரு.) தேஜஸ்த்வாத் - தேஜஸ்ஸாயிருக்கையினால், ப்ரகாசாச்ரயவத் - வெய்யிலையும் அதுக்கு ஆச்ரயமான ஸூர்யனையும் போலாவது (பேதாபேதம் அங்கீகரிக்கவேணும்.) ௨௮.

(ரா-வ்ய.) தேஜஸ்த்வாத் - தேஜஸ்த்வஜாதியோகத்தினாலே, ப்ரகாசாஶ்ரயவத் - ப்ரகாசமும் அதுக்காஶ்ரயமான தீபமும்போலே, (இரண்டும் ஒருவிதமானவஸ்து. ஒன்றன்று என்றுபாவம்.) ௩-௨௭.

(ஸ-ஹா) வெய்யில் ஸூர்யன் இவ்விரண்டும் தேஜஸ்ஸாகையால் அவ்வாகாரத்தினால் இரண்டுக்கும் அபேதமும் வெய்யிலுக்கு ஸூர்யன் ஆதாரமாகையால், ஒன்று ஆதாரம் ஒன்று ஆதேயம் என்ற ஆகாரங்களினால் பேதமும் காண்கிறது போல் ஜீவப்ரஹ்மங்களுக்கும் பேதாபேதங்களிரண்டு மொப்புக்கொள்ள வேணும். என்றான்.

(ரா-ஹா.) ப்ரஹ்மமேஜகத்தாகப் பரிணமித்தால் ஜகத்துக்குண்டான உத்பத்திவிநாசாதி தோஷங்கள் ப்ரஹ்மத்திற்கு ஸம்பவிக்குமாகையால் அப்படி சொல்லக்கூடாது. ஒளியும், ஒளியையுடைய தீபமும் வெவ்வேறாயினும் இரண்டும் ஒருவிதமானத்ரவ்யமாகையாலே இரண்டையும் தேஜஸ்ஸு என்று அபிந்நமாகச்சொல்லுகிறாப்போல், ஜகத் ப்ரஹ்மங்களும் ஒரு விதமான த்ரவ்யமாகையாலே இரண்டையும் அபிந்நமாகச் சொல்லுகிறதென்று இரண்டாம் பூர்வபக்ஷம். ௩-௨௭.

ஸூ-௩-௨௮. பூர்வவத்வா.

(ஸ-வ்ய.) பூர்வவத்வா - முன்சொன்னாற்போலவே (அபேதமே ஸ்வாபாவிகமென்னவேணும்.) ௩-௨௮.

(ரா-வ்ய.) பூர்வவத்வா - முன்போலவே (சரீராத்ம பாவத்தினால் ஐக்யவ்யவஹாரம் ஸமர்த்திக்கவேணும்.) ௩-௨௮.

(ஸ-ஹா) அப்பக்ஷத்தை இதில் நிரஸநம் செய்கிறார்:—அபேதம் போல்பேதமும் ஸ்வாபாவிகம், யதார்த்தம், பொய்யன்று என்றொப்புக்கொள்ளில், பேதரூபமாகிய ஸம்ஸாரத்தை தத்வஜ்ஞானத்தினால்நசிப்பிக்கவொண்ணாது;பொய்யான வஸ்துவே தத்வஜ்ஞாநத்தினால் நசிக்கும். தகரத்தில் பொய்யாகக்காண்கிற வெள்ளி "இதுவெள்ளியன்று தகரம்தான்" என்ற யதார்த்தஜ்ஞாநத்தினால் நசிக்கிறது, மெய்யானவெள்ளி நசிக்கிறதில்லை. அதுபோல் ஸம்ஸாரம் பொய்யென்கிற எங்கள் பக்ஷத்தில் ப்ரஹ்மஜ்ஞானத்தினால் ஸம்ஸாரம் நசிக்கிறது. உங்களுக்கு அதுமெய்யாகையால் நசியாமல்போகவேண்டிவரும். தத்வஜ்ஞாநம்தவிர ஸம்ஸாரம் நசிக்கைக்கு வேறுகாரணம் காணாமையால் ஜீவனுக்கு எப்போதும் முக்தியில்லாமலேபோம். ஆகையால், பேதாபேதஶ்ருதிகளிரண்டுக்கும் நாங்கள் சொன்னபடியே அர்த்தம் சொல்லவேணும் என்று ஸித்தாந்தம். ௩-௨௮.

(ரா-ஹா) இவ்விரண்டு பக்ஷங்களையும் நிரஸிக்கிறார்:—கீழ் அம்சாதிகரணத்தில் ப்ரஹ்மத்தோடு ஜீவனை பிந்நமாகவும் அபிந்நமாகவும் சொல்லுகையாலும் ஜீவனுடைய தோஷங்கள் ப்ரஹ்மத்தில் வாராமைக்காகவும் ஜீவனை ப்ரஹ்மத்திற்கு சரீரமென்றங்கீகரித்து அவ்விரண்டு விதமான வ்யவஹாரத்தையும் ஸமர்த்தித்தாப்போல், இங்கும், அசித்தான ஜகத்து ப்ரஹ்மத்திற்கு சரீரமாகையாலே சரீராத்மபாவத்தைக்கொண்டு அபிந்நமாகவும் விஷக்ருஷ்டாம்சத்தைக் கொண்டு பிந்நமாகவும் சொல்லுகிறதென்று ஸித்தாந்தம். ௩-௨௮.

ஸூ-௩-௨௯. ப்ரதிஷேதாச்ச.

(ஸ-வ்ய-ஹா.) ப்ரதிஷேதாச்ச - "அதாத ஆதேஶோ நேதி நேதி" என்று தத்வஸ்வரூபம்சொல்ல ஆரம்பித்து, ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறாகிய இந்த ப்ரபஞ்சமெல்லாம் பொய்யென்று சொல்லுகையா

லும், ப்ரஹ்மமே பரமார்த்தம் மற்றது அபரமார்த்தம் என்று வ்யாஸபகவான் சொல்லுகிறார். ௩-௪ ௩.

(ரா-வ்-ஸா.) ப்ரதிஷேதாச்ச-(ஜகத்திலுள்ள உத்பத்தி விநாசாதிதோஷங்களை "அஜரோ(அ)மர:" என்று ப்ரஹ்மத்திலில்லையென்று) நிஷேதிக்கையாலும், ஜகத்தும் ப்ரஹ்மமும் ஏகத்ரவ்யமென்றங்கீகரிக்கக்கூடாது.

௬அ-அக. ஸூ-௩௪. பரமத: ஸேதூந்மாநஸம்பந்தபேத வ்யபதேசேப்ய:.

(ஶ-வ்ரு.) ஸேதூந்மாநஸம்பந்தபேதவ்யபதேசேப்ய: - (ப்ரஹ்மத்தை) ஸேதுவென்கையாலும் அளவிட்டுச்சொல்லுகையாலும் ஜீவனோடு ஸம்பந்தம் சொல்லுகையாலும் வேறாகச்சொல்லுகையாலும், அத: - இந்த ப்ரஹ்மத்தைக்காட்டிலும், பரம் - வேறானவஸ்து உண்டு. ௩௪.

(ரா வ்ரு.) ஸேதூந்மாநஸம்பந்தபேதவ்யபதேசேப்ய: - (ஜகத்காரணனான ஸர்வேஸ்வரனை) ஸேதுவாகச்சொல்லுகையாலும் அளவிட்டுச் சொல்லுகையாலும் பலத்தையடைவிப்பிக்கிற உபாயமாகச் சொல்லுகையாலும் பிந்நனென்று சொல்லுகையாலும், அத: - ஜகத்காரணமாகச் சொல்லப்பட்ட இந்த பரமபுருஷனைக்காட்டில், பரம் - உயர்ந்தவஸ்து (ஒன்றுண்டு.) ௩௪.

(ஶ-ஸா) ப்ரபஞ்சம் அஸத்யமென்று சொல்லிற்றுக்கீழ்; இப்பொழுது, ப்ரபஞ்சமஸத்யமாயிலும் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறான்மற்றொரு தத்வமுண்டா இல்லையாவென்று விசாரிக்கிறார்— "ய ஆத்மா ஸ ஸேது:" பரமாத்மா ஸேதுவென்று சொல்லியிருக்கிறது. ஸேதுவாவது இரண்டு ஜலத்திற்கும் நடுவிலுள்ள சட்டைமுதலியவற்றினால் செய்யப்பட்டப்ரதேசம்; ஜலத்துக்கு அக்கரையிலும் இக்கரையிலும் ஸேதுவைக்காட்டிலும் வேறான ப்ரதேச மிருப்பதுபோல், ஸேதுவாகச் சொல்லப்பட்ட இதைக்காட்டிலும் வேறு தத்வமு முண்டென்று தோற்றுகிறது. "ஸேதும் தீர்த்வா" ப்ரஹ்மமாகிற ஸேதுவைத்தாண்டி என்கையாலே, இதைத் தாண்டி அப்பால் போகத்தக்க இடம் உண்டென்று தோற்றுகிறது. "சதுஷ்பாத் ப்ரஹ்ம ஷோடசகலம்" ப்ரஹ்மம் நாலுகாலையுடையது, எட்டுகுளம்பையுடையது, என்று அளவிட்டுச் சொல்லுகையால் அளவில்லாத வேறொரு தத்வமுண்டென்று தோற்றுகிறது. "ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி" இந்த பரமாத்மாவோடு ஜீவன் சேருகிறானென்று சொல்லுகையாலே, ஜீவனொருவன் வேறுபட்டுண்டென்று தோற்றுகிறது. "ய ஏஷோ(அ)ந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:" ஸூர்யமண்டலத்தில் பரமாத்மா இருக்கிறானென்றும், "ய ஏஷோ(அ)க்ஷிணி புருஷோ த்ருஶ்யதே" கண்ணினுள்ளே இருக்கிறவன்பரமாத்மாவென்றும் இரண்டு பரமாத்மாவைச் சொல்லுகையாலே இரண்டுதத்வமுண்டென்று தோற்றுகிறது. இந்த ஹேதுக்களினால் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுதத்வமுண்டென்று நிஶ்சயிக்கவேணுமென்று பூர்வபக்ஷி சொன்னான். ௩௪.

(ரா-ஸா. அடியேதொடங்கி இதுவரையிற்சொல்லப்பட்ட ஜகத்காரணனான பரமபுருஷனே பரதத்வமா, அல்லது இவனைக்காட்டிலும் வேறொரு பரதத்வமிரு

க்கிறதாம் என்றுஸம்சயம்.—கீழ்சொன்ன இந்தபரமபுருஷனை "யஜு ஸெல தை:" என்று ஸேதுவாகச்சொல்லி "ஸ தம்ஸெ தீர்க்வா" என்று அதைத்தாண்டவேணுமென்கையாலே இவனுக்கப்பால் அடையவேண்டியவஸ்துஒன்றுண்டென்று தோற்றுகிறது. மேலும், "சதுஷ்பாத் ஷோடசகலம்" இந்த ப்ரஹ்மம் நாலுபாதங்களையுடையதென்றும்பதினாறுகலைகளையுடையதென்றும்அளவிட்டுச் சொல்லுகையாலே அளவில்லாதது வேறொன்றுண்டென்பது தோற்றுகிறது. மேலும், "அம்ருதஸ்யைஷ ஸேது:" என்று மோக்ஷத்தை அடைகைக்கு இந்த பரமாத்மா ஸேதுவாய் - அடைவிப்பிக்கிறவனாயிருக்கிறானென்கையாலே அடைவிப்பிக்கிறவனைக்காட்டிலும் அடையத்தகுந்த வஸ்து வேறொன்றுண்டென்று தோற்றுகிறது. மேலும், "ததோ யதுத்தரதரம்" என்று இவனைக்காட்டிலும் மேலான தொன்றுண்டென்றும் சொல்லிற்று. இந்த ஹேதுக்களினாலே இவனைக்காட்டிலும் வேறொரு பரதத்வமுண்டென்று பூர்வபக்ஷம். ந-௩௪.

ஸூ-ந-௩௫. ஸாமாந்யாத்து.

(ரு-வ்.) ஸாமாந்யாத்-ஸமானமாயிருக்கையினால், (ப்ரஹ்மத்தை ஸேதுவாகச்சொல்லிற்று.) ந-௩௫.

(ரா-வ்.) ஸாமாந்யாத் - ஸாத்ருஸ்யத்தினாலே, (இவனை ஸேதுவாகச்சொல்லிற்று.) ந-௩௫.

(ரு-ஹா.) இந்த சங்கைக்கு ஸமாதானம் சொல்லுகிறாரிதில்,—ஸேதுவானது இரண்டு ஜலத்தையும் ஒன்றோடொன்று சேரவொட்டாமல் காப்பதுபோல் பரமாத்மாவும் லோகத்திலுள்ள மர்யாதைகளை, (அதாவது - வர்ணாஸ்ரமதர்மங்கள், தேவ மநுஷ்ய பசு பக்ஷி முதலிய அவ்வவஜாதிக்குரிய தர்மங்கள்) ஒன்றோடொன்று சேரவொட்டாமல் காத்துக்கொண்டிருக்கிறபடியால் அந்த த்ருஷ்டாந்தத்தைக்கொண்டு ஸேதுவென்று சொல்லிற்று. பரமாத்மாவாகிற ஸேதுவைத் தாண்டியென்றதுக்கும், ஸேதுவையடைந்தென்றே யர்த்தம். "இவன் ஒரு சாஸ்த்ரத்தைத்தாண்டினான்." என்பதுபோல் இவ்விரண்டினாலும் வேறொரு தத்வமுண்டென்று ஏற்படவில்லை. ந-௩௫.

(ரா-ஹா.) இந்த பரமபுருஷனை ஸேதுவாகச் சொன்னது—ஸேதுவானது எப்படி இரண்டு பக்கங்களிலுள்ள நீரை ஒன்றோடொன்று சேரவொட்டாமற் செய்யுமோ, அப்படியே இவனும் ஜகத்தில் தானேற்படுத்தின மர்யாதைகளை ஒன்றுக்கொன்று கலவாமற்படி ரக்ஷிக்கிறானென்று சொல்லிற்று. இவ்வர்த்தம் "ஏஷ ஸேதுர்விதரண ஏஷாம் லோகாநாமஸம்பேதாய" என்று மேல்வாக்யத்தில் ஸ்பஷ்டமாயிருக்கிறது, இந்த ஸேதுவைத்தாண்டி என்றது - வேதாந்த சாஸ்த்ரத்தைக் கடந்தானென்றால் அதைப்பூர்ணமாக வடைந்தானென்பதுபோல் இவனையடைந்தானென்றே யர்த்தமாகையால் இது வேறொரு பரதத்வமுள்ளதென்பதில் ஹேதுவாகமாட்டாதாகையால் இந்த பரமபுருஷனே பரதத்வமென்று ஸித்தாந்தம். ந-௩௫.

ஸூ-ந-௩௬. புத்த்யர்த்த: பாதவத்.

(ரு-வ்.) பாதவத் - கால்போலே, புத்த்யர்த்த: - உபாஸனார்த்தம் (இப்படி சொல்லப்பட்டது.) ந-௩௬.

(ரா-வ்.) பாதவத் - "வாக்பாதஸ்சக்ஷு: பாத:" என்பதுபோல், புத்த்யர்த்த: - உபாஸனார்த்தம், சொல்லப்பட்டது. ந-௩௬

(ஶ்ரு-ஹா.) ஆகார சூந்யமான ப்ரஹ்மத்தை த்யாநிப்பது அல்பபுத்திகளுக்கு அரிதாகையால்,அவர்கள் புத்தியில் ஒரு ஆகாரம் தோற்றுகைக்காக, ப்ரஹ்மம் நாலு கால் எட்டு குளம்புகளையுள்ளதென்று ஓராகாரத்தையிட்டு அளவுபடுத்திச் சொல்லிற்று. லோகத்தில் கொடுக்கல்வாங்கல்முதலியவ்யவஹாரம் நடக்கைக்காக, ஒரு ரூபாய்க்கே அனேக பாகங்களை யேற்படுத்தி கால் அரைக்கால் என்று சொல் வதுபோல்இங்கும்கண்டுகொள்வது. இதனால்ப்ரஹ்மஸ்வரூபம் அளவுபட்டதென்று ஏற்படவில்லை ஆகையால் இதனாலும் வேறு தத்வம் வித்தியாது. ந-சக.

(ரா-ஹா.) இந்த ப்ரஹ்மத்தை நாலுபாதங்களை யுடையதென்று அளவிட்டுச் சொன்னது - இவ்விதமாக உபாஸநம் பண்ணவேண்டு மென்கைக்காக, இதனால் இவன் அபரிச்சிந்நனன்றென்று தோற்றுது. ந-சக.

ஸூ-ந-சஎ. ஸ்தாநவிஶேஷாத் ப்ரகாஶாதிவத்.

(ஶ்ரு-வ்ரு.) ப்ரகாஶாதிவத் - வெய்யில் முதலானவற்றைப்போல், ஸ்தாநவிஶேஷாத் - உபாதிபேதத்தினால் (ஸம்பந்தமும் சொல்லப்பட்டது.)

(ரா-வ்ரு.) ப்ரகாஶாதிவத் - ப்ரகாசம் முதலானவற்றைப்போல், ஸ்தாநவிஶேஷாத் – ஸ்தாநவிசேஷத்தின் ஸம்பந்தத்தினாலே, (அபரிச்சி ந்நத்தைப் பரிச்சிந்நமாக அநுஸந்திக்கலாம்.) ந-சஎ.

(ஶ்ரு-ஹா.) ஜநங்கள் சென்று ஊரை அடைகிறார்கள் என்றால் அவ்வூர் ஸர்வ வ்யாபியன்றிக்கே அளவுபட்டதாகக்காண்கிறது. அதுபோல் ப்ரஹ்மத்தை ஜீவன் அடைகிறானென்கையால், ப்ரஹ்மமும் அளவுபட்டிருக்கும். அளவுபட்டது எல்லா வற்றுக்கும் மேலானதாகாது;ஆகையால்இதைக்காட்டிலும்மேலானதுண்டென்று பூர்வபக்ஷி சொன்னது சரியன்று. ஏனென்னில்,—வெய்யில் ஸர்வவ்யாபியாயிருக் கச்செய்தேயும், நடுவே பந்தலிட்டு வைக்கில், அங்கிரண்டிருக்கும் அவ்வெய்யிலே வேறுபட்டுக்காண்கிறது. அப்பந்தலை யெடுத்துவிடில் "இவ்வெய்யில் அவ்வெய்யி லோடு கலந்துவிட்டதென்கிறார்கள். அங்கு வெய்யில் இப்போதாக ஒன்றும் கலக்க வில்லை.முன்னேபிடித்துக்கலந்தேயிருந்துமிருந்தலினால் வேறாகத்தோற்றிற்று. அதை யெடுத்துவிடில் அந்த ப்ரமம் போய்விட்டது. அதுபோல் ஸர்வவ்யாபியான ப்ரஹ் மமே சரீராதியான உபாதிஸம்பந்தத்தினால் ஜீவனாகக் காண்கிறது. அந்த உபாதி கழிந்தால் ஜீவனென்கிற ப்ராந்தி கழிகிறது. இதையே ப்ரஹ்மத்தோடு ஜீவன்சேரு கிறானென்றது. இதனால் ப்ரஹ்மம் ஊரைப்போல் அளவுபட்டிருக்கிறதென்று வித்திக்கவில்லை. ஸூர்யமண்டலத்தி லுண்டாகச்சொல்வதும் உபாதிஸம்பந்தத்தி னாலுண்டான ப்ராந்தி, கடாகாசம் மடாகாச மென்பதுபோல். ஆகையால் இதனா லும் வேறுதத்வம் வித்திக்கமாட்டாது. ந-சஎ.

(ரா-ஹா.) ப்ரஹ்மஸ்வரூபம் அபரிச்சிந்நமானால் அதைப்பரிசேதித் தநுபவிக் கக்கூடாதேயென்னில், ஆகாசம் அபரிச்சிந்நமாயினும் கலசாதிகளில் பரிச்சிந்நமா காகக் காண்கிறாப்போலவும், ஸூர்யகிரணம் எங்கும்பரவி வ்யாபகமாயிருந்தாலும் கவாக்ஷங்களில் ஸூக்ஷ்மமாகக் காண்கிறாப்போலவும் ப்ரஹ்மஸ்வரூபத்தையும் பரிச் சேதித்து உபாஸநம் செய்யலாம். ந-சஎ.

ஸூ-ந-சஅ. உபபத்தேஶ்ச.

(ஶ்ரு-வ்ரு.) உபபத்தேஃ - (இப்படிச்சொல்வதே) சரிப்பட்டிருக்கு மா கையால், (இதுவே பொருள்.) ந-சஅ.

(ரா-வ்யா.) உவவமெத்தே-(ஸேதுபோல் ப்ராபகனாகையாலே இவனை ஸேதுவாகச்சொன்னதும்) உபபந்நமாகையாலேயும், (இவனேபரதத்வம்.)

(ஶ-ஹா.) "ஸ்வேவீதொ தாஸவதி" ஜீவன் ப்ரஹ்மஸ்வரூபமாகிய தன்னைத் தானே அடைகிறான் என்று சொல்லியிருப்பது - ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதமில்லையென்கிற பக்ஷத்தில்தான் சரியான அர்த்தமாகும். ஆகையால் அத்வைதமே உண்மை. ௩௪அ.

(ரா-ஹா.) சேதநர்களை ஸம்ஸாரத்தைவிட்டுநீக்கித் தன்னைத்தானே அடைவிப்பித்துக் கொள்ளுகையாலே இவனை ஸேதுவாகச்சொல்லிற்று. அவ்வளவுமாத்ரத்தினால் பரதத்வம் வேறொன்றுண்டென்று நிர்ணயிக்கமுடியாது. ௩௪அ.

ஸூ-௩௪௯. தயா நூவ்ரதிஷெயாசு.

(ஶ-வ்யா.) சுநூவ்ரதிஷெயாசு-வேறுவஸ்துவை இல்லையென்கையால், தயா - அப்படியே பேதமும் ஸ்வதஸ்ஸித்தமன்று. ௩௪௯.

(ரா-வ்யா.) தயா - அப்படியே, சுநூவ்ரதிஷெயாசு - வேறொரு பரதத்வத்தை நிஷேதிக்கையாலே, (இவனே பரதத்வம்.) ௩௪௯.

(ஶ-ஹா.) "ஸவ-ஜஷாமெதூவெஷஂமெ நஹநாநாவஷிகிஞந" எல்லாம் பரமாத்மஸ்வரூபந்தான்வேறுவஸ்து கிடையாதுஎன்கையால்ஜீவனென்றும் ப்ரஹ்மமென்றும் இரண்டுவஸ்து இல்லையென்பதுஸித்தம். இரண்டுவஸ்து இல்லாதபோது ஜீவன் ப்ரஹ்மத்தோடே சேருகையாவது - ஜீவனுகைக்குக் காரணமாகிய உபாதி நசிக்கை என்று சொல்லவேணும். இதனாலேயே பேதமும் ஸ்வதஸ்ஸித்தமன்று என்று ஸித்திக்கிறது. ௩௪௯.

(ரா-ஹா) "நதவெஸூஶெசுஶு நூ" இத்யாதி வாக்யங்களில் இந்த பரமாத்மாவைக்காட்டிலும் மேற்பட்டவனில்லையென்று சொல்லுகையாலே இவனே பரதத்வம். ௩௪௯.

ஸூ-௩௫0. அநேந ஸவவ-ஜமதஷாயாமஶஷூாதிஹ்யஃ.

(ஶ-வ்யா.) அநேந - இந்த பூர்வபக்ஷத்தை நிரஸநம் செய்கையாலே, ஆயாமஶஷூாதிஹ்யஃ-வ்யாப்தி முதலியவற்றைச் சொல்லுகிற வாக்யங்களினால், ஸவவ-ஜமதஷ்ஃ - (ப்ரஹ்மத்துக்கு) எங்குமிருக்கை ஸித்தித்தது.

(ரா-வ்யா.) அநேந - இந்த பரமாத்மாவினாலே, ஸவவ-ஜமதஷ்ஃ-எங்கும் வ்யாபித்திருக்கை, ஆயாமஶஷூாதிஹ்யஃ - வ்யாப்தி போதக சப்தம்முதலானவைகளினால், (சொல்லப்பட்டது.) ௩௫0.

(ஶ-ஹா.) இப்படி பூர்வபக்ஷம் தள்ளுண்டவாறே "ஆகாஶவஸவவ-ஜமதஶூநிதூஃ" இத்யாதிவாக்யங்களினால் ப்ரஹ்மம்ஸர்வவ்யாபியென்று ஸித்தித்தது.

(ரா-ஹா) "யெநெதஂவஜணஂவ-ரஷெணஸவஜ்" என்று பரமபுருஷனால் ஸர்வமும் நிறைந்திருக்கிறதுஎன்றும், "அநவஹிஶூதஸவஜஂவூாவூநாராயணஸிதஃ" ஸ்ரீமந்நாராயணன் உள்ளும் வெளியும் வ்யாபித்திருக்கிறானென்றும், "ஆமெதூவெஷஂஸவஜ்" இந்த ஸகலவஸ்துவும் இந்த பரமாத்மஸ்வரூபமென்றும்இவனே ஸர்வவ்யாபகனென்கையாலேஇவனைக்காட்டிலும் வேறு பரதத்வமில்லை. ஜகத்காரணபூதனான இந்த பரமபுருஷனே பரதத்வம். ௩௫0.

அ-௩-பா-௨-ஸூ-௩௭. ப²லமத உபபத்தே:.

(ஸு-ரா-வ்ரு.) உபபத்தே: - யுக்தியுக்தமாகையால், அத: - இந்தபரம புருஷனிடத்திலிருந்து, ப²லம் - புருஷார்த்தம், (கிடைக்கிறது). ௩௭.

(ஸு-ரா-ஸா.) சாஸ்த்ரங்களில் ஸ்வர்க்காதி பலங்களைக்குறித்து யாகாதிகளும் மோக்ஷத்தைக்குறித்து பக்தியும் விதிக்கப்பட்டிருக்கின்றன. அந்த யாகாதி கர்மம், தானே ஸ்வர்க்காதிகளைக் கொடுக்கிறதா, அல்லது அக்கர்மத்தினால் ஆராதிக்கப் பட்ட பரமபுருஷன்கொடுக்கிறானா என்று ஸம்சயம் —வேதத்தில் ஸ்வர்க்காதிகளைக் குறித்து கர்மத்தை ஸாதநமாகச் சொல்லுகையாலும், லோகத்தில் பயிர், வர்த்தகம் முதலிய வ்யாபாரம் ஒருவனுடைய அபேக்ஷையின்றிக்கே தானே பலங்கொடுக்கக் காண்கையாலும் யாகாதிகர்மமே பலங்கொடுக்கிறதென்று நிச்சயிக்கப்படும். பலங் கொடுப்பது பலமுண்டாகும்போது அதற்கு அடுத்தமுன் க்ஷணத்திலிருக்கவேண் டும், யாகாதிகள் அப்படி யில்லாமல் வெகுகாலத்திற்கு முன்னமே நசித்துப்போன போதிலும், யாகாதிகளினால் உண்டான புண்யம் இருக்கையாலே அநந்தரம் பல முண்டாகத் தடையில்லை என்று பூர்வபக்ஷம்.—யாகம் என்கிற பதத்திற்கு தேவதா பூஜநம் அர்த்தம். இதனால் அக்கர்மத்தினால் ஆராதிக்கப்பட்ட பரமபுருஷனே பல ப்ரதனென்பது யுக்தம். மேலும் "வாயவ்யம் ஶ்வேதமாலபேத பூ⁴திகாம:" என்று தொடங்கி மேல்வாக்யங்களில் "ஸ ஏவைநம் பூ⁴திம் க³மயதி" என்று வாயு தேவதாகமான யாகம் செய்தால் அவனுக்கு வாயுதேவதை ஐஸ்வர்யத்தைக்கொடு க்கிறதென்று சொல்லிற்று. "தஸ்ய வாயு: ஶரீரம்" என்று அந்த வாயுவையும் பரமாத்மஸ்வரூபமாகச் சொல்லிற்று. ஆக இந்த ஹேதுக்களினால் பரமபுருஷனே பல ப்ரதனென்பது ஸித்தாந்தம். ௩௭.

ஸூ-௩௮. ஶ்ருதத்வாச்ச.

(ஸு-ரா-வ்ரு.) ஶ்ருதத்வாச்ச - வேதத்தில் பரமபுருஷனே பல ப்ரத னாகச் சொல்லுகையாலும், (அவனே பலப்ரதன்) ௩௮.

(ஸு-ரா-ஸா) "அந்நாதோ³ வஸுதா³ந:" என்று அந்நம் ஸம்பத்து முதலிய வற்றை அவனே கொடுக்கிறானென்றும், "ஏஷ ஹ்யேவாநந்த³யாதி" என்று அவனேஜீவர்களுக்கு மோக்ஷாநந்தத்தைக் கொடுக்கிறானென்றும் சொல்லுகையா லும் அவனே பலப்ரதன். ௩௮.

ஸூ-௩௯. த⁴ர்மம் ஜைமிநிரத ஏவ.

(ஸு-ரா-வ்ரு.) அத ஏவ - உபபத்தியினாலேயே, ஜைமிநி: ஜைமினி மஹர்ஷி, த⁴ர்மம் - தர்மத்தையே, (பலப்ரதமாக ஒப்புக்கொண்டார்.) ௩௯.

(ஸு-ரா-ஸா.) லோகத்தில் வ்யவஸாயம் வர்த்தகம் முதலிய வ்யாபாரங்கள், ஒருவனபேக்ஷையின்றியே, செய்கிறவனுக்குப் பலத்தை அடைவிப்பிக்கையாலும், யாகாதிகளை வேதத்தில் பல ஸாதநமாக விதிக்கையாலும் கர்மமே பலப்ரதமென் றார். ஜைமினி என்பவர். ௩௯.

ஸூ-௪௦. பூர்வம் து பா³த³ராயணோ ஹேதுவ்யபதே³ஶாத்.

(ஸு-ரா-வ்ரு.) ஹேதுவ்யபதே³ஶாத் - ஹேதுசொல்லுகையாலே, பா³த³ராயண: - பாதராயண ரென்பவர், பூர்வம் து - முன்பக்ஷத்தையே, (அங்கீகரித்தார்.) ௪௦.

(ஸூ-ஹா.) "ஹேதுவ்யபதேஶாச்ச" என்பதற்கு "ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி" இத்யாதியினால் கர்மங்களைச் செய்விக்கிறவனும் பரமாத்மாவே யென்கையால் பலப்ரதாதாவும் அந்த பரமபுருஷனே என்று ஸித்தம். ௧௫௩.

(ரா-ஹா.) வாயுவைக்குறித்துச்செய்த யாகத்தின் பலத்தை வாயுவே கொடுக்கிறானென்றும், அந்த வாயுவும் பரமபுருஷ ஸ்வரூபனென்றும் கீழ்ச்சொன்ன ஹேதுக்களைக்கொண்டு பரமபுருஷனே பல ப்ரதனாகிறானென்று பாதராயண மஹர்ஷி ஸ்வீகரித்தார். ௧௫௪.

௩-வது அத்யாயம், ௨-வது பாதம் ஸம்பூர்ணம்.

---

## ௩-வது அத்யாயம், ௩-வது பாதம்.

அதி-௧-ஸூ-௧-௧௫௫, ஸர்வவேதாந்தப்ரத்யயம் சோதநா
த்யவிஶேஷாத்.

(ஸூ-ரா-வ்ய.) சோதநாத்யவிஶேஷாத் - விதிப்பது முதலானவற்றில்பேதமில்லாமையாலே, ஸர்வவேதாந்தப்ரத்யயம்-ஸகல வேதாந்தங்களிலேயும் தோற்றப்பட்ட தகராதிவித்யை ஒன்றே. ௧௫௫.

(ஸூ-ஹா.) கீழ் இதுவரையில் ப்ரஹ்மஸ்வரூபம் நிர்ணயிக்கப்பட்டது. இதில், அந்த ப்ரஹ்மப்ராப்திரூப மோக்ஷத்துக்கு ஸாதநமாகிய அத்வைத ஜ்ஞாநம் பேதவாஸனை நசித்தபின் உண்டாகவேண்டியது. அதற்காக முதல் நிர்குண ப்ரஹ்மத்தில் மனம் செல்லாதாகையால் ஸகுண ப்ரஹ்மத்தையே ஏகாக்ரமாக த்யாநித்து மனதை மற்றோரிடத்தில் போகவொட்டாமற்படி பண்ணி மெள்ள மெள்ள பேதவாஸனையைக்கழித்து அதினால் சித்தம் நிர்மலமானபின் ஸர்வம் ப்ரஹ்மாத்மகம் என்கிற அத்வைத ஜ்ஞாந முண்டாகும். ஆகையால், இவ்விதமான அத்வைத ஜ்ஞாநத்துக்கு ஸாதநமாகிய ஸகுண ப்ரஹ்மோபாஸந ஸ்வரூபம் விசாரித்து நிர்ணயிக்கப்படுகிறது.—பஞ்சாக்நிவித்யை ப்ராணவித்யை முதலான வித்யைகள். அதாவது-உபாஸநமென்று சொல்லப்படுகிற பக்தி, வாஜஸநேய சாகை ஸாமசாகை முதலிய அனேக இடங்களில் சொல்லியிருக்கிறது. அந்த பஞ்சாக்நி வித்யையெல்லாம் ஒன்றேயா, அல்லது வெவ்வேறு, இப்படியே ப்ராணவித்யை தகரவித்யை சாண்டில்ய வித்யை முதலான வித்யைகளும் வெவ்வேறிடங்களில் சொல்லப்பட்டதாய் ஒரே பேரையுடையதான அவற்றுக்கு ஒன்றுக்கொன்று பேதமுண்டா, இல்லையாவென்று விசாரிக்கு மளவில்,—பஞ்சாக்நிவித்யை என்று பெயர் ஒன்றாயிருந்தபோதிலும், வாஜஸநேய சாகையில், ஸாமசாகையிற் சொன்ன ஐந்தக்நிகளையும் சொல்லி, அதற்குமேல் ஆறாவது அக்நியும் சொல்லப்பட்டது. ஸாமசாகையில் ஐந்தே அக்நி த்யாநிக்கத்தக்கதாகச் சொல்லப்பட்டது. இப்படியேஸாமசாகையில்ப்ராணவித்யையில் பஞ்சேந்த்ரியங்களும் ப்ராணனும் மாத்ரமே சொல்லப்பட்டது. வாஜஸநேய சாகையில் ரேதஸ்ஸும் சேர்த்துச்சொல்லப்பட்டது. இப்படி யொன்றுக்கொன்று ரூபம் பேதிக்கிறது. இப்படியே, முண்டகோபநிஷத்தை அத்யயநம் செய்கிறவர்கள் சிரஸில் அக்நிச்சட்டியை வைத்துக்கொண்டு அத்யயநம் செய்யவேணும் என்றும் மற்றவர்களுக்கு அந்த வ்ரதம் இல்லையென்றும் ஆகாரமும் பேதித்திருக்கிறது. ஆகையால் பேர் ஒன்றாயினும் வெவ்வேறிடங்களில் சொன்ன பஞ்சாக்நிவித்யை முதலிய உபாஸநம் வெவ்வேறாகவே ஆகக்கடவது என்று பூர்வபக்ஷி சொன்னான்.

இப்படி மற்ற பேதங்களிருந்தபோதிலும் பெயர் ஒன்றாயிருக்கையாலும், அந்தந்த இடங்களிற் சொல்லிய பஞ்சாக்நிவித்யைக்கெல்லாம் பலமொன்றாய், இப்படியே ப்ராணவித்யை முதலாக ஒரேபெயரையுடைய வித்யைகளுக்கெல்லாம் பலமொன்றாயே யிருக்கையாலும். "உபாஸநம் செய்யவேண்டும், பக்திசெய்யவேண்டும், அறிய வேண்டும்" என்று இம்மாதிரியாக அவ்வவ உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட புருஷப்ரயத்நம் ஒரேவிதமா யிருக்கையாலும் பஞ்சாக்நிவித்யையெல்லாம் ஒன்றே, ப்ராணவித்யையெல்லாம் ஒன்றே, இப்படியே மற்றவித்யைகளையுமறிக என்று வ்யாஸபகவான் ஸித்தாந்தம் சொல்லுகிறார். ௧௫.

(ரா-ஹா.) இனி பரமாத்ம ப்ராப்திக்கு உபாயமான பக்தியை விசாரிக்கக் கோல் அதில் எந்தெந்த வித்யையில் எந்தெந்தகுணங்களையுடையவனாக உபாஸநம் செய்யவேணுமோ, அதை விசதமாக அறிவிப்பிக்கைக்காக, அந்தந்த ப்ரகரணங்களிற் சொன்ன வித்யைகளில் சிலவற்றுக்குப் பரஸ்பரம் பேதமுண்டென்றும் சில வற்றுக்கு இல்லையென்றும் நிர்ணயிக்கிறார்.—தஹரவித்யையென்பது சாந்தோக்யத்திலும் தைத்திரீயத்திலும் சொல்லப்பட்டது. இவ்விரண்டிடத்திலும் சொல்லப்பட்ட தஹரவித்யை வெவ்வேறா, அல்லது ஒன்றா என்று ஸம்சயம்.—வெவ்வேறு ப்ரகரணங்களில் சொல்லியிருக்கிறபடியால் வேறுவேறென்று பூர்வபக்ஷம்.—இரண்டிடத்திலும் சொல்லப்பட்டபோதிலும் தஹரவித்யை என்று பேர் ஒன்றாயிருக்கையாலும், இவ்விரண்டுக்கும் பரமாத்ம ப்ராப்தியாகிற பலம்ஒன்றாகையாலும், 'தஹரோஸ்மிந்நந்தராகாஶ:' என்றும், 'தஹ்ரம் விபாபம் பரவேஶ்மபூதம்' என்றும் இரண்டிடத்திலும் ஒரேவிதி ப்ரத்யயத்தினாற் சொல்லுகையாலும் இரண்டும் ஒன்றே; இப்படியே வைஶ்வாநராதி வித்யைகளிலும் கண்டுகொள்வது என்று ஸித்தாந்தம். ௧௫.

ஸூ-௨. பேதாந்நேதி சேந்நைகஸ்யாமபி.

(ஸ-ரா-பா.) பேதாத்-(ஒருபேதமின்றிக்கே இரண்டிடத்திற் சொல்லுகையாலே) பேதம் தோற்றுகையாலே (இரண்டும் ஒன்றன்று), ந இதி சேத்-என்றால், ந ஏகஸ்யாமபி - ஒரு வித்யையையே இரண்டுதரம் சொல்வதுண்டு. ௧௬.

(ஸ-ஹா.) இனி பூர்வபக்ஷியினுடைய ஒவ்வொரு யுக்தியையும் தனித்தனியே சொல்லிக் கழிக்கிறார்.—ஸாமசாகையிற் சொன்ன பஞ்சாக்நி வித்யையில், ஜீவன் ஸ்வர்க்கலோகத்தில் ஸுகமநுபவித்தபின் தன்னுடையபுண்யம்கழிந்தவாறே அங்கு நின்றும் நழுவி ஆகாசத்தில் காற்றுடன் சேர்ந்து அல்லாடுகிறான், பின்பு மேகத்தில்வந்து சேருகிறான், அதன்பின், மழை பெய்யும்போது அந்த தாரைவழியாக பூமியிலே விழுந்து தாந்யரூபமாகிறான், பிறகு அந்த தாந்யத்தை எந்த புருஷன் பக்ஷிக்கிறானோ, அவனுடைய சரீரத்தில்போய்ச் சேருகிறான், பின்பு, அவனுடைய ரேதஸ்ஸு வழியாக ஸ்த்ரீயினிடத்தில் சேருகிறான்; இப்படி ஜீவன் ஆகாசம் மேகம் பூமி புருஷன் ஸ்த்ரீ என்கிற ஐந்திடங்களில் இருக்குமிருப்பை யநுஸந்திக்கக்கடவன். இவ்வைந்திடங்களிலு மிருப்பு, அக்நியினிடையிலிருப்புப்போல் அதிதுஸ்ஸஹமாகையால் இவ்வைந்தையும் அக்நியென்று சொல்லுகிறது. இவ்விருப்பை அடிக்கடி மநநம் செய்தால் இந்த ஸம்ஸாரத்திலுள்ள பாதை நெஞ்சிற்பட்டு ஜீவனுக்கு வைராக்யம் பிறக்குமென்கைக்காக இந்த பஞ்சாக்நிவித்யையை உபாஸநம் பண்ணச்சொல்லிற்று. வாஜஸநேய சாகையில் இம்மாதிரியாகவே ஐந்தக்நிகளையும்சொல்லி "தஸ்யாக்நிரேவாக்நிர்பவதி" என்று ஆறாவதோ ரக்நியும் சொல்லப்பட்டது. இப்படி த்யாநிக்கவேண்டிய அக்நி ஒன்றில் ஐந்தாய் ஒன்றில் ஆறாய்விட்ட

படியால் இரண்டிடத்திற் சொன்ன பஞ்சாக்நி வித்யைகளும் ஒன்றுகமாட்டா. இப்படியே சாந்தோக்யத்திற் சொல்லப்பட்ட ப்ராணவித்யையில், ப்ராண ஸம்வாதத்தில் முக்யப்ராணன் தவிர மற்ற வாக், சக்ஷுஸ்ஸு, ஶ்ரோத்ரம், மநஸ்ஸு, என்று நாலும் த்யாநம் செய்யத்தக்கதாகச் சொல்லப்பட்டது. (அங்கு - வாக்கு, சக்ஷுஸ்ஸு, ஶ்ரோத்ரம், மநஸ்ஸு, முக்யப்ராணன், இவ்வைந்தும் உத்தாநம் பண்ணத்தொடங்கி, முக்யப்ராணன் தவிர மற்ற நாலுக்கும் ரஜோகுணமும் தமோகுணமுமுண்டாகையால் அந்நாலும் உத்தாநம் செய்ய யோக்யதை யற்றதுகளென்றும், முக்யப்ராணனுக்கு அத்தோஷ மில்லாமையால் அதுவே உத்தாநத்துக்கு யோக்யமென்றும் சொல்லி, பின்பு வாக்கு முதலியவை, தங்களிடத்திலிருந்த வஸிஷ்டத்வம், அதாவது - நல்ல சப்தங்களை யுச்சரிக்கை முதலிய ஒவ்வொரு குணங்களையும் முக்யப்ராணனுக்குக் கொடுத்ததுகளென்றும் சொல்லியிருக்கிறதுகளைதயைக் கண்டுகொள்வது) வாஜஸநேய சாகையில் அந்நாலுடன் ரேதஸ்ஸையும் சேர்த்து ஐந்தாகச்சொல்லியிருக்கிறது. ஆகையாலவை யொன்றுகமாட்டா, வெவ்வேறுகவே யாகவேணும் என்று இப்படி பூர்வபக்ஷி உபாஸநங்களின் ரூபபேதங்களைச்சொல்லி அவ்வவ இடங்களிற் சொல்லிய பஞ்சாக்நிவித்யை முதலானவை வெவ்வேறென்று சொன்னன்—வித்யை ஒன்றுயிருந்தபோதிலும் அதிலே ஓரிடத்திற்கோரிடம் சில பேதங்கள் சொல்லியிருந்தபோதிலும் அந்த வித்யை வெவ்வேறுகமாட்டாது. அப்படிப்பட்ட பேதமும் இங்கேகிடையாது. சாந்தோக்யத்திற்சொன்ன ஐந்தக்நியையே வாஜஸநேய சாகையிலும் த்யாநம் பண்ணச்சொல்லிற்று. ஆறுவது அக்நி த்யாநம் பண்ணுகைக்காகச் சொல்லப்பட்டதன்று. கீழ்ச்சொன்ன இவ்வைந்தும் அக்நியைப்போலே யிருக்கையால் இவற்றையக்நியென்கிறது என்றுகீழ்ச்சொன்னதை அநுவாதம் செய்கிறது. ஆகையால் பஞ்சாக்நிவித்யையில் பேதமில்லை. ப்ராண வித்யையிலும், சாந்தோக்யத்தில் ரேதஸ்ஸைச் சொல்லாவிடிலும், வாஜஸநேயத்தில் சொன்ன அந்த ரேதஸ்ஸை இங்கும் வைத்துக்கொள்ள வேண்டியதாகையால் இரண்டு ப்ராண வித்யைக்கும் பேதம் கிடையாது. என்று விஸ்தாரம் பண்ணுகிறார். ௩-௫௬.

(ரா-ஹா.) இரண்டிடத்திலும் சொன்ன வித்யை ஒன்றுகில், ஓரிடத்திற்சொன்னதே போதுமாயிருக்கும். ஓரிடத்தில் காட்டிலும் மற்றோரிடத்தில் அந்த வித்யைக்கு ஏதாவது விசேஷம் சொல்லியிருந்தால் ஒரேவித்யையை இரண்டிடத்தில் சொல்ல உபயோகமுண்டு. அப்படியின்றிக்கே இரண்டிடத்திலும் ஏகரூபமாய்ச் சொல்லியிருக்கையாலும் வெவ்வேறு ப்ரகரணங்களிற்சொல்லுகையாலும் இரண்டுக்கும் பேதமே தோற்று மாகையால் இரண்டுமொன்றன்று என்று பூர்வபக்ஷம். ஒரு வித்யையையே ஒருவனுக்காக ஒரு ப்ரகரணத்திலும், மற்றொருவனுக்காக ப்ரகரணாந்தரத்திலும் சொல்லக்கூடுமாகையால் இது வேறென்பதற்கு ஹேதுவாக மாட்டாது. ௩-௫௬.

ஸூ-௩-௫௭. ஸ்வாத்யாயஸ்ய ததாத்வேந ஹி ஸமாசாரேऽதிகாராச்ச ஸவவச்ச தந்நியம:.

(ஶ்ரு-ரா-ப்ர.) ஸ்வாத்யாயஸ்ய-வேதாத்யயநத்திற்கு, ததாத்வேந ஹி-ஸம்ஸ்கார விசேஷமுண்டாகைக்காகவன்றோ (ஶிரோவ்ரதம் சொல்லிற்று). ஸமாசாரே - ஸமாசாரம் என்கிற க்ரந்தத்தில், அதிகாராச்ச - சொல்லுகையினுலும், (இந்த வ்ரதம் வித்யாங்கமன்று, ஸவவச்ச - (ஸப்தஸௌர்யாதி) ஹோமம்போல, தந்நியம: - அந்த வ்ரதநியமமும். ௩-௫௭.

(ஸூ-ஹா.) கீழ்; வித்யைகளுக்கு ரூபபேத மில்லை யென்று சொல்லி, இதில் ஆசாரபேதமுமில்லையென்கிறார்—ஆதர்வணிகர்களுக்கு சிரோவ்ரதம் சொல்லியிருக்கிறது. சிரோவ்ரதமாவது - தலையில் நெருப்புச்சட்டியை வைத்துக்கொள்ளுகை. மற்றவர்களுக்கு அந்த வ்ரதம் சொல்லவில்லை. இப்படி வ்ரதம் பேதித்துப்போய் விட்டபடியால், அந்த வ்ரதத்துடன் செய்யவேண்டிய உபாஸநமும் அந்த வ்ரதமின்றியே செய்யவேண்டிய உபாஸநமும் ஒன்றாக மாட்டாது. என்றால் பூர்வபக்ஷி— ஆதர்வணிகர்கள் தங்கள்சாகையை அத்யயநம் செய்யும்போது சிரோவ்ரத மநுஷ்டிக்கவேண்டுமென்றே சொல்லிற்று. அப்படி அத்யயநத்துக்கு அங்கமாகச் சொல்லப்பட்ட அந்த வ்ரதம் உபாஸநத்துக்கு அங்கமாகமாட்டாததாகையால், அவர்கள் செய்யு முபாஸநத்திற்கும் மற்றவர்கள் செய்யுமுபாஸநத்திற்குப்போல் சிரோ வ்ரதம் அங்கமாக மாட்டாது. இதற்கொரு த்ருஷ்டாந்தம் — ஆதர்வணிகர்களுக்கு, ஸௌர்யாதி ஸவஹோமங்களை ஒரே அக்நியில் பண்ணச்சொல்லிற்று. மற்றவர்களுக்கு த்ரேதாக்நியில் பண்ணச்சொல்லிற்று. இப்படி இரண்டுவிதமாகச் சொல்லியிருந்தபோதிலும், ஏகர்ஷி ஸம்ஜ்ஞையையுடைய அக்நி ஆதர்வணிகர்களுக்கேசொல்லப்பட்டதாகையால், ஸௌர்யாதி ஹோமம் சொல்லுகிறவிடத்தில் அவர்களுக்குச் சொல்லப்பட்ட அக்நியிலேயே அவர்களுக்கு ஹோமம் செய்யச்சொல்லியிருக்கையால், அதை ஆதர்வணிகர்களே செய்யவேண்டும், மற்றவர்கள் த்ரேதாக்நியிலேயே செய்யவேண்டும் என்று நியமம் ஏற்பட்டிருக்கிறது. அதுபோலவே இந்த சிரோவ்ரதமும் அவர்களுடைய அத்யயநத்துக்கே வ்ரதமென்று கண்டுகொள்வது. இப்படி இரண்டிடத்திற் சொன்ன வித்யைக்கும் அங்கத்தில் பேதமில்லாமையால் அவ்விரண்டிடத்திலும் ஒரே வித்யைதான் சொல்லப்பட்டதென்று ஸித்தாந்தம்.

(ரா-ஹா.) முண்டகோபநிஷத்தில் ஆதர்வணிகர்களுக்கு அக்ஷர வித்யையைச் சொல்லிக் கடைசியில் அந்த வித்யைக்கு அங்கமாக சிரோவ்ரதம் என்கிற வ்ரதத்தை அநுஷ்டிக்கச்சொல்லிற்று. வாஜஸநேயத்தில்கார்கிப்ரச்நத்திலும் அக்ஷரவித்யை சொல்லப்பட்டிருக்கிறது. முன்சொன்ன சிரோவ்ரதம் ஆதர்வணிகர்களுக்கொழிய வாஜஸநேயிமுதலிய மற்றவர்களுக்கு அநுஷ்டிக்கக்கூடாது, ஆகையால் கார்கிப்ரச்நத்திற் சொன்ன அக்ஷரவித்யைக்கு சிரோவ்ரதம் அங்கமாகமாட்டாது. ஆதலால் முண்டகோபநிஷத்திற் சொன்ன அக்ஷரவித்யையும் கார்கிப்ரச்நத்திற் சொன்ன அக்ஷர வித்யையும் ஒன்றாகமாட்டாது என்று பூர்வபக்ஷம்—முண்டகோபநிஷத்தில் ஆதர்வணிகர் களுக்குச்சொன்ன சிரோவ்ரதம் அக்ஷர வித்யைக்கு அங்கமாகச் சொல்லவில்லை. ஸப்தஸூர்ய ஹோமங்களும், சதோதந கர்மமும் தாங்கள் செய்த வேதாத்யயநத்திற்கு ஒரு விதமான ஸம்ஸ்காரமுண்டாகைக்காகஆதர்வணிகர்களுக்கே விதித்தது. அதுபோலவே இந்த சிரோவ்ரதமும் (வேதாத்யயநத்திற்கே அங்கமாக விதிக்கப்பட்டது- இப்படியே ஸமாசாரமென்கிற க்ரந்தத்திலும் சொல்லிற்று. ஆகையால் இரண்டிடத்திற சொன்ன அக்ஷரவித்யைகளுக்கும் சிரோவ்ரதம் அங்கமன்று, ஆதலால் இரண்டிடத்திற் சொன்ன அக்ஷரவித்யையும் ஒன்று என்று ஸித்தாந்தம். (௩-௩-௩.)

ஸூ-௩-௩-௪. தர்சயதி ச.

(ஸூ-ரா-வ்.) தர்சயதி ச-வேதமும் இரண்டிடத்திற்சொன்னதுக்கும் அபேதத்தைக்காண்பிக்கிறது. ௩-௩-௪.

(ஸூ-ஹா,) "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" ஸமஸ்தவேதங்களும் எந்த ப்ரஹ்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறதுகளோ என்று நிர்குணப்ரஹ்மஸ்வரூப மொன்றையே ஸகலவேதங்களாலும் அறியத்தக்கதாக வேதம்சொல்லிற்று. இப்படி நிர்

குண ப்ரஹ்மம் ஏகரூபமாகையால் தத்விஷயமான ஜ்ஞாநமும் ஏகரூபமாயே யிருக்கும் என்று நிர்குண ப்ரஹ்மவித்யைக்யம் சொல்லி, பின்பு, ஸகுணப்ரஹ்மோபாஸநம் சொல்லுகையாலே, அவ்வுபாஸநத்திலும் எல்லா விடங்களிலும் அந்த ப்ரஹ்மத்தையே அறியத்தக்கதாகச் சொல்லியிருக்கையால், அவ்வுபாஸநமெல்லாம் ஏகரூபமே, பேதமிடையாது என்பது வேதஸம்மதமா யிருக்கும். (௩௫௮)

(ரா-ஹா.) தைத்திரீயத்தில், தஹராகாசத்திற்குள்ளுள்ளவைகளை உபாஸிக்க வேண்டுமென்று ஸாமாந்யமாகச் சொல்லிற்று; சாந்தோக்யத்தில் தஹராகாசத்திற்குள்ளுள்ள அபஹதபாப்மத்வாதி குணாஷ்டகங்களை உபாஸிக்கவேணுமென்று விசேஷித்துச் சொல்லிற்று. இவ்விரண்டும் ஒன்றானால்தான் ஓரிடத்தில் ஸாமாந்யமாகவும் ஓரிடத்தில் விசேஷமாகவும் சொல்லக்கூடும். மற்றப்படி கூடாதாகையால் இரண்டுமொன்று என்றே வேதத்தினால் நிச்சயிக்கப்படுகிறது. ௩௫௮.

ஸூ-௩௫௯. உபஸம்ஹாரோऽர்தா²பே⁴தா³த்³விதி⁴

ஶேஷவத்ஸமாநே ச.

(ஸூ-ரா-வ்யா.) ஸமாநே (ஸதி) - துல்யமான (ஒன்றான) வளவில் அர்தா²பே⁴தா³த் - விஷயத்துக்கு பேதமில்லாமையாலே, விதி⁴ஶேஷவத் - விதிக்கப்பட்ட வித்யைக்கு சேஷமான குணங்களைப்போல், உபஸம்ஹார: - உபஸம்ஹாரம் (மற்ற குணங்களுக்கும்) செய்யவேண்டியது. ௩௫௯.

(ஸு-ஹா.) பலவிடங்களிற் சொல்லப்பட்ட பஞ்சாக்நிவித்யைக்கு (இப்படியே மற்ற எல்லாவித்யைகளுக்கும்) பேதமுண்டா இல்லையா என்று விசாரித்து நிஷ்கர்ஷம் செய்கைக்கு ப்ரயோஜநம் சொல்லுகிறார்—சாந்தோக்யத்தில் பஞ்சாக்நி வித்யையில் சொல்லப்படாமல், வாஜஸநேயசாகையில் பஞ்சாக்நி வித்யையில் சொல்லப்பட்ட குணங்களையும்,வாஜஸநேயத்தில் சொல்லப்படாமல் சாந்தோக்யத்தில்சொல்லப்பட்ட குணங்களையும் எல்லாம் எல்லா பஞ்சாக்நிவித்யையில் அநுஸந்திக்கவேண்டும், அவ்விடத்திற்சொல்லவில்லை யென்றுசிலகுணங்களை விடக்கூடாது. அப்படியநுஸந்தியாவிடில்,அக்குணத்தையநு ஸந்திப்பதினால் அந்தஉபாஸநத்துக்கு உண்டாகிற அதிசயம்நேரிடாமற்போய்விடும்.இதுவே எல்லா சாகைகளையும்ஆராய்கைக்குபலம். இதற்கு உதாஹரணம் - அக்நிஹோத்ரமென்கிற கர்மத்தை யோரிடத்திற்சொல்லி அங்கு அதுக்குச்சில அங்கங்களைச்சொல்லி, மற்றோரிடத்தில் அந்த கர்மத்தை அநுவாதம்பண்ணி முன்புசொல்லாத இன்னும் சில அங்கங்களைச்சொன்னால் அந்த அங்கங்களையும்கூட முற்கூறிய அக்நிஹோத்ரத்திற்கு அங்கமாக அநுஷ்டிப்பதுண்டு; அதுபோலவே இங்கும் கண்டுகொள்க. ௩௫௯.

(ராஹா.) இப்படி நாநாவிடங்களிற் சொல்லப்பட்ட தகரவித்யைக்கும், அவ்வண்ணமாக, வைஶ்வாநரவித்யை அக்ஷரவித்யை சாண்டில்யவித்யைகளுக்கும் ஐக்யம் ஸித்தித்ததாகையால், அந்தவித்யையைச் செய்யவேணுமென்று விதிக்கிற ஒரு ப்ரகரணத்திலுள்ள வாக்யத்தில் அந்தவித்யைக்கு சேஷமாகச் சொல்லப்பட்ட குணங்கள் எப்படி அந்தவித்யையில் அநுஸந்திக்கப்படுகின்றனவோ, அப்படியே, ப்ரகரணாந்தரத்தில் அவ்வித்தையை விதிக்கிற வாக்யத்தில், முன்சொல்லப்படாத வேறு குணங்களை அநுஸந்திக்க விதித்திருந்தால் அக்குணங்களையுங்கூட அந்த வித்யையை யப்யஸிக்கிறவன் அநுஸந்திக்கக்கடவன். ௩௫௯.

அதி-௮௪. ஸூ-௩௬௦. அந்யதா²த்வம் ஶப்³தா³தி³தி

சேந்நாவிஶேஷாத்,

(ஸூ-பா-வ்ரு.) ஶப்தாத் - வாக்யத்தினாலே, அந்யதாத்வம் - பேதம் (தோற்றுகிறது), இதி சேத் - என்றால், அவிஶேஷாத் - விஶேஷமில்லாமையினாலே, ந - (பேதம்) கிடையாது. ௬.சுO.

(ஸ-ஹா.) இவ்வதிகரணத்தில் வித்யாபேதம் காண்பிக்கப்படுகிறது.—வாஜிஸநேயத்தில், "தே ஹ தேவா ஊசு: ஹந்தாஸுராந் யஜ்ஞ உத்கீதேநாத்யயாமேதி" என்று துடங்கி வாக்கு முதலானவற்றை ரஜோகுணத்தோடு கூடியதென்று நிந்தித்து, முக்யப்ராணனுக்கு இத்தோஷங்க ளொன்றுமில்லை யாகையால் அதுவேஶ்ரேஷ்டமென்று ஸ்தோத்திரம் செய்திருக்கிறது, அப்படியே சாந்தோக்யத்திலும் சொல்லியிருக்கிறது, இவ்விரண்டும் ஒன்ரு அன்ரு என்று விசாரிக்கில், வாஜிஸநேயத்தில் ஸம்பூர்ணோத்கீதம் உபாஸிக்கத் தக்கதென்றும் அந்த உபாஸநத்துக்குக்கர்த்தா ப்ராணனென்றும் சொல்லப்பட்டது. சாந்தோக்யத்தில், உத்கீதாவயவமான ஓங்காரம் உபாஸிக்கத்தக்கதென்றும் ப்ராணனை உத்கீதமாக உபாஸிக்கவேணுமென்று ப்ராணனை உத்கீதோபாஸநத்துக்குக் கர்மமாகவும் சொல்லப்பட்டது; இப்படிவெவ்வேறு விதமாகச் சொல்லியிருக்கையால் இரண்டிடத்திலும் வெவ்வேறு வித்யையே சொல்லப்பட்டதென்று ஸித்தாந்தி சொன்னதுக்குப் பதில், இப்படிசிலபேதங்கள் காணப்பட்டபோதிலும், இரண்டிடத்திலும், தேவாஸுரயுத்தம் ப்ராணப்ரசம்ஸை, வாக்குமுதலானவற்றை நிந்திக்கை, ரஜஸ்தமோ குணங்களாகிற அஸுரரை யழிக்கவேணுமென்கிற அபிப்ராயம். உத்கீத ப்ரஸ்தாவம், ப்ராணனை அவலம்பித்து அஸுரரை ஜயிக்கை முதலிய அனேக விஷயங்கள் ஒத்திருக்கையால் சாந்தோக்யத்தில் உத்கீ்ரபதத்திற்கு ஸம்பூர்ணோத்கீத பரமாக அர்த்தம்சொல்லியும் ப்ராணனை அங்குசொன்ன உத்கீதோபாஸநத்திலும் கர்த்தாவாக ஒப்புக்கொண்டும், இரண்டிடத்திலும் ஒரேவித்யை சொல்லப்பட்டதென்று அங்கீகரிக்கவேணும் என்று பூர்வபக்ஷிசொன்னன். (௬.சுO)

(ரா-ஹா.) இப்படி ஸாமாந்யமாக வித்யைகளுக்கு அபேதத்தைச் சொல்லி, இவ்வதிகரணத்தினுல், சாந்தோக்யத்திலும் வாஜிஸநேயசாகையிலும் சொல்லப்பட்ட உத்கீதவித்யைகளுக்கு பேதத்தை ஸ்தாபிக்கிருர். சாந்தோக்யத்தில் உத்கீதத்தில் ப்ராணத்ருஷ்டி செய்யவேணுமென்றும், அதுக்கு பலம் சத்ருநாசமென்றும் சொல்லிற்று. வாஜிஸநேயிகளும், உத்கீதத்தில் ப்ராணத்ருஷ்டி செய்யவேணுமென்றும், அதுக்கு சத்ருநாசம் பலமென்றும் சொன்னர்கள். இவ்விரண்டிடத்திலும் ஒரேவித்யை சொல்லப்பட்டதா,வெவ்வேறுவித்யையா என்று ஸம்சயம்.—சாந்தோக்யத்தில் உத்கீதத்திலும், மற்ருரிடத்தில் உத்கீதத்தை கானம் செய்கிற உத்காதாவினிடத்திலும் ப்ராணத்ருஷ்டி செய்யச்சொல்லுகையாலே இரண்டிடத்திலும் வெவ்வேறுவித்யை விதிக்கப்பட்டதென்று சங்கிக்கவேண்டா. ஆரம்பத்தில் இரண்டிடத்திலும் உத்கீதம் என்று ஆரம்பித்திருக்கையாலேயும் ப்ராணத்ருஷ்டியும், பலமும் ஒன்ருயிருக்கையாலேயும் இரண்டுமொன்றே என்றும், உத்கீதத்தையே உத்காதாவென்று லக்ஷணையாகச் சொல்லிற்றென்றும் கொள்ளவேணும் என்று பூர்வபக்ஷம். ௬.சுO.

ஸூ-உ-௬ுக. ந வா ப்ரகரணபேதாத் பரோவரீயஸ்த்வாதிவத்.

(ஸூ-பா-வ்ரு.) ப்ரகரணபேதாத் - (இரண்டிடத்திலும்) ப்ரகரணம் வேருகையாலே, ந - (ஒன்றென்பது) கூடாது. பரோவரீயஸ்த்வாதிவத் - மற்றசேதநரைக்காட்டிலும் ஶ்ரேஷ்டனை ப்ரஹ்மாவுக்கும் ஶ்ரே

ஷ்டட்டனுயிருக்கையாகிற குணம்முதலியவை வித்யைகளுக்கு எப்படிபேத ஜநகமாயிற்றே?) (அப்படியே, இங்கும்கண்டுகொள்க. கசுக.

(ஸு-ஹா.) பூர்வபக்ஷியினுடைய மதத்தில், சாந்தோக்யத்தில் இந்தவித்யையின் ஆரம்பத்தில் ஓங்காரத்தைப் புகழ்ந்து, உத்கீதாவயவமான அந்த ஓங்காரமாக ப்ராணனை உபாஸிக்கவேணுமென்று சொல்லுகையாலே இதைஸம்பூர்ணோத்கீத விஷயமென்று எவ்விதத்திலும் சொல்ல முடியாது. அப்படி ஒப்புக்கொள்ளில் உபக்ரமவிரோதமும், கர்மமாகச்சொன்னதைக் கர்த்தாவாகச் சொன்னுல் லக்ஷணு தோஷமும்வரும்.வாஜிஸநேயத்திற்சொன்ன உத்கீதபதத்திற்கு உத்கீதாவயவமான ப்ரணவமாக அர்த்தம் சொல்லி இரண்டையும் ஒன்ருக்குவோ மென்ருலும், அப்படி ஸங்கோசம் செய்யஹேது வொன்றும் காணவில்லை. மேலும், சாந்தோக்யத்தில் ஓங்காரம் உபாஸ்யம், வாஜிஸநேயத்தில் ப்ராணன் உபாஸ்யம். இப்படி பலவிதமான விரோதங்களுண்டாகையால் இரண்டும் ஒன்ருகமாட்டாது. இதற்குஉதாஹரணம்-சாந்தோக்யத்திலேயே, ஓரிடத்தில்உத்கீதாவயவமான ஓங்காரத்தை ஆகாசஸ்வரூபமாகவும், மற்ருேரிடத்தில் “ஹிரண்யஸ்மச்ரு ஹிரண்யகேச:” என்றுசொல்லப்பட்ட ஸூர்யமண்டலமத்யவர்தியான புருஷஸ்வரூபமாகவும் உபாஸநய பண்ணச் சொல்லிற்று, அவ்விரண்டிடத்திலும் உத்கீதோபாஸந மென்ற பெயரும் உத்கீதாவயவமான ஓங்காரமும் மற்றும் அநேகதர்மங்களும் ஒன்ருயிருந்தபோதிலும், அந்த ஓங்காரத்தில் பண்ணவேண்டிய அபிஸந்தி பேதத்தினுல் இரண்டு வித்யையும் பேதித்திருக்கும்.அப்படியே இங்கும்கண்டுகொள்வது.(கசுக)

(ஸா-ஹா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிருர்.—முதலிலே உத்கீதத்தையே இரண்டிடத்திலும் உபாஸ்யமாகச்சொல்லியிருந்தால் அப்படி கொள்ளலாம். அதுவேஇல்லை. எனென்னில், சாந்தோக்யத்தில், உத்கீதாவயவமான ப்ரணவத்தையும், மற்ருேரிடத்தில்உத்கீதத்தையும் உபாஸ்யமாகச்சொல்லுகையாலேஆரம்பத்திலேயேபேதித்துவிட்டது.—இதற்குதாஹரணம் ஒருப்ரணவத்திலேயே ஓரிடத்தில் ஹிரண்யமய விக்ரஹவிசிஷ்ட புருஷத்ருஷ்டியும், மற்ருேரிடத்தில்,பரோவரீயஸ்த்வகுணவிசிஷ்ட புருஷத்ருஷ்டியும் விதித்தவிடங்களில் அவ்விரண்டிடமும் எப்படி வெவ்வேறுவிஷயமென்று அங்கீகரிக்கப்படுகிறதோ,அப்படியே இங்கும்ஆரம்பத்தில் ஓரிடத்தில் ப்ரணவத்தையும், மற்ருேரிடத்தில் உத்கீதத்தையும் சொல்லுகையாலே அநந்தரத்திலும், ஓரிடத்தில் உத்கீதத்திலும் மற்ருேரிடத்தில் உத்காதாவினிடத்திலும் ப்ராணத்ருஷ்டி விதித்ததென்று வெவ்வேறு விஷயமாகச் சொல்வது யுக்தமாய் ப்ரகரணம் பேதித்தபடியாலே இரண்டு வித்யையும் வெவ்வேருகக் கொள்ளவேணுமென்று ஸித்தாந்தம். கசுக.

ஸூ-கசுஉ. ஸஂஜ்ஞாதஶ்சேத்தது௱க்தமஸ்தி து தத்.

(ஸு-பா-வ்ய.) ஸஂஜ்ஞாத: - பேரினுடைய அபேதத்தினுல் (இரண்டுக்குமொரு பேராயிருக்கையால்), தத் - அந்தவித்யை ஒன்று, (என்று) உக்தம் - சொல்லப்பட்டதேயானுல், தத்து - அந்தநாமைக்யமும், அஸ்தி - வெவ்வேறுவித்யைகளுக்கு முண்டு. கசுஉ.

(ஸு-ஹா) நாநாஸ்தலங்களில் சொல்லப்பட்ட வித்யைகளுக்கு பஞ்சாக்நிவித்யையென்ற பெயர் ஒன்ருயிருப்பதைப்பற்றி அவ்வித்யைகளுக்கு பேதமில்லையென்றதுபோல் இங்கும் உத்கீத வித்யையென்கிற பெயர் ஒத்திருப்பதினுல் இரண்டுவித்யையும் ஒன்ருகலாமேயென்னில்;—வேறுபாதகமில்லாத விடத்தில்பெயர் ஒன்ருயிருந்தால் இரண்டும் ஒன்ருகலாம். இங்குகீழ்ச்சொன்ன பலவிதமான

விரோத முண்டாகையால் ஒன்ருகக்கூடாது. தர்சபூர்ணமாஸம் அக்நிஹோத்ரம் என்கிற இரண்டுகர்மங்கள் வெவ்வேருயிருந்த போதிலும் அவ்விரண்டுக்கும் காடகம் என்ற பெயர் ஒன்ருயிருப்பது போல் இங்கும் கண்டுகொள்வது, (கூசுஉ)

(ரா-ஹா.) சாந்தோக்யத்திலும் வாஜிஸநேயத்திலும் இந்த வித்யையை உத்கீதமென்று நாமத்தையிட்டுச் சொல்லுகையாலே இரண்டுமொன்றே யாகவேண்டுமென்று பூர்வபக்ஷம்.—அக்நிஹோத்ரமென்கிற கர்மம் நித்யாக்நிஹோத்ரமென்றும் அயநாக்நிஹோத்ரமென்றும் இரண்டுவிதம். நித்யாக்நிஹோத்ரமாவது - நித்யம் செய்யத்தக்கது. அயநாக்நிஹோத்ரமாவது - குண்டபாயிகள் அயனந்தோறும் பண்ணுகிறது. இவ்விரண்டுக்கும் பேர் ஒன்ருயினும் கர்மம் வெவ்வேருயே யிருக்கிறது.சாந்தோக்யத்தில் ப்ரதமப்ரபாடகத்தில் அநேகவிதமாகச் சொல்லப்பட்ட உத்கீதவித்யைகளில்பெயர் ஒன்ருயினும் பரோவரீயஸ்த்வம்முதலியகுண விசிஷ்டனை பரமபுருஷத்ருஷ்டியுக்தமான உத்கீதவித்யையும், ஹிரண்மயஶ்மஶ்ரு விசிஷ்டபுருஷத்ருஷ்டியுக்தமான உத்கீதவித்யையும் பிந்நபிந்நங்களாகின்றன. அதுபோல் இங்கும் ப்ரணவத்தில் ப்ராணத்ருஷ்டி யுக்தமான சாந்தோக்யத்திற் சொன்ன உத்கீதவித்யையும், வாஜிஸநேயத்திற் சொன்ன உத்காதாவிடத்தில் ப்ராணத்ருஷ்டியுக்தமான உத்கீத வித்யையும் வெவ்வேறென்று ஸித்தாந்தம். கூசுஉ.

ஸூ-கூசுக. வ்யாப்தேஶ்ச ஸமஞ்ஜஸம்.

(ஶ-ரா-வ்யா.) வ்யாப்தேஶ்ச - வ்யாப்தியினுலும், ஸமஞ்ஜஸம் - (கீழ்ச்சொல்லப்பட்ட அர்த்தம்) யுக்தியுக்த மாகிறது. கூசுக.

(ஶ-ஹா) "ஓமித்யேததக்ஷரமுத்கீதமுபாஸீத" உத்கீதமாகிய ஓங்காரத்தை உபாஸநம் செய்யவேண்டியது என்று சொல்லியிருக்கிறது. உத்கீதமாகிய ஓங்காரம் என்று ஒன்றை விசேஷணமாகவும் மற்ருென்றை விசேஷ்யமாகவும் சொன்னுல் இதற்கு ஸாமாநாதிகரண்யம் என்றுபெயர். அதாவது இரண்டுபதமும் சேர்ந்து ஒன்றைச்சொல்லுகிற தென்றர்த்தம். இந்தஸாமாநாதிகரண்யம் அத்யாஸம், அபவாதம். ஏகத்வம், விசேஷணம் என்றநாலிடத்திலும் வரும். அதில் அத்யாஸமாவது - இவ்வஸ்து அவ்வஸ்துவன்றென்று தெரிந்திருக்கச் செய்தேயும் இதை அவ்வஸ்து வாகபாவிக்கை; ப்ரதிமையில் விஷ்ணுவை த்யாநிக்கை அத்யாஸமாம். அபவாதமாவது-முன்னம் ப்ராந்தியினுலுண்டாய், பின் யதார்த்த ஜ்ஞாநத்தினுல் பாதிக்கப்படுமேது; முன்புதேகத்தையேஆத்மாவாக எண்ணியிருந்து, பின்பு சாஸ்திரத்தில் ஆத்மாவென்று வேருெருவனுண்டென் றறிந்து முன்புன்டான தேகமே ஆத்மாவென்கிற ஜ்ஞாநம்போகை அபவாதமாம். ஏகத்வமாவது-இரண்டு மொன்றே யாயிருக்கை; ப்ராஹ்மணேத்தமன் த்விஜோத்தமன் என்பது ஏகத்வமாம். விசேஷணமாவது — ஸஜாதீயமான மற்ருெரு வஸ்துவில் நின்றும் வேறுபடுத்திக்காட்டுகை. சிவந்த தாமரைப்பூவைக் கொண்டுவா வென்பது விசேஷண மெனப்படும். இந்நாலில் இங்கு எதுவாக அங்கீகரிக்க வேணுமென்னில், அத்யாஸ பக்ஷத்தில், உத்கீத சப்தத்திற்கு ஓங்காரத்தில் லக்ஷணை சொல்லவேண்டுகையாலும், அபவாதபக்ஷத்தில், இரண்டில் ஏதோஒன்று ப்ரமமாக வேண்டுகையாலும், ஏகத்வபக்ஷத்தில், ஒரேசப்தத்தினுல் சொல்லவேண்டி யிருக்க இரண்டு சப்தத்தை யிட்டுச்சொல்வது வ்யர்த்தமாகையாலும், இம்மூன்று பக்ஷங்களும் சரியன்று; விசேஷணபக்ஷமே இங்கு வேண்டுவது. ஓங்காரத்தை உபாஸநம் செய்யவேணுமென்ருல், ஸகல வேதங்களிலுமுள்ள ஓங்காரங்களெல்லாம் தோற்றும்; அதற்காகஅவற்றில்உத்கீதாவயமாகிய ஓங்காரத்தை உபாஸிக்கவேணுமென்று

மற்ற ஓங்காரங்களைநீக்கி இதைமாத்திரம் சொல்ல வேண்டுமாகையால் இப்பக்ஷமே சரியானது. ௩௫௩.

(ஶ்ரீ-பா.) சாந்தோக்யத்தில் ப்ரதமப்ரபாடகத்தில் ஆரம்பத்திலும், மேல் எல்லா இடங்களிலும் உத்கீதமென்று உத்கீதாவயவமான ப்ரணவத்தையே சொல்லுகையாலே, நடுவில் ப்ராணத்ருஷ்டிக்கு விஷயமாகச்சொல்லப்பட்ட உத்கீதமும் உத்கீதாவயவமான ப்ரணவமே யாகவேணும் ஆகையால் இரண்டிடத்திற் சொல்லப்பட்ட வித்யைகளும் பரஸ்பரம் பிந்நங்களென்று ஸித்தாந்தம். ௩௫௩.

௩௰-அதி. ஸூ-௩௫௪. ஸர்வாபேதாதந்யத்ரேமே.

(ஶ்ரு-ப்ர-வ்ரு.) ஸர்வாபேதாத் - ஜ்யைஷ்ட்ய ஶ்ரைஷ்ட்யாதிஸகலாம்சங்களிலும் பேதமில்லாமையாலே, அந்யத்ர - வேறான (கௌஷீதகியிற்சொல்லப்பட்ட) ப்ராணவித்யையிலும், இமே - இந்த வஸிஷ்ட்டத்வாதி குணங்கள், (அநுஸந்தேயங்கள்.) ௩௫௪.

(ஶ்ரு-ஸா.) வாஜஸநேயத்திலும் சாந்தோக்யத்திலும் ப்ராணவித்யையில்முக்ய ப்ராணனுக்குவாக்கு,ஸுகவாஸத்துக்குஹேதுவாகியவாசாலத்வமாகிய தன்னுடைய வஸிஸ்ட்டத்வத்தையும்,சக்ஷுஸ்ஸு,நல்லஇடத்தில் அடிவைப்புக்குக்காரணமாகிய தன்னுடையப்ரதிஷ்ட்டாத்வத்தையும், ஶ்ரோத்ரம், ஸம்பத்துக்குக் காரணமாகிய தன்னுடைய ஸம்பத்வமென்கிற குணத்தையும்,மநஸ்ஸு,ஸர்வபோக்ய வஸ்துக்களையும் அடைகைக்குக்காரணமாகிய தன்னுடைய ஆயதநத்வமென்கிற குணத்தையும் கொடுத்ததாகச்சொல்லியிருக்கிறது.கௌஷீதகியில் சொன்ன ப்ராணவித்யையில் இதுசொல்லவில்லை. ஆகையால் இவ்விரண்டும்ஒரேவித்யையா, அல்லதுவெவ்வேறு என்று ஸம்சயமுதிக்கிறது. கௌஷீதகியில் ப்ராணனுக்குச் சில குணங்களைச் சொல்லி, பின்பு, "இவ்விதமாகவே ப்ராணனை த்யாநம் பண்ணவேணும்" என்கையால் இந்த உபநிஷத்தில் சொன்ன ப்ராணவித்யையில், மற்ற இரண்டு உபநிஷத்துக்களில் சொன்ன வஸிஷ்ட்டத்வாதி குணங்களை அநுஸந்திக்கக்கூடாதென்று ஏற்படுகிறது, ஆகையால் இந்தப்ராணவித்யை அதைக்காட்டிலும் வேறாகவேணுமென்று பூர்வபக்ஷிசொன்னான்—சக்ஷுராதிகளை நிந்திக்கை, ப்ராணனை ஸ்துதிக்கை முதலிய குணங்களெல்லாம் அங்குமிங்கும் ஒன்றாயிருக்கையாலும் இரண்டு ப்ராணவித்யையும் ஒன்றுதான். இரண்டிடத்தில் சொல்லப்பட்ட ப்ராணவித்யையும் ஒன்றானபின்புகௌஷீதகியில் ப்ராணனுக்குச்சிலகுணங்கள் சொல்லாவிடினும் அதற்கக்குணங்கள் இல்லாமற்போகாது. தேவதத்தனென்பவன் ஓரூரில் வெகு சௌர்ய வீர்யமுள்ளவனாக ப்ரஸித்தனாயிருக்கிறான். மற்றோரூரில் அவனுக்குள்ள குணங்களை யொருவருமறியார்கள்; அதினாலவனுக்கு அக்குணங்களில்லாமற் போகாது. சிலகாலம் கழிந்தபின் க்ரமக்ரமமாக அவனோடு பரிசயம்பண்ணி அக்குணங்களையறிகிறார்கள். அதுபோலவே கௌஷீதகியில் சொல்லாத குணங்களையும் சாகாந்தரங்களில் விசாரித்து ப்ராணனுக்கறியவேண்டும்,ஆகையால் வித்யாபேதம் கிடையாது என்று ஸித்தாந்தம். ௩௫௪.

(ஶ்ரீ-பா.) "ப்ராணோ வாவ ஜ்யேஷ்ட்டஶ்ச ஶ்ரேஷ்ட்டஶ்ச" இத்யாதியாக சாந்தோக்யத்திலும் வாஜஸநேயத்திலும், கௌஷீதகியிலும் ப்ராணவித்யை சொல்லப்பட்டது. அவற்றில் சாந்தோக்ய வாஜஸநேய சாகைகளில் ஜ்யைஷ்ட்யஶ்ரைஷ்ட்யகுண யுக்தமாகவும், வாகாந்த்ரியங்களுக்குள்ள வஸிஷ்ட்டத்வாதிகுணங்களுக்கு ஹேதுவாகவும் ப்ராணனை உபாஸிக்கச்சொல்லிற்று. கௌஷீதகியில் முன்பிரண்டு குணங்களையுடையதாகவே ப்ராணனை உபாஸிக்கச்சொல்லிற்று. மூன்று

வது குணத்தைச்சொல்லவில்லை. ஆகையால் அவ்விரண்டு சாகிகர் சொல்லுகிற ப்ராணவித்யைக்கும், கௌஷீதகியிற் சொன்ன ப்ராணவித்யைக்கும் பேதமுண்டா இல்லையா என்று ஸம்சயம்.—முன்பிரண்டில் வஸிஷ்டத்வாதி குணஹேதுவாக ப்ராணனை உபாஸிக்கச் சொல்லுகையாலும், கௌஷீதகியில் இவ்விசேஷணத்தை உபாஸ்யமான ப்ராணனில் அநுஸந்திக்கச் சொல்லாமையாலும், உபாஸ்யமான ப்ராணனில் அநுஸந்தேயமானகுணங்கள் ந்யூநாதிகங்களாகச்சொல்லியிருக்கையாலேஇரண்டும் பிந்நபிந்நங்களென்று பூர்வபக்ஷம்.—ஜ்யைஷ்ட்யமாவது-மற்ற இந்த்ரியங்களுடைய ஸ்த்திக்கு ஹேதுவாயிருக்கை ; ப்ராணனில்லாவிடில் மற்ற இந்த்ரியங்கள் தரிக்கமாட்டாமையாலே. ஶ்ரைஷ்ட்யமாவது - அவற்றின் கார்யங்களுக்கு ஹேதுவாயிருக்கை ; ப்ராணனில்லாவிடில் அவை ஒன்றையும்செய்ய யோக்யதையற்றவைகளாகையாலே. வாக்குக்கு வஸிஷ்டத்வமாவது - வ்யவஹாராதி ரூபமான ஸ்வகார்யங்களைச் செய்கையிலுள்ள ஸாமர்த்யம். அதுக்கு ஹேதுவாவது-காரணமாயிருக்கை. ஆக-கௌஷீதகியில் ஜ்யைஷ்ட்ய ஶ்ரைஷ்ட்யங்களைச்சொன்னபோதே வஸிஷ்டத்வாதி ஹேதுத்வமும் சொல்லிற்றேயாம். எங்ஙனே யென்னில், அவ்வவ இந்த்ரியங்களிலுள்ள கார்ய ஜநநயோக்யதைக்குக் காரணமாயிற்றல்லது அவற்றின் கார்யங்களுக்குக் காரணமாகமாட்டாதாகையால் அவ்விரண்டையும் சொன்னபோதே இதுவும் ஸித்தமாகையால் கௌஷீதகியிலும் ப்ராணனை வஸிஷ்டத்வாதி ஹேதுவாக உபாஸிக்கச்சொல்லிற்றென்று தாத்பர்யம் கற்பிக்க வேண்டும். ஆக, சாந்தோக்யாதியிற் சொன்ன வித்யைக்கும் இதுக்கும் உபாஸ்ய விஷயத்திலும் குணவிஷயத்திலும் பேதமில்லையாகையால் இரண்டும் ஒன்றே என்பது ஸித்தாந்தம்.

௱சுச.

ஆநந்தாதய꞉ ப்ரதாநஸ்ய ॥ ௩-௩-௧௧ ॥

(ஶ-ரா-ப்ர.) ப்ரதாநஸ்ய - முக்யமான (குணியான) பரமபுருஷனுக்கு, (அபேதாத் - பேதமில்லாமையால்), ஆநந்தாதய꞉ - ஆநந்தம் முதலியகுணங்கள், (ஸர்வவித்யைகளிலும் அநுஸந்திக்கத்தக்கவைகள்) ௧௧.

(ஶ-ஹா.) உபநிஷத்துக்களில் பரஸ்வரூபத்தை நிரூபிக்கிற அந்தந்த இடங்களில் சிலவிடத்தில் ப்ரஹ்மம் ஆநந்தரூபமென்றும், மற்றோரிடத்தில் ஜ்ஞாநஸ்வரூபமென்றும், ஸர்வவ்யாபியென்றும், வேறோரிடத்தில், ஸர்வாத்மக மென்றும், இப்படி ஒவ்வோரிடத்தில் ஒவ்வொருப்ரஹ்ம தர்மங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. ப்ரஹ்மமோ நிர்குணம், அதில் ஒருதர்மமும் கிடையாது; ஆகையால் பலவிடங்களிற் சொல்லிய ஆநந்தத்வம் ஜ்ஞாநத்வம் ஸர்வகதத்வம் முதலிய குணங்களை ஒவ்வோரிடத்திலும் அநுஸந்திக்க ப்ரயோஜநமில்லை. ஆயினும் கீழ்ஸூத்திரத்தில் தேவதத்தனை த்ருஷ்டாந்தமாக்கி உபபாதித்தபடியே இங்கும் ப்ரஹ்மம் ஒன்றேயாகையால், இவ்விடத்திற் சொல்லாமல் வேறிடங்களிற் சொல்லியிருக்கிற குணங்களையும்கூட இவ்விடத்தில் அநுஸந்திக்கவேண்டியது ந்யாயமாயிருக்கிறது. இவ்விரண்டு பக்ஷத்திலும் எது யுக்தமென்னில்;—ப்ரஹ்மம் நிர்குணமென்பது ஸத்யம், அதில் ஆநந்தத்வம் முதலிய குணங்கள் கிடையாதுதான், ஆயினும் ஆநந்தமென்றும் ஜ்ஞாநமென்றும் ஸர்வகதமென்றும் இப்படி ஒவ்வோரிடங்களிலும் ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிற ஆநந்தாதிஸகல சப்தங்களையும் எல்லா விடங்களிலும் அநுஸந்திக்கவேணும். அப்போதும் ஆநந்தாதி பதங்கள் ப்ரஹ்மத்துக்கு ஆநந்தத்வாதி குணங்களைச் சொல்லுகிறதில்லை. ப்ரஹ்மம் ஆநந்தஸ்வரூப மென்பதினால் அந்தப்ரஹ்மம் துக்கஸ்வரூபமன்றென்றும், ஜ்ஞாநஸ்வரூப மென்பதினால் ஜடமன்றென்றும், ஸத்யமென்பதினால் பரிணாமியன்றென்றும், இப்படி அந்தந்த ஆநந்தாதி

தர்மங்களுக்கு விரோதியாகிய துக்கம் முதலிய தர்மங்களையுடைத்தாகாதது ஸர்வவிலக்ஷணம் என்றே தோற்றுகிறது. இப்படி ஸர்வ விலக்ஷணமென்றே ப்ரஹ்மஸ்வரூபம் எல்லாவிடங்களிலும் தோற்ற வேண்டுமாகையாலே, இப்படிவிலக்ஷணமான ப்ரஹ்மஸ்வரூபத்துக்கு ப்ரதிபாதகங்களாகிய ஸத்ய ஜ்ஞாந ஆநந்தாதி ஸகலசப்தங்களினால் சொல்லப்பட்ட கீழ்ச்சொன்ன ஸகலகுணங்களையும் ஸர்வத்ர அநுஸந்திக்க வேண்டியதென்கிறார். ௩௬

(ரா-ஹா.) ஆநந்தத்வம், ஜ்ஞாநத்வம், அநந்தத்வம், அமலத்வம், ஸ்ரீயஃபதித்வம் ஆகிய இக்குணங்கள் ஸமஸ்தவித்யைகளிலும் உபாஸ்யனான பரமபுருஷனிடத்தில் அநுஸந்திக்கத்தக்கதா, அன்று என்று ஸம்சயம்.—அந்தந்த வித்யாப்ரகரணங்களில் இக்குணங்களைச் சொல்லாமையாலும், அப்ப்ரகரணத்தில் சொல்லாத மற்ற எல்லாக் குணங்களையும்அநுஸந்திக்கவேண்டுமாகில் அக்குணங்கள் அநந்தமாகையாலே அநுஸந்திக்கமுடியாதாகையாலும் மற்றஅக்குணங்களோடு துல்யமான ஆநந்தத்வாதிகுணங்களும் எல்லாவித்யைகளிலும்அநுஸந்திக்கவேண்டியதில்லை என்று பூர்வபக்ஷம்—கீழ்ச்சொல்லிய இந்த நாலுகுணங்களும் ப்ரஹ்மஸ்வரூப நிரூபகங்கள், இவை தோற்றாவிட்டால் ப்ரஹ்மஸ்வரூபம் தோற்றாது. ஸமஸ்தவித்யைகளிலும் உபாஸ்யமான பரமாத்மஸ்வரூபமொன்றே யாகையாலே உபாஸ்யஸ்வரூபம் அந்தந்த வித்யைகளில் தோற்றுகைக்காக அந்தந்தப்ப்ரகரணங்களில் அநுக்தங்களாயினும் இந்நாலு குணங்களும் அவஶ்ய மநுஸந்தேயங்கள். அப்ப்ரகரணத்திற் சொல்லாத மற்றகுணங்கள் ப்ரஹ்மஸ்வரூபநிரூபகங்களல்லாமையால் அவற்றை யநுஸந்தியாவிடிலும் ப்ரஹ்மஸ்வரூபம் தோற்றத்தட்டில்லை என்று ஸித்தாந்தம். ௩௬.

ஸூ-௩௭. ப்ரியஶிரஸ்த்வாத்யப்ராப்திருபசயாபசயௌ ஹி பேதே.

(ஸ-ரா-ப்ர.) ப்ரியஶிரஸ்த்வாத்யப்ராப்திஃ - ப்ரியசிரஸ்த்வம் முதலிய குணங்களுக்கு (ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்க) ப்ராப்தியில்லை. பேதே - (சிரஸ்ஸென்றும் பக்ஷமென்றும்) பேதம் ப்ரஹ்மஸ்வரூபத்திற் கங்கீகரிக்கில், உபசயாபசயௌ-வ்ருத்திஹ்ராஸங்கள் ஸம்பவிக்கும். ௩௭.

(ஸ-ஹா.) இப்படி ஆநந்தாதிகளை எல்லாவிடங்களிலும் அநுஸந்தித்த போதிலும், "தஸ்ய ப்ரியமேவ ஶிரஃ | மோதோ தக்ஷிணஃ பக்ஷஃ | ப்ரமோத உத்தரஃ பக்ஷஃ" என்று தைத்திரீயத்தில் சொல்லப்பட்ட ப்ரியம்மோதம் ப்ரமோதம் என்கிற ஸகுணப்ரஹ்மத்தின் தர்மமாகிய இவைகள் எல்லாவிடங்களிலும் அநுஸந்திக்கப்படமாட்டாது. ப்ரியமென்பது - புத்ரதர்ஶநத்தினாலுண்டான ஸுகம். அதைக்காட்டிலும் மேலான மோதமாவது - அப்பிள்ளையினுடைய சொலவுகளையும் செய்கைகளையும் கண்டு களிக்கிற களிப்பு, அதைக்காட்டிலும் மேலான ப்ரமோதமாவது - அந்த குமாரனுடைய வித்யை புத்தி சௌர்யம் முதலிய குணங்களைக் கண்டு உண்டாகு மாநந்தம். இப்படி அக்குணங்கள் ஒன்றுக் கொன்று தாரதம்யத்தை யடைந்திருக்கும். இவ்வளவே யன்றிக்கே, ஒருவனுடைய ப்ரியமோதாதிகள் மற்றொருவனுடைய ப்ரியமோதாதிகளைக் காட்டிலும் கீழ்ப்பட்டதாகவும், வேறொருவனுடைய ப்ரியமோதாதிகளைக்காட்டிலும் மேற்பட்டதாகவுமாயிருக்கும். இப்படி தாரதம்யமுள்ள குணங்கள் ஸகுணப்ரஹ்மத்துக்கே யுள்ளது. அகண்டைகரூபமாகிய நிர்குண ப்ரஹ்மத்துக்குக்கிடையாது. இந்தகுணங்களை யநுஸந்திப்பதினால் அகண்டாகாரமாகிய நிர்குணப்ரஹ்மத்தினுடைய ஜ்ஞாநத்திற்கு யாதொரு உபயோகமுமில்லை. மேலும் இவை கோசதர்மமென்றும்

ப்ரஹ்மதர்ம மன்றென்றும் கீழே ஆநந்தமயாதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. ஆகையால் ஆநந்தாதிகளைப்போல் ப்ரியமோதாதிகளை எல்லாவிடங்களிலு மநுஸந்திக்கவேண்டுவதில்லை. இதனால் ஸம்யத்வாமத்வாதி குணங்களும் ஸத்ய காமத்வாதி குணங்களும்கூட எல்லா இடங்களிலும் அநுஸந்திக்கவேண்டியதில்லை; எந்தவிடத்தில் எந்தகுணம் சொல்லியிருக்கிறதோ, அந்த குணத்தை அந்த வித்யையில் மாத்திரம் அநுஸந்திக்கவேணுமென்று சொல்லிற்றாயிற்று. ௩௬.

(ஶ்ரீ-ஹா.) கீழ்ச்சொன்ன நாலுகுணங்களும் ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கவேண்டியவையானாலும் சிரஸ்ஸாகவும் பக்ஷங்களாகவும் நிரூபிக்கப்பட்ட ப்ரியத்வ மோதத்வ ப்ரமோதத்வகுணங்கள் ப்ரஹ்மஸ்வரூப தர்மங்களல்லாமையாலே ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கக்கூடாது. அப்படி நிரூபித்தப்ரகாரம் சிரஸென்றும் பக்ஷமென்றும் இத்யாதி பேதங்கள் ப்ரஹ்மஸ்வரூபத்துக்கங்கீகரித்தால் பரிச்சிந்நமான சிரஸ்ஸு முதலிய அவயவங்களுக்குப்போல் அகண்டமான ப்ரஹ்மஸ்வரூபத்துக்கும் ஸங்கோசவிகாஸாதிவிகாரங்கள் ப்ரஸங்கிக்கும். அப்போது அவிகாரஶ்ருதியோடு விரோதிக்குமாகையால் ப்ரியத்வாதிகள் ப்ரஹ்மஸ்வரூப தர்மங்களுமன்று. அவற்றை ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கவும் கூடாது. ௩௬.

ஸூ-௩௭. இதரே த்வர்த்தஸாமாந்யாத்.

(ஸு-ஶ்ரீ.வ்ரு.) அர்த்தஸாமாந்யாத் - பரமாத்மஸ்வரூபத்தோடு துல்யமாகையாலே, இதரே து - மற்ற ஆநந்தாதிகுணங்கள், (ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கப்படும். ௩௭.

(ஸு-ஹா.) அகண்டாகாரமாகிய ப்ரஹ்மஸ்வரூபத்தை எல்லாவித்யைகளிலும் அநுஸந்திக்கவேண்டியதாகையால், அதுக்குப்ரதிபாதகமான ஆநந்தாதிபதங்களினால் சொல்லப்பட்ட அர்த்தங்களை மாத்திரம், ப்ரியமோதாதிகளைப்போலன்றிக்கே எல்லாவிடங்களிலும் அநுஸந்திக்கக்கடவது. ௩௭.

(ஶ்ரீ-ஹா.) ஆநந்தாதிகுணங்களுக்கும் ப்ரிய மோதாதிகளுக்கும் விசேஷமென்னென்னில், ஆநந்தாதிகள் ப்ரஹ்மஸ்வரூப நிரூபகங்களாகையாலே ப்ரஹ்மஸ்வரூபத்தோடொத்திருக்கும். ப்ரிய மோதாதிகள் ஸ்ரூபநிரூபகங்களல்லாமையால் ஸ்வரூபதுல்யங்களன்று, ஆகையால் ஆநந்தாதிகளைப்போல் ப்ரிய மோதாதிகள் ஸகலவித்யைகளிலு மநுவர்த்திக்கத்தக்கவைகளன்று ௩௭.

ஸூ-௩௮. ஆத்யாநாய ப்ரயோஜநாபாவாத்.

(ஸு-வ்ரு.) ப்ரயோஜநாபாவாத் - (விஷயாத்யாநத்தில்) ப்ரயோஜநமில்லாமையால், (அவற்றைத்யாகிக்கவேண்டாம்,) ஆத்யாநாய - (ப்ரஹ்மஸ்வரூபத்தை) நன்றாக அறிகைக்காக (அவற்றைச்சொல்லிற்று.) ௩௮.

(ஶ்ரீ - வ்ரு.) ப்ரயோஜநாபாவாத் - வேறுப்ரயோஜநமில்லாமையாலே, ஆத்யாநாய - த்யாகிக்கைக்காக (ப்ரியாதிகுணங்கள் சொல்லப்பட்டன.) ௩௮.

(ஸு-ஹா.) காடகத்தில் "இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்த்தா அர்த்தேப்யஶ்ச பரம் மந:" என்று தடங்கி, இந்திரியங்களைக் காட்டிலும் விஷயங்கள் ப்ரதாநங்கள், அவற்றைக்காட்டிலும், மநஸ்ஸு ப்ரதாநம், அதைக்காட்டிலும் புத்திப்ரதாநம், என்று இவ்வரிசையில் சொல்லிக்கொண்டுபோய் புருஷன் எல்லாவற்றுக்கும்

ப்ரதாநன் அவனுக்கு மேற்பட்டதொன்றும் கிடையாது என்றுசொல்லிற்று அங்கு இந்திரியங்களைக் காட்டிலும் விஷயங்கள் முக்யமென்றும், அவற்றைக்காட்டில் மனஸ்ஸு முக்ய மென்றும் இப்படி புருஷனளவும் சொல்லப்பட்ட எல்லாவற்றை யும் அங்குச்சொன்னபடியே முக்யங்களாக அநுஸந்திக்க வேணுமென்று சொல் லிற்று; அல்லது - பரம புருஷனையே முக்யமாக அநுஸந்திக்கவேணுமென்ற தாத் பர்யத்தினால் சொல்லிற்று என்று விசாரிக்கில்; அங்கு விஷயாதிகளை யெல்லாவற் றையும் ஒன்றைக்காட்டிலுமொன்று முக்யமென்று சொல்லியிருக்கையால் அங் குச்சொன்ன எல்லாவற்றையுமே அங்கு சொல்லியப்ரகாரம் அநுஸந்திக்கவேணு மென்று பூர்வபக்ஷிசொன்னான்—அவற்றை யெல்லாம் அங்குச் சொன்னபடியே த்யாநிப்பதில் ப்ரயோஜநமொன்றும் கிடையாது, ஆகையால் அவ்ற்றை த்யா நிக்கவேண்டியதில்லை. பரமாத்மாவை எல்லாவற்றுக்கும் மேலாகத்யாநிப்பதினால் மோக்ஷப்ராப்தியுண்டு, ஆகையால் அவனையே த்யாநிக்கவேண்டியது. மற்றவிஷ யாதிகளை ஒன்றைக்காட்டிலு மொன்றைமேலாகச் சொன்னது, பரமாத்மா இவையெல்லாவற்றுக்கும் மேலானவனென் றறிக்கைக்காகச் சொல்லிற்று; அவற் றைத்யாநிக்கைக்காகச் சொல்லவில்லை. என்று ஸித்தாந்தம். ௩௬அ.

(ரா - ஹா.) ப்ரியமோதாதிகள் ப்ரஹ்மஸ்வரூப நிரூபகங்களாகா விட்டால் அவைகளை ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு சிரஸ்ஸாகவும் பக்ஷங்களாகவும் நிரூபித்துச் சொ ன்னதெதுக்காகவென்னில், அகண்டமாகிய ஒருரூபம் புத்தியில் முதலில் தோற்று வதரிதாகையால் ஆநந்தகுணத்தினுடைய அவாந்தரபேதமான ப்ரியமோதாதிகளை ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு சிரஸ்ஸுபக்ஷம் முதலியஅவயவங்களாகப்பிரித்து த்யாநித்து அந்த பரமாத்மாவின் ஸ்வரூபத்தைத் தன்புத்தியில் க்ரமக்ரமமாக ஏற்றிக்கொண்டு த்யாநிக்கைக்காக ப்ரியமோதாதிகளைச் சொல்லிற்று. இதன்றி வேறொருப்ரயோ ஜநம் கிடையாது. ௩௬அ.

ஸூ-௩௬௯. ஆத்மஶப்தாச்ச.

(ஸு-வ்ரு.) ஆத்மஶப்தாச்ச - (பரமபுருஷனையே) ஆத்மாவாகச்சொ ல்லுகையாலேயும் (அவனேத்யாநிக்கத்தக்கவன்.) ௩௬௯.

(ரா-வ்ரு.) ஆத்மஶப்தாச்ச - ஆத்மாஎன்கிற சப்தத்தினால் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைச் சொல்லுகையாலும் (ப்ரியமோதாதிகள் ஆத்மதர்மங்க ளன்று). ௩௬௯.

(ஸு-ஹா.) விஷயாதிகளை அந்தஶ்ருதி ஒன்றுக்கொன்று மேலாகச் சொல் லிக்கொண்டுபோய் எல்லாவற்றுக்கும் மேலாகப்பரமாத்மாவைச்சொல்லி, "ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோத்மா ந ப்ரகாஶதே" இத்யாதியினால் அவனேஸர்வாந்தராத்மா, ஸூக்ஷ்மதர்சிகளான மஹர்ஷிகளுக்கு அவன் ஸூக்ஷ்மபுத் தியினால் காணப்படுவான் என்று அந்தபரம புருஷனையே ஆதரத்துடன் சொல் லிற்று. இதனால் மற்றவை ஆத்மாவன் றென்றும், ஆகையினால் அவைத்யாநிக்கத் தக்கவையன்றென்றும் அந்தஶ்ருதியின் தாத்பர்யம் தெரிகிறது. ௩௬௯.

(ரா-ஹா.) "அந்யோந்தர ஆத்மாநந்தமய:" என்று ஆநந்தமயனான பர மாத்மாவை ஆத்மாவாகச்சொல்லுகையாலே, சரீரதர்மமான சிரஸ்ஸுபக்ஷம் முத லிய தர்மங்கள் ஆத்மாவுக்கு ஸம்பவியாது. ௩௬௯.

ஸூ-௩௭௦. ஆத்மக்ருஹீதிரிதரவதுத்தராத்.

(ஸு-வ்ரு.) உத்தராத் - மேல்சொல்லிய ஐக்யோபதேசத்தினால், உத

ரவக - வாஜிஸநேயத்திற்போலவே, சூ தூ ஹ் ஹீ திঃ- (சாந்தோக்யத்திலும்) பரமாத்மக்ரஹணம் (யுக்தம்.) ௩௭௦

(ரா-வ்ரு.)உ தூராக-('ஸொகாகாூய த"என்கிற)மேல்வாக்யத்திலேலே, உதரவக - மற்ற இடங்களில் பரமாத்மாவை ஆத்மசப்தத்தினுற் சொல்வதுபோல், சூதூஹ்ஹீ திঃ - (இங்கும்) ஆத்மசப்தத்தினல் பரமாத்மாவை க்ரஹணம்செய்கிறது (பரமாத்மா சொல்லப்படுகிறன்.) ௩௭௦.

(ஶ-ஹா) வாஜிஸநேயத்தில், ''கதமஆூ்தா" என்று தொடங்கி, ஆத்மாவானவன், ஜ்ஞாநஸ்வரூபன், ஹ்ருதயத்தில் வஸிக்கப்பட்டவன், ஜ்யோதிஸ்வரூபன், என்று சொல்லி, மேலே, இவ்வாத்மாவுக்கு ஸம்ஸாரஸங்கமொன்றும் கிடையாது என்று ப்ரஹ்மலக்ஷணத்தைச்சொல்லுகையாலே அங்குச்சொன்ன ஆத்மாப்ரஹ்மஸ்வரூபியென்றுதோற்றுகிறது. அந்தப்ரகரணத்தின் கடைசியிலும், "ஸவாஷ மஹா நஜஆூ்தா" என்று தொடங்கி'ஈஹ்பொப்ரு ஹூதி" என்று அந்த ஆத்மா மஹான், உத்பத்தியற்றவன், ஜராமரணுதிகளற்றவன், அவன்தான் ப்ரஹ்மம் என்றும் சொல்லுகையாலேயும் ஜீவனேப்ரஹ்மமென்று அங்கு சொல்லப்பட்டது ஸித்தம். சாந்தோக்யத்தில், ஸஜெவஸொஜெ்யஉஹ் ஆஸீ" என்று ஆத்மாவென்கிறசப்தத்தைச் சொல்லாமலே ஆரம்பித்து, கடைசியில், ''தகூமஸி" என்று ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்யம் சொல்லிற்று. இப்படி இவ்விரண்டிடங்களிலும் ஒரு வித்யையே சொல்லப்பட்டதா அல்லது வெவ்வேறுவென்று விசாரிக்கில்,—வாஜிஸநேயத்தில் ஆத்மாவென்ற சப்தத்தைச் சொல்லி ஆரம்பித்து அந்த ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்துக்கும் அபேதம் சொல்லுகையாலே அங்குநிர்குண ப்ரஹ்மவித்யை சொல்லப்பட்டது, சாந்தோக்யத்தில் ஆத்மசப்தத்தைச் சொல்லாமலே ஆரம்பித்து கடைசியில்மாத்திரம் ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதம் சொல்லுகையாலே அங்கு நிர்குணவித்யைசொல்லப்படவில்லை ப்ரஹ்மாத்மகோபாஸநமே சொல்லப்பட்டது ஆகையால் இரண்டும் வெவ்வேறு வித்யையென்று பூர்வபக்ஷம்—வாஜிஸநேயத்தில் ஆத்ம சப்தத்தினுல் ஆத்மாவைச் சொன்னதுபோல், சாந்தோக்யத்திலும், ஆத்ம சப்தமில்லாவிடினும் "ஸடூஜவ" என்ற ஸச்சப்தத்தினுல் ஆத்மாவேசொல்லப்பட்டதாம். ஆதியில் ஸச்சப்தத்தினுல் ஆத்மாவைச் சொன்னுல்தான் கடைசியில் "தகூமஸி" என்று ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதம் சொன்னது ஸங்கதமாகும். இப்படி சாந்தோக்யத்திலும் ஆதியில் ஸச்சப்தத்தினுல் ஆத்மா சொல்லப்பட்டதாகையால் இரண்டிடத்திலும் நிர்குணப்ரஹ்மவித்யை யொன்றே சொல்லப்பட்டதென்று ஸித்தாந்தம் ௩௭௦.

(ரா-ஹா.) ஆத்மாவென்றுல்பரமாத்மாவையேசொல்லுகைக்குநியாமகமென்னென்னில், "ஆத்மாவாஉஜஒகவஹவாஹ்ரு ஆஸீ" இத்யாதி இடங்களில் ஆத்மாவென்று பரமாத்மாவைச் சொல்லுகையாலும், இப்ப்ரகரணத்தில் மேல்வாக்யத்தில் "ஸோகாூயத" அவன் ஸங்கல்பிக்கிறுன் என்று கீழ்ச்சொன்ன ஆநந்தமயனுக்கு சேதநதர்மமான ஸங்கல்பம் சொல்லுகையாலும் "ஆத்மா நடூஉயঃ" என்கிற இவ்விடத்திலும் ஆத்மாவென்று பரமாத்மாவையே சொல்லவேண்டும்.

ஸூ-௩௭௧. கூநூயாஜிதிவெஷேூ்ராஜவயாரணாக.

(ஶ-வ்ரு.) கூநூயாக - (உபக்ரமத்தின்படியே மற்றவைகளுக்கும்) அந்வயம் சொல்லவேண்டுகையால், (உபக்ரமத்தில் ஆத்மசப்தமில்லாமையால்,

இது நிர்குணவித்யையாகாது) உதிவெஃ - என்றால், ஃவயாரணாஃ - நிர்த்தாரணத்தினால், ஸ ்ராஃ - நிர்குணவித்யையாகலாம். ௩௭௧

(ரா-வ்ய) ஃஅநுயாஃ - அசேதநத்திலும ஆத்மசப்தாந்வயம் காண்கையாலே, (இங்கு ஆத்மசப்தத்துக்கு பரமாத்மபரத்வம் நிஸ்சயிக்கும்படியென்), உதிவெஃ - என்றால், ஃவயாரணாஃ - (அப்ப்ரகரணங்களிலும் சொல்லப்பட்ட ஆத்மசப்தத்துக்கும் பரமாத்மாவே அர்த்தமென்று) நிர்ணயிக்கையாலே, ஸ ்ராஃவா - இதுவும் பரமாத்மபரமென்று நிர்ணயிக்கப்படும். ௩௭௧.

(ஶ-ஹா.) உபக்ரமாநுகுணமாக மேல்வாக்யங்களுக்கு அர்த்தம் சொல்லவேணும், உபக்ரமத்தில் ஆத்மாவென்று விசேஷித்துச் சொல்லுகிற சப்தமில்லை, ஸத் என்கிற ஸாமாந்ய சப்தத்திற்கு ஆத்மாவென்று விசேஷபரமாக அர்த்தம் சொல்லலாமென்னில், — அடியில் "யெநாஶ்ரு-தஂஶ்ரு-தஂஹவதி" என்று தொடங்கி, எந்தப்ரஹ்மஸ்வரூபத்தை யறிந்தால் மற்றவையெல்லாம் அறிந்ததாமோ என்று ப்ரஹ்மஜ்ஞானத்தினால் ஸர்வவிஷயகஜ்ஞாந முண்டாவதாக ப்ரதிஜ்ஞை செய்து, பின்பு, இதெல்லாம்முன்பு ஸத்தாயேயிருந்ததென்று ஆரம்பித்துச்சொன்னவாக்ய ஸந்தர்ப்பங்களெல்லாம், இப்படி ஸச்சப்தத்தினால் ஆத்மாவைச் சொன்னால் மாத்திரமே ஸமஞ்ஜஸமாகும். ஸத்தென்பதற்கு ஆத்மா அர்த்தமாகாவிடில், ஸத்துவேறாய் ஆத்மாவேறாய்விடுமாகையால் ஸத்தினுடையஜ்ஞாநத்தினால் ஆத்மஜ்ஞாநமுண்டாக மாட்டாதாகையால், ஸர்வவிஷயக ஜ்ஞாநமுண்டாகு மென்கிறப்ரதிஜ்ஞைபொய்யாய்விடும்.மேலும் உபக்ரமத்திலுள்ள சப்தம்ஸாமாந்யமாயிருந்தால், அந்த சப்தத்துக்கு உபஸம்ஹாரம் முதலிய இடங்களிலுள்ள விசேஷசப்தங்களைக் கொண்டு அர்த்தநிர்ணயம் பண்ணவேண்டுமேயன்றி வேறு விதமாக அர்த்தம் சொல்லக்கூடாது. உபஸம்ஹாரத்தில் ஜீவப்ரஹ்மங்களுக்கு அபேதம் சொல்லுகையாலே ஆதியிலுள்ள ஸச்சப்தத்துக்கு ஆத்மாவென்பதே அர்த்தமாகக்கொள்ளவேணும்என்று ஸித்தாந்தம். ௩௭௧.

(ரா-ஹா.) ஆநந்தமய வாக்யத்துக்குக் கீழ் "ஶ்ரு-தாவ-ரணமெ" என்று அசேதநமான ப்ராணமயாதிகளையும் ஆத்மாவென்று சொல்லுகையாலே மேல்வாக்ய மாத்ரத்தைக்கொண்டு இங்குள்ள ஆத்மசப்தம் பரமாத்ம பரமென்று நிஸ்சயிக்கும் விதமென்னென்னில், "தஸ்மாஷா வா தஸ்மாஷா-த்ந ஶ்ருகாஶஸஂஹூ தஃ" என்று ஆரம்பத்தில் ஸகலஜகத்காரணபூதனை பரமபுருஷனை ஆத்ம சப்தத்தினால் சொல்லி, அவனையே ப்ராணமய மனோமயாதிகளில் ஆத்மாவென்று சிதசிதாத்மக ஸகல ஜகத்துக்கும் அந்தர்யாமியாக ஆத்மசப்தத்தினால் சொல்லுகையாலே கீழ் வாக்யங்களிலும் ஆத்ம சப்தத்திற்குப் ப்ரமாத்மாவே அர்த்தமாகையால் இங்குள்ள ஆத்மபதத்திற்கும் பரமாத்மாவே அர்த்தமென்று நிஸ்சயிக்கலாம். ஆகையால் சிரஃபக்ஷாதிகளாக நிரூபிக்கப்பட்ட ப்ரியமோதாதிகள் பரமாத்ம தர்மங்களாகாமையால் இவை ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கக்கூடாது. ௩௭௧.

ஃயி-அஎ. ஸூ-௩௭௨. ஃாரா ்ராவ்ரா நாஃவஃவ-ிழ.

(ஶ-வ்ய.) ஃார்ராவ்ரா நாஃ - (தர்மசாஸ்த்ரத்தில் ஆசமநத்தைச்) செய்யவேண்டியதாகச் சொல்லுகையாலே, ஃவஃவ-ிழ - அப்ராப்தமான வஸ்திரசிந்தநமே (விதிக்கப்பட்டது.) ௩௭௨.

(ஶா - வ்.) காரர்ராவமா நாஜ - (வேதத்திற்கு) அபூர்வார்த்தத்தைச் சொல்வதே ஸ்வபாவமாகையாலே, கூலமாஷ் - (இதற்குமுன்; அஸித்த மான ப்ராணவாஸஸ்த்வாநு ஸந்தானம் (விதிக்கப்படுகிறது.) ௩௭௨.

(ஶ-ஸா.) சாந்தோக்யத்திலும் வாஜிஸநேயத்திலும் ப்ராணஸம்வாதத்தில், கிஂ ஜெவாஸஃ" என்றுதுடங்கி, முக்யப்ராணன் வாக்குமுதலியவற்றைப் பார்த்து எனக்குவஸ்திரமேது என்று கேட்க, அதுக்கந்தவாகாதிகள், உனக்கு ஆசனம்பண் ணுகிற ஜலமே வஸ்திரமாகக்கடவது என்று சொல்லிற்று, அதற்குமேல் வாஜிஸ நேயத்தில், "வக தஜ்வாஂஸஸ்ரோத்ரியாஃ" என்று ஆரம்பித்து, இதையறிந்த வர்கள் போஜனத்துக்குமுன்னும் பின்னும் ஆசமநம் செய்து, அதினால் ப்ராண னைவஸ்திரமுள்ளவனாக எண்ணுகிறார்கள், இனி இப்போது ப்ராணவித்யையை உபாஸநம் செய்கிறவர்களும் அதேமாதிரி ஆசமநம்செய்யக் கடவர்கள் பின்பு அந்த ஆசமந ஜலத்தினால் ப்ராணனை வஸ்திரமுள்ளதாக த்யாநிக்கக் கடவர்கள் என்று சொல்லிற்று. அந்த ஶ்ருதி ப்ராணவித்யைக்கு அங்கமாக வேறு ஒரு ஆச மநத்தை விதிக்கிறதா, அல்லது, அதேஆசமனஜலத்தினால் ப்ராணன் வஸ்திரமுள்ள தென்று த்யாநம்செய்ய வேண்டுமென்று விதித்ததா, அல்லது இரண்டையும் விதித் ததா என்று ஸம்சயிக்குமளவில்,—இரண்டையும் விதிக்கிறதென்று சிலரும், ஆச மநத்தை மாத்திரம் விதிக்கிறதென்று சிலரும் சொன்னார்கள்—அவ்விரண்டும் சரி யன்று. ஏனென்றால், ஒருவாக்யத்தில் ஒன்றைவிதிக்கலாம். இரண்டை விதிக்கக் கூடாது, இரண்டை விதித்தால் "வாக்யபேதம்" என்று சாஸ்த்ரத்தில் ஒருதோ ஷம் சொல்லப்படும், அந்ததோஷம் வருமாகையால் இரண்டையும் விதிக்கிற தென்று சொல்லக்கூடாது—எல்லா க்ரியைகளுக்கும் முன்னும் பின்னும் சுத்திக் காக ஆசமநம் தர்மசாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கு புதி தாக வேறொரு ஆசமநம் விதிக்கவேண்டுவதில்லை. அவ்விரண்டுபக்ஷமும் கழிந்தால், ஆசமநம் செய்த ஜலத்தை ப்ராணனுக்கு வஸ்திரமாக அநு ஸந்திப்பதையே அங்கு ஶ்ருதிவிதித்ததென்று அங்கீகரிக்கவேணும் என்று ஸித்தாந்தம். ௩௭௨.

(ஶா-ஸா) சாந்தோக்யத்தில் "கிஂஜெவாஸோ ஃவிஷ்ரிதீத்ரீவஜதி ஹொவாஃ" என்று ஜலம் ப்ராணனுக்கு வஸ்த்ரமென்று சொல்லிற்று. "தஸ்மா ஜெவஂவிஃஶிஷ்ரிநாவாஜேஃஶிக்ஷவாஜேஜ" என்று உபாஸ்யமாகச்சொன் ன அந்தப்ராணனுக்கு வஸ்த்ரம் ஸித்திக்கைக்காக போஜநத்திற்கு முன்னும் அநந் தரத்திலும் ஆசமநம் செய்யவேண்டுமென்று சொல்லிற்று. இங்கு ப்ராணவித்யை க்கு அங்கமாக வேறோராசமநம் விதித்ததா, அல்லது-ஶ்ருதிஸ்ம்ருதிகளிற் சொல் லப்பட்ட ஆசமநத்தின் ஜலத்தைப் ப்ராணனுக்கு வஸ்த்ரமாக த்யாநம்செய்யச் சொல்லிற்றா என்று ஸம்சயம்.—"ஆவாஜேஜ" ஆசமநம் செய்யக்கடவன். என்று ஆசமநத்தையே விதிக்கையாலே ப்ராணவித்யாங்கமாக வேறோராசமநம் செய்யச் சொல்லிற்றென்று பூர்வபக்ஷம்.—இவ்வாக்யங்களில் ஆசமநமும், ஆசமநம் செய்யப் பட்டஜலத்தை ஜ்யேஷ்டப்ராணனுக்கு வஸ்த்ரமாக அநுஸந்திக்கையும் ஆக இரண் டும் தோற்றுகின்றன. இவ்விரண்டில் ஆசமநம் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லியிருக் கிறது. அதின் ஜலத்தை வஸ்த்ரமாக அநுஸந்தித்தல் வேறோரிடத்திலும் சொல்ல ப்படவில்லை. வேதவாக்யம் முன்னமோரிடத்தில் விதித்ததை மற்றோரிடத்தில் மறுபடியும் விதியாது. ஆகையால் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்டபடியால் ஆசமநத்தைத்திரும்பியும் இங்கு விதிக்கமாட்டாது. ஆகையால் ஆசமநம் செய்யப் பட்ட ஜலத்தை உபாஸநம் செய்யப்பட்ட ஜ்யேஷ்ட ப்ராணனுக்கு வஸ்த்ரமாக அநுஸந்திக்கவேணுமென்றே இங்குவிதித்தது என்று ஸித்தாந்தம். ௩௭௨.

௬௰-அது. ஸூ॰ ௧௭௩. ஸமாநஏவஞ்சாபேதாத்.

(ஶ்ரு-ப்ர.) அபேதாத் - உபாஸ்யவஸ்துவுக்கு பேதமில்லாமையால் ஸமாநே - ஒருசாகையிலும், ஏவம்-இப்படி குணோபஸம்ஹாரமுண்டு,

(ஶ்ரு-ப்ர.) ஸமாநே - (மநோமயத்வாதி குணங்கள் இரண்டிடத்தி லும்) துல்யமாயிருந்தவளவில், (இரண்டிடத்திற்சொல்லிய சாண்டில்யவித் யையுமொன்றே) ஏவஞ்ச - இப்படியானவளவில், அபேதாத் - ஸத்யஸங் கல்பத்வாதிகளுக்கும் வசித்வாதிகளுக்கும் பேதமில்லாமையாலே (வித்யை க்யம் ஸித்தித்தது.) ௧௭௩.

(ஶ்ரு-ஸா.) வாஜிஸநேயசாகையில் அக்நிரஹஸ்யத்தில் சாண்டில்யவித்யைசொ ல்லப்பட்டது, அங்கு “ஸ ஆத்மாநமுபாஸீத மநோமயம் ப்ராணஶரீரம்” பரிசுத்தமநஸ்ஸினுல்க்ரஹிக்கத்தக்கதாயும்,ப்ராணனுக்குதாரகமாயும் ஜ்யோதிஸ் ஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவை உபாஸநம் செய்யக்கடவன் என்று சொல்லிற்று. அதே சாகையில் ப்ருஹதாரண்யத்தில் முன்சொன்னபடியே உபாஸநத்தையும், ஆத்மா வுக்கு அந்த மநோமயத்வாதி குணங்களையும் சொல்லி,இன்னும் அதிகமாக,அங்குச் சொல்லாத ‘ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந:’ என்று ஸர்வாதிபத் யம் ஸர்வநியமநம் முதலிய குணங்களையும் சொல்லிற்று இதற்கும் சாண்டில்யவித் யையென்றே பெயர். இவ்விரண்டிடத்திலும் சொன்ன வித்யை ஒன்ரு வேரு என்று பராமர்சிக்கில்,—வெவ்வேறு சாகையாகில் ஒரேவித்யையை அங்கொருவ னுக்குச்சொல்லிற்று, இங்கொருவனுக்குச் சொல்லிற்று என்று சொல்லலாம், ஒரு சாகையிலேயே ஒருவித்யையை இரண்டுதரம் சொன்னல் “பௌநருக்த்யம்” அதாவது - சொன்னதையே நிஷ்ப்ரயோஜநமாக மறுபடியும் சொல்லுகை என்கிற தோஷம்வரும் ஆகையால் இவைவெவ்வேறு வித்யைகளென்று சொன்னன் பூர்வ பக்ஷி—ஒரு வித்யையை இரண்டு சாகையிலும் சொல்வதுபோல் ஒரு சாகையிலும் ஒருவித்யையை இரண்டுதரம் சொல்லலாம். முதல் வித்யாஸ்வரூபத் தையும் அந்த வித்யையில் அநுஸந்திக்கவேண்டிய சில குணங்களையும் சொல்லி மற்றோரிடத் தில், முன்சொன்ன வித்யையை அநுவதித்துக்கொண்டு முன்புசொல்லாத சில அபூர்வமான “ஸர்வஸ்ய வஶீ” என்று ஸர்வநியந்த்ருத்வம் முதலிய குணங் களைச் சொல்லுகையாலே பௌநருக்த்ய தோஷமுமில்லை. ஆகில் முன்சொல்லாத குணங்களையே இங்கு சொல்லவேண்டியிருக்க, அங்குச்சொன்ன மநோமயத்வாதி குணங்களையும் இங்குச்சொல்லுவானெனென்னில், இந்தவித்யை முன்சொன்ன தே, வேறன்றென்று தெரிகைக்காகச் சொல்லிற்று. ஆகையால் அந்தசாகையில் சொல்லப்பட்ட இரண்டுசாண்டில்ய வித்யையும் ஒன்றுதான், இரண்டிடத்தில் சொன்ன குணங்களையும் ஒரிடத்தில் அநுஸந்தித்துக் கொள்ளவேணுமென்று ஸித்தாந்தி சொல்லுகிறார். ௧௭௩.

(ஶ்ரு-ஸா.)வாஜிஸநேயத்திலும் ப்ருஹதாரண்யத்திலும் சாண்டில்யவித்யைசொ ல்லப்பட்டது. வாஜிஸநேயத்தில் ‘ஸ ஆத்மாநமுபாஸீத மநோமயம் ப்ராண ஶரீரம் பாரூபம் ஸத்யஸங்கல்பமாகாஶாத்மாநம்’என்று மநோமயத்வாதிகுணங் களோடுகூடினவனும்,ஸத்யகாமனுன பரமாத்மாவை உபாஸநம்செய்யச்சொல்லிற்று ப்ருஹதாரண்யத்தில் “மநோமயோயம் புருஷ:”என்று தொடங்கி ‘ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந: ஸர்வஸ்யாதிபதி: ஸர்வமிதம் ப்ரஶாஸ்தி” என்று மநோமயத்வாதி குணயுக்தனும் வசித்வாதிகுணங்களையுடையனுகப் பரமாத்

மாவை உபாஸிக்கச்சொல்லிற்று. இவ்விரண்டிடத்திலும் சொல்லப்பட்ட ஸாண்டில் யவித்யை ஒன்று, அல்லது வெவ்வேறு என்று ஸம்சயம்.— சாந்தோக்யத்தில் வசித்வாதி குணங்களைச் சொல்லாமல் ஸத்யகாமத்வாதி குணங்களையும், ப்ருஹதாரண்யத்தில், ஸர்வஜ்ஞத்வாதிகளைச் சொல்லாமல் வசித்வாதிகளையும் உபாஸ்யமாகச் சொல்லுகையாலே இரண்டிடத்திலும் உபாஸநத்திற்கு விஷயம் ஒன்றன்று, ஆகையால் இரண்டும் பிந்நங்களென்று பூர்வபக்ஷம் - மநோமயத்வாதி குணங்கள் இரண்டிடத்திலும் சொல்லப்பட்டன. ஓரிடத்தில் ஸத்யகாமத்வமும் மற்றோரிடத்தில் வசித்வமும் சொல்லியிருந்தபோதிலும், வசித்வமென்பது ஸத்யகாமத்திற்குள் சேர்ந்ததாகையால் அவ்விரண்டு குணங்களுக்கும் பேதமில்லை. ஸத்யகாமத்வமாவது. தான் நினைத்ததில் சிறிதும் சோராமல் தலைக்கட்டுகை. வசித்வமாவது-ஸகலசிதசித்துக்களையும் தனக்கு வசமாக்கிக்கொள்ளுகை. இந்த வசித்வம் ஸத்யகாமத்வத்திற்குள் அடங்கியதாகையால் ப்ருஹதாரண்யத்திற்குள்வசித்வத்தைச்சொன்னபோதே ஸத்யஸங்கல்பத்வமும் சொல்லிற்றேயாயிற்று. ஆதலால் இரண்டிடத்திலும் விஷயமொன்றாய் வித்யை ஒன்றாயிருக்குமென்று ஸித்தாந்தம். ௩௭௩.

௩-௩ - அக௨. ஸூ-௩௭௪. ஸம்பந்தாதேவமந்யத்ராபி.

(ஶ்ரு-ப்ர.) ஏவம் - இப்படியே, அந்யத்ர அபி - வேறிடத்திலும், ஸம்பந்தாத் - ஒரு வித்யையுடன் ஸம்பந்தத்தினால் (குணோபஸம்ஹாரமுண்டு.) ௩௭௪.

(பூ-ப்ர.) ஏவம் - இப்படியே, அந்யத்ராபி - வேறிடத்திலும், ஸம்பந்தாத் - ஸ்தாநஸம்பந்தத்தினால், (வித்யாபேதமில்லை.) ௩௭௪.

(ஶ்ரு-ஸூ.) ப்ருஹதாரண்யத்தில், "ஸத்யம் ப்ரஹ்ம" என்று தொடங்கி, பரமபுருஷனை ஸூர்யமண்டல மத்யவர்த்தியாயும், நேத்ரமத்யவர்த்தியாயும் த்யானிக்கச்சொல்லி, பின்பு, முதலுக்கு "அஹ:" என்றபெயரும், இரண்டாவதுக்கு "அஹம்" என்ற பெயரும் சொல்லிற்று. இவ்விரண்டுபெயரையும் இரண்டிடத்திலுமநுஸந்தித்துக் கொள்ளவேணுமா, அல்லது, அந்தந்த இடத்தில் அந்தந்த பெயரைமாத்திர மநுஸந்திக்கவேண்டுமோ என்று பராமர்சிக்கில்,—ஸூர்யனுடைய மத்தியிலும் நேத்ரத்தினுடைய மத்தியிலுமிருக்கப்பட்ட புருஷன் ஒருவனே ஆகையால், அவனுக்கு இரண்டிடத்தில் சொன்ன இரண்டு நாமங்களையும் இரண்டிடங்களிலுமநுஸந்திக்கவேணும், புருஷனொருவனாயினும் ஸ்தாநம் வேறுபட்டிருக்கிறதேயென்னில், ஒரு ஆசார்யன் வீட்டிலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் அவ்விரண்டிடத்திலும் பேதமின்றியே அவனுக்கு செய்யவேண்டிய யாவத்து சிஶ்ருஷையும் செய்யுமாபோலே இங்கும் கண்டுகொள்வது என்று பூர்வபக்ஷம். ௩௭௪.

(பூ-ஸூ.)ப்ருஹதாரண்யத்தில் "யஏஷ ஏதஸ்மிந் மண்டலே புருஷோ யஶ்சாயம் தக்ஷிணேக்ஷந்" என்று தொடங்கி வலதுநேத்ரத்திலும் ஸூர்யமண்டலத்திலும் பரமபுருஷனை காயத்ரீ சரீரகனாக உபாஸநம் செய்யச்சொல்லி, அநந்தரம், இப்படி இரண்டிடத்திலும் உபாஸிக்கச்சொன்ன பரமபுருஷனுக்கு அஹம் என்றும் அஹ: என்றும் இரண்டு திருநாமம் சொல்லிற்று. இந்த இரண்டு நாமமும் ஸூர்யமண்டலத்தில் உபாஸ்யனான பரமாத்மாவுக்கும், வலது கண்ணில் உபாஸ்யனான பரமாத்மாவுக்கும் ஆக இருவர்க்கும் உள்ளதா, அல்லது - ஒருவனுக்கொரு நாமமும் மற்றொருவனுக்கு மற்றொருநாமமும் என்று வ்யவஸ்தையுண்டா என்று ஸம்சயம்—கீழ் அதிகரணத்தில் மநோமயத்வாதிகுண விசிஷ்டபரமாத்மா ஒருவனையே இரண்டிடத்திலும் உபாஸ்யனாகச் சொல்லிற்றாகையால் இரண்டிடத்திற் செ

ன்னவித்யைகளுக்கு அபேதம் சொன்னாற்போல், இங்கும், ஸூர்யமண்டலத்திலும் நேத்ரத்திலும் பரமாத்மா ஒருவனையே உபாஸிக்கச் சொன்னபடியால் இரண்டிடத்திற் சொன்னவித்யைகளும் ஒன்று. இரண்டுநாமங்களையும் இரண்டிடத்திலு மநுஸந்திக்கலாம் என்று பூர்வபக்ஷம். ௩௭௪.

ஸூ-௩௭௫. நவா விஶேஷாத்.

(ஶ-வ்யா.) விஶேஷாத் - (ஸ்த்தாந) விசேஷமுண்டாகையால், ந - குணோபஸம்ஹாரம் கிடையாது. ௩௭௫.

(ரா-வ்யா.) விஶேஷாத் - உபாஸ்யமாகச்சொன்ன பரமபுருஷனுக்கு இரண்டிடத்திலும் விசேஷமுண்டாகையால், நவா - இரண்டுவித்யையும் ஒன்றாகமாட்டாது. ௩௭௫.

(ஶ-பா.) இரண்டிடத்திலும் உபாஸநத்துக்கு விஷயமான புருஷனொருவனாயிருந்தபோதிலும், அவனுக்குச்சொன்ன ஸ்த்தாந பேதத்தினால், அவ்வவ இடங்களில் அவனுக்குச் சொன்னபெயர்களையே அநுஸந்திக்கவேண்டும். மற்றொரு பெயரை யநுஸந்திக்கக்கூடாது. ஆசார்யனொருவனா யிருந்தபோதிலும், அவனுட்கார்ந் திருக்கும்போது செய்யவேண்டிய உபசாரத்தை நிற்கும்போதும், நிற்கும்போது செய்யவேண்டிய உபசாரத்தை உட்கார்ந்திருக்கும்போதும் செய்யமுடியாது; அதுபோலவே இங்கும் காண்க என்று ஸித்தாந்தம். ௩௭௫.

(ரா-பா.) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்—கீழ் அதிகரணத்தில் உபாஸ்யனான பரமாத்மாவும், அவனிடத்தில் விசேஷணங்களான குணாதிகளும் இரண்டிடத்திலும் ஏகரூபமாகையால் அபேதம் சொல்லிற்று. இங்கு உபாஸ்யனான பரமாத்மாவுக்கு ஓரிடத்தில் ஸூர்யமண்டல வ்ருத்தித்வமும், மற்றோரிடத்தில் நேத்ர வ்ருத்தித்வமும் விசேஷணங்களாகச் சொன்னபடியால், அந்தவிசேஷண பேதத்தினால் வித்யைகளும் பிந்நங்கள் ஆகையால் இரண்டு நாமங்களும் ஒவ்வோரிடத்தில் வ்யவஸ்த்திதங்கள். ஸூர்யமண்டலவர்த்தியான பரமாத்மாவுக்கு "அஹம்" என்றும் நேத்ரவர்த்தியான பரமாத்மாவுக்கு "அஹ:" என்றும் நாமம் என்று ஸித்தாந்தம். ௩௭௫.

ஸூ - ௩௭௬. த³ர்ஶயதி ச.

(ஶ-ரா-வ்யா.) த³ர்ஶயதி ச - இரண்டுவித்யைக்கும் ஶ்ருதியும் பேதத்தைக்காண்பிக்கிறது. ௩௭௬.

(ஶ-பா.) "தஸ்யைதஸ்ய ததே³வ ரூபம்" என்று தொடங்கி, ஸூர்யமண்டலவர்த்தி புருஷனுக்குள்ள ரூபாதிகுணங்களே நேத்ரமத்ய வர்த்தியான புருஷனுக்குள்ளதென்று சொல்லிற்று. இரண்டும் ஒரேவித்யையா யிருக்கும்பக்ஷத்தில் இப்படி சொல்லவேண்டுவதில்லை. அக்குணங்கள் தன்னடையே இங்கும் வரும். இப்படி சொன்னதினால் இரண்டும் வெவ்வேறென்றும், அதுக்குள்ள ரூபாதிகளிதுக்குண்டென்று சொன்னதுபோக மற்ற அதுக்குள்ள குணங்களை இங்கு அநுஸந்திக்கக்கூடாதென்றும் ஸித்தித்தது. ௩௭௬.

(ரா-பா.) "தஸ்யைதஸ்ய ததே³வ ரூபம் யதா³முஷ்ய ரூபம்" என்று ஸூர்யமண்டல வர்த்தியான பரமாத்மாவினுடைய ரூபமே நேத்ரவர்த்தியான பரமாத்மாவுக்கும் ரூபம்என்று ஓரிடத்தில் உபாஸ்யமாகச் சொன்ன பரமாத்மாவினுடைய ரூபத்தையே மற்றோரிடத்தில் உபாஸ்யமாகச் சொன்னபடியால்

இரண்டும் வெவ்வேறென்பது ஸித்தம் ஒன்ருகில் அந்த ரூபம் ஸித்தமாகையால் எடுத்துச் சொல்லக்கூடாது. ஆகையால் நாமமும் இரண்டிடத்திற்கும் வெவ்வேருயிருக்கும். ௧௭௬.

அதி - ௧௰. ஸூ-௧௭௭. ஸம்ப்ருதித்யுவ்யாப்த்யபிசாத:.

(ஶ-ப்ர-வ்ய.) அத:-ஸ்த்தாநவிசேஷ ஸம்பந்தம் வ்யவஸ்த்திதமாகையாலே, ஸம்ப்ருதித்யுவ்யாப்திசபி-ஜ்யேஷ்ட்டவீர்யாதிகுண ஸம்ருத்தியும் ஆகாசவ்யாப்தியும், (எல்லாவித்யைகளிலும் அநுஸந்திக்கக்கூடாது.) ௧௭௬

(ஶ்-ஸா.) ராணாயநீயசாகையில் சிலஶ்ருதியில் "ப்ரஹ்மஜ்யேஷ்டாவீர்யா ஸம்ப்ருதாநி ப்ரஹ்மாக்ரே ஜ்யேஷ்டம்திவமாததாந" ப்ரஹ்மத்தைக் காரணமாக உடைய பராக்ரமங்கள் ப்ரஹ்மத்தினிடத்தில் குறைவற்றிருக்கின்றன. அந்த காரணமாகியப்ரஹ்மமே தேவதைகளுண்டாவதற்கு முன் தேவலோகத்தையெல்லாம் தானே வ்யாபித்திருந்தது என்று சொல்லியிருக்கிறது. அந்த சாகையிலுபநிஷத்திலேயே சாண்டில்யதகர உபகோஸல வித்யைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தவித்யைகளிலும், கீழ்சிலஶ்ருதியிற்சொன்னபராக்ரமஸம்ப்ருதி ஸ்வர்க்கலோகவ்யாப்தி முதலியகுணங்களை அநுஸந்திக்கவேணுமா, வேண்டாமாவென்று கேட்கில்,—அவைகளும் ப்ரஹ்மத்தினுடைய குணங்களேயாகையால் எல்லாவித்யைகளிலு மநுஸந்திக்கவேணுமென்று தோற்றினபோதிலும், சாண்டில்ய வித்யையிலும் தகரவித்யையிலும் ப்ரஹ்மத்தை ஹ்ருதயப்ரதேசத்திலுள்ளதாகவும், உபகோஸல வித்யையில் நேத்ரத்திலுள்ளதாகவும் த்யானிக்கும்படி, ப்ரஹ்மத்துக்கு ஆத்யாத்மிகமானஸ்த்தாநமும் ஆதிதைவிக ஸ்த்தாநமும் இப்படி வெவ்வேறு ஸ்த்தாநங்கள் சொல்லப்பட்டன. இப்படி ஆத்யாத்மிகஸ்த்தாநத்திலுள்ள ப்ரஹ்மத்துக்கு, ஆதிதைவிகமாகிய இக்குணங்களை அநுஸந்திக்கக்கூடாது என்றுசொல்லுகிருர். ௧௭௭.

(ஶ்ர-ஸா.) ப்ரஹ்மஜ்யேஷ்டாவீர்யாஸம்ப்ருதாநி ப்ரஹ்மாக்ரே ஜ்யேஷ்டம்திவமாததாந" இத்யாதியாலே பரமபுருஷனிடத்தில் உத்க்ருஷ்டங்களான கல்யாணகுணங்கள் ஸம்பூர்ணங்கள். அந்தபரமாத்மா முன்னம் ஸ்வர்க்காதி லோகங்களை ஆக்ரமித்தான் என்று சொல்லிற்று. இங்குச்சொன்ன கல்யாணகுணங்களும் ஆகாசவ்யாப்தியும் உபாஸ்யனுன பரமபுருஷனிடத்தில் ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கவேண்டுமோ இல்லையாஎன்றுஸம்சயம்-ஒருவித்யையை ஆரம்பித்து அந்த ப்ரகரணத்திற் சொல்லாமல் பொதுவாகச் சொல்லிற்ருகையால் ஸகலவித்யைகளிலும் அநுஸந்தேயங்களென்று பூர்வபக்ஷம்— விபுலமான ஆகாசவ்யாப்தியுடைய பரமபுருஷனை அல்பஸ்த்தாநமான ஹ்ருதயத்தில் அநுஸந்திக்கக்கூடாதாகையால் இவ்விதமான ரூபம் வைஶ்வாநராதி வித்யைகளிலேயே அநுஸந்திக்கவேண்டும். அந்த ஆகாச வ்யாப்தியோடுகூட சொல்லப்பட்டனவாகையால் மற்ற அக்குணங்களும் அவ்வித்யைகளிலேயே யநுஸந்திக்கவேணும். எல்லாவித்யைகளிலும் அநுஸந்திக்கக்கூடாதென்று ஸித்தாந்தம். ௧௭௭.

அதி-௧௧. ஸூ-௧௭௮. புருஷவித்யாயாமிவ சேதரேஷாமநாம்நாநாத்.

(ஶ-வ்ய.) இதரேஷாம் - இதரசாகையிற் சொல்லப்பட்டவைகளை, அநாம்நாநாத் - மற்றொருசாகையிற் சொல்லாமைபாலே, புருஷவித்யாயாமிவ - புருஷவித்யையிலுங்கூட, (வித்யாபேதமுண்டு). ௧௭௮.

(ஶ்ரு-ஹா.) தாண்டிரஹஸ்யம் பைங்கிரஹஸ்யம் என்கிற க்ரந்தங்களில் புருஷ வித்யை சொல்லியிருக்கிறது. அதாவது - " புருஷோவாவ யஜ்ஞஸ்தஸ்யாநி சதுர்விம்ஶதிர்வர்ஷாணி " என்று துடங்கி, புருஷனென்பவனே யஜ்ஞம், அவனுடைய முதல் இருபத்துநாலு வயஸ்ஸு, யஜ்ஞத்திற் செய்யவேண்டிய ப்ராதஸ்ஸவநம், நடுவுள்ள நாற்பத்துநாலுவயஸ்ஸு, மத்யாந்ஹத்திற் செய்யவேண்டிய ஸவநம், கடைசியிலுள்ள நாற்பத்துநாலுவயஸ்ஸு ஸாயம் ஸவநம், இம்மாதிரியாக புருஷனுக்குள்ள குணங்களையெல்லாம் யஜ்ஞத்துக்குள்ள அங்கங்களாக நிரூபித்திருக்கிறது. தைத்திரீயத்தில், "தஸ்யைவம்விதுஷோ யஜ்ஞஸ்யாத்மா" என்று துடங்கி புருஷவித்யையினுடைய குணங்களைச் சொல்லியிருக்கிறது; அவ்விரண்டிடத்திலும் இரண்டிடத்திற் சொன்ன எல்லாகுணங்களையும் அநுஸந்திக்கவேணுமா, வேண்டாமா என்றால், இரண்டும் புருஷவித்யையாகையால் அநுஸந்திக்கவேணுமென்று தோற்றும்.—தைத்திரீயத்தில் வித்வானாகிய புருஷனுடைய யஜ்ஞத்துக்கு ஆத்மாயஜமானன், ஶ்ரத்தைபத்நீ சரீரம் விறகு, மார்பு திண்ணை என்று இம்மாதிரியாகச் சொல்லி, இங்குச்சொன்னவைகளி லொன்றையும் அங்குச்சொல்லாமல் வெவ்வேறு விதமாகச் சொல்லிற்று. இப்படியொன்றுக் கொன்று கொஞ்சமும் ஸம்பந்தமில்லையாகையால் இவ்விரண்டும் வெவ்வேறு வித்யைகள். அங்குச் சொன்ன குணங்களுக்கு இங்கு அநுஸந்தாநம் கிடையாது என்று ஸித்தாந்தம். (௩எஅ.)

(ஶ்ரா·ஹா.) தைத்திரீயத்தில் " தஸ்யைவம்விதுஷோயஜ்ஞஸ்யாத்மா " என்று தொடங்கி புருஷவித்யை சொல்லப்பட்டது. சாந்தோக்யத்திலும் "புருஷோவாவயஜ்ஞ:" என்று தொடங்கி புருஷவித்யை சொல்லப்பட்டது. இவ்விரண்டுக்கும் பேதமுண்டா இல்லையா என்று ஸம்சயம்.—புருஷவித்யை என்கிற நாமம் இரண்டுக்கும் ஒத்திருக்கையாலும், தைத்திரீயத்திற் சொன்னபுருஷவித்யைக்கு பலம் சொல்லாமையால் இதற்குபலம் எதைக்கற்பிக்கவேண்டுமென்னு மாகாங்க்ஷையில், சாந்தோக்யத்திற் சொன்ன புருஷவித்யையினுடைய பலத்தையே இதற்கும் பலமாகக்கற்பிக்க வேண்டுகையாலே இரண்டுக்கும் பலமொன்றாகையாலும். இரண்டுக்கும் பேதமில்லை என்று பூர்வபக்ஷம்.—நாமமிரண்டுக்கு மொன்றாயினும், மற்றவிஷயங்களி லநேகபேதமுண்டு. அவையாவன—தைத்திரீயத்தில் புருஷனுகிற யஜ்ஞத்திற்கு ஆத்மாவையஜமானனாகவும், ஶ்ரத்தையை அவனுக்குப் பத்நியாகவும், சரீரத்தை ஸமித்தாகவும், உதயகாலம், மத்யாஹ்நம், ஸாயங்காலங்களாகிற மூன்று காலங்களையும் மூன்று ஸவநங்களாகவும் சொல்லிற்று இவற்றை சாந்தோக்யத்திற் சொல்லவில்லை. சாந்தோக்யத்தில், அசநேச்சா முதலானவற்றை தீக்ஷாதிகளாகவும், புருஷாயுஸ்ஸை மூன்றுபாகமாகப்பிரித்து அவற்றை மூன்றுஸவநமாகவும் சொல்லிற்று, இவற்றைத் தைத்திரீயத்திற் சொல்லவில்லை. ஆகையால் இவ்விரண்டுக்கும் அங்கங்கள் பிந்நங்கள். மேலும், தைத்திரீயத்திற் சொன்ன புருஷவித்யைக்குப் பலாகாங்க்ஷையுண்டானால், இப்ப்ரகரணத்துக்கு முன் ந்யாஸ வித்யாப்ரகரணத்தில் அந்த ந்யாஸவித்யைக்கு பலமாகச் சொன்ன ப்ரஹ்மப்ராப்தியையே பலமாகக் கற்பிக்கவேண்டுகையாலே பலமும் பிந்நமாகையால் இரண்டு புருஷவித்யைகளுக்கும் பேதமுண்டு என்று ஸித்தாந்தம். ௩எஅ

அதி-௩௨. ஸூ-௩எ௯. வேதாத்யர்த்தபேதாத்.

(ஶ்ரு-ஶ்ரா-வ்யா.) வேதாத்யர்த்தபேதாத் - பிறக்கைமுதலிய அர்த்தங்களுக்குப்போலே அத்யயநரூபார்த்தத்துக்கு பேதமுண்டாகையாலே (இம்மந்த்ரம் வித்யாங்கமன்று). ௩எ௯.

(ஶ்ரு-ஹா.) உபநிஷதாரம்பத்தில், ஆதர்வணிகர்கள் "ஸர்வம்ப்ரவித்ய ஹ்ருதயம்ப்ரவித்ய" என்று துடங்கி, ஓதேவதையே! என்சத்ருவினுடைய ஸகலாவயவங்களேயும் பிள, முக்யமாக மார்பைப்பிள, நாடிகளை அறு, தலையை உடை என்று ப்ரார்த்திக்கின்றார்கள், தாண்டிகள், "தேவஸவித꞉ப்ரஸுவயஜ்ஞம்" ஓஸூர்யதேவனே! எங்களுடைய யஜ்ஞத்தையும் அதின் பலத்தையும் எங்களுக்கு நிறைவேற்றிவைக்கக்கடவாய் என்று ப்ரார்த்திக்கிறார்கள். சாட்யாயநீயர்கள், 'ஶ்வேதாஶ்வோஹரிதநீலோஸி" ஓ இந்த்ரனே ! வெள்ளேக்குதிரையையுடைய நீ பச்சைமணிபோலிருக்கிறாய், எங்களுக்கு ஸுகத்தையுண்டாக்கக்கடவாய் என்பார்கள். இப்படி ஒவ்வொரு சாகையாரும் ஒவ்வொரு மந்த்ரத்தைச் சொல்வார்கள். இம்மந்த்ரங்களெல்லாம், அங்குச்சொல்லிய வித்யைகளுக்கு அங்கமாகுமா, ஆகாதா என்னில்;வித்யாப்ரதிபாதகமான உபநிஷத்துக்களினருகில் இம்மந்த்ரங்களைச்சொல்வதற்கு வேறு ப்ரயோஜநமில்லை, சாண்டில்யவித்யை முதலியவற்றில் சொல்லிய ஹ்ருதயம் முதலிய ஸ்த்தாநங்களை இம்மந்த்ரங்களிலும் சொல்லியிருக்கிறது. ஆகையால் இம்மந்த்ரங்கள் வித்யைகளுக்கு அங்கங்களாகக்குறையில்லையென்று ஒருவன் சொல்வானாகில்,—சாண்டில்யாதிவித்யைகளில் ஹ்ருதயம் முதலானவற்றை ப்ரஹ்மத்துக்கு ஸ்த்தாநமாகச்சொல்லிற்று, இம்மந்த்ரத்தில், ஹ்ருதயத்தைப் பிளக்கச் சொல்லிற்று; ஆகையால் மந்த்ரத்தினுடைய அர்த்தத்துக்கும் வித்யைக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. ஏதோஒருபதத்தினுடைய அர்த்தம் ஒத்திருந்தால்போராது. எல்லா அர்த்தங்களு மொத்திருக்கவேணும், அதிங்கில்லை. இம்மந்த்ரம் அபிசார (மாரண) கர்மத்துக்கு ஒத்திருக்கையால் அதுக்கே அங்கமாகவேண்டும். இப்படி அர்த்தம் சரிப்படாதிருக்கச்செய்தே, ஸமீபத்திலோதப்பட்டதென்பதைக்கொண்டு அங்கமாகச் சொல்லக்கூடாதென்கிறார். (௩எக.)

(ரா-ஹா.) "ஶந்நோமித்ர꞉ ஶம்வருண꞉" என்றும் "ஸஹநாவவது" என்றும் இம்மந்த்ரங்களைத் தைத்திரீயர்கள் அத்யயநம் செய்கிறார்கள். இம்மந்த்ரங்களுக்கர்த்தம்— ஸூர்யன் வருணன் முதலியதேவதைகள் நம்மை ரக்ஷிக்கட்டுமென்றும், சிஷ்யாசார்யர்களான எங்களை ரக்ஷிக்கட்டும், நான் அத்யயநம் செய்தது வீர்யவத்தாயிடுக, என்றுமித்யாதி. இம்மந்த்ரங்கள் உபாஸநத்திற்கு அங்கங்களா அன்றா என்று ஸம்சயம்.—வித்யாப்ரகரணத்திற் கருகில் இம்மந்த்ரங்களோதப்பட்டிருக்கையால் இவைவித்யாங்கங்களென்று பூர்வபக்ஷம்—"ஸர்வம்ப்ரவித்ய ஹ்ருதயம்ப்ரவித்ய" என்கிற மந்த்ரம் ப்ரகரணாந்தரத்திலிருந்தாலும் த்வேஷ்டமான சத்ருவின் ஹ்ருதயத்தைப்பிள என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற இம்மந்த்ரம் ப்ரகரணாந்தரத்திற் சொல்லப்பட்ட அபிசாரஹோமாதிகளுக்கு சேஷமாய் அந்தக்கிரியைகளில்அநுஸந்திக்கத் தக்கதானாற்போலே, நாங்களத்யயநம் செய்தவேதம் எங்களை ரக்ஷித்திடுகவென்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற "ஸஹநாவவது" இத்யாதி மந்த்ரங்களும் அத்யயநத்திற்கே அங்கமாமல்லது வித்யைக்கு அங்கமாக மாட்டாது என்று ஸித்தாந்தம், ௩எக.

கய-கூ௩, ஸூ-௩ அ. ஹாநௌ தூபாயநஶப்தஶேஷத்வாத் குஶாச்சந்த꞉ஸ்துத்யுபகாநவத்தது க்தம்.

(ரா-வ்ய.) ஹாநௌ - விநாஶமாத்ரம் சொல்லப்பட்டாலும், உபாயநஶப்தஶேஷத்வாத் - புண்யபாபங்கள் மித்ரசத்ருக்களை யடைகிறதென்கிறவாக்யம் புண்யபாபங்கள் நசிக்கின்றனவென்கிற வாக்யத்திற்கு சேஷமா

கையாலே, (புண்யபாபங்களினுடைய விநாசஸங்க்ரமணங்களை ஸகலவித்யைகளிலும் அநுஸந்திக்கவேணும்) குசாநாம் வாநஸ்பத்யாஸ்த (குசை என்கிற பாத்ரத்தைச்சொல்லுகிற வாக்யத்திற்கும் தேவாஸுரர்களுடைய சந்தஸ்ஸைச்சொல்லுகிற வாக்யத்திற்கும் ஸூர்யனுடைய ஸ்துதியைச் சொல்லுகிற வாக்யத்திற்கும் காநத்தைச் செய்யச்சொல்லுகிற வாக்யத்திற்கும் ப்ரகரணாந்தரத்திலுள்ள வாக்யங்கள் சேஷமாமாப்போலே (இங்கும் ப்ரகரணாந்தரத்திலுள்ள விநாசபோதக வாக்யத்திற்கு ப்ரகரணாந்தரத்திலிருக்கிற புண்யபாபஸங்க்ரமணபோதகவாக்யமும்சேஷமாகிறது.) தத் - அந்த அர்த்தம், உக்தம் - பூர்வமீமாம்ஸையில் சொல்லப்பட்டது. ௩௰.

(ஶ்ரீ - பா.) ஆதர்வணிகஶ்ருதியில் "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" உபாஸகன் புண்யபாபங்களைவிட்டு முக்தியை யடைகிறானென்றும், சாட்யாயந ஶ்ருதியில் "தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்" உபாஸகன் முக்தியையடையும்போது அவனுடைய புண்யங்களை அவனுடைய இஷ்டர்களும், பாபங்களை சத்ருக்களும் அடைகிறார்களென்றும், கௌஷீதகிஶ்ருதியில், "தத் ஸுக்ருதது்ஷ்க்ருதே விதூநுதே தஸ்ய ப்ரியா ஜ்ஞாதய: ஸுக்ருதமுபயந்த்யப்ரியா து்ஷ்க்ருதம்" உபாஸகன் புண்யபாபங்களைவிட்டுவிடுகிறான். அதில் புண்யத்தை அவனுக்குவேண்டியவர்களும் பாபத்தை சத்ருக்களுமடைகிறார்களென்றும், ஓரிடத்தில் கர்மநாசத்தை மாத்திரமும், மற்றோரிடத்தில் வேறொருவ்யக்தியையடைகை மாத்ரமும், வேறோரிடத்தில் இரண்டையும் சொல்லிற்று. இரண்டையும் சொன்னவிடத்தில் ஸம்சயமேயில்லை. வேறொருவ்யக்தியை யடைகிறதென்றவிடத்திலும், ஓரிடத்தைவிட்டே மற்றோரிடத்துக்குப் போகவேண்டுகையால், அங்கு ஒன்றைச் சொன்னபோதிலும் இரண்டும் சொன்ன மாதிரியேயாம். விட்டுப்போகிறதென்ற முதல்பக்ஷத்தில், ஸம்சயம். அதாவது—அங்கு கர்மநாசத்தைமாத்திர மநுஸந்திக்கவேணுமா, அல்லது, அங்குச்சொல்லாததாய் வேறுசாகையில் சொல்லப்பட்டதான வ்யக்த்யந்தரப்ராப்தியையும் அநுஸந்திக்கவேணுமா என்று—அங்குச்சொல்லாமையாலும், வேறுசாகையில் சொல்லியிருந்தபோதிலும், அதை அந்தசாகையில் சொன்னவித்யையிலேயே அநுஸந்திக்கவேண்டுமாகையாலும், கர்மத்தை விடுகிறவனொருவனும் பற்றுகிறவன் வேறொருவனாகையாலே ஒருவனுடைய க்ருத்யமல்லாமையாலும், இங்கு இரண்டாவதை அநுஸந்திக்கவேண்டாமென்று பூர்வபக்ஷிசொன்னான்,—ஒருவனைவிட்டகர்மம் ஆஶ்ரயமின்றியே இராதாகையால் மற்றொருவனை அவஶ்யம் பற்றியேயாகவேண்டுமாகையால் அதை அநுஸந்திக்கவேண்டும். இங்குச்சொல்லாமல் வேறிடத்தில் சொல்லியிருந்தபோதிலும் இங்கு ஆவஶ்யகமாகில் அதையும் அநுஸந்திக்கவேணும் இதற்கு உதாஹரணம்—"குஶா வாநஸ்பத்யா:" என்று துடங்கி பால்லவிஶ்ருதியில், நாங்கள்செய்கிற ஸ்தோத்ரத்தைக் கணக்கெண்ணுகைக்காக வைத்துக்கொண்டிருக்கிற ஓ மரக்குச்சுகளே! நீங்கள் பெரியமரத்திலின்று முண்டானீர்கள், எங்களை ரக்ஷியுங்கோள் என்று ஸாமாந்யமாக மரக்குச்சு சொல்லப்பட்டது, இன்னமரமென்று ஏற்படவில்லை. சாட்யாயநஶ்ருதியில் "ஔதும்பரா:" அக்குச்சுகள் அத்திமரத்தினதென்று சொல்லுகையாலே அதையே இங்கும் எடுத்துக்கொள்ளுகிறார்கள். இன்னும்—"சந்தோபிர்தேவாநாம் பூர்வமஸுராணாம் பஶ்சாதிதி" என்று தொடங்கி தேவச்சந்தஸ்ஸையும் ஆஸுரச்சந்தஸ்ஸையும்

சொல்லச்சொல்லிற்று, இதுமுன், இது பின் என்று சொல்லவில்லை, மற்றோரிடத்தில், தேவச்சந்தஸ்ஸை முன்னதாகவும் அஸுரத்தை அப்புறமும் சொல்லச்சொல்லியிருக்கையால் அதேமாதிரியாகவே இங்கும் சொல்லுகிறார்கள். இன்னும், ஓரிடத்தில் ஷோடசிஸ்தோத்ரம் பண்ணச்சொல்லிற்று; இன்னகாலத்திலென்று சொல்லவில்லை. மற்றோரிடத்தில் ஸூர்யோதயகாலத்தில் செய்யவேண்டுமென்றுசொன்னபடியே இங்கும் செய்கிறார்கள். இப்படி இங்குச் சொல்லாமல் வேறுசாகையில் சொன்னதையும் அத்யாவஶ்யகமாகில் இங்கும் வைத்துக்கொள்ளவேண்டியதாகையால், இங்கும், கர்மத்துக்கு வ்யக்த்யந்தர ஸமாஶ்ரயணமும் அநுஸந்திக்கவேண்டுமென்று ஸித்தாந்தம். (௩-அ௦.)

(ஸா-ஹா.) तदा विद्वान् पुण्यपापे विधूय" உபாஸகன் தேஹாவஸாந காலத்தில் புண்யபாபங்களை உதறிவிட்டு பரமாத்மஸாம்யத்தை அடைகிறானென்றும், "अश्व इव रोमाणि विधूय पापम्" அக்காலத்தில் குதிரைமயிர்களை உதறினாற்போல் பாபங்களை உதறி பரமாத்மாவை அடைகிறானென்றும் சில இடங்களிலும், "तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम्" உபாஸகனுடைய தேஹாவஸாநகாலத்தில் அவனுடைய தநத்தை அவன்பிள்ளைகளடைகிறார்கள், அவன் புண்யத்தை அவனுடைய மித்ரர்களும் பாபத்தை சத்ருக்களும் அடைகிறார்கள் என்றும் மற்றோரிடத்திலும், "तत्सुकृतदुष्कृते विधूनुते तस्य प्रिया ज्ञातयस्सुकृतमुपयन्त्यप्रिया दुष्कृतम्" அக்காலத்தில் உபாஸகன் புண்யபாபங்களை உதறுகிறான். அந்தபுண்யத்தை இஷ்டர்களும் பாபத்தை சத்ருக்களும் அடைகிறார்கள் என்றும் வேறோரிடத்திலும் சொல்லியிருக்கிறது. ஓரிடத்தில் புண்யபாபநாசமும், மற்றோரிடத்தில் அக்கர்மங்களுக்கு மித்ர சத்ருக்களிடத்தில் ப்ராப்தியும், வேறோரிடத்தில் இவ்விரண்டும் சொல்லப்பட்டது. இம்மூன்றுவிதத்திலும் ஓரோவித்யைகளில் ஒவ்வொன்றைத் தனித்தனியாக அநுஸந்திக்கவேணுமா, அல்லது, ஸகல வித்யைகளிலும் இவ் விரண்டையும் அநுஸந்திக்கவேணுமா, வென்றுஸம்சயம்.—ஓரோரிடங்களில் ஒவ்வொன்றைத் தனித்தனியே சொன்னபடியால் ஏதாவதொன்றை யநுஸந்தித்தால்போருமென்றுபூர்வபக்ஷம்.—புண்யபாபங்கள் வேறொருத்தனை யாஶ்ரயிக்கும்போது ஒருத்தனைவிட்டே வரவேணுமென்பது ஸித்தம்; ஆகையால், வேறொருத்தரைப் புண்யபாபங்கள் ஆஶ்ரயித்ததை அநுஸந்திக்கும்போது அக்கர்மங்கள் ஒருவனை விட்டுவந்ததையும் அநுஸந்திக்கவேணுமென்பதும் ஸித்தம். ஆதலால் ஒருவனைவிடுகிறதென்று சொன்ன வாக்யமும் வேறொருவனை ஆஶ்ரயிக்கிறதென்று சொன்னவாக்யமும் இரண்டும் சேர்ந்து ஒரே அர்த்தத்தை விதிக்கையால் ஸமஸ்தவித்யைகளிலும் இரண்டையும் அநுஸந்திக்கவேணும். இவ்விரண்டுவாக்யங்களும் வெவ்வேறு ப்ரகரணத்திலிருக்கையால் இவ்விரண்டும் சேர்ந்து ஓரர்த்தத்தைச் சொல்லுமோவென்னில், சொல்லுமென்பதற்கு த்ருஷ்டாந்தம்—'वानस्पत्याः कुशाः' யஜ்ஞத்தில் குசை என்றுபேரையுடைய பாத்ரம் பூவில்லாமல் காய்க்கிற மரத்தினால் செய்யவேணும் என்று ஓரிடத்திற் சொல்லிற்று. இவ்விதமான மரங்களநேகமாகையால் எந்த மரத்தினாற் செய்யவேண்டுமென்னில், "औदुम्बर्यः कुशाः" அந்தகுசையென்கிற பாத்ரம் அத்திமரத்தினாற் செய்யவேணுமென்று வேறோரிடத்திற் சொல்லப்பட்ட வாக்யம் இவ்வாக்யத்தோடு சேர்ந்து பூவாமற்காய்க்கிற அத்திமரத்தினால் அப்பாத்ரம் செய்யவேணுமென்று ஓரர்த்தத்தைச் சொல்லுகிறது.—"देवासुराणां छन्दांसि" தேவாஸுரர்களுடைய சந்தஸ்ஸுக்களைச் சொல்லவேண்டுமென்று ஓரிடத்திற்சொல்லிற்று. அவற்றில் தேவர்களின் சந்தஸ்ஸா அஸுரர்களின்

சந்தஸ்ஸா முன்னே சொல்லவேண்டியதென்னும் சங்கையில் "தெவஹூஊரஂஷி வஷவ-ழ்" தேவர்களின் சந்தஸ்ஸை முன்னம் சொல்லவேணுமென்று ப்ரகரணாந்தரத்திற் சொல்லப்பட்ட வாக்யம் இப்ப்ரகரணத்திலுள்ள இவ்வாக்யத்தோடு சேர்ந்து இரண்டும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது.—"ஹிரணெ நஷொஷஶி நஷொஸா த்ரீ-வாகரொதி" ஷோடசி என்கிற ஸாமத்தைக்கானம் செய்யவேணுமென்று ஓரிடத்திற்சொல்லிற்று. இதை எப்போது கானம்செய்யவேணுமென்னில், "ஸமயாவிஷிதெ தஸூஷெர ஷொஶஶி நஷொஸா த்ரீ-வாகரொதி" ஸூர்யனுதித்த வநந்தரம் இந்த ஷோடசி என்கிற ஸாமத்தைக்கானம் செய்யவேணுமென்று மற்றோரிடத்திற் சொல்லப்பட்ட வாக்யம் இதோடுசேர்ந்து இரண்டும் ஒரே அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிறது— "ஜுகூிஜஉவ மாயணி" ருத்விக்குக்கள் கானம்செய்கிறார்கள் என்று ஒருப்ரகரணத்தில் சொல்லிற்று "நாஷுர்ய ரூவ மாயெக" அத்வர்யுகானம் செய்யக்கூடாது என்று ப்ரகரணாந்தரத்திலிருக்கிற வாக்யம் இத்தோடுசேர்ந்து இரண்டும் அத்வர்யுவ்யதிரிக்தர்களான ருத்விக்குக்கள் கானம்செய்யவேணுமென்று ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது. அதுபோலவே இவ்விரண்டுவாக்யங்களும் வெவ்வேறு ப்ரகரணத்திலிருந்தாலும் இரண்டும்சேர்ந்து ஓரர்த்தத்தைச் சொல்லக்கூடும். இவ்விதமாகவே மீமாம்ஸகர்களும் ஸமர்த்தித்திருக்கிறார்கள் என்று ஸித்தாந்தம். ந-அ0.

அதி. கூச. ஸூ. ந-அக. ஸாம்பராயெ தர்த்தவ்யாஹாவா
த்தயாஹ்யெ நெ.

(ஶ்ரீ-பா-வ்ய.) தர்த்தவ்யாஹாவாக - (தேகவியோகாநந்தரம்)கடக்கத்தக்க (அநுபவிக்கத்தக்க) கர்மம் இல்லாமையாலே, ஸாம்பராயெ - தேஹவியோககாலத்திலேயே, (புண்யபாபநாசங்களை த்யாநிக்கவேண்டும்) தயாஹி - சரீரநாசகாலத்திலேயே கர்மம் நசிக்கிறதென்று, அநெ-வேறு சாகிகளும், அயீயதெ - அத்யயநம் செய்கிறார்கள். ந-அக.

(ஶ்ரீ-பா-ஸா.)புண்யபாபவிநாசங்களைச்சிந்திக்கும்போது,அப்புண்யபாபங்கள் சரீரவியோககாலத்திலேயே ஸம்பூர்ணமாக நசித்ததாகில் அந்தகாலத்திலே நசிக்கிறதென்றே சிந்திக்கவேண்டும். சரீரம் கழியும்போது சிலகர்மங்களும் அர்ச்சிராதிமார்க்கத்தில் போம்போது ப்ரக்ருதிமண்டலத்தைத் தாண்டிப்போம்வரையில் வழியில் கொஞ்சம் கொஞ்சமாகவும் சிலகர்மங்களும் கழிகிறதாகில் அவ்விரண்டு காலங்களிலும் சிந்திக்கவேண்டுமாகையால் அக்கர்மநாசமுண்டாகிற காலத்தை இங்கு முன்னம் நிர்ணயிக்கவேண்டும்.— புண்ய பாபங்கள் சரீரவியோககாலத்திலேயே ஸம்பூர்ணமாய் நசிக்கின்றனவா, அல்லது அப்போது சிறிதும் அர்ச்சிராதி மார்க்கத்தில் சிறிதும் நசிக்கின்றனவா என்று ஸம்சயம்.— வேதத்தில் சரீராவஸாநகாலத்தில் நசிக்கிறதென்று ஓரிடத்திலும் அர்ச்சிராதிமார்க்கத்தில்நசிக்கிறதென்று மற்றோரிடத்திலும் சொல்லியிருக்கிறது. மேலும் அர்ச்சிராதி மார்க்கமாகப் போம்போது ஸூக்ஷ்மசரீரத்தோடே புருஷன் போகிறான். சரீரமில்லாதவன் கமநம் முதலிய ஒருவ்யாபாரம் செய்கைக்கு யோக்யதையற்றவனாகையால் கமநஸாதநமாக சரீரம் ஒப்புக்கொள்ளவேணும். சரீரஸ்திதிக்குக் காரணம் புண்ய பாபரூபகர்மங்கள்; அவை சரீரவியோககாலத்திலேயே நசித்துப்போனால் ஸூக்ஷ்மசரீரமும் அப்போதே நசிக்கிறதென்று ஒப்புக்கொள்ளவேணும். அந்தசரீர

மில்லாவிடில் அர்ச்சிராதிமார்க்கமாக கமநம் ஸித்தியாது. அதற்காக அந்தஸூக்ஷ்ம சரீரத்துக்குக் காரணமாகிய சிலகர்மங்கள் சரீரவியோகாநந்தரத்திலும் இருக்கிற தென்றும், அவை ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்துபோனபிறகு நசிக்கிறதென்றும் ஒப்புக்கொள்ளவேணுமென்று பூர்வபக்ஷம்.—சரீரவியோககாலத்திலேயே ஸகல கர்மங்களும் நசிக்கிறதென்று "அச்வ இவ ரோமாணி" என்கிற ஶ்ருதியில் சொல்லுகையால் அதற்கநுகுணமாகவே மற்றவாக்யங்களையும் அந்வயித்துக்கொண்டு சரீர வியோககாலத்திலேயே ஸகல கர்மங்களும் நசிக்கிறதென்று அங்கீகரிக்கவேணும். அர்ச்சிராதிகதிக்கு ஸாதநமானஸூக்ஷ்ம சரீரத்திற்குக் காரணமாகிய கர்மங்கள் நசித்துப்போனபோதிலும் இவனுடைய உபாஸந பலத்தினால் ஸூக்ஷ்ம சரீரம் நின்றிருக்கிறதென்று அங்கீகரிக்கவேணும். இவ்வர்த்தத்தையே மற்றொருசாகையும் சொல்லுகிறது. ஆகையாலே சரீராவஸாந காலத்திலேயே ஸகலகர்மநாசங்களையும் சிந்திக்கவேணுமென்று ஸித்தாந்தம். ௩-௮௧.

ஸூ-௩-௮௨. ச்சந்தத உபயாவிரோதாத்.

(ஶ-ரா-வ்யா.) உபயாவிரோதாத் - இரண்டு ஶ்ருதிக்கும் விரோதம் வாராமற்படிக்கு, ச்சந்தத: - யதேச்சமாக, (மற்றொருஶ்ருதியை அந்வயித்துக்கொள்ளவேணும்.) ௩-௮௨.

(ஶ-ஸா.) புண்யபாபரூபகர்மம் யமநியமாதியினால் நசிக்கவேணும். அந்தயம நியமாதிகள் இந்தசரீரமுள்ளபோதே செய்யவேணும் சரீரம் கழிந்தபின் செய்ய முடியாது. இந்தசரீரத்தோடு இருக்கும்பொழுது செய்த யமாதிகளினால் நசியாமல் சிலகர்மம் அர்ச்சிராதியமார்க்கம் போமளவு மிருக்குமாகில், அங்கேபோனபின்பு அக்கர்மம் எதினால் நசிக்கிறது. அதை நசிப்பிக்கைக்காக யமநியமாதிகள் செய்ய வேண்டியதற்கு சரீரமோ இல்லை. இந்த தோஷம் வாராமைக்காக இவன் சரீரத்தை விடும்பொழுதே கர்மம் நசிக்கிறதென்று ஒப்புக்கொள்ளவேணுமென்கிறார். (௩-௮௨)

(ரா-ஸா.) ஆனால் அர்ச்சிராதிமார்க்கத்தில் கர்மம் நசிக்கிறதென்று சொல்லுகிற ஶ்ருதிக்குவிரோதம் வாராதோவென்னில், "அச்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோ:"குதிரைமயிர்களை உதறுகிறாப்போலவும் ராகுவின் முகத்தில் நின்றும் சந்த்ரன் வெளிக்கிளம்பினாற்போலவும் இந்தசரீரத்தோடுகூட கர்மங்களையும் உதறிவிடப்போகிறான் என்கிறஶ்ருதிக்கும், "தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே" இச்சரீரத்தைவிடுகிற பர்யந்தமே விளம்பம், இச்சரீரம் விடும்போது ஸகலகர்மங்களையும் விட்டுவிட்டு பரமாத்மாவை அடைகிறான் என்று சொல்லுகிற ஶ்ருதிக்கும் விரோதம்வாராமற்படி, "ஸ ஏதம் தேவயாநம் பந்தாநமாபத்ய ... விரஜாம் நதீம் தாம் ... ஸுக்ருததுஷ்க்ருதே விதூநுதே" அந்தபுருஷன் தேவயானமார்க்கத்தை யடைகிறான். விரஜைக்குவருகிறான். புண்யபாபங்களை உதறுகிறான். என்ற ஶ்ருதியை, புண்யபாபங்களை உதறுகிறான் தேவயாநத்தை அடைகிறான் விரஜைக்குவருகிறான்என்று பதங்களைமாறுட்டி அந்வயித்துக்கொள்ள வேண்டியது. இப்படி அந்வயித்துக்கொண்டால் அந்த ஶ்ருதிக்கும்விரோதம் வராது. ௨-௮௨.

ஸூ-௩-௮௩. கதேரர்த்தவத்த்வமுபயதா அந்யதா ஹி விரோத:.

(ஶ-வ்யா.) கதே: - அர்ச்சிராதிகமநத்துக்கு, அர்த்தவத்த்வம் - ப்ரயோஜநத்தை யுடைத்தாயிருக்கை, (ஆகையால்) உபயதா - இருவகையும்

(அங்கீகரிக்கவேணும்). அந்யதா - இல்லாவிடில், தோஷ: - தோஷம் வரும். ௩ அ௩

(ரா-வ.) உபயதா - சரீரவியோககாலத்திலும் அர்ச்சிராதிமார்க்கத்திலுமாக இரண்டிடத்திலும் (கர்மம் நசிக்கிறதென்று ஒப்புக்கொண்டால்தான்,) மதேஃ - அர்ச்சிராதிகதியைச் சொல்லுகிறஶ்ருதிக்கு, அர்த்தவத்வம் - அர்த்தத்தையுடைத்தாகை (ப்ரயோஜநம்)ஸித்திக்கும். அந்யதாஹி- வேறு விதமானால், விரோத: - அந்தஶ்ருதிக்கு விரோதம்வரும். ௩ அ௩.

(ஶ-ஹா.) ஸகுணப்ரஹ்மோபாஸநம் சொன்னபின் அர்ச்சிராதிமார்க்கம் சொல்லியிருக்கிறது. நிர்க்குண ப்ரஹ்மோபாஸநம் சொன்னபின் அம்மார்க்கம் சொல்லவில்லை. இங்குச்சொல்லாவிடினும் அங்குச்சொன்ன அர்ச்சிராதி மார்க்கத்தை இங்கும்வைத்துக்கொள்ளவேணுமா, வேண்டாமா என்னில், தேசாந்தரம் போகவேண்டுமாகில் அர்ச்சிராதி மார்க்கமாகப் போகவேணும், அப்படிப்போக வேண்டியவன் ஸகுணப்ரஹ்மோபாஸநம் செய்தவனே. நிர்க்குணப்ரமோபாஸநம் செய்தவன் இங்கே இருந்தே அவித்யாவிநிர்முக்தனாய் ப்ரஹ்மஸ்வரூபியாய் விடுகிறான். இவனுக்கு வேறிடம் போகவேண்டியதில்லாமையால் அர்ச்சிராதிமார்க்கம் வேண்டியதில்லை. இவனும்போகிறானென்னில், “நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி” என்கிற ஶ்ருதியோடுவிரோதிக்கும். ஆகையால் ஸகுணப்ரஹ்மோபாஸகனுக்கு அர்ச்சிராதி மார்க்கமென்றும், நிர்க்குணப்ரஹ்மோபாஸகனுக்கு அதில்லை யென்றும் அங்கீகரிக்கவேண்டும். ஒருஊருக்குப்போகவேண்டுமாகில் அவனுக்கு வழி வேணும், தன்சரீரத்திலுள்ள ரோகம் கழியவேண்டியவனுக்கு வழிவேண்டியதில்லை. அம்மாதிரி இங்கும் கண்டுகொள்க. என்று ஸித்தாந்தம். ௩ அ௩.

(ரா-ஹா.) இதில் அநுபபத்தியை சங்கிக்கிறார் — “தேவயாநம் பந்தாநமாஸாத்ய” அர்ச்சிராதிமார்க்கமாகப்போகிறான் என்றுஶ்ருதிசொல்லுகிறது. சரீரமுள்ளவனே ஓரிடத்திற்குப்போகவல்லவன்; சரீரத்துக்குக்காரணம்புண்யபாபங்கள். புண்யபாபங்கள் சரீராவஸாநகாலத்தில் நசித்தால் அதினாலுண்டான ஸூக்ஷ்மசரீரமும் நசிக்கும், அப்போது போகவல்லமையற்றவனாகிறான். இப்படியாகில் அர்ச்சிராதிமார்க்கமாகப் போகிறவனொருவனுமில்லாமையால் இவ்வர்த்தத்தைசொல்லுகிற ஶ்ருதிநிரர்த்தகமாய்விடும் என்று பூர்வபக்ஷம். ௩ அ௩.

ஸூ-௩ அ௪. உபபந்நஸ்தல்லக்ஷணார்த்தோபலப்தேர்லோகவத்.

(ஶ-வ்யா-ஹா.) லோகவத் - லோகத்தில் ஒருக்ராமத்துக்குப் போக வேண்டியவன் ஒருவழியைப் பிடித்துக்கொண்டு போமாபோலே, தல்லக்ஷணார்த்தோபலப்தே: - அந்த அர்ச்சிராதிகதியைக் காரணமாகஉடைய (அவ்வழியாகப்போய், பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே சேஷசாயியாகிய பரமபுருஷனை அடைகிறவனுக்கு அதை அடைகையாகிற) ப்ரயோஜநம் ஸித்திக்கைக்காக, உபபந்ந: - இப்படி அர்ச்சிராதிமார்க்கத்திற் சொல்வதே சரியானது. ௩ அ௪.

(ரா-வ்.) லோகவத் - லோகத்திற்போலே, தல்லக்ஷணார்த்தோபலப்தே: - அந்த லக்ஷணத்தையுடைய, (அகர்மவஶ்யமான) சரீரம் (முக்தனுக்குக்) காண்கையாலே, உபபந்ந: - புண்யபாப நாசாநந்தரத்திலும் அர்ச்சிராதிகமநம் கூடும். ௩ அ௪.

(ஶா-ஹா) அந்தசங்கையைப் பரிஹரிக்கிறார்—ஸகல கர்மங்களும் நசித்து முக்தனான பிறகு "ஸஹஸ்ராஹவதிகஸ்யஸ்யெவ-புஷ- ஜொஶெகஷ-காமெவா ஶொஹவதி" அந்த முக்தபுருஷன் அகர்மவஶ்யனாகிறான். அவனுக்கு ஸர்வலோகங்களிலும் யதேச்சமான ஸஞ்சாரமுண்டாகிறதென்று கர்மசூன்யனுக்கும் கூட ஸங்கல்பமாத்ரத்தினால் சரீரமும் அச்சரீரத்தோடு லோகாந்தரங்களில் கமனமும் சொல்லுகிறது. அதுபோலவே சரீராவஸானகாலத்தில் ஸகலகர்மங்களின் நாசம்பிறந்தாலும் பரமாத்மோபாஸனபலத்தினால் அர்ச்சிராதி மார்க்கமாகப் போகைக்காக ஸூக்ஷ்மசரீரம் மாத்ரமிருக்கலாம். அத்துடன் அர்ச்சிராதிமார்க்கமாகப் போகலாமாகையால் அந்தஶ்ருதிக்கு விரோதமில்லை. இதற்கு த்ருஷ்டாந்தம் காண்பிக்கிறார். லோகத்தில் சக்ரவர்த்தியான ராஜாவை யாஶ்ரயித்தவர்கள் மற்ற மநுஜருக்கு அடையத்தகாத உயர்ந்தபோகங்களை அநுபவிக்குமாப்போலே ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியான பரமாத்மாவை உபாஸனம் செய்தபுருஷன் இஷ்டமானவற்றையெல்லாம் அநுபவிக்கலாமாகையால் ஸூக்ஷ்மசரீரமும் இருக்கலாம் என்று ஸித்தாந்தம்.

௩-௪-௪.

ஸூ - ௩-௩-௩௨. யாவஷயிகாரஶவஹிதிராயிகாரிகாணாஃ.

(ஶ-ஶா-வ்ய.) ஆயிகாரிகாணாஃ - (லோகமர்யாதாஸ்த்தாபநத்தில்) அதிகாரத்தை யடைந்திருக்கிற வஸிஷ்ட்டாதிகளுக்கு, யாவஷயிகாரஃ - (அவரவர்களுடைய) அதிகாரம் முடியுமளவும், அவஹிதிஃ - இருப்பு (உண்டு - நாசமில்லை.)

௩-௩-௩௨.

(ஶ-ஹா.) ஸகுணவித்யோபாஸகன் அர்ச்சிராதி மார்க்கத்தினால் ப்ரஹ்மலோகத்தையடைகிறானென்றும், நிர்க்குண வித்யோபாஸகன், அதாவது-அத்வைத ஜ்ஞானமுண்டானவன் முக்தனாகிறானென்றும் கீழ்சொல்லிற்று. இதில், சிலர்க்கு அத்வைத ஜ்ஞானமுண்டான பின்பும் இஸ்ஸம்ஸாரத்தில் ஜந்மமும் ஸ்த்தியும் புராணாதிகளினால் தெரியவருகிறதாகையால் அத்வைத ஜ்ஞானம் பிறந்தவர்களெல்லாருக்கும் முக்தியுண்டென்னக் கூடாதென்று சங்கித்து அதைப்பரிஹரிக்கிறார்—முன்பு அவாந்தரதமா என்று பெயரையுடைய ஒரு ஜ்ஞானாதிகரான ருஷியிருந்தார், அவர்விஷ்ணுவினுடைய கட்டளையினால் த்வாபரயுகத்தின் கடைசியில் க்ருஷ்ணத்வைபாயநராய்ப் பிறந்தார். ப்ரஹ்ம ஜ்ஞானியாகிய ஸநத்குமாரரும் ஸ்கந்தனாய்பிறந்தார் என்று இப்படி அத்வைத ஜ்ஞானமுள்ளவர்களாக ஶாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்ட அநேகர் பிறப்பையடைந்தார்களென்று சொல்லுகையாலே, ப்ரஹ்ம ஜ்ஞானம் பிறந்தவர்களுக் கெல்லாம் மோக்ஷமுண்டென்கிற நியமமில்லையேயென்னில்,—கீழ்ச்சொன்னவர்கள் வேதப்ரவர்த்தநாதிலோகோபகாரார்த்தமாகப் பரமபுருஷனால் ஒவ்வொரு அதிகாரத்தில் நியமிக்கப்பட்டார்கள். அவர்களுக்கு முதலிலேயே ஐந்தாறு ஜந்மங்கள்வரையில் அநுபவிக்கத்தக்க ப்ராரப்தகர்ம மேற்பட்டிருந்தது. அக்கர்மமுள்ளவரையில் அவ்வதிகாரத்தைச் செலுத்திப் பின்பு மோக்ஷத்தையடைவார்கள். ப்ரஹ்மஜ்ஞானம் ப்ராரப்தகர்மத்தைக் காட்டிலும் வேறானஸஞ்சிதம் ஆகாமி என்கிற கர்மத்தையே நசிப்பிக்கும். ப்ராப்தமென்பது அநுபவித்தே தீர வேண்டும் ஆகையால் ப்ராரப்த கர்மாவஸானத்தில் மோக்ஷ முண்டென்பது நிஶ்சயம்.

௩-௩-௩௨.

(ஶா-ஹா.) பரமாத்மஸ்வரூபத்தை யறிந்த ஜ்ஞானிகளுக்கு இச்சரீரம் கழிந்த உடனே புண்யபாபங்கள் கழிந்துவிடுகிறது, மறுஜந்மமும்கிடையாது, ஸூக்ஷ்மசரீரம் மாத்திரம் விரஜாப்ராப்தி வரையிலிருக்கிறது என்றார்கீழ். மஹாஜ்ஞாதாவென்று ப்ரஸித்தரான வஸிஷ்ட்டர் முதலானோர்மறுபிறப்புபிறந்ததாகவும் புத்ரமரணாதிகளி

ஞலுண்டானது; காதிகளையநுபவித்ததாகவும் சாஸ்த்ரங்களில் காண்கிறதேயென்னில், அர்ச்சிராதி மார்க்கத்தில் போவதற்கு அடுத்தமுன் ஜந்மத்திலுள்ள சரீரம்நசித்த உடனே அவனுக்கு புண்யபாபங்கள் முதலிய ஸம்ஸாரம் நசிக்கிறதென்றோம். வஸிஷ்டாதிகள் ஒவ்வொரு அதிகாரத்தைப் பற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு ப்ராரப்தகர்மம் இன்னும் நசிக்கவில்லை. அவ்வதிகாரத்தின் முடிவிலேதான்நசிக்கும் அதைதத்வஜ்ஞாநம் நசிப்பியாது. மற்ற ஸஞ்சிதாதிகர்மங்களைத்தான் நசிப்பிக்கும் ஆகையால் அவர்களுக்கு ஸம்ஸாரம் காண்கிறதென்று சொல்லுகிறார். ௩௨௫.

ஸூ-௩௨௬. ௩-௩-௩௧. அநியம꞉ ஸர்வேஷாமவிரோத꞉ ஶப்தாநுமாநாப்⁴யாம்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ஸர்வேஷாம் - எல்லா உபாஸகர்களுக்கும், (அர்ச்சிராதிகதியுண்டு) அநியம꞉ - (சிலர்க்குண்டு சிலர்க்கில்லையென்கிற) நியமமில்லை. ஶப்தாநுமாநாப்⁴யாம் - (இப்படிச்சொன்னால்தான்) ஶ்ருதிஸ்ம்ருதிகளோடு, அவிரோத꞉ - விரோதமில்லை. ௩௨௬.

(ஶ்ரு-ப்ர-ஸா.) பஞ்சாக்நிவித்யை உபகோஸலவித்யை தஹரவித்யைமுதலான சிலவித்யைகளில் அர்ச்சிராதிகதி சொல்லியிருக்கிறது, மதுவித்யை சாண்டில்யவித்யை முதலானவற்றில் சொல்லவில்லை. இதனால் தோற்றுகிற தென்னவென்றால்; எந்தவித்யையில் அர்ச்சிராதிகதி சொல்லியிருக்கிறதோ, அந்தவித்யையை உபாஸநம் செய்கிறவனே அவ்வழியினால் போகிறான், மற்றவித்யையை உபாஸிக்கிறவன் போகிறதில்லை. அப்படி ஓரிடத்தில் சொன்னவழியை மற்ற எல்லா இடங்களிலுமுண்டென்றொப்புக் கொள்ளில், எங்கேனுமோரிடத்தில் சொன்னதே அமைந்திருக்க இரண்டுமூன்றிடங்களில் சொன்னது வ்யர்த்தமாகும் என்பதற்கு ஸமாதாநமாவது—வாஜஸநேயத்திலும் சாந்தோக்யத்திலும், "ய ஏவமேதத்³விது³ர்யே சாமீ அரண்யே ஶ்ரத்³தா⁴ம் ஸத்யமுபாஸதே தேঽர்சிஷமபி⁴ஸம்ப⁴வந்தி" அந்த பஞ்சாக்நிவித்யையை இம்மாதிரியாக யாவர் சிலர்அறிகிறார்களோ, அவர்களும், யாவர் சிலர் ஶ்ரத்தையென்றும் ஸத்யமென்றும் சொல்லப்படுகிற பரமாத்மாவை உபாஸிக்கிறார்களோ, அவர்களும். அர்ச்சிராதி மார்க்கமாகப்போகிறார்களென்று பரமாத்மோபாஸநம் செய்கிறவர்களனைவர்க்கும் அர்ச்சிராதிமார்க்கமாகப் போகிறார்களென்று சொல்லுகையாலே,பரமாத்மோபாஸநம் செய்கிறவர்களனைவர்க்கும் அர்ச்சிராதி கதியுண்டு. ஓரிடத்தில் சொன்னதே அமைந்திருக்க பஞ்சாக்நிவித்யை உபகோஸலவித்யை முதலான பலவிடங்களில் அம்மார்க்கத்தைச்சொன்னது அவ்வித்யைகளில் நியமேந அம்மார்க்கத்தை த்யாநிக்கவேணுமென்று மற்றவித்யைகளில் த்யாநிக்கவேணுமென்கிற நியமமில்லையென்றும் தெரிவிக்கைக்காக ௩௨௬.

ஸூ-௩௨௭. ௩-௩-௩௨. அக்ஷரதி⁴யாம் த்வவரோத⁴꞉ ஸாமாந்யதத்³பா⁴வாப்⁴யாமௌபஸத³வத்தது³க்தம்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ஸாமாந்யதத்³பா⁴வாப்⁴யாம் - (உபாஸ்யமான ப்ரஹ்மம்) எல்லா அக்ஷரவித்யைகளிலு மொன்றாகையாலும், (அஸ்தூலத்வம் முதலானவை) அந்த ப்ரஹ்மத்துக்கு அஸாதாரணமாகையாலும், அக்ஷரதியாம் - அக்ஷர (ப்ரஹ்ம) ஸம்பந்தியான அஸ்தூலத்வாதி விஷயகமான புத்திகளுக்கு, அவரோத⁴꞉ - உபஸம்ஹாரம் (உண்டு). ஔபஸத³வத் - உபஸதஸம்பந்தியான ஸாமம்போலே, தது³க்தம் - குணம் ப்ரதாநத்தை யநுவர்த்திக்குமென்பது பூர்வமீமாம்ஸையிலும் சொல்லப்பட்டது. ௩௨௭.

(ஶ்ரு-ப்ர-ஸா.) அதர்வணஶ்ருதியில் "யத்தத³த்³ரேஶ்யமக்³ராஹ்யமகோ³த்ரமவர்ணம்" ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷத்துக்கு விஷயமென்று, மற்றப்ரமாணங்களுக்கும் விஷயமன்று, கோத்ரமும் கிடையாது, வர்ணமும் கிடையாது என்று தொடங்கிஅநேகமான ப்ராக்ருதகுணங்களை நிஷேதித்திருக்கிறது; வாஜிஸநேயத்தில், "அஸ்தூ²லமநண்வஹ்ரஸ்வமதீ³ர்க⁴ம்" அந்தப்ரஹ்மம், ப்ரக்ருதி ஸம் பந்தாதீநமான பெருமன் சிறுமன் குறுகல் நெடுகல் முதலான குணங்களற்றது என்று அநேககுணங்களை நிஷேதித்திருக்கிறது. இந்த இரண்டு அக்ஷரவித்யையிலும் அங்கங்குசொல்லப்பட்ட குணநிஷேதத்தை அங்கங்கேயநு ஸந்திக்கவேணுமா, அல்லது, எல்லா இடங்களிலும் சொன்னகுணநிஷேதத்தை எல்லாவிடங்களிலு மநுஸந்திக்கவேணுமா என்று விசாரிக்கில்; ஓரிடத்திற் சொன்னகுணத்தை மற்றோரிடத்திலநுஸந்திக்க ப்ரயோஜநமில்லை, அப்படியநுஸந்திக்கில், எல்லாகுணங்களையு மெல்லாவிடங்களிலநுஸந்திக்கவேண்டுகையால் வித்யாபேதமேயற்றுப் போய்விடும் என்று பூர்வபக்ஷிசொன்னான்—அக்ஷரவித்யாஸம்பந்தமாக எங்கெங்கு என்னென்ன குணங்களை நிஷேதித்திருக்கிறதோ, அதை யெல்லாம் எல்லாவிடங்களிலும் அநுஸந்திக்கவேண்டும். அந்தந்த ஶ்ருதிகளிற்சொன்ன அஸ்தூலத்வம் முதலியவை, அக்ஷரமென்று சொல்லப்படுகிற ப்ரஹ்மத்தினுடைய குணங்கள். அக்ஷரமென்பது இக்குணங்களையுடையது. பரமாத்மாவை யநுஸந்திக்கும்போது அவனுடைய அஸாதாரணமான தர்மங்களைக் கொண்டு அநுஸந்திக்கவேண்டும். முன்பு, "ஆநந்தா³த³ய꞉ ப்ரதா⁴நஸ்ய" என்ற ஸூத்ரத்தில் ஆநந்தம் முதலியவை பரமாத்மாவினுடைய குணங்களாகச் சொல்லப்பட்டது, அந்த கேவல ஆநந்தாதிகள் ஜீவனுக்கும் உண்டு. ஆகையால்அவை மாத்திரம் அவனுக்கு அஸாதாரண தர்மமாகமாட்டாது. சேதநனுக்கு யாதொருப்ராக்ருதஸம்பந்தமும் தததீநமான ஸ்தூலத்வாதி குணங்களுமுண்டு, அவற்றுடன்கலசாத ஆநந்தாதிகளே அவனுக்கு அஸாதாரண தர்மங்களாயிருக்கும். ஆகையால்அவை எல்லாஅக்ஷரவித்யைகளிலு மநுஸந்தேயமாயிருக்கும். இதற்கு த்ருஷ்டாந்தம்-ஜாமதக்ந்யயாகத்தில், உபஸதத்துக்கு மந்த்ரம் ஸாமமாய் அதை அந்த ஸாமஸ்வரத்தோடே சொல்லவேண்டியிருந்தபோதிலும் யஜுர்வேதி அதைப்பண்ணும்போதும் அந்த உபஸத்தென்கிற குணியோடு ஸம்பந்தித்த அம்மந்த்ரமாகிற குணத்தையே விநியோகப்படுத்தவேண்டும், அதுபோலிங்கும் காண்க. இந்தந்யாயம் பூர்வமீமாம் ஸாசாஸ்த்ரத்திலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது—சங்கரபாஷ்யவிஷம்—அவ்வவ இடங்களில்சொன்ன அந்தந்த குணநிஷேதங்களையே அநுஸந்திக்கில், அவைதவிர மற்றகுணங்களுடைய நிஷேதம் தோற்றுமையால் ப்ரஹ்மத்தை நிர்குணமென்றநுஸந்தித்ததாகாது ஆகையால் எல்லா குணநிஷேதங்களையு மெல்லாவிடங்களிலு மநுஸந்திக்கவேணும்—என்று விஸ்தாரந்தம்.— ௩௮௭.

ஸூ - ௩௮௮. இயதா³மநநாத்.

(ஶ்ரு-வ்ய) ஆமநநாத் - (வாக்யசேஷத்தில் பரமாத்மாவைச்) சொல்லுகையாலே, இயத் - இவ்வளவென்கிற பரிச்சேதத்தையுடைய பரமாத்மாவே சொல்லப்பட்டான். ௩௮௮.

(ப்ர - வ்ய) ஆமநநாத் - நன் க த்யாநிக்கை நிமித்தமாக இயத் இவ்வளவுகுணமே (உபஸம்ஹாரம்செய்யவேண்டும்.) ௩௮௮.

(ஶ்ரு-ஸா.) ஶ்வேதாஶ்வதரத்தில், "த்³வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா²யா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரந்ய꞉ பிப்பலம் ஸ்வாத்³வத்தி

ஸ்வாத்வத்த்யநச்நந்நந்யோ அபிசாகசீதி" இரண்டுபக்ஷிகள் ஸமாநகுணத்தையுடையதுகள், தோழமையுள்ளதுகள், ஒரு சரீரமாகிற மரத்தை அடைந்திருக்கிறன. அவற்றில் ஜீவனாகிய ஒருபக்ஷி புண்யபாபங்களின் பலமான ஸுகதுக்கங்களை யநுபவிக்கிறது, பரமாத்மாவாகிய மற்றொருபக்ஷி அநுபவிக்கிறதில்லை, செவ்வையாய் விளங்குகிறது என்று சொல்லியிருக்கிறது. கடச்ருதியில், "ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே சாயாதபௌ ப்ரஹ்மவிதோ வதந்தி பஞ்சாக்நயோ யே ச த்ரிணாசிகேதா:" என்று ஜீவனைச்சாயையாகவும் ப்ரஹ்மத்தை வெய்யிலாகவும் சொல்லி, இவ்விருவரும் கர்மபலத்தையநுபவிக்கிறார்களென்று சொல்லியிருக்கிறது. இவ்விரண்டும் ஒருவித்யையா, அல்லது வெவ்வேறா என்று ஸம்சயம்—ச்வேதாச்வதரத்தில் ஜீவன் புஜிக்கிறான் பரமாத்மா புஜிக்கிறதில்லையென்று சொல்லிற்று. கடத்தில் இருவரும் புஜிக்கிறார்களென்று சொல்லிற்று; இப்படித்யாஜ்யக்ரமம்வேறுபட்டபடியால் இரண்டும் வெவ்வேறென்று பூர்வபக்ஷம்.—ச்வேதாச்வதரத்தில், ஒருவன் புஜியாமல் விளங்குகிறானென்று பரமாத்மாவைச்சொல்லி, மேல்வாக்ய சேஷத்தில் "ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசம்" என்று அவனையேசொல்லிற்று; கடத்திலும், "அந்யத்ர தர்மாத்" என்று பரமாத்மாவை முதலில் சொல்லத் தொடங்கி, கடைசியில், "யஸ்ஸேதுரீஜாநாநாம்" என்று பரமாத்ம விஷயமாகவே கொண்டுபோய் முடித்தபடியால் நடுவிலுள்ள "ருதம்பிபந்தௌ" என்றவாக்யமும் பரமாத்ம விஷயமே. இருவரும் புஜிக்கிறார்களென்று பரமாத்மாவையும் சேர்த்துச் சொன்னபோதிலும், சத்ரிந்யாயேந, அதாவது - குடைபிடித்துக்கொண்டு போகிற சிலரோடு கூடப்போகிற குடையில்லாதவர்களையும் சேர்த்து குடைக்காரர் போகிறார்கள் என்பதுபோல், புஜிக்கிறஜீவனோடு இருக்கையால் இவனையும் புஜிக்கிறானென்று சொல்லிற்று. மேலும் ஜீவன் ஸாக்ஷாத்தாக புஜிக்கிறான், பரமாத்மா அவனை புஜிப்பிக்கிறான். சமயல் பண்ணுகிறவனையும் பண்ணுவிக்கிறவனையும் சமையல் காரனென்று சொல்லுவதுபோல் சொல்லிற்று. ஸாக்ஷாத்தாக பரமாத்மாபுஜிக்கிறானென்று கடத்திலும் சொல்லவில்லையாகையால் இரண்டிடத்திலுமொரே வித்யை யென்று ஸித்தாந்தம் ௩-அஅ.

(ஸா-ஹா.) பரமாத்மகுணங்களையெல்லாம் பரமாத்மாவை யநுஸந்திக்கிற எல்லா இடங்களிலு மநுஸந்திக்கவேண்டுமாகில், "ஸர்வகந்த: ஸர்வரஸ:" ஸமஸ்தமான ஸுகந்தங்களையுடையவன், ஸகலமான ரஸங்களையுடையவன் என்று தொடங்கி சொல்லப்பட்ட மற்றுமுள்ள எல்லா குணங்களையு மநுஸந்திக்க வேணுமேயென்னில், கீழ்ச்சொன்ன அஸ்த்தூலத்வம் அநுத்வம் முதலியவற்றோடு கூடிய ஆநந்தாதி குணங்களைவிட்டு பரமாத்ம ஸ்வரூபத்தைத்யாகிக்க முடியாதாகையால் இவைகளைமாத்திர மநுஸந்திக்கவேணும்; ஸத்யகாமத்வாதி மற்றகுணங்கள் பரமாத்மஸ்வரூபத்துக்கு நிரூபகங்கள் அல்லாமையால் அவற்றையெல்லா மநுஸந்திக்க வேண்டியதில்லை. எந்த வித்யையிற் சொல்லியிருக்கிறதோ, அங்கு மாத்ரமே யநுஸந்திக்கவேணும். ௩-அ௯

அதி - ௨௦ - ஸூ - ௩அ௯ - அந்தரா பூதக்ராமவத் ஸ்வாத்மந: அந்யதா பேதாநுபபத்திரிதி சேந்நோபதேசாந்தரவத்.

இது சங்கரபாஷ்யத்துக்கு "அந்தரா பூதக்ராமவத் ஸ்வாத்மந:" என்றொருஸூத்ரமும், "அந்யதாபேதாநுபபத்திரிதி சேந்நோபதேசாந்தரவத்" என்றொருஸூத்ரமுமாயிருக்கும். ௩-அ௯.

(ஸூ-வ்ய) ஸ்வாத்மந: - தன்னுடைய ஆத்மாவுக்கு, பூதக்ராமவத் - ஸர்வபூதாந்தராத்மத்வம்போலே, அந்தரா-அந்தராத்மத்வம்உண்டு. ௩-அ௩௫

(ஸூ-ஹா.) ப்ருஹதாரண்யத்தில் "யத்ஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம" யஆத்மா ஸர்வாந்தர:" என்று உஷஸ்திகேட்டதற்கும் கஹோளர் கேட்டதற்கும், ஏகரூபமாக இரண்டுதரம் உத்தரம்சொல்லியிருக்கிறது. இவ்விரண்டிடத்திலும் ஒரு வித்யையா இரண்டு வித்யையா சொல்லப்பட்டதென்னில்,—இரண்டும் ஒரே வித்யையாமாகில், இரண்டுப்ரஶ்நமும் இரண்டு உத்தரமும்வேண்டியதில்லை. ஒருதரம் சொன்னதே அமையும் ஆகையால், ப்ரஶ்நப்ரதிவசநங்கள் ஏகரூபமாயிருந்தபோதிலும் வெவ்வேறு வித்யைகளென்று பூர்வபக்ஷம்— ஸாக்ஷாத் ப்ரத்யக்ஷ விஷயமான ப்ரஹ்மம் எதுவோ, ஸர்வத்துக்கும் உள்ளேயிருக்கிற ஆத்மா எதுவோ அதை யெனக்குச் சொல்லென்ற இரண்டு ப்ரஶ்நம் ஸமாநமாயிருக்கிறது; இது இரண்டு வித்யையாகில் அங்குச்சொன்ன ஸர்வாந்தராத்மா ஒருவனென்றும் இங்குச் சொன்ன ஸர்வாந்தராத்மா மற்றொருவனென்று மேற்படும்; ஸர்வாந்தராத்மா ஒருவனேயாக வேண்டுமென்றி இருவராகார்கள்; ஆகையால்,"ஏகோதேவஸ்ஸர்வபூதேஷு கூட:" என்றவிடத்தில் ஸர்வபூதங்களுக்கும் ப்ரஹ்மத்தையே அந்தராத்மாவாகச் சொன்னதுபோல் இங்கும் இரண்டிடத்திலும் ப்ரஹ்மமொன்றுக்கே ஸர்வாந்தராத்மத்வம் சொல்லிற்று. இதனால் இவ்விரண்டிடத்திலும் ஒரே வித்யையென்று ஸித்தாந்தம்.

௩-அ௩௬.

(ஸூ-வ்ய) அந்யதா - ஒரேவித்யையாகில், அபேதாநுபபத்தி: - இரண்டுதரம்சொன்னது சரியன்று, இதிசேத் - என்றால், உபதேஶாந்தரவத் - ஸத்வித்யையில் பண்ணின உபதேசம்போலெ (இரண்டுதரம் சொல்லலாம்).

௩-அ௩௬.

(ஸூ-ஹா.) ஒரு வித்யையாகில் இரண்டுதரம் சொல்லுவானென்னென்றுகேட்டதற்கு ஸமாதாநம் — தாண்டிகளுடைய உபநிஷத்தில் ஆறுவது ப்ரஶ்நத்தில் "தத்த்வமஸிஶ்வேதகேதோ" என்று ஒன்பது தரம் உபதேசித்திருந்த போதிலும் "பூயஏவமாபகவாந்விஜ்ஞாபயது" மறுபடியும் பரமாத்மஸ்வரூபத்தையெனக்குச்சொல்லென்று உபக்ரமத்தில் ப்ரஶ்நமும் "தத்த்வமஸி" இந்த ப்ரஹ்மரூபமே ஜீவாத்மஸ்வரூபமென்று உபஸம்ஹாரத்தில் உத்தரமும் ஒரேவிதமாயிருக்கையாலே அவையெல்லா விடங்களிலும் வித்யையொன்றுதான், வேறு வேறு ஸம்சயங்களைப் போக்கிக்கொள்ளுகைக்காக ஒன்பதுதரம் ப்ரஶ்நம் பண்ணிற்றென்று சொல்வதுபோல், இங்கும் ப்ரஶ்நம் ஒரேவிதமாய், உபஸம்ஹாரத்திலும் "அதோந்யதார்த்தம்" இந்தப்ரஹ்மஸ்ரூபம்தவிர மற்றது அஸத்யமென்று இரண்டிடத்திலு முத்தரமொன்றாகையாலும் வித்யையொன்றாகக்கடவது. ௩-அ௩௬.

(ஶா-வ்ய) அந்தரா - அந்தராத்மவிஷயகமான் (உஷஸ்தியின்) ப்ரஶ்நம், பூதக்ராமவத்ஸ்வாத்மந:-பஞ்சபூதாத்மகமான சரீராதி ஸம்பந்தத்தையுடைய ஜீவாத்மாவினுடைய ஸப்பந்தியானது, அந்யதா - இல்லாவிடில், பேதாநுபபத்தே: - இரண்டுதரம் சொல்லுகைக்கு ப்ரயோஜநம் ஸம்பவியாதாகையால், இதிசேத் - என்றால், ந-அப்படி ஜீவாத்மவிஷயகப்ரஶ்நமன்று உபதேஶவத் - (ஸத்வித்யையில்) உபதேசம்போலெ. (இங்கும் புநருத்திபரிஹாரம்செய்யவேண்டும்.) ௩-அ௩௬.

(ஶா - ஹா) ப்ருஹதாரண்யத்தில், உஷஸ்தியென்பவர், "யஸூக்ஷாஸவ-பூர ஹாஶ்ஃ தமேநவ,ூாவக்ஷ" எல்லாவற்றுக்கு முள்ளேயிருக்கிற ஆத்மாவை எனக்கு உபதேசியுமென்று கேட்டதற்கு, யாஜ்ஞவல்க்யர், "யஃவ,ூாணெ நவ,ூாணிதிஸ த ஆுக்ஷாஸவ-பூாஹாஶ்ஃ யஃவாெ நநாவா நிதிஸ த ஆுக்ஷாஸவ-பூாஹாஶ்ஃ" என்றுதொடங்கி, உச்வாஸ நிஶ்வாஸாதிகளுக்கு ஹேதுவானவனே உன்னுடைய ஸர்வாந்தராத்மா என்றுசொன்னார். பின்புஉஷஸ்திகேட்டப்ரகாரமே கஹோளர்ப்ரச்ந ம்பண்ண, "யொஶநாயாவிவாஸெஶொகமொஹஜராஶ்ரூ-த-ூஹெ தூதி ஹவஂெஹதஶ்ர்தா நஂ விதிலா" என்றுதொடங்கி, பசிதாகம் துக்கம் அஜ்ஞானம் கிழத்தனம்-மரணம் முதலிய விகாரங்களற்றவன் ஸர்வாந்தராத்மா அவனை யறியவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. இவ்விரண்டிடத்திலும் சொல்லப்பட்ட வித்யை ஒன்றா வேறா என்று விசாரிக்கில்,—முதலில் உச்வாஸ நிஶ்வாஸங்களுக்கு ஹேதுவானவன் அந்தராத்மாவென்கையாலே அத்தொழில் பரமாத்மாவுக்கு இல்லை யாகையால் அதையுடையஜீவனே அங்குசொல்லபட்டான். அவனுக்கு மந்தராத்மா வாகப் பரமாத்மாவிருக்க ஜீவன் ஸர்வாந்தராத்மாவானபடி யெங்ஙனே யென்னில், இங்கு ஸர்வாந்தராத்மா வென்பதற்கு சரீரேந்த்ரியமநः ப்ராணாதிகளைக்காட்டிலும் உள்ளேயிருக்கப்பட்டவனென்றே யர்த்தமாகையால், இவ்விசேஷணம் ஜீவனுக்கும் கூடும். பின்பு, பசிதாகம் முதலிய தோஷங்க ளற்றவனே யாத்மாவென்று முன் சொன்ன ரீதியைக்காட்டிலும் வேறுவிதமாகச் சொல்லுகையாலே, இங்கு முன் சொன்னவனைக்காட்டிலும் வேறான பரமாத்மாவைச் சொல்லுகிறது. இரண்டிடத்திலு மொருவனேசொல்லப்பட்டானாகில் இருவர்க்குமொரேவிதமான உத்தரமே சொல்லப்பட்டிருக்கும் என்றான் பூர்வபக்ஷி.—இரண்டிடத்திலு முத்தரம் பரமாத்ம விஷயகமாயேயிருக்கும். அதெப்படியெனில்; முதல் உச்வாஸாதிகளுக்குக் காரண பூதனே ஆத்மாவென்று சொன்னபின், "யஃவ,ூாணெ நவ,ூாணிதி" என்று உச்வாஸாதிகளுக்குக் காரணபூதன் பரமாத்மாவென்று சொல்லியிருந்தபோதிலும், "யஸூக்ஷநிதிஷூ" இத்யாதியினால் ஆத்மாவென்பது பரமாத்மாவுக்கே அஸாதாரணச்சொல்லாயினும் இவ்விரண்டும் ஜீவனுக்கு முண்டாகையால், யாஜ்ஞவல்க்யர்நமக்கு இப்படி பரமாத்மாவை உபதேசித்தாரென்றறியாமல் உஷஸ்தியென்பவர் மறுபடியும்பரமாத்ம ஸ்வரூபத்தைக்கேட்க, "நஷூெஷ்டெ-ஷ்டாஶஂவஶெஶஃ" என்றுதொடங்கி தாம் ஶிழுபதேசித்ததெல்லாம் பரமாத்மவிஷயமென்று இன்னும் அநேகமான அஸாதாரண தர்மங்களைச்சொல்லி முடித்தார், இரண்டாவது பரமாத்மவிஷயமென்பதற்கு ஸம்சயமேயில்லை. இப்படி இரண்டிடத்திலும் ப்ரதிவசநம் பரமாத்மவிஷயகமா யிருக்கையாலும், "யஸூக்ஷாஸவ-பூாஹாஶ்ஃ" என்று ஆரம்பமும், "அதொநூஜூா-த-ூஂ" என்று முடிவும் இரண்டிடத்திலும் ஏகரூபமாகக் காண்கையாலும் இதுபரமாத்மவிஷயமே. ஓரிடத்தில் சொன்னபடியே மற்றோரிடத்தில் சொல்லாதொழிந்தது.—ஸத்வித்யையில் பலதடவைகள்கேட்டதற்கு ஒவ்வொருதடவையிலும் ஒவ்வொருவிதமாக உத்தரம்சொன்னதுபோல், இங்கும், முன்பு பரமாத்மாவுக்குச் சிலகுணங்களைச்சொல்லி, மற்ற குணங்களையும் சொல்லுகைக்காக மற்றோரிடத்தில் மற்றொருவிதமாகச் சொல்லியிருக்கிறதாகையால் அது வேறுவித்யையென்பதற்குக் காரணமாகமாட்டாது. ஆகையால் இரண்டும் ஒரே வித்யையென்று ஸித்தாந்தம். ந-அக.

ஸூ - ந-கூ௦. வூதிஹாரொரா விஶிஂஷந்திஹீ தாவவஜ.

(ஶ - ஸ்ரு) ஊதாவஜ - மற்றகுணங்களைப்போல், வூதிஹாரஃ -

ஒன்றுக்கொன்று விஶேஷண விஶேஷ்யங்களாக த்யாநிக்கவேண்டும். விஶிம் ஷந்தி ஹி - விவரிக்கிறதன்று. ௩௯௦.

(ஸூ - ரு) உ தரவஞ - இதரமான ஸத்வித்யையிற்போலே, (இர ண்டிடத்திலும் ஒன்றே உபாஸ்யமாகச் சொல்லப்படுகிறது ஆகையால்), வ்யதிஹார: - இங்குச்சொன்ன குணங்களையு மங்கும், அங்குச்சொன்ன குணங்களையு மிங்கும்வைத்துக் கொள்ளவேண்டியது. விஶிம்ஷந்தி ஹி - ப்ரதிவசந வாக்யங்கள் இதைவிவரிக்கிறது களன்று ௩௯௦.

(ஶ - ஹா) ஐதரேயத்தில் "தத்யோஹம் ஸோஸௌ யோஸௌ ஸோ ஹம்" என்றும், ஜாபாலத்தில், "த்வம்வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி பகவோதேவதே" என்றும் நானேப்ரஹ்மம், ப்ரஹ்மமேநான், நானேநீ, நீயேநான் என்று சொல்லப்பட்டது. இங்குசொன்னபடியே ஜீவனை ப்ரஹ்மமாகவும் ப்ரஹ்மத்தை ஜீவனாகவும் இரண்டுவிதமாக அநுஸந்திக்கவேணுமா, அல்லது ஜீவனை ப்ரஹ்மமாக அநுஸந்தித்தால் போருமாவென்னில், ஜீவனையே ப்ரஹ்மமாக த்யாநிக்கவேண்டும். இப்படி த்யாநித்தால்தான் உத்கர்ஷம்தோற்றும். ப்ரஹ்மத்தைஜீவனாக அநுஸந்திப்பது நிகர்ஷம் தோற்றியிருக்கு மாகையாலப்படி த்யாநிக்ககூடாது, ஶ்ருதியில் இரண்டுவிதமாசச்சொன்னது —அத்வைதம் மநஸ் ஸிலேறுகைக்காக என்றுன் பூர்வபக்ஷ.—இப்படி ஒன்றையே த்யாநிக்கவேண்டுமா கில் இரண்டுதரம் சொல்லவேண்டுவதில்லை. உத்க்ருஷ்டத்தை நிக்ருஷ்டமாக த்யாநிப்பதைக் காட்டிலும் நிக்ருஷ்டத்தை உத்க்ருஷ்டமாக த்யாநிப்பதே நலமெ ன்பது, எங்கு அர்த்தம் ஸந்தேஹ விஷயமாயிருக்கிறதோ, அங்கே, இங்கு அர்த்தம் ஸ்பஷ்டமாயிருக்கையால் இரண்டும் செய்யவேண்டியதுதான். ப்ரஹ்மத்தினிடத் தில் ஜீவத்வமில்லாம லிருக்கச்செய்தெயும் ஜீவத்வமுள்ளதாக த்யாநிக்கை நிகர் ஷத்தைத் தோற்றுவியாதாகையால் அந்த தோஷமும் கிடையாது. என்று ஸித் தாந்தம். ௩௯௦.

(ஸூ - ஹா) இரண்டிடத்திலும் பரமாத்மாவே உபாஸ்யனென்று சொன்ன போதிலும் ஓரிடத்தில் உச்வாஸாதிகாரணத்வம், மற்றோரிடத்தில் பசிதாகமில்லா மை என்று வெவ்வேறு குணங்களை உபாஸ்யமாகச் சொல்லுகையாலே வெவ்வேறு வித்யையே யாகவேணுமென்னில்,—உஷஸ்தி "யத்ஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம" என்று கேட்டார். பின்பு கஹோளர் "யதேவஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம" என்று கேட்கும்போது "யஸாக்ஷாத்" என்னாதே "யதேவஸாக்ஷாத்" என் கையாலே, உஷஸ்தி எந்த ப்ரஹ்மத்தைக் கேட்டாரோ, ஸர்வாந்தராத்மாவான அந்த ப்ரஹ்மத்தையே எனக்குத் தெரியச்சொல்லுமென்று அர்த்தமாய், இரண்டு வித்யையு மொன்றென்பதை ஸ்பஷ்டமாக அறிவிக்கிறது. மேலும் முதலில் இதைச் செய்யென்று விதிக்கவில்லை, பின்புள்ள உத்தரத்திலேயே, "பால்யேந திஷ்டா ஸேத்" இப்படி ப்ரஹ்மத்தை யறிந்தவன் பாலனைப்போலே இருக்கக்கடவன் என்று சொல்லியிருக்கிறது. இப்படி ஓரிடத்திலே சொல்வதும் இரண்டுமொன்றெ ன்பதற்குக்காரணம். இப்படி யிரண்டு மொன்றான பின்பு, அவ்விடத்திற் சொன்ன குணங்களை இவ்விடத்திலும் இவ்விடத்திற் சொன்ன குணங்களை அவ்விடத்திலும் அநுஸந்திக்கவேண்டுமென்று நிஶ்சயிக்கப்படும். இந்த வித்யையில் உபாஸிக்க வே ண்டிய குணம் ஸர்வாந்தராத்மத்வம். கீழ்ச்சொன்ன இவ்விரண்டு குணங்களு முபா

ஸ்யங்களன்று; ஆயினும் பரமாத்மா ஸர்வப்ரகாரத்தாலும் ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணனென்றறிகைக்காக இக்குணங்களை யநுஸந்திக்க வேணுமென்று சொல்லிற்று. ஸத்வித்யையில் அடிக்கடி ப்ரஸ்நமும் அதுக்குத்தரமும் சொன்னபோதிலும் முன்சொன்ன குணங்களை விடுவதில்லை. அதுபோலிங்கும் கண்டுகொள்வது என்று ஸித்தாந்தம்.

ஸூ-௩-௯௧. ஸைவ ஹி ஸத்யாதய:.

(ஸ-வ்ய) ஸா ஏவ ஹி - அந்த ஸத்யவித்யையே, (பின்னும் சொல்லப்பட்டது ஆகையால்) ஸத்யாதய: - ஸத்யம் முதலிய குணங்கள் (இரண்டிடங்களிலும் அநுஸந்திக்கத்தக்கவைகள்.) ௩-௯௧.

(ரா-வ்ய) ஸத்யாதய: - (முதல்சொன்ன) ஸத்யம்முதலிய குணங்கள் (எல்லாவிடங்களிலும் சொல்லப்படுகையாலே), ஸா ஏவ - அந்தபரதேவதையையே (பின்புள்ள பர்யாயங்களிலு மநுவர்த்திக்கிறது (என்று நிஸ்சயிக்கப்படுகிறது. ௩-௯௧:

(ஸ-ஹா.) வாஜிஸநேயத்தில், "ஸ யோ ஹைதந்மஹத்யக்ஷம் ப்ரதமஜம் வேத ஸத்யம் ப்ரஹ்ம" யீரவனொருவன், ஸர்வவ்யாபியாய் பூஜ்யமாய் முதலிலேயுண்டானதான இந்த ஸத்யமென்கிற சதுர்முக ப்ரஹ்மாவை யறிகிறானோ வென்று ஸத்யவித்யை சொல்லப்பட்டது. பின்பும், "தத்யத்தத்ஸத்யமஸௌ ஸ ஆதித்யோ ய ஏஷ ஏதஸ்மிந் மண்டலே புருஷோ யஸ்சாயம் தக்ஷிணேக்ஷந் புருஷ:" அந்த முன் சொல்லப்பட்ட ஸத்யமே முன்கூறிய பூஜ்யத்வம்முதலிய குணங்களோடுகூடியதாய் ஸூர்யமண்டல மத்யத்திலும் வலதுகண்ணிலுள்ள புருஷனுமாகிறது என்று ஸத்யவித்யை சொல்லப்பட்டது. இவ்விரண்டு மொன்றோ வேறோவென்னில்;— முற்கூறிய ஸத்யவித்யைக்கு "ஜயதீமாந் லோகாந்" இந்த லோகங்களை யெல்லாம் ஜயிக்கிறானென்றும், இரண்டாவதுக்கு, "ஹந்தி பாப்மாநம்" பாபங்களை நசிப்பிக்கிறானென்றும் வெவ்வேறாக பலம் சொல்லப்பட்டது. ஆகையால் இரண்டும் வெவ்வேறுதான். இரண்டாந்தடவையில் "அந்த முற்கூறிய ஸத்யமே" என்று முன் சொன்னதையே சொன்னதுக்குக் காரணம் - குணங்கள் வேறாயினும் ப்ரஹ்மமொன்றென்பதாயிருக்கும் என்று பூர்வபக்ஷம்,— இந்த வித்யையை ஸ்த்துதிக்கைக்காக இரண்டிடத்தில் பலம் சொல்லப்பட்டது. அது வித்யாபேதத்துக்குக் காரணமாகாது. எந்தவிடத்தில் வித்யாபேதம் ஸ்பஷ்டமாயிருக்கிறதோ, அங்குமாத்ரமே முற்கூறிய உபாஸ்யவஸ்துவைத் திரும்பிச்சொல்லுகை வித்யாபேதத்துக்குக் காரணமாகும். இங்கு இது இரண்டு வித்யையென்கிற ஸம்சயமேயில்லை, இவ்விடத்தி லப்படி சொல்லுகை வித்யாபேதத்தைத் தோற்றுவியாதாகையால் இரண்டிடத்திற் சொன்ன ஸத்யவித்யையு மொன்றே யென்று ஸித்தாந்தம். ௩-௯௧.

(ரா-ஹா) "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்ற ஸத்வித்யையிலும் வெவ்வேறு ப்ரஸ்நமும் வெவ்வேறு ப்ரதிவசநமு மிருக்கையால், அங்குத்தான் ஒரே வித்யையென்று எப்படி யொப்புக்கொள்ளலாமென்னில்,—"ஏகமேவாத்விதீயம் ஸதைக்ஷத" என்று முதல் ப்ரதிவசநத்திற்சொன்ன ஸத்யாதிகுணங்களையே எல்லாப்ரதிவசநங்களிலும் சொல்லுகையால், "ஸேயம் தேவதைக்ஷத" என்று ஆரம்பித்த பரதேவதையையே "யதா ஸோம்ய புருஷம் ஹஸ்தக்ருஹீத

நிவிஷ்டா:” இத்யாதியாகச் சொல்லப்பட்ட மேல் ப்ரதிவசனங்களிலும் ப்ரதிபாதிக்கப்பட்டதென்று நிஸ்சயிக்கப்படுகிறது என்று ஸமாதானம். ௩௧௧.

அ-௩-பா-௩-ஸூ-௩௧௨. காமாதீதரத்ர தத்ர சாயதநாதிப்ய:.

(ஶ-ரா-வ்ரு) ஆயதநாதிப்ய: - ஸ்த்தானம் முதலான குணங்கள், ஸமானமாகக்காண்கையால், காமாதி - ஸத்யகாமத்வம் முதலிய குணங்கள், இதரத்ர - வாஜிஸநேயத்திலும், தத்ர ச - சாந்தோக்யத்திலும் (அநுஸந்திக்க வேண்டியது.) ௩௧௨.

(ஶ-ரா-ஹா.) சாந்தோக்யத்தில், “அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே” என்று தொடங்கி, “ஏஷ ஆத்மாபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:” இத்யாதி தகரவித்யை சொல்லப்பட்டது. வாஜிஸநேயத்திலும், “ய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாஶஸ்தஸ்மிஞ்சேதே ஸர்வஸ்ய வஶீ” இத்யாதி தகரவித்யை சொல்லப்பட்டது. இவ்விரண்டும் ஒன்று வேறுவென்னில்,—சாந்தோக்யத்தில் “தஹரோऽஸ்மிந்நந்தர ஆகாஶஸ்தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம்” ஹ்ருதய கமலத்தினுள்ளே யிருக்கிற ஆகாசத்தை உபாஸிக்கவேண்டுமென்றும், வாஜிஸநேயத்தில், ஹ்ருதயாகாசத்தில் படுத்துக்கொண்டிருக்கிறவனை உபாஸிக்கவேணுமென்றும் உபாஸ்யவஸ்து வெவ்வேறாகச் சொல்லப்படுகையாலே இரண்டு வித்யையும் வெவ்வேறென்று பூர்வபக்ஷி. இரண்டிடத்திலும் உபாஸ்யவஸ்துவுக்கு ஹ்ருதயம் ஸ்தானமாகவும், அதுக்கு லோகமர்யாதா வ்யவஸ்த்தாபகத்வம் லோகதாரணம் முதலியவற்றை குணங்களாகவும் இப்படி அநேக குணங்கள் ஏகரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறதாகையால் இரண்டுமொருவித்யையே யாகவேணும், இரண்டிடத்திலும் ப்ரஹ்மப்ராப்தியே பலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சாந்தோக்யத்தில் ஆகாசத்தை உபாஸிக்கச்சொன்னபோதிலும், அங்கு ஆகாசமென்று சொல்லப்பட்டவன் பரமாத்மா வென்று தஹராதிகரணத்தில் சொன்னோம். வாஜிஸநேயத்தில் ஆகாசத்தில் படுத்திருக்கிறவனாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மா, அவனுக்கு ஆதாரமாகிய ஆகாசம், ஹ்ருதயகமலமத்யவர்த்தியான பூதாகாசமென்று கண்டுகொள்வது. இப்படி உபாஸ்யவஸ்துவும் பலமும் ஒன்றாகையால் ஒரேவித்யையென்று நிஸ்சயித்தபின்பு, சாந்தோக்யத்திற் சொன்ன ஸத்யகாமத்வாதி குணங்களை இரண்டிடத்திலு மநுஸந்திக்கவேண்டுமென்று ஸித்தாந்தம்—சங்கரபாஷ்யத்தில் விசேஷம்—கீழ்ச்சொன்ன விஷயங்களெல்லாமொன்றே, ஆயினும் சாந்தோக்யத்தில் ஸகுணப்ரஹ்மோபாஸநமும் வாஜிஸநேயத்தில் நிர்குணப்ரஹ்மோபாஸநமும் சொல்லப்பட்டது. நிர்குணப்ரஹ்மத்துக்கு, “ஸர்வஸ்ய வஶீ” என்று வசித்வாதி குணங்கள் ஸ்துதிசெய்கைக்காகச் சொல்லிற்று. ப்ரஹ்மம் நிர்குணமாயினும் அதினுடைய விபூதியைச் சொல்லுகைக்காக சாந்தோக்யத்திற் சொல்லிய குணங்களையு மங்கநுஸந்திக்கச் சொல்லிற்றென்று. ௩௧௨.

ஸூ-௩௧௩. ஆதராதலோப:.

(ஶ-வ்ரு) ஆதராத் - ஆதரமாகச் சொல்லுகையாலே, அலோப: - (அக்நிஹோத்ரத்துக்கு) லோபமில்லை. ௩௧௩.

(ரா-வ்ரு) ஆதராத் - ஆதரமாகச் சொல்லுகையாலே, அலோப: - (குணங்களுக்கு) நிஷேதமில்லை. ௩௧௩.

(ஶ்ரு-ஹா.) சாந்தோக்யத்தில் வைஶ்வாநரவித்யையில் "யத்பக்தம் ப்ரதமமாகச்சேத் தத்தோமீயம் ஸ யாம் ப்ரதமாமாஹுதிம் ஜுஹுயாத் தாம் ஜுஹுயாத் ப்ராணாய ஸ்வாஹேதி" புருஷனுக்கு எந்த அந்நம் முதலிலகப்படுகிறதோ, அத்தை ஹோமத்ரவ்யமாக்கி அதையே முதலில் "ப்ராணாய ஸ்வாஹா" என்றமந்த்ரத்தைச்சொல்லி ஹோமம் செய்யவேணும் இத்யாதியாகச்சொல்லிற்று. மேலே இதை "ய ஏவம் வித்வாநக்நிஹோத்ரம் ஜுஹோதி" என்றுஇதையேஅக்நிஹோத்ரமாகச்சொல்லிற்று. போஜநம்செய்கிற காலத்தில்இந்தஅக்நிஹோத்ரத்தை அவஶ்யம்செய்தபோதிலும் போஜநமில்லாததிநங்களில்வேறு எந்தத்ரவ்யத்தினாலாவது செய்ய வேணுமா விட்டுவிடலாமா வென்று விசாரிக்கில்,—மேலே "பூர்வோऽதிதிப்யோऽஶ்நீயாத்" அதிதிகளுக்கு முன்னே இந்த யஜமாநன் சாப்பிடவேணுமென்று இந்த அக்நிஹோத்ரத்தை பகு ஆதரமாகச் சொல்லுகையாலே, அந்நம் நேரிடாத காலத்தில் வேறு ஜலம் நெய் முதலிய எந்த த்ரவ்யத்தினாலாவது இதைச்செய்யவேணுமென்றான் பூர்வபக்ஷி. ௩௧௮.

(ஶ்ரா-ஹா) வாஜிஸநேயத்தில் ப்ரஹ்மத்துக்குச் சொல்லப்பட்ட குணங்கள் ஸத்யமென்பது சரியன்று, அங்கே கீழ்வாக்யங்களில், "நேஹ நாநாஸ்தி கிஞ்சந| ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி" ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுவஸ்து கிடையாது, அப்படி யுண்டென்றறிந்தவன் மோக்ஷத்தையடையான், ஸம்ஸாரியாயே யிருப்பனென்கையாலும், மேலே "நேதி நேதி" என்று - ப்ரஹ்மவ்யதிரிக்தவஸ்து வொன்றுமில்லை யென்கையாலும், ஸத்யகாமத்வாதி குணங்களை உபாஸநம் செய்கிறவனுக்கு மோக்ஷ மெப்படிவரும், அதை எப்படி தானுபாஸநம் செய்யலாம், ஆகையால் அக்குணங்கள் வாஸ்தவங்களன்று, கல்பிதங்கள் என்று சொல்லில்—ஸத்யகாமத்வாதி குணங்கள் எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமன்றாகையால் ஜீவன் இந்த ஶ்ருதிசொல்வதற்குமுன் அக்குணங்களையறியான். முன்பே ஸம்ஸாரியாயிருக்கிற இவனை, பின்னும் அக்குணங்களைக் கற்பித்து ஸம்ஸாரத்தில், ஆப்ததமமான வேதம் மூழ்த்தப்பாராது. அக்குணங்களைப் பலவாறாகப் பலவிடங்களிலும் பகு ஆதரத்துடன் வேதம் சொல்லுகையாலே, மேலும் கீழுமுள்ள, "குணமில்லை" யென்கிற வாக்யங்களுக்கு இப்படி ஶ்ருதிப்ரஸித்தமான குணங்கள்தவிர மற்றகுணங்களில்லை யென்றும், வேறொரு வஸ்துவில்லை யென்பதற்கு, ப்ரஹ்மாத்மக மாகாத வேறொருவஸ்து வில்லையென்றும் அர்த்தம் சொல்லவேண்டும் ஆகையால், ப்ரஹ்மத்துக்கு ஸத்யகாமத்வாதி குணங்கள் ஸ்வாபாவிகங்களே, அவற்றை உபாஸநம் செய்தவனுக்கு மோக்ஷமுண்டு, ஆகையால் அக்குணங்களை வித்யையி லவஶ்யமநுஸந்திக்கவேண்டுமென்று ஸித்தாந்தம். ௩௧௩

ஸூ-௩௯. உபஸ்திதேऽதஸ்தத்வசநாத்.

(ஶ-வ்ய) தத்வசநாத்—அந்நத்தைச்சொல்லுகையாலே, உபஸ்திதே-(போஜநம்) ப்ராப்தமானவளவில், அத:- இந்த அந்நத்தினாலேயே ப்ராணாக்நிஹோத்ரம் செய்யவேண்டும்). ௩௧௪.

(ஶா-வ்ய) உபஸ்திதே - பரமாத்மாவையடைந்த வளவில், அத: - இந்த பரமாத்ம ப்ராப்தியினாலே, தத்வசநாத் - பித்ருலோகாதி ப்ராப்தியைச் சொல்லுகையாலே, (அவை ஸாம்ஸாரிகபலமன்று). ௩௧௫.

(ஶ்ரு-ஹா.) கீழ்ச்சொன்ன பூர்வபக்ஷத்தை நிரஸநம் செய்கிறார்—முதலில் எந்த அந்நம் கிடைக்கிறதோ, அதினால் ப்ராணாக்நிஹோத்ரம் செய்யச்சொல்லிற்று.

இந்த வசநம், போஜநம் செய்தால் அந்த அந்நத்தினால் முதலில் ப்ராணாஹுதி செய்யவேண்டுமென்ற அர்த்தத்தையே கொடுக்கும். போஜநம் செய்யாவிடினும் எதிலாவது இதை நிறைவேற்ற வேணுமென்கிற அர்த்தத்தைக்கொடாது. ஆதர பூர்வகமாகச்சொன்னது - போஜநம் செய்யவேண்டுமாகில் இதை முதலில் செய்யவேண்டு மென்கைக்காக. ஆகையால் போஜநமில்லாத காலத்தில் இந்தப்ராணாக்நிஹோத்ரம் செய்யவேண்டுவதில்லை என்று ஸித்தாந்தம். ௩௧௪.

(ஸ்ரீ-ஹா.) "தேஷாம் ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி | ஸ யதி பித்ருலோககாமோ பவதி" இத்யாதியினால், இந்த ஸத்யகாமாதிகுணங்களையுடைய பரமாத்மாவை உபாஸநம்செய்தவனுக்கு ஸர்வலோகங்களிலும் ஸஞ்சாரமும், இச்சையுண்டாகில் தனக்கிஷ்டமான பந்துக்களோடுகூடி யிருக்கையும் பலமாகச் சொல்லப்பட்டது. இவையெல்லாம் ஸம்ஸாரிக ளநுபவிக்க வேண்டிய பலங்களாகையால், ஸகுணப்ரஹ்மத்தை யுபாஸிக்கிறவனுக்கு மோக்ஷமில்லையென்று ஸித்தித்ததென்கிற சங்கைக்கு ஸமாதாநம்—"பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே ஸ உத்தம: புருஷ: ஸ தத்ர பர்யேதி ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: ஸ்த்ரீபிர்வா" இத்யாதியினால், இந்த உபாஸநத்தினால் பரமாத்மாவை யடைந்தவனுக்கு, அந்த பரமாத்மப்ராப்தியாகிற பலத்தினால் ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவத்தை யடைந்து ஸ்த்ரீகள் வாஹநங்கள்முதலிய தனக்கிஷ்டமானவற்றோடு விளையாடி ஆமோதிக்கிறானென்றும் இஷ்டமான இடங்களுக்குப் போகிறானென்றும் இஷ்டமான பந்துக்களைப் பார்க்கிறானென்றும் சொல்லுகையாலே இவையெல்லாம் ஸம்ஸாரி யநுபவிக்க வேண்டும் பலமன்று, முக்தனநுபவிக்க வேண்டியவைகளாயேயிருக்கும். ஆகையால் அக்குணங்களையுடைய பரமாத்மாவை உபாஸநம் செய்யவேண்டு மென்கிறார். ௩௧௪.

அதி-௯௯-ஸூ-௩௧௫. தந்நிர்த்தாரணாநியமஸ்தத்த்ருஷ்டே: ப்ருதக்த்யப்ரதிபந்த: பலம்.

(ஸ-ரா-ப்ர) தத்த்ருஷ்டே: - அந்த நியமம் காணாமையாலே, தந்நிர்த்தாரணாநியம: - உத்கீதோபாஸநம் எல்லாவிடங்களிலும் செய்யவேணுமென்கிற நியமமில்லை. அப்ரதிபந்த:-(கர்மபலம்) விலம்பமின்றியுண்டாகையாகிற, பலம் - பலமானது, ப்ருதக் - (உத்கீதோபாஸநத்துக்கு) தனியே காண்கிறது. ௩௧௫.

(ஸ-ரா-ஸா.) "ஓமித்யேததக்ஷரமுத்கீதமுபாஸீத" என்று கர்மாங்கமான உத்கீதோபாஸநம் சொல்லியிருக்கிறது. இந்த உத்கீதோபாஸநம் எல்லாவிடங்களிலும் செய்யவேண்டுமா, சிலவிடங்களில் செய்து சிலவிடங்களில் தவிரலாமாவென்னில், "பர்ணமயீ ஜுஹூர்பவதி" என்று ஓரிடத்தில் சொன்னபோதிலும் அதையெல்லாவிடங்களிலும் வைத்துக்கொள்வதுபோல், இந்த உத்கீதோபாஸநத்தையும் எல்லாவிடங்களிலும் செய்யவேண்டுமென்று பூர்வபக்ஷம்—"தேநோபௌ குருத: யஸ்சைததேவம் வேத யஸ்ச ந வேத" இந்த உத்கீதோபாஸநத்தையாரறிந்தவனோ, யாரறியாதவனோ, அவர்களிருவரும் இக்கர்மத்தைப்பண்ணக்கடவர்களென்று இவ்வுபாஸநத்தையறியாதவனையுங்கூட இக்கர்மத்தைச்செய்யச்சொல்லுகையாலேஎல்லாவிடங்களிலும் இவ்வுபாஸநம் செய்யவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. இதுக்கு வேறே பலம் சொல்லாவிடில் இவ்வுபாஸநம் கர்மத்துக்கு நியமேந

அங்கமாகலாம் "தடெ³வவீர்யவத்தரம் ப⁴வதி" உத்கீதோபாஸநத்தைக் கர்மத்து க்கு ஸஹகாரியாகச்செய்தால், அதினால், அக்கர்மத்தினாலுண்டாகவேண்டிய பலம் வேறு சிலபாபவிசேஷங்களினால் தடைப்பட்டு நிற்குமாகில், இவ்வுபாஸநம் அத்த டையைப்போக்கி அக்கர்மத்தின்பலத்தை சீக்கிரத்திலுண்டுபண்ணுமென்று ப்ரதி பந்தக நிவ்ருத்திதை இவ்வுபாஸநத்துக்குப் பலமாகச்சொல்லியிருக்கையாலே இது நியமேந கர்மாங்கமாய் எல்லாவிடங்களிலும் த்யாநிக்கவேண்டுமென்கிற நிர்ப்பந் தத்தையுடையதாகாது என்று ஸித்தாந்தம். ௩௧௫.

௬௰-௬௦௦-ஸூ,௩.௩௬. ப்ரதா⁴நவதே³வ தது³க்தம்,

(ஸ-ர-வ்ய) ப்ரதா⁴நவத்³ஏவ - ஹவிர்தாநம்போலேயே (தனித்த னியேசெய்யவேண்டும்,) தத் - அப்படி வெவ்வேறாகச் செய்யவேணுமென் பது, உக்தம் - (ஸங்கர்ஷாத்யாயத்தில்) சொல்லப்பட்டது. ௩௧௬.

(ஸ-ஹா.) வாஜஸநேயத்தில், "வதி³ஷ்யாம்யேவாஹம்" என்று தொடங்கி அத்யாத்மத்தில் வாக்கு முதலானவற்றுக்கெல்லாம் முக்யப்ராணன் ஸ்ரேஷ்ட்ட மென்றும் அதிதைவதத்தில் அக்நி முதலானவற்றுக்கெல்லாம் வாயுஸ்ரேஷ்ட்டமெ ன்றும் சொல்லப்பட்டது. சாந்தோக்யத்திலும் இம்மாதிரியாயே சொல்லப்பட் டது. இவ்விடத்தில், ப்ராணன் வாயு என்று இரண்டு தத்வங்களை த்யாநிக்கவேணு மென்கிறதா, அல்லது இரண்டையும் ஒன்றாக த்யாநிக்க வேணுமென்கிறதாவென் னில்,—ப்ராணனென்பது வாயுதத்வத்தைக்காட்டிலும் வேறன்று; "ய꞉ ப்ராண ஸ வாயு꞉" என்று ப்ராணனும் வாயுவும் ஒரேதத்வமென்று ஸ்ருதியிலும் சொல் லப்பட்டிருக்கிறது, ப்ராணன் அத்யாத்மமாய், வாயு அதிதைவமானபோதிலும், "அக்³நிர்வாக்³பூ⁴த்வா முக²ம் ப்ராவிஸத்" இத்யாதியினால் அதிதைவமான அக்நி அத்யாத்மமான வாக்காக ஆய் முகத்தில் ப்ரவேசித்ததென்று இரண்டையும் ஒன் றாகச் சொல்லியிருக்கிறது. இப்படி தத்வம் ஒன்றானபின்பு இரண்டையும் ஒன்றா கச்சேர்த்து ஒருவிதமான த்யாநமே சொல்லப்பட்டதென்று பூர்வபக்ஷம்—தத்வ மொன்றானபோதிலும் ப்ராணனென்றும் வாயுவென்றும் இங்கு இரண்டாகச்சொ ன்னது - இரண்டுவிதமாக த்யாநம் செய்யவேணு மென்கைக்காக; அப்படியில்லா விடில், இரண்டையும் சொல்லுகைக்கு வேறு ப்ரயோஜநம் காணவில்லை. கர்மகா ண்டத்தில் இந்த்ரனொருவனே யிருந்தபோதிலும், "இந்த்³ராய ராஜ்ஞே—இந்த்³ராய அதி⁴ராஜாய - இந்த்³ராய ஸ்வராஜ்ஞே" என்று வெவ்வேறு ரூபபேதங்களை முன்னிட் டுச் சொல்லியிருக்கையாலே ஒரு இந்த்ரனை உத்தேசித்தே அம்மந்த்ரப்ரகாரம் வெ வ்வேறாஹுதி பண்ணுவதுபோல், இங்கும் தத்வமொன்றா யிருந்தபோதிலும் ப்ரா ணனென்றும் வாயுவென்றும் வெவ்வேறு ரூபங்களை முன்னிட்டுச் சொல்லி யிருக் கையாலே அந்தந்த ரூபங்களை முன்னிட்டு இரண்டுவிதமாகவே த்யாநம் செய்ய வேண்டும். இவ்வர்த்தத்தையே "நாநாவாதே³வதா ப்ருத²க்³ஜ்ஞாநாத்" என்று ஸங்கர்ஷாத்யாயத்திலும் சொல்லியிருக்கிறது என்று ஸித்தாந்தம். ௩௧௬.

(ரா-ஹா.) தஹரவித்யையில் "அத² யதி³த³மஸ்மிந் ப்³ரஹ்மபுரே த³ஹரம் புண்ட³ரீகம்" என்று தொடங்கி, தஹராகாசஸ்வரூபியாகிய பரமாத் மாவை உபாஸநம் செய்யச்சொல்லி, பின்பு, அவனுடைய அபஹதபாப்மத்வாதி குணங்களையும் தனியே த்யாநிக்கச்சொல்லிற்று. இங்கு குணங்களை த்யாநிக்கும் போது ஒவ்வொரு குணத்தையும் த்யாநிக்கும்போதும் பரமாத்மாவை ஆஸ்ரயமா கத் தனித்தனியே த்யாநிக்கவேணுமா, அல்லது, எல்லா குணங்களுக்கு மாஸ்ரய

மாக ஒரேதரம் த்யாநிக்கவேணுமா வென்னில்,—குணங்கள் வேருயினும் அவற்று க்கு ஆச்ரயமான பரமாத்மா ஒருவனே யாகையால் குணந்தோறும் தனித்தனியே த்யாநிக்க வேண்டாம். எல்லாவற்றுக்கு மாச்ரயமாக ஒருதரம் த்யாநித்தால் போருமென்றுன் பூர்வபக்ஷி—முன்பு ஸ்வரூபத்தை உபாஸநம்செய்யச்சொல்லிப் பின்பு குணங்களை உபாஸநம் செய்யச்சொல்லுகையாலே கேவலஸ்வரூபத்தைக்காட்டிலும் அந்தந்த குணங்களையுடைய ஆகாரம் வெவ்வேருகையால் அந்தந்த குணங்களுக்குத் தனித்தனியே யாச்ரயமாகவே பரமாத்மாவை அநுஸந்திக்கவேணும். இதற்கு த்ருஷ்டாந்தம் — கர்மகாண்டத்தில் இந்த்ரனொருவனைபோதிலும் "ஐந்த்ராயராஜ்ஞே - இந்த்ராயாதிராஜாய - இந்த்ராயஸ்வராஜ்ஞே" என்று நாநா விசேஷணங்களை முன்னிட்டுச் சொல்லுகையாலே ஒருவனுக்கே எப்படி நாநா ஆஹுதிகொடுக்கப்படுகிறதோ, அதுபோலிங்கும் காண்க. இப்படி வெவ்வேருக த்யாநிக்கவேணுமென்பதை ஸங்கர்ஷாத்யாயத்தில் "நாநாவா தேவதா ப்ருதக்த்வாத்" என்று ஜைமிநியும் சொல்லியிருக்கிருர் என்று ஸித்தாந்தம். ௬௩௬.

சுயி-௧௦௧-ஸு-௬௩௭. லிங்கபூயஸ்த்வாத் தத்தி பலீயஸ் தத³பி.

(ப-வு) லிங்கபூயஸ்த்வாத் - (இவ்வக்நிகள் வித்யாத்மகங்களென்பதற்கு) - அநேக ஹேதுக்களுண்டாகையாலே, (இவ்வக்நிகள் வித்யாமயங்கள்) தத் - அந்தலிங்கம், பலீய: - ப்ரகரணத்தைக் காட்டிலும் பலமானது, தத³பி - அதுவும் மீமாம்ஸையில் சொல்லப்பட்டது.

(பா-வு) லிங்கபூயஸ்த்வாத் - (இவ்வாக்யங்கள் ஸர்வபரவித்யோ பாஸ்யநிர்த்தாரண பரங்களென்பதற்கு) அநேக அடையாளங்க ளுண்டாகையாலே, (இவை ஸர்வவித்யோபாஸ்ய நிர்ணயபரங்கள், தத்-அந்தலிங்கம்,) பலீய: - ப்ரகரணத்தைக் காட்டிலும் பலமானது, தத³பி - அதுவும், (பூர்வமீமாம்ஸையில் சொல்லப்பட்டது.) ௬௩௭.

(ஸ-ஸா.) வாஜஸநேயத்தில் அக்நிரஹஸ்யத்தில், "நைவவா இதமக்ரே ஸதாஸீத்" என்று துடங்கி, ஸ்ருஷ்டிக்குமுன்பு இவையொன்றுமில்லை. பின்பு ஆதியில் மநஸ்ஸு உண்டாயிற்று. அது தன்னுடைய ஸம்பந்திகளான முப்பத்தாருயிர மக்நிகளைப்பார்த்து, அவற்றுக்கு மநச்சித்துக்களென்று பெயர்; அதாவது - மநஸ்ஸினுல் கல்பிக்கப்பட்டது என்று சொல்லிற்று. இங்கு, இவ்வக்நிகள் யஜ்ஞாதிக்ரியைகளுக்கு அங்கமாகச்சொல்லிற்று. இங்கு, இவ்வக்நிகள் யஜ்ஞாதிக்ரியைகளுக்கு அங்கமாகச்சொல்லப்பட்டதா, க்ரியைகளுக்கு அங்கமாகாமல் உபாஸநார்த்தமாகச் சொல்லப்பட்டதாவென்னில், இவ்வாக்யங்கள் க்ரியையைச் சொல்லுகிற ப்ரகரணத்திலிருக்கையாலே க்ரியாங்கங்களாகச் சொல்லப்பட்டதென்று பூர்வபக்ஷம்—"ஸர்வதா ஸர்வாணி பூதாநி ஜாக்ரதே" இத்யாதியினுல் இவ்வக்நிகள் உறங்கும்போதும் விழித்திருக்கும்போதும் எல்லாக்காலங்களிலும் உள்ளதாகக் காண்கையாலே யஜ்ஞத்திலுள்ள அக்நியாகில் உறக்கத்திலிராதாகையால், இவை க்ரியாங்கமாகச் சொல்லப்பட்டவையன்று. உபாஸநார்த்தமாகச் சொல்லப்பட்டவை. மநுஷ்யனுக்கு நூறுவயஸ்ஸான ஆயுஸ்ஸுக்கு நாள்முப்பத்தாருயிரமாய், ஒவ்வொருதினத்திலுண்டான மநோவ்யாபாரத்தை ஒவ்வொரு அக்நியாகச்சொல்லப்பட்டிருக்கிறது. க்ரியாப்ரகரணத்தி லிருந்தபோதிலும் ப்ரகரணத்தைக்காட்டிலும் வாக்யம் பலமாகையால் இப்படியே அர்த்தம் சொல்லவேண்டும். கர்மகாண்ட விசாரத்தில் வாக்யம் பலமென்பது சொல்லியிருக்கிறது என்று ஸித்தாந்தம். ௬௩௭.

(ரா-ஹா.) தைத்திரீயத்தில், "தத்ராபி தஹ்ரம் ககநம் விசோகஸ்" என்று தகரவித்யையைச்சொல்லி, பின்பு, "ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்" என்றுதொடங்கி 'மோக்ஷாய ஸர்வதாராய' என்னுமளவும் வாக்யங்களிருக்கிறது. இவ்வாக்யங்களினால் நாராயணனே உபாஸ்யதேவதையென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது இப்படி நாராயணனை கீழ்ச்சொன்ன தகரவித்யையில்மாத்திரம் உபாஸ்யனென்று நிர்ணயித்ததா, அல்லது, ஸகல வித்யைகளிலும் அவனே உபாஸ்யனென்று நிர்ணயித்ததாவென்னில், தகரவித்யையைச்சொல்லி உடனே இதைச்சொல்லுகையாலே தகரவித்யையில்மாத்திரம்தான் நாராயணனை உபாஸ்யனாக இங்குச்சொல்லிற்று. என்று பூர்வபக்ஷம்—"ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாதபி" என்று தொடங்கி, எந்தெந்தவித்யைகளில் எந்தெந்த நாமங்களைக்கொண்டு உபாஸ்யவஸ்துவைச் சொல்லிற்றோ, அந்தந்த நாமங்களை இங்கு அநுவதித்து, இப்படி யெல்லாம் சொல்லப்பட்டவன் நாராயணன்தான் என்று சொல்லுகையாலே ஸகலவித்யைகளிலும் நாராயணனே ஆநந்தாதிகுணங்களை யுடையனும் அஸ்தூலத்வாதிகளையுடையனும் உபாஸ்யனென்பதையே நிர்ணயித்துச் சொல்லிற்றென்று அங்கீகரிக்க வேண்டும். "ஸஹஸ்ராக்ஷம் விச்வசம்புவம்" என்று இரண்டாம்வேற்றுமையையிட்டுச் சொல்லியிருக்கையால், அதினர்த்தமான "அவனை" என்பது வேறோரிடத்திலந்வயிக்கமுடியாதாகையால் கீழ்ச்சொன்ன தகரவித்யையிலேயே, அவனை தகராகாசமாக உபாஸிக்கவேணுமென்று அந்வயிக்கவேண்டுமாகையால், இது தகரவித்யோபாஸ்யபரமேயாகவேணுமென்னில், மேல் "தத்வம் நாராயண: பர:" என்று தொடங்கி முதல் வேற்றுமையாகச் சொல்லுகையாலே, அதுக்கநுகுணமாக இரண்டாம் வேற்றுமைக்கெல்லாம் முதல்வேற்றுமையினர்த்தமே சொல்லவேண்டும். மேலும் "தஸ்யாந்தே ஸுஷிரம் ஸூக்ஷ்மம் தஸ்மின் ஸர்வம் ப்ரதிஷ்டிதம்" அதற்குள் எதிருக்கிறதோ அதை உபாஸிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கையாலே, அங்கு இரண்டாம்வேற்றுமையன்வயியாதாகையால் முதல் வேற்றுமையினர்த்தமே எல்லாரும் சொல்லவேணும். "ச்ருதிலிங்கவாக்ய" என்று தொடங்கி பூர்வமீமாம்ஸையில் வாக்யத்தைக் காட்டிலும் லிங்கம் ப்ரபலமென்று சொல்லியிருக்கையால், இங்கு வாக்யத்தினால், இவ்வாக்யம் தகரவித்யாசேஷமென்று தோற்றினபோதிலும், கீழ்ச்சொன்ன அடையாளங்களினால் ஸர்வவித்யாசேஷமென்றே நிர்ணயிக்கவேண்டுமென்று ஸித்தாந்தம்.

௬௰-௧௫௨. ஸூ-௩-௩-௪௪. பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மாநஸவத்.

(ஸூ-பா-வ்ய.) ப்ரகரணாத் - (அக்நி) ப்ரகரணத்தினாலே, பூர்வவிகல்ப: - முன்சொன்ன இஷ்டகசிதாக்நியோடு விகல்பிக்கப்பட்டதாய், க்ரியா - (மநஸ்சிதாதியான அக்நியும்) க்ரியாங்கமாக, ஸ்யாத் - ஆகக்கடவது, (இதற்கு த்ருஷ்டாந்தரம்) மாநஸவத் - மநஸ்ஸினால் கல்பிக்கப்பட்ட பாத்ராதிகள் (த்வாதசாஹமென்கிற யாகத்தில் அங்கமாகிறாற்) போலே.

(ஸூ-ஹா.) இங்கு பூர்வபக்ஷி சொல்லுகிறான்—இந்த மநஸ்சிதாதியான அக்நிகள் க்ரியாப்ரகரணத்தில் சொல்லியிருக்கையால் இவை க்ரியாங்கமேயாகவேண்டும், வித்யாங்கமாகமாட்டாது. ப்ரகரணத்தைக்காட்டிலும் வாக்யம் ப்ரபலமானபோதிலும், அந்த வாக்யம் விதிவாக்யத்திலிருந்தால் ப்ரகரணத்தைக்காட்டிலும் ப்ரபலமாகுமொழிய அர்த்தவாதத்திலிருந்தால் ப்ரகரணத்தைக்காட்டிலும் ப்ரபல

மாகமாட்டாது. (விதிவாக்யமாவது-இவற்றைச்செய்யவேண்டும் என்கிற ஏவலோடு கூடின வாக்யம். அர்த்தவாதவாக்யமாவது - ஏவலின்றிக்கே கீழ்ச்சொன்ன விஷயத்தைப்பற்றி ஸ்துதிசெய்கிறவாக்யம்.) கீழ்க்ரியையில் இஷ்டகசிதாக்நியை அங்கமாகச் சொல்லியிருக்க மநஶ்சிதாக்நிக்கு இடமில்லையே யென்னில்; அந்தக்ரியைக்கு இஷ்டகசிதாக்நியாவது மநஶ்சிதாக்நியாவது அங்கமாகக்கடவது. மநஸ்ஸினுல் அக்நிரூபமாகக்கல்பிக்கப்பட்ட மாநஸிகக்ரியை யாகத்தில் அங்கமாகமாட்டாதே யென்னில்; த்வாதசாஹமென்கிற யஜ்ஞத்தில் மநஸ்ஸினுல் கல்பிக்கப்பட்ட பாத்ராதிகளை அங்கமாகக்கொள்வதுபோல் இங்கும் மாநஸிகக்ரியை யாகத்துக்கு அங்கமாகலாம் ஆகையால் இவை வித்யாங்கமன்று; க்ரியாங்கமேயென்று பூர்வபக்ஷி மதம். ௬௧௮.

(ரா·ஹா.) வாஜிஸநேயகத்தில் அக்நிரஹஸ்யத்தில் “ ஊநஸ்சிதோ வாகிதঃ ப்ராணசிதঃசக்ஷுஸ்சிதঃஶ்ரோத்ரசிதঃகர்மசிதঃ ” என்று மநஸ்ஸூ வாக்கு ப்ராணம் சக்ஷுஸ்ஸுஶ்ரோத்ரம் முதலியவற்றின் வ்யாபாரங்களை அக்நிகளாகத்யாநம்செய்ய சொல்லியிருக்கிறது. இப்படி அவ்வவ வ்யாபாரங்களை அக்நிகளாகத்யாநிப்பதினுல் பகவத்பக்த்யுத்பத்திக்கு ப்ரதிபந்தகங்களான பாபங்கள் நசித்து மோக்ஷஹேதுவான பக்தி நிர்விக்நமாக உண்டாகுமாகையால் இப்படி த்யாநிக்கப்பட்ட அவ்வவவ்யாபாரங்களாகிற (மநஶ்சிதாதியான) அக்நிகள் வித்யாங்கங்களென்று ஸூத்ரகாரருடைய தாத்பர்யம் - இவ்விஷயத்தில் பூர்வபக்ஷி சொல்லுகிறுன் —இங்கு இவ் வ்யாபாரங்களை அக்நிகளாகச் சொல்லிற்று. இவ்வக்நிகள் ஏதோ ஒரு யாகாதிகளில் உபயோகிக்கவேணும்; இவ்வாக்யத்தில் யாகாதிகளொன்றும் சொல்லப்படவில்லை. இதற்குமுன் வாக்யத்தில் இஷ்டகசிதாக்நி சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வக்நி ஒரு யாகத்துக்கு அங்கமாக இருப்பதினுல் இவ்வக்நியும் அந்த யாகத்துக்கே அங்கமென்று அங்கீகரிக்கவேண்டும். ஒருயாகத்தில் இரண்டக்நி கூடுமோவென்னில், இதுவாவது அதுவாவது என்று விகல்பமாகச் சொல்லவேணும். இது க்ரியாப்ரகரணமாகையால் இவ்வக்நி க்ரியாங்கமாகவேணுமே யல்லது வித்யாங்கமாகாது. யாகத்துக்கு புரோடாசாதிகளைப்போலுள்ள வஸ்துக்களே யங்கமாகவேணுமொழிய மாநஸிகமான த்யாநம் அங்கமாகுமோவென்னில்; த்வாதசாஹமென்கிற க்ரியைக்கு, ப்ருதிவீஸமுத்ரம் முதலானவற்றைபாத்ரம் ஸோமரஸம் முதலான யஜ்ஞாங்கவஸ்துக்களாகச் சொல்லியிருக்கிறது. அதுபோல் இங்கும் த்யாநமேக்ரியாங்கமாகலாமென்று பூர்வபக்ஷி சொன்னுன். ௩-௧௮.

ஸூ-௩௪௪. அதிதேஶாச்ச.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) அதிதேஶாச்ச - (அக்நிகளுடைய மஹிமையை மநஶ்சிதாதியான அக்நிகளில்) அதிதேசம் செய்திருக்கையாலும், (இவைக்ரியாங்கங்களாகக் கடவன்.)

(ஶ்ரு-ப்ர-ஹா.) “ தேஷாமேகைக ஏவ தாவாந் யாவாநஸௌ பூர்வঃ” முன்சொல்லப்பட்ட இஷ்டகசிதாக்நிக்குண்டான ஸாமர்த்யம் இந்தமநஶ்சிதாதிகளுக்குமுண்டு. அதாவது-அதினுல் எந்த யாகம் நிறைவேறுமோ, அது இவற்றினுலும் நிறைவேறும் என்று சொல்லியிருக்கையாலும் இந்தமநஶ்சிதாதியான அக்நிகள் இஷ்டகசிதாக்நியைப்போல் யாகத்துக்கே அங்கமாகக்கடவது வித்யாங்கமாகமாட்டாது என்று பூர்வபக்ஷிமதம். ௩௧௧.

ஸூ-௬௦. வித்யைவ து நிர்த்தாரணாத் தர்ஶநாச்ச.

(ஶ-வ்) நிர்த்தாரணாத்-நிர்த்தாரணம் செய்கையாலே, வித்யைவ து-(இவ்வாக்யங்கள்) வித்யைக்கே அங்கங்கள், க்ரியாங்கமன்று.

(ஶ-வ்) தர்ஶநாச்ச-வித்யாங்கமென்பதற்கு (அநேக லிங்கங்கள்) காண்பதினாலும், (இவைவித்யாங்கங்கள்.) ௬௦.

(ஶ-வ்) நிர்த்தாரணாத் . நிர்த்தாரணம் செய்கையாலும், தர்ஶநாச்ச-(இப் ப்ரகரணத்தில் வித்யாரூபமான யஜ்ஞும்) காண்கையாலும், வித்யைவ து-(இவை) வித்யாங்கங்களே, க்ரியாங்கங்களன்று. ௬௦.

(ஶ-ஹா.) இந்த பாஷ்யத்துக்கு "வித்யைவ து நிர்த்தாரணாத்" என்னுமளவாக ஒரு ஸூத்ரமும், "தர்ஶநாச்ச" என்று வேறுஸூத்ரமுமாக இருக்கும். இதில் பூர்வபக்ஷியின் மதத்தை நிரஸிக்கிறார் "தே ஹைதே வித்யாசித ஏவ" என்று இவைகளை வித்யாரூபங்களாக நிர்த்தாரணம் செய்கையாலே இவை வித்யாங்கங்களேயாகவேணும். இதனால் ப்ரகரணத்தைக்காட்டிலும் ஶ்ருதிப்ரபலமென்று சொல்லப்பட்டது.

(ஶ-ஹா ) இவை வித்யாங்கங்களென்பதற்கு அநேக லிங்கங்களுமுண்டு. அவை "ஶ்ருத்யாதிபலீயஸ்த்வாத்" என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் ப்ரகரணத்தைக்காட்டிலும் லிங்கம் ப்ரபலமென்று சொல்லப்பட்டது. ௬௦.

(ஶ-ஹா.) இனி ஸித்தாந்தம் சொல்லுகிறார்— "தே ஹைதே வித்யாசித ஏவ" அந்த மநஶ்சிதாதியான அக்நிகள் வித்யாஸ்வரூபங்களே என்று அவதாரணம் பண்ணிச்சொல்லுகையாலே இவை வித்யாங்கங்களேயாகவேணும், கர்மாங்கங்களாகமாட்டா. மநஶ்சித் வாக்சித் சக்ஷுஶ்சித் என்ற போதே மாநஸ வாக்கு முதலிய வ்யாபாரங்களை அக்நியாக த்யாநிக்கவேண்டுமென்று ஏற்படுகையாலே இவை ஜ்ஞாநஸ்வரூபங்களென்பது ஸித்தமாயிருக்க, திரும்பியும் "இவை ஜ்ஞாநஸ்வரூபங்களே" என்றது - இவை ஜ்ஞாநஸ்வரூபங்களாய்க்கொண்டு ஜ்ஞாநத்துக்கே, அதாவது - வித்யைக்கே அங்கங்கள், மற்றொன்றுக் கங்கங்களாகமாட்டா வென்கைக்காகவே இப்படி நிர்த்தாரணம் செய்திருக்கிறது. இவ்வாக்யத்தில் யாகத்தைச் சொல்லாமையால் கீழ்வாக்யத்தோடே அந்வயித்து க்ரியாங்கமேயாக வேண்டுமென்று பூர்வபக்ஷி சொன்னதுக்கு ஸமாதாநம்— இவ்வாக்யத்திலேயே, "தேஷாமேகைக ஏவ தாவாந்" என்று துடங்கி, இஷ்டகசிதாக்நியில் எந்தெந்த ஸோமபாநபாத்ராதிகளும் உத்காத்ருஸ்தோத்ராதிக்ரியைகளுமுளவோ, அவையெல்லாம், இந்த மநஶ்சிதாத்யக்நிகளில் மாநஸிகமாகச் செய்யவேணுமென்று ஜ்ஞானரூபமான (வித்யாரூபமான) யஜ்ஞத்தை விதித்திருக்கையாலே இதைக் கீழ்வாக்யத்தோடு அந்வயிக்கவேண்டியதில்லை, அதினால் க்ரியாங்கமாகக்கொள்ளவேண்டியது மில்லை. ௬௦.

ஸூ ௬௧. ஶ்ருத்யாதிபலீயஸ்த்வாச்ச நபாத:.

(ஶ-ஶ-வ்) ஶ்ருத்யாதிபலீயஸ்த்வாச்ச-ஶ்ருதி முதலான வைகள் (ப்ரகரணத்தைக் காட்டிலும் ப்ரபலங்களாகையாலே, பாத: ந-ப்ரகரணத்தினால் ஶ்ருத்யாதிகளுக்கு பாதையில்லை, ௬௧.

(ஶ்ரு-ப்ர-ஹா.) இவ்வாக்யத்தில் வித்யாமயமான யாகத்தை விதிக்கவில்லை, யாகத்தை விதியாவிடினும் பலம் சொல்லியிருந்ததாகில் அந்தபலத்துக்கநுகுணமாகயாகம் கல்பித்துக்கொள்ளலாம், அப்படி பலமும் சொல்லவில்லை. ஆகையால் இவ்வாக்யம் கீழ்வாக்யத்தோடே அந்வயித்து க்ரியாரூபமான யாகத்துக்கே மநஶ்சிதாதிகள் அங்கமாகக்கடவது என்கிற சங்கைக்கு ஸமாதானம்—இது க்ரியாப்ரகரணமாகையால் இந்த மநஶ்சிதாதிகள் க்ரியாமயமான யாகத்துக்கு அங்கங்களென்று சொல்லவேணுமென்கிறீர்கள். ஶ்ருதி லிங்கம் வாக்யம் ஆகிய இவைகளில்லாவிடில் அப்போது ப்ரகரணம் அர்த்த நிஶ்சாயகமாகும். அங்கு அம்மூன்று மிருக்கையால் ப்ரகரணம் துர்ப்பலமாய், அவற்றுக்கு விரோதமான அர்த்தத்தை நிஶ்சயிக்கைக்குக் காரணமாகமாட்டாது. ஶ்ருதியாவது-"வித்யயைவ தே" இந்த மநஶ்சிதாதிகள் வித்யாஸ்வரூபங்களே என்று நிர்த்தாரணம் செய்கை. லிங்கமாவது "ஸர்வதா ஸர்வாணி பூதாநி" என்று துடங்கி, இந்த வித்யாமயமான யாகத்தையுடையவனுக்கு ஸர்வபூதங்களும் உறங்கும் போதும் விழித்திருக்கும்போதும் ஸர்வகாலங்களிலும் மநஶ்சிதாதியான அக்நிகளை உண்டுபண்ணுகிறதென்கிறது. க்ரியாமயமானயாகம் ஒருகாலே ஒருவனாலே செய்யத்தக்கது. இது இப்படியன்றிக்கே ஸர்வகாலமும் ஸர்வபூதங்களினாலும் செய்யத்தக்கதாகையால் இது க்ரியாமய யஜ்ஞாங்கமன்று என்று நிஶ்சயிக்கப்படுகிறது. வாக்யமாவது - ஸமபிவ்யாஹாரம். இங்கு வித்யாமயமான யாகத்தை யுடையவனோடுகூட இவ்வக்நிகளைச் சொல்லியிருக்கையால் வாக்யமும் இவ்வக்நிகள் வித்யாமய யாகத்துக்கே அங்கங்களென்று நிஶ்சயிக்கைக்குக் காரணமாகிறது. ௨0௧.

ஸூ-௨0௨. பூர்வவிகல்ப: ப்ரகரணாத்ஸ்யாத்க்ரியா மாநஸவத்.

(ஶ்ரு-ப்ர-வ்.) பூர்வவிகல்ப: யஜ்ஞஸம்பந்தியான பாத்ராதிகளினால், ப்ரகரணாத் ஸ்யாத் - வித்யாந்தரங்கள் வேறுபட்டிருப்பதுபோல், (இதுவும் க்ரியாமய யஜ்ஞத்தைக்காட்டிலும் வேறுபட்டிருக்கும்) க்ரியா - அநுவாதவாக்யத்தில் விதிகல்பிக்கப்பட்டிருக்கிறது. மாநஸவத் - அது பூர்வமீமாம்ஸையிலும் சொல்லப்பட்டது. ௨0௨.

(ஶ்ரு-ப்ர-ஹா) இஷ்டகசிதாக்நியினுடைய யாகத்துக்கு யாதொருபாத்ரமோ, யாதொரு ஸ்தோத்ரம் முதலானவையோ, அவையொன்றும் இந்த மநஶ்சிதாக்நியினுடைய யாகத்துக்குச் சொல்லவில்லை. வேறுவிதமான பாத்ர ஸ்தோத்ராதிகளே சொல்லியிருக்கின்றன. ஆகையால் இந்த மநஶ்சிதாக்நி இஷ்டகசிதாக்நியைப்போல் க்ரியாரூபமானக்ரதுவுக்கு அங்கமன்று, வித்யாமய க்ரதுவுக்கே அங்கமாகக்கடவது. ஶ்ருதிலிங்காதிகளினாலும் பாத்ர ஸ்தோத்ராதி அநுபந்தாதிகளினாலும் தகரவித்யை சாண்டில்ய வித்யை முதலானவை க்ரியாமயக்ரதுவைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதுபோல், இங்கும் கண்டுகொள்வது, விதிவாக்ய மன்றிக்கே அநுவாத வாக்யத்திலும் விதிகல்பிப்பதுண்டு. பூர்வமீமாம்ஸையில் "வசநாநி த்வபூர்வத்வாத்" என்று அர்த்தம் அபூர்வமாகில் விதியில்லாவிடினும் கல்பித்துக்கொள்ளலாமென்று சொல்லியிருக்கிறது. "தேஷாமேகைக ஏவ தாவாந்யாவாநஸௌ பூர்வ:" இத்யாதியினால், முன்சொல்லப்பட்ட இஷ்டகசிதாக்நிக்கு யாதொருபலமோ, இந்த மநஶ்சிதாக்நிக்கும் அதுவேபலமென்று சொல்லியிருக்கிறது. ஆக, விதியும் பலமும் இவ்வாக்யத்திலே யுண்டாகையால், இது

முன்வாக்யத்திற் சொன்னதைக்காட்டிலும் வேறுகவேண்டுமென்கிருர். சங்கர பாஷ்யத்துக்கும் தாத்பர்யமிதுவே. ௩௦௨

ஸூ-௩௦௩. ந ஸாமாந்யாத³ப்யுபலப்³தே⁴ர்ம்ருʼத்யுவந்ந ஹி லோகாபத்தி:.

(ஸ-ரா-வ்ரு.) ஸாமாந்யாத³பி - இரண்டிடத்திலுமுள்ள ஏதோ ஒரு தர்மத்தைப்பற்றியும், உபலப்³தே⁴: - (இது அதுபோன்றது என்கிற) அதிதேசம் காண்கையாலே, ந - இஷ்டகசிதாக்நியைப்போல் க்ரியாமய க்ரது சேஷமென்கிறநியமமில்லை. (இதற்குதாஹரணம்) ம்ருʼத்யுவத்-ஸூர்ய மண்டலவர்த்தி புருஷனுக்கு ம்ருத்யுவினதிதேசம்போல், லோகாபத்தி:- ம்ருத்யுலோகப்ராப்தி, ந - கிடையாது. ௩௦௩.

(ஸ-ரா-ஸா.) "யாவாந ஸம்வத்ஸர:" இத்யாதியினுல், மநஸ்சிதாக்நி இஷ்டகசிதாக்நி போன்றது என்கையாலே இதுவும் அதைப்போல் க்ரியாங்கமே யாகவேண்டு மென்னில்; இது அதைப்போன்ற தென்ருல் அதுக்குள்ள குணங்க ளெல்லாம் இதுக்குவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. ஏதோ ஒரு விதத்தினுல் ஸாத்ருʼஶ்ய முண்டான போதிலும் அப்படி சொல்லலாம். மநஸ்சிதாக்நிக்கும் இஷ்டகசிதாக்நிக்கும் பல மொன்ருகையால் இது அதைப்போன்ற தென்று சொல் விற்ருழிய, அதைப்போல் க்ரியாங்கமென்பதில் தாத்பர்யமில்லை. இதற்குதாஹ ரண மென்னென்னில்; "ஸ ஏஷ ஏவ ம்ருʼத்யுர்ய ஏஷ ஏதஸ்மிந்மண்ட³லே புருஷ:" ஸூர்யமண்டலமத்ய வர்த்தியான புருஷன் ம்ருத்யுவென்று சொல் விற்று. அப்புருஷன் ம்ருத்யுவைப்போல் ஸம்ஹரிக்கிருனென்றே அதுக்குப்பொ ருள். அவ்வளவேயன்றி, ம்ருத்யுவைப்போல் அப்புருஷன் ம்ருத்யு லோகத்திலே வாஸம் செய்கிருனென்பதில் தாத்பர்யமில்லை. அதுபோலிக்கும் கண்டுகொள்வது (சங்கரபாஷ்யத்திலும் தாத்பர்ய பேதமில்லை.) ௩௦௩.

ஸூ - ௩௦௪. பரேண ச ஶப்³த³ஸ்ய தாத்³வித்⁴யம் பூ⁴யஸ்த்வாத்த்வநுப³ந்த⁴:.

(ஸ-ரா-வ்ரு.) பரேண ச - மேலுள்ள ப்ராஹ்மணத்தினுலும், ஶப்³த³ஸ்ய - மநஸ்சித் என்கிற சப்தத்துக்கு, தாத்³வித்⁴யம் - வித்யாமயக்ரதுவுக் கங்கமென்கை (நிஸ்சயிக்கப்படுகிறது). பூ⁴யஸ்த்வாத் - (அக்நயவயவங்கள் இப்ப்ரகரணத்தில்) அதிகமாயிருக்கையாலே, அநுப³ந்த⁴: - (இவ்வக்நியும் இங்கே) சொல்லப்பட்டது. ௩௦௪.

(ஸ-ரா-ஸா). "அயம் வாவ லோக: ஏஷோ(அ)க்³நிஶ்சித:" என்று மேல் வாக்யத்தில் மநஸ்சிதாக்நியில் லோகத்ருஷ்டி பண்ணச்சொல்லி, இப்படி பண்ணு கிறவன் ஸத்கதியையடைகிருன். அக்கதி கேவல கர்மம்செய்தவனுக்கு நேரிடாது என்று கர்மத்தைநிந்தித்து வித்யையை ஸ்துதித்தது. கீழும் "யதே³தந்மண்ட³லம் தபதி" என்றுதுடங்கி வித்யையைஸ்துதித்தது. இப்படிகீழும் மேலுமுள்ள ப்ராஹ்

மணங்கள் வித்யாவிஷயமாயிருக்க நடுவிலுள்ள இந்த வாக்யம் மாத்திரம் க்ரியா விஷய மென்பது அநுசிதமாகையால் இவ்வாக்யமும் வித்யா மயமான க்ரதுவையே சொல்லிற்றென்னவேணும். ஆகில், இதை வித்யா ப்ரகரணமாகிய ப்ருஹதாரண்யத்தில் சொல்லவேண்டியிருக்க, அப்படி சொல்லாமல் க்ரியா ப்ரகரணமாகிய இங்கு சொல்லுவா னென்னென்னில்; மாநஸிகாதி சில வ்யாபாரங்களை அக்நிகளாகவும் சிலவற்றை அவற்றினுடைய அங்கங்களாகவும் த்யாநிக்கவேணுமென்று சொல்லுகையாலே, பாத்ரம் ஸ்தோத்ரம் முதலிய அக்ந்யவயவங்கள் இந்த ப்ரகரணத்தில் அதிகமாகச் சொல்லி யிருக்கையாலே, இதையும் இங்கே சொன்னால் கேட்கிறவர்களுக்கு சீக்கிரமாகத் தெரியுமென்கைக்காக இங்கே சொல்லிற்று. ஆகையால் இது வித்யாங்கமேயென்று ஸித்தாந்தம். ௫0௪.

அதி-௩௰௩. ஸூ-௫0௫. ஏக ஆத்மந: ஶரீரே பாவாத்.

(ஶ - வ்யா.) ஏகே - சிலர், ஶரீரே பாவாத் - சரீரத்திலேயே (ஜ்ஞாநாதிகள்) இருக்கையாலே, ஆத்மந: - ஆத்மாவுக்கு (தேஹத்தைக்காட்டிலும் பேதம் கிடையாது.) என்றார்கள். ௫0௫.

(ரா - வ்யா.) ஶரீரே-சரீரத்தில் (இருக்கிற ஆத்மாவுக்கு), பாவாத்- (கர்த்ருத்வாதிதர்மங்களே) உண்டாகையாலே, ஆத்மந: - (கர்த்ருத்வாதி தர்மங்களையுடைய) ஆத்மாவினுடைய (உபாஸநமே செய்யவேண்டும்) என்று, ஏகே - சிலர் (சொன்னார்கள்.) ௫0௫.

(ஶ-ஹா.) இதில், ஆத்மாவென்பது தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டதா அல்லது தேஹமேயா என்று விசாரிக்கப்படுகிறது.—தேஹமே ஆத்மா, இதைக் காட்டிலும் வேறு ஆத்மா கிடையாது. உண்டாகில் என்காணப்படவில்லை. "நான் மநுஷ்யன், நான் செய்கிறேன், நான் அறிகிறேன்" என்ற ஜ்ஞாநம் சரீரத்தைப் பற்றியே யுண்டாகிறது. சரீரமாவது - ப்ருதிவீ ஜலம் தேஜஸ்ஸு வாயு ஆகியநாலு தத்வங்கள் சேர்ந்துண்டான ஒருவடிவு, அந்நாலிலும் சைதந்யமில்லாவிடிலும், தனித்தனியே வெற்றிலையிலும் பாக்கிலுமில்லாத சிகப்பு மூன்றும் சேர்ந்தாலுண்டாவதுபோல், நாலுபூதங்களினுடையசேர்த்தியில் சைதந்ய முண்டாகிறது. மேலும், நீங்கள் ஆத்மாவுக்கு சைதந்யம் ஸ்ம்ருதி முதலியகுணங்கள் சொல்லுகிறீர்கள். அவைகள் சரீரத்துக்குள்ளே காண்கிறதொழிய வெளிப்பட்டுக் காணவில்லை. ஆகையால் சரீரமே ஆத்மா என்றான் லோகாயதிகன். ௫0௫

(ரா-ஹா.) கீழே லிங்கபூயஸ்த்வாதி கரணத்தில் ஸர்வபர வித்யைகளிலும் பரமாத்மாவே உபாஸ்யனென்றார், இதில், பகவத்சேஷமாய் ஸம்ஸார ஸம்பந்த மற்ற ஆத்மஸ்வரூபமும் ஸர்வவித்யைகளிலு முபாஸ்யமென்கிறார்—ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவாக பரமாத்மாவை உபாஸிக்க வேணுமென்று "ஆத்மேதி தூபகச்சந்தி க்ராஹயந்தி ச" என்ற ஸூத்ரத்தில் மேலேசொல்லப்போகிறார். அங்கு பரமாத்மாவுக்கு சரீரமான ஜீவனை, கர்த்ருத்வம் போக்த்ருத்வம் முதலிய ஸம்ஸார தசையிலுள்ள குணங்களை யுடையவனாக அநுஸந்திக்கவேணுமா, அல்லது ஸம்ஸார ஸம்பந்தமற்ற

போதுள்ள அபஹதபாப்மத்வாதி குணங்களை யுடையவனாக அநுஸந்திக்கவேணுமா என்று வரில்,—ஸம்ஸாரத்திலிருக்கும்போது பண்ணவேண்டிய உபாஸநத்தில் ஸம்ஸாரதசையிலுள்ள கர்த்ருத்வாதி குணங்களை யுடையவனாகவே ஜீவனை உபாஸநம் செய்யவேணும். யாகாதிகளைச் செய்யும்போது ஆத்மாவைக்கர்தாவாக நினைத்தே செய்கிறார்களல்லது, அது பின்பு ஸ்வர்க்கத்துக்குப்போய் யாதொரு குணத்தை யடைகிறதோ, அக்குணத்தையுடையதாக அறிந்து செய்கிறதில்லை. அதுபோலவே இங்கும் கண்டு கொள்வதென்று பூர்வபக்ஷம். ௩0௫.

ஸூ-௩0௬. வ்யதிரேகஸ்தத்பாவபாவித்வாந்நதூபலப்திவத்.

(ஶ்ரு - வ்ய.) ந து - அப்படி சொல்லுவது சரியன்று; தத்பாவபாவித்வாத் - தேஹதர்மத்தைக்காட்டிலும் ஆத்மதர்மம் வேறுபட்டுக் காண்கையாலே, வ்யதிரேக: - ஆத்மாதேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டவன் உபலப்திவத் - வஸ்து ஸாக்ஷாத்காரம் (தீபதர்மமாகாதது) போல் (ஜ்ஞானம் சரீரதர்மமாகாது.) ௩0௬.

(ரா - வ்ய.) ந து - அப்படி சொல்வது உசிதமன்று. தத்பாவபாவித்வாத் - அந்த அபஹதபாப்மத்வாதி ஸ்வரூபமே ப்ராப்யமாகையாலே, உபலப்திவத் - பரமாத்மோபாஸநம்போலே, வ்யதிரேக: - (ஸம்ஸாராவஸ்தையைக் காட்டிலும்) விலக்ஷணமான அவஸ்த்தையோடுகூடின ஜீவாத்மஸ்வரூபமே (உபாஸ்யமாகக்கடவது.) ௩0௬.

(ஶ்ரு-பா.) இந்த பாஷ்யத்துக்கு "தத்பாவாபாவித்வாத்" என்று ஸூத்ரபாடம். இதில் அப்பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்—ஜ்ஞாநாதிகள் தேஹ தர்மங்களன்று. அப்படியாகில் ரூபாதிகளைப்போல் எப்போதும் தோற்றவேணும், எதிரே நிற்கிறவனுக்கும் தோற்றவேணும். ஜ்ஞாநாதிகள் தேஹமுள்ளபோது சில காலம் தோற்றி சில காலம் தோற்றாமலிருக்கும். பிறருக்குக் காணாது. ஆகையாலிவை தேஹத்தைக்காட்டிலும் வேறான ஆத்மாவுக்கே குணங்களாகவேணும். தேஹமுள்ளபோதே ஜ்ஞாநாதிகள் தோற்றுகையாலே அவை தேஹதர்மமென்று சொன்னோமேயென்னில்; விளக்குள்ளபோதே எதிரேயுள்ள வஸ்துக்கள் தோற்றினாலும் அத்தோற்றம் ஆத்மகுணமாகுமல்லது விளக்கின் குணமாகாததுபோல் சரீரமுள்ளபோதே ஜ்ஞாநாதிகள் தோற்றினாலும் அவை சரீரகுணமாகமாட்டா. ஆகையால் தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டு ஆத்மாவென்றொருவஸ்து உண்டென்று ஸித்தாந்தம். ௩0௬.

(ரா-பா) ஸம்ஸாரியான ஆத்மாவை உபாஸநம் செய்வது சரியன்று. "யதாக்ரதுரஸ்மிம்ல்லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி" உபாஸகன் எவ்விதமான ஜீவாத்மஸ்வரூபத்தை பகவத்சரீரமாக உபாஸநம்செய்கிறானோ,பின்பு ஸம்ஸாரத்தைக்கடந்துபோய்அவ்விதமானஆத்மஸ்வரூபத்தையே அடைவன் என்கையாலே, அங்குப்போய் அடையவேண்டியது அபஹதபாப்மத்வாதி ஸ்வரூபமாகையாலே அதையே இங்கும் உபாஸநம் செய்யவேண்டும். மோக்ஷதசை-

யில் ப்ராப்யமான பரமாத்ம ஸ்வரூபத்தையே இங்கும் உபாஸிப்பதுபோல் ஜீவாத்மாவையும் அப்படியே உபாஸிக்கவேணுமென்று ஸித்தாந்தம். ௬0௪.

அதி-௩0௩. ஸூ-௬0௭. அங்காவபத்தாஸ்து ந ஶாகாஸு ஹி ப்ரதிவேதம்.

(ஶ-ப்ர-வ்ய.) அங்காவபத்தா: து - உத்கீதாவயவத்தை அவலம்பித்திருக்கிற உபாஸநங்கள், ந - அந்தந்த சாகைகளில் வ்யவஸ்திதங்களன்று, ப்ரதிவேதம் - எல்லாவேதங்களிலும், ஶாகாஸு - எல்லாசாகைகளிலும், (அநுகதங்களாயிருக்கும்). ௬0௭.

(ஶ-ப்ர-ஸா.) கீழ்பரமாத்மோபாஸநம் சொன்ன விடங்களி லெல்லாம் ஜீவாத்மோபாஸநம் வருமென்றார். இதில் உத்கீதஸாமம் சொன்னவிடங்களிலெல்லாம் உத்கீதோபாஸநம் வருமா வாராதாவென்று விசாரிக்கிறார்—"ஓமித்யேததக்ஷரமுத்கீதமுபாஸீத" என்று சிலவிடங்களில் உத்கீதோபாஸநம் சொல்லியிருக்கிறது. உத்கீதஸாமம் மாத்திரம் எல்லாசாகையிலும் சொல்லியிருக்கிறது. ஒரு சாகையில் சொன்ன உத்கீதோபாஸநத்தை எல்லாசாகையாரும் செய்யவேணுமா, அல்லது எங்கே சொல்லியிருக்கிறதோ, அந்த சாகையார் மாத்திரம் செய்யவேணுமாவென்னில், ஒவ்வொரு சாகையில் வெவ்வேறு ஸ்வரமாகையாலே, ஒரு சாகையிற்சொன்ன உத்கீதஸாமம் மற்றொருசாகையி லில்லாமையால், எந்த உத்கீதஸாமத்துக்கு உபாஸநம் சொல்லியிருக்கிறதோ, அவர்கள் அதைச் செய்யவேணும், மற்றவர்கள் செய்யவேண்டியதில்லை என்பது பூர்வபக்ஷம்—ஸ்வரம் வெவ்வேறாயினும், ஸ்வரத்தைக்காட்டாமல் உத்கீதத்தை உபாஸநம் செய்யவேண்டுமென்று ஸாமாந்யமாகச் சொல்லுகையாலே எல்லா சாகையாரும் அவ்வுபாஸநம் செய்ய வேண்டுமென்று ஸித்தாந்தம். ௬0௭.

ஸூ-௬0௮. மந்த்ராதிவத்வாऽவிரோத:.

(ஶ-ப்ர-வ்ய.) மந்த்ராதிவத்வா - மந்த்ரம் முதலானவற்றைப்போலேயும், அவிரோத: - விரோதமில்லை. ௬0௮.

(ஶ-ப்ர-ஸா.) ஒரு யஜ்ஞம் அநேகசாகைகளில் சொல்லி யிருந்தபோதிலும், அதுக்குவேண்டிய மந்த்ரம்பாத்ரம் முதலிய ஸாமக்ரிகள் ஓரிடத்திலேசொல்லி மற்ற விடங்களில் சொல்லாமலிருக்கும். ஆனபோதிலும், சொல்லாத இடங்களிலும்கூட மற்றோரிடத்திற்சொன்ன மந்த்ராதிகளைக்கொண்டு அந்த யஜ்ஞத்தை நடத்துகிறார்கள். அதுபோலவே இங்கும் கண்டுகொள்வது. ௬0௮.

அதி-௩0௪. ஸூ-௬0௯. பூம்ந: க்ரதுவஜ்ஜ்யாயஸ்த்வம் ததா ஹி தர்ஶயதி.

(ஶ-ப்ர-வ்ய.) க்ரதுவத் - (தர்சபூர்ணமாஸாதி) யாகம்போலே, பூம்ந: - விபுலமான ஸமஸ்தோபாஸநத்துக்கே, ஜ்யாயஸ்த்வம் - ப்ராமாணிகத்வமுண்டு; ததா ஹி - அப்படியே, தர்ஶயதி - ஶ்ருதிசொல்லுகிறது. ௬0௯.

(ஶ்ரு-ப்ர-ஸா) வைஶ்வாநரவித்யையில் "தஸ்யஹ வா ஏதஸ்யாத்மநோ வைஶ்வாநரஸ்ய மூர்த்தைவ ஸுதேஜா:" என்று தொடங்கி ஆகாச ஆதித்யவாயுப்ருதிவீ முதலியவற்றை சிரஸ்ஸு நேத்ரம் முதலிய அங்கமாக உடைய பரமாத்மாவாகிய வைஶ்வாநரனை உபாஸநம் செய்யச்சொல்லிற்று. "ஔபமந்யவ கம் த்வமாத்மாநமுபாஸ்ஸே" என்று தொடங்கி ஒவ்வொரு அங்கத்தினுடைய உபாஸநமும் அததுக்கு பலமும் சொல்லிற்று. இங்கு ஒவ்வொரு அவயவங்களைத் தனித்தனியே உபாஸிக்கலாமா, எல்லா அவயவங்களோடு கூடிய பரமாத்மாவையே ஸமஸ்தமாக உபாஸிக்கவேணுமாவென்னில், ஒவ்வொரு அவயவங்களையும் உபாஸிக்கவேணுமென்று தனித்தனியே சொல்லுகையாலும், அவ்வொன்றுக்கும் வெவ்வேறு பலங்கள் சொல்லியிருக்கையாலும் வெவ்வேறவயவங்களையும் உபாஸிக்கவேண்டுமென்று பூர்வபக்ஷிசொன்னான் -"யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே" என்று தொடங்கி, வைஶ்வாநராத்ம ஸ்வரூபத்தை யறியவேணுமென்று சென்று அதின் ஸ்வரூபத்தைக் கேட்டு, ஸ்வர்க்கலோகாதிகள் அவ்வாத்மாவுக்கு அவயவங்களென்று குருஉபதேசிக்க அறிந்து, அந்தவித்யைக்கு பலம் ஸகல லோகங்களிலும் பரமாத்மாநுபவமென்று சொல்லித்தலைக்காட்டுகையாலே, எல்லா அவயவங்களோடுகூடிய வைஶ்வாநரனே இங்கு உபாஸ்யனாகச் சொல்லப்பட்டான். ஒவ்வொரு அவயவங்களினுடைய உபாஸநத்தைத் தனித்தனியே சொன்னது - வைஶ்வாநரதேவதாகமான த்வாதசகபாலயாகத்தைவிதித்து, பின்பு அதினுடைய ப்ரசம் ஸார்த்தமாக அதுக்குள்ளடங்கிய அஷ்டாகபாலம் நவகபாலம் முதலியவற்றைத் தனித்தனியே சொன்னதுபோலிங்கும் கண்டுகொள்வது. தனித்தனியே உபாஸித்தவனுக்கு "மூர்த்தா தே வ்யபதிஷ்யத்" என்று தனித்தனியே அவயவங்களை உபாஸிக்கில் தலைவெடித்துப்போகும் கண் குருடாய்விடும் என்று அநிஷ்டபலத்தைச் சொல்லுகையாலே தனித்தனி அவயவங்களை உபாஸிக்கக் கூடாதென்றும் ஸமஸ்தமான வைஶ்வாநரனையே உபாஸிக்க வேண்டுமென்றும் இந்த ஶ்ருதிக்குத் தாத்பர்யமென்று ஸித்தாந்தம். ௪0௧.

௬௰-௧௦௬. ஸூ-௪௧௦. நாநா ஶப்தாதிபேதாத்.

(ஶ்ரு-ப்ர-வ்யா.) ஶப்தாதிபேதாத் - சப்தம் முதலியவை வெவ்வேறுகையாலே, நாநா - (வித்யைகள்) வெவ்வேறு. ௪௧0.

(ஶ்ரு-ப்ர-ஸா.) ஸத்வித்யா தஹரவித்யா ஶாண்டில்யவித்யா ஆநந்தவித்யா உபகோஸலவித்யா வைஶ்வாநரவித்யா என்றிப்படி சொல்லப்பட்ட வித்யைகளெல்லாம் ஒன்றேயா, அல்லது வெவ்வேறு என்னில், இவையெல்லாவற்றிலும் பரமாத்மாவே உபாஸ்யனாகையாலும், பரமாத்ம ப்ராப்தியே எல்லாவற்றுக்கும் பலமாகையாலும் இவைகளுக்கு பேதமில்லையாதென்றான் பூர்வபக்ஷி. "ஜுஹோதி, யஜதி, ததாதி" என்கிற சப்தபேதத்தினால் யாகங்கள் பேதிக்கிறாப்போல், இங்கும், "வேத | உபாஸீத" இத்யாதி சப்தங்கள் வெவ்வேறாயிருக்கையாலும், ஒவ்வொன்றுக்கும், ஜகத்காரணத்வம், அபஹதபாப்மத்வம், என்கிற வெவ்வேறு குணங்களையே உபாஸ்யமாகச் சொல்லுகையாலும், "ஸத்வித்யா தஹரவித்யா" இத்யாதி நாமபேதங்களுண்டாகையாலும் இவ்வித்யைகளொன்றாகமாட்டா, வெவ்வேறு வித்யைகளென்று ஸித்தாந்தம். ௪௧௦.

அதி-௧௦௭. ஸூ-௪௧௧. விகல்போऽவிஶிஷ்டபலத்வாத்.

(ஸ-ரா-வ்ய) அவிஶிஷ்டபலத்வாத் - ஸமானபலத்தை யுடைத்தாகை யாலே, விகல்ப꞉ - ஒவ்வொன்றேயமையும். ௪௧௧.

(ஸ-ரா-ஸா) ஒருபுருஷனுக்கு மோக்ஷார்த்தமாக ஸத்வித்யை தஹரவித்யை என்றிப்படி சொல்லப்பட்ட வித்யைகளில் ஒவ்வொன்றே உபாஸித்தால் போருமா, அல்லது இரண்டு மூன்று நாலு உபாஸிக்கவேணுமா வென்னில், அக்நிஹோத்ரம் தர்சபூர்ணமாஸம் முதலான க்ரியைகளில் ஒவ்வொன்றே ஸ்வர்க்கத்தைக் கொடுக்க வற்றாயிருந்தபோதிலும், ஸ்வர்க்கத்தில் அதிக ஸுகத்தைக் கோரிய புருஷன் இரண்டு மூன்று யஜ்ஞங்களைச் செய்யலாமென்று சொன்னதுபோல், மோக்ஷத்தில் அதிக ஸுகத்தை யபேக்ஷித்தவன் இரண்டு மூன்று வித்யைகளையும் உபாஸிக்கவேணுமென்று பூர்வபக்ஷம்— அக்நிஹோத்ராதிகளினாலுண்டாகிற ஸ்வர்க்கஸுகம் அல்பமாகையால் அதை அதிகமாக வேண்டுமவன் இரண்டு மூன்று க்ரியைகளைச் செய்யவேண்டும். ஸத்வித்யாதிகளினாலுண்டாகிற மோக்ஷஸுகம் அப்படி அல்பமன்றிக்கே ஒவ்வொரு வித்யையினா லுண்டாகிற அபரிச்சிந்நப்ரஹ்மாநுபவமாகிற மோக்ஷபலம் அதற்குமேலில்லை யென்னும்படி அநந்தமாகையாலே மேன்மேலபேக்ஷைக்கு இடமில்லையாகையால் இரண்டாவது வித்யையை உபாஸிக்கவேண்டாம் ஒரொன்றே போரும் என்று ஸித்தாந்தம். ௪௧௧.

அதி-௧௦௮. ஸூ-௪௧௨. காம்யாஸ்து யதாகாமம் ஸமுச்சீயேரந் நவா பூர்வஹேத்வபாவாத்.

(ஸ-ரா-வ்ய.) காம்யா꞉ து - காம்யமான புத்ர பசு தந ஸ்வர்க்காதிகளை பலமாக உடையவித்யைகள், பூர்வஹேத்வபாவாத் முன்சொன்ன காரணமில்லாமையாலே. யதாகாமம் - இஷ்டப்படி, ஸமுச்சீயேரந் - சேர்த்தும் உபாஸிக்கவுமாம், நவா - தவிரவுமாம். ௪௧௨.

(ஸ-ரா-ஸா) ப்ரஹ்மப்ராப்தியல்லாத மற்றகாம்ய புருஷார்த்தங்களைக் கொடுக்கவற்றான ப்ராணவித்யை நாமவித்யை முதலானவைகளில்; அதிக பலத்தை வேண்டுமவன் இரண்டு மூன்றையும் சேர்த்தும் உபாஸநம் செய்யலாம், அதிகபலத்திலபேக்ஷையில்லாமல் கிடைத்தவளவில் த்ருப்தியடைகிறவனுக்கு ஒருவித்யையே போரும். இவ்வித்யைகளுக்கு முன்னைப்போல் அபரிச்சிந்நபலம் கிடையாமையாலே இப்படி கொள்வது யுக்தம் என்று ஸித்தாந்தம். ௪௧௨

அதி-௧௦௯. ஸூ-௪௧௩. அங்கேஷு யதாஶ்ரயபாவ꞉.

(ஸ-ரா-வ்ய.) அங்கேஷு - க்ரதுவுக்கங்கமான உத்கீதாதி ஸாமங்களிலே ஆஶ்ரிதங்களான, உபாஸநங்களுக்கு, யதாஶ்ரயபாவ꞉ - உபாஸநத்துக்காஶ்ரயமான உத்கீதம்போலே க்ரத்வங்கத்வமுண்டு. ௪௧௩.

(ஸ-ரா-ஸா) இவ்வதிகரணத்தில், காம்யோபாஸநத்துக்குப்போலே, உத்கீதாத்யுபாஸநத்துக்கும், வித்யை வீர்யவத்தரமாகவேணுமென்றால் அநுஷ்டானமுண்டு,

இல்லையாகி லில்லையென்கிறார்— "உத்கீதமுபாஸீத" என்று சொன்ன உத்கீதோபாஸநம், க்ரதுவுக்கு அங்கமாக உத்கீதஸாமங்கள் சொல்லப்பட்ட எல்லா இடங்களிலும் செய்யவேணுமா, அல்லது இஷ்டமுண்டாகில் செய்து இல்லையாகில் தவிரலாமா என்னில், உத்கீதஸாமம் க்ரதுவுக்கு அங்கமாகிறாப்போல் அதினுடைய உபாஸநமும் க்ரதுவுக்கு அங்கமாகிறதாகையால், அங்கமான உத்கீத உபாஸநத்தை நியமேந எல்லா இடங்களிலும் செய்யவேண்டும் என்றான் பூர்வபக்ஷி. ௬௧௩.

ஸூ-௬௧௪. ஶிஷ்டேஶ்ச.

(ஶ்ரீ-ரா-வ்யா-ஸா) ஶிஷ்டேஶ்ச - ("உத்கீதமுபாஸீத" உத்கீதோபாஸநத்தைச் செய்யவேண்டும் என்று) விதி (ப்ரத்யயாந்தமான சப்தம்) இருக்கையாலேயும், (அதை நியமேந செய்யவேண்டும்). ௬௧௪.

ஸூ-௬௧௫. ஸமாஹாராத்.

(ஶ்ரீ-ரா-வ்யா-ஸா.) ஸமாஹாராத் - ஹோதாவானவன் உத்கீதோபாஸநத்தைச் செய்யாவிடினும் யஜமாநன் அதைச்செய்யவேண்டும் என்று ஒருவன் செய்யாததை மற்றொருவன் செய்து தலைக்கட்டச் சொல்லுகையாலே, இதைநியமேந பண்ணவேணுமென்பது ஸித்தம். ௬௧௫.

ஸூ-௬௧௬. குணஸாதாரண்யஶ்ருதேஶ்ச.

(ஶ்ரீ-ரா-வ்யா.) குணஸாதாரண்யஶ்ருதேஶ்ச - (ப்ரணவத்தின்) குணமாகிய உபாஸநத்துக்கு எல்லா யஜ்ஞங்களிலும் ஸம்பந்தம் சொல்லுகையாலே அதைநியமேந செய்யவேண்டும். ௬௧௬.

(ஶ்ரீ-ரா-ஸா) "தேநேயம் த்ரயீவித்யா வர்த்ததே ஓமித்யாஶ்ராவயதி ஓமிதி ஶம்ஸதி ஓமித்யுத்காயதி" அந்த ப்ரணவத்தினாலே மூன்றுவேதங்களிலும் சொல்லப்பட்ட கர்மங்கள் நடக்கிறது என்கிறவிடத்தில், "அந்தப்ரணவம்" என்று உபாஸநத்தோடு கூடிய ப்ரணவத்தைச் சொல்லி அதினாலே ஸகல கர்மங்களும் நடக்கிறதென்கையினாலே, உத்கீதம் சொன்னவிடங்களிலெல்லாம் உத்கீதோபாஸநமு முண்டென்று பூர்வபக்ஷம். ௬௧௬.

ஸூ-௬௧௭. நவா தத்ஸஹபாவாஶ்ருதே:.

(ஶ்ரீ-ரா-வ்யா.) தத்ஸஹபாவாஶ்ருதே: - (இந்த உபாஸநத்தை) க்ரதுவுக்கு அங்கமாகச் சொல்லாமையாலே, நவா - உத்கீதோபாஸநம் நியமேந செய்யவேணுமென்பதில்லை. ௬௧௭.

(ஶ்ரீ-ரா-ஸா) இனி அப்பூர்வபக்ஷத்தை நிரஸித்து ஸித்தாந்தம் சொல்லுகிறார்—"யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம்" என்று உத்கீதோபாஸநம் செய்தால் அந்த வித்யை நிர்விக்நமாக நிறைவேறி பலத்தையும் சீக்கிரத்தில் கொடுக்கும் என்று வித்யாபூர்த்தியிலும் சீக்ரபலப்ரதத்வத்திலும் இந்த உபாஸநத்

தை அங்கமாகச் சொல்லிற்றொழிய க்ரதுவுக்கு அங்கமாகச் சொல்லாமையாலே இதைநியமேந செய்யவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. ஆரம்பித்த க்ரது நிர்விக்நமாக முடியவேணுமென்றாவது பலம் சீக்கிரமாக உண்டாக வேணுமென்றாவது இச்சையுடையவனே அதைச் செய்யவேணும் என்று ஸித்தாந்தம். சகஎ.

ஸூ-சகஅ. உபதர்ஶநாத்,

(ஶ்ரீ-பா-வ்யா.) உபதர்ஶநாச்ச (உத்கீதோபாஸநத்தை யறியாமை)காண்கையாலும், (அது க்ரத்வங்கமாகாது.) சகஅ.

(ஶ்ரீ-பா-ஸா.) "ஏவம்வித்ஹவை ப்ரஹ்மா யஜ்ஞம் யஜமாநம் ஸர்வாம்ஶ்சர்த்விஜோऽபிரக்ஷதி" இப்படி உத்கீதோபாஸநத்தை யறிந்த ப்ரஹ்மா என்கிற ருத்விக்கு யஜமாநனையும் யஜ்ஞத்தையும் மற்றருத்விக்குக்களையும் ரக்ஷிக்கிறானென்கையாலே, உத்காதாவுக்கு உத்கீதோபாஸநமில்லை யென்று ஏற்படுகிறது. உத்கீதோபாஸநம் க்ரதுவுக்கு அங்கமாகில் உத்காதாவுக்கு அது அவஶ்யம்வேணும் அதில்லாமையால் அவ்வுபாஸநம் க்ரத்வங்கமன்றென்று ஏற்படுகிறது. ஆகையால் அவ்வுபாஸநம் நியமேந செய்யவேணுமென்பதில்லை என்று ஸித்தாந்தம். சகஅ.

மூன்றாம் அத்யாயத்தில் மூன்றாம்பாதம்

முடிந்தது.

---



# ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம்.

## ௩-வது அத்தியாயம், ௪-வது பாதம்.



அதி ௧௦௬- ஸூ|| ௪௧௧. புருஷார்த்தோ(அ)த: ஶப்தாதிதி பாதராயண:||

(ஸ- ரா- வ்ய) அத:= இந்த உபாஸநத்தினுலே, புருஷார்த்த:= பலம் (உண்டாகிறது), இதி=என்று, பாதராயண:=வ்யாஸ பகவான், ஶப்தாத்=வேதவாக்யத்தினுலே, (நிர்ணயித்துச்சொல்லுகிறுர்.) ௪௧௧.

(ஸம்- ரா- ஸா) கீழ்ப்பாதத்தில் வித்யாஸ்வரூபத்தை நிரூபித்தார், இதில் அதினுடைய அங்கஸ்வரூபத்தை நிரூபிக்கப்போகிறுர். அதற்காக இந்த முதலதிகரணத்தில் வித்யையை (உபாஸநத்தை) அங்கியாக நிரூபிக்கிறுர்.

பலத்தைக்கொடுக்குமது வித்யையா கர்மமாவென்னில்; "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" இத்யாதி வேதவாக்யங்கள், ப்ரஹ்மஸ்வரூபத்தை உபாஸநம்செய்தவன் மோக்ஷத்தை யடைகிறுனென்று உபாஸநத்தினுலேயே பலமுண்டாவதாகச் சொல்லுகையாலே வித்யையே பலப்ரதமென்று வ்யாஸபகவானுடைய ஸித்தாந்தம். (வித்யையாவது-ப்ரஹ்மஜ்ஞாநமென்று சங்கரமதம்.)

ஸூ || ௪௧௨. ஶேஷத்வாத் புருஷார்த்தவாதோ யதா(அ)ந்யேஷ்விதி ஜைமிநி:||

(ஸ- ரா- வ்ய) ஶேஷத்வாத்=(கர்ம)சேஷமாகையாலே, (வித்யைபலப்ரதமன்று), அந்யேஷு யதா=மற்றத்ரவ்யாதிகளிற்போலே, புருஷார்த்தவாத:=வித்யைபலப்ரதமென்பது அர்த்தவாத (ஸ்துதி) மாத்ரம், இதி= என்று, ஜைமிநி:=ஜைமினியானவர்(சொன்னுர்) ௪௧௨.

(ஸ- ரா- ஸா) இனி பூர்வபக்ஷியான ஜைமிநி சொல்லுகிறுர். கர்மத்தைச் செய்யுமவன், தான் காணப்படுகிற இந்த சரீரத்திற் காட்டில் வேறுபட்டவன் என்று தன்னுடைய ஸ்வரூபத்தையறிந்தே செய்யவேண்டும். இங்கு சொல்லப்பட்ட ஆத்மஸ்வரூபமும் கர்த்தாவாகிய ஜீவஸ்வரூபமே, ஆகையால் இந்த ஆத்மவித்யை, கர்த்தாவுக்குக் கர்மாதிகாரத்தை யுண்டுபண்ணி அவ்வழியாலே கர்மத்துக்கு அங்கமாகிறதொழிய தான் நேரே பலப்ரதமாகிறதில்லை. வித்யை பலப்ரதமென்று சொன்னது "யஸ்ய பர்ணமயீ ஜுஹூர்பவதி ந ஸ பாபம் ஶ்லோகம் ஶ்ருணோதி" எவனுக்கு ஹோமஸாதநமாகிய ஜுஹூவென்பது இலையோ, அவனுக்குப்பாபாபவாதம் உண்டாகாதென்று அந்த அங்கபூதமாகிய ஜுஹூவை ஸ்தோத்திரம் செய்வதுபோல் இங்கும்கர்மாங்கமாகிய வித்யையை ஸ்துதிக்கைக்காக இப்படி சொல்லிற்றென்றுர் ஜைமிநி. கீழ் பலவிடங்களிலும், வேதாந்தங்களில் சொல்லப்பட்ட புருஷன் ஜீவனன்று, ஸர்வேஶ்வரனென்று நிர்ணயிக்கப்பட் டிருந்தபோதிலும், வித்யை கர்மாங்கமென்று சொல்லுகிற சில வேதாந்த வாக்யங்களைப் பராமர்சிக்கில், "தத்வமஸி" என்கிற வாக்யத்துக்கு ஜீவேஶ்வரர்களுக்கு அபேதமங்கீகரித்து, இங்குச் சொல்லப்பட்ட ஈஶ்வரனும் ஜீவஸ்வரூபியே யென்று கொள்ளவேணுமென்று பூர்வபக்ஷியின் அபிப்ராயம்.

ஸூ॥ ௩௨௧. ஆசாரதர்சநாத்॥

(ஶ- ரா- வ்-) ஆசாரதர்சநாத்= (ப்ரஹ்மவித்துக்களுக்கு) கர்மாநுஷ்டாநம்காண்கையாலே, (வித்யை கர்மாங்கம்) ௩௨௧.

(ஶ்ரு- ரா- ஸா) "யக்ஷ்யமாணோ ஹவை பகவந்தோஹமஸ்மி" ப்ரஹ்மவித்தான கேகயபதி, தன்னை யாகம்செய்யப் போகிறவனாகச் சொல்லுகையாலும், "கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:" என்று ப்ரஹ்மவித்துக்களான ஜநகாதிகள் கர்மத்தினால் மோக்ஷமடைந்ததாகச் சொல்லுகையாலும் கர்மமே பலப்ரதம், வித்யை அதுக்கங்கம். ௩௨௧

ஸூ॥ ௩௨௨. தச்ச்ருதே:॥

(ஶ- ரா- வ்- -ஸா) தச்ச்ருதே:="யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம்" வித்யையை அங்கமாகவுடைய கர்மமே பலப்ரதமாகிறதென்று சொல்லுகையாலே வித்யை கர்மாங்கம். ௩௨௨.

ஸூ॥ ௩௨௩. ஸமந்வாரம்பணாத்.

(ஶ- ரா- வ்- ஸா) ஸமந்வாரம்பணாத் = "தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே" பரலோகம்போகிற புருஷனை வித்யையும் கர்மமும் பலத்தைக் கொடுக்கைக்காகப்பின்செல்லுகிறதுகள் என்கையாலே கேவலவித்யை மாத்திரம் பலப்ரதமன்று, இரண்டும் சேர்ந்தே பலப்ரதமாகிறது. ௩௨௩.

ஸூ॥ ௩௨௪. தத்வதோ விதாநாத்.

(ஶ- ரா- வ்- ஸா) தத்வத: = வேதாந்தவித்யையுள்ளவனுக்கு. விதாநாத்= "ஆசார்யகுலாத் வேதமதீத்ய" என்றுதொடங்கி, "குடும்பே ஶுசௌ தேஶே" இத்யாதியினால் சாந்தோக்யத்தில் வேதாத்யயநம் செய்தபின்பு ஒரு சுசியானஇடத்திலிருந்து க்ருஹஸ்ததர்மத்தை யநுஷ்டிக்கக்கடவனென்று கர்மத்தைவிதிக்கையாலே (வித்யை கர்மத்துக்கங்கமாகக்கடவது.)

ஸூ॥ ௩௨௫. நியமாச்ச.

(ஶ-ரா-வ்-ஸா) நியமாச்ச= "குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச்சதம் ஸமா:" இந்ததேஹத்தில் இருந்து கர்மங்களை யநுஷ்டித்துக்கொண்டே நூறுவருஷம்பிழைக்க இச்சிக்கக்கடவனென்று யாவதாயுஷம் கர்மத்தைச்செய்யவேணுமென்கையாலே, (கர்மமேபலப்ரதம் என்று பூர்வபக்ஷிமதம்.௨௪௫.

ஸூ॥ ௩௨௬. அதிகோபதேஶாத்து பாதராயணஸ்யைவம் தத்தர்சநாத்.

(ஶ- ரா- வ்-) அதிகோபதேஶாத்=ஜீவனைக்காட்டிலும் அதிகமானவனை (வேதாந்தத்தில்) உபதேசிக்கையாலே, தத்தர்சநாத்= அந்த பரமபுருஷோபதேசமே (ஸ்பஷ்டமாகக்) காண்கையாலே, பாதராயணஸ்ய= வ்யாஸபகவானுக்கு, ஏவம்= வித்யையேபலப்ரதமென்றேமதம். ௩௨௬.

(ஶ்ரீ - ரா- ஹா) இந்த பூர்வபக்ஷத்தை நிரஸநம்செய்கிறார். வேதாந்தத்தில் யாகாதிகர்த்தாவாகிய ஜீவனைச்சொல்லவில்லை. "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" "ஸோகாமயத" "ததைக்ஷத" இத்யாதிகளினால், ஸர்வஜ்ஞனாய் தன்னுடைய இச்சாமாத்ரத்தினால் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறவனானவனைச் சொல்லி அவனுடைய உபாஸநத்தை விதித்து அவ்வுபாஸநம் பலப்ரதமென்று சொல்லிற்று இவ்விதமான புருஷன் ஜீவனாகான், ஆகையால் பரமபுருஷோபாஸநமே ஸாக்ஷாத் பலப்ரதமென்ற வ்யாஸபகவானுடைய ஸித்தாந்தமே சரியானது. ௪௨௩

ஸூ || ௪௨௭. துல்யம் து தர்சநம்.

(ஶ்ரீ- ரா- வ்யா) தர்சநம்=ஆசாரதர்சனமானது, துல்யம் = (வித்யை ப்ரதாநமென்பதிலும்) ஸமாநம்.

(ஶ்ரீ - ரா- ஹா-) ப்ரஹ்மவித்துகளும் கர்மாநுஷ்டாநம் செய்கை வித்யை கர்மாங்க மென்பதற்கு ப்ரமாண மென்றீர்கள். "ஜநகோ ஹவைதேஹோ பஹுதக்ஷிணேந யஜ்ஞேநேஜே" "கிமர்த்தா வயமத்யேஷ்யாமஹே கிமர்த்தா வயம் யக்ஷ்யாமஹே" என்று ப்ரஹ்மவித்துக்களான சில ருஷிகள், கர்மத்தினால் ப்ரயோஜந மில்லையென்று விட்டுவிட்டதாகவும் சொல்லியிருக்கையாலே, நீங்கள் சொன்னது, வித்யை கர்மாங்கமென்பதற்கு ப்ரமாணமாகமாட்டாது. ஆகில் கர்மத்தைச் சிலர் பண்ணுவதுக்கும் சிலர் விடுவதுக்கும் தாத்பர்யமென்னென்னில், பலாபிஸந்திரஹிதமான கர்மம் வித்யாங்கமாகையாலே செய்யவேணும். பலாபிஸந்தி ஸஹிதமான கர்மம் பந்தகமாகையாலே அதை விட்டுவிடவேணுமென்று தாத்பர்யம். ௪௨௭

ஸூ|| ௪௨அ. அஸார்வத்ரிகீ.

(ஶ்ரீ- ரா- வ்யா - ஹா) அஸார்வத்ரிகீ="யதேவ வித்யயா" இத்யாதியினால் வித்யை கர்மாங்கமென்று எல்லா வித்யையையும் சொல்லவில்லை. உத்கீதவித்யையை மாத்திரம் கர்மாங்கமாகச்சொல்லிற்று. ஆகையால் வித்யைகளெல்லாம் கர்மாங்கமென்பது அப்ராமாணிகம். ௪௨அ.

ஸூ|| ௪௨௯. விபாகஶ்ஶதவத்.

(ஶ்ரீ- ரா- வ்யா) ஶதவத்=நூறைப்போல், (விஷய பேதேன) விபாகம் (சொல்லவேணும்).

(ஶ்ரீ - ரா- ஹா) "தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே" என்பதற்கு, பரலோகம் போகிறவனைக்குறித்து, வித்யை தன்னுடைய பலத்தைக் கொடுக்கைக்காகவும், கர்மம் தன்னுடைய பலத்தைக் கொடுக்கைக்காகவும் அநுஸரிக்கிறதுகள் என்றர்த்தம். இதனால் வித்யை கர்மத்துக்கு அங்கமென்று ஏற்படவில்லை. பூமியையும் ரத்நத்தையும் விற்றவனுக்கு இருநூறு ரூபாய் கொடு என்றால் பூமிக்காக நூறு ரூபாயும் ரத்நத்துக்காக நூறு ரூபாயும் கொடுப்பதாக ஏற்படுகிறாப்போலே இங்கும் கண்டு கொள்வது. ௪௨௯

ஸூ|| ௪௩0. அத்யயநமாத்ரவத꞉.

(ஶ்ரீ-ரா-வ்யா) அத்யயநமாத்ரவத꞉= (வேதத்தை) அத்யயநம்மாத்திரம் செய்தவனுக்கே, கர்மத்தைவிதித்திருக்கிறது. ௪௩0.

(ஶ்ரீ- ரா- ஸா) "ஆசார்யாத்தைவ வித்யா" இத்யாதியில், வேதாத்யயநம், அதாவது-அக்ஷராராசிக்ரஹணம் மாத்ரம் பண்ணினவனுக்கே கர்மத்தைப்பண்ணச்சொல்லிற்று, அர்த்தவிசாரம் செய்தவனைச் சொன்னபோதிலும், இங்கு வித்யையென்பது உபாஸநமாகையாலே அதைச் செய்கிறவனை அங்குச் சொல்லவேயில்லை.

ஸூ|| சுளக. நாவிஶேஷாத்.

(ஶ்ரீ- ரா- வ்ரு) அவிஶேஷாத் = விசேஷஹேது வில்லாமையாலே, ந = அந்தநியமமில்லை. சுளக.

(ஶ்ரீ- ரா-ஸா) "குர்வந்நேவேஹ கர்மாணி" என்கிற ஶ்ருதி, ஆயுஸ்ஸையெல்லாம் கேவல கர்மத்திலேயே போக்கவேணுமென்கிற தென்பதற்கு ஒரு யுக்தியும் கிடையாது. அவ்வாக்யம், ஈசவித்யைக்கங்கமாக யாவதாயுஷம் கர்மாநுஷ்டாநம் பண்ணச்சொல்லிற்று. அதனால் வித்யை கர்மாங்கமென்று ஏற்படாது. சுளக

ஸூ|| சுளஉ. ஸ்துதயேऽநுமதிர்வா.

(ஶ்ரீ- ரா- வ்ரு) ஸ்துதயே = ஸ்தோத்ரம் செய்கைக்காக, அநுமதிர்வா = (கர்மத்துக்கு) அநுமதியே பண்ணப்பட்டது. சுளஉ.

(ஶ்ரீ - ரா- ஸா) இதில் அந்த ஶ்ருதியின் வாஸ்தவமான அர்த்தத்தை வெளியிடுகிறார். அங்கு ஈசவித்யையைச்சொல்லி, இந்த உபாஸகன் கர்மாநுஷ்டாநம் செய்தபோதிலும் இந்த வித்யா மாஹாத்ம்யத்தினால், அக்கர்மங்களினாலுண்டான பலம் இவனையடைந்து இவனுக்கு ஸம்ஸாரத்தை விளைக்காதென்றே சொல்லிற்று. சுளஉ

ஸூ|| சுளந. காமகாரேண சைகே.

(ஶ்ரீ- ரா- வ்ரு) ஏகே=சிலர், காமகாரேண=யதேச்சமாகவே, (கர்மத்யாகத்தைச்சொல்லுகிறார்கள்). சுளந.

(ஶ்ரீ - ரா-ஸா) "கிம் ப்ரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோऽயமாத்மா" என்று தொடங்கி ஒரு சாகையில் ப்ரஹ்மவித்துக்கள் கர்மத்தை விட்டுவிட்டார்களென்று சொல்லியிருக்கின்றது. இதனால் வித்யையே முக்யமென்று ஏற்படுகிறது. சுளந

ஸூ|| சுளச. உபமர்தம் ச.

(ஶ்ரீ-ரா-வ்ரு-ஸா) உபமர்தம் ச- "க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" என்று ப்ரஹ்மவித்யையினால் இவனுடைய ஸகலகர்மங்களும் நசிக்கின்றனவென்று சொல்லியிருக்கிறது; வித்யை கர்மாங்கமானால் இதுகூடாது. சுளச.

ஸூ|| சுளரு. ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி.

(ஶ்ரீ- ரா- வ்ரு- ஸா) ஊர்த்வரேதஸ்ஸு - (ஜநகாதிகளான) ஊர்த்வரேதஸ்ஸுக்களிடத்திலும், ப்ரஹ்மோபாஸகம் காண்கையாலே, அவர்களுக்கு அக்னிஹோத்ராதி கர்மங்களில்லாமையாலே வித்யை கர்மாங்கமென்னக்கூடாது. வித்யையே ப்ரதாநமாய் பலப்ரதமாகிறதென்று அங்கீகரிக்கவேணும். ப்ராஹ்மணாதிகள்ஆஶ்ரமத்தைப்பற்றி யிருக்கவேணும், ஊர்த்வரேதஸ்ஸென்று தனியேயோராஶ்ரமம் கிடையாதேயென்னில், "த்ரயோ தர்மஸ்கந்தா:" "ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோ

லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி" என்றும் "யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்" என்றும் இத்யாதியான ஸந்ந்யாஸ-வேதசப்தத்திலேதானே, (ஸந்யா ஸாஶ்ரமமுண்டென் றேற்படுகிறது.) ஆகையால் வித்யையானது கர்மாங்கமன்று, தானே ப்ரதானமாய்க்கொண்டு பலப்ரதமாகிறதென்று ஸித்தாந்தம். ௨௱௫

ஸூ|| ௨௱௬. பராமர்ஶம் ஜைமினிரசோதனா சாபவததி ஹி.

(ப-ர-வ்ய) அசோதநாத்=விதியாமையாலே, ஜைமினி:= ஜைமினியென்பவர், பராமர்ஶம்=(ஸந்யாஸாஶ்ரமத்துக்கு) அநுவாதத்வத்தையே கல்பிக்கிறார். (அபி)ச=மேலும், அபவததி ஹி= (வேதம் அவ்வாஶ்ரமத்தை) நிந்திக்கிற தன்றோ. ௨௱௬.

(ப - ர- ஸா) இதில் அவ்வாஶ்ரம மில்லையென்று பூர்வபக்ஷி மதம் சொல்லுகிறது. ஊர்த்வரேதஸ்ஸென்கிற ஆஶ்ரமமொன் றுண்டென்பதற்கு "த்ரயோ தர்மஸ்கந்தா:" தர்மத்துக்கு ஆதாரபூதமான ஆஶ்ரமங்கள் மூன்றென்பதை ப்ரமாணமாக எடுத்தார். இந்த வாக்யம், இம்மூவரும் மோக்ஷத்தையடையார்கள், ப்ரஹ்மோபாஸகனே மோக்ஷத்தையடைவான் என்று ப்ரஹ்மோபாஸநத்தை ஸ்துதிக்கைக்காகஸந்யாஸாஶ்ரமத்தை யெடுத்ததொழிய, அதை யநுஷ்டிக்க வேணுமென்று விதிக்கவில்லை. விதியில்லாமல் அநுவாதமாத்ரம் செய்யப்பட்ட அர்த்தம் ப்ரமாணமாகமாட்டாது. மேலும், "வீரஹா வா ஏஷ தேவானாம் யோऽக்னிமுத்வாஸயதே" என்று அக்நிஹோத்ராதிகளைச் செய்யாதவனை தேவர்களுக்கு வீரஹத்யைப்பண்ணினனாக நிந்திக்கையாலே ஸந்யாஸமென்றோ ராஶ்ரமமில்லை யென்றார். ௨௱௬

ஸூ || ௨௱௭. அநுஷ்டேயம் பாதராயண: ஸாம்யஶ்ருதே:.

(ப-ர-வ்ய) ஸாம்யஶ்ருதே:= (நாலு ஆஶ்ரமங்களையும்) ஸமானமாகச் சொல்லுகையாலே, அநுஷ்டேயம்=(ஸந்யாஸாஶ்ரமத்தை) அநுஷ்டிக்கத்தக்கதாக, பாதராயண:=பாதராயணர்(சொன்னார்) ௨௱௭.

(ப - ர- ஸா) அம்மதத்தை நிரஸிக்கிறார். "த்ரயோ தர்மஸ்கந்தா:" என்று க்ருஹஸ்தாஶ்ரமம் போலவே ஸந்யாஸாஶ்ரமத்தையும் ஸமானமாக எடுத்திருக்கையாலே அதைப்போல் இவ்வாஶ்ரமத்தையும் அநுஷ்டிக்கவேணுமென்பது ப்ராமாணிகம். அநுவாதம் செய்யும்போது அதுக்கு வேறோரிடத்தில் விதியிருக்கவேணுமாகையால் இவ்வாக்யத்தில் ஸந்யாஸ விதியில்லாவிடினும் இங்கு அநுவதிப்பதற்காக அதற்குரித்தாக மற்றோரிடத்தில் விதியை கல்பிக்கவேணுமென்று பாதராயண பகவான் சொன்னார். ௨௱௭

ஸூ|| ௨௱௮. விதிர்வா தாரணவத்.

(ப- ர- வ்ய) தாரணவத்=(ஸமித்தினுடைய) தாரணத்தைப்போலே, விதிர்வா=ஸந்யாஸாஶ்ரமத்துக்கும் விதியேஉண்டு. ௨௱௮.

(ப - ர- ஸா) "த்ரயோ தர்மஸ்கந்தா:" என்கிற வாக்யத்திலேயே நாலு ஆஶ்ரமங்களுக்கும் விதி கல்பிக்கவேணும். "அதஸ்ஸமிதம் தாரயந்நநுத்ரவேத்" என்று ப்ரேதாக்நிஹோத்ரத்தில் ஸ்ருக்கு என்கிற பாத்ரத்துக்குக் கீழே ஸமித்தைவைத்து உபஸர்ப்பணம் பண்ணவேணும்; தேவதைகளைக் குறித்துச் செய்கி

ற நித்யாக்நிஹோத்ரத்திலன்றோ ஸமித்தை ஸ்ருக்கின் மேலே வைத்து உபஸர்பணம் பண்ணுவது என்று சொல்லிற்று. இங்கு தைவிககார்யத்தில் ஸமித்தைமேலேவைக்க வேணுமென்பதற்கு விதிப்ரத்யயம் கிடையாது, ஆகிலும் இவ்வர்த்தம் வேறோரிடத்தில் சொல்லாமையாலே அதை இவ்வாக்யம் விதிக்கிறதென்றே ஜைமிநி அங்கீகரித்திருக்கிறார். அதுபோலவே இங்கும் விதிப்ரத்யய மில்லாவிடிலும் விதி கல்பிக்கவேணும். யாவதாயுஷம் கர்மத்தை விதித்த ஶ்ருதிகள் அவிரக்தவிஷயம் ஆஶ்ரமாந்தரவிஷயம் என்று அங்கீகரிக்கையால் அவை இதுக்கு பாதகமாகாது என்று ஸித்தாந்தம்.

௩. ௪. ஸூ. ௨௧. ஸ்துதிமாத்ரமுபாதாநாதிதி சேந்நாபூர்வத்வாத்.

(ஶ்ரு - ப்ர - ஸூ) உபாதாநாத்=(உத்கீதத்துக்குரஸதமத்வம்) சொல்லுகையாலே, ஸ்துதிமாத்ரம்=ஸ்தோத்ரமே, (விதியன்று), இதி சேத்=என்னில், அபூர்வத்வாத்=(இவ்வர்த்தம்) அபூர்வமாகை (எங்கும்சொல்லாமை) யாலே, ந=ஸ்துதிமாத்ரமன்று. ௨௭௬.

(ஶ்ரு - ப்ர - ஸா) கீழ் ஸர்வாஶ்ரமங்களிலும் ப்ரஹ்மோபாஸகனே சிறந்தவனென்று துதித்தது; இவ்வதிகரணத்தில், அதைப்போல் சாந்தோக்யத்திலுள்ள உத்கீதாவயவ விஷயமான வாக்யம் ஸ்துதியா, அல்லது விதியாவென்று விசாரிக்கிறார். "ஓமித்யேததக்ஷரமுத்கீதமுபாஸீத। ஓமிதி ஹ்யுத்காயதி। தஸ்யோபவ்யாக்யாநம்॥ ஏஷாம் பூதாநாம் ப்ருதிவீ ரஸ:। ப்ருதிவ்யா ஆபோ ரஸ:। அபாமோஷதயோ ரஸ:। ஓஷதீநாம் புருஷோ ரஸ:। புருஷஸ்ய வாக் ரஸ:। வாச ருக் ரஸ:। ருச: ஸாம ரஸ:। ஸாம்ந உத்கீதோ ரஸ:। ஸ ஏஷ ரஸாநாம் ரஸதம: பரார்த்ய: அஷ்டமோ யதுத்கீத:" உத்கீதாவயவமான ஓங்காரத்தை உபாஸநம் செய்யக்கடவன், ஓங்காரத்தை உத்காநம் செய்கிறான், அவ்வக்ஷரத்தினுடைய ப்ரபாவம் சொல்லப்படுகிறது. ஸர்வபூதங்களிலும் ஸாரமானது பூமி, அதிலும் ஸாரமானது ஜலம், அதிலும் ஸாரமானது ஓஷதி, அதிலும் ஸாரமானவன் புருஷன், அவனில் ஸாரமானது வாக்கு, அதில் ஸாரமானது ருக்கு, அதில் ஸாரமானது ஸாமம், அதில் ஸாரமானது உத்கீதம், இதுவே எல்லாவற்றிலும் ஸாரதமம், பரார்த்ய: பரமபுருஷனுடைய வாஸத்துக்கு யோக்யமானது என்று சாந்தோக்யத்தில் சொல்லியிருக்கிறது. இங்கு உத்கீதத்தை ஸாரதமமென்று ஸ்துதிக்கிறதா, அல்லது ரஸதமமாக த்யாநிக்கவேணுமென்று விதிக்கிறதாவென்னில், "இயமேவ ஜுஹூராதித்ய: கூர்ம: ஸ்வர்க்கோ லோக ஆஹவநீய:" யஜ்ஞத்தில் ஹோமஸாதநமான ஜுஹூ என்கிற பாத்ரம் ப்ருதிவி கூர்மமென்ற ஆஸநம் ஸூர்யன், ஆஹவநீயனென்ற அக்நி ஸ்வர்க்கலோகம் என்று ஜுஹூ முதலியவற்றை ஸ்துதித்தாற்போல், இங்கும், உத்கீதத்தை ரஸதமமாக ஸ்துதிக்கிறது, விதிப்ரத்யய மில்லாமையாலே இது விதியன்று என்று பூர்வபக்ஷம். முன்பு ஜுஹூ முதலியவற்றை யாகாங்கமாக விதித்துப்பின்பு "இயமேவஜுஹூ:" என்று சொல்லுகையாலே அவ்வாக்யம் ஸ்துதியாகலாம், அப்படி இங்கு இதற்கு முன்பு உத்கீதத்துக்கு ரஸதமத்வம் சொல்லாமையாலே, இது ரஸதமத்வ விதியேயாகவேணும். விதியாகில் ஒருபாஸநம் ஸித்திக்கிறது. ஸ்துதியாகில் அது நிரர்த்தகமாயிருக்கும். விதிவாக்யத்தையடுத்து ஸ்துதிவாக்ய மிருந்தால் அது ருசிஜநகமாய் ஸபலமாம்; விதியில்லாத கேவலஸ்துதி நிஷ்ப்பலமாகையால் இது விதியென்று ஸித்தாந்தம். ௨௭௭

ஸூ|| சசO. ஸாவஶ்யவாது.

(ஶ-ஶா-வ்யா) ஸாவஶ்யவாச்ச=விதிப்ரத்யயத்தோடுகூடினக்ரியாபதமிருக்கையாலும் (இதுவிதியே) சசO.

(ஶ்ரீ- ஶா- ஸா) கீழ், விதிப்ரத்யயமில்லே என்று பூர்வபக்ஷிசொன்னதை யங்கீகரித்து ஸமாதாநம் சொன்னர். இதில் "உதீயதேஶவாஸீத" என்று வாக்யத்திலுதியில் விதிப்ரத்யயாந்தமான க்ரியாபதமிருக்கையாலே இதுவிதியென்னக் குறையில்லே யென்கிறர். சசO

அதி. ககக. ஸூ|| சசக. பாரிப்லவார்த்தா இதி சேந்ந விஶேஷிதத்வாத்||

(ஶ-ஶா-வ்யா) பாரிப்லவார்த்தா: = (உபாக்யாநங்கள்) ஸ்துத்யர்த்தங்கள், இதிசேத்=என்னில், விஶேஷிதத்வாத்=அவ்வுபாக்யாநங்களே விசேஷித்துச்சொல்லுகையாலே, ந=எல்லா உபாக்யாநங்களும் ஸ்துத்யர்த்தமன்று.

(ஶ- ஶா- ஸா) "ப்ரதர்தநோ ஹ வை தைவோதாஸி:ரிந்த்ரஸ்ய ப்ரியம் தாமோபஜகாம" "ஜாநஶ்ருதிர்ஹ பௌத்ராயண: ஶ்ரத்தாதேயோ பஹுதாயீ பஹுபாக்ய ஆஸ" "ஶ்வேதகேதுர்ஹாருணேய:" இத்யாதியாக உபநிஷத்துக்களில் அனேகர்களுடைய கதைகளைச் சொல்லி யிருக்கிறது; அவைகளை யாகத்தில் யஜமானனைக் குறித்து ருத்விக்குக்கள் சொல்லவேண்டிய கதைகளாக அங்கீகரிக்கவேணுமா, அல்லது, மேல்சொல்லப்போகிற அவ்வவ ப்ரஹ்மோபாஸநத்தில் கேட்கிறவர்களுக்கு ருசி பிறக்கைக்காக அவ்வவ வித்யைகளை ஸ்துதிக்கிறவென்று கொள்ளவேணுமா வென்னில்; அஶ்வமேதத்தில் புத்ராதிகளோடு கூடியிருக்கிற யஜமானனைப்பார்த்து ருத்விக்கு மநுவாதி கதைகளைச் சொல்லவேணுமென்று சொல்லி யிருக்கையாலே, இவைகளும் கதைகளாகையாலே அப்படி கதை சொல்லுகையிலேயே உபயோகிக்கவேணு மென்றுன் பூர்வபக்ஷி. அஶ்வமேதத்தில் "மநுர்வைவஸ்வதோ ராஜேத்யாஹ" என்று துடங்கி, முதல் திநம் தொடங்கி கடைசிவரையில் இந்த இந்த திநங்களில் இந்த இந்த கதைகளைச் சொல்லவேணுமென்று அக்கதைகளைப் பிரித்துக் குறித்துச் சொல்லியிருக்கையாலே இவைகள் அதில் சேராமையாலே, இவைகள் வித்யாப்ரரோசநார்த்தங்களென்று ஸித்தாந்தி சொல்லுகிறர். சசக

ஸூ|| சசஉ. ததா சைகவாக்யதோபபந்தாத்.

(ஶ-ஶா-வ்யா) ததா=அப்படியே, ச ஏகவாக்யதோபபந்தாத் (விதிவாக்யத்தோடு) ஏகவாக்யமாக அந்வயிக்கையாலே, (இவைவித்யாஸ்தாவகங்கள்),

(ஶ - ஶா- ஸா) இப்படிசொல்லில் வித்யாவிதி வாக்யத்தோடு அந்வயித்து ஏகவாக்யமாயிருக்கும். இப்படி சொல்லில் இவ்வாக்யத்துக்கு, வித்யையில் ருசியை யுண்டு பண்ணுகையாகிற ப்ரயோஜநமும் ஸித்திக்கிறது. கேட்கிறவனும் அவ்வித்யையை ஸுகமாக அறிகிறன். ஆகையாலிதுவே யுக்தம். கர்மகாண்டத்தில் "ஸோரோதீத்" என்கிறவாக்யம் கர்மவிதி சேஷமானுற்போ லிங்கும் கண்டுகொள்வது. சசஉ

அதி. ககங. ஸூ|| சசங. அத ஏவ சாக்நீந்தநாத்யநபேக்ஷா.

(ஶ-வ்ரு-ஸா) அத ஏவ=ப்ரஹ்மவித்யையே ஸாக்ஷாத் மோக்ஷப்ரதமாகையாலே, அக்நீந்தநாத்யநபேக்ஷா=அக்நிஸமித்து இவைகளினுலுண்டான கர்மாபேக்ஷைகிடையாது. வித்யை மோக்ஷத்தைக் கொடுக்கும்போது கர்மத்தை ஸஹகாரியாக அபேக்ஷியாதென்றுகருத்து. ௪௪௩.

(ரா-வ்ரு) அத ஏவ ச=ஊர்த்வ ரேதஸ்ஸுக்களுக்கு வித்யாதிகாரமுண்டாகையாலே, அக்நீந்தநாத்யநபேக்ஷா=அக்ந்யாதாநம் அக்நிஹோத்ரம் முதலிய கர்மாபேக்ஷை அவர்களுக்குக்கிடையாது. ௪௪௩.

( ரா - ஸா ) "யதிவ்ருஷோ ப்ருஹ்மசர்யா வாஸதி" இத்யாதிகளினுல் ஊர்த்வரேதஸ்ஸுக்களான ஸந்யாஸிகளுக்கும் ப்ரஹ்மோபாஸநம் செய்ய அதிகாரமுண்டென்று ஏற்படுகையாலே, அவர்கள் செய்யும் உபாஸநம் அக்நிஹோத்ராதி கர்மங்களை அங்கமாக அபேக்ஷியாது. அவ்வவ ஆஶ்ரமாநுகுணமான கர்மங்களே வித்யாங்கமாகையாலே, ஸந்யாஸிகளுக்கு அக்ந்யதிகாரமில்லாமல் போனபோதினும், அவர்களுடைய தர்மமாகிய தபஸ்ஸு ப்ரஹ்மசர்யம் முதலியவைகளினுலேயே அவர்களுடைய உபாஸநம் நிறைவேறுமென்று பாவம். ௪௪௩

அ. ௩௪. ஸூ|| ௪௪௪. ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிஶ்ருதேரஶ்வவத்.

(ஶ-ரா-வ்ரு) யஜ்ஞாதிஶ்ருதே:= "யஜ்ஞேந தாநேந" இத்யாதிவேதவாக்யத்தினுல், அஶ்வவத்=குதிரைபோல், ஸர்வாபேக்ஷா=(வித்யை)ஸகலகர்மங்களினுடைய அபேக்ஷையையுடையது. ௪௪௪.

( ஶ - ஸா ) ஆனுல் ப்ரஹ்மவித்யைக்கு ஒரு கர்மமும் ஸஹகாரியாகவேண்டியதில்லையா, அல்லது, ஏதாவது சில கர்மங்கள்வேணுமா வென்னில், அவ்வவ ஆஶ்ரமங்களுக்குரிய ஸகல கர்மங்களையும் ப்ரஹ்மவித்யைக்கு ஸஹாயமாகச்செய்யவேண்டியதுதான். முன் ஸூத்ரத்தில் வேண்டாமென்று சொல்லிற்றே யென்னில், அங்கு வித்யையினுல் மோக்ஷமுண்டாம்போது கர்மத்தினுல் உபயோகமில்லை யென்றது; இங்கு, அநாதிவாஸனையினுல் மனம் கலங்கியிருப்பதினுல் அதில் ப்ரஹ்மவித்யை யுண்டாகாது, அதற்காகக் கர்மங்களைச் செய்தால் அவ்வாஸனைகழிந்து மநஸ்ஸு நிர்மலமாய்ப் பின்பு அதில் ப்ரஹ்மவித்யை யுண்டாகும் ஆகையால் வித்யோத்பத்திக்கு கர்மாபேக்ஷையுண்டென்று சொல்லுகிறது. ஆகையால் இரண்டுக்கும் விரோதமில்லை. இதற்கு உதாஹரணம். ஒரு குதிரை ஏர் உழ உபயோகியாது, அது தேரை இழுக்க உபயோகிக்கும். அதுபோல் கர்மமும் பலத்தில் உபயோகியாது. வித்யோத்பத்தியிலுபயோகிக்கும். ௪௪௪

( ரா - ஸா ) க்ருஹஸ்த்தன் ப்ரஹ்மோபாஸநம் செய்யும்போது யஜ்ஞாதி கர்மம்வேணுமா வேண்டாமாவென்று விசாரிக்கில், ஸந்யாஸிக்குக் கர்மாநுஷ்ட்டானமில்லாமலே உபாஸநம் நிறைவேறுகையாலே க்ருஹஸ்த்தனுக்கும் அவ்வபேக்ஷையில்லை. ஒருஸ்வர்க்கத்தைக் குறித்து இருவர் ஒருயாகத்தைச் செய்தார்களாகில் அவர்களில் ஒருவனுடைய யாகத்துக்கு இவ்வங்கங்களுண்டு, மற்றொருவனுக்குக் கிடையாதென்று பேதம்கிடையாது. அதுபோல் ஸந்யாஸியினுடையவும் க்ருஹஸ்த்தனுடையவும் உபாஸநத்துக்கு அங்கத்தில் பேதம் கிடையாது என்று பூர்வபக்ஷம். "யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந" இத்யாதி ஶ்ருதி க்ருஹஸ்த்தனுக்கு யஜ்ஞாதிகளை அங்கமாகக்கொண்டே ப்ரஹ்மோபாஸநம் செய்யச்சொல்லுகையாலே க்ருஹஸ்த்தனுக்குக் கர்மங்களை யநுஷ்ட்டித்துக்கொண்டே உபாஸநம் செய்யவேண்டும்.

வேட்டைக்காகக் குதிரையேறும்போதுஅதைக்கடிவாளம்முதலியவற்றினால் பூட்டியே ஏறவேண்டுமோப்போலே இங்கும் கண்டுகொள்வது. ஆஶ்ரமபேதத்தாலே அங்கபே தம்சாஸ்த்ர ஸித்தமாகையாலே தோஷமன்று என்று ஸித்தாந்தம். ௪௪௪.

அதி. ௧௧௪. ஸூ ‖ ௪௪௫. ஶமதமாத்யுபேதஸ்ஸ்யாத் ததாபி து தத்விதேஸ்ததங்கதயா தேஷாமவஶ்யாநுஷ்டேயத்வாத்.

(ஸ- ரா- வ்ய) ததாபி= ஆனபோதிலும், தத்விதே= வித்யைக்கு அங்கமாக, ததங்கதயா=சமாதிகளை விதிக்கையாலே, தேஷாமபி= அவைக ளையும், அவஶ்யாநுஷ்டேயத்வாத் = அவஶ்யம் அநுஷ்டிக்கவேண்டுகையா லே, ஶமதமாத்யுபேதஸ்ஸ்யாத்=சமதமாதிகளோடே கூடினவனாகவேனுகக் கடவன். ௪௪௫

(ஸ -ஸா-) “ யஜ்ஞேந தாநேந ” என்கிறஶ்ருதியில் “ வ்யாஹ்ருணாவிவிதி ஷந்தி ” யஜ்ஞாதிகளை ஸாதநமாகக்கொண்டு ப்ரஹ்மஸ்வரூபத்தை அறிய விரும்புகி றார்கள் என்றே சொல்லிற்று, “ அறியவேண்டும் ” என்று விதிக்கவில்லை, ஆகையால் இந்த அநுவாத வாக்யம், ப்ரஹ்ம வித்யைக்கு யஜ்ஞாதிக ளங்கமென்பதற்கு ப்ரமாண மாக மாட்டாதென்றுவரில், யஜ்ஞாதிகளை அங்கமாக விதியாவிடிலும், “ ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பஶ்யேத் ” என்கிற வாக்யத்தில் “ பஶ்யேத் ” என்று சமதமாதிகளையுடையவனா ய்க்கொண்டு ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத் கரிக்கக்கடவனென்று சமாதிகளை ஸாதநமாக விதிக்கையாலே, சாஸ்த்ரத்தில் விதித்தபடியே செய்யவேண்டுகையாலே ப்ரஹ்ம வித் யைக்குசமதமாதிகள் அங்கமாகக்கடவன. “ விவிதிஷந்தி ” என்கிறஶ்ருதியில் யஜ் ஞாதிகளை அங்கமாக விதியா விடிலும் இவ்வர்த்தம் மற்றோரிடத்தில் சொல்லப்படா மையாலே அதையும் விதியாகவே கொள்ளவேணும் என்று ஸித்தாந்தம். ௪௪௫

( ரா - ஸா ) க்ருஹஸ்த்தன் ப்ரஹ்மோபாஸநம் செய்யும்போது சமதமாதி குணங்கள் வேணுமா வேண்டாமா வென்னில், யஜ்ஞாதிகளைச் செய்யும்போது மநஸ் ஸையும் சக்ஷுராதிபாஹ்யேந்த்ரியங்களையும் ப்ரவர்த்திக்கச்செய்யவேணும்;சமதமங்க ளாகிறன-அவ்விந்த்ரியங்களை எங்கும் ப்ரவர்த்திக்கவொட்டாமல் தடுக்கை. இவை யி ரண்டு மொருவனுக்குக் கூடாமைமால் இவைக்ருஹஸ்த்தனுக்கு வேண்டியதில்லை யெ ன்று பூர்வபக்ஷம் “ ஶாந்தோதாந்த: ” என்று துடங்கி “ ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத் ” என்று சமதமாதிகளோடே கூடினவனேயே ப்ரஹ்மோபாஸநம் பண்ணக்கடவனென் று விதிக்கையாலும், ஏகாக்ரமாக த்யாநிக்கைக்கு மநஸ்ஸையும் மற்ற இந்த்ரியங்களை யும் எங்கும் போகவொட்டாமல் தடுக்கவேண்டுகையாலும் சமதமாதிகள் க்ருஹஸ்த்த னுக்கும் வேண்டியதுதான். இந்த்ரியங்களுக்கு ஒரேகாலத்தில் ப்ரவ்ருத்தியும் நிவ் ருத்தியும் கூடாதேயென்னில்; சாஸ்த்ர விஹிதகர்மங்களில் ப்ரவ்ருத்தியும் நிஷித்த கர்மங்களில் நிவ்ருத்தியும் சொல்லுகையாலே இரண்டும் கூடும். ஸத்கர்மத்தில் ப்ர வ்ருத்தியும் பாபத்தைப்போக்கி மநஸ்ஸை நிலைநிறுத்து கைக்கே காரண மாகிறது, ஆகையால் விரோதமில்லை என்று ஸித்தாந்தம். ௪௪௬

அதி. ௧௧௫. ஸூ ‖ ௪௪௬. ஸர்வாந்நாநுமதிஶ்ச ப்ராணாத்யயே தத்தர்ஶநாத்.

(ஸ- ரா- வ்ய) தத்தர்ஶநாத்= அதையே ஶ்ருதிகளில் காண்கையாலே;

ஸவாந்நாநுமதிஃ = எல்லாஅந்நத்தையும் புஜிக்கஅநுமதியும், ப்ராண தயயே=ப்ராணநாசகாலத்தில் (சொல்லப்பட்டது). ௨௨௫

(ஶ்ரீ - பா - ஸா) வாஜிஸநேயத்திலும் சாந்தோக்யத்திலும் ப்ராணவித்யையில் " நஹவா அஸ்யாநந்நம் ஜக்த்தம் பவதி " இந்தப்ராணோபாஸகனுக்கு பக்ஷிக்கத் தகாததொன்றுமில்லையென்று ஸர்வாந்நத்தையும் பக்ஷிக்கும்படி அநுமதிகொடுத்தது. இது அவ்வுபாஸகன் எக்காலத்திலும் இப்படி செய்யலாமென்றதா அல்லது ஏதோ ஒரு ஆபத் காலத்தில் செய்தால் தோஷ மில்லை யென்றதா வென்னில்; அதில் காலவிசேஷம் சொல்லாமையாலே எப்போதும் செய்யலா மென்றான் பூர்வபக்ஷி. " உஷஸ்திர்ஹ சாக்ராயணஃ " என்றுதொடங்கி, உஷஸ்தரென்கிற ருஷி துர்ப்பிக்ஷத்தில் குருதேசத்தில் போகும்போது பசியினால் வருந்தி ப்ராணன் போமளவுமானபின்பு, அங்கோராநைக்காரன் தின்று மிகுந்த உச்சிஷ்டமான கொள்ளைத் தான் பக்ஷித்துப் பின்பு அவன் கொடுக்கவந்த நீரை வாங்காமல், " இது நீ குடித்து மிகுந்த உச்சிஷ்டமான ஜலம், இதை நான் குடிக்கக்கூடாது, இக்கொள்ளைத் தின்னுவிடில் ப்ராணன்போய்விடும், ஆகையாலதை பக்ஷித்தேன், இனி ப்ராணபயமில்லை" என்று சொல்லி வேறோரிடத்தில்போய் நீர்குடித்தாரென் றிருக்கிறது. அதிக சக்தியுடைய ப்ரஹ்மோபாஸகரான அவருக்கே உச்சிஷ்டபோஜநம் தோஷமாகில் அல்பசக்தியான ப்ராணோபாஸகனுக்குச் சொல்லவேண்டா. ஆகையால் அந்நமில்லாமல் ப்ராணநாசம் நேரிடும் காலத்தில் எந்த அந்நத்தையாவது புக்ஷிக்கலாமென்றே சொல்லிற்று. மற்ற காலங்களில் பக்ஷிக்கக்கூடாதென்பது ஸித்தாந்தம்: ௨௨௫

ஸூ|| ௨௨௬. அபாதாச்ச.

(ஶ்ரீ- பா- ப்ர-ஸா) அபாதாச்ச= ( " ஆஹாரஶுத்தௌ ஸத்த்வஶுத்திஃ ஸத்த்வஶுத்தௌ த்ருவா ஸ்ம்ருதிஃ ") பரிசுத்தமான ஆஹாரத்தை புஜித்தால் ஜ்ஞாநம் நிர்மலமாயிருக்கும், அதினால் உபாஸநம் தலைக்கட்டுமென்று பரிசுத்தமான ஆஹாரத்தையே புஜிக்கச்சொல்லுகிற ப்ரமாணங்களோடும் இப்போது) விரோதமில்லாமையாலே (இதுவே ஸித்தாந்தம்). ௨௨௬

ஸூ|| ௨௨௭. அபி ஸ்மர்யதே.

(ஶ்ரீ-பா-ப்ர-ஸா) ஸ்மர்யதேசாபி=" ப்ராணஸம்ஶயமாபந்நோ யோந்நமத்தி யதஸ்தத: । லிப்யதே ந ஸ பாபேந " ப்ராணஸங்கடம் நேரிடும்காலத்தில் எந்தஅந்நத்தை புஜித்தாலும் அவனுக்குப்பாபம் ஸம்பவியாது என்று, ஸ்ம்ருதியும் ப்ராணாபத்காலத்திலேயே ஸர்வாந்நபக்ஷணத்தைச் சொல்லுகிறது. ௨௨௭

ஸூ|| ௨௨௮. ஶப்தஶ்சாதோகாமகாரே.

(ஶ்ரீ-பா-ப்ர-ஸா) அதஃ=ஆபத்காலத்திலேயே ஸர்வாந்நாநுமதி பண்ணிற்றுகையாலே, அகாமகாரே= யதேச்சபக்ஷணமில்லாத விஷயத்தில், ஶப்தஃ ச=சப்தப்ரமாணமுமிருக்கிறது. கடத்தில் " தஸ்மாத் ப்ராஹ்மணோ ந ஸுராம் பிபேத் " இத்யாதிப்ரமாணங்கள் ஸுராபாநாதிகளை நிஷேதிக்கிறதென்று தாத்பர்யம். ௨௨௮

அதி. ௧௨௯. ஸூ|| ௨௨௦. விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி.

(ஶ்ரு- ரா- வ்யா) விஹிதத்வாச்ச = விதித்திருக்கையாலே, ஆஶ்ரமகர்மாபி= (அக்நிஹோத்ராதிகள்) ஆஶ்ரமத்துக்கு அங்கமான கர்மமாகிறது.

(ஶ்ரு - ரா- ஸா) கீழ் அக்நிஹோத்ராதிகளை வித்யாங்கமாகச் சொல்லிற்று. எவனுக்கு மோக்ஷேச்சை பிறக்கவில்லையோ, கேவலம் க்ருஹஸ்த்த தர்மத்திலேமாத்திரம் நிற்கிருனே, அவனுக்கு அக்நிஹோத்ராதிகள் ஆஶ்ரமாங்கமாகச்செய்யவேணுமா, வேண்டாமாவென்னில்; அவை ஆஶ்ரமத்துக்கு மங்கமாகில், நித்யமான மோக்ஷத்துக்கு ஸாதநமாகியவித்யைக்குமங்கமாய் அநித்யமான ஸ்வர்க்கத்துக்கு ஸாதநமாகிய ஆஶ்ரமத்துக்கு மங்கமாகவேண்டி வரும். ஒன்றே நித்யபலத்துக்கும் அநித்ய பலத்துக்கும் ஸாதநமாகக் கூடாதாகையால் அவை ஆஶ்ரமாங்கமன்றென்று பூர்வபக்ஷம். "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத்" என்று பிழைத்திருக்குமளவும் அக்நிஹோத்ரம் செய்யக்கடவனென்று கேவலாஶ்ரம நிஷ்டனுக்கும் விதிக்கையாலே அவை ஆஶ்ரமகர்மங்களுமாகின்றன. விநியோகமொன்றுகில் அது நித்யா நித்யங்களிரண்டுக்கும் ஸாதநமாகக்கூடாது; இங்கு ஒன்றே விநியோகபேதத்தாலே இரண்டுக்கும் ஸாதநமாகலாம். ஒரு அக்நிஹோத்ரமே ஜீவநாதிகாரமாகவும் ஸ்வர்க்க காமநாதிகாரமாகவு மநுஷ்டிக்கப்படுகிறது; அதுபோ லிங்கும் கண்டுகொள்வது. சுருக.

ஸூ|| சுருக. ஸஹகாரித்வேந ச.

(ஶ்ரு- ரா- வ்யா- ஸா) ஸஹகாரித்வேந ச= ("யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந" என்று வித்யாங்கமாகவும் விதித்திருக்கையாலே), வித்யாங்கமாகவும் அநுஷ்டிக்கவேணும். சுருக.

ஸூ|| சுருஉ. ஸர்வதாபி த ஏவோபயலிங்காத்.

(ஶ்ரு- ரா- வ்யா- ஸா) ஸர்வதாபி= இரண்டிடத்திலும் விநியோகமிருந்தபோதிலும், உபயலிங்காத்= இரண்டிடத்திலும் "அக்நிஹோத்ரம்" இத்யாதியான நாமாதிகள் ஒன்றுயிருக்கையாலே, த ஏவ=அந்த அக்நிஹோத்ராதிகளே, கர்மபேதமில்லையென்றுகருத்து. சுருஉ.

ஸூ|| சுருங. அநபிபவஞ்ச தர்ஶயதி.

(ஶ்ரு-ரா-வ்யா-ஸா) அநபிபவம் ச=வித்யையை ஆரம்பித்துபாபத்தினுல்நிறைவேறுமையாகிற வித்யைக்குண்டான யாதொரு அபிபவமுண்டு, அதாவது-ப்ரதிபந்தகம்,அதில்லாமையை-ப்ரதிப்ந்தகநாசத்தை, தர்ஶயதி="யஜ்ஞேந வாவைஷ நஷ்டி" அக்நிஹோத்ராதிதர்மாநுஷ்டாநத்தினுல் வித்யாவிரோதியானபாபத்தைப்போக்குகிருனென்று ஶ்ருதி சொல்லுகிறது. ஆக, கர்மமானது ப்ரதிபந்தகநிவ்ருத்தித்வாரா வித்யைக்கு ஸஹகாரியாகையாலே, ஆஶ்ரமவிஷயத்திலும் வித்யாவிஷயத்திலுமுபயோகிக்கிறதென்று தாத்பர்யம்.சுருங

அதி. கஎ. ஸூ|| சுருச. அந்தரா சாபி து தத்த்ருஷ்டே:.

(ஶ்ரு- ரா- வ்யா) தத்த்ருஷ்டே: = ஆஶ்ரமமின்றியே யிருக்கிறவர்களுக்கும் ப்ரஹ்மவித்யாநுஷ்டாநம் உபநிஷதாதிகளில் காண்கையாலே,அந்தரா சாபி= ஆஶ்ரமங்களினுடைய இடையிலே வர்த்திக்கிறவர்களுக்கும் (ப்ரஹ்மவித்யாதிகாரமுண்டு). சுருச

(ஶ - ரா- ஹா)இவ்வதிகரணத்தில் அநாஶ்ரமிகளுக்கும் ப்ரஹ்மவித்யாதிகாரமுண்டென்கிறார்.—பத்நி மரணமடைந்தபின்பு வேறு விவாகம் செய்துகொள்ளாமல் அப்படியே யிருக்கிறவனுக்கு விதுரனென்றுபெயர். இந்த விதுரனுக்கும், ப்ரஹ்மசர்யவ்ரதத்தைமுடித்துவிட்டுப்பின்பு கலியாணமில்லாமல் அப்படியே இருக்கிறவனுக்கும் ஓராஶ்ரமம்கிடையாது. இவர்நிராஶ்ரமிகளென்றுசொல்லப்படுவார்கள். இவர்களுக்கு அக்நிஹோத்ராதியான ஆஶ்ரமகர்மங்களில்லாமையாலே அக்கர்மங்களை அங்கமாகவுடைய ப்ரஹ்மோபாஸநம் அவர்கள் செய்யக்கூடாதென்று சிலர் சொல்வார்கள்.—ரைக்வன் பீஷ்மன் ஸம்வர்த்தகன் முதலிய நிராஶ்ரமிகள் ப்ரஹ்மோபாஸநநிரதராயிருந்தார்களென்று உபநிஷத்து முதலிய க்ரந்தங்களில் ப்ரஸித்தமாயிருக்கையாலே,“ யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி”என்கிற ஶ்ருதியில் தாநம் தபஸ்ஸு உபவாஸங்களையும் ப்ரஹ்மவித்யாங்கமாகச் சொல்லுகையாலே இவைகள் விதுராதிகளுக்கும்கூடுமாகையால் இவற்றையே அங்கமாகக்கொண்டு அவர்களும் ப்ரஹ்மோபாஸநம் செய்யலாமென்று ஸித்தாந்தம். ௬௪

ஸூ|| ௬௫. அபி ஸ்மர்யதே.

(ஶ-ரா-வ்ய-ஹா) ஸ்மர்யதே ச=(“ஜப்யேநாபி ச ஸம்ஸித்த்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்ஶய:” ஜபத்தை அங்கமாகக் கொண்டு ப்ரஹ்மோபாஸநம் செய்கிறவனும் ஸித்தியையடைகிறான் இதில் ஸம்சயமில்லையென்று) தர்மசாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது, (ஆகையால், அவற்றிலதிகாரமுள்ள விதுராதிகள் ப்ரஹ்மவித்யாதிகாரிகளாகலாம். ௬௫

ஸூ|| ௬௬. விஶேஷாநுக்ரஹாச்ச.

(ஶ-ரா-வ்ய-ஹா) விஶேஷாநுக்ரஹாச்ச= (“தபஸா ப்ரஹ்மசர்யேண ஶ்ரத்தயா வித்யயாऽऽத்மாநமந்விஷ்ய” தபஸ்ஸு ப்ரஹ்மசர்யம் ஶ்ரத்தை வித்யை முதலானவற்றினால் பரமாத்மாவையறியக்கடவனென்று ) தபஸ்ஸு முதலானவைகளினால் வித்யாநுக்ரஹம்(அதாவது-அவைகளினால் வித்யாநிஷ்பத்தியை ஶ்ருதியும் ) சொல்லுகையாலே, ( அவர்களுக்கு வித்யாதிகாரமுண்டு.)

ஸூ|| ௬௭. அதஸ்த்விதரஜ்ஜ்யாயோ லிங்காச்ச.

(ஶ- ரா- வ்ய) லிங்காச்ச=ஸ்ம்ருதியினாலே, அத:=இந்த அநாஶ்ரமியாயிருக்கையைக்காட்டிலும், இதரச்ச=வேறான ஆஶ்ரமியாயிருக்கை, ஜ்யாய:=ஶ்ரேஷ்டம். ௬௭

(ஶ - ரா- ஹா) ஆகில் ஆஶ்ரமம் வ்யர்த்தமாய் விடுமென்னில்; “ அநாஶ்ரமீ ந திஷ்டேத்து திநமேகமபி த்விஜ:” இத்யாதியான தரமசாஸ்த்ரவசநங்கள், ப்ராஹ்மணன் ஓராஶ்ரமமின்றியே யிருக்கக்கூடாது, அப்படியொருவருஷ மிருந்தானுகில் மூன்று க்ருச்ரம் ப்ராயஶ்சித்தமாகச் செய்யவேணுமென்று சொல்லுகையாலே நிராஶ்ரமியா யிருப்பதைக் காட்டிலும் ஓராஶ்ரமத்தை அவலம்பித்திருப்பதே உத்தமம். நிராஶ்ரமிக்கு வித்யாதிகாரம் சொன்னது, விவாஹத்துக்கு வேண்டிய தநம் முதலிய உபபத்தியில்லாதவனுக்கு இவ்விதமான ஆபத்காலத்தில் வித்யாதிகாரம் சொல்லிற்றென்று கருத்து. ௬௭

சுய. ககஅ. ஸூ॥ சஙு௮. தஜூ-ு தஸ்ய தா-நா தஜூ ரவெ ஜைஜிநெ ந ரவி நியமா தூ-ு வொ ஸா வெ ஸ்ரு.

(ஸ- வ்யா) நியமா தஜூ-ு வொ ஸா வெ ஸ்ரு = நியமங்களினுலும் பதநாபாவ த்தினுலும், தஜூ-ு தஸ்ய= ஸந்யாஸியானவனுக்கு, தஜூ ரவ= ஸந்யாஸாஶ்ரமபங்கமானது, ந=கிடையாது. ஜைஜிநெ சுவி= ஜைமினிக்குமிதுவே மதம்.

(ரா- வ்யா) தஜூ-ு வொ ஸா வெ ஸ்ரு=நைஷ்டிகாத்யாஶ்ரம தர்மப்ரச்யுதி களில்நின்றும், நியமாசு=நியமிக்கையாலே; தஜூ-ு தஸ்ய= நைஷ்டிகாத்யா ஶ்ரமியாயிருக்கை, ந=கிடையாது. ஜைஜிநெ சுவி=ஜைமினிக்கும்இதுவே மதம்.

(ஸ - ஸா) ஸந்யாஸி, மறுபடியும் அக்நிஹோத்ராதிகளை யநுஷ்டிக்க வேணு மென்கிற ஶ்ரத்தையினுலாவது, ஸ்த்ரீஸம்போகாதிகளி லாசையினுலாவது க்ருஹ ஸ்தனுகில் அவன் செய்கிற கர்மம் வித்யாங்கமாகுமா ஆகாதாவென்றுவரில்; “ந பு-ந ரெயாசு” மறுபடியும் ஸந்யாஸாஶ்ரமத்தில் நின்றும் திரும்பக்கூடா தென்று சொல்லுகையாலும் “ ப்ருஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் ” இத்யாதிகளினுல் ப்ராஹ்மணம் ப்ரஹ்மசர்யம் தொடங்கி ஸந்யாஸாஶ்ரமம்வரையில் ஏறவேணுமென்று சொன்னுற்போல், அங்கு நின்றும் திரும்பி கீழே இறங்குகையைச் சொல்லாமையா லும், அவன் திருப்பி க்ருஹஸ்த்தனுகக் கூடாதாகையால், அவன் செய்கிற கர்மம் வித்யாங்கமாகமாட்டாது. இம்மதமே ஜைமினி முதலிய பெரியோர்களுக்கும் ஸம் மதமென்று ஸித்தாந்தம். சஙு௮.

(ரா - ஸா) நைஷ்டிக ப்ரஹ்மசாரி வாநப்ரஸ்த்தன் ஸந்யாஸி இவர்கள் தங்க ளாஶ்ரமத்தில் நின்றும் தவறினுர்களாகில் இவர்களுக்கு ப்ரஹ்ம வித்யாதிகாரமுண் டா இல்லையா வென்று விசாரிக்கில்; ஆஶ்ரமத்தில் நின்றும் தவறினவர்களுக்கு ஆஶ் ரம தர்ம மில்லாவிடினும், விதுராதிகளைப்போல் தபஸ்ஸு முதலிய ஸாமாந்ய தர்ம முண்டாகையாலே, அவற்றைக்கொண்டு ப்ரஹ்மவித்யையை யநுஷ்டிக்கலா மென் ருர்கள் சிலர்; “ ப்ரஹ்மசார்யாசார்யகுலவாஸீ ” இத்யாதி “த்ருதீயோ ஆசார்யகுலெ வஸாநம் ” என்று நைஷ்டிக ப்ரஹ்மசாரியை, ஆசார்ய குலத்துக்குப் பரிசர்யை பண்ணிக் கொண்டு அங்கேயே இருந்து கொண்டு தன் ஆயுஸ்ஸைக் கழிக்கக்கடவனென்றும், “அரண்யமியாத் ததோ ந புநரேயாசு” என்று வாந ப்ரஸ்த்தனை, அவ்வாஶ்ரமத்தில் நின்றும் திரும்பக்கூடாதென்றும், “ ஸந்ந்யஸ்ய அக்நிம் ந புநராவர்த்தயேசு” என்றுஸந்யாஸியை,மறுபடியும்க்ருஹஸ்த்தனுகக்கூடா தென்றும் நியமிக்கையாலே, அவர்கள் நிராஶ்ரமியா யிருப்பது அசாஸ்த்ரீயமாகை யால் அவர்களுக்கு ப்ரஹ்மவித்யாதிகாரம் கிடையாதென்று ஸித்தாந்தம். சஙு௮.

ஸூ- சஙுகூ. நசாதிகாரிகமபி பதநாநுமாநாத் தத்யோகாசு.

(ஸ - ரா- வ்யா) பதநாநுமாநாசு=பாதித்யத்தைஸ்ம்ருதிசொல்லுகை யாலே, ததயோகாசு = ப்ராயஶ்சித்தம் கிடையாமையாலே, ஆதிகாரிகமபி=ப்ராயஶ்சித்தாதிகாரத்தில்சொன்ன ப்ராயஶ்சித்தமும், ந=கிடையாது.

(ஶ - ரா- ஸா) ப்ரஹ்மசாரிபதிதனால் “அவகீர்ணி-வைஶாமஸ்து தத்ர” இத்யாதியினால் ப்ராயஶ்சித்தம் சொல்லியிருக்கையாலே நைஷ்டிக ப்ரஹ்மசாரியும் ப்ரஹ்மசாரி யாகையாலே இவன் பதிதனை போதிலும் ப்ராயஶ்சித்தம் பண்ணிக்கொண்டு ப்ரஹ்மவித்யையை அநுஷ்டிக்கலாமே யென்னில்; “ ஆரூடோ நைஷ்டிகம் தர்மம் யஸ்து ப்ரச்யவதே த்விஜ: | ப்ராயஶ்சித்தம் நபஶ்யாமி யேந ஶுத்த்யேத் ஸ ஆத்மஹா”நைஷ்டிகப்ரஹ்மசாரியாயிருந்து பதிதனைவனுக்கு, அவன் திரும்பி சுத்தனாகும்படியான ப்ராயஶ்சித்த மொன்றையும் காணேனென்று ஸ்ம்ருதியில் சொல்லுகையாலே அவனுக்கு ப்ராயஶ்சித்தம் கிடையாது. ஆகையால் ப்ரஹ்மசாரிக்குச்சொன்ன ப்ராயஶ்சித்தம் உபகுர்வாணனென்கிற ப்ரஹ்மசாரிக்கொழிய இவனுக்குச் சொல்லவில்லை. அவன் ப்ராயஶ்சித்தம் செய்துகொண்டாலும் பரலோக ஸாதகமாகுமேயொழிய ப்ரஹ்மவித்யா ஸாதகமாகாதென்று ஸித்தாந்தம். சங்க.

ஸூ|| சகு௦. உபபூர்வமபி த்வேகே பாவமஶநவத்தது க்தம்.

(ஶ - ரா- ப்ர) உபபூர்வமபி= நைஷ்டிகனுடைய பாபம் உபபாதகம் (ஆகையால்), அஶநவத்=போஜநத்திற்போல், பாவம் = ப்ராயஶ்சித்தமுண்டென்பதை, ஏகே=சிலர்சொன்னார்கள். தது க்தம்=அது, (தர்மசாஸ்திரத்திலும்) சொல்லப்பட்டது, சகு௦.

( ஶ - ரா-ஸா ) நைஷ்டிக ப்ரஹ்மசாரி செய்த பாபத்ஸத மஹாபாதகத்தில் சேர்க்காமையாலே அது உபபாதகம். உபகுர்வாணனுக்குச் சில தர்மங்களையும் மத்யபாநஸ்த்ரீஸம்போகாதிகளில் ப்ராயஶ்சித்தத்ஸதயும்விதித்து,“உத்தரேஷாஞ்சைத தவிரோதி ” இவனுக்குச்சொன்ன தர்மங்களும் ப்ராயஶ்சித்தங்களும், அவ்வவ ஆஶ்ரமதர்மங்களுக்கு விரோத மில்லாவிடில் மேலுள்ள நைஷ்டிகன் க்ருஹஸ்தன் முதலியவர்க ளெல்லாருக்கும், ஸமாநமென்று சொல்லுகையாலே நைஷ்டிகனுக்கும் ப்ராயஶ்சித்த முண்டென்று சிலர் சொன்னார்கள். சகு௦.

ஸூ|| சகுக. பஹிஸ்தூபயதாபி ஸ்ம்ருதேராசாராச்ச.

(ஶ- ரா- ப்ர- ஸா) ஸ்ம்ருதே:=(ஆரூடபதிதனை ப்ரஷ்டனென்றும் ப்ராயஶ்சித்தமில்லையென்றும்) ஸ்ம்ருதியில்சொல்லுகையாலும், ஆசாராச்ச=(அப்படியே) சிஷ்டாசாரம்காண்கையாலும், உபயதாபி= (அவன்செய்தபாபம்) உபபாதகமானாலும் மகாபாதகமானாலும், பஹி: து= ப்ரஹ்மவித்யாதிகாரமுள்ளவர்களைக்காட்டிலும் புறம்பானவர்களே (என்பது ஸித்தாந்தம்.) சகுக

அதி. கககூ. ஸூ|| சகுஉ. ஸ்வாமிந: பலஶ்ருதேரித்யாத்ரேய:.

(ஶ- ரா- ப்ர ) பலஶ்ருதே:=(யஜமானனுக்கே) பலம் சொல்லுகையாலே, ஸ்வாமிந:=(உத்கீதோபாஸநம்) யஜமாநனுடைய க்ருத்யம், இதி=என்று, ஆத்ரேய:=ஆத்ரேயர், (சொன்னார்). சகுஉ

( ஶ-ரா-ஸா ) கர்மாங்கமான உத்கீதோபாஸநம் யஜமாநன் செய்யவேண்டியதா ருத்விக்கு செய்யவேண்டியதா வென்னில்; பலமடைகிறவனே ஸாதநத்தை யநுஷ்டிக்கவேணும், பலம் யஜமாநனதாகையால் அவனே உத்கீதோபாஸநம் செய்யவேண்டுமென்று ஆத்ரேயர் சொன்னார். சகுஉ.

ஸூ|| ௪௫௩. ஆர்த்விஜ்யமித்யௌடுலோமிஸ்தஸ்மை ஹி பரிக்ரீயதே.

( ஸ- ரா- வ்ரு ) தஸ்மை ஹி = அந்த யாகம் பண்ணுகையின்பொருட்டன்று, பரிக்ரீயதே=(ருத்விக்கு) வரிக்கப்படுகிறான், ( ஆகையால் ) ஆர்த்விஜ்யம்= (உத்கீதோபாஸநம்) ருத்விக்கினால்செய்யவேண்டியது, இதி= என்று, ஔடுலோமி:=ஔடுலோமியென்பவர்சொன்னார். ௪௫௩

( ஸ-ரா - ஸா ) யாகபலமும் யஜமானனதாயிருக்க அதை ருத்விக்குசெய்கிறாப்போல் உத்கீதோபாஸநத்தையும் ருத்விக்கே செய்யவேண்டும். கர்மகாண்டத்தில் “ ருத்விஜோ வ்ருணீதே ” இத்யாதியினால் ஸாங்கமான யாகத்தைச்செய்கைக்காகவே ருத்விக்கை வரிக்கிறானென்று சொல்லியிருக்கிறது. ருத்விக்குசெய்தபோதிலும் அதுக்காக அவன் தக்ஷிணை வாங்கிக்கொள்ளுகையால் அதுக்கு முக்யகர்த்தா யஜமானனேயாகிறானென்று ஸித்தாந்தம். ௪௫௩.

ஸூ|| ஶ்ருதேஶ்ச.

(ஸ- வ்ரு) இந்தஸூத்ரம் இந்தபாஷ்யத்தில் அதிகமாகக் காண்கிறது.— ஶ்ருதே:ச=“யாம் காஞ்ச நயஜ்ஞே ருத்விஜ ஆஶிஷமாஶாஸதே” என்றுதொடங்கிசாந்தோக்யத்தில் ருத்விக்கு செய்தவைகளினுடைய பலத்தை யஜமானனடைகிறானென்று சொல்லுகையாலே ருத்விக்கே உத்கீதோபாஸனம்செய்யவேண்டும்.

அதி. கஉ௦. ஸூ|| ௪௫௪. ஸஹகார்யந்தரவிதி:பக்ஷேண த்ருதீயம் தத்வதோ விட்யாதிவத்.

(ஸ- வ்ரு) தத்வத:=வித்யாவானுக்கு, த்ருதீயம்=மூன்றுவதானமௌனம், விட்யாதிவத்= அங்கவிதி முதலானவற்றைப்போல், பக்ஷேண = பேததர்சநபக்ஷத்தாலே, ஸஹகார்யந்தரவிதி:= வேறொருஸஹகாரியாகவிதிக்கப்படுகிறது

(ரா-வ்ரு) தத்வத:=உபாஸகனுக்கு, விட்யாதிவத்= யஜ்ஞாதிவிதிமுதலானவற்றைப்போலே, பக்ஷேண=ப்ரஸித்தமாகையாலே, த்ருதீயம்=மூன்றுவதானமௌனமும், ஸஹகார்யந்தரவிதி:= வேறொரு ஸஹகாரியாக விதிக்கப்படுகிறது. ௪௫௪

( ஸ.ஸா- ) தஸ்மாத் ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத் | பால்யம் ச பாண்டித்யம் ச நிர்வித்யாத முநி: ” என்கிற ப்ருஹதாரண்ய ஶ்ருதியில் பால்யபாண்டித்யங்களைப்போல் மௌநமும் விதிக்கப்படுகிறதா, அல்லது அதுக்கு அநுவாதமாவென்னில், “அத முநி: ” என்கிற விடத்தில் விதிப்ரத்யயமில்லாமையால் இது விதியன்று அநுவாதம் என்று பூர்வபக்ஷம்.—ஸந்யாஸிக்கு பால்யபாண்டித்யங்களைப்போல் மௌநமும் வித்யாஸாதநமாகையாலும், இதற்குமுன் மௌநத்தை விதியாமையாலே அபூர்வமாகையாலும் இது அநுவாதமன்று. விதிப்ரத்யயமில்லாவிடினும் கல்பித்துக்கொள்ளவேணும். மௌநமெதுக்காகவென்னில், யாதொருத்தனுக்கு பேதவாஸனையினால் அத்வைதஜ்ஞாந முண்டாகவில்லையோ, அவனுக்கு அவ்வாஸனை போகைக்காக மௌநம் விதிக்கப்பட்டது. ப்ரஹ்ம பரவாக்யத்தில் மௌநம் விதிகூடுமோவென்னில், தர்சபௌர்ணமாஸவிதியில் அக்ந்யாதாநாதி கர்மாங்கங்களையும் விதித்திருப்பதுபோ லிதுவும் கூடுமென்று ஸித்தாந்தம். ௪௫௪.

(ரா-ஸா) தஸ்மாத் ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத் | பால்யஞ்ச பாண்டித்யஞ்ச நிர்வித்யாத முநி: " உபாஸகன் பாண்டித்யத்தையடைந்து பால்ய வ்ருத்தியோ டிருக்கக்கடவன், அவ்விரண்டையு மடைந்து பின்பு மௌநத்தையுடையவனுவான் என்கிற வாஜிஸநேய வாக்யத்தில் பால்யத்தையும்பாண்டித்யத்தையும் வித்யாங்கமாக விதித்திருப்பது ஸ்பஷ்டம், அதுபோல்மௌநமும் விதித்திருக்கிறதா இல்லையாவென்று விசாரிக்கில், பாண்டித்யம் மௌந மென்கிற இரண்டு பதங்களும் ஜ்ஞாநவாசக மாகையால் கீழ்ச்சொன்ன பாண்டித்யத்தையேமேலே அநுவதித்தது என்றுபூர்வபக்ஷி மதம்.—உபாஸகன் "பாண்டித்ய" ஶ்ரவண மநநங்களினுலுண்டான பரமாத்ம ஜ்ஞாநத்தையடைந்து பின்பு தன்னுடைய வைபவத்தைப்ரகாசிப்பியாமலிருந்து, அதன்பின், "முநி:" மேல் த்யாநிக்கப்போகிற பரமாத்மாவினுடைய அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹத்தை மநநம் பண்ணக்கடவன் என்று அவ்வாக்யத்துக்கு அர்த்தம். அதில் பாண்டித்யபதத்தினுல்சொல்லப்பட்ட ஜ்ஞாநத்தைக்காட்டிலும் மௌநபதத்தினுல் சொல்லப்பட்ட ஜ்ஞாநம் வேறு — இது முன் சொல்லப்படவில்லை. ஆகையால் யஜ்ஞாதிகளைப்போலவும் சமதமாதிகளைப்போலவும் இதுவும் விதியென்றே சொல்லவேணும். இது பால்யபாண்டித்யங்களைப்போல் வித்யைக்கு அந்தரங்க ஸாதநமாயிருக்கும். முனியென்றுல் இவ்வர்த்தத்தைச் சொல்லுமோவென்னில்; ப்ரக்ருஷ்ட மநந சீலர்களிடத்தில் வ்யாஸமுனியென்று ப்ரஸித்தியுண்டாகையாலே இப்பதம் இவ்வர்த்தத்தைச் சொல்லும் என்று ஸித்தாந்தம். சசுச.

ஸூ|| சசரு. க்ருத்ஸ்நபாவாத்து க்ருஹிணோபஸம்ஹார:.

(ஶ- ரா- வ்ய ) க்ருத்ஸ்நபாவாத் = ( ஶ ) அநேக தர்மமுண்டாகையாலே, (ரா) எல்லாஆஶ்ரமிகளுக்கும் வித்யாதிகாரமுண்டாகையாலே, க்ருஹிணா= க்ருஹஸ்தனேடு, உபஸம்ஹார:=நிகமனம்செய்யப்பட்டது. சசரு

( ஶ-ரா-ஸா ) எல்லா ஆஶ்ரமிகளுக்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டாகில், சாந்தோக்யத்தில், "ஸ கல்வேவம் வர்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே " இப்படியே ஆயுஸ்ஸுள்ள வரையில் க்ருஹஸ்த்ததர்மத்தை அநுஷ்டித்துக் கொண்டிருந்து சரீராவஸாநத்தில் பரமாத்மாவை யடைகிறுனென்று ஏன் சொல்லிற்றென்னில், (ரா) எல்லாருக்கும் ப்ரஹ்மவித்யாதிகாரமுண்டாகையாலே, அதில் க்ருஹஸ்த்தனும் சேர்ந்தவனுகையால் இவனைச்சொல்லி முடித்தது. இப்படி சொன்னது - எல்லா ஆஶ்ரமிகளும் தங்கள் தங்கள் தர்மத்தையாவதாயுஷம் அநுஷ்டித்துப் பின்பு பரமாத்மாவை யடைகிறுர்களென்பதற்கு உபலக்ஷணமென்று ஸித்தாந்தம்.—எல்லா ஆஶ்ரமிகளைக்காட்டிலும் க்ருஹஸ்த்தனுக்கே பஹுகஷ்ட ஸாத்யமான அநேககர்மங்களுண்டாகையாலே, மற்றொருவர்க் கிவ்வளவில்லாமையால் முடிவில் இவனைச்சொல்லிற்றென்று சங்கரபாஷ்ய ஸித்தாந்தம். சசரு.

ஸூ|| சசசு. மௌநவதிதரேஷாமப்யுபதேஶாத்

(ஶ-வ்ய) மௌநவத்=ஸந்யாஸியைப்போல், இதரேஷாம் அபி= மற்ற ஆஶ்ரமிகளுக்கும், உபதேஶாத்=(வித்யாதிகாரம்) சொல்லுகையாலே, (நால்வருமதிகாரிகள்), சசசு

(ரா-வ்ய) மௌநவத்= மௌநத்தைப் போல், இதரேஷாம் அபி=மற்ற

ஆஶ்ரமிகளுடைய தர்மங்களையும், உவடெஶாச= சொல்லுகையாலே, (இது உபலக்ஷணம்) ௪௬௫.

(ஶ-ஹா) ஸூத்ரத்தில் ஸந்யாஸாஶ்ரமத்தையும் க்ருஹஸ்தாஶ்ரமத்தையுமே எடுத்து ப்ரஹ்மவித்யாதிகாரம் சொல்லிற்று. இதனால் ப்ரஹ்மசாரி வாநப்ரஸ்த்த ரென்கிற மற்ற இருவர்க்கும் இல்லையென்கிற ப்ராந்தியைப் போக்குகிறார்—"தவஃ வஹிதீயஃ ..." இத்யாதி வாக்யங்களினால் இதற்கு முன் ஶ்ருதியிலே அவ்விருவர்க்கும்கூட வித்யாதிகாரம் சொல்லியிருக்கிறது. ௪௬௬.

(ஶா-ஹா) "தஸ்மாத் ப்ராஹ்மணஃ பாண்டித்யம் நிர்விந்த்ய" இத்யாதி வாக்யத்தில் பால்யபாண்டித்ய மௌநங்களை மாத்திரம் சொல்லியிருந்த போதிலும், இது எல்லா ஆஶ்ரமதர்மங்களுக்கு முபலக்ஷணமாகக் கண்டுகொள்வது. இதற்குமுன்னமே "ப்ரஹ்மஸம்ஸ்தோ ம்ருதத்வமேதி" என்று எல்லா ஆஶ்ரமிகளுக்கும் வித்யாதிகாரம் சொல்லியிருக்கிறது. ௪௬௬.

ஸூ. ௩௪௯. ஸூ || ௪௬எ. அநாவிஷ்குர்வந்நந்வயாத்.

(ஶ-ரா-வ்ய) அந்வயாத்=(இதுவே)வித்யையோடு அந்வயிக்கயோக்யமாகையாலே, அநாவிஷ்குர்வந்=(பாண்டியத்தை)ப்ரகாசம்பண்ணாமலிருக்கிறான் (என்று "பால்யேந" என்பதற்கர்த்தம்).

(ஶ-ரா-ஹா) "பால்யேந திஷ்டாஸேத்" என்கிறவிடத்தில் பால்யமாவதென்னென்னில்; பாலனுடைய கர்மம், அதாவது - யதேச்சமாகத் தின்பது திரிவது மொழிவது முதலானவையென்றான் பூர்வபக்ஷி.—யதேச்சமான ஆஹார விஹாராதிகள்கூடாதென்று சாஸ்த்ரம்சொல்லுகையாலே இங்கு பால்யபதத்திற்கு அது அர்த்தமன்று. பாலன் அஜ்ஞனைக்கொண்டு தன்னுடைய வைபவத்தை எப்படி ப்ரகாசிப்பியாம லிருக்கிறானோ, உபாஸகன் அப்படி யிருக்கவேணுமென்றர்த்தம். பூர்வபக்ஷிசொன்ன யதேச்சாசாரம் வித்யாவிரோதி, இது வித்யாநுகூலம். "நாவிரதோ துஶ்சரிதாத்" என்கிற ப்ரமாணமும் இவ்வர்த்தத்தையே சொல்லுகிற தாகையால் இதுவே ப்ராமாணிகம் என்று ஸித்தாந்தம். ௪௬எ.

ஸூ. ௩௫௦. ஸூ || ௪௬அ. ஐஹிகமப்ரஸ்துதப்ரதிபந்தே தத்தர்ஶநாத்.

(ஶ-ரா-வ்ய) அப்ரஸ்துதப்ரதிபந்தே= ப்ரதிபந்தகம் ஸமீபித்திராவிடில், ஐஹிகம்=(ஶ) இந்தஜந்மமேவித்யாவத்தாகிறது. (ரா) இந்தஸம்ஸாரஸம்பந்தியானபலம் (விலம்பமின்றிக்கேயுண்டாகிறது). தத்தர்ஶநாத்=அவ்வர்த்தமே ஶ்ருதியில் காண்கையாலே, (இப்படியே அங்கீகரிக்கவேணும்).

(ஶ-ஹா) ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் இந்த ஜந்மத்திலே யுண்டாகிறதா, ஜந்மாந்தரத்திலுண்டாகிறதா வென்னில், இதற்கு ஶ்ரவணமநநாதிகளே காரணம், காரணமுள்ளபோது கார்யமவஶ்ய முண்டாகவேண்டு மாகையால், எந்த ஜந்மத்தில் ஶ்ரவணாதிகளுண்டோ, அதே ஜந்மத்தில் ப்ரஹ்ம ஸாக்ஷாத்கார முண்டாகிறதென்று பூர்வபக்ஷம்—ஶ்ரவணாதிகளிருந்தபோதிலும் வித்யோத்பத்திக்கு ப்ரதிபந்தக மொன்றுமில்லாவிட்டால் இந்த ஜந்மத்திலுண்டாகிறது, ப்ரதிபந்தகமிருந்தால் எந்த ஜந்மாந்தரத்தில் அது கழிகிறதோ, அப்போதுதா னுண்டாகும். "ஶ்ரவணாயாபி பஹுபிர்யோ ந லப்ய:" இத்யாதிகள் இவ்வர்த்தத்தில் ப்ரமாணங்கள். ௪௬அ.

(ரா-ஹா) உபாஸநத்தினுலுண்டாகிறமோக்ஷாதிரிக்தமான ஐஹிகபலங்கள் உபாஸநம் செய்த உடனே உண்டாகிறதா, அல்லது காலாந்தரத்தி லுண்டாகிறதா வென்னில்; ப்ரதிபந்தகமில்லாமலிருந்தா லிப்போதுண்டாகிறது, இருந்தால் காலாந்தரத்தி லுண்டாகிறது. "𑌯𑌦𑍇𑌵 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿" இத்யாதி ச்ருதிகள் இவ்வர்த்தத்தில் ப்ரமாண மென்கிறார். சசுஅ.

௩௰. கஉ௩. ஸூ|| சகூ௬. 𑌏𑌵𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌫𑌲𑌾𑌨𑌿𑌯𑌮𑌸𑍍𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌧𑍃𑌤𑍇𑌸𑍍𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌧𑍃𑌤𑍇𑌃.

(ஶ-வ) 𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌧𑍃𑌤𑍇𑌃=அந்த(ஒரே)ஆகாரத்தையே நிஶ்சயித்துச் சொல்லுகையாலே, 𑌏𑌵𑌮𑍍=இப்படி, 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌫𑌲𑌾𑌨𑌿𑌯𑌮𑌃=மோக்ஷமாகியபலத்தில் விசேஷநியமம்கிடையாது. சுசுகூ.

(ரா-வ) 𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌧𑍃𑌤𑍇𑌃=அந்தப்ரதிபந்தகரூபமான அவஸ்த்தையினுடைய நிஶ்சயத்தாலே, 𑌏𑌵𑌮𑍍 = இப்படியே, 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌫𑌲𑌾𑌨𑌿𑌯𑌮𑌃 = மோக்ஷபலத்துக்கும் நியமமில்லை.

(ஶ-ஹா) கர்மத்தினுல் வித்யையுண்டாகும்போது ப்ரதிபந்தகமிருந்தால் விலம்பிக்கும், இல்லையாகில்சீக்ரமுண்டாகுமென்கிற விசேஷம்வித்யைக்குள்ளதுபோல் ப்ரதிபந்தக ததபாவங்களினுல் மோக்ஷத்திலும் விசேஷமுண்டோவென்னில், மோக்ஷமாவது ப்ரஹ்மஸ்வரூபம். அது நிர்விசேஷம். "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂" இத்யாதி வாக்யங்கள் ப்ரஹ்மத்துக்கு அந்த ஒரே ஆகாரத்தைச் சொல்லுகிறதொழிய மற்றொராகாரத்தை எங்கும் சொல்லவில்லை. ஆகையால் அதில் ஒரு ந்யூநாதிகபாவம் கிடையாது, ஏகரூபம் என்கிறார். சசுக.

(ரா-ஹா) ப்ரதிபந்தக முண்டாகில் உபாஸநத்தினுல் ஐஹிகபலம் விலம்பித்துண்டாவதுபோல், எவ்விதமான உபாயத்தினுலும் நசியாத பாகவதாபசாரம் முதலிய ப்ரபல ப்ரதிபந்தகமுண்டாகில், உபாஸநம் செய்த உடனே மோக்ஷம் கிடைப்பதென்கிற நியமமும் கிடையாது. அவ்வபசாரம் பலித்துக்கழிந்த பின்புதான் மோக்ஷமுண்டாகும் என்று சொல்லுகிறார். "𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌧𑍃𑌤𑍇𑌃" என்கிற பதத்தை இரட்டித்துச்சொன்னது - அத்யாயம் முடிந்ததென் றறிக்கைக்காக. சசுக.

மூன்றும் அத்யாயம் நாலாம்பாதம் முடிந்தது.

மூன்றும் அத்யாயம் முடிந்தது.



# ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம்.

## ௪-வது அத்தியாயம்-௧-வது பாதம்.

அதி. ௧௨௪. ஸூ॥ ௪௭௦. ஆவ்ருத்திரஸக்ருதுபதேஶாத்.

(ப-வ்யா) அஸக்ருதுபதேஶாத்= அநேகம்தடவை சொல்லுகையாலே, ௪௭௦.
ஆவ்ருத்தி:=ஆவ்ருத்திசெய்யவேண்டும்.

(பா-வ்யா) உபதேஶாத்=த்யாநஸ்த்தாநத்தில் உபாஸநாத்மக ஜ்ஞாநத்தை
ச்சொல்லுகையாலே, ஆவ்ருத்தி: ஆவ்ருத்தியானது,அஸக்ருத்=அடிக்கடிசெய்ய ௪௭௦.
வேண்டும்.

(ப.பா-ஸா) மூன்றுமத்யாயத்தில் ஸாங்கமான உபாஸநம் சொல்லப்பட்டது
இனி இதில் உபாஸந ஸ்வரூபம் நிர்ணயிக்கப்படுகிறது,—‘‘ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ
பவதி’’ இத்யாதி வாக்யங்களில் ப்ரஹ்மப்ராப்திக்கு ஸாதநமாகச்சொல்லப்பட்ட
ப்ரஹ்மஜ்ஞானம், அதாவது – உபாஸநம், (உபாஸந மென்றபோதே ஆவ்ருத்தி செய்ய்
வேணுமென்பது ஸித்தம்.) அது இரண்டுமூன்றுவ்ருத்தி செய்தால்போருமா, அடிக்
கடி செய்யவேணுமாவென்னில்; இரண்டு மூன்றுதரம் செய்து விட்டபோதிலும் ஆவ்
ருத்தியாய் விட்டபடியால் ஶாஸ்த்ரவிதி நடத்தப்பட்ட தாகையால், அடிக்கடி செ
ய்யவேண்டுவதில்லை யென்று பூர்வபக்ஷம்; ‘‘ப்ரஹ்மவேத’’ என்கிறவிடத்தில் சொல்
லப்பட்ட ப்ரஹ்மஜ்ஞானம் த்யாநோபாஸந ஸ்த்தாநத்தில் சொல்லியிருக்கையால்
த்யாநபதத்தினர்த்தத்தை யுடைத்தாயிருக்கிறது. த்யாநமாவது - இடைவிடாத ஸ்ம்
ருதி பரம்பரை; அதாவது - அடிக்கடி செய்யப்பட்ட ஜ்ஞாநத்தினுடைய ஆவ்ருத்தி,
ஆகையால் இங்குச்சொல்லப்பட்ட ப்ரஹ்மஞாநமும் அடிக்கடி ஆவ்ருத்தி செய்யப்ப
ட்டதாய்க்கொண்டே ப்ரஹ்மப்ராப்தி ஸாதநமாகிறதென்று ஸித்தாந்தம்—‘‘யஸ்தத்
வேத’’ என்று ஆரம்பத்தில் ஸாமாந்யமாக ஜ்ஞாநவாசக சப்தத்தைச் சொல்லிற்று.
முடிக்கும்போது ‘‘உபாஸ்ஸே’’ என்று உபாஸந சப்தத்தினால் முடித்தது. ஆரம்பித்
ததையே முடிக்கவேண்டிய தாகையால் ஆரம்பத்திலும் உபாஸநமே சொல்லப்பட்ட ௪௭௦.
தென்றறிக.

ஸூ॥ ௪௭௧. லிங்காச்ச.

(ப-பா-வ்யா) லிங்காச்ச= (பா) ஸ்ம்ருதியினாலும், (ப) லிங்கத்தினாலும்,
(ப்ரஹ்மஸ்மரணம் அடிக்கடி செய்யவேணுமென்றேற்படுகிறது.) ௪௭௧.

(ப - ஸா) உத்கீதோபாஸநத்தில், ‘‘ரஶ்மீம்ஸ்த்வம் பர்யாவர்த்தயாத்’’ ஆதித்யனுடைய அநேக கிரணங்களையும் ஆதித்யனையும் அடிக்கடி ஆவ்
ருத்தி பண்ணக்கடவாய் என்று ஆவ்ருத்தி செய்யச்சொல்லுகை மற்ற உபாஸநங்களி
லும் ஆவ்ருத்தி செய்யவேண்டு மென்பதற்கு லிங்கமாயிருக்கிறது. இரண்டும் உபாஸந
மாகையால் ஓரிடத்தில் உபாஸநஸ்வரூபம் சொன்னால் மற்றோரிடத்திலும் அதையே
சொல்லிற்றென்று கருத்து. ௪௭௧

(ஶா-ஹா) "தஞ்ஞவ்யவஸ்தமைவ ஸாஸக்திஸ்தா ந்நிஷ்வஹா, தன்மா நஃ" இடைவிடாத பரமாத்மவிஷயகமான ஸ்ம்ருதி பரம்பரையே த்யாநமெனப் படுமென்று ஸ்ம்ருதியிலும்சொல்லுகையாலே அடிக்கடி ஆவ்ருத்திசெய்யப்பட்ட ப்ரஹ்மோபாஸநமே மோக்ஷஸாதநமாகும். சஎக.

ஸூ. கஉ௫. ஸூ॥ சஎஉ. ஆத்மேதி தூபகச்சந்தி ஸ்ராஹயந்தி ச.

(ஶ-ஶா-வ்ய) ஆத்மா இதி து= ஆத்மாஎன்றே, உபகச்சந்தி= த்யாநிக்கிறார்கள், ஸ்ராஹயந்தி ச=(இவ்வர்த்தத்தையேசாஸ்திரம்) போதிக்கிறது.

(ஶ – ஹா) பரமாத்ம ஸ்வரூபத்தை த்யாநிக்கும்போது ஜீவனான தன்னைக் காட்டிலும் பரமாத்மாவை வேறாக த்யாநிக்கவேணுமா, அல்லது தன்னையே பரமாத்ம ஸ்வரூபமாக த்யாநிக்கவேணுமாவென்னில்; ஜீவன் புண்யபாபங்களோடுகூடினவன், பரமாத்மா அதில்லாதவன், இப்படி வஸ்து வெவ்வேறாயிருக்க ஜீவனையே பரமாத்மாவாக த்யாநிப்பது அஸங்கதமாகையால் வெவ்வேறாகவே த்யாநிக்க வேணுமென்றான் பூர்வபக்ஷி—ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லை. ஜீவனுக்குப் புண்யபாபங்கள் ஸ்வாபாவிகமன்று; அவித்யையினால் கல்பிக்கப்பட்டது. அது வாஸ்தவமன்று. ஆகையால் ஜீவனே ப்ரஹ்மம்; த்யாநிக்க வேண்டியதும் அப்படியே; "த்வம்வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம்வை த்வமஸி பகவோ தேவதே" என்றுஜீவப்ரஹ்மங்களை அபேதமாகவே த்யாநிக்கிறார்கள். ஜாபாலர்கள், "தத்வமஸி" இத்யாதியான வேத வாக்யங்களும் அபேதத்தையே சொல்லுகிறது. ஆகையால், அபேதமாகவே த்யாநம் செய்யவேண்டுமென்று ஸித்தாந்தம். சஎஉ.

(ஶா – ஹா) பரமாத்மாவை ஜீவனைக்காட்டிலும் வேறாக த்யாநிக்க வேணுமா, அல்லது அபேதமாக "நான் ஆத்மா" என்று த்யாநிக்கவேணுமா வென்னில்; பரமாத்மாவைக்காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன், இவ்வர்த்தம் "அதிகந்து பேதநிர்தேசாத்" இத்யாதி ஸூத்ரங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. வேறுபட்ட வஸ்துக்களை ஒன்றென்று த்யாநிப்பது அநுசிதமாகையால் வேறாகவே த்யாநிக்க வேணுமென்று பூர்வபக்ஷம்—பரமாத்மாவைத் தனக்காத்மாவாகவே உபாஸநம் செய்ய வேண்டும், இந்த சரீரத்துக்குத்தா னாத்மாவாமதுபோல், ஜீவனாகிய தனக்குப்பரமாத்மா ஆத்மாவாகிறான். வெவ்வேறான சரீரத்தையும் ஆத்மாவையும் அபேதமாகவே "நான் தேவன், நான் மநுஷ்யன்" என்று வ்யவஹரிக்கிறார்கள். அதுக்குக்காரணம் சரீராத்ம ஸம்பந்தம். அது ஜீவனுக்கும் பரமாத்மாவுக்குங் கூட உண்டு. உபாஸநம் செய்கிற பூர்வபுருஷர்களும், "த்வம்வா அஹமஸ்மி-அஹம்வை த்வமஸி" என்று தன்னைப்பரமாத்மாவென்றே உபாஸநம் செய்கிறார்கள். "யஸ்யாத்மா ஶரீரம்" என்ற பரமாத்மாவுக்கு ஜீவன் சரீரமோ என்ற ஶ்ருதியே இவ்வர்த்தத்தில் ப்ரமாணம். ஆகையால், பரமாத்மாவைத் தனக்கு ஆத்மாவாகவே உபாஸநம் செய்யவேணுமென்று ஸித்தாந்தம்.

ஸூ. கஉ௬. ஸூ॥ சஎ௩. ந ப்ரதீகே ந ஹி ஸঃ.

(ஶ-ஶா-வ்ய) ப்ரதீகே=ப்ரதீகத்தில், ந=ஆத்மத்மபுத்திசெய்யக்கூடாது ஸঃ= அந்தப்ரதீகமானது, ந ஹி=ஆத்மாவன்றன்று. சஎ௩

(ஶ-ஶா-ஹா) பரமாத்மோபாஸநம் இப்படி செய்தபோதிலும் ப்ரதீகோபாஸநம் செய்யும்போது மநஸ்ஸு நாமம் முதலிய ப்ரதீகங்கள் (ஶ) பரமாத்மஸ்வரூபமன்றாகையால் (ஶா) பரமாத்மாவைப்போல் தனக்கு ஆத்மாவன்றாகையால் அவைகளைத்

தனக்காத்மாவாக உபாஸநம் செய்யக்கூடாது. ப்ரதீகோபாஸநமாவது - பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட நாமம் மநஸ்ஸு முதலான தவற்றை பரமாத்மாவாக த்யாநிக்கை. ௪௭௩.

ஸூ|| ௪௭௪. ப்ரஹ்மத்ருஷ்டிருத்கர்ஷாத்.

(ஶ்ரீ-பா-வ்ர) உத்கர்ஷாத்= (ப்ரஹ்மம்) உயர்ந்ததாகையால், ப்ரஹ்மத்ருஷ்டி:= ப்ரதீகத்தில் ப்ரஹ்மத்ருஷ்டியேசெய்யவேண்டும்.

(ஶ்ரீ-பா-ஸா) "நாம ப்ரஹ்மேத்யுபாஸீத" நாமத்தை ப்ரஹ்மமாக உபாஸநம் செய்யவேண்டும், "மநோ ப்ரஹ்மேத்யுபாஸீத" மநஸ்ஸை ப்ரஹ்மமாக உபாஸிக்கவேண்டும் என்று இத்யாதியான ப்ரதீகோபாஸநங்களில், ப்ரஹ்மத்தை நாமாதிகளாகவா, நாமாதிகளை ப்ரஹ்மமாகவா உபாஸநம் செய்யவேண்டுவதென்னில்,—ராஜாவை ஸேவகனாக நினைப்பது அநுசிதம், ஸேவகனை ராஜாவாக நினைத்தால் அவன் ஸந்தோஷித்து இவனுக்கு உபகாரம் செய்கிறான். இதனால், உயர்ந்தவனைத்தாழ்ந்தவனாக நினைக்கக்கூடாது, தாழ்ந்தவனை உயர்ந்தவனாக நினைக்கலாமென்றேற்படுகிற தாகையால், அசேதநங்களாகிய நாமாதிகளையே உயர்ந்தவனான பரமாத்மாவாக த்யாநம் செய்யவேணு மென்கிறார். ௪௭௪.

அதி. ௧௨௭. ஸூ|| ௪௭௫. ஆதித்யாதிமதயஶ்சாங்க உபபத்தே:.

(ஶ்ரீ-பா-வ்ர) உபபத்தே:=சரியானதாகையாலே, அங்கே=உத்கீதாதிரூபமான அங்கத்தில், ஆதித்யாதிமதய:ச= ஸூர்யன் முதலானவர்களுடையத்ருஷ்டி (செய்யவேண்டும்). ௪௭௫

(ஶ்ரீ-பா-ஸா) "ய ஏவாஸௌ தபதி தமுத்கீதமுபாஸீத" என்கிற உத்கீதோபாஸநத்தில், கர்மாங்கமான உத்கீதத்தை ஸூர்யனாகவா, ஸூர்யனை உத்கீதமாகவா உபாஸநம் செய்யவேணுமென்னில், கர்மாங்கமாய் பலஸாதநமாகிய உத்கீதம் ஸூர்யனைக் காட்டிலும் ஶ்ரேஷ்டமாகையால் ஸூர்யனை உத்கீதமாகவே உபாஸநம் செய்யவேணுமென்றான் பூர்வபக்ஷீ—உத்கீதாதிகளை அங்கமாக உடைய கர்மங்களினால் ஸூர்யாதி தேவதைகளே ஆராதிக்கப்படுகிறார்களாகையால் உத்கீதாதிகளைக் காட்டிலும் ஸூர்யாதிதேவதைகளே உயர்ந்தவர்கள். தாழ்ந்ததை உயர்ந்ததாக நினைப்பது உசிதமாகையால் உத்கீதாதிகளை ஸூர்யாதி தேவதைகளாக த்யாநிப்பதே சரியானது என்று ஸித்தாந்தம். ௪௭௫.

அதி. ௧௨௮. ஸூ|| ஆஸீந: ஸம்பவாத்.

(ஶ்ரீ-பா-வ்ர) ஸம்பவாத்=(உட்கார்ந்திருக்கிறவனுக்கேசித்தஸ்த்தைர்யம்) உண்டாமாகையால், ஆஸீந:= உட்கார்ந்தவனாகவே (உபாஸநம்செய்யக்கடவான்). ௪௭௬

(ஶ்ரீ-பா-ஸா) அநவரதஸ்ம்ருதி ஸந்ததிரூபமான உபாஸநம், நின்றுகொண்டா, நடந்துகொண்டா, உட்கார்ந்தா, படுத்துக்கொண்டா பண்ணவேண்டுவதென்னில், நிற்கும்போதும் நடக்கும்போதும் ப்ரயத்நத்தினால் மநஸ்ஸு நிலைநிற்காது. படுத்தால் நித்ரைவந்துவிடும் ஆகையால் உட்கார்ந்துகொண்டே செய்யவேண்டும். ௪௭௬.

ஸூ|| சஎஎ. ய்யாநாச்ச.

(ஸ-ரா-வ்ய-ஹா) ய்யாநாச்ச= (உபாஸநமென்பது) த்யாந மாகையாலே, (த்யாநத்தை) இடையில்விடக்கூடாதாகையால், ஏகாக்ரசித்தனுகைக்கு உட்கார்ந்தே உபாஸநம்செய்யவேண்டியது. சஎஎ

ஸூ|| சஎஅ. அவலஃவஞாவெக்ஷ்ய.

(ஸ-ரா-வ்ய-ஹா) அவலஃவஂ= (பர்வதாதிகள்) சலியாமலிருக்கையை, அவெக்ஷ்ய=உட்கொண்டு, ("ய்யாயதீவவ்ய்யிவீய்யாய தீவாஂ தரிக்ஷஂ" இத்யாதிகளினுல் பூமி ஆகாசம் மலை முதலானவை த்யாநிக்கிறப்போலிருக்கிறதென்று சொல்லிற்று. இதனுல் த்யானத்துக்கு நிச்சலமாயிருக்கவேணுமென்றேற்படுகிறது. அது உட்கார்ந்தவனுக்கேபலிக்கும். சஎஅ.

ஸூ|| சஎகூ. ஸூாரஂதிவ.

(ஸ-ரா-வ்ய-ஹா) ஸூாரஂதிவ=("உவவிஶ்யாஸநெ யாஂக்தெ யொமஜாதுவி ஶாஸயெ" உட்கார்ந்துயோகாப்யாஸம்செய்யக்கடவனென்று) தர்மசாஸ்திரக்காரர்களும் சொல்லுகிறுர்கள். சஎகூ.

ஸூ|| சஅ0. யபெகூ காஜ் தாத்ர் ாவிஶெஷாக.

(ஸ-ரா-வ்ய-ஹா) அவிஶெஷாக= (சித்தஸ்தைர்யாநுகூலதேசகாலங்களைக்காட்டிலும் வேருகதேசகால விசேஷங்களை விசேஷித்துச் சொல்லாமையாலே,யத்ர=எந்ததேசத்தில் எந்தகாலத்தில், வகாஜ தா=சித்தஸ்தைர்யம் (உண்டாகிறதோ), தத்ர=அந்ததேசத்திலே அந்தகாலத்திலே (இருந்து உபாஸநம்செய்யவேண்டியது)."ஸமெஶுசௌ ஶர்கராவஹிவாலுகாவிவஜ்ஜிதெ மநொநுகூலெ" பருக்கைகளில்லாமலும் மநஸ்ஸுக்குஅநுகூலமாயும் பரிசுத்தமாயுமிருக்கிற தேசத்திலே உபாஸநம்செய்யவேண்டுமென்று மாத்ரம்சொல்லிற்று. இதனுல் தேசகாலங்களுக்கு நியமமில்லையாகிலும் உட்கார்ந்தேசெய்யவேணுமென்கிற நியமம்மாத்ரமுண்டென்றுபாவம். சஅ0.

அதி. கஉகூ. ஸூ|| சஅக. ஆவ்ரயாணாத்தத்ராவி ஹிஜ்ருஷ்டஂ.

(ஸ-ரா-வ்ய) ஆவ்ரயாணாத= மரணம் வரையில் (உபாஸநம்)செய்யவேடும். தத்ர அவி=அக்காலத்திலும், ஜ்ருஷ்டஂ= உபாஸநம்காணப்பட்டது.

(ஸ-ரா-ஹா) இந்த உபாஸநம் ஒருநாள் செய்தால்போருமா, ஜீவித்காலம்வரையில் செய்யவேணுமா வென்னில்; ஒருநாள் செய்தாலும் "உவாஸீத" என்கிற விதியை அநுஷ்டித்தவனுகிருன். யாவத்காலமும் செய்யவேணு மென்கிற விதிகிடையாது. "ஸவலு வவஂவதந்யாவதாயுஷஂ" என்கிறவாக்யத்தில் யாவதாயுஷம் செய்யக்கடவன் என்கிற விதிப்ரத்யயமில்லாமையால் அது இதற்கு ப்ரமாணமாகமாட்டாது என்று பூர்வபக்ஷம்—"ஸவலு வவஂவதந்யாவதாயுஷஂ" என்கிற வாக்யத்தில் யாவதாயுஷம் இவ்வுபாஸநத்தைச் செய்தவனுய் பின்பு மோக்ஷத்

தை யடைகிருனென்று சொல்லியிருக்கிறது. அதில் விதிப்ரத்யயை மில்லாவிடிலும் இவ்வர்த்தம் மற்றெங்கும் சொல்லாமையாலே அபூர்வமாகையால் அதை விதியென்றே அங்கீகரிக்கவேணும் என்றுஸித்தாந்தம்—ராமாநுஜபாஷ்யத்துக்கு, 'தத்ராபி' என்றதுக்கு, உபாஸநம் செய்யத்தொடங்கின நாள் முதல் மரணகாலம் வரையில் என்றர்த்தம். இதற்கு ப்ரமாணம் "ஸவலுெவ்வு" என்கிற வாக்யம்—சங்கரபாஷ்யத்தில், "தத்ராபி"—மரணகாலத்திலும் என்றர்த்தம். இதற்குப்ரமாணம், "யஂயம் வாபிஸ்மரந்பாவஂத்யஜத்யந்தே கலேவரம்" இத்யாதி வாக்யம்.　　　　ச அக.

ஸூ. கரு௦. ஸூ|| ச அஉ. ததயிமஉத்தரபூர்வாகயோ ரஶ்லேஷவி நாஶௌ தத்வ்யபதேஶாத்.

(ஸ-ரா-வ்யா) தத்வ்யபதேஶாத் = அதையே உபநிஷத்தில்சொல்லுகையாலே, ததயிமே = அந்தப்ரஹ்மவித்யை கைபுகுந்தவளவில், உத்தரபூர்வாகயோ=உபாஸநாநந்தரம் செய்தபாபத்துக்கும், அதற்குமுன்செய்த பாபத்துக்கும், அஶ்லேஷவிநாஶௌ=ஒட்டாமையும் நாசமும் (ஸம்பவிக்குங்கள்).

(ஸ-ரா-ஸா) இதுவரையில் உபாஸநஸ்வரூபம் நிரூபித்தாய்விட்டது. இனி அதினுடைய பலத்தை நிரூபிக்கிருர்—உபாஸகனுக்கு வித்யாமாஹாத்ம்யத்தினுல் பாபம் நசிக்குமா நசியாதாவென்னில் 'நாபுக்தஂக்ஷீயதே கர்மகல்பகோடிஶதைரபி' அவனவன் செய்த கர்மம் எத்தனைகோடி கல்பமானுலும் அநுபவித்தே தீரவேண்டும், அநுபவியாமல் தீராதென்று பூர்வபக்ஷம்—"யதா புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்த ஏவமேவம்விதி பாபஂகர்ம நஶ்லிஷ்யத" தாமரை இலையில் நீர் ஒட்டாதாப்போலே உபாஸகனிடத்தில் பாபம் ஒட்டாது என்கையாலும், "ததயேஷீகதூலமக்னௌ ப்ரோதஂப்ரதூயேதைவஂஹாஸ்ய ஸர்வே பாப்மாந ப்ரதூயந்தே" இஷீகமென்கிற கோரையின் பஞ்சு நெருப்பில் போட்டால் வெந்து போவதுபோல், உபாஸகனுடைய பாபம் உபாஸநா மாஹாத்ம்யத்தால் நசித்துப்போமென்கையாலும் "உபாஸகனுக்கு பாபம் ஸம்பவியாது. உபாஸநம் செய்ய ஆரம்பித்தபின் அபுத்தி பூர்வகமாகச் செய்த பாபம் ஒட்டாது. அதற்குமுன் செய்த பாபம் நசித்துவிடுமென்று ஸித்தாந்தியின் தாத்பர்யம். "நாபுக்தஂக்ஷீயதே கர்ம" என்று செய்ய பாபம் இவனுக்கு துக்காநுபவத்தை யுண்டுபண்ணத்தக்க சக்தியை யுடைத்தாமென்கிறது, "ஶ்லிஷ்யதி" இத்யாதி வாக்யம், நெருப்பிருக்கும்போது சீதமுண்டாகாததுபோல் உபாஸந மிருக்கும்போது பாபத்துக்கந்த சக்தியுண்டாகிறதில்லையென்கிறது; "ஶ்லஂஹாஸ்ய" என்று, நெருப்பைக்கொண்டுவெந்தால் முன்புள்ள குளிர் விட்டுப் போவதுபோல் பாபத்துக்குண்டான சக்தி உபாஸநமஹிமையினுல் நசிக்கிறதென்றது. ஆகையால் சாஸ்த்ரங்களுக்கு பரஸ்பரம் விரோதமில்லை.　　　　ச அஉ,

ஸூ. கருக. ஸூ|| ச அந. இதரஸ்யாப்யேவமஸஂஶ்லேஷ: பாதே து.

(ஸ-வ்யா) இதரஸ்யாபி=மற்றுென்றுனபுண்யத்திற்கும், ஏவம்= இந்த பாபத்தைப்போலவே, அஸஂஶ்லேஷ:=ஒட்டாமை(ஸித்தம். ஆகையால்), பாதே து=சரீரம்விழுந்தஉடனே, (மோக்ஷம்ஸித்தம்).

(ரா-வ்யா) பாதே து = சரீரம்நசித்தவளவில், இதரஸ்யாபி=மற்றுென்றுனபுண்யம்போலே, அஸஂஶ்லேஷ:=ஒட்டாமை (ஸித்தம்).　　　　ச அந.

(ஸ—பா—ஸா) சாஸ்த்ரத்துக்கும் பாபம் நிஷித்தமாகையாலே அநிஷ்டமான பாபம் நசிக்கலாம், சாஸ்த்ரவிஹித மாகையாலே இஷ்டமான புண்யம்செய்வதென்னென்னில்; மோக்ஷத்துக்கு பாபம்போல் புண்யமும் ப்ரதிபந்தக மாகையாலும் "தத ஸுக்ருததுஷ்க்ருதே விதூநுதே" என்று புண்ய பாபங்களிரண்டையும் உதறிவிட்டுப் போகிறானென்கையாலும், சரீரம் நசித்தபின், ஆயுராரோக்யாதிகளை விளைக்கத்தக்க புண்யமும் நசிக்கிறது என்று ஸித்தாந்தம். ௪அ௩.

௩௰. ௧௩௨. ஸூ|| ௪அ௪. அநாரப்தகார்யே ஏவ து பூர்வே ததவதே:.

(ஸ-பா-வ்ய) ததவதே:=சரீரமுள்ளவரையும் கர்மமுண்டென்கையாலே அநாரப்தகார்யே=பலப்ரதாநத்தில் ஆரம்பியாத, பூர்வே=முன்செய்தகர்மங்களே, (நசிக்கின்றன). ௪அ௪.

(ஸ-பா-ஸா) உபாஸகனுக்கு புண்யபாபங்கள் நசிக்கிறதென்றது. அவற்றில் சில நசித்து சில இருக்குமா, எல்லாம் நசிக்குமாவென்னில், "ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" எல்லாக்கர்மங்களும் நசிக்கிறதென்கையாலே ஒன்றும்நிற்கிறதில்லையென்று பூர்வபக்ஷம்—உபாஸநம் பூர்த்தியாகிற வரையில் சரீரமிருக்க வேண்டுகையாலே அந்தசரீரஸ்த்திதிக்குக் கர்மம்தவிர மற்றொருஹேதுவில்லாமையாலும், "தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே" என்றுசரீராவஸாநம்வரையில்கர்மமிருக்கிறதாகச் சொல்லுகையாலும், உபாஸநத்துக்குமுன்னே செய்யப்பட்ட ஸஞ்சிதமான கர்மங்களே நசிக்கின்றன, ப்ராரப்தம் நசியாது. என்று ஸித்தாந்தம். ப்ராரப்தமாவது செய்த கர்மங்களில், எந்த கர்மம் தன்னுடைய பலத்தை அநுபவிப்பிக்க ஆரம்பித்துவிட்டதோ அது. மற்றது ஸஞ்சிதம். ௪அ௪.

௪௰. ௧௩௩. ஸூ|| ௪அ௫. அக்நிஹோத்ராதி து தத்கார்யாயைவ தத்தர்சநாத்.

(ஸ-பா-வ்ய) தத்தர்சநாத்=வித்யாங்கமாக, (ஸ) (வித்யாஸஹகாரியாக) க்காண்கையாலே, அக்நிஹோத்ராதி து= அக்நிஹோத்ரம் முதலிய கர்மம், தத்கார்யாயைவ=உபாஸநாரூப (ஸ) (மோக்ஷரூப) கார்யத்தின்பொருட்டே (ஆகிறது). ௪அ௫.

(ஸ—பா—ஸா) பாபம்போலும் புண்யமும் நசிக்குமாகில், அக்நிஹோத்ராதி கர்மங்களைச் செய்யவேண்டாவேயென்னில்;—"யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந" யஜ்ஞாதிகளை அங்கமாகக்கொண்டே உபாஸநம் செய்கிறார்களென்கையாலே அக்நிஹோத்ராதி கர்மம் செய்தால் மநஸ்ஸு நிர்மலமாய் உபாஸநம் மேல்மேல் நடக்கும், இல்லையாகில் பாபத்தினால் மநஸ்ஸுகலங்கி உபாஸநம்நிறைவேறாதாகையாலும், அவ்வுபாஸநம் யாவஜ்ஜீவம் செய்யவேண்டுகையாலும், அவற்றைச் செய்தே தீரவேணுமென்கிறார். ௪அ௫.

ஸூ|| ௪அ௬. அதோந்யாபி ஹ்யேகேஷாமுபயோ:.

(ஸ-பா-வ்ய) உபயோ:=பூர்வோத்தரகர்மங்களிரண்டிலும், அத:=உபாஸநத்துக்குஸஹகாரியான கர்மத்தைக்காட்டிலும், அந்யாபி= வேறு கர்மமும்(உண்டாகையால், அதைப்பற்றி), ஏகேஷாம்=சிலருடைய, (வசநங்கள் காண்கின்றன). ௪அ௬.

(ஶ-ரா-ஸா) அக்நிஹோத்ராதி ஸத்கர்மங்களில் சிலவை வித்யாஸாதநங்கள், சிலவை அநுபவ விநாஶ்யங்களாகில், "தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹ்ருத ஸாது க்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்" உபாஸகனுடைய தநத்தைப்பிள்ளைகளும், புண்யத்தை ஸுஹ்ருத்துக்களும், பாபத்தை சத்ருக்களு மடைகிறார்களென்று எதைப்பற்றிச் சொல்லிற்றென்னில்; வித்யைக்கு அநுபயோகியாய் முன்செய்யப்பட்ட கர்மங்களில் எவை பலப்ரதாநத்துக்கு ஆரம்பியாமல் ஸஞ்சிதங்களா யிருக்கின்றனவோ, அவற்றை "ஸுஹ்ருத ஸாது க்ருத்யாம்" இத்யாதி வாக்யம் சொல்லிற்றென்கிறார். ௪அ௬.

ஸூ|| ௪அ௭. யதேவ வித்யயேதி ஹி.

(ஶ-ரா-வ்ய-ஸா) யதேவ=எந்தகர்மமே, வித்யா ("யதேவ வித்யயா கரோதி" என்று) வித்யையோடுகூடினதாக(ச்செய்யப்படுகிறதோ, அதுவே சீக்கிரத்தில் பலத்தைக் கொடுக்கிறது) இதி ஹி=என்றன்றோ சொல்லப்பட்டது. இதனால், சில கர்மங்கள் ப்ரதிபந்தகத்தினால் அப்போதே பலத்தைக் கொடாமல் சிலகாலம் கழித்து அப்ப்ரதிபந்தகம் போனவாறே பலத்தைக் கொடுக்குங்களென்று தோற்றுகையால் அந்த ஸஞ்சிதகர்மங்களே ஸுஹ்ருத்துக்களை யடைகிறதென்று சொல்லப்பட்டதென்கிறார். ௪அ௭.

அதி. ௧௩௪. ஸூ|| ௪அ௮. போகேந த்விதரே க்ஷபயித்வாऽத ஸம்பத்யதே.

(ஶ-ரா-வ்ய) இதரே=வேறான (ப்ராரப்தமான) புண்யபாபங்களை, போகேந=அநுபவத்தினால், க்ஷபயித்வா=நசிப்பித்து, அத=பிற்பாடு, ஸம்பத்யதே=(ப்ரஹ்மத்தை) அடைகிறான். ௪அ௮.

(ஶ-ரா-ஸா) ஸஞ்சித கர்மங்கள் நசிக்கிறதென்றது. ப்ராரப்த கர்மம் எந்த சரீரமிருக்கச்செய்தே உபாஸநம் செய்கிறானோ, அந்த சரீரம் நசிக்கிறபோதே நசிக்கிறதா, அல்லது இன்னும் சில ஜந்மங்கள் கழித்து நசிக்கிறதாவென்னில்; ப்ராரப்த கர்மம் எவ்வளவு பலத்தைக்கொடுக்குமோ: அவ்வளவு பலத்தையும் அநுபவித்தபின்பே அந்த கர்மங்கள் நசிக்கும். அது இந்த ஜந்மத்தில் முடிந்தாலும் முடியும், சில ஜந்மங்கள் கழித்து முடிந்தாலும் முடியும், "தஸ்ய தாவதேவ சிரம்" என்ற வாக்யமும், ப்ராரப்த கர்மம் நசிக்கும் வரையில் ஸம்ஸாரத்திலிருந்து பின்பு மோக்ஷத்தை யடைகிறானென்றே சொல்லுகிறது என்கிறார். ௪அ௮.

க-வது பாதம் முடிந்தது.

உ-வது பாதம்.

அதி. ௧௩௫. ஸூ|| ௧. வாங்மநஸி தர்ஶநாச்சப்தாச்ச.

(ஶ-ரா-வ்ய) தர்ஶநாத்=ப்ரத்யக்ஷமாகக்காண்கையாலும், ஶப்தாச்ச=(வேத) சப்தத்தினாலும், வாக்=(ஶ) வாகிந்த்ரியத்தினுடைய வ்யாபாரமானது) (ரா) வாகிந்த்ரியமானது, மநஸி=மநஸ்ஸில் (சேருகிறது). ௧.

(ஶ - ஹா) இதில் உத்க்ராந்திப்ரகாரம் விசாரிக்கப்படுகிறது—"𑌅𑌸𑍍𑌯 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌯𑌤𑍋 𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑌿 𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑌿 𑌤𑍇𑌜𑌃 𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌮𑍍" இந்த புருஷன் மரித்துப்போகும்போது வாக்கு மநஸ்ஸிலும், மநஸ்ஸு ப்ராணனிலும், ப்ராணன் தேஜஸ்ஸிலும், அது பரதேவதையிலும்போய்ச் சேருகிறதென்கிறது. இங்கு வாக்கு மநஸ்ஸோடு சேருகிறதென்பதற்கு, வாகிந்த்ரியமா, அல்லது அதினுடைய வ்யாபாரமா மநஸ்ஸில் சேருகிறதாகச் சொல்லப்படுகிறதென்னில்; வாக் என்றே சொல்லிற்று, வாக் வ்யாபாரமென்று சொல்லவில்லை யாகையால் வாகிந்த்ரியமே மநஸ்ஸில் சேருகிறதென்று பூர்வபக்ஷம்—மேலே ஸூத்ரகாரர் வாகிந்த்ரிய ஸ்வரூபத்துக்கு லயம் சொல்லப்போகிறார். அதையே இங்கும்சொன்னால் புநருக்தமாகும் ஆகையால்ஸூத்ரத்திலுள்ள வாக் என்றபதத்துக்கு வாகிந்த்ரியவ்யாபாரமென்றர்த்தம். ஒருவஸ்து லயிக்கும்போது, கடகம் ஸுவர்ணத்திலும், கடம் மண்ணிலும்போல் தன்னுடையஉபாதாநத்தில் லயிக்கவேணும், வாக்குக்கு மநஸ்ஸு உபாதாந காரணமன்று ஆகையால் அதின் வ்யாபாரமே மநஸ்ஸில்லயிக்கிறது.வாக்வ்யாபாரமாகிய வார்த்தை சொல்வது நின்றுபோன பின்பும் மநஸ்ஸு இருக்கிறதாக லோகத்தில் ஸ்பஷ்டமாகக் காணப்படுகிறது. ஆனால்ஶ்ருதி '𑌵𑌾𑌕𑍍' என்று இந்த்ரியத்தையே சொல்லுவா னேனென்னில்; வார்த்தைசொல்லுகை வாக்கினுடைய வ்யாபார மாகையால் ஆஶ்ரயத்தைச் சொல்லுகிற பதத்தினால் அதின் தர்மத்தைச் சொல்லிற்றென்று ஸித்தாந்தம். ௪௮௯.

(ஶ்ரு-ஹா) உபாஸகனுடைய அர்ச்சிராதி கதியைச்சொல்வதாகக்கருதி முதல் உத்க்ராந்தி ப்ரகாரத்தை இதில் விசாரிக்கிறார்—"𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑌿 𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇" என்கிற விடத்தில் புருஷன் மரிக்கும்போது முதலிலே வாக்கு மநஸ்ஸில் லயிக்கிறதென்று சொல்லிற்று. அதுக்கு வாகிந்த்ரியமே லயிக்கிறதென்றர்த்தமா, அதின் வ்யாபாரம் லயிக்கிறதென்றர்த்தமா வென்னில், வஸ்துக்களுக்கு லயம் தன்னுடைய உபாதாந காரணத்திலே யாகையாலே வாக்குக்கு மநஸ்ஸு உபாதாந மல்லாமையாலே அதில் வ்யாபாரமே லயிக்கிறதென்று பூர்வபக்ஷம்—லோகத்தில் மரிக்கிறவனுக்கு வாகிந்த்ரியம் போனபின் மநஸ்ஸிருப்பதாகக் காண்கையாலும், ஶ்ருதியில் வாகிந்த்ரியத்தைச் சொல்லுகிற "𑌵𑌾𑌕𑍍" என்ற பதத்துக்கு அதின் வ்யாபாரமென்பதற்கும் வாக்கினுடைய வ்யாபாரம் நசித்தபின் அவ்விந்த்ரியம் இருக்கிறதென்பதற்கும் ப்ரமாணம் காணுமையாலும், இங்குச்சொல்லுகிற லயமாவது, கடகம் ஸுவர்ணத்தில் லயிப்பது போலன்றிக்கே ஒருவன் மற்றொருவனோடு சேருவதுபோல் வாக்கு மநஸ்ஸில்போய்ச் சேருகிறதென் றர்த்தமாகையாலும், வாகிந்த்ரியமே மநஸ்ஸில் லயிக்கிறதென்று ஸித்தாந்தம். ௪௮௯.

ஸூ|| ௪௯௦. 𑌅𑌤 𑌏𑌵 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑌨𑍁.

(ஶ-ப்ர-ஹா) 𑌅𑌤 𑌏𑌵=ஸர்வேந்த்ரியங்களுக்கும் மநஸ்ஸு உபாதாந காரண மல்லாமையாலேயே, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿=ஸமஸ்தேந்த்ரியங்களும், 𑌅𑌨𑍁= (தங்கள் வ்யாபாரத்வாரா) மநஸ்ஸை யநுவர்த்திக்கிறதுகள் (என்று "𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑍍𑌮𑌨𑌸𑌿 𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍈𑌃" என்கிற விடத்திலு மர்த்தமாகக்கொள்ள வேணும்). ஸகலேந்த்ரியங்களும் மநஸ்ஸில் லயிக்கிறதென்று சொல்லுகிற இந்த ஶ்ருதிக்கும் இந்த்ரிய வ்யாபாரங்களே லயிக்கிறதென் றர்த்தமாமென்று தாத்பர்யம். ௪௯௦.

(ஶ்ரு-ப்ர-ஹா) 𑌅𑌤 𑌏𑌵=("𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇" என்கிற பதத்துக்கு லயிக்கி றதென் றர்த்தமன்றிக்கே சேர்ந்திருக்கிறதென் றர்த்தமாகையினாலேயே; 𑌸

[illegible] ( [illegible] ) என்கிற ச்ருதியில்சொல்லுகிற, “ மநஸ்ஸில்ஸம்பந்நமான ஸகலேந்த்ரியங்களோடுகூட” என்ற அர்த்தமும் உபபந்நமாகிறது.) வாக்கைப்போலவே மற்ற இந்த்ரியங்களும் மநஸ்ஸில்போய்ச் சேருகிறதென்று தாத்பர்யம். ௭௩௦.

[illegible] ௩௨௩. ஸூ|| ௪௩௩. தந்மந: ப்ராண உத்தராத்.

(ஸ-ரா-வ்ய) தத்=அந்த, மந:=மநஸ்ஸு, உத்தராத்=மேல்வாக்யத்தினால், ப்ராணே=ப்ராணனிடத்தில் ஸம்பத்தமாகிறது. ௭௩௧.

(ஸ-ரா-ஸா) “மந: ப்ராணே” என்கிற மேல்வாக்யத்தில் (ரா) மநஸ்ஸுக்கு ப்ராணனில்லயமா, அல்லது முன்போல ஸம்யோகமேயாவென்னில் (ஸ) மநஸ்ஸு ப்ராணனில்லயமா, அல்லது முன்போல ஸம்யோகமேயாவென்னில் (ஸ) மநஸ்ஸுக்கு அதின்வ்யாபாரத்துக்கா ப்ராணனில்லயம்சொல்லிற்றென்னில்,முன்,வாக்குக்கு மநஸ்ஸு ப்ராக்ருதியல்லாமையால் வாக்குக்கு மநஸ்ஸில் லயம்சொல்லசரிப்படவில்லை. “அந்நமயம் ஹி ஸோம்ய மந:” என்று மநஸ்ஸை அந்நவிகாரமாகச்சொல்லுகையாலும், “தா அந்நமஸ்ருஜந்த” என்று ஜலம் அந்நத்தைப் படைத்ததாகச் சொல்லுகையாலும், “ஆபோமய: ப்ராண:” என்று ப்ராணனை ஜலத்தின் விகாரமாகச்சொல்லுகையாலும் மநஸ்ஸுக்கும் ப்ராணனுக்கும் இவ்விதமான ஸம்பந்தத்தைப்பற்றி, முன்போலநுபபத்தி யில்லாமையாலே ப்ராணனில் மநஸ்ஸுக்கு லயம் சொல்வதே உசிதமென்று பூர்வபக்ஷம்—“அந்நமயம்-ஹி மந: ஆபோமய: ப்ராண:” இத்யாதி இடங்களில் மநஸ்ஸுக்கு அந்நத்தையும் ப்ராணனுக்கு ஜலத்தையும் உபாதாநமாகச் சொல்லவில்லை, அந்நத்தினால் மநஸ்ஸும் ஜலத்தினால் ப்ராணனும் ஸஹகரிக்கப்பட்டு பல முடையவைகளாகின்றனவென்றே சொல்லப்பட்டது, உன்வழியிலும், மநஸ்ஸுக்கு அந்நமும் அந்நத்துக்கு ஜலமும் காரணமாயினும் ஜலத்துக்கு ப்ராணன் காரணமன்றுகையால் “மந: ப்ராணே” என்ற விடத்தில் ப்ராணபதத்துக்கு ப்ராணகாரணமான ஜலமென்றர்த்தம் சொல்லவேணும், அப்போது ப்ராணபதம் லாக்ஷணிகமாம், ஆகையால் அந்த யுக்தி சரியன்று. முன்போலவே (ரா) மநஸ்ஸு ப்ராணனோடு கூடுகிறது (ஸ)(மநோவ்ருத்தியே ப்ராணனில்லயிக்கிறது) என்று சொல்வதே சரியானதென்று ஸித்தாந்தம். ௭௩௨.

[illegible] ௩௨௭. ஸூ|| ௪௩௪. ஸோऽத்யக்ஷே ததுபகமாதிப்ய:.

(ஸ-ரா-வ்ய) ததுபகமாதிப்ய:=அந்த ஜீவனுடைய ஸமீபத்தில் போவது முதலானவற்றினால், ஸ:=அந்த ப்ராணன், அத்யக்ஷே=ஜீவனிடத்தில் சேருகிறது. ௭௩௩.

(ஸ-ரா-ஸா) “ப்ராணஸ்தேஜஸி” என்கிற மேல்வாக்யத்திற்கு, ப்ராணன் தேஜஸ்ஸில் சேருகிறதென்றர்த்தமா, அல்லது தேஜஸ்ஸு முதலிய பஞ்சபூதங்களோடு கூடின ஜீவனிடத்தில் சேருகிறதென்றர்த்தமாவென்னில், “தேஜஸி” என்று தேஜஸ்ஸிலே சேருவதாகச் சொல்லுகையாலே அதிலேயே சேருகிறதென்றுன் பூர்வபக்ஷம்— “ஏவமேவேமமாத்மாநமந்தகாலே ஸர்வே ப்ராணா அபிஸமாயந்தி” என்று மரணஸமயத்தில் ப்ராணன்களெல்லாம் ஜீவனைக்குறித்து அபிமுகமாக வருகின்றனவென்கையாலும், “ தமுத்க்ராமந்தம் ப்ராணோऽநூத்க்ராமதி ” என்றும்,

ஜீவன் வெளிக்கிளம்பும்போது ப்ராணனும் கூடவே வெளிக்கிளம்புகிற தென்கையா லும், "கஸ்மிந்வா ப்ரதிஷ்டிதே ப்ரதிஷ்டாஸ்யாமி" என்று, ஜீவனிருந்தால்தா னிருப்பதாகவும் இப்படி ஸர்வகாலங்களிலும் ஜீவனேடே ப்ராணனுக்கு ஸம்பந்தம் சொல்லுகையாலே "ப்ராண: தேஜஸி" என்ற வாக்யத்திலும் ப்ராணனுக்கு ஜீவ னேடு சேர்த்தியையே சொல்லுகிறது. ஆகில் தேஜஸ்ஸில் சேருவதாகச் சொல்லு வானென்னென்னில்; யமுனை கங்கையில்சேர்ந்து அவ்வழியாக ஸமுத்ரத்தில்சேர்ந்த போதிலும் "யமுனை ஸமுத்ரத்துக்குப்போய்ச் சேருகிறது" என்பதுபோல், ப்ராண னும் முன்பு ஜீவனேடு சேர்ந்து பின்பு அவனுடன்கூட தேஜஸ்ஸில் சேருகிற தென் றர்த்தம் சொல்லவேணு மென்று ஸித்தாந்தம். ௪௧௨.

அதி. ௧௩-அ. ஸூ|| ௪௧௩. பூதேஷு தச்ச்ருதே:.

(ஸூ-ரா-ப்ர-ஸா) தச்ச்ருதே:=ஜீவன் ஸர்வபூதமயனென்று, ப்ருதிவீமய ஆபோமயோ வாயுமய:=இத்யாதியாலே ஜீவனை பஞ்சபூதமயமாக, அதாவது - பஞ்சபூதமயமான சரீரயுக்தனைச் சொல்லுகையாலே, பூதேஷு= (ப்ரா ணனேடுகூடிய ஜீவன், தேஜஸ்ஸோடுகூடின) ஐந்து பூத ஸூக்ஷ்மங்களிலே (சேருகிறுன் என்று "ப்ராணஸ்தேஜஸி" என்கிற வாக்யத்துக்குத் தாத் பர்யம். ௪௧௩.

ஸூ|| ௪௧௪. நைகஸ்மிந் தர்சயதோ ஹி.

(ஸூ-ரா-ப்ர-ஸா) ஏகஸ்மிந்=(தேஜஸ்ஸு முதலிய ஏவ்வொரு தத்வம் தனித்தனியேயிருந்து சரீராதிகளாகப் பரிணமிக்கைக்கு யோக்யங்க ளல்லா மையால், கார்யகரமல்லாத தனியான தேஸ்ஸில், ந=(ஜீவன்) சேருகிறதில் லை. (தன்னுடைய சரீரத்துக்கு ஆரம்பகங்களான ஐந்து பூத ஸூக்ஷ்மங்க ளோடேயே சேருகிறுன்). தர்சயத: ஹி - ("தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி" ப்ருதிவ்யாதிகளை பாகப்படியே ஒன்ருகச் சேர்த்துப் பின்பு ஸ்ருஷ்டிக்கக்கடவேனென்று ஶ்ருதியும், "நாநாவீர்யா: ப்ருதக்பூதா: ததஸ்தே ஸம்ஹதிம் விநா | நாசக்நுவந்" இத்யாதியினுல், பஞ்சபூத ங்களும் தனித்தனியே ஒன்றை ஸ்ருஷ்டிக்க ஸமர்த்தங்களல்லாமலிருந்து பி ன்பு ஒன்ரேடொன்றுசேர்ந்து மஹதாதிகளை ஸ்ருஷ்டித்தனவென்று ஸ்ம்ரு தியும், பஞ்சபூதங்களும் தனித்தனியே கார்யயோக்யங்களன்றென்பதை ப்ர காசிப்பிக்கின்றன. ௪௧௪.

அதி. ௧௩-௩. ஸூ|| ௪௧௫. ஸமாநா சாஸ்ருத்யுபக்ரமாத் அம்ருதத்வம் சாநுபோஷ்ய

(ஸூ-ரா-ப்ர) ஆஸ்ருத்யுபக்ரமாத்=அர்ச்சிராதிகதியில் போகத்துடங்கு வதற்கு முன்பு, ஸமாநா=உபாஸகனுக்கும் அநுபாஸகனுக்கும் உத்க்ராந்தி ஸமாநமாயிருக்கும், அநுபோஷ்ய=(சரீரஸம்பந்தத்தை) தஹியாமல், அம்ரு தத்வம் ச=(சொல்லப்பட்ட) மோக்ஷமாவது, (முக்யமன்று. கௌணம்.)

(ஸூ-ரா-ஸா) கீழ்ச்சொன்ன உத்க்ராந்தி உபாஸகன் அநுபாஸகன் இருவருக் கும் ஸமாநமா, அன்ருவென்னில், "அத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே" என்று உபாஸகன்

இங்கேயே ப்ரஹ்மாநுபவம் பண்ணுவதாகச் சொல்லுகையாலே அவனுக்கு வேறே போகவேண்டிய இடமில்லை, ஆகையால் உபாஸகனுக்கு உத்க்ராந்தி கிடையாது; இது அநுபாஸகனுக்குச் சொல்லிற்று என்று பூர்வபக்ஷம்—உபாஸகனுக்கும் இங்கே ப்ரஹ்மாநுபவம் கிடையாது, அர்ச்சிராதி வழியாக தேசாந்தரம்போய் அங்கே ப்ரஹ்மத்தை யநுபவிக்கவேணு மாகையால் அவனுக்கு முத்க்ராந்தியுண்டு, "...'' என்று அர்ச்சிராதி வழியாகப்போகவேண்டியவன் முதலிலே மூர்த்தந்ய நாடிவழியாக வெளிக்கிளம்புகிறான். மற்றவன் வேறுவழியாகக் கிளம்புகிறான். அந்த மூர்த்தந்ய நாடியில் ப்ரவேசிக்கிற வரையில் கீழ்ச்சொன்ன உத்க்ராந்திகளெல்லாம் இருவர்க்கும் ஒன்றாயேயிருக்கும், "...'' இங்கே ப்ரஹ்மாநுபவம் பண்ணுகிறானென்றதுக்கு, உபாஸந காலத்தில் பரப்ரஹ்மத்தை த்யானிப்பதே அத்யந்த ஸுகரூபமா யிருக்கையாலே அதைச் சொல்லிற்றென்றும், "...'' முக்தியை யடைகிறானென்பதற்கு, கீழ்ச்சொன்னபடியே புண்யபாபங்க ளிவனைக் கிட்டாதபடியைச் சொல்லிற்றென்றும் தாத்பர்யம். என்று ஸித்தாந்தம் (சங்கரபாஷ்யத்தில் இது ஸகுணப்ரஹ்ம முக்திவிஷயம்). ௪௧௫.

ஸூ|| ௫௩௬. ...

(ரு-வ்ய) ...=ஸம்ஸாரமுண்டென்கையாலே, ஆபீதே:=ஆத்யந்திக ஸம்ஸார நாசம்வரையில், தத்=அந்த பூதஸூக்ஷ்மம் (இருக்கிறது.) ௪௧௬.

(ரா-வ்ய) ஆபீதே:=ப்ரஹ்ம ப்ராப்திவரையில், ...=ஸம்ஸார மிருப்பதாகச் சொல்லுகையாலே, தத்="..." என்பதற்குக் கீழ்ச்சொன்ன அர்த்தமே உசிதமானது. ௪௧௭.

(ரு-பா) "...'' தேஜஸ் முதலிய பூதஸூக்ஷ்மங்களோடுகூடிய ஜீவன் பரமாத்மாவினிடத்தில் லயிக்கிறானென்றவிடத்தில் சொல்லப்பட்ட லயமாவது எப்படிப்பட்ட தென்னில்; பஞ்சபூதம் முதலிய ஸமஸ்த வஸ்துக்களுக்கும் பரமாத்மாவே உபாதாந மாகையால், கடாதிகள் தங்களுக்குபாதாநமான ம்ருத்பிண்டத்தில் லயிப்பதுபோல் லயித்துவிடுகிற தென்றர்த்தம், இதுக்கு ஆத்யந்திகலயமென்று பெயர். அதாவது பூதஸூக்ஷ்மமும் அவித்யாஸம்பந்தமும் வேரோடேயற்று இனி ஸம்ஸாரத்தில் திரும்பாமல்படி லயித்துவிடுகை என்று பூர்வபக்ஷம்—பூதஸூக்ஷ்மமும் அவித்யையும் தத்வஜ்ஞாநத்தினால் நசிக்கவேணும்; அந்த ஜ்ஞாந முண்டாகாதபோது இவ்விரண்டும் நசியாது. மேலும், "..." என்று தொடங்கி கீதையில், மரித்தவன் மறுபடியும் தன்னுடைய கர்மாநுகுணமாகப் பிறக்கிறானென்று சொல்லுகிறது. ஆகையால் இது ஆத்யந்திகலயமன்று. ஸம்ஸார பீஜத்தோடுகூடினவனையே லயிப்பதைச் சொல்லுகிறதென்று ஸித்தாந்தம். ௪௧௮.

(ரா-பா) "..." என்று, அர்ச்சிராதி வழியாகப்போய் பரமாத்மாவைப் பெறுமளவும் ஸம்ஸாரமுண்டென்கையாலே, "இங்கேயே அம்ருதத்வத்தை (மோக்ஷத்தை) யடைகிறான்'' என்று கீழ்ச்சொன்ன வசநத்துக்கு, புண்யபாப ஸம்பந்தங்களைத் துலைக்கிறானென்றே அர்த்தம் சொல்லவேணுமென்கிறார். ௪௧௯.

ஸூ|| ௫௩௭. ...

(ரு-வ்ய) ததா=அப்படி, ஸூக்ஷ்மமென்று, உபலப்தே:=காண்கையா

லே. ப்ரமாணத:=பரிமாணத்தினாலும், ஸூக்ஷ்மம்=சிறிதாயிருக்கும் ௪௯.

(ரா-ப்ர) ப்ரமாணத:=ப்ரமாணத்தினாலும், ததா=அப்படி ஸூக்ஷ்மசரீரமுண்டென்று, உபலப்தே:=காண்கையாலே, ஸூக்ஷ்மம்=ஸூக்ஷ்மசரீரம் (மோக்ஷம்போமளவு மிருக்கிறது.) ௪௯.

(ஶ்ரு - ஸா) நாடி அதிஸூக்ஷ்ம மாகையால் அவ்வழியாக உபாஸகனுடைய லிங்க சரீர மெப்படி புறப்படுமென்னில்; அதிஸூக்ஷ்மமான நாடியின் வழியாகப் புறப்படுகையினாலேயே அதைக்காட்டிலும் லிங்கசரீரம் அதிஸூக்ஷ்ம பரிமாணமா யிருக்குமென்று ஏற்படுகிறது, அதினாலேயே மற்றொருவர்க்கும் !காண்கிறதில்லை யென்கிறார்.

(ரா-ஸா) "தம்ப்ரதிப்ரூயாத் ஸத்யம்ப்ரூயாத்" இத்யாதிகளினால், உபாஸகன் அர்ச்சிராதிகதியில் போம்போது சந்த்ரன் முதலானவர்களோடு வார்த்தை சொல்வதாக உபநிஷத்தில் சொல்லுகையாலே, அது சரீரமில்லாவிடில் சரிப்படாதாகையாலே ஸூக்ஷ்ம சரீரமுண்டென்பது ஸித்தம். ௪௯.

ஸூ|| ௪௫௦. நோபமர்தேநாத:.

(ஶ்ரு-ப்ர-ஸா) அத:=லிங்கசரீரம் அதிஸூக்ஷ்ம மாகையாலே, உபமர்தேந=ஸ்த்தூலசரீர நாசத்தினால், ந=நசியாது. ஸ்த்தூலசரீரம் தாஹநச்சேதநாதிகளினால் நசித்தபோதிலும் ஸூக்ஷ்மசரீரம் நசியாதென்று கருத்து.

(ரா-ப்ர-ஸா) அத:=கீழ்ச்சொன்ன ஹேதுக்களினாலே, உபமர்தேந=சரீரநாசத்தினால், ந=மோக்ஷத்தைச்சொல்லவில்லை. ஆகையால் மோக்ஷத்தை யநுபவிக்கிறானென்றதுக்கு புண்யபாப ஸம்பந்த மறுகையே அர்த்தம்.

ஸூ|| ௪௫௧. அஸ்யைவசோபபத்தேரூஷ்மா.

(ஶ்ரு-ப்ர-ஸா) உபபத்தே:=(மரித்தவனுடைய சரீரத்தில் உஷ்ணம் காணாமையும் பிழைத்திருக்குமவன் சரீரத்தில் உஷ்ணம் காண்கையும் உஷ்ணமானது லிங்கசரீரத்தினது என்பதே) உபபந்நமாகையாலே, ஊஷ்மா=உஷ்ணமானது, அஸ்யைவ=இந்த ஸூக்ஷ்ம சரீரத்தினதே, பிழைத்திருக்கும்போது லிங்கசரீர மிருக்கையால் உஷ்ணம் காண்கிறது. மரித்தபின் ஸ்த்தூலசரீர மிருந்தபோதிலும் லிங்கசரீர மில்லாமையால் உஷ்ணம் காண்கிறதில்லை. ஆகையாலது ஜீவனோடுகூடவே போகிறதென்று கருத்து. ௪௫௧.

(ரா- ப்ர - ஸா) அஸ்ய= இந்த ஸூக்ஷ்ம சரீரத்திற்கு, உபபத்தே:=ஸ்த்தூலசரீரைகதேசத்தில்ஸ்த்தி உபபந்நமாகையாலே, ஊஷ்மா=உஷ்ணம் தோற்றுகிறது. ஸ்த்தூல சரீரத்தினுஷ்ணம் எங்கும் வ்யாபித்திருக்கும். மரிக்கும்போது ஒருபாகத்திலேயே உஷ்ணம் காண்கிறது. அந்த உஷ்ணமும் ஸ்த்தூலதேஹத்தினதானால் மற்றோரிடத்திலும் காணப்படும், அப்படி காணாமையால் அது ஸ்த்தூல தேஹத்தினதன்று ஸூக்ஷ்ம தேஹத்தினது என்னவேண்டும். இதனால் மரிக்கும்போது ஸூக்ஷ்மசரீர முண்டென்றும் அத்துடனே வெளிக்கிளம்புகிறானென்றும் ஏற்படுகிற தென்கிறார். ௪௫௧.

ஸூ|| ௫௦௦. ப்ரதிஷேதாதிதி சேந்ந ஶாரீராத்‌ ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம்‌.

(ஶ-ப்ர) சங்கரபாஷ்யத்துக்கு "ப்ரதிஷேதாதிதி சேந்ந ஶாரீராத்" என்னுமளவு மொரு ஸூத்ரமாய் "ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம்" என்றது மற்றொரு ஸூத்ரமாயிருக்கும். அதில்முதல் ஸூத்ரத்தினர்த்தமாவது - ப்ரதிஷேதாத்" - உத்க்ராந்தியை நிஷேதம்செய்கையாலே, (உபாஸகனுக்கு உத்க்ராந்தியில்லை, இதி சேத்=என்னில், ஶாரீராத் = ஜீவனிடத்திலிருந்து (ப்ராணனுக்கு உத்க்ராந்தியில்லை யென்கையாலே) ந= அப்பக்ஷம் சரியன்று.

(ஶ - ஸா) இதற்கு பாஷ்யம்—பரவித்யையை, அதாவது-நிர்குண வித்யையை உபாஸநம் செய்கிறவனுக்கு, "ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி | ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி" அவனுடைய ப்ராணன்கள் உத்க்ரமிக்கிறதில்லை. இங்கேயே ப்ரஹ்மஸ்வரூபியாய்க்கொண்டுப்ரஹ்மத்தில் ஏகிபவிக்கிறனென்று உத்க்ராந்தியில்லையென்கையாலே, நிர்க்குண வித்யோபாஸகனுக்கு உத்க்ராந்தி கிடையாதே யென்னில்; இந்த வாக்யத்தில் சரீரத்தைவிட்டு ப்ராணன் வெளிக்கிளம்புகிற தில்லையென்று சொல்லவில்லை. ஜீவனிடத்தில் நின்றும் ப்ராணம் பிரிகிறதில்லையென்றே சொல்லிற்று. இப்படி சொல்லுவானேனென்னில்; வேறு உபநிஷத்தில், "ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி" அந்த ஜீவனிடத்தில் நின்றும் ப்ராணன்பிரிகிறதில்லையென்று ஸ்பஷ்டமாகச்சொல்லுகையாலே அதையே இங்கும் கொள்ளவேணும். இதனால் நிர்குண வித்யோபாஸகன் மரிக்கும்போது ப்ராணனோடுகூடவே ஜீவன் வெளிக்கிளம்புகிறன். அப்போதும் ஜீவனை ப்ராணன் விடுகிறதில்லை கூடவே போகிறது என்று சொல்லிற்று என்று பூர்வபக்ஷம். ௩ா.

(ஶ-ப்ர) இரண்டாம் ஸூத்ரத்துக்கர்த்தம்—ஏகேஷாம் = ஒருசாகிகளுடைய (வசநத்தில்), ஸ்பஷ்டோ ஹி=உத்க்ராந்தி யில்லையென்பது ஸ்பஷ்டமன்று. ௫௦௦.

(ஶ - ஸா) இதற்கு பாஷ்யம்—இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறர்—நிர்க்குணோபாஸகனுக்கு உத்க்ராந்தி யில்லை யென்பது மற்றொரு உபநிஷத்தில் அதிஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. அதாவது -"யத்ராயம் புருஷோ ம்ரியத உதஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்த்யாஹோ நேதி"என்று புருஷன்மரிக்கும்போது அவனுடைய ப்ராணன்கள் உத்க்ரமிக்கின்றனவா, இல்லையாவென்றுகேட்க, "நேதி ஹோவாச யாஜ்ஞவல்க்ய:" உத்க்ரமிக்கிறதில்லையென்று யாஜ்ஞவல்க்யர் சொன்னரென்றுசொல்லி, ஆகில் இச்சரீரத்தில் ப்ராணனிருக்கிறதென் றெப்புக்கொண்டதாம், அப்போது அவன் மரித்தவனுகானென்று சங்கித்துக்கொண்டு, இங்கே லயித்துப்போய்விடுகின்றனவென்று சொல்லிற்று. இப்படி அதிஸ்பஷ்டமாகச்சொன்ன அர்த்தத்தை மற்ற இடங்களிலும் அங்கீகரிக்க வேண்டுகையாலே, கீழ்ச்சொன்ன விடத்திலும் நிர்க்குணோபாஸகனுக்கு உத்க்ராந்தியில்லையென்பதிலேயே தாத்பர்யமென்று ஸித்தாந்தம்.

(ரா-ப்ர) ப்ரதிஷேதாத்=(உபாஸகனுக்கு) உத்க்ராந்தியை நிஷேதிக்கையாலே, (உத்க்ரமணம்கிடையாது) இதி சேத்=என்னில், ஶாரீராத்=ஜீவனிடத்தில் நின்றும் உத்க்ராந்தி இல்லை யென்கையாலே) ந=உத்க்ராந்தி இல்

லையென்பதில்லை. வாகேஷாபு=ஒரு சாகையாருடைய மந்த்ரத்தில், ஸ்பஷ்டோ ஹி=(இவ்வர்த்தம்) ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ௩௦௦.

(ரா-ஸா) "ஸவா தாவேஷ" என்று தொடங்கி அநுபாஸகனுக்கு ப்ராணன் வெளிக்கிளம்பிப்போகும் ப்ரகாரத்தையும் லோகாந்தர கமநத்தையும் சொல்லி, பின்பு "அகாமயமாந" என்று தொடங்கி "ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி" உபாஸகனுடைய ப்ராணன் சரீரத்தில் நின்றும் வெளிக்கிளம்புகிறதில்லை யென்கையாலே உபாஸகனுக்கு உத்க்ராந்தி கிடையாதென்று பூர்வபக்ஷம்—"ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி" என்ற விடத்தில் உபாஸகனுடைய சரீரத்தில் நின்றும் ப்ராணன் வெளிக்கிளம்புகிறதில்லை என்றர்த்தமன்று. ஜீவனைவிட்டு ப்ராணன் பிரிகிறதில்லை. அர்ச்சிராதி மார்க்கத்தில் போம்போது கூடவே யிருக்கிறதென்றே அவ்வாக்யத்துக்கர்த்தம் இவ்விடத்தில் இவ்வர்த்தம் ஸ்பஷ்டமாக இராவிடினும், மாத்யந்தின சாகையில், "யோகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி" என்று உபாஸகனை "அகாமோ நிஷ்காம" இத்யாதியினால் சொல்லி, பின்பு, அவனிடத்தில் நின்றும் ப்ராணன்கள் வெளிக்கிளம்புகிற தில்லையென்று இவ்வர்த்தத்தையே ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று ஆகையால் அதையே இங்கும் அர்த்தமாகக் கண்டுகொள்வது. ஒருவாக்யம் இரண்டர்த்தத்தைக் கொடுக்குமாகில், வேறோரிடத்தில் இவ்விரண்டில் எவ்வர்த்தத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லி யிருக்கிறதோ, அதையே இங்கும் அங்கீகரிப்பது உசிதம் என்று ஸித்தாந்தம். ௩௱.

ஸூ|| ௩௦௧. ஸ்மர்யதே ச.

(ப. ரா-வ்யா) ஸ்மர்யதே ச=(இவ்வர்த்தம்) ஸ்ம்ருதியிலும்சொல்லப்படுகிறது.

(ப - ஸா) மஹாபாரதத்தில் "ஸர்வபூதாத்மபூதஸ்ய ஸம்யக் பூதாநி பஸ்யத: | தேவா அபி மார்கே முஹ்யந்தி அபதஸ்ய பதைஷிண:" என்று ஸகலப்ராணிகளையும் பரப்ரஹ்ம ஸ்வரூபமாகப் பார்க்கிறவனாய், போய் அடையத்தக்க வேறொரு ஸ்தானத்தை யுடைத்தாகாதவனை நிர்க்குண வித்யோபாஸகனுடைய வழியை தேவர்களு மறிகிறார்களில்லை என்று சொல்லிற்று. இதனாலும் அவ்வுபாஸகனுக்கு தேசாந்தரம் போகைக்காக சரீரத்தில் நின்றும் ப்ராணோத் க்ரமணம் கிடையாதென்பது ஸித்திக்கிறது. ௩௱க.

(ரா-ஸா) "ஊர்த்வமேகஸ்ஸ்தி தஸ்தேஷாம் யோ பித்வா ஸூர்யமண்டலம் | ப்ரஹ்மலோகமதிக்ரம்ய தேந யாதி பராம் கதிம்" என்று கீழ்ச்சொன்ன அதிகாரிகளில் சிறந்தவனாய் ஸூர்யமண்டலத்தை பேதித்துக்கொண்டுபோய் ப்ரஹ்மலோகத்தையாக்ரமித்து அவ்வழியாலே பரமப்ராப்யமான மோக்ஷத்தை யடைகிறானென்று ஸ்ம்ருதியில் உபாஸகன் தேசாந்தரம்போவதாகச்சொல்லுகையாலே அவனுடைய ப்ராணன்கள் சரீரத்தில் நின்றும் உத்க்ரமிக்கிறதுகளென்பது ஸித்தமென்கிறார். ௩௱க.

அதி. க௪௦. ஸூ|| ௩௦௨. தாநி பரே ததா ஹ்யாஹ.

(ப-ரா-வ்யா) தாநி=அந்த பூதஸூக்ஷ்மங்கள், பரே=பரமாத்மாவினிடத்தில் ஸம்பந்நங்களாகின்றன, ததா ஹி=அப்படியன்றோ, ஆஹ=ஶ்ருதி சொல்லிற்று. ௩௦௨.

(ப-ஸா) நிர்க்குண ப்ரஹ்மோபாஸகனுடைய இந்த்ரியங்களும் லிங்கசரீரமும் அவன் மரித்தபின் பரப்ரஹ்மத்தில் லயித்துவிடுகின்றன. இதற்கு ப்ரமாணம்—"ஏவ

டௌவாஸ்ய வாிஷ்டாந்தாரிஷோபஸுகஸ்ரேவாரஷாயணா: ஸுரு ஷாவ்யாவாஸ்ஸம ஹஷ்'' உபாஸகனுடைய இந்த்ரியங்களும் சரீராரம்பகமான பூதஸூக்ஷ்மங்களும் ப்ரஹ்மத்தில் லயித்துவிடுகின்றன என்பது. ௩௦௨.

(ஶா-ஸா) சரீரத்தில் நின்றும் வெளிக்கிளம்பினபின் ஜீவன் பூதஸூக்ஷ்மங்களோடுகூடி பரமாத்மாவினிடத்தில் லயிக்கிறானென்று "தேஜஃபர ஸ்யாம்தேவதாயாம்" என்ற ஶ்ருதிசொல்லிற்று ஆகையாலே இவன் செய்த கர்மாநுகுணமாகவும் உபாஸநாநுகுணமாகவும் துக்காநுபவம்பண்ண லோகாந்தரங்களுக்குப் போகிறதில்லையென்கிறார். நெடுநாள் ஸம்ஸாரதுக்காநுபவம்பண்ணின ஆயாஸம் தீருகைக்காகப் பரமாத்மாவினிடத்தில்போய்ச் சேருகிறானென்று கருத்து. ௩௦௨.

அபி. ௧௪௧. ஸூ॥ ௩௦௩. அவிபாகோவசநாத்.

(ஶ்ரு-ஶா-வ்ய) வசநாத்=ஶ்ருதிவசநத்தினாலே, அவிபாக:=வேறுபட்டுத் தோற்றுவதில்லை (என்னவேணும்). ௩௦௩.

(ஶ்ரு–ஸா) நிர்குணோபாஸகனுடைய இந்த்ரியங்களும் பூதஸூக்ஷ்மங்களும் பரப்ரஹ்மத்தில் லயிக்கும்போது, திரும்பி ஸம்ஸாரோத்பத்தி ஹேதுவான சக்தியுங்கூட இல்லாமல் காரணமாகிய ப்ரஹ்மத்தில் அத்யந்தமாக லயித்துவிடுகிறது. இதற்கு ப்ரமாணம்—"பித்யேதே தாஸாம் நாமரூபே" என்கிற ஶ்ருதி. ௩௦௩.

(ஶா – ஸா) பூதஸூக்ஷ்மங்களோடுகூடின ஜீவன் பரமாத்மாவில் லயிக்கையாவது - ஸுவர்ணத்தில் கடகம்போலன்று; வாக்கு மநஸ்ஸில் லயிப்பதுபோலவே நாமரூபங்களற்று இதொருவஸ்துவென்று வேறுபட்டுத் தோற்றுதபடி சேர்ந்துவிடுகிறான். "வாங்மநஸி ஸம்பத்யதே" என்ற விடத்திலுள்ள "ஸம்பத்யதே" என்ற பதத்தையே "தேஜஃபரஸ்யாம்தேவதாயாம்" என்ற விடத்திலும் ஸவத்துக்கொள்ளவேண்டுகையாலே, அங்கே அப்பதத்திற்கு என்ன அர்த்தமே அவ்வர்த்தத்தையே இங்கும் சொல்லவேண்டுகையாலே இதுவே பொருளாம். ௩௦௩.

அபி. ௧௪௨. ஸூ॥ ௩௦௪. ததோகோऽக்ரஜ்வலநம் தத்ப்ரகாஶிதத்வாரோ
வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ரு
தியோகாச்ச ஹார்தாநுக்ருஹீத: ஶதாதி
கயா.

(ஶ்ரு-வ்ய) ததோகோऽக்ரஜ்வலநம்=அந்த ஜீவனுடைய ஸ்தாநமாகிய ஹ்ருதயத்தினுடைய அக்ரத்துக்கு (ஹ்ருதயத்திலுள்ள நாடிக்கு) ப்ரகாசமுண்டாகிறது, தத்ப்ரகாஶிதத்வார:=அப்ப்ரகாசத்தினால் ப்ரகாசிக்கிற வழியையுடையவனாகிறான், வித்யாஸாமர்த்யாத்=உபாஸநாமஹிமையினால், தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச=அந்த வித்யைக்கு சேஷமாகிய மார்க்கசிந்தநமுண்டாகையாலும், ஹார்தாநுக்ருஹீத:=ஹ்ருதயவர்த்தியான பரமபுருஷனால் அநுக்ரஹிக்கப் பட்டவனாய்க்கொண்டு, ஶதாதிகயா=நூற்றோராம் நாடியினால் (வெளிக்கிளம்புகிறான்). ௩௦௪.

(ரா-வ்ய) 'வித்யாஸாமர்த்யாத்' உபாஸநத்தின் மஹிமையினுலும், 'தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச' - அந்த வித்யைக்கு அங்கமான அர்ச்சிராதி கதி சிந்தநத்தாலும், "ஹார்தாநுக்ருஹீத:" ஹ்ருதயவர்த்தியான பரமாத்மாவினுல் அநுக்ரஹிக்கப்பட்டவனுகிறுன், (பின்பு), 'ததோக:' – அந்த ஜீவனுடைய ஸ்த்தாநமாகிய ஹ்ருதயம், "அக்ரஜ்வலநம்" – அக்ரத்தில் (நாடீமுகத்தில்) ப்ரகாசிக்கிறது. "தத்ப்ரகாசிதத்வார:"-அதினுல் ப்ரகாசிக்கப்பட்ட வழியையுடையவனுய்க்கொண்டு, "சதாதிகயா" நூற்றேராம் நாடியினுல் (உபாஸகன் உத்க்ரமிக்கிறுன்). ௫0௪.

(ஶ-ஹா) இனி ஸகுணோபாஸகனுடைய கதியை விசாரிக்கிறுர்—புருஷன் மரிக்கும்போது ஹ்ருதயத்திலுள்ள நாடி விளக்குப்போல் உஜ்வலமாகிறது, அதினுல் வழி தெரிகிறது, பின்பு சிரஸ்ஸோ, கண்ணோ, காதோ ஏதோ ஒருவழியினுல் வெளிக்கிளம்பிப்போகிறுனென்று "தஸ்ய ஹைதஸ்ய ஹ்ருதயஸ்யாக்ரம்" இத்யாதிஶ்ருதி சொல்லுகிறது. இது உபாஸகனுக்கும் அநுபாஸகனுக்கும் ஸமாநமாகில், உபாஸகனுடைய உபாஸநத்துக்கும், அவ்வுபாஸகன் நித்யமாக அர்ச்சிராதிகதி சிந்தநம் பண்ணினதுக்கும் ஒரு விசேஷமில்லை ஆகையால் உபாஸகன் ஏதோ ஒருவழியினுல் போகிறதில்லை. பரமாத்மாவினுடைய அநுக்ரஹம்பெற்று ஹ்ருதயத்தில் நின்றும் புறப்பட்டிருக்கிற நாடிகளில் சிரஸ்ஸில் போயிருக்கிற நூற்றேராவது நாடியின் வழியாகவே போகிறுனென்கிறுர். ௫௱௪.

(ரா-ஹா) "ஶதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்த்தாநமபிநிஸ்ஸ்ருதைகா| தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி" என்ற ஶ்ருதி, ஹ்ருதயத்தில் நூற்றெரு நாடியுண்டு, அதிலொன்று சிரஸ்ஸுவழியாகப் புறப்பட்டிருக்கிறது, அந்த நாடிவழியாக மேலேகிளம்பிப்போனவன் முக்தியையடைகிறுன் என்று சொல்லிற்று. அந்த நாடி அதி ஸூக்ஷ்மமாகையாலே அது ஜீவனுல் கண்டு பிடிக்க முடியாதேயென்னில், பரமபுருஷாராதந ரூபமான உபாஸநத்தினுலும், அதுக்கங்கமாக ப்ரதிதிநம் செய்கிற அர்ச்சிராதி கதி சிந்தநத்தாலும் பரமபுருஷன் ப்ரீதனுகிறுன், அவ்வநுக்ரஹத்தினுல் ஜீவனுடைய ஹ்ருதயாக்ரம் தீபம்போல் ப்ரகாசிக்கிறது. அதினுல் அந்த நாடி தெரிகிறது, அதைப்பற்றிக்கொண்டு சிரஸ்ஸுவழியாகவே உத்க்ரமிக்கிறுனென்கிறுர்.

## அதி. ௧௪௩. ஸூ|| ௫௦௫. ரஶ்ம்யநுஸாரீ.

(ஶ-ரா-வ்ய) ரஶ்ம்யநுஸாரீ=ஸூர்யகிரணங்களை யநுஸரித்தவனுய் (உபாஸகன் போகிறுன்). ௫௦௫.

(ஶ-ரா-ஹா) "அதைதைரேவ ரஶ்மிபிரூர்த்வமாக்ரமதே" என்று உபாஸகன் இச்சரீரத்தில் நின்றும் கிளம்பி ஸூர்யகிரணங்களின் வழியாகப் போவதாகச் சொல்லி யிருக்கிறது. (ஶ) இந்த கதி இரவில் மரித்தாலும் பகலில் மரித்தாலும் அந்த கிரணங்களின் வழியாகவே போகிறுனென்கிறுர். (ரா) பகலில் மரித்தால் ஸூர்யகிரணமுண்டு, இரவில் அதில்லை யாகையால் அப்போது மரித்த உபாஸகன் எப்படி போகிறுனென்னில்; இரவிலும் உஷ்ணம் காண்கையாலே அப்போதும் ஸூர்யகிரணங்களுண்டு. சீதகாலத்தில் காணுதிருப்பது – அதிக சீதத்தினுல் அதினுடைய உஷ்ணம்குறைந்து விடுகிறதொழிய அதில்லையென்பதில்லை ஆகையால் இரவில்மரித்த உபாஸகனும் அவ்வழியாகவே போகிறுனென்கிறுர். ௫௦௫.

ஸூ|| ௫௦௬. நிஶி நேதி சேந்ந ஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத் தர்ஶயதி ச.

(ஶ-வ்ரு) நிஶி=ராத்ரியில், ந=ஸூர்யகிரணம் கிடையாது, இதிசேத்= என்னில், ஸம்பந்தஸ்ய=ஸூர்யகிரண ஸம்பந்தத்துக்கு, யாவத்தேஹபாவித்வாத்=சரீரம் முழுமையும் ஸ்த்திதி யுண்டாகையாலே, ந=இல்லையென்பதில்லை, தர்ஶயதி ச=(இதை ஶ்ருதியும்) காண்பிக்கிறது. ௫௦௬.

(ரா-வ்ரு) நிஶி=ராத்ரியில் (மரித்தவனுக்கு) ந=மோக்ஷமில்லை, இதிசேத்=என்னில், ஸம்பந்தஸ்ய=கர்மஸம்பந்தத்துக்கு, யாவத்தேஹபாவித்வாத்=சரீரமுள்ளவரைக்குமே ஸித்தியுண்டாகையால், ந=மோக்ஷமில்லையென்பதில்லை, தர்ஶயதி ச=ஶ்ருதியும் இதைச்சொல்லுகிறது. ௫௦௬.

(ஶ – பா) ராத்ரியில் ஸூர்யகிரண மில்லாமையால் அப்போது மரித்த உபாஸகன் அவ்வழியே போகமுடியாதென்னில்; "அமுஷ்மாதாதித்யாத் ப்ரதாயந்தே" இத்யாதி ஶ்ருதி, சரீரத்திலுள்ள நாடியோடு ஸம்பந்தித்த ஸூர்யகிரணங்கள் ஸூர்யனால் ப்ரகாசித்து ஸூர்யனிடத்தில்போய் ஸம்பந்திக்கிறதுகளென்று சொல்லுகையாலே ஸூர்யகிரணத்துக்கும் சரீரத்துக்கும் ஸம்பந்தம் எப்போது முண்டென்று தோற்றுகையாலே ராத்ரியிலும் ஸூர்ய கிரணமுண்டு, அப்போது மரித்த உபாஸகனும் அவ்வழியாகவே போகிறானென்கிறார். ௫௩௬.

(ரா - பா) "திவாச ஶுக்லபக்ஷஶ்ச உத்தராயணமேவச | மும்மூர்ஷூணாம் ப்ரஶஸ்தாநி விபரீதந்து கர்ஹிதம்" பகல் சுக்ல பக்ஷம் உத்தராயணம் அதில்மரிப்பதே முமுக்ஷுவுக்குச்சிறந்தது. மற்றகாலத்தில்மரிப்பது நிந்த்யமாம், அதாவதுமோக்ஷஹேதுவாகாதென்கையாலே ராத்திரியில்மரித்த உபாஸகனுக்கு மோக்ஷமில்லையேயென்னில்; உபாஸகனுக்கு உபாஸநாபலத்தினால் ஸஞ்சிதகர்மங்கள் நசித்தன, ப்ராரப்தம் அந்த தேகத்தோடே முடிந்து விடுகிறது. ஆகாமி ஒட்டாது. இனி ஸம்ஸாரத்திலிருக்கைக்கு மற்றொரு ஹேதுவும் கிடையாதாகையால் அவனும் முக்தியையே யடைகிறான். "தஸ்ய தாவதேவசிரம்" என்பதே இதற்கு ப்ரமாணம், கீழ்ச்சொன்ன ப்ரமாணம் அநுபாஸகனைப் பற்றினதென்கிறார். ௫௦௬.

கூய். கசு௫ ஸூ|| ௫௦௭. அதஶ்சாயநேபி தக்ஷிணே.

(ஶ ரா-வ்ரு) அதஶ்ச=ஆகையினாலேயே, தக்ஷிணேயநேபி=தக்ஷிணாயநத்தில் (மரித்தவனுக்கும் மோக்ஷமுண்டு). ௫௦௭.

(ஶ-ரா-பா) "அத்யோ தக்ஷிணேன ப்ரதீயந்தே பித்ருணாமேவமஹிமாநம் ஸாயுஜ்யம் கச்சந்தி" என்ற ஶ்ருதி, தக்ஷிணயாநத்தில் மரித்தவன் சந்த்ரனை அடைவதாகச் சொல்லுகையாலும், "கர்மஸு சந்த்ரமஸம் யோ வை கே சாஸ்மால்லோகாத் ப்ரயந்தி" என்ற ஶ்ருதி சந்த்ரலோகம்போனவர்கள் திரும்பி ஸம்ஸாரத்தையே வந்தடைகிறார்க ளென்கையாலும் பீஷ்மர் உத்தராயணம் வருமளவும் ப்ராணனைத் தரித்துக்கொண்டிருந்தபடியாலும் தக்ஷிணயாநத்தில் மரித்தவனுக்கு மோக்ஷமில்லையே யென்னில்; கீழ்ச்சொன்னபடி ஸம்ஸார ஹேதுவான கர்மம் உபாஸகனுக் கில்லாமையாலும், சந்த்ரலோகம்போன உபாஸகனும் அங்கே சிலகாலமிளைப்பாறிப் பின்பு

மோக்ஷம் போகிறானென்று "தஸாத் ஸ்வஸ்யா ஷீயா நாப்னோதி" என்ற மே ல்வாக்யத்தில் தோற்றுகையாலும், தக்ஷிணாயநத்தில் மரித்த உபாஸகனும் மோக்ஷமடைகிறான். தக்ஷிணாயநத்தில் மரணத்தை இகழ்வாகச்சொன்னது அநுபாஸகன்விஷயம். பீஷ்மாசார்யரும் அந்தப்ராசஸ்த்யத்தையே அநுஷ்டித்துக் காண்பித்தாரென்கிறார்.
௰௦௭.

ஸூ|| ௰௦௮. யோகிந: ப்ரதி ஸ்மர்யேதே ஸ்மார்த்தே சைதே.

(ஶ - ஸூ) யோகிந: ப்ரதி=(ஶ்ருதியில் சொல்லப்பட்ட) உபாஸகர்களைக்குறித்து, ஸ்மர்யேதே=அநாவ்ருத்தி சொல்லப்பட்டது, ஏதே=இவை, ஸ்மார்த்தே=ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டவைகள் சங்கரபாஷ்யத்துக்கு, ஸ்மர்யேதே= என்று பாடம்.
௰௦௮.

(ரா-ஸூ) யோகிந: ப்ரதி=உபாஸகர்களைக்குறித்து, ஏதே=இவை, ஸ்மார்த்தே=ஸ்மரிக்கத்தக்கவைகளாக, ஸ்மர்யேதே=ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டன.
௰௦௮.

(ஶ-ரா-ஸூ) "யத்ர காலே த்வநாவ்ருத்திம்" என்று துடங்கி, "ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே"=இத்யாதியினால்கீதையில் உத்தராயணத்தில்மரித்தவன்திரும்பி ஸம்ஸாரமடையான், தக்ஷிணாயநத்தில் மரித்தவன் திரும்பி ஸம்ஸாரத்தையடைவானென்று ப்ரதாநமாக ஆரம்பித்துச் சொல்லியிருக்கிறதேயென்னில், (ஶ) (வேதத்தில் சொன்ன தகராதிவித்யைகளை உபாஸிக்கிறவனுக்கு ஸம்ஸாரமில்லையென்றோம், கீதையில், பகவதாராதந ரூபகர்மம் செய்கிற யோகியையும், கர்த்ருத்வாநுஸந்தாநமில்லாமல் தாரணைசெய்கிற ஜ்ஞாநியையும் குறித்துச்சொல்லிற்று, ஆகையால் விரோதமில்லை) (ர) அங்கு மரணகாலத்தைச் சொல்லவில்லை. தேவயாந பித்ருயாணங்களாகிற இரண்டு மார்க்கத்தையும் உபாஸகன் நித்யமாக அநுஸந்திக்க வேண்டியதைச் சொல்லிற்று. இப்படி அர்த்தம் சொல்வதற்கு ப்ரமாணம். "நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந்" இத்யாதி மேல்வாக்யமென்கிறார்.
௰௦௮.

௨-வது பாதம் முடிந்தது.

---

௩-வது பாதம்.

௯. ௧௪௬. ஸூ|| ௰௦௯. அர்ச்சிராதிநா தத்ப்ரதிதே:.

(ஶ-ரா-ஸூ) தத்ப்ரதிதே:=அதுக்கே ப்ரஸித்தியுண்டாகையாலே, அர்ச்சிராதிநா=(மரித்த உபாஸகன்) அர்ச்சிராதிவழியினால்போகிறான். ௰௦௯.

(ஶ-ரா-ஸா) இதில் உபாஸகன் போம்வழியை நிரூபிக்கிறார்—சாந்தோக்யம் உபகோஸலவித்யையில் "அர்ச்சிஷமேவாபிஸம்பவந்தி அர்ச்சிஷோஹரஹ்ந ஆபூர்யமாணபக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யாந் ஷடுதங்ஙேதி மாஸாம்ஸ்தாந்மாஸேப்ய:

𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌂𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌾𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌂𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌂 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌮𑌾𑌨𑌵𑌸𑍍𑌸 𑌏𑌨𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌗𑌮𑌯𑌤𑌿" என்று உபாஸகன் சரீரத்தில் நின்றும் வெளிக்கிளம்பி க்ரமமாக அக்நி திநம் சுக்லபக்ஷம் உத்தராயணம் வர்ஷம் ஸூர்யன் சந்த்ரன் மின்னல் ஆகிய இவைகளைக் கடந்துபோய், பின்பு அங்குநின்றும், அமாநவனால் பரமாத்மாவை அடைவிப்பிக்கப்படுகிறான் என்றது. கௌஷீதகியில் "𑌅𑌗𑍍𑌨𑌿𑌲𑍋𑌕𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌸 𑌵𑌾𑌯𑍁𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌵𑌰𑍁𑌣𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌮𑍍" என்று, க்ரமமாக அக்நிலோக வாயுலோக வருணலோக ஆதித்யலோக இந்த்ரலோக ப்ரஹ்மலோகங்களைக்கடந்து பரமாத்மாவை யடைகிறானென்றது. இப்படி அநேக இடங்களில் அநேகவிதமாகச் சொல்லி யிருக்கையாலே ஒவ்வோரிடங்களிலும் வெவ்வேறு வழியே சொல்லி யிருக்கையாலே உபாஸகன் அவற்றில் ஏதோ ஒருவழியாகவே போகிறானென்கிறதா, அல்லது இவையெல்லாம் ஒரேவழியாய் அவ்வழியிலேயே எல்லாரும் போகிறார்களென்கிறதாவென்னில்; எல்லா இடங்களிலும் ஸூர்யன் முதலான பெயர்களை அநுகதமாகச் சொல்லி யிருக்கையாலே அவையெல்லாம் ஒரே மார்க்கமென்றே யேற்படுகிறது. உபாஸநம் சொல்லுகிற ப்ரகரணங்களில் ஒவ்வோரிடத்தில் சில சில குணங்களைச் சொல்லியிருந்தபோதிலும் மற்றோரிடத்திற் சொல்லிய குணங்களையும் அவ்வவ இடங்களில் அநுஸந்திப்பதுபோல், இங்கும் அர்சிராதி மார்க்கத்திலுள்ளவைகளையெல்லாம் ஓரிடத்திலே சொல்லாவிடினும் மற்றோரிடத்தில் சொன்னவைகளையும் இங்கும் அநுஸந்தித்துக்கொள்ளவேணும் ஆகையால் அர்சிராதி மார்கமென்பதொன்றே, அதிலேயே உபாஸகர்களெல்லாரும் போகிறார்களென்கிறார். ௫௦௯.

சுஅ. ௪-௩-௨. ஸூ|| ௫௧௦. 𑌵𑌾𑌯𑍁𑌮𑌬𑍍𑌦𑌾𑌦𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍.

(ஶ-ரா-பா) 𑌅𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌂=ஸாமாந்யமாகவும் விசேஷமாகவும் சொல்லுகையாலே, 𑌅𑌬𑍍𑌦𑌾𑌤𑍍=ஸம்வத்ஸரத்தைக் காட்டிலும் மேலே, 𑌵𑌾𑌯𑍁𑌂=வாயுவை, (நிவேசிக்கவேணும்). ௫௧௦.

(ஶ-ரா-ஸா) சாந்தோக்யத்தில, அர்சிராதிவழியில், "𑌮𑌾𑌸𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌂" என்று உத்தராயணத்திற்குப்பிறகு ஸம்வத்ஸரத்தைச் சொல்லி யிருக்கிறது. வாஜஸநேயத்தில், "𑌮𑌾𑌸𑍇𑌭𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌲𑍋𑌕𑌂 𑌦𑍇𑌵𑌲𑍋𑌕𑌾𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂" என்று அவ்விரண்டுக்கும் நடுவில் தேவலோகத்தைச் சொல்லியிருக்கிறது. மற்றோரிடத்தில், "𑌵𑌾𑌯𑍁𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ... 𑌸 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑌿" என்று ஸூர்யனுக்கு முன்னே வாயுவைச் சொல்லியிருக்கிறது. இங்கு ஓரிடத்தில் சொன்னவற்றை மற்றோரிடத்திலும் வைத்துக்கொள்ள வேண்டுகையாலே, உத்தராயணத்துக்கும் ஸூர்யனுக்கும் நடுவில் வாயுவையும் தேவலோகத்தையும் அநுஸந்திக்கவேணும். இவ்விரண்டையும் ஓரிடத்தில் சொல்லவில்லை, ஒவ்வொன்றை ஓரோரிடத்தில் சொல்லியிருக்கிறது. ஆகையால் இவ்விரண்டும் ஒன்றா, அல்லது வேறாவென்று விசாரிக்கில், தேவலோகபதம் வாயுவுக்கும் ஸ்வர்க்கத்துக்குங்கூட வாசகமாகையால் ஸாமாந்யமா யிருக்கும். வாயுபதம் அதையொன்றையே சொல்லும், ஸாமாந்ய பதத்துக்கு விசேஷத்தில் பர்யவஸாநம் ந்யாயமாகையால் தேவலோக பதமும் வாயுவையே சொல்லிற்றாம், இனி அவ்வாயுவை வருஷத்துக்குப் பின்னும் ஆதித்யனுக்கு முன்னும் நிவேசிக்கவேணுமென்கிறார்.

சுஅ. ௪-௩-௩. ஸூ|| ௫௧௧. 𑌤𑌡𑌿𑌤𑍋𑌽𑌧𑌿 𑌵𑌰𑍁𑌣𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍.

(ஶ-ரா-பா) 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍=வருணனுக்கும் மின்னலுக்கும் ஸம்பந்தமுண்

டாகையால், வருண:=வருணன், தடித:அதி=மின்னலுக்குமேலே (நிவேசிக்கப்படுவான்). ௫௧௧.

(ஸூ-பா-ஸா) சாந்தோக்யத்தில், "ஆதித்யாச்சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம் தத்புருஷோ(அ)மாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி" என்று ஸூர்யனுக்கு மேல் சந்த்ரனையும், அதுக்குமேல் வித்யுத்தையும் சொல்லியிருக்கையாலே அந்தபரம் பரையையே அங்கீகரிக்கவேணும், கௌஷீதகியில், 'ஸவாயுலோகம் ஸவருணலோகம் ஸஆதித்யலோகம் ஸ இந்த்ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் ஸ ப்ரஹ்மலோகம்' என்று வாயுவுக்கும் ஸூர்யனுக்கும் மத்தியில் வருணனையும், ஸூர்யனுக்கு மேல்இந்த்ரனையும் ப்ரஹ்மாவையும் சொல்லியிருக்கிறது. இங்குவருணனை அவ்விடத்திலா, மற்றோரிடத்திலா நிவேசிக்கவேண்டுவதென்னில்; வித்யுத் மேகத்தின் நடுவேயுண்டாகையாலும் வருணன் மேகவாஹநனாகையாலும் வித்யுத்துக்கும் வருணனுக்கும் இவ்விதமான ஸம்பந்த முண்டாகையாலே வருணனை வித்யுத்துக்கு மேலே சொல்லவேண்டும். இந்த்ரனையும் ப்ரஹ்மாவையும் அந்தவருணனுக்கு மேலே நிவேசிக்கவேணும். வித்யுத்துக்குப்பின் மூவரிருந்தால் "ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி" என்று அந்த வித்யுத்புருஷனே உபாஸகனை மோக்ஷத்தை அடைவிப்பிக்கிறான் என்கிறவாக்யம் விரோதியாதோ வென்னில், சந்த்ராதிஷ்டானமான தேவதைக்குப்பின், வித்யுததிஷ்டாந தேவதையான அமாநவனென்கிற நித்யஸூரியே உபாஸகர்களைப் பரமபதத்துக் கழைத்துக்கொண்டு போகிறான். வருணன் முதலானவர்கள் அதுக்கு ஸஹாயம் செய்கையாலே அவர்களையும் ஆதிவாஹிகராகச் சொல்லுகிறது என்கிறார். ௫௧௧.

௪அ. ௩பா. ஸூ|| ௫௧௨. ஆதிவாஹிகாஸ்தல்லிங்காத்.

(ஸூ-பா-ப்ர) தல்லிங்காத்=ஆதிவாஹிகரென்பதற்கு ஹேது உண்டாகையாலே, ஆதிவாஹிகா:=(அக்நி முதலானவர்கள்) ஆதிவாஹிகர்கள். ௫௧௨.

(ஸூ-பா-ஸா) அர்ச்சிராதி மார்க்கத்தில் சொல்லப்பட்ட அக்நி திநம் சுக்லபக்ஷம் முதலானவைகள், அவ்வழிக்கடையாளங்களா, அல்லது, போகபூமியா, அல்லது, உபாஸகரைக்கொண்டுவிடுகிற ஆதிவாஹிகராவென்னில்; ஒரு ஊருக்குப்போகிறவனைக்குறித்து, நீ இங்கு நின்றும் புறப்பட்டு இம்மலையையும் அதற்கப்புறமுள்ள இவ்வாற்றையும், அப்புறம் இன்னமரத்தையும், பின்பு இன்ன ஊரையும் கடந்துபோய் அப்புறம் இன்ன ஊரையடையக்கடவாய் என்று வழிக்கு அடையாளங்களைச்சொல்வதுபோல் பரமபதம் போகிறவனுக்கு வழியிலடையாளங்களைச் சொல்லிற்று, இவை அசேதநங்களாகையால் ஆதிவாஹிகராகமாட்டார். லோகத்தில் சேதநராகிய புருஷர்களையே வழிகளில் தூக்கிக்கொண்டுபோகிறவர்களாக நியமிக்கிறார்கள், என்றார் சிலர்—திநம்முதலிய காலங்கள் வழிக்கு அடையாள மாகமாட்டா வாகையால் இவை போகபூமிகளாக வேணும், போகிற உபாஸகர் அங்கங்கே தங்கி இளைப்பாறிப் போகவேணுமென்றதென்றார் சிலர்—"ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி" என்று, உபாஸகரை அந்தவித்யுத்புருஷன் ப்ரஹ்மலோகத்தை அடைவிப்பிக்கிறானென்று சொல்லுகையாலே, அந்த வித்யுத்புருஷனுக்கு முன்னும் பின்னும் சொல்லப்பட்ட அக்நிமுதலானவர்களும் ஆதிவாஹிகரென்பது ஸித்தமென்கிறார் ஸூத்ரகாரர். ௫௧௨.

ஸூ|| உபயவ்யாமோஹாத் தத்ஸித்தே:.

(ஸூ-ப்ர) உபயவ்யாமோஹாத்=இருவர்க்கு மஜ்ஞாந முண்டாகையால்,

தஸ்ஸிஙைஃ=(அக்ந்யாதிகள்) ஆதிவாஹிகரென்பது ஸித்திக்கையாலே, (இது வே சரியானது).

(ஶ்ரு — ஹா) இந்த பாஷ்யத்தில் இந்த ஸூத்ரம் அதிகமாகக்காண்கிறது. அர்ச்சிராதியான வழியும் அசேதநமாகில், அவ்வழியில் போகிற உபாஸகனும் அப்போது கரணகளேபரங்கள் சுருங்கிக்கிடக்கையாலே ஸ்வதந்த்ரமாகப்போகச் சக்தியற்றவனுகையால், இவனை யொருவன் தூக்கிக்கொண்டு போயேவிடவேண்டும், ஆகையால் அவ்வழியில் அக்நி முதலாகச் சொல்லப்பட்டவர்கள், அக்ந்யாதி தேவதைகளென்பது ஸித்தம். அவர்களால் உபாஸகன் அடைவிப்பிக்கப் படுகிறனென்கிறார். ௫௧௨.

ஸூ|| ௫௧௩. வைத்யுதேநைவ ததஸ்தச்ச்ருதேஃ.

(ஶ்ரு-ரா-வ்ய-ஹா) தச்ச்ருதேஃ-("ஸஏநாந்ப்ரஹ்ம கமயதி" அந்த வித்யுத்புருஷன் இந்த உபாஸகர்களை ப்ரஹ்மத்தை அடைவிப்பிக்கிறான் என்கிற) அந்த ஶ்ருதியினாலே, ததஃ=வித்யுத்துக்குப் பின்பு, வைத்யுதேநைவ= வித்யுத்புருஷனாலேயே (உபாஸகன் ப்ரஹ்மத்தை யடைகிறான். அதற்கு மேலுள்ள வருணனும், இந்த்ரனும், ப்ரஹ்மாவும், அந்த வித்யுத்புருஷனுக்கு ஸஹாயம் செய்கிறார்களென்று கருத்து). ௫௧௩.

௩யி_ கரு௦. ஸூ|| ௫௧௪. கார்யம்பாதரிரஸ்ய கத்யுபபத்தேஃ.

(ஶ்ரு-ரா-வ்ய) அஸ்ய=இந்த உபாஸகனுக்கு, கத்யுபபத்தேஃ=கமநம் உபபந்நமாகையாலே, கார்யம்=கார்யமான (ரா) சதுர்முகப்ரஹ்மாவை (ஶ்ரு) (ஸகுணப்ரஹ்மத்தை), (உபாஸநம்செய்கிறவனையே ஆதிவாஹிகர்கள் அடைவிப்பிக்கிறார்கள் என்று), பாதரிஃ=பாதரியென்பவர் (சொல்லுகிறார்).

(ஶ்ரு — ஹா) ஸகுணப்ரஹ்மோ பாஸகரென்றும் நிர்குணப்ரஹ்மோ பாஸகரென்றும் உபாஸகரிருவர். ஸகுணவித்யாநிஷ்டர் ஸகுணப்ரஹ்மத்தையும், நிர்குணவித்யாநிஷ்டர் நிர்குணப்ரஹ்மத்தையு மடைகிறார்கள், கீழ் அக்ந்யாதி ஆதிவாஹிகர்கள், இவ்விரண்டில் எந்த ப்ரஹ்மத்தை யடைவிப்பிக்கிறார்கள் என்னில்; இரண்டாவனுக்கு ப்ராப்யம் நிர்குண ப்ரஹ்மம், அது எங்கும் நிறைந்ததாகையால் அதைத்தேசாந்தரம் போய் அடைவதென்பது அநுசிதம். ஆகையாலவனை அடைவிப்பிக்கிறதில்லை, முதலவன் தனக்கு ப்ராப்யமான ஸகுணப்ரஹ்மத்தைத் தேசாந்தரத்திலே போயநுபவிக்க வேண்டியவனாகையால் இவனையே ஆதிவாஹிகர் ஸகுணப்ரஹ்மத்தை யடைவிப்பிக்கிறார்களென்று பாதரி சொன்னார். இதுவே ஸித்தாந்தியின் மதம். ௫௧௪.

(ரா — ஹா) சதுர்முகப்ரஹ்மோபாஸகர் பரிசுத்த ஜீவாத்மஸ்வரூபோபாஸகர், பரமாத்மோபாஸகரென்று உபாஸகர்மூவர், இவர்களுக்குத் தாங்களுபாஸிக்கிற ஸ்வரூபமேதங்கள் தங்களுக்கு ப்ராப்யமாயிருக்கும். இவர்களில் யாரை ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்களென்று விசாரிக்கில்; பரமாத்மோபாஸகனுக்கு ப்ராப்யமான ஸ்வரூபம் எங்கும் நிறைந்திருக்கையாலே அதற்காக தேசாந்தரம் போகவேண்டுவதில்லை, அவனுக்கு அவித்யா நிவ்ருத்தி மாத்ரமே வேண்டுவது, முதல்வனுக்கு ப்ராப்யமான ஸ்வரூபம் தேசாந்தரத்திலே யிருக்கையால் அவனேபோகவேண்டியவன். அவனையே ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்களென்று பாதரிமதம் இது பூர்வபக்ஷிமதம். ௫௧௪.

ஸூ॥ ௫௧௫. விஶேஷிதத்வாச்ச.

(ஶ்ரீ-பா-வ்ய) விஶேஷிதத்வாச்ச = (பஹுவசநங்களினால் ப்ராப்யத்தை) வ்யாவர்த்திக்கையாலும், (இவ்வர்த்தமே உண்மை). ௫௧௫.

(ஶ்ரு - வ்ய) "ப்ரஹ்மலோகாநபிஸம்பத்யதே தேஷு ப்ரஹ்மலோகேஷு பரா: பராவதோ வஸந்தி" என்றவிடத்தில் "ப்ரஹ்மலோகேஷு" என்று ப்ராப்யவஸ்துவை லோகமென்கையாலும் "ப்ரஹ்மலோகங்களிலே" என்று பஹுவாகச் சொல்லுகையாலும், அவற்றை ஆதாரமாகச்சொல்லுகையாலும், நிர்குணப்ரஹ்மம் லோகமன்றாகையாலும், அநேகமும் ஆதாரமுமன்றாகையாலும், முதல்வனுக்கு ஸகுணப்ரஹ்மம்போல் அதினுடைய லோகமும் ப்ராப்யமாய், அந்தலோக மநேகமாய் ஆதாரமா யிருக்கையினாலும் ஸகுணப்ரஹ்மத்தையே அடைவிப்பிக்கிறார்களென்கிறார். ௫௧௫.

(பா-ஸா) "ப்ரஜாபதே: ஸபாம் வேஶ்ம ப்ரபத்யே" என்று அர்ச்சிராதிவழியாகப்போனவன், ப்ரஜாபதியின் ஸபையையடைகிறானென்று ஹிரண்யகர்ப்பனை ப்ரஹ்மாவை யடைவதாகத்தா னநுஸந்திக்கையாலும் ஆதிவாஹிகர் ஹிரண்யகர்ப்பனிடத்திலேயே அடைவிப்பிக்கிறார்களென்கிறார், ௫௧௫.

ஸூ॥ ௫௧௬. ஸாமீப்யாத்து தத்வ்யபதேஶ:.

(ஶ்ரீ-பா-வ்ய) ஸாமீப்யாத்=ஸமீபத்திலிருக்கையாலே, தத்வ்யபதேஶ:= "ப்ரஹ்ம" என்று சொல்லக்கூடும். ௫௧௬.

(ஶ்ரீ பா-ஸா.) "ப்ரஹ்மகமயதி" என்று ப்ரஹ்மபதம் நபும்ஸக லிங்கமாக இருக்கையால், அது பரப்ரஹ்மத்தைச் சொல்லுமொழிய மற்றொன்றைச்சொல்லாது. அப்போது புல்லிங்கமாய் "ப்ரஹ்மாணம் கமயதி" என்றிருக்கவேணுமேயென்னில்,(ஶ்ரு) நிர்குணப்ரஹ்மமே உபாதியோடுகூடி ஸகுணமாகையாய் (பா) "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" என்று பரப்ரஹ்மத்துக்குஆதிஸ்ருஷ்டியாய், அதுக்கு அடுத்த கீழ்ப்படியில் இருக்கையாலே அந்த ஸாமீப்யத்தைப்பற்றி அதைச்சொல்லுகிற சப்தத்தினால் இதைச்சொல்லிற்றென்கிறார். ௫௧௬.

ஸூ॥ ௫௧௭. கார்யாத்யயே தததயக்ஷேண ஸஹாத: பரமபிதாநாத்.

(ஶ்ரீ-பா-வ்ய) கார்யாத்யயே=கார்யமான ப்ரஹ்மலோகத்தினுடைய நாசகாலத்தில், ததத்யக்ஷேண ஸஹ=அதுக்கு ஸ்வாமியாகிய சதுர்முகனோடுகூட, அத: பரம்=இதைக்காட்டிலும் மேலான ப்ரஹ்மஸ்வரூபத்தை (அடைகிறார்கள் என்று) அபிதாநாத்=சொல்லுகையாலே (விரோதமில்லை). ௫௧௭.

(ஶ்ரீ-பா-ஸா) அர்ச்சிராதி கதியினால் போனவனுக்கு "இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே" என்று புநராவ்ருத்தி யில்லை யென்பதாகச் சொல்லிற்று, கார்ய ப்ரஹ்மலோகம் நித்யமன்று, சிலநாள் கழித்தபின் நசித்துவிடு மாகையால் கார்ய ப்ரஹ்மத்தை யடைவதாக அந்த ஶ்ருதி சொல்லுகிறதென்பது சரியன்றென்னில்; உபாஸ

கன் கார்யப்ரஹ்மலோகத்தில் போயிருந்து, அங்கே தத்வஜ்ஞானத்தைப்பெற்று அந்த லோகம் நசிக்கும்போது அதுக்கதிபதியான ப்ரஹ்மாவுடன்கூட ஸர்வோத்தமமாகிய விஷ்ணு ஸ்வரூபத்தை யடைகிறார்களென்கையாலே கீழ்ச்சொன்ன ஸ்ருதிக்கு விரோதமில்லை யென்கிறார். ("கூ௵ா நாகு" புநராவ்ருத்தியில்லை யென்கையாலே, இவ்வர்த்தத்தை இப்படியே நிஸ்சயிக்க வேணுமென்று அப்பதத்தை வாசகமாக சங்கரபாஷ்யத்தில் கண்டுகொள்வது). ௰கஎ.

ஸூ|| ௰க௮. ஸ்மூதெஶு.

(ஶ-ரா-வ்ய-ஸா) ஸ்மூதெஶ்வ - (ஸ்ரு ...) என்கிற) ஸ்ம்ருதியினாலும், (கார்யப்ரஹ்மத்தை யடைந்தவர்கள் அந்த ப்ரஹ்மத்தின் அவஸாந காலத்தில் அந்த லோகம் நசிக்கும்போது, தத்வஜ்ஞானத்தைப்பெற்று அந்த ப்ரஹ்மாவுடன்கூட பரஸ்வரூபத்தை யடைகிறார்களென்பது ஸித்தம்) ஆகையால் ஆதிவாஹிகர் கார்ய ப்ரஹ்மத்தை அடைவிப்பிக்கிறார்களென்கிறார். ௰க௮.

ஸூ|| க௰௯. பரஂஜைஜிநிர்முக்யகாஜ.

(ஶ-ரா-வ்ய) ஶுவ்யகாஜ=(ப்ரஹ்மசப்தம்) முக்யமாகையாலே, வரஂ= பரப்ரஹ்மத்தை (உபாஸிக்கிறவனையே ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்கள் என்று) ஜைஜிநிஃ=ஜைமினி சொன்னார். ௰க௯.

(ஶ-ரா-ஸா) சங்கரபாஷ்யத்துக்கு, கீழ் ஐந்து ஸூத்ரங்களும் ஸித்தாந்த ஸூத்ரங்கள். இனி மூன்று ஸூத்ரங்கள், அந்த ஸித்தாந்தத்துக்கு முன்னே சொல்ல வேண்டிய பூர்வபக்ஷத்தின் அர்த்தத்தைச் சொல்லுகின்றன. ராமாநுஜ பாஷ்யத்துக்கு இவ்வெட்டும் பூர்வபக்ஷ ஸூத்ரங்களென்று கண்டுகொள்க.—இனி ஜைமினி சொல்லுகிறார்—"ஸ்ரஹ்மஶயதி" என்ற விடத்தில் நபும்ஸக லிங்கமான ப்ரஹ்ம சப்தம் பரப்ரஹ்மத்தில் முக்யமாகையாலும், அந்த பரப்ரஹ்மம் ஸர்வவ்யாபியாயினும், உபாஸகனுக்கு, யாகாதி ஸஹகாரிகளினால் உபாஸநோத்பத்திபோல், அவித்யா நிவ்ருத்தி ரூபமோக்ஷமும் பரமபதமென்கிற தேசாந்தரத்தில் போனபின்பே யுண்டாமென்பது சாஸ்த்ரஸித்தமாகையாலும், பரப்ரஹ்மம்போல் அதினுடைய மஹிமையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட அத்யத்புதங்களாய் சாஸ்த்ரஸித்தங்களாயிருக்கிற அநேகலோகங்களும் ப்ராப்யமாகையாலே, "ஸ்ரஹ்மலொகாநு" என்கிற லோகசப்த பஹுவசநங்களுக்கு விரோத மில்லாமையாலும் பரப்ரஹ்மத்தை ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்களென்பதே உசிதமென்று ஜைமினி சொன்னார். ௰கக.

ஸூ|| ௰௨௦. உஶநாவு.

(ஶ-ரா-வ்ய-ஸா) உஶநாஜ்வ- ("ஏஷஸஂப்ரஸாதொஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரஂஜ்யோதிருபஸஂபத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே"- இந்த ஜீவன் சரீரத்தில் நின்றும் வெளிக்கிளம்பி பரமாத்மஸ்வரூபத்தையடைந்து அவித்யாவிநிர்முக்தனாய் ஸ்வஸ்வரூபத்தை யடைகிறானென்று) ஶ்ருதி சொல்லுகையாலும் (இதுவே உபபந்நம்). ௰௨௦.

ஸூ|| ௰௨௧. ந ச கார்யே ப்ரதிபத்த்யபிஸந்தி:.

(ஸ-ரா-ப) கார்யே=கார்யப்ரஹ்ம விஷயமான. ப்ரதிபத்த்யபிஸந்தி:=ப்ரத்ய பிஜ்ஞை, ந=கிடையாது. ௰௨௧.

(ஸ-ரா-ஸா) "ப்ரஜாபதே: ஸபாம் வேஸ்ம ப்ரபத்யே" என்று உபாஸகன் சதுர்முகப்ரஹ்மானுஸந்தானம்பண்ணுகையால் இதுகார்யப்ரஹ்மவிஷயமென்பது சரியன்று. மேல்வாக்யத்தில், "யஸோஹம் பவாமி ப்ராஹ்மணாநாம்" என்று ஸகலாவித்யைகளும்நசித்து பின்பு, ஸர்வம்பரமாத்மஸ்வரூபமென் றநுஸந்திக்கையாலும், "அஸ்வ இவ ரோமாணி விதூய பாபம்" குதிரைமயிரை உதறுவதுபோல்பாபத்தை உதறி, ராகுவினால் விடப்பட்ட சந்திரன்போல் சரீரத்தைவிட்டு நித்யமான ப்ரஹ்மலோகத்தை யடைகிறானென்று ஸாக்ஷாத் அவித்யா நிவ்ருத்தியைச்சொல்லி ப்ராப்ய தேசத்தைநித்யமாகவும் சொல்லுகையாலே அது பரமாத்மவிஷயம் ஆகையால் பரப்ரஹ்மப்ராப்தியையே சொல்லிற்றென்கிறார். ௰௨௧.

ஸூ|| ௰௨௨. அப்ரதீகாலம்பநாந் நயதீதி பாதராயண உபயதா ச தோஷாத் தத்க்ரதுஸ்ச.

(ஸ-ரா-ப) உபயதா=(கீழ்ச்சொன்ன)இரண்டுவிதத்திலும், தோஷாத்=தோஷமுண்டாகையாலே, (ஸ) (உபயதா=இரண்டுவிதமாகச்சொல்லிலும், அதோஷாத்=தோஷமில்லாமையாலே) தத்க்ரது:ச=உபாஸகன் உபாஸனானுகுணமான பலத்தையடைகிறான், அப்ரதீகாலம்பநாந்=ப்ரதீகோபாஸகனன்றிக்கே மற்றஉபாஸகர்களை, நயதி=(ஆதிவாஹிகன்) அடைவிப்பிக்கிறான், இதி=என்று, பாதராயண:=பாதராயணர் சொல்லுகிறார். ௰௨௨.

(ஸ - ஸா) ஸகுணோபாஸகனையே ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்களென்று கீழ்சொல்லிற்று. இதில் ஸகுணோபாஸக ரெல்லாரையும் அடைவிப்பிக்கிறார்களா, அல்லது சிலரையாவென்னில்; எவ்விதமாக உபாஸிக்கிறானோ, அவ்விதமாகவே பலத்தை யடைகிறான், ப்ரதீகோபாஸநத்தில் மநஸ்ஸு நாமம் முதலிய ப்ரதீகமே உபாஸ்யமாகிறது. ப்ரஹ்மம் உபாஸ்யமாகிறதில்லை. ஆகையால் அதினால் ப்ரஹ்மப்ராப்தி கிடையாது. ப்ரஹ்மப்ராப்தி யுள்ளவனுக்கே அர்ச்சிராதிகதியுண்டு, ஆகையால் ப்ரதீகோபாஸகனை ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறதில்லை. ஆகில் "அநியமஸ்ஸர்வாஸாம்" என்கிறத்தோடு விரோதியாதோவென்னில்; ப்ரதீகோபாஸகர்க்கு அர்ச்சிராதிகதியில்லை, மற்றவர்க்குண்டென்று இரண்டுவிதமாக ஒப்புக்கொண்டபோதிலும் அநியமத்தை மற்றவர்கள் விஷயமாகச்சொல்லில் தோஷம்வராதென்கிறார். ௰௨௨.

(ரா - ஸா) இவ்விரண்டு மதத்தையும் நிரஸிக்கிறார்,—அவ்விரண்டு மதமும் சரியன்று, சதுர்முக ப்ரஹ்மோபாஸகனைச் சொல்லும் பக்ஷத்தில் "ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச் சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" இந்த ஜீவன் இந்த சரீரத்தில் நின்றும் கிளம்பி ப்ரஹ்மத்தை யடைந்து ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவத்தை யடைகிறானென்ற வாக்யம் சரிப்படாது. சதுர்முகனை யடைந்தவனுக்கு ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவம் கிடையாது. பரமாத்மோபாஸகனைமாத்ரம் சொல்லில் "யே சேமே அரண்யே ஸ்ரத்தாம் தப இத்யுபாஸதே தேர்ச்சிஷமபிஸம்பவந்தி"

என்று பஞ்சாக்நிவித்யோபாஸகனுக்கு அர்ச்சிராதிகதி சொல்வதுசரிப்படாது, ஆகையால், பரமாத்மோபாஸகனையும், கேவல பரிசுத்த ஜீவாத்மஸ்வரூபோபாஸகனையும் இவ்விருவரையும் ஆதிவாஹிகர் அடைவிப்பிக்கிறார்கள். ப்ரதீகோபாஸகனை அடைவிப்பிக்கிறதில்லை, அர்ச்சிராதி கதியினால் போனவனுக்கு பரமாத்மஸ்வரூபமும் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மஸ்வரூபமுமே ப்ராப்யமாகிறது. ப்ரதீகோபாஸகனுக்கு இவ்விரண்டும் கிடையாது. "யதாக்ரதுரஸ்மிந்லோகே புருஷோ பவதி" இத்யாதி ஶ்ருதி இங்கே எதை எவ்விதமாக உபாஸிக்கிறானோ, அங்கேபோய் அதை அவ்விதமாகவே அநுஸந்திக்கிறானென்கிறது. பரமாத்மோபாஸகன் ஸ்வாத்மக ப்ரஹ்மத்தையும் பஞ்சாக்நிவித்யோபாஸகன் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாவையும் உபாஸிக்கையாலே அங்கே சென்று அவ்விதமான அநுபவத்தையே பண்ணுகிறார்கள். ப்ரதீகோபாஸகன் நாமாதிப்ரதீகத்தில் ப்ரஹ்மபுத்தி, அதாவது – அவற்றை ப்ரஹ்மமாக நினைத்து உபாஸநம்பண்ணுகிறான். அவ்வுபாஸநத்தில் விசேஷ்யமாயாவது விசேஷணமாயாவது ப்ரஹ்மம் தோற்றுகிறதில்லை யாகையால் அவனுக்கு ப்ரஹ்மாநுபவமும் அதுக்குக் காரணமாகிய அர்ச்சிராதி கதியும் கிடையாதென்று ஸித்தாந்தம். ௰௨௨.

ஸூ|| ௰௨௩. விஶேஷம்ச தர்ஶயதி.

(ஸ-ரா-ஸா) விஶேஷம்ச=(இதரோபாஸநங்களைக்காட்டிலும்) வ்யாவ்ருத்தியையும், தர்ஶயதிச=ஶ்ருதி காண்பிக்கிறது. ௰௨௩.

(ஸ-ரா-ஸா) நாமம் வாக்கு மநஸ்ஸு முதலிய ப்ராண பர்யந்தமான ப்ரதீகோபாஸநங்களில், நாமோபாஸநத்தைக்காட்டிலும் வாகுபாஸநத்துக்கு, அதைக்காட்டிலும் மந உபாஸநத்துக்கு இப்படி மேலே போகப்போக ஒன்றைக்காட்டிலு மொன்றுக்கு பலமதிகமாகச் சொல்லி யிருக்கிறது. ப்ரதீகங்க ளொன்றுக்கொன்று ந்யூநாதிகங்களாகையாலே பலத்திலும் பேதமிருக்கிறது. ப்ரஹ்மம் ஸர்வோத்க்ருஷ்டமாய் ஏகரூபமாயிருக்கையாலே அதில் பலபேதம் கிடையாது. இதுக்கு அர்ச்சிராதி கதியில்லாமலே பலாநுபவம் சொல்லியிருக்கிறது. (ஈா) ஆகையால் ப்ரதீகோபாஸகனுக்கு அர்ச்சிராதிகதியில்லை. பரமாத்மோபாஸகனுக்கும் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனுக்குமே அர்ச்சிராதிகதி யுண்டென்று ஸித்தாந்தம். ௰௨௩.

௪ – வது அத்யாயத்தில்

௩ - வது பாதம் முடிந்தது.

## ௪ - வது பாதம்.

௩௰. ௧௫௪. ஸூ|| ௰௨௪. ஸம்பத்யாவிர்பாவஃ ஸ்வேநஶப்தாத்.

(ஸ-ரா-வ்ரு) ஸ்வேநஶப்தாத்=ஸ்வேந என்கிற சப்தத்தினால் (விசேஷிக்கையாலே), ஸம்பத்ய=(பரமாத்மாவைக்) கிட்டி, ஆவிர்பாவஃ=ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவம் (ப்ரதிபாதிக்கப்படுகிறது). ௰௨௪.

(ஸ-ரா-ஸா) இப்பாதத்தில் முக்தைஶ்வர்யத்தை நிரூபிப்பதாக, முன்பு இவ்வதிகரணத்தில் முக்தஸ்வரூபத்தை நிரூபிக்கிறார்-"ஏஷஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" இச்சரீரத்தை விட்டுப்போய் பரமாத்மாவை யடைந்து ஸ்வஸ்வரூபத்தோடு கூடினவனாகிறானென்ற விடத்தில், ஸ்வர்க்க மடைந்தவனுக்கு தேவாதிரூப முண்டாவதுபோல் முக்தனுக்கு அங்கொரு ரூபமுண்டாகிறதென்றதா, தனக்குஸ்வாபாவிகமாக உள்ள ஸ்வரூபமே ப்ரகடமாயிற்றென்றதாவென்னில்;

மோக்ஷமும் பலமாகையாலே அங்கே வேறொரு ரூபம் வருகிறதென்றே சொல்லவே ணும், என்றான் பூர்வபக்ஷி—அங்கு வேறொரு ரூபமுண்டாகும் பக்ஷத்தில் "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" ரூபத்தோடுகூடினவனாகிறா னென்பதே பொருளாயிருக்க, "ஸ்வேந" தன்னுடைய ஸ்வாபாவிகமான ரூபத்தோடே என்பதற்கு ப்ரயோஜநமில்லை. ஆகையால் முக்தன் ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவத்தை யடைகிறானென்றே அந்த ஶ்ருதி சொல்லுகிறதென்று விதித்தார்த்தம். ௱௨௪.

ஸூ|| ௱௨௫. முக்த: ப்ரதிஜ்ஞாநாத்.

(ஶ்ரீ-பா-வ்யா) ப்ரதிஜ்ஞாநாத்=(முக்தநிரூபணத்தையே) ப்ரதிஜ்ஞைபண்ணுகையாலே, முக்த:=ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டவனே (இங்கு ப்ரதிபாதிக்கப்படுகிறான். ௱௨௫.

(ஶ்ரீ-பா-ஸா) ஸ்வாபாவிகமான ரூபம் எப்போது முள்ளதாகையால் அது பலமாகாது. "அபிநிஷ்பத்யதே" என்பதற்கு உண்டாகிறானென் றர்த்தமாகையால் அதுவும் ஸ்வரூபாவிர்ப்பாவ பக்ஷத்தில் சரிப்படாது. என்னில்; ரோகம் போனபின் "அரோகோ நிஷ்பத்யதே" ரோக மற்றவனாக ஆகிறானென்று உத்பத்தி யில்லாத இடத்திலும் கூட ப்ரயோகிக்கையாலே இங்கு அவித்யா நிவ்ருத்தியைச் சொல்லக்கூடு மாகையால் அதுக்கு விரோத மில்லை. "இது விதித்தது" என்ன வேண்டிய இடத்தில் "இது நிஷ்பந்நமாயிற்று" என்கையாலே, நிஷ்பத்தி யென்று விதிக்கும் பேராய், ஸ்வஸ்வரூபம் விதித்த தென்றர்த்தம். "ஏதம் த்வேவ தே பூயோऽநுவ்யாக்யாஸ்யாமி" என்று ஜாகரிதஸ்வப்ந ஸுஷுப்தி என்றமூன் றவஸ்த்தையில் நின்றும் விடுபட்டவனாய், ஸம்ஸாரஹேதுவான கர்மம் சரீரஸம்பந்தம் முதலியவற்றினால் விடப்பட்டவனான ஜீவஸ்வரூபத்தைச் சொல்லுவதாக ஆதியில் ப்ரதிக்ஞை பண்ணுகையாலே, இங்கு அநாதியான ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டு ஸ்வஸ்வரூபத்தோடிருக்கிறவனையே இங்குச்சொல்லிற்றென்கிறார். ௱௨௫.

ஸூ|| ௱௨௬. ஆத்மா ப்ரகரணாத்.

(ஶ்ரீ-வ்யா) ப்ரகரணாத்=ஆத்மப்ரகரணமாகையாலே, ஆத்மா=(ஜ்யோதிஶ் ஶப்தத்தினால்) ஆத்மா (சொல்லப்படுகிறான்). ௱௨௬.

(பா-வ்யா) ப்ரகரணாத்=ஆத்மப்ரகரணமாகையாலே; ஆத்மா=(பரமபுருஷார்த்தரூபமான) ஆத்மா (ப்ரதிபாதிக்கப்படுகிறான். ௱௨௬.

(ஶ்ரீ-ஸா) "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" ஜ்யோதிஸ்ஸை யடைந்து என்கையாலே, ஜ்யோதிஸ்ஸாவது பஞ்சபூதங்களிலொன்றானதேஜஸ்ஸாகையாலே, இவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்த முண்டென்று தோற்றுகிறது. ஆகையால் இங்கு முக்தனைச் சொல்லவில்லையேயென்னில்; "தம் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்று பரமாத்மாவையும் ஜ்யோதிஸ்ஸென்று சொல்லுகையாலும், "ய ஆத்மாऽபஹதபாப்மா" என்று ஆத்மாவைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே நடுவில் பௌதிகமான தேஜஸ்ஸைச்சொல்வ தநுசிதமாகையாலும் "பரஞ்ஜ்யோதி:" என்று பரமாத்மாவைச் சொல்லிற்றாகையால் அவனை யடைந்த முக்தனையே இங்குச்சொல்லுகிறதென்கிறார். ௱௨௬.

(ரா — ஹா) ஸ்வஸ்வரூபம் ஸுஷுப்தியிலு முண்டாகையால் அப்போது புருஷார்த்தமாகக் காணுமையால், ஸ்வரூபாவிர்ப்பாவம் மோக்ஷமென்ற சாஸ்த்ரம் புருஷார்த்த ப்ரதிபாதகமாகாதேயென்னில்; ஆத்மஸ்வரூபம் அபஹதபாப்மத்வாதி குணங்களையுடையதாய் நிரதிசயாநந்த ரூபமாயிருக்கும். அந்த ஸ்வரூபம் அநாதியான அவித்யையினால் மறைந்திருக்கையால் ஸுஷுப்த்யாதிகளில் தோற்றாது. பரமாத்மாவை யடைந்தபின் அவித்யை கழிகையாலே ஸ்வாபாவிகமான ரூபம் ப்ரகாசிக்கிறது. இவனுக்கு இதுவேஸ்வரூபமென்பது-"ய ஆத்மாऽபஹதபாப்மா விஜர:" இத்யாதி வாக்யங்களினால் ஸித்திக்கிறது. இவ்விதமான ஸ்வரூபம் நிரதிசயபுருஷார்த்தரூபமாகையால், சாஸ்த்ரம் புருஷார்த்த ப்ரதிபாதகமாகக் குறையில்லை யென்கிறார். ௩உ௬.

சுயி கருஉ. ஸூ॥ ௩உ௭. அவிபாகேந த்ருஷ்டத்வாத்.

(ஸ-ரா-வ்ய) த்ருஷ்டத்வாத் = (ஸ்வஸ்வரூபம்) காணப்பட்ட தாகையாலே, அவிபாகேந = விபாகமின்றியே (அநுஸந்திக்கிறான்).        ௩உ௭.

(ஸ-ரா-ஹா) ஜீவன் முக்தனானபின் தன்னை எவ்விதமாக அநுஸந்திக்கிறானென்னில்; "ஸோऽச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா" ப்ரஹ்மத்தோடகூடினவனாய்க்கொண்டு ஸமஸ்தகாமங்களையும் அநுபவிக்கிறானென்கையாலும். "பரமம் ஸாம்யமுபைதி" என்று இவனைப்பரமாத்மாவோடு ஸமானனாகச் சொல்லுகையாலும் பரமாத்மாவைப்போல் தன்னையு மொருவனாக வேறாக அநுஸந்திக்கிறான் என்றுபூர்வபக்ஷம்— (ரா) ஆத்மா பரமாத்மாவுக்குச் சரீரமாய் எப்போதும் அவனோடு சேர்ந்தேயிருக்கும். இதுஸம்ஸாரதசையில் அஜ்ஞாநத்தினால் காண்கிறதில்லை. அதினால் தன்னையும் பரமாத்மாவையும் வெவ்வேறாகப் பார்க்கிறான். பரமாத்மோபாஸநத்தினால் அவ்வஜ்ஞாநம் நசித்தபின் யதாவஸ்த்திதமான ரூபம் காண்கையாலே பரமாத்மாவையும் தன்னையும் வெவ்வேறாகக்காண்கிறதில்லை. அவனுக்குச் சரீரமான தன்னை அவனோ டொன்றாக்கியே அநுஸந்திக்கிறான், (ஸ) (அநாதியான அஜ்ஞாநத்தினால் கல்பிதமான பரமாத்மாவுக்கும் தனக்குமுண்டான பேதம் தத்வஜ்ஞாநத்தினால் நசித்தபின் ஸ்வாபாவிகமான அபேதமே காண்கையாலே தன்னைப் பரமாத்மஸ்வரூபமாகவே அநுஸந்திக்கிறான்) "ஸோऽச்நுதே" என்ற ச்ருதிக்கு, பரமாத்மாவோடகூட, அதாவது பரமாத்மாவையும் அவனுடைய குணங்களையும் அநுபவிக்கிறானென்றர்த்தம், பரமாத்மாவோடு ஸமானமாக இருக்கிறானென்பதற்கு, ஸிம்ஹம் போன்ற புருஷன் ஸிம்ஹத்தைக்காட்டிலும் வேறுபட்டிருப்பதுபோ லிருக்கிறானென்றர்த்தமன்று, பரமாத்மாவுக்குள்ள அபஹதபாப்மத்வாதி குணங்களும் இவனுக்குண்டென்றர்த்தம் ஆகையா லதுக்குவிரோத மில்லையென்று ஸித்தாந்தம்.        ௩உ௭.

சுயி. கருஅ. ஸூ॥ ௩உ௮. ப்ராஹ்மேண ஜைமிநிருபந்யாஸாதிப்ய:.

(ஸ-ரா-வ்ய) உபந்யாஸாதிப்ய:=உபந்யாஸம் (சொல்லுகை) முதலானவற்றினால், ப்ராஹ்மேண=ப்ரஹ்ம ஸம்பந்தியான குணத்தோடு, (முக்தியில் ஆவிர்ப்பவிக்கிறான்).        ௩உ௮.

(ஸ-ரா—ஹா) முக்தியில் ஜீவனுக்கு அபஹதபாப்மத்வாதி குணங்களா, அல்லது சைதந்ய ஸ்வரூபம்மாத்ரமா, இரண்டுமா ஆவிர்ப்பவிக்கிறதென்னில்; ப்ரஜாபதிவாக்யத்தில் ஜீவனுக்கு "அபஹதபாப்மா" என்று தடங்கி "ஸத்யஸங்கல்ப:" என்னுமளவாக, ப்ரஹ்மத்துக்குண்டான அபஹதபாப்மத்வம் ஜ்ஞாநம் ஸத்யகாமத்வம் முதலிய குணங்களைச்சொல்லுகையாலே அக்குணங்களே ஆவிர்ப்பவிக்கின்றன, ஜ்ஞாநம்

ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்று, ஆகில் அதில் குணங்களிருக்கமாட்டா, இதனால் அது ஜடம் என்னவேண்டு மாகையால் ஜ்ஞாநஸ்வரூபத்துக்கு ஆவிர்ப்பாவம் கிடையாதென்றார் ஜைமிநி. ௫௨௮.

ஸூ|| ௫௨௯. சிதிதந்மாத்ரேண ததாத்மகத்வாதித்யௌடுலோமி:.

(ஸ-ரா-வ்ரு) ததாத்மகத்வாத்=சைதந்யமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலே, சிதிதந்மாத்ரேண=சைதந்யமாத்ர ஸ்வரூபத்தோடு (ஆவிர்ப்பவிக்கிறான், இதி=என்று, ஔடுலோமி:=ஔடுலோமி சொல்லுகிறார். ௫௨௯.

(ஸ-ரா-ஸா) "ஸ யதா ஸைந்தவகந:" என்று தொடங்கி, "விஜ்ஞாநகந ஏவ" என்னு மளவாக, உப்புக்கட்டி உள்ளும்புறம்பும் எங்குமொக்க வேறொரு ரஸம் கலப்பின்றிக்கே உப்பாகவே இருப்பதுபோல், ஆத்மாவும் உள்ளும் வெளியுமெங்கும் வேறொரு குணமின்றிக்கே ஜ்ஞாநமயமாகவே யிருக்கிறானென்கையாலே ஜ்ஞாநமே அவனுக்கு ஸ்வரூபம், அதுவே முக்தியில் ஆவிர்ப்பவிக்கிறது. அபஹதபாப்மத்வாதிகள் ஸ்வரூபமன்று என்று ஔடுலோமிமதம். ௫௨௯.

ஸூ|| ௫௩௦. ஏவமப்யுபந்யாஸாத்பூர்வபாவாதவிரோதம் பாதராயண:.

(ஸ-ரா-வ்ரு) ஏவமபி=இப்படி ஆத்மாஜ்ஞாநஸ்வரூபனா யிருந்தாலும், உபந்யாஸாத்=(மற்றகுணங்களையும்) சொல்லுகையாலே, பூர்வபாவாத்=முன்சொன்னவற்றுக்கும் ஸத்திதியுண்டாகையாலே, அவிரோதம்=விரோதமில்லாமையை, பாதராயண:=பாதராயணர் சொல்லுகிறார். ௫௩௦.

(ஸ - ஸா) ஆத்மாஜ்ஞாநஸ்வரூபனே, அதில் வாஸ்தவமாக மற்றகுணங்கள் கிடையாது, ஆயினும், வ்யாவஹாரிக தசையைப்பற்றி ஸ்ருதி மற்றகுணங்களையும் சொல்லுகையாலே, கால்பநிகமான அக்குணங்களை ஒப்புக்கொள்வதில்விரோதமில்லையென்று பாதராயணர் சொல்லுகிறார். ௫௩௦.

(ரா - ஸா) ஆத்மாஜ்ஞாநஸ்வரூபனாயினும், "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" இத்யாதி ஸ்ருதி மற்ற குணங்களையும் சொல்லுகையாலே அவற்றையு மொப்புக்கொள்ளவேணும், இரண்டு ஸ்ருதிகளில் ஒன்றை ப்ரமாணமாக்கி, மற்றொன்றை அப்ரமாணமாக்கவொண்ணாது. ஆத்மாவினுடைய ஸ்வரூபம் ஜ்ஞாநமாய், அதுக்கு அபஹதபாப்மத்வாதிகுணங்களாயிருக்கும். உப்புக்கட்டி லவணரஸமயமே என்றால் அதில் காடிந்யம் வெண்மை முதலிய குணங்களில்லையென்றர்த்தமன்று, வேறொருரஸமில்லையென்றே அர்த்தமாம், அதுபோல், ஆத்மா ஜ்ஞாநஸ்வரூபனேயென்றால் மற்ற குணங்களில்லையென்னவொண்ணாது. ஜ்ஞாநமாவது — ஸ்வயம் ப்ரகாசம், அதில் ப்ரகாசியாத இடம் கிடையாதுஎன்றே அதுக்கர்த்தம். ஆகையால் முக்தியில் இரண்டு ஸ்வரூபமு மாவிர்ப்பவிக்கிறதென்பதில் விரோத மில்லையென்று வ்யாஸபகவான் தன் கருத்தை வெளியிட்டார். ௫௩௦.

அதி. ௧௯௪. ஸூ|| ௫௩௧. ஸங்கல்பாதேவ து தச்ச்ருதே:.

(ஸ-ரா-வ்ரு) தச்ச்ருதே: அவ்வர்த்தத்தை ஸ்ருதி சொல்லுகையாலே, ஸங்கல்பாதேவ=ஸங்கல்பத்தினாலேயே (உண்டாகின்றன). ௫௩௧.

(ஸ-ரா-ஸா) "ஸ யதி பித்ருலோககாமோ பவதி ஸங்கல்பாதேவாஸ்ய பித

ரவஸ-திஷ்டுதெ" என்றும்: "ஜக்ஷ-த்க்ரீடஂரமமாண:" என்றும், முக்தன் தன்னுடைய பித்ருக்களோடு கலந்திருக்க இச்சித்தானாகில், தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே அவர்கள் எழுந்து வருகிறார்கள், இச்சையுண்டாகில் ஸ்த்ரீகளோடும் வாஹநங்களோடும் யதேச்சமாக க்ரீடிக்கிறானென்று சொல்லிற்று. அவைகளைப் பெறுகைக்கு ஸங்கல்பமே போருமா, இன்னும் சில ப்ரயத்நம் செய்யவேணுமா வென்னில்; ராஜா ஸத்யஸங்கல்பனா யிருந்தபோதிலும் ஒன்றை யடையவேண்டுமாகில் சில ப்ரயத்நம் செய்யவேண்டி யிருப்பதுபோல் முக்தனுக்கும் சில ப்ரயத்நங்கள் வேண்டியிருக்குமென்று பூர்வபக்ஷம்—"ஸஂகல்பாதேவ" ஸங்கல்பத்தினாலேயே அவர்களையடைவதாக அவதாரணம்பண்ணிச் சொல்லுகையினாலே வேறொருகாரண மில்லையென்று ஏற்படுகிறது, வேறொருகாரண முண்டென்பதற்கு ப்ரமாணமுமில்லை, ஸம்ஸாரிகளுக்கு ஸத்யஸங்கல்பம் கிடையாதாகையால் ராஜாவை த்ருஷ்டாந்தமாகச் சொல்லவொண்ணாது. ஆகையால், ஸங்கல்ப மாத்ரத்தினாலேயே முக்தன் ஸமஸ்த வஸ்துக்களையு மடைகிறானென்று ஸித்தாந்தம். ௬௩௧.

ஸூ|| ௬௩௨. அதஏவ சாநந்யாதிபதி:.

(ப-ரா-வ்-ஸா) அதஏவ=முக்தன் ஸத்யஸங்கல்ப னாகையினாலேயே, அநந்யாதிபதி:=வேறொன்றை நியாமகமாக உடையவனன்று. (அந்யாதிபதியாவது - சாஸ்த்ரத்திற்சொல்லிய விதிநிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கை. அப்படி கட்டுப்பட்டால் இவன் ஸத்யஸங்கல்பனாகான். அதாவது நினைத்தபடி செய்யமாட்டான். இவனை ஸத்யஸங்கல்ப னென்பதினாலே அநந்யாதிபதியென்பதும் ஸித்தமென்று கருத்து. ௬௩௨.

அதி. ௧௫. ஸூ|| ௬௩௩. அபாவஂபாதரிராஹஹ்யேவம்.

(ப-ரா-வ்யா) (பாதரி:=பாதரியென்பவர், அபாவம்=(சரீரேந்த்ரியங்கள் முக்தனுக்கு) இல்லையென்பதை(ச்சொன்னார்) ஏவம்=இப்படியே, ஆஹஹி= ச்ருதிசொல்லிற்றன்றோ. ௬௩௩.

(ப-ரா-ஸா) முக்தனுக்கு சரீரேந்த்ரியங்கள் உண்டா இல்லையா வென்னில்; "நஹவைஸஶரீரஸ்யஸத: ப்ரியாப்ரியயொரபஹதிரஸ்தி" சரீரமுள்ளவரையில் ஸுகதுக்கங்கள் விடாதென்றும், சரீரமில்லாவிடில் அவைகிட்டாவென்றும் சொல்லுகையாலே சரீரம் கிடையாதென்றார் பாதரி யென்பவர். ௬௩௩.

ஸூ|| ௬௩௪. பாவஂஜைமிநிர்விகல்பாமநநாத்.

(ப-ரா-வ்யா-ஸா). விகல்பாமநநாத்=அநேகவிதமான கல்பனை (அதாவது "ஸஏகதாபவதி த்ரிதாபவதி பஞ்சதாஸப்ததா" இத்யாதியினால், முக்தியில் ஒருவனாகிறான், மூன்றாகவாகிறான், ஐந்தாக ஆகிறான் ஏழாக ஆகிறானென்று இப்படி) சொல்லுகையாலே, பாவம்=சரீரமுண்டென்பதை, ஜைமிநி: ஜைமினி யென்பவர் சொன்னார். (ஆத்மஸ்வரூபம் அநேகமாக ஆகாது, சரீரத்வாராவே யாகவேணுமென்று கருத்து). ௬௩௪.

ஸூ|| ௬௩௫. த்வாதஶாஹவதுபயவிதஂபாதராயணோऽத:.

(ப-ரா-வ்யா) த்வாதஶாஹவத்= த்வாதசாஹமென்கிறயாகம்போலே, அத:

(ஸ) இரண்டுவிதமாக ஸ்ருதி யிருக்கையாலே, (ஸா) ஸத்யஸங்கல்பத்வத்தி ஞலே, உபயவிதம்=இரண்டுவிதத்தையும், பாதராயண:=வ்யாஸபகவான் (சொல்லுகிறார்). ருஉ.

(ஸ-ரா-ஸா) த்வாதசாஹமென்று ஒரு யாகமுண்டு, அது அநேகம்பெயர்சேர்ந்து செய்யவேண்டும், அப்போது அதுக்கு "ஸத்ரம்" என்று பெயர், அதையே ஒருவனு கவும் செய்யலாம், அப்போது "அஹீநம்" என்றுபெயர். இவ்விரண்டும் ஸ்ருதிஸித் தம். இந்த ஒரு யாகமே ஸங்கல்ப பேதத்தாலே இரண்டுவிதமாக ஆகிறப்போல், ஒரு முக்தனே "நான் சரீரத்தை யடையக்கடவேன்" என்று ஸங்கல்பிக்கும்போது சரீரபரிக்ரஹம் பண்ணுகிறன் "சரீரம்வேண்டாம்" என்று ஸங்கல்பித்தாணுகில் சரீர மில்லாமலிருக்கிறன் ஆகையால் இரண்டுக்கும் விரோதமில்லை என்று வ்யாஸபகவான் சொல்லுகிறார். ருஉ.

ஸூ|| ருக. தந்வபாவே ஸந்த்யவதுபபத்தே:.

(ஸ-ரா-வ்) தந்வபாவே=சரீரமில்லாதபோது, ஸந்த்யவத்=ஸ்வப்நத்திற் போலே, உபபத்தே:=(அநுபவம்) உபபந்ந மாகையாலே, ஜீவன் ஸ்ருஷ் டிக்கிறதில்லை). ருக.

(ஸ-ரா-ஸா) முக்தன் ஸத்யஸங்கல்பனுயிருந்தபோதிலும் தன்னுடைய சரீரோப கரணுதிகளைத் தானே ஸ்ருஷ்டிக்கிறுனென்ற நியமமில்லை, தான் ஸ்ருஷ்டியாதபோ து, ஸ்வப்நத்தில் ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டித்த சரீரோபகரணுதிகளைக்கொண்டு அநு பவிக்கிறப்போலே முக்தியிலும் ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டித்த சரீரோபகரணுதிகளைக் கொண்டே அவன் ஸ்ருஷ்டித்த பித்ருலோகாதிகளை யநுபவிக்கிறு னென்கிறார். "தந்வபாவே" தான் ஸ்ருஷ்டித்த சரீரமில்லாதபோது என்றர்த்தம். ருக.

ஸூ|| ருஎ. பாவே ஜாக்ரத்வத்.

(ஸ-ரா-வ்) பாவே=சரீரமுண்டாகில், ஜாக்ரத்வத்=ஜாக்ரதவஸ்த்தையிற் போலே (அநுபவிக்கிறுன்). ருஎ.

(ஸ-ரா-ஸா) முக்தியில் ஜீவன், தானே, பகவானுக்கு லீலாரஸஹேதுவான ஸ்வ சரீராதிகளையும் லீலோபகரணுதிகளையும் ஸ்ருஷ்டித்தாணுகில், இப்பொழுது அரசர் கள் தங்கள் ஸாமர்த்யத்தினுல் உபகரணங்களைச் சேர்த்துக்கொண்டு அநுபவிக்கிறப் போல் அநுபவிக்கிறுன், அவையெல்லாம் பகவல்லீலாரஸ ஜநகமாகையாலே இவனு டைய பகவதநுபவத்துக்குக் குறைவில்லை என்கிறார், "பாவே" தான் ஸ்ருஷ்டித்த சரீரோபகரணுதிகளுண்டாகி லென்றர்த்தம். ருஎ.

ஸூ|| ருஅ. ப்ரதீபவதாவேஶஸ்ததா ஹி தர்ஶயதி.

(ஸ-ரா-வ்) ப்ரதீபவத்=தீபம்போலே, ஆவேஶ:=(முக்தனுக்கு அ நேக சரீரங்களில்) ப்ரவேசம் (உண்டு), ததா=அப்படியே, தர்ஶயதி ஹி= சாஸ்த்ரம்சொல்லுகிறதன்று. ருஅ.

(ஸ - ஸா) லிங்கசரீரத்தோடகூடிய ப்ரஹ்மப்ரதேசத்துக்கு ஜீவனென்று பெ யர், அது அணுவாகையால் ஜீவனும் அணுஸ்வரூபியாகிறுன். இவன் ஒரேகாலத்தில் அநேக சரீரங்களை எப்படி எடுக்கலாம், ஒரு சரீரத்திலிருக்கும்போது மற்றொரு சரீர த்திலிருக்க முடியாதேயென்னில்; ஒரே தீபம் தன்னுடைய ஜ்வாலை வழியாக அநேக

வர்த்திகளில் ப்ரவேசித்து அநேக தீபமாகிறப்போலே, இவனும், தன்னுடைய வித்யாபலத்தினால் ஒரேகாலத்தில் அநேக சரீரங்களை வ்யாபிக்கிறானாகையால் அநேக சரீரபரிக்ரஹமுபபந்நம், ருஷிகளும்கூட யோகபலத்தினால் அநேகசரீரத்தில் ஒருபொழுதே வ்யாபிப்பதாக சாஸ்த்ரங்களில் காண்கிறோம். இப்படி சொல்லுகைக்கு ப்ரமாணம் "ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி" இத்யாதி ஶ்ருதியென்கிறார். ௫௨௮.

(ரா ஹா) அணுவான ஜீவனுக்கு ஒரே காலத்தில் அநேக சரீரங்களில் ஸம்பந்தம் கூடாமையாலே ஒரே காலத்தில் அநேக சரீர பரிக்ரஹம் எப்படி பண்ணுகிறானென்னில்; ஒரு தீபம் ஓரிடத்திலிருந்தே தன் ப்ரபையினால் எங்கும் வ்யாபிக்கிறப்போலே முக்தனும் ஜ்ஞாநத்தினால் ஸ்வேச்சையாக அநேக சரீரங்களில் வ்யாபிக்கக்கூடும், யோகிகளும் அப்படியே வ்யாபித்து அநேக சரீரபரிக்ரஹம் பண்ணக்கண்டிருக்கிறோம். ஜீவன் அணுவென்பதற்கும் அவனுக்கு அநேக சரீரமுண்டென்பதற்கும் ப்ரமாணம், "வாலாக்ரஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச | பாகோ ஜீவஸ்ஸ விஜ்ஞேயஸ்ஸ சாநந்த்யாய கல்பதே" நெல்லின் வால் நுனியில் பதினாயிரம்பங்கிலொருபாகம்போன்றவன் ஜீவன், அவன் அநேக சரீரங்களையெடுக்கிறானென்ற ஶ்ருதியே இதற்கு பரமாணம். ௫௨௮.

ஸூ || ௫௨௯. ஸ்வாப்யயஸம்பத்த்யோரந்யதராபேக்ஷமாவிஷ்க்ருதம் ஹி.

(ஶ.ரா-வ்யா) ஸ்வாப்யயஸம்பத்த்யோ: = ஸுஷுப்தி (ரா) மரணம் (ஶ) (மோக்ஷம்) ஆகிய இரண்டவஸ்த்தைகளில், அந்யதராபேக்ஷம் = ஓரவஸ்த்தையைச் சொல்லுகிறது. ஆவிஷ்க்ருதம் ஹி = ( ஶ்ருதியினாலே இது ) ப்ரகாசிப்பிக்கப்பட்டதன்றோ. ௫௨௯.

(ஶ-ஶா) "ஏகமேவைகம் விஜாநீயாத்" என்றும், "ந து தத் த்விதீயமஸ்தி" என்று முக்தனுக்கு இரண்டாவது வஸ்துவில்லையென்று ஶ்ருதி சொல்லியிருக்க, அநேக சரீரமுண்டென்னலாமோவென்னில்; இந்த ஶ்ருதிகள் நிர்க்குண ப்ரஹ்மத்தையடைந்து ப்ரஹ்மஸ்வரூபியாய்விட்ட முக்தன்விஷயம் என்றாவது, உறங்குகிறவன் விஷயமென்றாவது சொல்லவேணும். அவ்விருவர்க்குமே ஜ்ஞாநாதிகளொன்றுமில்லையென்று ப்ரமாணங்கள் சொல்லுகின்றன, எங்ஙனே யென்னில், "ஏதேப்யோ பூதேப்யஸ்ஸமுத்தாய தாந்யேவாநுவிநஶ்யதி" இந்தசரீரத்தினின்றும் வெளிக்கிளம்பி பின்பு இதை அறியான் என்று மரித்தவனுக்கும் "யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேந கம் பஶ்யேத்" எவனுக்கு எல்லாம் ப்ரஹ்மஸ்வரூபமாய்விட்டதோ, அவன் ஒன்றையும் காணான் கேளான் என்று நிர்க்குண முக்தியையடைந்தவனுக்கும் ஜ்ஞாநமில்லையென்றே சொல்லுகின்றன. இங்கு சொல்லப்பட்டவன் ஸகுணமுக்தியை யடைந்தவன். இவனுக்கு ஜ்ஞாநமும் சரீராதிகளுமுண்டு, ஆகையால் விரோதமில்லை யென்கிறார். ௫௨௧.

(ரா - ஶா) "ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சந வேத நாந்தரம்" என்று பரமாத்மாவை யடைந்தவனுக்கு எவ்விதமான ஜ்ஞாநமுங்கிடையாதென்கையாலே முக்தனுக்கு ஜ்ஞாநவ்யாப்தி எப்படி கூடுமென்னில்; இந்த ஶ்ருதி உறங்குகிறவன் விஷயமென்னவொண்ணாது, "நாஹ கல்வயமேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மீதி நோ ஏவேமாநி பூதாநி விநாஶமேவாபீதோ பவதி" இந்த மரித்தவன் தன்னையும் பிறரையும் அறிகிறானில்லை, இவனுக்கு

❋ 7

ஜ்ஞாநம்நசித்துவிட்டதென்று உறங்குகிறவனைக்குறித்தும், "ஸதெ தஹ்ஸாஹரெ த ஸ்வேஷாய தாரெநேவா நாவி நாஸ்தி" என்று இந்த பாஞ்சபௌதிகமான சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பின பின்பு இவற்றிலொன்றையுமறிகிறானில்லையென்று மரித்தவனைக்குறித்தும் ஜ்ஞாநமில்லையென்று சில ஶ்ருதிகள் சொல்லுகின்றன. "ஸவைஹவஶ்யஃ பஶ்யதி ஸவதீராவொநாதி ஸவஶ:" என்று முக்தன் எல்லாவற்றையும் பார்க்கிறானென்றும், "ஶநெரெவதாநுகாஶாநுபஶ்யநுராகெ த" முக்தன் ஸங்கல்பமாத்ரத்திலே ஸகலபோக்யவஸ்துக்களையும் பார்க்கிறானென்று முக்தனை ஸர்வஜ்ஞனென்று சில ஶ்ருதிகள் சொல்லுகின்றன. ஆகையால் அவற்றுக்கு விரோதமில்லாதபடி "ப்ராஜ்ஞேந" என்ற ஶ்ருதி முக்தன் விஷயமன்று. அவ்விருவரிலொருவர் விஷயமென்னவேணும், ஆகையால் முக்தன் ஜ்ஞாந வ்யாப்தியினால் அநேக சரீரபரிக்ரஹம் பண்ணக்குறையில்லை என்கிறார். ௫௩௯

ஸூ. ௧௫௯. ஸூ|| ௫௪௦. ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச.

(ப-ரா-ப) ப்ரகரணாத்=பரமாத்ம ப்ரகரணத்தினாலும், அஸந்நிஹிதத்வாச்ச=(அப்ப்ரகரணங்களில் முக்தன்) ஸாந்நித்யமில்லாமையாலும், ஜகத்வ்யாபாரவர்ஜம்=ஜகத் ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரம்தவிர, (முக்தனுக்குபரமாத்மாவோடு ஸாம்யமுண்டு) ௫௪௦.

(ஶ-ஹா) ஸகுணப்ரஹ்மத்தை யுபாஸித்து ஸகுணமுக்தியை யடைந்தவனுடைய ஐஶ்வர்யம் நிரவதிகமா ஸாவதிகமாவென்னில்; "ஆப்நொதி ஸ்வாராஜ்யம்" ஸ்வாராஜ்யத்தை யடைகிறானென்கையாலே அவனுடைய ஐஶ்வர்யம் பரமாத்மாவுக்குப்போல் நிரவதிகமாயிருக்கும் என்று பூர்வபக்ஷிமதம்—ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ப்ரகரணங்களில் பரமாத்மாவையே சொல்லுகையாலே, முக்தனைச்சொல்லாமையாலே ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்கள் தவிர மற்ற ஐஶ்வர்யமே முக்தனுக்குண்டென்று ஸித்தாந்திமதம். ௫௪௦.

(ரா - ஹா) முக்தனுக்கு ஸர்வேஶ்வரனைப்போல் ஜகத்ஸ்ருஷ்டி ஸகல ஜகந்நியமநம்முதலிய ஐஶ்வர்யமுண்டா, இல்லையாவென்னில்; "நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி" என்று பரமாத்மாவோடு அத்யந்த ஸாம்யத்தையடைகிறானென்று சொல்லுகையாலே, அவையில்லாவிடில் அத்யந்த ஸாம்யமுண்டென்று சொல்லக்கூடாதாகையாலே அவையு முண்டென்கிறான் பூர்வபக்ஷி—"யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" "ஸதொ ஹவை நாராயண ஆஸீத்" இத்யாதிகளான ஜகத்காரணத்வம் சொல்லுகிற ப்ரகரணங்களிலே பரமபுருஷனையே சொல்லுகிறது, முக்தபுருஷனை எங்கும் சொல்லவில்லை; மேலும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் பரமபுருஷனுக்கு அஸாதாரண லக்ஷணமாகச் சொல்லியிருக்கிறது. அதுமுக்தனுக்குமுண்டாகில், அது பரமபுருஷ லக்ஷண மாகாது, ஆகையால் முக்தனுக்கு ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகள் கிடையாது. மற்ற ஆநந்தாநுபவாதிகளிலே பரமாத்மாவோடு அத்யந்த ஸாம்யத்தை யடைகிறானென்று ஸித்தாந்தம். ௫௪௦.

ஸூ|| ௫௪௧. ப்ரத்யக்ஷோபதேஶாதிதி சேந்நாதிகாரிகமண்டலஸ்தோக்தே:.

(ப-ரா-ப) ப்ரத்யக்ஷ=ஶ்ருதியினாலே, உபதேஶாத்=சொல்லப்

படுகையாலே, (ஸ்ருஷ்ட்யதிகாரமும் முக்தனுக்குண்டு) இதிசேத்=என்
னில், ஆதிகாரிகமண்டலஸ்தோக்தே:=அதிகாரத்தில் நியமிக்கப்பட்டவர்களு
டைய மண்டலத்திலுள்ள(ரா)போகத்தை(அங்குச்) சொல்லுகையாலே(ரு)
(புருஷாதீநமானவைஶ்வர்யமென்கையாலே), ந=முக்தனுக்குஸம்பவியாது.

(ரு - ஸா) "ஆப்நோதி ஸ்வாராஜ்யம்" என்று முக்தனுக்குச்சொல்லிற்றேயெ
ன்னில்; மேல்வாக்யத்தில், "ஆப்நோதி மநஸஸ்பதிம்" ஸகல மநஸ்ஸுக்களுக்கும்
பதியான பரமபுருஷனை அடைகிறானென்று இந்த ஸாம்ராஜ்யமாகிற ஸம்பத்து பரம
புருஷாதீநமென்கையாலே அது முக்தனுக்குக் கிடையாது. ௫௪௧.

(ரா - ஸா) "தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி" எல்
லாலோகங்களிலும் யதேச்சமாக ஸஞ்சரிக்கிறானென்றும், "காமாந்நீ காமரூப்ய
நுஸஞ்சரந்" இஷ்டமானவைகளை யநுபவிக்கிறான், இஷ்டமான ரூபமெடுக்கி
றானென்கையாலும்,இவன்ஸகலலோகாதிபதியன்றாகில்இதெல்லாம்கூடாதாகையா
லும், முக்தனும் லோகங்களுக்கு நியந்தாவாகிறானென் றங்கீகரிக்கவேண்டு மென்
னில்; அவ்வாக்யத்தில், ப்ரஹ்மலோகாதி ஸகல லோகங்களிலுமுள்ள ஸமஸ்தமான
போகத்தையும் இஷ்டமுண்டாகி லநுபவிக்கிறானென்றே சொல்லுகிறது. அவற்றை
நியமிக்கிறானென்னவில்லை; ஆகையால்லோகநியமநாதிகள்முக்தனுக்குக்கிடையாது.

ஸூ॥ ௫௪௨. விகாராவர்த்தி ச ததா ஹி ஸ்திதிமாஹ.

(ரு-ரா-வ்ய) விகாராவர்த்தி ச (ப்ரஹ்மம்) விகாரத்திலில்லாமலுமிருக்
கிறது. ததா=அப்படிப்பட்ட, ஸ்திதிம்=இருப்பை, ஆஹ ஹி = (வேதம்)
சொல்லிற்றன்றோ. ௫௪௨.

(ரா-வ்ய) விகாராவர்த்தி ச=விகாரத்திலில்லாத ப்ரஹ்மஸ்வரூபமே, (மு
க்தபோக்யமாகச் சொல்லப்பட்டது.) ததா ஸ்திதிம்=அப்படிப்பட்ட ப்ரஹ்
மத்தில் இருப்பை, ஆஹ ஹி=சொல்லிற்றன்றோ. ௫௪௨.

(ரு - ஸா) உபாஸகன், உபாஸ்யனான பரமாத்மாவினுடைய ஸத்யஸங்கல்பத்
வம் ஸர்வஜ்ஞத்வம்முதலிய குணங்களையடைவதுபோல் ஸர்வேஶ்வரத்வத்தையு மடை
யவேணுமென்னில்; உபாஸ்யமான பரமாத்மாவுக்கு நிர்க்குண ஸ்வரூபமுண்டு, அதை
ஸகுணோபாஸகன் அடைகிறதில்லை, இதனால் உபாஸ்யனுடைய எல்லாகுணங்களும்
உபாஸகனுக்கு வருமென்கிற நியமமில்லை. ஆகையால், நிர்க்குண ஸ்வரூபம்போல்
ஸர்வேஶ்வரத்வமும் ஸகுண முக்தியை யடைந்தவனுக்குக் கிடையாது. ௫௪௨.

(ரா – ஸா) உத்பத்தி முதலிய விகாரங்களையுடைய ப்ரஹ்மலோகாதிகளிலுள்ள
போகங்களை முக்தனனுபவிக்கலாமோ வென்னில்; உத்பத்யாதி விகார ஶூந்யமாய்
அநந்த கல்யாண குணாகரமாய் ஸமஸ்த விபூதிகளோடுகூடிய பரமாத்மஸ்வரூபமே
முக்தனுக்கு போக்யமாயிருக்கும்; இவ்விதமான பரமாத்மஸ்வரூபத்தில் குணங்களைப்
போல் ப்ரஹ்மலோகாதி விபூதிகளும் அந்தர்க்கதங்களாகையால் பரமாத்மஸ்வரூபத்
தில் சேர்ந்ததென்று கல்யாண குணங்களைப்போல் விபூதியையு மநுபவிக்கலாம். விபூ
தியோடுகூடின ப்ரஹ்மத்தை யநுபவிக்கும்போது அவ்விபூதியில்சேர்ந்த ப்ரஹ்மலோ
காதிகளில் யதேச்ச ஸஞ்சாரமுமொக்கும். "யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ரு
ஶ்யேऽநாத்ம்யேऽநிருக்தேऽநிலயநேऽபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே அத ஸோ,

ஸம்பத்யதே"" இத்யாதி ஶ்ருதிகளே முக்தன் ஸவிபூதிக ப்ரஹ்மாநுபவம் பண்ணுகிறனென்பதற்கு ப்ரமாணமென்கிறார். ருசஉ

ஸூ॥ ருசரு. உபபத்யதேஶ்சாவம் ப்ரக்ருத்ஸ்தாநாந்தரஸ்ய.

(ஶ-ப்ர-ஸா) ப்ரக்ருத்ஸ்தாநாந்தரஸ்ய=("நதத்ர ஸூர்யோ பாதி" அந்த நிர்க்குண ஸ்வரூபத்தில் உத்பத்யாதி விகாரமுள்ள ஸூர்ய சந்த்ர நக்ஷத்ராதி ப்ரகாச ஸம்பந்தம் கிடையாதென்று) ஶ்ருதியும், ("நதத்பாஸயதே ஸூர்ய:" = ஸூர்யாதிகள் அந்த நிர்க்குண ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிப்பதில்லை யென்ற) ஸ்ம்ருதியும், ஏவம்=இவ்விதமான நிர்க்குண ஸ்வரூபத்துக்கு விகாரஸம்பந்த மில்லையென்று, உபபத்யத:=காண்பிக்கின்றன. இந்த ஶ்ருதி ஸ்ம்ருதிகளினுல் நிர்க்குண ப்ரஹ்மம் ஸித்திக்கிறதென்று கருத்து. ருசரு.

(ரா-ப்ர-ஸா) ப்ரக்ருத்ஸ்தாநாந்தரஸ்ய - (பீஷாஸ்மாத் வாத: பவதே" பரமாத்மாவினிடத்தில் நின்றும் பயத்தினுல் வாயு ஸூர்யன் அக்நி இந்த்ரன் யமன் முதலானவர்கள் தங்கள் தங்கள் கார்யத்தைத் தவறுமல் செய்கிறார்கள் இத்யாதி) ஶ்ருதிகளும், "(அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ: ப்ரலய:" நானே ஜகத்தினுடைய உத்பத்திஸ்த்திதி ப்ரளயங்களுக்குக் காரணமென்று பரமபுருஷன் சொல்லுகிற கீதை முதலிய) ஸ்ம்ருதிகளும், ஏவம்=இப்படி பரமாத்மாவே ஜகத்காரணன் ஸர்வேஶ்வரனென்ற அர்த்தத்தை,உபபத்யத:= காண்பிக்கின்றன. பரமாத்மாவே ஜகத்காரண னென்பதற்கு ஶ்ருதி ஸ்ம்ருதிகளே ப்ரமாணமென்று கருத்து. ருசரு.

ஸூ॥ ருசச. போகமாத்ரஸாம்யலிங்காச்ச.

(ஶ-ப்ர-ஸா) போகமாத்ர ஸாம்யலிங்காச்ச - ("தாபிரேவ தேவதாஸாயுஜ்யம் ஸலோகதாம்" நான் இந்த ஜலத்தை அம்ருதமாகப் பாநம் செய்கிறேன், நீங்களுமிதைப் பாநம் செய்யுங்கோள் என்று) அநுபவமாத்ரத்திலே, (பரமாத்மாவுக்கும் முக்தனுக்கும்) ஸாம்யம் சொல்லுகிற ஹேதுவினுலேயும் (முக்தனுக்கு ஜகத்வ்யாபாரம் கிடையாது). ருசச.

(ரா-ப்ர-ஸா) போகமாத்ரஸாம்யலிங்காச்ச=("ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" அந்த முக்தன், பரமாத்மாவும் தானுமாய் பரமாத்ம ஸ்வரூபத்தையும் கல்யாணகுணங்களையு மநுபவிக்கிறனென்று) அநுபவமாத்ரத்திலே (பரமாத்மாவோடு முக்தனுக்கு ஸாம்யம் சொல்லுகிற ஹேதுவினுலும் (முக்தனுக்கு ஜகத்வ்யாபாரம் கிடையாது). பரமாத்மா ஆநந்தஸ்வரூபி யாகையால் தனக்கும் பிறர்க்குங்கூட அநுபாவ்யனுவான்.

ஸூ॥ ருசரு. அநாவ்ருத்தி: ஶப்தாத் அநாவ்ருத்தி: ஶப்தாத்.

(ஶ-ரா-ப்ர) ஶப்தாத்=ஶ்ருதிவாக்யத்தினுல், அநாவ்ருத்தி:=திரும்பி(ஸம்ஸாரத்தில்) வராமலிருக்கை, (ஸித்திக்கிறது). ருசரு.

(ரு — ஹா) ஸகுணப்ரஹ்மோபாஸகன் ஸகுணப்ரஹ்மத்தையடைந்தபோதிலும், “ந ச புநராவர்த்ததே” மறுபடியும் திரும்புகிறதில்லையென்றும், “தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி” ப்ரஹ்மவித்யா மஹிமையினால் மேலேசென்று அங்கு நின்றும் அக்ஷயமான முக்தியையடைகிறானென்றும், “இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே” இந்த மநுஷ்யலோகத்துக்குத் திரும்புகிறதில்லையென்றும் ஸ்ருதி சொல்லுகையாலே, அங்கு பரமாத்மாநுக்ரஹத்தினால் தத்வஜ்ஞாநத்தைப்பெற்று அங்கு நின்றும் நிர்க்குண முக்தியையடைகிறான். ஸ்வர்க்காதிகளை யடைந்தவன்போல் திரும்பி ஸம்ஸாரத்தில் வரமாட்டானென்று நிஸ்சயிக்கப்படுகிறதென்கிறார். ருசடு.

(ரா — ஹா) கீழ் ஸகலைஸ்வர்யமும் பரமாத்மாதீநமாகையால் முக்தனுடைய ஸத்யஸங்கல்பத்வாதியான ஐஸ்வர்யங்களும் பரமாத்மாதீநமென்றது. இப்படியாகில் ஸர்வேஸ்வரன் ஸ்வதந்த்ரனாகையால், தன்னுடைய இச்சையினால் முதல் இவனுக்கு முக்தியைக்கொடுத்தாற்போல் ஒருகால் தன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தினால் அங்கு நின்றும் ஸம்ஸாரத்தில் தள்ளிவிடுவனோ வென்னில்; “யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே” “யஸ்மிந்நந்தரோ யமயதி” இத்யாதி ஸ்ருதிகளினால் ஸர்வேஸ்வரனே ஜகத்காரணபூதன், ஸர்வநியந்தா என்று நிஸ்சயிக்கப்படுகிறதோ, அப்படியே ‘ந ச புநராவர்த்ததே’ ‘இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே’ ‘மாமுபேத்ய புநர்ஜந்ம து:காலயமஶாஶ்வதம் | நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா:’ இத்யாதி ப்ரமாணங்களினால் பரமபுருஷனை யுபாஸித்து அவனுடைய அநுக்ரஹத்தினால் மோக்ஷத்தை யடைந்தவன் மறுபடியும் ஸம்ஸாரத்தையடையானென்று நிஸ்சயிக்கப்படுகிறது. மேலும், ‘ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்’ எனக்கு ஜ்ஞாநியானவன் ப்ராணபூதன் என்று ஜ்ஞாநியைத் தனக்கு அத்யந்த ப்ரியனாகப் பரமாத்மாவே சொல்லுகையால் அப்படிப்பட்டவனை ஒருகாலும் ஸம்ஸாரத்தில் தள்ளமாட்டான். இதனாலும் முக்தனுக்கு ஒருகாலும் ஸம்ஸார ப்ராப்தியில்லை. பரமபதத்திலிருந்தே, ஹேயப்ரத்யநீகனாய் அநந்த கல்யாண குணாகரனாய், அநந்த கருடவிஷ்வக்ஸேநாதி ஸகலஸூரி ஜநஸம்ஸேவ்யனால் ஸ்ரீபூநீளாதிமஹிஷீ ஸமேதனாய் உபயவிபூதிநாதனாய்க்கொண்டு ஸ்ரீவைகுண்ட திவ்யநகரத்தில் திருமாமணிமண்டபத்தில் அநந்தன்மேல் வீற்றிருக்கிற பரமபுருஷனான ஸ்ரீமந்நாராயணனை அநவரதமநுபவித்து அவனுக்கு ஸகல கைங்கர்யங்களையும் செய்து அபரிச்சிந்ந ப்ரஹ்மாநந்த பரிபூர்ணனாய் வாழப்பெறுவனென்கிறார். சாஸ்த்ரம் முடிந்ததென் றறிவிக்கைக்காக. “அநாவ்ருத்தி: ஶப்தாத்” என்ற ஸூத்ரத்தை இரண்டாவ்ருத்தி சொன்னது. ருசடு.

சு — வதுஅத்யாயம்

சு - வது பாதம் முற்றிற்று.

சாஸ்த்ரம் முடிந்தது.



ஓம்.

# ஸ்ரீ நீலகண்டாசார்ய பாஷ்யம்.

## அவதாரிகை.

ஸ்ரீவேதவ்யாஸபகவான், மோக்ஷகாமிகளுக்குப் ப்ரஹ்மஸ்வரூபத்தை யுணர்த்துவதாகக்கருதி, வேதாந்தமாகிய உபநிஷத்தினர்த்தங்களைத் திரட்டி ப்ரஹ்மஸூத்ரங்களைச் செய்தனர். அதற்கு முன்புள்ள ஆசார்யர்களனைவரும் வ்யாக்யாநம் செய்வதாக முயன்று அதின் உண்மையான பொருளையுணராமல் தங்கள் தங்கள் மதிபோனவழியே சென்று தங்களுக்குத் தோற்றின வர்த்தங்களை யெழுதி இம்மஹார்த்தத்தைக் கலக்கிவிட்டார்கள். ஸ்ரீநீலகண்டாசார்யரென்பவர் அதைத்தெளிவித்து, பரப்ரஹ்மமாகிய ஸதாஶிவனிடத்தில் நிஷ்டையுடைய முமுக்ஷுக்களுக்கு ப்ரஹ்மஸூத்ரத்தின் வாஸ்தவார்த்தத்தை வெளியிடுகைக்காக இந்த பாஷ்யத்தைச் செய்கிறதாக ஆரம்பித்தனர்.

இந்த ஶாஸ்த்ரத்திற்கு ப்ரஹ்மமீமாம்ஸை யென்றுபெயர். அதாவது—ப்ரஹ்மவிஷயகமான விசாரம். வேதாந்தவாக்யங்கள் ப்ரஹ்மத்தைச்சொல்லுகிறதா, அல்லது மற்றொன்றையே ஜகத்காரணமாகவும் மோக்ஷோபாயமாக த்யாநிக்கத்தக்கதாகவும் சொல்லுகிறதா என்பதை யுக்திகளைக்கொண்டு விசாரம்செய்து ப்ரஹ்மத்தையே சொல்லுகிறதென்று அறுதியிடுகை.

இந்தபாஷ்யகாரருக்கு விஶிஷ்டாத்வைதமே உண்மையென்று ஸித்தாந்தம். விஶிஷ்டாத்வைதமாவது-தத்வங்கள், சித்து-ஜீவன், அசித்து-ஜடம், ஈஶ்வரன்-ப்ரஹ்மம், என்று மூன்று வகையாயிருக்கும். அதில் ஜடமாவது - தனக்கொரு ப்ரயோஜநமின்றியிலே ஜீவர்களுக்கு அவரவர்களுடைய புண்யபாபாநுரூபமான ஸுகதுக்கங்களை யநுபவிக்கைக்கு ஸாதநமான, சரீரக்ருஹ க்ஷேத்ர ஆராம வஸந ஆபரண சந்தந குஸும தாம்பூல பாத்ர சய்யாதி போக்ய போகோபகரண போகஸ்தாநரூபமாய்ஜ்ஞாநமும்ப்ரகாசமுமற்றதாய் இருக்கும். இது இருபத்துநாலுவிதமாயிருக்கும். அவற்றின் ஆதியான ஸ்வரூபத்துக்கு மூலப்ரக்ருதி யென்றும், அதினுடைய விகாரத்துக்கு மஹத்து என்றும் அதினுடைய விகாரத்துக்கு அஹங்காரமென்றும் பெயர். அவ்வஹங்காரம்- ஸாத்விகாஹங்காரம், ராஜஸாஹங்காரம், தாமஸாஹங்காரமென்று மூன்றுவிதம். அதில் தாமஸாஹங்காரத்தில் நின்றும், சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்கிற தந்மாத்ரைகளும், அவற்றில் நின்று ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸு, வாயு, ஆகாசம் என்கிற ஐந்துபூதங்களு முண்டாகின்றன. ஸாத்விகாஹங்காரத்திலிருந்து, த்வக், சக்ஷுஸ்ஸு, ஶ்ரோத்ரம், ஜிஹ்வை, க்ராணம், என்கிற ஐந்து ஜ்ஞாநேந்திரியங்களும், வாக்கு, பாதம் பாணி, பாயு, உபஸ்த்தம், என்கிற ஐந்து கர்மேந்திரியங்களும், மநஸ்ஸு என்கிற ஆந்தரிந்திரியமும் உண்டாகின்றன. ராஜஸாஹங்காரம் மற்ற இரண்டஹங்காரத்துக்கும் உதவியாயிருக்கும்.

ஜீவனென்பது-அணுரூபியாய்,ஜ்ஞாநாநந்த ஸ்வரூபியாய், ஸ்வயம்ப்ரகாசமாய் கர்த்தாவாய், போக்தாவாய், ஸம்ஸாரியென்றும் முமுக்ஷுவென்றும் முக்தனென்றும் பலவகைப்பட்டிருக்கும். ஸம்ஸாரியாவது-தேவன், நரன், புழு, ஆண், பெண், என்றிவ்வாறாகப் பலவகைப்பட்ட சரீரங்களையடைந்து, அக்கர்மம் நடத்தும் வழியே நடந்துகொண்டு, இப்ப்ரக்ருதி விகாரத்துக்குட்பட்ட ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்களிலும் பூலோகத்திலும் பாதாளாதி கீழ்லோகங்களிலும் திரிந்துகொண்டு

அங்குள்ள ஸுகதுக்கங்களை யநுபவித்து அவ்வளவிலே த்ருப்தியடைந்திருப்பவன். முமுக்ஷுவாவது-இவ்விதமான இருப்பில் வைராக்யத்தையடைந்து இஸ்ஸம் ஸாரத்தைவிட்டு நீங்கி மோக்ஷமடைய விரும்புமவன். முக்தனாவது-பரமகாரண பூதனான பரமசிவனுடைய அருள் பெற்று இஸ்ஸம்ஸாரத்தில் நின்றும் நீங்கி முக்தியடைந்தவன்.

ஈச்வரனாவது-கீழ்ச்சொன்ன இரண்டு தத்வங்களையும் ஸாதநமாகக்கொண்டு ஜகத்தை ஸ்ருஷ்டிக்கவும் பரிபாலிக்கவும் ஸம்ஹரிக்கவும்வல்லனாய், ஜீவனைப்போல் கர்மவச்யனன்றிக்கே ஸ்வதந்த்ரனாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியாய், அபரிமித ஜ்ஞாநாநந்தாதி மஹாகுணங்களை யுடையனாய், ஸத்யஸங்கல்பனாய், ஜ்யோதிஸ்வரூபியாய், தனக்கொத்தாரையும் மிக்காரையு மற்றவனாயிருக்கும் ஸதாசிவன். இவனுக்கு மற்ற இரண்டு தத்வங்களும் சரீரமாயிருக்கும். இதில் அறியவேண்டும் மற்றவிஷயங்களையெல்லாம் ராமாநுஜபாஷ்யத்தி னவதாரிகையில் விசதமாகக் காண்க.

ராமாநுஜபாஷ்யத்துக்கும் இந்தபாஷ்யத்துக்கும் அநேகமாகப்பொருளொத்திருக்கும், ராமாநுஜபாஷ்யத்தில் நாராயணனைப்பரதேவதையாகவும், இதில் ஸதாசிவனைப் பரதேவதையாகவும் சொல்வதே பேதம். ஆகையினால் இதுக்கு சைவவிசிஷ்டாத்வைதமென்று பெயர். சிலவிடங்களில் ஸூத்ரார்த்தங்களில் பேதமிருந்தபோதிலும் அது முக்யதாத்பர்யத்துக்கு விரோதமாகாது. ஆகையால் ராமாநுஜபாஷ்யத்தைக்காட்டிலும் இந்தபாஷ்யத்துக்கு எங்கு அர்த்தம் வேறுபடுகிறதோ அதை இங்கு காட்டப்படுகிறது.

ஜிஜ்ஞாஸாதிகரணம்:—இந்த சாஸ்த்ரத்தில், ஆதியில் ப்ரஹ்மமென்பது ஜீவனா, அல்லது ஜீவனைக்காட்டிலும் வேறானமற்றொரு வஸ்துவாவென்று விசாரம் செய்யப்படுகிறது. அவ்விசாரம் கூடுமாகூடாதாவென்று இவ்வதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது. ஸந்தேஹமுள்ள விடங்களில் தான்விசாரம் செய்து, அவற்றில் எவ்வர்த்தம் யுக்திக்கு இணைந்திருக்குமோ அதை அங்கீகரிப்பது லோகவித்தமாயிருக்கிறது. இங்கு வேதாந்த வாக்யங்களில், "அயமாத்மா ப்ரஹ்ம" இத்யாதி வாக்யங்கள், நாம் காண்கிற ஜீவனே ப்ரஹ்மமெனப்படும் என்று ஸம்சயமறச்சொல்லி யிருக்கையால், விசாரத்துக்குக் காரணமாகிய ஸம்சயமில்லாமையால் ப்ரஹ்ம விசாரம் செய்வதில்பயனில்லை யென்று பூர்வபக்ஷம்.—உபநிஷத்துக்களில் ஜீவனை, அணுவாகவும், கர்மவச்யனாகவும், அல்பஜ்ஞனாகவும், அல்பசக்தியாகவும், பரதந்த்ரனாகவும் சொல்லி, ப்ரஹ்மத்தை, ஸர்வவ்யாபியாகவும், புண்யபாபங்களற்றவனாகவும் ஸர்வஜ்ஞனாகவும், ஸர்வசக்தியாகவும், ஸ்வதந்த்ரனாகவும் சொல்லியிருக்கிறது. இவ்விரண்டையும் பார்த்தால் இருளுமொளியும்போல் இணக்கமற்றிருக்கிறது. இப்படியிருக்க ஜீவனை ப்ரஹ்மமாகச்சொல்லுகிற வாக்யங்களுக்குத் தாத்பர்யமென்னென்று ஸம்சயமுண்டாகிறது. அதைப்போக்கிக் கொள்ளுகைக்காக யுக்திகளைக் கொண்டு வேதாந்த விசாரம் செய்து ஓரர்த்தத்தை நிச்சயிக்க வேண்டுமாகையால் வேதாந்தவிசாரம் அவச்யம் செய்யவேண்டுமென்று ஸித்தாந்தம். க.

உ. ஜந்மாத்யதிகரணம்— ஜகத்காரணமான வஸ்துவே ப்ரஹ்மமெனப்படும். உபநிஷத்துகளில் ஓரிடத்தில் ஆநந்தம் ஜகத்காரணமென்றும் மற்றோரிடத்தில் ஜ்ஞாநம், வேறிடத்தில், ஆத்மா, இன்னுமோரிடத்தில் ஸத்து, வேறோரிடத்தில் சிவன் ஜகத்காரணமென்றும் பலவற்றையும் காரணமாகச்சொல்லியிருக்கிறது. இவற்றில் ஏதோ ஒன்றே ப்ரஹ்மமாகவேணுமன்றி பலவும் ப்ரஹ்மமாகமாட்டா. இவற்றில் ஒன்றையே ப்ரஹ்மமாகநிச்சயிக்கைக்குக் காரணமும் கிடையாது. ஜகத்

காரணவஸ்துவை இன்னதென்று நிஸ்சயிக்க உபாயமில்லாவிடில் ப்ரஹ்மஸ்வரூபத்தையறிய வேறுவழியில்லையாகையால், ப்ரஹ்மவிசாரம் செய்யமுடியாதென்று பூர்வபக்ஷம்— ஆநந்தம், ஜ்ஞாநம், ஆத்மா, ஸத்து, சிவன் முதலிய பதங்கள் வெவ்வேறு வ்யக்திகளைச் சொல்லுமாகில் ப்ரஹ்மவிசாரம் செய்ய முடியாதுதான். அப்படியன்றிக்கே இப்பதங்களெல்லாம் ஒரேவ்யக்தியைச் சொல்லுகிறது. அதில் ஆநந்தபதம் அளவற்ற ஆநந்தத்தையுடைய ப்ரஹ்மத்தையும், ஜ்ஞாநபதம் எக்காலத்திலும் எத்தேசத்திலுமுள்ள எல்லாவிஷயங்களையும் எல்லாப்படியாலும் எப்போதுமறியத்தக்க ப்ரஹ்மத்தையும், ஆத்மபதம்-எங்கும் வ்யாபித்த ப்ரஹ்மத்தையும் ஸத்தென்பது அழிவற்ற ப்ரஹ்மத்தையும், சிவபதம் மங்களகரமான ப்ரஹ்மத்தையும் இப்படியே மற்றபதங்களும் அவ்வவகுணங்களையுடைய இந்த ப்ரஹ்மத்தையே சொல்லுகிறது. அப்பதங்களுக்கு விசேஷணமாகிய குணங்கள், வெவ்வேறாயினும் ப்ரஹ்மமென்கிற ஒரு வ்யக்தியே அர்த்தமாகக்கடவது ஆகையால் ப்ரஹ்மவிசாரம் செய்யமுடியுமென்று ஸித்தாந்தம். ௨.

௯. ஸமந்வயாதிகரணம்—ராமாநுஜபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் சொன்னதாத்பர்யத்தை இந்தபாஷ்யகாரர் இந்த ஸூத்ரத்துக்குத் தாத்பர்யமாகக்கொண்டார். மற்றது ஸமாநம். ௯.

௧௬. ஆநந்தமயாதிகரணம்—'ப்ரஹ்மபுச்சம் ப்ரதிஷ்டா' என்று ஆநந்தமயத்துக்கும் ஆதாரம் ப்ரஹ்மம் என்று சொல்லுகையாலே ஆநந்தமயமென்பது ப்ரஹ்மமன்று ஜீவனே யாகவேணுமென்று பூர்வபக்ஷம்—அங்குள்ள ப்ரஹ்மபதத்துக்கு பரப்ரஹ்மம் அர்த்தமன்று, ப்ரஹ்மமென்றால் ப்ரணவமென்கிற அக்ஷரத்துக்குப்பெயர். அவ்வக்ஷரம், ப்ரஹ்மமாகிய ஆநந்தமயனுக்கு ஆதாரம், அதாவது ஆநந்தமயனுக்கு வாசகமாகிறது என்று அவ்வாக்யத்திற்கு அர்த்தம். ஆகையால் ஆநந்தமயத்தைக்காட்டிலும் ப்ரஹ்மம் வேறுபட்டதன்று என்று ஸித்தாந்தம். ௧௬.

௧௭. இதராநுபபத்யதிகரணம்—மஹோபநிஷத்தில், 'யதோ வா ஸ்ர்ஷ்டா ஜநதோ வா ஸ்ருஷ்டி:' என்று தொடங்கி, ப்ரஜாபதியென்பவன் ஆதியில் ஸர்வாந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டிக்கிறானென்றும்,அந்ததாதாவென்பவனே சந்த்ரன் ஸூர்யன் ஆகாசம் பூமி முதலானவற்றைப் படைப்பவனென்றும் சொல்லிற்று. ப்ரஜாபதியென்றும், தாதாவென்றும் சதுர்முக ப்ரஹ்மாவுக்குப்பெயர். ஆகையால் அவனே அவ்வுபநிஷத்தில் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டான், பரமேஸ்வரன் ஜகத்காரணமாகச் சொல்லப்படவில்லையென்று பூர்வபக்ஷம்—ப்ரஜாபதியென்றும் தாதாவென்றும் சொல்லப்பட்டவன் எல்லோரிலுமுயர்ந்தவன், இந்த ப்ரஹ்மாண்டத்துக்கு வெளிப்பட்டவன், அவனை த்யாநித்தவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள் என்று அவ்வுபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறது. இவ்விதமான குணங்கள் பரமேஸ்வரனால் படைக்கப்பட்டு இவ்வண்டத்துக்குள்ளே வாஸம்செய்கிற ஸம்ஸாரியாகிய சதுர்முக ப்ரஹ்மாவுக்குச் சேராவாகையால், அவ்விரண்டு பதங்களும் பரமேஸ்வரனையே சொல்லுகிறது. இதனாலும் பரமேஸ்வரனே ஜகத்காரணமென்பது ஸித்தம் என்று ஸித்தாந்தம். ௧௭.

20 அவ்வுபநிஷத்திலேயே இவ்விரண்டு பதங்களினால் சொல்லப்பட்டவனை "ப்ரஹ்மணோ ரயிபதி:" என்று சதுர்முக ப்ரஹ்மாவுக்கும் ஸ்வாமியாகச் சொல்லியிருக்கிறது. ஆகையாலும் அங்குச் சொல்லப்பட்டவன் பரமேஸ்வரனேயாக வேணும். ௨0.

௨௧. அந்தரதிகரணம்—சாந்தோக்யத்தில்ஸூர்யமண்டல மத்யவர்த்தியாகச் சொல்லப்பட்ட புருஷன் ஸூர்யனென்கிறஜீவனோ, அல்லது பரமேஸ்வரனோவென்று

விசாரிக்கில், அப்புருஷனுக்கு சரீரமுண்டென்றும் தாமரைப்பூப்போல் இரண்டு கண்களுண்டென்றும் சொல்லியிருக்கிறது. சரீர முண்டானவனுக்குத் துன்பம் விடாது. நெருப்புக்கு ஒன்றைச் சுடுகையே ஸ்வபாவமாவதுபோல் சரீரத்துக்குத் துயரத்தை விளைக்கை ஸ்வபாவமாயிருக்கும். இதுபரமேஶ்வரனிடத்தில்சேராது. அப்பரமேஶ்வரனுக்குக் கண்கள் மூன்றாயிருக்க, இரண்டுகண்களுண்டென்றுசொல்வதும் சேராது. ஆகையால் இவன் ஜீவனேயாகவேணுமென்று பூர்வபக்ஷம்—அக்கிமரம் முதலானவற்றைக் கொளுத்தினாலும் ஜலம் வாயுமுதலியவற்றையும் சில ஓஷதிகளைப் பூசிக்கொண்டிருக்கிறவனையும் கொளுத்தவல்லமை யற்றிருப்பது போல், சரீரம் ஜீவனுக்குத் துன்பத்தை விளைத்தபோதிலும் பரமேஶ்வரனுக்கு அதை விளைக்கச் சக்தியற்றதா யிருக்குமாகையால், சரீரமுடையவன் துயரமுள்ள ஜீவனேயாகவேணு மென்கிற நியமமில்லை. அவனுக்கு இரண்டு கண்களுண்டென்றதுக்கு மூன்றாவது கண்ணில்லையென்று பொருளன்று. மூன்றாவது கண் எப்போதும் மூடிக்கொண்டே யிருக்குமாகையால் இரண்டு கண்களே தாமரைப் பூப்போல் மலர்ந்திருக்கிறதென்று சொல்லிற்று. இதனாலும் அவன் பரமேஶ்வரனன்றென்று ஏற்படாது. மேலும் அப்புருஷன் பாபமற்றவன், ஸகல லோகங்களுக்கும் ஸ்வாமி, இஷ்டப்படி செய்யவல்லவன் என்று சொன்ன குணங்கள் பரமேஶ்வரனுக்கொழிய மற்றொருவனுக்குக் கிடையாதாகையால், அப்புருஷன் பரமேஶ்வரனே யாகவேணும் என்று ஸித்தாந்தம், ௨௧.

---

## க-ம் அத்யாயம் உ-ம் பாதம்.

௧. அநுபபத்யதிகரணம்—மஹோபநிஷத்தில், "நாராயணம் மஹாஜ்ஞேயம்" என்று சொல்லப்பட்ட நாராயணபதத்துக்கு, லக்ஷ்மீபதியான நாராயணனா, அல்லது பரமேஶ்வரனா அர்த்தமென்று விசாரிக்கில்; நாராயணபதம் லக்ஷ்மீபதியான நாராயணனிடத்திலேயே அதிகமாக வழங்குகையாலும், "ஸமுத்ரே ஶேதே" என்று ஸமுத்திரத்தில் படுத்துக்கொண் டிருக்கிறானென்பதும் அவனுக்கே சேருமாகையாலும் நாராயணனே சொல்லப்பட்டானென்று பூர்வபக்ஷம்—அவ்வாக்யத்தில் நாராயணனை ஜகத்துக்கெல்லாம் ஸ்வாமியென்று சொல்லிற்று. ஜகத்துக்கெல்லாம் ஸ்வாமி பரமேஶ்வரனொருவனேயென்றும், மற்றொருவனப்படியாகானென்றும் உபநிஷத்துக்களிலனேக இடங்களில் சொல்லி யிருக்கையாலே அவன் பரமேஶ்வரனேயாகவேணு மல்லது நாராயணனாகான் என்று ஸித்தாந்தம். ௧.

௨. "நாராயணபரம் ப்ரஹ்ம" என்று நாராயணனையே பரப்ரஹ்மமாகவும் உபாஸ்யனாகவும் சொல்லுகையாலே அங்குச் சொல்லப்பட்டவன் நாராயணனேயாக வேணுமென்று பூர்வபக்ஷம்—அந்தகட்டத்தில், நாராயணன் பரமேஶ்வரனை த்யானிக்கிறானென்று சொல்லிற்று ஆகையால் அவன் நாராணனன்று, பரமேஶ்வரனேயென்று ஸித்தாந்தம். ௨.

௩. நாராயணனைக்காட்டிலும் மேலானபரமேஶ்வரனே பரப்ரஹ்மமென்று அர்த்தம். ஆகையால் அங்கு பரப்ரஹ்மமாகச் சொல்லப்பட்டவன் பரமேஶ்வரனே.

௪. கீதையிலும் க்ருஷ்ணன் அர்ஜுனனுக்கு, தன்னைக்காட்டிலும் உயர்ந்த பரமேஶ்வரனுடையரூபத்தைக்காண்பித்ததாக "பஶ்ய மே யோகமைஶ்வரம்" என்ற ஶ்லோகத்தில் சொல்வதினாலும் பரமேஶ்வரனே பரப்ரஹ்மம். ௪

௫. "யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச" என்று தொடங்கி ஜகத்தை ஸம்ஹாரம் செய்கிறானென்று சொல்லப்பட்டவன் ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரர்களாகிய த்ரிமூர்த்தி

யிலொருவனை ருத்ரனை, அல்லது இவர்களைக்காட்டிலும் மேலான பரமேஸ்வரனை
வென்னில்; ஸம்ஹாரமாவது-அழிக்கை. கோபம்முதலிய தமோகுணத்தினால் செய்
ய்வேண்டிய வ்யாபாரம். இவ்விதமானதூர்க்குணம் பரமேஸ்வரனுக்கில்லையாகை
யால், இவன் பரமேஸ்வரனன்று என்று பூர்வபக்ஷம்—த்ரிமூர்த்திகளி லொருவ
னை ருத்ரனுக்கு இந்த ஜகத்தையெல்லா மழிக்கும்படியான ஸாமர்த்தியமில்லை
யாகையால் இவன் பரமேஸ்வரனேயாகவேண்டும் அவனுக்குத்தமோ குணமில்லை
யென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே த்ரிமூர்த்தியிலொருவனை ருத்ரன் அங்கு
ஸம்ஹார கர்த்தாவாகச்சொல்லப்படவில்லை.பராத்பரனை பரமேஸ்வரனே ஸகல
ஜகத் ஸம்ஹாரகனைகச் சொல்லப்பட்டான். அவன் ஸம்ஹாரம் செய்வதற்குக் கோ
பம் முதலியவை காரணமன்று. ப்ராணிகளுடைய கர்மமே காரணம். அதையநு
ஸரித்து அவன் ஸம்ஹாரம் செய்கிறனென்று ஸித்தாந்தம். கூ.

கஎ. "அஙுஷ்஠ாத்ரஃபுருஷஃ" என்று மஹோபநிஷத்தில் சொல்லப்
பட்ட கட்டைவிரலளவான புருஷன் யாரெனில்; இதுப்ராணக்நிஹோத்ரப்ரக
ரணமாகையாலும், சிறிய அளவுள்ளதாகையாலும் ப்ராணவாயுவாக வேணுமென்று
பூர்வபக்ஷம்—இப்புருஷன் ஜகத்துக்கெல்லாம் காரணமானவன் என்று மேல் சொ
ல்லப்போகிற இம்மாதிரி குணங்கள் ப்ராணவாயுவுக்காவது மற்றொன்றுக்காவது
கிடையாது. இவை பரமேஸ்வரனுக்கேயுள்ளவை ஆகையால் இவன் பரமேஸ்வர
னென்று ஸித்தாந்தம்.

சஉ. ஜ்யோதிரதிகரணம்—சாந்தோக்யத்தில் "பரஂஜ்யோதிருபஸஂ
பத்ய" என்ற வாக்யத்தில், ஜீவனுக்கு முக்திதசையில் ப்ராப்யமாகச் சொல்லப்
பட்ட ஜ்யோதிஸ்ஸென்பவன் யாராகலாமென்னில்;—அவ்வாக்யத்தில் அந்த
ஜ்யோதிஸ்ஸை "ஸஉத்தமஃபுருஷஃ" என்று புருஷோத்தமனைகச் சொல்லி
யிருக்கிறது. புருஷோத்தமனென்று நாராயணனுக்குப் பெயராகையால் அவனே
இங்கு ஜ்யோதிஸ்ஸெனப் படுவானென்று பூர்வபக்ஷம்—இந்த ஜ்யோதிஸ்ஸை முக்
தனுக்கு ப்ராப்யமாகச் சொல்லி யிருக்கையால், அவன் பரமசிவனன்றி மற்றொரு
வனைகான். இங்குள்ள புருஷோத்தமபதம் - எல்லாப் புருஷர்களைக்காட்டிலும்
உயர்ந்தவனென்று அந்த பரமசிவனையே சொல்லுகிறது. ஆகையால், இங்குச்
சொல்லப்பட்டவனும் பரமசிவனே யென்று ஸித்தாந்தம். சஉ.

---

## க-ம் அத்யாயம் ச-ம் பாதம்.

கக. வாக்யாந்வயாதிகரணம்—இவ்வதிகரணத்தில், மைத்ரேயீ ப்ராஹ்மணத்
தில், ஜீவன்பரமேஸ்வரன் ஆகிய இருவரையும் சொல்லியிருக்கையாலே அவ்விரு
வரில் அவ்வாக்யத்துக்கு முக்யதாத்பர்ய விஷயம் யாராகலாமென்று விசாரித்து
ஸமாதானம் சொல்லப்படுகிறது—"நவாஅரெபத்யுஃகாமாயபதிஃப்ரியோ
பவதி ஆத்மநஸ்துகாமாயபதிஃப்ரியோபவதி" என்ற இவ்வாக்கியத்தில்
ஸாம்ஸாரிக போகத்தினுலுண்டான ப்ரீதியுடையவனைச்சொல்லி, அப்படிப்பட்ட
வனையே ஆராயவேணுமென்றது. பரமேஸ்வரனுக்கு ஸாம்ஸாரிக போகமில்லாமை
யால் அந்த போகமுடையவன் ஜீவனே அங்கு சொல்லப்பட்டானென்று பூர்வபக்ஷி
சொன்னன்.—எவனையாராயில்மோக்ஷமுண்டாகுமோ,அவன்விஷயமாகவேஅந்தப்ர
கரணத்தில் ஆதிதொடங்கி கடைசிவரையில் லக்ஷணங்கள் காண்கையாலே அப்படிப்
பட்டவன் பரமேஸ்வரனே யாகவேணும், ஸம்ஸாரபோக முடையவனென்று ஜீவ

னைச், சொன்னது-இப்படிப்பட்ட ஜீவனைக்காட்டிலும் மேலானவனிருக்கிறன். அவனே பரமேஶ்வரனென்கைக்காகவென்று ஸித்தாந்தம். கக.

உஉ. அந்த மேத்ரேயிப்ராஹ்மணத்தில், ஜீவனைச் சொல்லுகிற சப்தத்தினுல் பரமேஶ்வரனைச் சொன்னதுக்குக் காரணமென்னென்னில், ஜீவனுக்கும் பரமேஶ்வரனுக்கும் எப்போதும் எவ்விதத்திலும் பேதமில்லாமையால் இப்படி சொல்லிற்றென்று ஒருவர் சொன்னதாகவும், ஜீவன் ஸம்ஸாரத்தைவிட்டு முக்தியையடையும்போது பரமேஶ்வரனுய் விடுகையாலே அப்படி சொல்லிற்றென்று மற்றொருவர் சொன்னதாகவும்கீழேசொல்லி இதில்தன்மதத்தைச்சொல்லுகிறர். பரமேஶ்வரன் ஜீவனுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு ஆத்மாவாயிருக்கையாலே, சரீரத்தைச் சொல்லுகிற தேவாதிசப்தம் அதற்குள்ளே யிருக்கிற ஆத்மாவைச் சொல்வதாக உலகத்தில் காண்கையாலே, பரமேஶ்வரனுக்குச் சரீரமாகிய ஜீவனைச்சொல்லுகிற சப்தத்தினுல் பரமேஶ்வரனைச் சொல்லிற்று. பரமேஶ்வரன் அந்தர்யாமி யென்பதும் "ஜெவாா-உ ஜெவு ஹைநுகொஹவாநிதி" என்று தொங்கி முதல் கண்டத்தில் சொன்னவாக்யங்களினுலும் "யொஸெவா-உ ஹ ஹமவாநு" இத்யாதியான இரண்டாவது கண்டத்திலுள்ள வாக்யங்களினுலும், ஸ்பஷ்டம். கீழ்ச்சொன்ன இரண்டுமதங்களுக்கும் விருத்தமான இம்மதத்தைச்சொல்லி, இதற்குமேல் வேறொரு மதம் சொல்லாமையால் இதுவே ஸூத்ரகாரருடைய அபிப்ராயமென்று நிஶ்சயிக்கப்படும். இம்மதமே காசக்ருத்ஸ்நர் முதலிய பெரியோர்களுக்கும் ஸம்மதமென்கைக்காக அவர்சொன்னதாகச் சொன்னர். உஉ.

உங. ஸவஷெவுரவுரா நாயிகாரணம். கர்மகாண்டத்தில் இருக்கிற புருஷ ஸூக்தம் சதருத்ரீ முதலான வேதமந்த்ரங்களும், இதிஹாஸம் புராணம் முதலியவைகளும், கீழ்ச்சொன்னவாக்யங்களைப்போலே பரமேஶ்வரனுக்கே காரணத்வத்தைச் சொல்லுகிறதுகளென்று நிஶ்சயிக்கமுடியுமா முடியாதாவென்று விசாரிக்கில்,—புருஷஸூக்தம் சதருத்ரீமுதலானவை கர்மகாண்டத்திலிருக்கிறபடியால் அக்காண்டத்திற் சொல்லுகிற கர்மங்களை யநுஷ்டிக்கிற ஜீவனுடைய ஸ்வரூபத்தைப்பற்றியே அவ்வாக்யங்கள் சொல்லுகின்றன. அப்ப்ரகரணத்தில் எங்கும் சொல்லப்படாதவனுய், அக்கர்மங்களோடு தானெரு ஸம்பந்தமுமில்லாதவனுன பரமேஶ்வரனைச்சொல்லமாட்டா. இதிஹாஸபுராணங்களில், சிலவிடங்களில், ருத்ரனையும் சிலவிடங்களில், விஷ்ணுவையும், சிலவிடங்களில் ப்ரஹ்மாவையும், சிலவிடங்களில் கணபதி துர்க்கை முதலானவர்களையும் ஜகத்காரணமாகவும் மோக்ஷத்தை யளிக்கத்தக்க பரதேவதையாகவும், இப்படி பலவிடங்களில் பலவரைச்சொல்லுகையாலேயும், அப்புராணங்களில் இது உண்மை இது பொய்யென்று அறியமுடியாமையாலும், எல்லாவற்றையு முண்மையாக அங்கீகரிக்கில் பரதேவதை பலவாக இருக்கக்கூடாதாகையாலும் அவற்றைக்கொண்டு ஓரர்த்தம் நிஶ்சயிக்கமுடியாது என்று பூர்வபக்ஷம்—புருஷஸூக்தத்தில், ஜீவனுக்கு எவ்விதத்திலும் சேராத ஜகத்காரணத்வம் முதலிய குணங்களைச்சொல்லுகையாலே, அப்ப்ரகரணம் ப்ரஹ்மப்ரகரணமன்றியே கர்மப்ரகரணமாயிருந்தபோதிலும் இவ்விதமான லிங்கங்களைக்கொண்டு அங்குச்சொல்லப்பட்டவன் பரமேஶ்வரனே யென்று நிஶ்சயிக்கக்கூடும். சதருத்ரியில் முதலிலேயே, "நமஸெஹ-உ ரு.உ நவெ" என்று சாஸ்த்ரங்களினுலும் பெரியோர்களினுலும் கழிக்கப்படுகிற ஹேயமாய கோபத்தையுடையவனைச் சொல்லுகையாலே, பரமேஶ்வரனுக்குக் கோபமில்லாமையாலே, அங்குச்சொல்லப்பட்டவன் பரமேஶ்வரனைக்காட்டிலும் வேறுன ஜீவனே யாகவேண்டுமென்று சங்கிக்கவேண்டா. அங்கு "உநவு-" என்று கோபத்தைச்சொல்லுகிறதன்று, யஜ்ஞத்

தைச் சொல்லுகிறது. அப்படியே கோபத்தைச்சொன்னபோதிலும் துஷ்டஜநநிக்ரஹார்த்தமாகத் தன்னுடைய இச்சையினால் ஏற்றுக்கொண்டப்ரக்ருதியின் குணமான அக்கோபம் பரமேஶ்வரனிடத்தில் ஒட்டற்றதாகையால் அவ்வாக்யங்களும் பரமேஶ்வரனையே சொல்லக்குறையில்லை. இதிஹாஸ புராணங்களில் பலவிடங்களில் பலதேவதைகளைப் பரதேவதையாகச் சொல்லியிருந்தபோதிலும், அங்கங்குச்சொன்னகுணங்களெல்லாம் அவ்வவதேவதைகளுக்குச்சேராது. பரமேஶ்வரனுக்கே அக்குணங்களுள்ளவையாகையால், அவ்வவ இடங்களில் ப்ரஹ்மவிஷ்ண்வாதிதேவதைகளைச்சொல்லுகிற சப்தங்களுக்கெல்லாம் அந்தந்ததேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருக்கிற பரமேஶ்வரனையே சொல்லிற்றென்றங்கீகரிக்க வேண்டுமாகையால் இப்படி ஸகலமான இதிஹாஸபுராணங்களும் ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வம் முதலிய குணங்களையுடைய பரமேஶ்வரனையே சொல்லுகையாலே, அவைகளுக்குப் பரஸ்பரவிரோத மில்லையாகையால் அவற்றைக்கொண்டும் பரமேஶ்வரனே ஜகத்காரணமென்கிற அர்த்தத்தை நிஶ்சயிக்கக்கூடும். இப்படி சிலவிடங்களில் ஜீவனுக்கும், சிலவிடங்களில் ஜடத்துக்கும், சிலவிடங்களில் மற்றதேவதைகளுக்கும் காரணத்வம் சொல்லியிருந்தபோதிலும், அவ்வாக்யங்களுக்கெல்லாம் இவ்வத்யாயத்திற் சொல்லிய ந்யாயப்படியே அவற்றுக்கெல்லா மந்தர்யாமியான பரமேஶ்வரனிடத்தில் தாத்பர்யம் கல்பிக்கவேணுமென்று ஸித்தாந்தம். உக.

முதல்அத்யாயம்முடிந்தது.

---

## உ-ம் அத்யாயம் - க-ம் பாதம்.

கடு. ஸூராமஹணாயிகரணம்—கீழ் ஹொககு ரவதுாயிகரணத்தில், விஶிஷ்டாத்வைதமாகிய இம்மதத்தில் பரமேஶ்வரனுக்கு மற்றவை சரீரமென்கையாலே, அப்படி பரமேஶ்வரனுக்குச் சரீரமொப்புக்கொள்ளில், சரீரமுள்ள ஜீவனுக்கு அந்தசரீரமடியாக ஸுகதுக்கங்கள்நேரிடுமாப்போலே பரமேஶ்வரனுக்கும் ஸுகதுக்கங்கள் சரீரமடியாக ஒப்புக்கொள்ளவேணும். அப்போது ஜீவனென்றும் பரமேஶ்வரனென்றும் பேதம் கிடையாது என்று சங்கித்துக்கொண்டு, ஸுகதுக்கங்களுக்குச் சரீரம்காரணமன்று, அவனவனுடைய புண்ய பாபங்களே காரணமாம், பரமேஶ்வரனுக்கு அவையில்லாமையால் ஸுகதுக்கங்கள் கிடையாது என்று ஜீவனுக்கும் பரமேஶ்வரனுக்கும் பேதம் ஸ்தாபிக்கப்பட்டது. இவ்வதிகரணத்தில், கார்யமும் காரணமும் ஒன்றேயென்று ஒப்புக்கொள்ளுகிற இம்மதத்தில் அசேதநமாகிய ஜகத்தும் பரமசேதநனாகிய பரமேஶ்வரனு மொன்றென்று ஒப்புக்கொள்ளவேணும், அப்போது பரமேஶ்வரனை ஜடமென்றாவது, ஜடமான ஜகத்தை அஜடமென்றாவது ஒப்புக்கொள்ளவேணும் என்று சங்கித்துப் பரிஹரிக்கிறார். கடு.

கஉ. ஸ்ரீமாஞெகவஒாயிகரணம்—ஸமஸ்த காமபரிபூர்ணனான பரமேஶ்வரனுக்கு இந்த ஜகத்தைப்படைத்து இதனாலடையவேண்டிய ப்ரயோஜனமொன்றுமில்லாமையாலும், நிஷ்ப்ரயோஜநமான வ்யாபாரம் ஒருவனும் செய்யானாகையாலும், பரமேஶ்வரன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்பது சரியன்றென்ற சங்கைக்கு ஸமாதாநமாவது - லோகத்தில் அதிக துன்பமடைந்தவன் அழுகிறான். அவ்வழுகையினால் ஒருப்ரயோஜநமும் கிடையாது, அதுபோலவே பரமேஶ்வரன் அபரிமிதாநந்தமுடையவனாய் அவ்வாநந்தத்துக்குப் போக்குவழியாக அநேக விசித்ரமான இந்த ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான். மேலும் ஜநங்கள் நிஷ்ப்ரயோஜநமாகவே கண்ணில் இமைகொட்டுகிறார்கள். ஒருவன் பாடும்போதும் ஒரு அர்த்த விசேஷம்

களைச்சொல்லும்போதும் சிலர் தலையை யசைக்கிறார்கள், சிலர் கைகளையும் விரல்களையுமாட்டுகிறார்கள். அவற்றினால் ஒருப்ரயோஜநமுமில்லை. ஆயினும் அது ஜனங்களுக்கு ஸ்வபாவமாக உள்ளது. அதுபோலவே பரமேஶ்வரனுக்கும் ஸ்ருஷ்டிக்க ஸ்வபாவமாயிருக்குமென்று. ௩௩.

(௩௪) பரமேஶ்வரன் பரிபூர்ணனாகையால்ராகத்வேஷாதிகளற்றவனாய் ஸகல ப்ராணிகளையும் ஸமமாகப் பார்க்கவேண்டியிருக்க, அப்படியன்றிக்கே, சிலரிடத்தில் ப்ரீதியையும் சிலரிடத்தில் கோபத்தையும்வைத்து அவ்வவர்களை உயர்ந்த ஸுகமுடைய தேவாதி ஜாதியிலும் மஹாகோரதுக்கமுடைய பசு பக்ஷிமுதலிய ஜாதியிலும் ஸ்ருஷ்டிப்பது அநுசிதம். அனைவரையுமொரேகாலத்தில் ஸம்ஹாரம் செய்வது தயையுள்ளவனுக்குச் சேராதாகையால் பரமேஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிறானென்பது அநுசிதம் மேலும், அனைவரையு மொரேகாலத்தில் ஸம்ஹாரம்செய்வது தயையுள்ளவனுக்குச் சேராது ஆகையால், இதனால் பரமேஶ்வரன் நிர்த்தயனென்றும் ஏற்படுவான். இவ்விதமான தோஷங்களுண்டாகையால் பரமேஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிறானென்பது அநுசிதம். என்று பூர்வபக்ஷம்—ஜீவர்களுக்கு இந்தஸம்ஸாரத்தில் பிறப்பிறப்புகள் அவரவர்களுடைய கர்மாநுகுணமாயிருக்கும். பரமேஶ்வரன், எவனெவனுக்கு எந்தெந்தகாலங்களில் எவ்விதமான ஸுகதுக்கங்களை யநுபவிக்கைக்குத் தக்க புண்யபாபங்களிருக்குமோ,அதையெல்லாமாராய்ந்து அதுக்குஅநுகுணமான ஜன்மத்தைக்கொடுக்கிறான்.—ஆகில், கர்மமே ஸம்ஸாரத்துக்கு ஹேதுவாயிருக்க ஈஶ்வரனை யொப்புக்கொள்ள ப்ரயோஜநமென்னென்னில்; கர்மமென்பது அசேதனமாகையால்,ஜ்ஞாநவானாகிய ஒருவனிருந்து நடப்பியாவிடில் அதுநடவாது ஆகையால் அதற்காகவே ஈஶ்வரனை யங்கீகரிக்கவேணும். ஆகில் இதனால், கர்மத்தினால் ஒன்றும்செய்யமுடியாதென்றும் ஈஶ்வரனே ஸ்ருஷ்டிக்கிறானென்றும்ஏற்பட்டது, இப்போது முன்சொன்ன தோஷங்களுக்கு என்னஸமாதாநமென்னில்; கர்மங்கள் ஜகத்ஸ்ருஷ்டிக்குரிய சக்தியையுடையவைகளாகின்றன. அவற்றையே ஈஶ்வரன் அவ்வவ காலதேசங்களுக் கநுகுணமாக்கிவைக்கிறான். இவ்வளவு மாத்ரத்தினால் அவன் பக்ஷபாதியாகமாட்டானென்றது— இப்படி அக்கர்மங்களை ஈஶ்வரன் நடத்தாவிடில் ஸ்ருஷ்டி உண்டாகப்போகிறதில்லை. அப்போது ஜீவர்கள் சரீரசூன்யராய் அதடியாக நேரிடும் துன்பமுமின்றியே,ஸ்வாபாவிகமான ஆநந்தையநுபவித்துகொண்டிருப்பார்கள். அப்படியிருக்குங்காலத்தில், ஈஶ்வரன்தானே அவரவர்களுடைய கர்மங்களை நடத்தி ஸம்ஸாரத்தையுண்டுபண்ணுகிறான். இப்படியாயிருக்க ஈஶ்வரனுக்கு முன்சொன்ன தோஷங்கள் கழியும்வகை யென்னென்னில்; ஜீவர்களுக்குப் புண்யபாப ரூபமான கர்மம் அநாதியாயிருக்கிறது. அக்கர்மமுள்ளவரையில் தத்வஜ்ஞாநமும் அம்மூலமான மோக்ஷமுமுண்டாகமாட்டாது. அக்கர்மங்களும் அநுபவித்தே கழியவேணுமன்றி மற்றொருபடி கழியவகையில்லை. இதைக் கண்டுபரமகாருணிகனான பரமேஶ்வரன் ஜீவன்களுக்கு சீக்கிரத்தில் அக்கர்மங்களைக் கழித்து மஹாநந்தரூபமான மோக்ஷத்தை யளிக்கக்கருதி அவ்வவகர்மாநுபவாநுகுணமாக சரீரங்களைக் கொடுக்கிறான். அதைக்கொண்டு ஜீவன்கள் அக்கர்மங்களை யநுபவித்துக்கழித்தபின் அவர்களுக்கு தத்வஜ்ஞாநத்தையுண்டாக்கி மோக்ஷத்தையடைவிப்பிக்கிறான் ஆகையால் அவன் பரமகாருணிகனென்னத்தட்டில்லை—ஆகில்; அனைவர்க்கும் ஒரேகாலத்தில் அக்கங்களையநுபவிப்பித்து அப்போதே என் மோக்ஷத்தை யடைவிப்பிக்கக் கூடாதென்னில்; அவன் எல்லாரிடத்திலும் ஒரே விதமான அநுக்ரஹத்தைப்பண்ணி ஜந்மத்தைக்கொடுக்கிறான். அதில் சிலருடைய கர்மம் சீக்கிரத்தில் கழிந்துவிடுகிறது. சிலருடைய கர்மம் சிலநாள் கழித்துக் கழிகிறது. இதற்கு த்ருஷ்டாந்தம் - ஸூர்யன் தன்கிரணங்களை எல்லாவிடங்களிலும்

ஒரேமாதிரியாகப் பரவச்செய்தபோதிலும் அதினால், பக்வமான சிலதாமரைப் பூக்கள் உடனே மலர்ந்துவிடுகின்றன. காயாயிருக்கிற தாமரைப்பூக்கள் அப்போதே மலராமல் க்ரமக்ரமமாகப் பக்வமாய் சில காலம் கழிந்து மலருகின்றன. இதனால் ஸூர்யனுக்கு ஒருபக்ஷபாதமும் ஏற்படமாட்டாது. அதுபோலவே ஈஶ்வரனும் பக்ஷபாதமின்றியே பரமகாருணிகனுய்க்கொண்டே ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறனென்பது ஸித்தம். கடைசியில் ஸம்ஹாரம்செய்வது, ஜீவன்கள் பகுகாலம் ஸம்ஸாரதுக்கத்தை யநுபவித்து வருந்தியிருக்கும் காலத்தில் இவர்கள் வருத்தத்தை மட்டப்படுத்துகைக்காகத் தன்கருணையால் ஸம்ஹாரம்செய்கிறன். இந்தஸம்ஹாரமானது பகலெல்லாம் வேலைசெய்து வருந்தினவன் அவ்வருத்தமற இரவில் உறங்குவது போலாயிருக்கும். ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களின் தத்வமிவ்விதமாகையால், பரமேஶ்வரனுக்குப் பக்ஷபாதமும் நிர்த்தயத்வமுமாகிற் துர்க்குணங்கள் ஏற்படமாட்டாதென்று ஸித்தாந்தம். ௩௪.

௩௫-வது ஸூத்ரமான "ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத்" என்கிற ஸூத்ரம் மற்ற எல்லா பாஷ்யங்களுக்குமுண்டு. இந்தபாஷ்யத்தில் அச்சிட்ட புஸ்தகத்தில் அந்த ஸூத்ரமும் அதினுடைய பாஷ்யமும் காணவில்லை. இதை அச்சிட்டவர், இந்த ஸூத்ரம் பழைய ஓலைப்புத்தகங்களிலெங்கும் காணவில்லையென்றெழுதியிருக்கிறர். அந்த ஸூத்ரத்திற் சொல்லுகிற சங்கையும் ஸமாதாநமும் இந்த பாஷ்யத்துக்கும் அவஶ்யம் வேண்டியதாயேயிருக்கிறதாகையால் இதற்கு பாஷ்யமும் செய்தேயிருக்கவேண்டும். மற்று எவ்விடங்களிலும் அவ்வர்த்தங்களைச் சொல்லவுமில்லை. ஆகையால் புத்தகம் எழுதினவர்களுடைய அஜாக்கிரதையினுல் அந்த ஸூத்ரமும் பாஷ்யமும் விட்டுப்போயிருக்கலாமென்று தோற்றுகிறது.

உ-ம் அத்யாயம் க-ம் பாதம் முடிந்தது.

---

## உ-ம் பாதம்.

௩௫. ஸாங்க்யதாயிகரணம்—இந்த ஜகத்துக்கு உபாதாநகாரணமும் நிமித்தகாரணமுமாகிய இரண்டும் பரமேஶ்வரனே யென்று ஶ்ருதியில் சொல்லியிருக்க, அதின் தாத்பர்யத்தை யறியாத சிலபாசுபதாகம நிஷ்டர்கள், பரமேஶ்வரன் ஜகத்துக்கு நிமித்தகாரணமேயாகிறனல்லது உபாதாநகாரணமாகான்என்று சொல்லுகிறர்கள். அந்தபாசுபதாகமைகதேசிகளுடைய மதத்தை இவ்வதிகரணத்தில் நிரஸநம் செய்கிறர்—பரமேஶ்வரனை ஜகத்துக்கு உபாதாநகாரணமாக ஒப்புக்கொள்ளில், கடத்துக்கு உபாதாநகாரணமாகிய மண் தன்னுடைய பிண்டாகாரமான உருவமழிந்து கடமாவதுபோல், பரமேஶ்வரனும் தன்னுருவத்தை யழித்துக்கொண்டே ஜகத்ரூபியாகப் பரிணமிக்கவேணும். அப்பொழுது, பரமேஶ்வரன் அவிகாரி அழிவற்றவன் என்கிற ஶ்ருதி ஸ்ம்ருதிமுதலிய ப்ரமாணங்களோடு விரோதிக்கும் ஆகையால் பரமேஶ்வரன் ஜகத்துக்கு உபாதாநகாரணமாகமாட்டான், நிமித்தகாரணமாத்ரமேயாகிறனென்று பூர்வபக்ஷம்—பரமேஶ்வரனை அவிகாரியென்றும் அழிவற்றவனென்றும் எந்தஶ்ருதி ஸ்ம்ருதிகள் சொல்லுகின்றனவோ, அவையே, ஜகத்துக்கு உபாதாநகாரணமும் பரமேஸ்வரனே யென்று சொல்லுகிறது. ஆகையால் அந்த ஶ்ருதிஸ்ம்ருதிகளுக்கு விரோதமின்றியே அதில் சொன்னப்ரகாரம் பரமேஶ்வரனை ஜகத்துக்கு இருவகையான காரணமாகவு மங்கீகரிப்பதே உசி

தம். இவ்வர்த்தத்தையே சிவாகமத்தில் வாயுஸம்ஹிதை முதலான க்ரந்தங்களில் சொல்லுகிறது, இப்படி பகுக்ரந்த ஸம்மதமான அர்த்தத்தைவிட்டு சிவாகம நிஷ்டர்களில் அவ்வாகமத்தின்அபிப்பிராயமறியாதசிலர் சொன்னபூர்வபக்ஷார்த்தத்தை உண்மையென்றுகொள்வது சரியன்று என்று சிலர்வாக்யாநம் செய்தார்கள். அதுவும் சரியன்று. ஏனென்னில்; வேதத்துக்கும் சிவாகமத்துக்கும் பேதம்கிடையாது. இரண்டையும் செய்தவன் பரமசிவனே. ஆகையினால்தான் வேதத்தையும் சிவாகமமென்றே பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அதில் வேதமென்கிற சிவாகமத்துக்கு அதிகாரிகள் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களே யாவர்கள், மற்றொருஜாதியார் அதிகாரிகளன்றென்றும், மற்றொரு சிவாகமத்துக்கு எல்லாஜாதிகளும் அதிகாரிகளென்றும் இவ்வளவே பேதமுள்ளது. அர்த்தங்களில் பேதமில்லை. வேதம் சிவாகமம் என்கிற இரண்டு க்ரந்தங்களிலும். சிவபஞ்சாக்ஷரி முதலிய மந்த்ரங்களையும், பசு பாசம் முதலிய பதார்த்தங்களையும், பஸ்மத்தை உடப்பெங்கும் பூசிக்கொள்ளுகை, த்ரிபுண்ட்ரம்தரிக்கை, லிங்கபூஜநம் செய்கை, ருத்ராக்ஷமணிகை முதலிய ஆசாரங்களையும் ஒரேவிதமாகவே சொல்லியிருக்கிறது. ஆகையால் சிவாகமத்தில் வேதவிருத்தார்த்தங்களைச் சொல்லவேயில்லை. ஆனால் இவ்வதிகரணத்தில் எந்தமதம் நிரஸநம் செய்யப்படுகிற தென்னில்; ஹிரண்யகர்ப்பனாகிய ப்ரஹ்மா ஆதியில் ப்ரவர்த்திப்பித்த யோகசாஸ்த்ரத்தியில் பரமேஶ்வரனை ஜகத்துக்கு உபாதாந காரணமன்றென்றும் நிமித்தகாரண மாத்ரமேயாகிறானென்றும் சொல்லியிருக்கிறது. அம்மதத்தை இவ்வதிகரணத்தில் நிரஸநம் செய்கிறார் என்று நீலகண்டாசார்யர் வ்யாக்யாநம் செய்கிறார். ௩௭.

௩௧. வாஸுதேவாதாயதிகரணம்— பாஞ்சராத்ராகமம் வாஸுதேவனால் செய்யப்பட்டது. அதில் ஜீவன் உண்டாகிறான்என்று சொல்லியிருக்கிறது. அது சரியா அன்றா என்று விசாரிக்கில்; வாஸுதேவனென்பவர் ப்ரஹ்மா முதலிய மற்ற தேவதைகளைக்காட்டிலும் சிறந்தவர், அவர்சொன்ன அர்த்தம் பொய்யாயிராது. ஆகையால் அதைப்ரமாணமாக ஒப்புக்கொண்டு அதில் சொன்ன ஜீவோத்பத்தியை சரியன்றே அங்கீகரிக்கவேணுமென்று பூர்வபக்ஷி சொன்னான்— ஜீவனுக்கு உத்பத்திஒப்புக் கொள்வது சரியன்று. ஜீவன் உண்டாகிறானென்று ஒப்புக்கொள்ளில்; அவன் உண்டான உடனே ஒரு ஜந்மத்தையெடுத்து அந்த ஜன்மத்தில் ஸுகதுக்கங்களை யநுபவிக்கும்போது அந்த ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகிய புண்ய பாபங்களை இதற்கு முன்பு இவன் செய்யாமையால், அப்படி புண்யபாபங்களாகிய காரணமின்றிக்கே ஸுகதுக்கங்களுண்டாகிற தென்றும் ஒப்புக்கொள்ளவேண்டி வரும். அப்போது காரணமின்றியே கார்யமுண்டாயிற்றதாம். அதையுமொப்புக் கொள்ளில், ஒருவனைப்போலவே மற்றவர்களும் ஸுகிகளாகவாவது துக்கிகளாகவாவது இருக்கவேணுமே யல்லது, ஒருவன் ஸுகியாகவும் மற்றவன் துக்கியாகவும் இருக்கைக்கு ஒருயுக்தியையும் காண்கிறோமில்லை. மேலும் எது உண்டாகிறதோ, அதுக்கு நாசமுமுண்டு, ஜீவன் உண்டானால் அவன் நாசத்தையடைகிறானென்றும் சொல்லவேணும் அவன் நாசத்தை யடைவதற்கு முன் ஜந்மத்தில் பண்ணின புண்ய பாவங்களை அவன் நசித்தபின் யார் அநுபவிப்பார்? அப்புண்ய பாபங்கள் நிஷ்பலமாயே யொழியும், மேலும், வேதத்திலும் மற்ற ஸ்ம்ருத்யாதிகளிலும் ஜீவாத்மாவை நித்யமாகச் சொல்லியிருக்கிறது. அவற்றோடும் விரோதம் ப்ரஸங்கிக்கும் இவ்விதமான தோஷங்களுண்டாகையால் பாஞ்சராத்ராகமத்தை ப்ரமாணமாக்கிக் கொள்ளக்கூடாதென்கிறார். ௩௧.

௪௨. ஜீவனுண்டாகிறானென்கிற வாக்யத்துக்குவேறு ஏதாவதொரு அர்த்தம் கல்பித்து பாஞ்சராத்ரத்தில் ஜீவோத்பத்தி சொல்லவில்லை யென்று கீழ்சொன்ன

தோஷங்களைப் பரிஹரித்தபோதிலும், அதில் வேதவிருத்தமான மற்றும் அனேகமர்த்தமுண்டு. அதாவது—வேதத்தில் பரமேஸ்வரனைக் காரணமாகச் சொல்லிற்று. பாஞ்சராத்ராகமத்தில் வாஸுதேவனை ஜகத்காரணமாகச் சொல்லிற்று. மேலும் மோக்ஷத்தைக் கொடுப்பவன் பரமசிவனென்று வேதத்தில் சொல்லியிருக்க, அதற்குநேர் விருத்தமாக வாஸுதேவனை மோக்ஷப்ரதனாகச் சொல்லிற்று. வேதவிருத்தமான தப்தமுத்ராதாரணத்தையும் சொல்லிற்று. இப்படி இவ்வாகமம் நேராக வேதவிருத்தமாகையால் இதில் சொல்லுகிற வர்த்தத்தை உண்மையாகக் கொள்ளக்கூடாது. மேலும் "வாஜ்ஞராதெந்ரவஸௌஷெவ" என்று துடங்கி, "ஹவதவ்ராஹ்ணாயஶோஃ" என்னுமளவாயுள்ள ஶ்லோகத்தில், பாஞ்சராத்ராகமத்திலும் பௌத்த மதத்திலும் ப்ரவேசித்து நீங்கள் தீக்ஷைபெற்றிருக்கிற படியினால், நீங்கள் ப்ராஹ்மண ஜந்மத்தையிழந்து நீசராகப் போகக்கடவீர் என்று அநேக இடங்களில் பாஞ்சராத்ரத்தில் தீக்ஷைபெற்றவனை நிந்தித்திருக்கையாலும் அவ்வாகமம் அப்ரமாணமாகிறது.

இரண்டாம் அத்யாயம். இரண்டாம் பாதம் முடிந்தது.

---

## ௩-ம் பாதம்.

கக௯. ஜ்ஞாயிகாரணம்—கீழ் அதிகரணத்தில் ஜீவன் பிறப்பு இறப்புகளற்றவனாய் நித்யமாயுள்ளவனென்று சொல்லப்பட்டது. இவ்வதிகரணத்தில், அவனுக்குள்ள ஜ்ஞாநமென்கிற குணம் ஸ்வாபாவிகமா, அல்லது வந்தேறியாவென்று விசாரிக்கப்படுகிறது. "ஜ்ஞாஜ்ஞௌ" என்றஶ்ருதி, ஈஶ்வரனை "அஜ்ஞ" என்று ஜ்ஞாநமுள்ளவனாகவும், ஜீவனை, "அஜ்ஞ" என்று ஜ்ஞாநமற்றவனாகவும் சொல்லுகையாலே ஜீவனுக்கு ஸ்வாபாவிகமான ஜ்ஞாநம் கிடையாது. ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால், தானல்லாத தேவ மநுஷ்யாதி சரீரங்களில் தானென்ற புத்தியைப்பண்ணி அஹங்காரத்தையடைந்து அஜ்ஞனாய் ஸம்ஸாரியாய்க்கிடக்கிறனாகையால் ஸம்ஸாரதசையில் இவனுக்குஜ்ஞாநமில்லை. எப்போதும் ஜ்ஞாநமிருந்ததாகில் ஸம்ஸாரதசையென்றும் முக்திதசையென்றும் இரண்டுதசையில்லாமல் போய்விடும். அதற்காக ஸம்ஸாரதசையில் ஜ்ஞாநம்கிடையாதென்றும் முக்தித்சையில் ஜ்ஞாநமுண்டாகிறதென்றும் ஒப்புக்கொள்ளவேணும். இதனால் இவனுக்கு ஜ்ஞாநம் ஸ்வாபாவிகமன்றென்று நிஶ்சயிக்கப்படுகிறதுஎன்று பூர்வபக்ஷம்—வேதங்களில் ஜீவனை நிரூபித்துச் சொல்லுகிற இடங்களிலெல்லாம் "எவனொருவன் இந்த சரீரத்திற்குள்ளிருந்து தன்னுடைய இந்த்ரியங்களினால் விஷயங்களை யறிகிறனோ, அவனே ஜீவன் என்று ஜீவனுக்கு ஜ்ஞாநமென்பது ஸ்வாபாவிகமான குணமென்றே சொல்லிற்று. ஸம்ஸாரதசையில் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் உள்ளுள்ள ஆத்மஸ்வரூபத்தை யறியாமல் மேலுள்ள சரீராதிகளையே அறிகிறன். ப்ரஹ்மோபாஸநத்தினால் தனக்குப்ரக்ருதி ஸம்பந்தம் கழிந்து, பின்பு, தன்னிடத்தில் ஸ்வாபாவிகமாயுள்ள ஜ்ஞாநமென்ற குணம் ப்ரகாசிக்கிறது. அவ்வளவே யல்லது அப்போது புதிதாக உண்டாகிறதில்லை. ஶ்ருதியிற் "அஜ்ஞ" என்றபதம் ஜீவனுக்கு ஜ்ஞானமில்லையென்று சொல்லவில்லை. ஈஶ்வரன் ஸர்வஜ்ஞனென்றும், ஜீவன் ஸம்ஸாரதசையில் சிலவற்றையே யறிகிறன் எல்லாவஸ்துக்களையும் அறிகிறதில்லையென்றுமே சொல்லிற்று. ஜ்ஞாநத்தினுடைய விகாஸந்தான் முக்தியெனப்படும் ஆகையால் ஜீவனுக்கு ஜ்ஞாநமென்பது ஸ்வாபாவிகமாக குணமேயென்று ஸித்தாந்தம். கக௯.

## ௪-ம் பாதம்.

௧௧. [illegible] அதிகரணம் — கீழ், ஆகாசாதி பூதங்களும் இந்த்ரியங்களும் அவற்றுக்கு அதிஷ்டான தேவதைகளும் பரமேஸ்வரனிடத்தில் நின்று முண்டாயிற்றென்று சொல்லப்பட்டது. இதில், தேவமநுஷ்ய பசுபக்ஷி கடபடாத்யாகாரங்களும் அவ்வவநாமங்களும் ஆகிய இவற்றுக்குப் பரமேஸ்வரனே காரணமா, அல்லது மற்றொரு ப்ரஹ்மவிஷ்ணவாதிகளிலொருவராவென்று விசாரிக்கப்படுகிறது.—"[illegible]" இத்யாதி ஸ்ருதிகள், ஆதியில் தேஜஸ்தத்வத்துக்கபிமாநியான பரமேஸ்வரன் ஜலத்தை ஸ்ருஷ்டித்தான், பின்பு அந்த ஜல தத்வத்துக்கபிமாநியான நாராயணன் ப்ருதிவியை ஸ்ருஷ்டித்தான், அதன்பின் ப்ருதிவீதத்வாபிமாநியான ப்ரஹ்மா, இவ்வண்டத்துக்குட்பட்ட வஸ்துக்களையும் அவற்றின் நாமதேயங்களையும் படைத்தான் என்று சொல்லுகின்றன. விஷ்ணுவுக்கு நாராயணனென்று பெயர் வருகைக்கும் கீழ்ச்சொன்னதேஹேது. அதாவது—நரனென்று பரமேஸ்வரனுக்குப் பெயர், அவனால் படைக்கப்பட்டவை நாரங்கள், அவையாவன—ஜலங்கள். அந்த ஜலத்தை ஸ்தானமாகக்கொண்டு அதற்கு அபிமாநி தேவதையாயிருக்கையால் விஷ்ணுவுக்கு நாராயணனென்று பெயராயிற்று. "[illegible]" இத்யாதியான மற்றொருஸ்ருதி நாராயணனிடத்திலிருந்தே இந்தப்ரஹ்மாண்டத்துக் குள்ளடங்கிய வஸ்துக்களெல்லா முண்டாயிற்றென்று சொல்லுகிறது. ஆகையால்,ப்ரஹ்மவிஷ்ணுக்களிலொருவரே இவ்வஸ்துக்களின்நாமரூபங்களுக்குக் கர்த்தாவாகிறதாக நிஸ்சயிக்கவேணுமென்று பூர்வபக்ஷம்— "[illegible]" என்று துடங்கி பஞ்சபூதங்களுக்கும் பரமேஸ்வரனே காரணமென்றும், அவனே ஆதியில் பஞ்சபூதங்களையும் ஸ்ருஷ்டித்து அவற்றைத்தானே பஞ்சீகரணம் பண்ணி, பின்பு அதைக்கொண்டு தானே இவ்வண்டத்தையும் இதற்குள்ளுள்ள வஸ்துக்களுடைய நாமரூபங்களையும் படைத்தானென்று சொல்லுகிறது. இதனால் பஞ்சீகாரணம் பண்ணினவனே நாமரூபங்களைப் பண்ணினனென்று தோற்றுகிறது. ஆதியில் பஞ்சீகரணம்பண்ணி, அதைக்கொண்டு அண்டத்தை ஸ்ருஷ்டித்தபின் அவ்வண்டத்துக்குள் ப்ரஹ்ம விஷ்ணுக்களுண்டானவர்களாகையால் அதற்கு முன்செய்யப்பட்ட பஞ்சீகாரணமென்பது ப்ரஹ்ம விஷ்ணுக்களால் செய்யமுடியாது. ஆகையால் நாமரூபங்களுக்குக் கர்த்தா பரமேஸ்வரனே யென்பது ஸித்தாந்தம். ௧௧.

---

## ௩-ம் அத்யாயம். ௧-ம் பாதம்.

## ௩-ம் அத்யாயம் ௩-ம் பாதம்.

௨௧. [illegible] அதிகரணம்— இந்த பாஷ்யத்துக்கு "[illegible]" என்ற ஸூத்ரத்திற்குப்பிறகு "[illegible]" என்ற ஸூத்ரமும், இதற்குப்பின்; ௩௦. "[illegible]" என்ற ஸூத்ரமும் பாடமாயிருக்கும். இதில் முதல் ஸூத்ரத்தின் தாத்பர்யம் - இந்த சரீரத்தில் நின்றும் ஜீவன் வெளிக்கிளம்பும் பொழுதே, அவனுக்கு ஸமஸ்தமான புண்ய பாப ரூபகர்மங்கள் நசித்துவிடுகின்றன. அதன்பின் ஸூக்ஷ்ம சரீரம் மாத்தி

ரம் இருக்கிறது. சரீரமில்லாமல் தேசாந்தரம்போக முடியாதாகையால் முக்தியை யடைகிற ஜீவன் இங்குநின்றும் புறப்பட்டு விரஜையென்கிற ஆறுவரையில் போய்ச் சேருகைக்காக அந்த சரீரம் ஒப்புக்கொள்ளவேணும். புண்யபாபங்கள் நசித்தபின், அப்புண்யபாபங்கள் மூலமாகவந்த ஸூக்ஷ்ம சரீரந்தானெப்படி யிருக்குமென்னில்; முதல் பிடித்து இவ்வளவு காலம் அந்த ஸூக்ஷ்மசரீரம் புண்ய பாப மூலமாக இருந்தபோதிலும்; ப்ரஹ்மோபாஸநம் செய்தவன் மரித்தபின் அவனுடைய ஸூக்ஷ்மசரீரம் அந்த ப்ரஹ்மோபாஸநத்தின் மஹிமையினாலேயே இருக்கிறதென்று ஒப்புக்கொள்ளவேணும். வேதத்திலும் “ஸ ஸ்வராட் பவதி” என்று தொடங்கி, ஜீவன் முக்தியை யடைந்தானாகில் அவனுக்கு ஸகலகர்மங்களும் விட்டுபோகிறது, அவன் யதேச்சமாக எல்லா லோகங்களிலும் போய்சஞ்சரிக்கிறான் என்று. கர்மமழிந்த பின்பும் சரீரமெடுத்துக்கொண்டு வித்யாமாஹாத்மயத்தினால் ஸஞ்சரிக்கிறானென்று சொல்லிருக்கிறது. அதுபோலவே, இச்சரீரம் கழிந்தபின்வித்யாமாஹாத்ம்யத்தினால் ஸூக்ஷ்ம சரீரத்தை மாத்திரம் நிறுத்திக்கொண்டு அதுமூலமாக சிவலோகம் போய்ச் சேருகிறான் என்று ஏற்படுகிறது. லோகத்திலும், ஒருமஹாராஜனை யாஸ்ரித்தவன், அம்மஹாராஜனுடைய அநுக்ரஹபலத்தினால், மற்றொருவர்களுக்குப் பெறத்தகாத நாநாவிதமான போகங்களை யநுபவிக்கிறான். அதுபோலவும், இந்த ஜீவனுக்கு பரமேஸ்வரனுடைய அநுக்ரஹ பலத்தினால் ஸூக்ஷ்மசரீர மிருக்கிறதென்று கண்டுகொள்க என்று பூர்வசக்ஷம். உக.

ஙo. இரண்டாவது ஸூத்ரத்தின் தாத்பர்யம்—சரீரவியோக காலத்திலேயே ஸகலகர்மங்களும் நசிக்கிறதென்பது சரியன்று. அப்படிநசிக்குமாகில் அந்த ஜீவனுக்கு இங்கேயே முக்தி நேரிட்டிருக்க அர்ச்சிராதிவழியாகப்போய் சிவலோகம்சேரவேண்டியது அநாவஸ்யகம். வேதத்தில், “பரம்ஜ்யோதிரூபஸம்பத்ய” என்றுதொடங்கி, ஜீவன் அர்ச்சிராதி வழியாகப்போய் பரம்ஜ்யோதி ஸ்வரூபியாகிய பரமசிவனையடைந்து கர்மத்தைக்கழித்து ஸ்வஸ்வரூபத்தை யடைகிறானென்று சொல்லியிருக்கிறது. இங்கே கர்மம்கழிந்ததாகில் அந்த ஸ்ருதியிற் சொன்னது சரிப்படாது. ஸ்வஸ்வரூபத்தை யடைகையாவது - அநாதிகாலமாக அவித்யையினால் மறைந்து கிடந்த புத்தி, ஜீவன் முக்தியையடைந்தபின் அவ்வவித்யை கழிந்து அதினால் மறைவற்று எல்லா வஸ்துக்களையும் ப்ரகாசிப்பிக்கவற்றாகிறது. இதுக்கே விகாஸமென்று பெயர். இவ்விதமானபுத்தி விகாசமாகிறஸ்வஸ்வரூபத்தை யடைகை விரஜாநதிக்கப்புறம் சென்று சிவலோகத்தை யடைந்தபின் நேரிடுகிறதென்று ஸ்ருதி சொல்லுகையாலே அதுவரையில் அக்கர்மமிருக்கிறதென்றே அங்கீகரிக்க வேண்டும். பரமேஸ்வர ஸங்கல்பத்தினாலேயே அவ்வவித்யை இந்தசரீரம் கழிந்த உடனே கழியாமல் விரஜைக்குப்போகும்வரையில் இருக்கிறதென்று சொல்லி புண்யபாபங்கள் மாத்திரம் இங்கே நசிக்கிறதாக ஒப்புக்கொள்ளலாமே யென்னில்; பரமேஸ்வர ஸங்கல்பமும் புண்யபாபாதி நமாயேயிருக்கும். அவைகழிந்தபின் தத்பரயுதக்மான பரமேஸ்வர ஸங்கல்பந்தான் எப்படியிருக்கும். ஆகையால் விரஜாநதிக்குப்போகும்வரையில் புண்யபாபங்களிருக்கிற தென்றே ஒப்புக்கொள்ளவேணும்-கீழ் பரமசிவனையடைந்தபின் கர்மம்கழிந்து ஸ்வஸ்வரூபத்தை யடைவதாகச் சொல்லிற்று; இங்கே விரஜைக்குப் போகும்வரையில்தான் கர்மமிருக்கிறது, பின்பு கழிந்துவிடுகிறதென்றுசொல்லிற்று. இவ்விரண்டும் எப்படி சேருமென்னில் விரஜையென்பது இந்த ஸம்ஸார மண்டலத்துக்கும், பரமாகாசமென்று சொல்லப்படுகிற சிவலோகத்துக்கும் நடுவிலிருக்கிறது. அதையடைந்தால் ஸம்ஸாரம் கழிந்து விடுகிறது. மேலுள்ளது சிவலோகமாயிருக்கும். ஆகையால் இரண்டுக்கும் விரோதமில்லை. விரஜையென்பது விஷ்ணு ஸம்பந்தியானநதி. யோகிகள் அதில் முழுகி அதினால் ஸகல

கர்மங்களையும்விட்டு அதின் மேலுள்ள சில லோகத்தை யடைகிறார்கள் என்று ஸித்தாந்தம். ௩௦.

---

## ௪ - ம் அத்யாயம் க - பாதம்.

௩௦. ஆவ்ருத்யதிகரணம். இதில் ப்ரஹ்மோபாஸநம் ஒருகால் செய்தால் போருமா, அல்லது ஜீவித்திருக்குமளவும் செய்யவேணுமாவென்று விசாரிக்கப்படுகிறது— "யாவதாயுஷ்யம்..." என்று தடங்கிவேதங்களில் பலவிடங்களிலும், ஓ ருத்ரனே! உன்னுடைய நிரதிசயாநந்தரூபமான சரீரத்தினால் எங்களுடைய ஸம்ஸார பீஜமான புண்ய பாபங்களைப்போக்கி எனக்கு மிகவும் ப்ரகாசிக்கக்கடவாய் என்று உபாஸகர்கள் ப்ரார்த்திப்பதாகச் சொல்லுகிறது. இப்படி மிகவும் ப்ரகாசிக்கை, அல்பகால முபாஸநத்தினால் ஸித்தியாது ஆகையால் யாவதாயுஷம் செய்யவேணுமென்று ஸித்தாந்தம். கஉ.

௩௬. அக்நிஹோத்ராத்யதிகரணம்— இதில், அக்நிஹோத்ராதி கர்மங்கள் சரீரமிருக்குமளவும் செய்யவேணுமா, சில நாள் செய்தால் போருமாவென்று விசாரிக்கப்படுகிறது. அக்நிஹோத்ராதி கர்மங்களெல்லாம் சிலநாள் செய்தால் போரும். அவ்வளவிலேயே மநஸ்ஸு நிர்மலமாய் உபாஸநம் உண்டாய்விடும். "பகுகாலம் செய்தாலும் அதினாலுண்டாகிற புண்யம் அழிந்துவிடுகிறதென்று சொல்லுகையால் செய்தும் உபயோகமில்லை. உபயோகமில்லாததை ஒருவனும் செய்ய விரும்பான் என்று பூர்வபக்ஷம்— வேதத்தில் "தமேதம் வேதாநுவசநேந" என்றுதடங்கி,வேதபாடம் யஜ்ஞம் தாநம் தபஸ்ஸு அநசநம் முதலியவை யாவதாயுஷம் செய்யவேணுமென்கையாலே கர்மங்களெல்லாம் சரீரமுள்ளவரையில் செய்யவேணுமென்று ஸித்தாந்தம். வேதபாடமாவது - பரமேச்வர ப்ராப்தி ஸாதநமான பரமஜ்ஞாநத்துக்குஹேதுவாய், அத்யாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிற வேதமந்த்ரங்களை ஆவ்ருத்திசெய்கை. சதருத்ரீ, கைவல்யோபநிஷத்து, முண்டகோபநிஷத்து முதலானவற்றில் பரமேச்வரனான ஸதாசிவனுடைய நாமங்களைச் சொல்லவே பாபங்கள் கழியுமென்கையாலும், வேத மந்த்ரங்களெல்லாம் பரமேச்வர ப்ரதிபாதகங்களாகையாலும், அவற்றை ஜபம்செய்கை முக்தி ஹேதுவாயிருக்கும் இப்படியே யாகாதிகளையும் கண்டுகொள்க. கக.

இவ்வழியாகவே மற்ற ஸூத்ரங்களுக்கும் அர்த்தம் கண்டுகொள்ளவேணும்.

இம்மதப்ரக்ரியையாவது—ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் என்று மூன்று தேவர்களே இந்த ப்ரஹ்மாண்டத்தில் இந்த்ராதி மற்றதேவர்களைக்காட்டிலும் சிறந்தவர்கள். அம்மூவரில் கடைசியில் சொல்லப்பட்ட ருத்ரனென்பவன் "த்ரிசூலமுத்யம்ய பாணிஃ ஸம்ஸ்ரேஷ்டஜாயத" சூலமென்கிற ஆயுதத்தைக்கையிலுடைய முக்கண்ணனான ருத்ரனென்கிற புருஷன் ப்ரஹ்மாவினிடத்தில்நின்று முண்டாகிறானென்ற வேதவசநத்தின்படியே உத்பத்திவிநாசங்களையுடையவனாய், ப்ரஹ்மாவுக்குப் பின்னையாயிருப்பவன். ப்ரஹ்மாவென்பவன் பரமேச்வரனால் படைக்கப்பட்ட இவ்வண்டத்துக்குள்ளே உண்டானவனாய், ஸ்ருஷ்ட்யதிகாரத்தைப்பெற்று பரமேச்வரனுக்குப் பரதந்த்ரனாய் அவனுடைய கட்டளைப்படி இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்துக்கொண்டிருக்குமவன். விஷ்ணுவென்பவன்; இவ்விருவரைக்காட்டிலும் சிறந்தவனாய் ஜ்ஞாநாதிகனாய் இந்தப்ரக்ருதிமண்டலத்துக்குள் உயர்ந்த ஸ்தானத்திலிரு

க்கிறவன். இம்மூவரும் பரமேஸ்வரனால் படைக்கப்பட்டவர்களாய், ஸம்ஸாரிகளாயுள்ள ஜீவர்கள். இம்மூவரைக்காட்டிலும் வேறுபட்டவனும், இவர்களையுங்கூடப் படைத்துத் தன்வசத்தில் வைத்துக்கொண்டு நடத்தவல்லவனும், ஸம்ஸாரஸம்பந்தமற்றவனும், இந்தப்ரக்ருதிமண்டலத்துக்கு எல்லையாய் நாராயணஸ்வரூபியாயிருக்கிற விரஜையென்கிற ஆற்றுக்கும்அப்புறத்திலுள்ள, பரமாகாசமென்கிற மோக்ஷஸ்தானத்திலுள்ளவனும், ஸத், ப்ரஹ்மம், பரமாத்மா, ஸதாசிவன் முதலிய சப்தங்களினால் சொல்லப்பட்டவனுமிருக்குமவனே பரமேஸ்வரனெனப்படுவோன். இவனே ஸகலஜகத்துக்கும் காரண பூதன், மோக்ஷப்ரதன். இவனையே வேதங்களும் ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களும் ப்ரதிபாதிக்கின்றன. வேதம்போலே பாசுபதாகமமும் முக்யப்ரமாணம். இவ்வாகமத்தில் சொல்லப்பட்ட பஸ்மதாரணம், ருத்ராக்ஷதாரணம், முத்ரிகாஷட்கதாரணம், கோஸகஸ்த்த ஆத்மத்யானம், முதலியவைகளை யநுஷ்டிக்கிறவனே மோக்ஷத்தை யடைவான். இவ்வாகமத்துக்கு நேர்விருத்தமாய், தப்தமுத்ராதாரணம், ஊர்த்வபுண்ட்ரதாரணம், விஷ்ணுபரத்வம், துளஸீநளிநாக்ஷமாலாதாரணம், விஷ்ணுபூஜநம், அவ்விஷ்ணுவே மோக்ஷப்ரதனென்கை, த்ரிமூர்த்திகளைக்காட்டிலும் மேலான ஸதாசிவனென்கிற ப்ரஹ்மமான்றில்லை யென்கை, மற்ற ப்ரஹ்மருத்ரர்களோடு சேர்த்துச்சொல்லப்பட்ட விஷ்ணுவுக்கும் ப்ரஹ்மத்துக்கும் பேதமில்லை யென்கை, ருத்ராதி தேவதாபூஜநம் மோக்ஷவிரோதியென்கை என்றிவ்விதமான அர்த்தங்களைச் சொல்லுகிற பாஞ்சராத்ராகமம் அப்ரமாணம். வேதங்களில் பலவிடங்களில் விஷ்ணு என்பவனைப் பரதத்வமாகச் சொல்லியிருந்தபோதிலும், அங்குச் சொல்லப்பட்ட விஷ்ணு பதத்துக்கு ஸர்வ வ்யாபியான ஸதாசிவனே அர்த்தமென்றாவது, அல்லது - விஷ்ணுவுக்கு அதர்யாமியான ஸதாசிவனைச் சொல்லுகிறதென்றாவது அங்கீகரிக்கப்படும். மற்றவாக்யங்களை யெல்லாம் சதருத்ரீ, அதர்வசிகை முதலானவற்றிற் சொன்ன பரமசிவபரத்வ ப்ரதிபாதகமான வாக்யாநுகுணமாகவே அந்வயித்துக்கொள்ளவேணும், என்று இம்மாதிரியான சில முக்யார்த்தங்களை அங்கீகரித்து, மற்றும் ராமாநுஜபாஷ்யத்திற் சொல்லியபடியே, தத்வங்கள் மூன்றென்றும், ஜீவர்களும் அவர்களுடைய கர்மங்களும் அம்மூலமான ஸம்ஸாரமு மநாதியென்றும், ஜகத்துக்கு நிமித்தோபாதாநங்களாகிய இருவகையான காரணமும் பரப்ரஹ்மமேயென்றும், சங்கராதி அத்வைத மதம்போலன்றிக்கே, முக்தியென்பது பரமாகாசமென்கிற தேசவிசேஷத்திற் போயடையத்தக்கதென்றும், இம்மாதிரியான மற்ற அர்த்தங்களையும் அங்கீகரித்தார்கள். இதினுடைய விஸ்தாரங்களையெல்லாம் பாசுபதாகமங்களிலும், அவ்வாகமத்தை யநுஸரித்துப் பின்புள்ளவர்களினால் செய்யப்பட்ட சைவமதக்ரந்தங்களிலும் காண்க.

நீலகண்டாசார்ய பாஷ்யாநு ஸாரமாக எழுதப்பட்ட

ஸூத்ரார்த்தங்களும் மதப்ரக்ரியையும்

முடிந்து பெற்றது.

